OSHO

WALKING IN ZEN, SITTING IN ZEN

# 'ஸென்'னுடன் நடந்து... 'ஸென்'னுடன் அமர்ந்து...

ஓஷோ



# 'ஸென்'னுடன் நடந்து...
# 'ஸென்'னுடன் அமர்ந்து...

சீடர்கள் மற்றும் பார்வையாளர்களின்
கேள்விகளுக்குப் பதில்களும் ஸென் கதைகளும்

## ஓஷோ

தமிழில்

## சிங்காரயர்




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-42161657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.com

**ZENNUDAN NADANTHU, ZENNUDAN AMARNTHU (Tamil)**



For more information: www.osho.com

A comprehensive multilingual website featuring Osho's meditations, books and tapes and an online tour of the meditation resort at Osho Commune International.

| | | |
|---|---|---|
| Translated by | : | **Singa Royar** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 1999 |
| Fourth Edition | : | November, 2021 |
| Pages | : | 496 |
| **Price** | : | **₹ 450/-** |
| ISBN | : | 978-93-88450-74-4 |
| DTP | : | S. Asokkumar, Kumbakonam |
| Printed at | : | Sethu Prints, Chennai. |

Published by :

**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657
WhatsApp : 74022 22787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.com

## முகவுரை

**"ஸென், கடவுளைப்பற்றிப் பேசுவதே இல்லை; கடவுள் தன்மையையே பேசுகிறது: அது ஒரு குணம். எங்கும் நிறைந்து இருக்கும் ஒரு மணம். கற்றுக்கொள்ளும் திறன் உங்களுக்கு இருந்தால் மட்டும்தான் அதை உங்களால் காணமுடியும். உங்கள் பங்குக்குத் தேவையானது எல்லாம், அமைதியுடன் – ஏற்புத்தன்மையுடன் – வரவேற்பு உணர்வுடன் – திறந்த தன்மையுடன் இருப்பதுதான்."**

**– ஓஷோ**

இதை நான் அரிதாகவே ஒத்துக்கொள்கிறேன்- ஏனெனில் இது ஓரளவுக்கு என் வயதைக் காட்டிக் கொடுத்தே விடுகிறது: பீட் தலைமுறையின் எச்சம் நான்.

'50களின் பிற்பகுதியில் நான் தாடி வளர்த்தேன். பூட்சுகளை மாட்டிக்கொண்டேன். கருப்புத் தோல் சட்டையும் கருப்புக் கண்ணாடியும் அணிந்து கொண்டேன்; இத்துடன் ஜாஸையும் ரசிக்கக் கற்றதும் "ஸென்னுக்குள்" போய்விட்டேன். நான் திரட்டிய சிறு அளவான நூல்கள், ஒரு கிராமத்து வீட்டில் சிதறிக்கிடந்தன. அவற்றில் கெருவாக், பிளேக், விட்மன் ஆகியோரின் நூல்களுடன் ஸென் புதிர்களும் குட்டிக் கதைகளும் D.T. சுஸுகியின் படைப்புகளும் அத்துடன் கண்டிப்பாக இருக்கவேண்டிய 'ஸென் இன் த ஆர்ட் ஆஃப் ஆர்ச்சரி'யும் (=வில் வித்தையின் ஸென்') அடங்கும். நானும் என் நண்பர்களும் தரும சோம்பேறிகளாக, அலட்சியமான ஸென்னியர்களாக இருந்தோம்.

இதைத்தவிர, உள்ளுக்குள் ஆழத்தில் எதுவும் மாறி இருக்கவில்லை- ஆனால் அப்போது அதை நாங்கள் ஒத்துக்கொள்ள முடியவில்லை. எம் ஆரம்ப ஆண்டுகளில் நாங்கள் அறிந்திருந்த கத்தோலிக்கம், யூதம், மெதாடிகம் அல்லது நாத்திகத்தை விடவும்

எங்கள் ஸென் ஆழமற்ற தாகவே இருந்தது. சட்டோரிகளைப் பற்றிய எங்களின் பரவசப் பிதற்றல்கள் எல்லாம் இருந்தும், வரலாறு, இலக்கியம் அல்லது தத்துவத்தை அல்லது கொலம்பியா விலோ, நியூயார்க் பல்கலைக்கழகத்திலோ நாங்கள் படித்துக் கொண்டிருந்த வேறு எதையும்- அணுகிய விதத்திலேயே ஸென்னையும் நாங்கள் அணுகினோம். அறிவு எதிர்ப்புவாதிகளாக எங்களை அடையாளம் காட்டிக் கொண்டோம். மனமற்ற நிலையைப்பற்றிக் கற்க எம் மனங்களைப் பயன்படுத்தினோம். அறிவின் வாசஸ்தலங்களில் ரகசிய கலகக்காரர்களாக இருந்தோம். இருந்தாலும், எந்நிலையிலும், பாதுகாப்பான இடத்தில் இருந்து கொள்வதற்காக, கல்விப் பட்டங்களையும் பெற்றுக்கொண்டோம்.

இருபது ஆண்டுகளுக்குப் பிறகு அதிக வயதுள்ள, அதிக அறிவுள்ளவனாக இல்லாவிட்டாலும் அதிக அதிர்ஷ்டமுள்ள மனிதனாக, நான் என் முதல் ஸென் அனுபவத்தைப் பெற்றேன். '70களின் பிற்பகுதியில் ஒரு கோடைக் காலத்தில், இந்தியாவில் ஒரு ஆசிரமத்தின் தியான மண்டபத்தில் ஓஷோவின் பிரசன்னத்தில் நான் இருந்தேன்- அவர் நடக்கும்போது ஸென்னில் நடக்கிறார்; உட்காரும்போது, ஸென்னில் உட்கார்கிறார்; பேசும்போது, என் ஜீவனின்- ஸென்னைப்பற்றி அறிய விடாப்பிடியான பேரவாக் கொள்கிறதில் இருந்து, அந்த அபூர்வமான, இனிமையான கணங்களில் அதை அறிந்தே- அறிகிறது வரையான- எல்லாப் படிநிலைக்கும் பொருந்தி வருகிறார்!

**சுவாமி தாஸ்**
**அனுதாஸ்**

# உள்ளடக்கம்

# 1

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**நீங்கள் ஏன் இந்தப் பேருரைத் தொடருக்கு "ஸென்னிலேயே நடப்பது ஸென்னிலேயே உட்காருவது' எனத் தலைப்புக் கொடுத்திருக்கிறீர்கள்?**

**எ**ன்னைச் சொல்லிக் குற்றமில்லை. முழுப் பழியும் அந்தக் கிழவர் யோக்காவையே சாரும். யோக்கா மிக அபூர்வமான ஞானிகளில் ஒருவர். அவரது வசனங்கள் அபார அழகுடையவை. மிகச்சில வசனங்களே கிடைக்கின்றன. ஆனால் ஒவ்வொரு வசனமும் ஒரு மாணிக்கப் பரல்.

அவரது வசனங்களைப் படிக்கும்போது, இந்த வாசகம் தென்பட்டது:

> **ஸென் மனிதர் ஸென்னில் நடக்கிறார், ஸென்னில் உட்காருகிறார். அவர் பேசினாலும் அல்லது செயல் புரிந் தாலும், அமைதியாய் இருந்தாலும் அல்லது செயலற்றிருந் தாலும், அவரது உடல் எப்பொழுதும் சமாதானமாய் இருக்கிறது. தன் உயிரை எடுக்கும் வாளை நேராக நோக்கும் போதும் அவர் புன்னகைக்கிறார். மரணத் தருவாயிலும் அவர் தன் நடுநிலை பேணுகிறார்.**

"ஸென் மனிதர் ஸென்னில் நடக்கிறார். ஸென்னில் உட்காருகிறார்" என்னும் வாசகம் எனக்குப் பிடித்தது. அதற்கான எளிய காரணம், தியானம் என்பது உங்கள் வாழ்வின் ஒரு பகுதியாக மட்டும் இருக்கமுடியாது. உங்கள் வாழ்வில் ஒரு பாகத்தை மட்டும் தியானமயமாக்க உங்களால் முடியாது. ஒரு மணி நேரம் தியானத்

தன்மையோடும் மீதி 23மணி நேரம் தியானத்தன்மை இல்லாமலும் இருப்பது சாத்தியமில்லை. அது முற்றிலும் அசாத்தியமாகும். அப்படி நீங்கள் செய்கிறீர்கள் என்றால் உங்கள் தியானம் பொய்யானது என்றே பொருள்.

தியானம் ஒன்றே 24 மணி நேர காரியமாக இருக்கமுடியும். அல்லது அது இருக்கவே முடியாது. அது மூச்சு விடுவதைப் போன்றது. ஒருமணி நேரம் சுவாசித்துவிட்டு மற்ற 23 மணி நேரம் அதை ஒதுக்கி வைக்க உங்களால் இயலாது. அப்படிச் செய்தால் நீங்கள் இறந்து போவீர்கள். நீங்கள் தொடர்ச்சியாகச் சுவாசித்தபடியே இருந்தாக வேண்டும். தூங்கும் போதும், ஆழ்ந்த மயக்க (கோமா) நிலையிலும்கூட நீங்கள் தொடர்ச்சியாக சுவாசித்தபடியே இருந்தாக வேண்டும்.

தியானம் உங்கள் ஆன்மாவின் சுவாசம் ஆக இருக்கிறது. உடம்புக்கு சுவாசம் எப்படி உயிராக இருக்கிறதோ அப்படியே ஆன்மாவுக்கு தியானம் உயிராக இருக்கிறது.

தியானத்தை அறிந்திராத மக்கள் ஆன்மிக ரீதியாக இறந்தவர்கள் ஆவார்கள்.

மிகச் சிலரான மக்களே ஆன்மாக்களைப் பெற்றுள்ளார்கள் என்று ஜார்ஜ் குருட் ஜீப் கூறுவது வழக்கம்- அவர் சொல்வது சரிதான். எவரும் ஆன்மாவுடன் பிறப்பதில்லை. ஆன்மாவாக வளர முடியக்கூடிய ஒரு விதையுடனேயே பிறக்கிறார்- அது வளராமலும் போகலாம். அது உங்களைப் பொறுத்தது. அது வளர, மலர சரியான மண்ணை, சரியான சூழ்நிலையை நீங்கள் உருவாக்கியாக வேண்டி உள்ளது. உங்கள் ஆன்மா மலரும்படியாக உங்களுக்கு வசந்தத்தை வருவிக்க வேண்டி உள்ளது. அப்படிச் செய்யாவிட்டால் நீங்கள் வெறும் உடல்- மனம்தான். ஆன்மா என்பது வெறும் சொல்தான். தியானமே அதை யதார்த்தமாக்குகிறது. தியானம் என்னும் சூழ்நிலையிலேயே ஆன்மா நிகழ்கிறது.

தியானத்துக்கு இன்னொரு பெயரே ஸென், ஸென் என்னும் சொல் தியான் என்னும் சமஸ்கிருத மூலச்சொல்லில் இருந்தே வருகிறது. அது நீண்ட தொலைவு பயணம் செய்திருக்கிறது. தியான் என்றால் முழுமையான விழிப்புடன்கூடிய- முழுமையான அமைதி நிலை. எண்ணமற்ற அமைதிநிலை எனப் பொருள். "நான் விழிப்பாயிருக்கிறேன்" என்னும் எண்ணமேகூட உங்கள் தியானத்தில் இருந்து உங்களது திசை திருப்பிவிடப் போதுமானது. "நான்

தியானத்தில் இருக்கிறேன்" என்று அறிவதுகூட அதை அழித்துவிடு வதற்குச் சமமானது.

தியான நிலை என்பது ஒரு நிர்மல நிலை. சாந்தி நிலை. அந்நிலையில் உங்களின் விழிப்புத் தன்மைபற்றி ஆனந்தமாக அறியாதிருக்கிறீர்கள். நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் முற்றிலும் இளைப்பாறுதலாக இருக்கிறீர்கள். நீங்கள் உறக்க நிலையில் இருப்ப தில்லை. முழு ஜாக்கிரதை நிலையில், வேறு எப்போதையும்விட அதிக ஜாக்கிரதை நிலையில் இருக்கிறீர்கள். சொல்லப் போனால் நீங்களே ஜாக்கிரதை ஆக இருக்கிறீர்கள்.

மானுடத்தின் பரிமாணத்துக்கு கிழக்கு வழங்கிய மாபெரும் பங்களிப்பு தியானம்.

புத்தர் ஒருபோதும் சமஸ்கிருதத்தைப் பயன்படுத்தியதில்லை. தன் காலத்துப் பொதுமக்கள் பயன்படுத்திய ஒரு மொழியை அவர் பயன்படுத்தினார். அதன் பெயர் பாலி, பாலி மொழியில் தியான். ஜ்ஜான் ஆகிறது. புத்தரின் போதனை சீனாவை அடைந்ததும் ஜ்ஜான். ச்சான் ஆகியது. பின் அது சீனத்தில் இருந்து ஜப்பானுக்குச் சென்றதும் ஸென் ஆகியது. ஆனால் அது 'தியான்'லிருந்தே தோன்றுகிறது. தியான் என்றால் தியானம். ஆனால் தியானம் என்பதற்குரிய ஆங்கிலச்சொல்லான 'மெடிட்டேசன்' என்பதில் தியானத்தின் வாசனையைக் காணமுடிவதில்லை. மெடிட்டேசன் என்பது 'ஆழ்ந்தசிந்தனை' என்பதுடனேயே நீண்டகாலமாகத் தொடர்புற்று வந்திருக்கிறது. மெடிட்டேசன் என்றால் ஒன்றைக் குறித்து ஆழ்ந்து சிந்திப்பது ஆகும். இதற்கு ஒரு புறப்பொருள் இருக்கிறது.

ஆனால் ஸென்னுக்குப் புறப்பொருள் எதுவுமே இல்லை. முற்றிலுமான அகவயத்தன்மை மட்டுமே உள்ளது. நீங்கள் விழிப்பாயிருக்கிறீர்கள். ஆனால் ஏதாவது ஒன்றைக் குறித்த விழிப்பு அல்ல அது. விழிப்புடன் கவனிப்பதற்கு அங்கு ஒன்றுமில்லை. எல்லாமே மறைந்து விட்டிருக்கிறது. இன்மையைக் குறித்தும்கூட நீங்கள் விழிப்பாய் இருக்கிறதில்லை. ஏனெனில் அப்போது இன்மை உங்களின் புறப்பொருள் ஆகிறது; இன்மை உங்களின் எண்ணம் ஆகிறது. வெறுமையைக் குறித்தும் நீங்கள் விழிப்பாய் இருக்கிறதில்லை. நீங்கள் வெறுமனே விழிப்பாயிருக்கிறீர்கள். உங்கள் விழிப்புணர்வு எந்தப் புறப்பொருள் குறித்தும் இல்லை. கண்ணாடி வெறுமையாக உள்ளது. எதையும் பிரதிபலிக்கிறதில்லை. ஏனென்றால் பிரதிபலிக்க அங்கு ஏதுமில்லை.

இதை நீங்கள் நினைவில் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் 'தியானம்' என்பது, உங்களுக்கு ஒரு தவறான பொருளைத் தந்து விடக்கூடும். 'தியானம்' ('மெடிட்டேசன்') என்ற சொல்லைப் பயன்படுத்தியதுமே உடனடியாக "எதைக் குறித்து?" என்ற கேள்வி எழுந்து விடும். அந்தக் கேள்வி பொருத்தமானது. "எதைக் குறித்து?" என்று நீங்கள் கேட்கும் போது, எதைப்பற்றி எண்ணுவது- ஆழ்ந்து சிந்திப்பது, எதன்மீது மனதை ஒருமுகப்படுத்துவது என்று கேட்கிறீர்கள்- ஆனால் அது தியானம் ஆகாது.

மனதை ஒருமுகப்படுத்துவது தியானம் அல்ல. ஒருமுகப்பாடு என்பது, மனமானது தன்னை ஒருமுகப்படுத்துவதற்குப் பெருமுயற்சி செய்வதாகும். அதற்கென குறிப்பிட்ட நோக்கங்கள் இருக்கின்றன. அது ஒரு அறிவியல் முறை, பயனுள்ளது. ஆனால் அது தியானம் ஆகாது.

ஆழ்ந்த சிந்தனை என்பது சற்றுத் தெளிவற்றது. கூடுதலான அருவத்தன்மை கொண்டது. ஒருமுகப்பாட்டில் புறப்பொருள் கூடுதலாகப் புறப்படுகிறது. ஆழ்ந்த சிந்தனையில் புறப்பொருள் அருவமாக இருக்கிறது; தீச்சுடர்மீது மனதை ஒருமுகப்படுத்துகிறீர்கள். அன்பைக் குறித்து நீங்கள் ஆழ்ந்து சிந்திக்கிறீர்கள். இந்நிலையில், கிறிஸ்தவத்தில் ஆழ்ந்து சிந்திப்பதும் தியானிப்பதும் ஒரே பொருளைக் கொண்டதாக உள்ளன.

தியானத்துக்கு ஒரு புது அர்த்தம் தரப்படவேண்டும். புதுவாசம்- ஸென் எனும் வாசம்- ஏற்றப்பட வேண்டும். ஒருமுகப்பாடு மனத்துக்குரியது. தியானம் மனத்துக்குரியதே அல்ல. இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையே ஆழ்ந்த சிந்தனை. மனதில் கொஞ்சமும், மனமற்றதில் கொஞ்சமும் சேர்ந்த கலவை; மனமும் அக மனமும் சந்திக்கும் எல்லை.

முழுமையான விழிப்புநிலை பெறவேண்டும்- அதுவே ஸென். தினமும் காலையில் சில மணித்துளிகள் அல்லது சுமார் 12 மணி நேரம் அதில் இருந்துவிட்டு பின் அதை முற்றிலுமாக மறந்துவிடுவ தென்பது முடியாது. அது உங்களின் இதயத்துடிப்பாக ஆகவேண்டும். அதில் நீங்கள் உட்கார வேண்டும். அதில் நீங்கள் உண்ணவேண்டும். ஆம், அதிலேயே நீங்கள் உறங்கவும் வேண்டும்.

கௌதம புத்தரின் முதன்மைச் சீடர்களில் ஒருவரான ஆனந்தர், புத்தரிடம் கேட்டார், "ஒரு விஷயம் என்னை எப்போதும் குழப்பி வருகிறது. இதைக் கேட்பது தேவையற்றது என்றாலும், என்னால் என் ஆர்வத்தை இதற்குமேலும் அடக்கி வைக்க முடியவில்லை. அது

என்ன பிரச்சனை என்றால், நீங்கள் உறங்கச்சென்றதும், இரவு முழுவதும் ஒரே வசத்திலேயே படுத்திருக்கிறீர்கள். உங்கள் கைகளையும் கால்களையும் எந்த நிலையில் வைத்திருந்தீர்களோ, எந்த பக்கவாட்டில் நீங்கள் படுத்திருந்தீர்களோ, அதிலிருந்து துளியும் மாறாமல் சிலைபோல் கிடக்கிறீர்கள். நீங்கள் அசைவதில்லை. புரண்டு படுப்பதில்லை. கையைக் காலை நகர்த்துவதில்லை. எதுவும் மாறுவதில்லை. உறங்கப் போகும் போது படுத்த அதே நிலையிலேயே காலையில் நீங்கள் கண்விழிக்கிறீர்கள். ஒருநாள் ஆர்வமிகுதியால் நான் இரவுமுழுவதும் உங்களைக் கவனித்திருந் தேன்- ஒரு அசைவுகூட இல்லை. அப்படியானால் தூக்கத்திலும்கூட நீங்கள் உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்கிறீர்களா?"

புத்தர் சொன்னார், "கட்டுப்பாடு என்னும் பேச்சுக்கே இடமில்லை. நான் விழிப்பாயிருக்கிறேன். தியானத்தில் இருக்கிறேன். தியானத்தில் உறங்குகிறேன். அதிகாலையில் தியானத்தில் நான் கண்விழிப்பது போலவே. ஒவ்வொரு இரவும் தியானத்தில் நான் உறங்கச் செல்லுகிறேன். என் பகல் பொழுது என் தியானமாகும் என் இரவும் அவ்வாறே. முழு அமைதியிலும் நிச்சலனத்திலும் நான் இருப்பதன் காரணம். அடியாழத்தில் நான் முற்றிலும் விழிப்பாக இருக்கிறேன் என்பதாகும். தியானம் என்னும் சுடர் புகையின்றித் தொடர்ச்சியாக எரிந்தபடி இருக்கிறது. எனவேதான் அசைவதற்குத் தேவை இருப்பதில்லை."

யோக்கா கூறுகிறார்:

> **ஸென் மனிதர் ஸென்னில் நடக்கிறார், ஸென்னில் அமர்கிறார்.**

இது உங்கள் எல்லோருக்கும் மிகவும் முக்கியத்துவம் உடையதாகும். தியானமானது எந்த அளவுக்கு ஆழமானதாகிவிட வேண்டும் என்றால் நீங்கள் எங்கெங்கு போனாலும் அது உங்களில் தங்கி இருக்கவேண்டும். உங்களில் வாசம் செய்ய வேண்டும். நீங்கள் என்னென்ன செய்தாலும் அதில் எப்போதும் அது இருக்கவேண்டும். அப்போது மட்டுமே உங்கள் வாழ்க்கை அடிப்படை மாற்றம் பெற முடியும். அதன்பின் நீங்கள் உங்கள் வாழ்வில் தியானத் தன்மையுடன் இருப்பது மட்டுமல்ல, உங்கள் சாவினும் தியானத்தன்மையுடன் இருப்பீர்கள். ஆழமான தியானத் தன்மையுடன் நீங்கள் இறப்பீர்கள்.

அப்படித்தான் புத்தர் இறந்தார். அப்படித்தான் எல்லா புத்தர்களும் எப்போதும் இறந்திருக்கிறார்கள். அவர்களின் மரணம் அபார அழகுடைய ஒன்று. அவர்களின் வாழ்வு, அழகானது.

அவர்களின் சாவும் அழகானதே. அவர்களின் வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் எந்த இடைவெளியும் இருப்பதில்லை. அவர்களின் இறப்பு அவர்களின் இருப்பின் உச்சமாகவும் இறுதி சிகரமாகவும் இருக்கிறது. அவர்களின் வெளிப்பாட்டின் முழுமையாகவும் அது இருக்கிறது.

புத்தர் இறந்தபோது, அவருக்கு வயது 82. அவர் தம் சீடர்கள் அனைவரையும் அழைத்தார். ஒவ்வொரு நாள் காலையிலும் அவர்களிடம் பேசும்போது வழக்கமாக அழைப்பதைப் போலவே அழைத்தார். அவர்கள் எல்லோரும் கூடினார்கள். அப்போது அவரது மரணம் குறித்து அவர்களில் எவரும் சிந்தித்தும் பார்க்கவில்லை.

அப்போது புத்தர் சொன்னார், "இதுதான் உங்களுக்கு என் கடைசி போதனை. உங்களுக்கு நான் சொல்ல வேண்டிய யாவற்றையும் சொல்லிவிட்டிருக்கிறேன். 42 ஆண்டுகளாக உங்களிடம் நான் பேசி வந்திருக்கிறேன்... என் முழு இதயத்தையும் உங்களிடம் திறந்து ஊற்றியிருக்கிறேன். இப்போது, யாருக்காவது ஏதாவது கேள்வி கேட்பதற்கு மிச்சம் இருந்தால் அவர் அதைக் கேட்டுக்கொள்ளலாம். ஏனெனில் இதுதான் என் வாழ்வின் கடைசி நாள். இன்றுதான் அக்கரைக்குக் கிளம்புகிறேன். என் படகு வந்துவிட்டது."

அவர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள்! தினசரி பேருரையைக் கேட்பதற்காகத்தான் அவர்கள் வந்திருந்தார்கள். அவர் சாகப் போகிறார். சாவதைக் குறித்துத் துளியும் அலட்டிக் கொள்ளாமல் போகப்போகிறார் என்பதை அவர்கள் நினைத்தும் இருக்கவில்லை! அது வெறுமனே ஒரு சாதாரண நிகழ்வாகவே இருந்தது! "எனது படகு இக்கரை சேர்ந்திருக்கிறது. நான் புறப்பட்டாக வேண்டும். ஏதாவது கேள்வி விட்டுப் போயிருந்தால் இப்போது நீங்கள் கேட்டுக்கொள்ள முடியும், ஏனெனில் இப்போது நீங்கள் என்னிடம் கேட்காவிட்டால் இனி எப்போதும் நான் உங்களுக்குக் கிடைக்கமாட்டேன். பின் அந்தக் கேள்வி உங்களிடம் அப்படியே தங்கிவிடும். எனவே தயவுசெய்து, அன்புகூர்ந்து கேளுங்கள். தயக்கம் கொள்ளாதீர்கள்" என்ற சாதாரண அறிவிப்பாகவே அது இருந்தது.

அவர்கள் அழ ஆரம்பித்தார்கள். புத்தர் சொன்னார், "இந்த அபத்தத்தை எல்லாம் நிறுத்துங்கள்! அழுது புலம்புவதில் வீணாக்குவதற்கு இப்போது நேரம் இல்லை. ஏதாவது கேட்பதற்கு இருந்தால் கேளுங்கள். இல்லாவிட்டால் நான் போகிறேன். நேரம் வந்துவிட்டது. இனியும் நான் தாமதிப்பது முடியாது."

அவர்கள் சொன்னார்கள், "நாங்கள் கேட்பதற்கு ஒன்றுமில்லை. நாங்களாகக் கேட்டிருக்கக் கூடியதை விடவும் அதிகமாகவே நீங்கள்

தந்திருக்கிறீர்கள். நாங்கள் கேட்ட எங்களால் கேட்க முடிந்திருக்கக் கூடிய எல்லாக் கேள்விகளுக்கும் நீங்கள் பதிலளித்திருக்கிறீர்கள். இனிவரும் நூற்றாண்டுகளிலும் உண்மையைத் தேடப்போகும் எல்லாவிதமானவர்களுக்கும் நிறைவளிக்கும் பதில்களை நீங்கள் அளித்துவிட்டீர்கள்.''

அதற்கு புத்தர் சொன்னார், ''அப்படியானால் உங்களிடம் நான் விடைபெறுகிறேன், வாழ்த்துகள்.''

பின் அவர் தன் கண்களை மூடினார். பதுமாசனத்தில் அமர்ந்தார். அக்கரை நோக்கிப் போக ஆரம்பித்தார்.

பின்வரும் வரிசையில் நிகழ்ந்தேறியதாகச் சொல்லப்படுகிறது. முதலில் அவர் தன் உடலைவிட்டு நீங்கினார். இரண்டாவதாக தன் மனதைவிட்டு நீங்கினார். மூன்றாவதாக தன் இதயத்தைவிட்டு நீங்கினார். நான்காவதாக தன் ஆன்மாவைவிட்டு நீங்கினார். எவ்வளவோ அமைதியாக சமாதானமாக ஆனந்தமாக அவர் பிரபஞ்சத்துள் மறைந்தார். பறவைகள் இன்னிசை பாடிக்கொண்டிருந்தன. அதிகாலை ஆகி இருந்தது. சூரியன் இன்னமும் அடிவானத்தில்தான் இருந்தான். அவ்வளவு இனிமையான ஒரு முறையில் புத்தர் இறந்து கொண்டிருந்ததை பத்தாயிரம் சந்நியாசிகளும் உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள்! சாவைப்பற்றி எப்போதும் அவர்கள் கருதி வந்திருந்த விதமாக அங்கு எதுவும் நிகழவில்லை அது அத்தகைய அசாதாரணமான ஒரு அனுபவமாக இருந்தது.

ஏராளமான தியான ஆற்றல் அப்போது வெளியாகியது. அதில் அன்றே அக்கணமே ஏராளமானவர்கள் ஞானநிலை அடைந்தார்கள் விளிம்பு வரைக்கும் வந்துவிட்டவர்கள். அப்படியே அறியாததுக்குள் தள்ளப்பட்டார்கள். புத்தரின் அழகான மரணத்தின் மூலமாக ஆயிரக்கணக்கானோர் ஞானநிலை அடைந்தார்கள் என்று சொல்லப்படுகிறது.

அதை நாங்கள் 'சாவு' என்பதில்லை. 'மகாபரிநிர்வாணம்' என்றே அழைக்கின்றோம். பனிக்கட்டியானது உருகி சமுத்திரத்துடன் கலந்து விடுவது போல அவர் முழுமைக்குள் கலந்துவிட்டதை அவ்வாறு குறிப்பிடுகிறோம். அவர் தியானத்தில் வாழ்ந்தார்; தியானத்தில் மறைந்தார்.

யோக்காவால்தான் நான் இந்த ''ஸென்னிலேயே நடப்பது ஸென்னிலேயே உட்காருவது'' என்னும் தலைப்பைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். இந்த எளிமையான தொடரில், விழிப்படைந்தவர்கள் அனைவரின் அனுபவத்தின் மொத்தச் சாரமும் அடங்கி உள்ளது.

மேலும் யோக்கா கூறுகிறார்:

> **ஸென்னின் அச்சமற்ற சிந்தனை, சிங்கத்தின் ஆற்றல்மிக்க கர்ச்சனையை ஒத்துள்ளது.**
>
> **அது மற்ற எல்லா விலங்குகளின் நெஞ்சங்களிலும் பீதியைக் கிளப்புகிறது. யானைகளின் ராஜனும் தன் தகுதியை மறந்து ஓடிப்போகிறது.**
>
> **நல்லிதயம் கொண்ட சீடர்கள் மட்டுமே, முதிர்ந்த வேதாளத்தை (டிராகனை)ப் போன்று அந்த கர்ச்சனையை ஆழ்ந்த அமைதியுடனும் களிப்புடனும் செவிமடுக்கிறார்கள்.**

ஆம், ஸென் என்பது சிங்கத்தின் கர்ச்சனை போன்றதுதான். மற்ற மதங்கள் யாவும் அதிகமாய் நோகடிக்காத வகையில் பேசுகின்றன. அவை சமரசம் செய்துகொள்கின்றன. உங்கள் உறக்கத்துடன் அவை ஒத்துப்போகின்றன: ஸென்னோ சமரசமற்றது. உங்கள் உறக்கத்தையும் உங்கள் அழகிய கனவுகளையும் பற்றி அதற்குக் கவலையில்லை. அது உங்கள் உறக்கத்தை உலுப்பிக் கலைக்கிறது; சிதற அடிக்கிறது. என்ன ஆனாலும் சரி என்று உங்களை விழிப்புறச் செய்வதே அதன் முழு முயற்சியுமாக இருக்கிறது. ஆம்; அது ஒரு சிங்கத்தின் கர்ச்சனை போன்றதுதான்.

> **நல்லிதயம் கொண்ட சீடர்கள் மட்டுமே, முதிர்ந்த வேதாளத்தைப் போன்று அந்தக் கர்ச்சனையை ஆழ்ந்த அமைதியுடனும் களிப்புடனும் செவிமடுக்கிறார்கள்.**

உண்மையின்மீது ஆழமான அன்பு இருந்தால் மட்டுமே அதைக் கேட்டுக்கொள்ள முடிகிறது. வெறும் ஆர்வமுள்ளவர்கள். வெறும் பார்வையாளர்கள். வெறும் தத்துவர்கள்- இவர்களால் அல்ல. அடிப்படை நிலைமாற்றத்தின் ஊடாகச் செல்ல உண்மையாகவே ஆயத்தமாயிருக்கிறவர்கள். இறந்து மறுபடியும் பிறக்கச் சித்தமாயிருக்கிறவர்கள்- இவர்களால் தான் அதைக் கேட்க முடிகிறது. துணிவும் வீரமும் கொண்ட சிலருக்கே அது உரியது. ஏனென்றால் சர்ச்சுக்குப் போனால் சொர்க்கம் நிச்சயம் என்பது அதில் இல்லை. அல்லது இசுலாம் போலவும் அது இல்லை; தினமும் 5 தடவை தொழுவது என்னும் பெயரில்- உங்களின் சொந்தச் சொற்கள் அல்லாத சொற்களை, உங்களில் இருந்து இயல்பாகப் பீறி வெளிப்படாத வார்த்தைகளை, மற்றவர்களால் உங்கள்மீது திணிக்கப்பட்டிருக்கிற வசனங்களை-அவற்றின் அர்த்தம்கூடத் தெரியாமலேயே- கிளிப்பிள்ளைப்போலத் தொடர்ந்து ஒப்பித்தபடியே இருப்பதில்லை அது.

இது சுத்த மடத்தனமான உலகம்! பொருள் புரியாமலேயே முகமதியர்கள் அரபியில் தொழுகிறார்கள். பொருள் விளங்காமலே இந்துக்கள் சமஸ்கிருதத்தில் பிரார்த்திக்கிறார்கள். பொருள் புரியாமலே பவுத்தர்கள் பாலிமொழியில் வேண்டுகிறார்கள். இதற்கான எளிய காரணம், செத்த பாஷைகளைக் கைவிடாமல் வைத்துக் கொண்டிருப்பதில் புரோகிதர்கள் மிகவும் கெடுபிடியாய் இருப்பதுதான். ஏனெனில் உங்களுக்குப் புரிகிற மொழியில் அவை மொழிபெயர்க்கப்பட்டால் அந்தச் செபங்கள் மிகமிகச் சாதாரணமானவை என்பது எல்லோருக்கும் தெரிந்து விடும். நீங்கள் திகைத்துப் போவீர்கள்- பிரார்த்தனையாகப் பயன்படுத்தும் அளவுக்கு அவற்றில் என்னதான் உள்ளது என்பதை உங்களால் கண்டுபிடிக்கவே முடியாது! அவற்றின் மறைகவர்ச்சி யாவும் போய்விடும். அவை உங்களுக்குப் புரியாமல் இருப்பதால்தான் அவற்றில் மறைகவர்ச்சி உள்ளது. எனவேதான், லத்தீன், கிரேக்கம், அரபி, சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய வழக்கற்றுப்போன மொழிகளில்தான்- எவருக்கும் எள்ளளவும் புரியாத பாஷைகளில்தான்- பிரார்த்தனைகள் நடக்க வேண்டுமென பூசாரிகள் தொடர்ந்து கட்டாயப்படுத்தி வருகிறார்கள்.

நீங்கள் சொல்லுவதன் பொருள் உங்களுக்கே தெரிந்ததாக இல்லை. இது என்னவகைச் செபம்? இதை யாரிடம் நீங்கள் முன்வைக்கிறீர்கள்? கடவுளைப்பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. நீங்கள் சொல்வது எதுவும் உங்கள் இதயத்தில் இருந்து எழுந்தது அல்ல. இசைத்தட்டின் பதிலாக- ஹிஸ் மாஸ்டர்''ஸ் வாய்சாக- மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள்.

இப்படிப்பட்ட சமரசங்களில் ஸென்னுக்கு அக்கறை இல்லை. அது உங்களை உண்மையாகவே எழுப்ப விரும்புகிறது. ஆயின் இது கடினமான பணிதான். நன்றியை எதிர்பார்க்க முடியாத வேலைதான். ஒரு ஸென் ஆசான் (குரு) தேர்ந்து கொண்டிருக்கும் பணிக்காக அவருக்கு யாரும் நன்றிகூறப் போவதில்லை. அவரால் தாம் ஒழித்துக்கட்டப் படுவதாகவும், புண்படுத்தப்படுவதாகவுமே எல்லோரும் உணர்வார்கள். தம் துக்கத்தை அவர் கெடுக்கிறார் என்றே எல்லோரும் உணர்வார்கள். உண்மையான தேடல் உள்ளவர்களும் எல்லாவற்றையும் பணயம் வைக்கத் தயாராயிருக் கிறவர்களும் ஆன ஒரு சிலர் மட்டுமே புரிந்துகொள்ள முடியும். ஏனென்றால் உங்கள் வாழ்வின் ஒரு பகுதி மட்டுமல்ல. உங்கள் முழு வாழ்வுக்கே அடிப்படையான மாற்றம் பெற்றாக வேண்டி இருக்கிறது என ஸென் பேசுகிறது.

கோயிலிலோ மசூதியிலோ செபக்கூடத்திலோ இருக்கும் போது நீங்கள் மதத்தன்மை உள்ளவராகிறீர்கள். அதைவிட்டு வெளியே வந்ததும் மதத்தன்மை அற்றவர்களாக, பழைய ஆளாகவே இருக்கிறீர்கள். அப்படியானால் நீங்கள் கோயிலுக்குள் இருந்த நிலை ஒரு வெளிவேசம்; பாசாங்கு இது உங்களைப் பிரிக்கிறது. ஆளுமைப் பிளவுள்ள ஒரு மனித சமுதாயத்தைப் படைக்கிறது. கூறுபட்ட மனங்களைக் கொண்ட மனிதர்களை இது உருவாக்குகிறது. மசூதிகளிலும் கோயில்களிலும் அவர்கள் பிரார்த்தனை செய்யும்போது நீங்கள் போய்ப் பார்த்தால், "எவ்வளவு அழகான மனிதர்கள்!" என்பீர்கள். ஆனால் அதே மனிதர்கள் சந்தையில் எவ்வளவோ அசிங்கமாய் ஆகிவிடுகிறார்கள். நீங்கள் கற்பனை செய்தும் பார்க்க முடியாத அளவுக்கு குரூரமான முறையில் ஒருவரை ஒருவர் கொலை செய்கிறார்கள்! மசூதியிலும் சர்ச்சிலும் செபிக்கும் நிலையில் அவர்களை நீங்கள் காணும்போது அவர்கள் மிகவும் குரூரமாக, யந்திரத்தனமாக ஒருவர் ஒருவரை வெட்டிச் சாய்ப்பார்கள் என்று சொன்னால், அதை நீங்கள் நம்பியிருக்க மாட்டீர்கள்.

ஆயிரக்கணக்கான முகமதியர்களை கிறித்தவர்கள் கொன்றிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான கிறித்தவர்களை முகமதியர்கள் கொன்றிருக்கிறார்கள். இந்துக்கள் முஸ்லீம்களைக் கொன்றிருக்கிறார்கள். முஸ்லீம்கள் இந்துக்களைக் கொன்றிருக்கிறார்கள். இந்துக்கள் பவுத்தர்களைக் கொன்றிருக்கிறார்கள். இப்படியே பட்டியல் நீள்கிறது. இந்த மதங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று எதிரிகளாகவே இருந்து வந்திருக்கின்றன. அவை அன்பைப்பற்றிப் பேசுகின்றன. ஆனால் அது வெறும் பேச்சு யதார்த்தமோ முற்றிலும் வேறு. ஆயின் இது ஏன் இப்படி?- ஏனெனில் அவர்களின் பிரார்த்தனை பொய்யானது ஆகும்.

உங்கள் அன்றாட வாழ்வில், பெயரளவில் அல்ல. மெய்யாகவே சமயத்தன்மையுடன் நீங்கள் இருக்கவேண்டும் என ஸென் விரும்புகிறது லௌகம்- ஆன்மிகம் என உங்கள் வாழ்வை இரண்டாக ஸென் பிரிப்பதில்லை. எல்லாமே ஆன்மிகம். புனிதம் என்கிறது அது. எனவே சாப்பிடும்போது, தியானத்தன்மையில் இருங்கள். நடக்கும்போது, தியானத்தன்மையில் இருங்கள். நீங்கள் எதைச் செய்யும்போதும்... குளிக்கும்போது, தியானத்தன்மையில் இருங்கள். நீங்கள் எங்கிருந்தாலும் கோயிலில்தான் இருக்கிறீர்கள். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் கடவுளின் ஆலயம்! ஒரு ஆலயத்துக்குள் நீங்கள் எவ்வாறு நடந்து கொள்ள விரும்புவீர்களோ அவ்வாறு இங்கு

நடந்து கொள்ளுங்கள் கடவுள் எங்கெங்கும் பிரசன்னமாக இருக்கிறார்.

ஸென், கடவுளைப் பற்றிப் பேசுவதே இல்லை, கடவுள். தன்மையையே பேசுகிறது. அது ஒரு குணம், எங்கும் நிறைந்து இருக்கும் ஒரு மணம் கற்றுக் கொள்ளும் திறன் உங்களுக்கு இருந்தால் மட்டும்தான் அதை உங்களால் காணமுடியும். உங்கள் பங்குக்குத் தேவையானது எல்லாம். அமைதியுடன்- ஏற்புத் தன்மையுடன்- வரவேற்கும் உணர்வுடன்- திறந்த தன்மையுடன் இருப்பதுதான்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ, பெருங்குழப்பத்தில் இருந்தே நாம் கற்றுக் கொள்கிறோம் என்று சொல்லப்படுகிறது. அப்படியானால் மனிதர் விழிப்புப் பெறுவதற்கு இன்னும் எவ்வளவு கூடுதலான குழப்பம் தேவைப்படுகிறது?**

**சோல் லெவிஸ்,**

குழப்பம் என்பது வெளியில் இல்லை: வெளியில் இருப்பது பேரண்டம் (Cosmos). ஆனால், உள்ளே இருப்பதோ பெருங் குழப்பம். மேலும் உள்ளே இருக்கும் இந்தக் குழப்பத்தின் காரணமாகத்தான் மக்கள் உள்நோக்கிப் பார்ப்பதில்லை; பார்ப்பதற்கே பயப்படுகிறார்கள். உள்ளே பார்ப்பதற்கு மிகவும் அஞ்சி நடுங்குகிறார்கள். உள்ளே பார்ப்பதற்கு நேரமோ இடமோ மீதமிராதவாறு சாத்தியமான ஒவ்வொரு வகையிலும் தம்மை அவர்கள் வெளிவிசயங்களில் ஈடுபடுத்தியபடியே இருக்கிறார்கள். "உன்னையே நீ அறிவாய்" என்று புத்தர்கள் சொல்வதை அவர்கள் தொடர்ந்து கேட்டபடியே இருக்கிறார்கள். "உன்னையே நீ அறிவாய்" என்பதன்மூலம் உணர்த்தப்படுவதை அவர்கள் புரிந்து கொள்கிறார்கள். ஆனால் தம்மை அறிய அவர்கள் எந்த முயற்சியும் செய்வதில்லை; (உள்ளே நிலவும்) பெரும் குழப்பத்தைக் குறித்து அவர்கள் அஞ்சுகிறார்கள்.

உள்ளே பெருங்குழப்பம் இருக்கிறது. வெளியில் எவ்விதக் குழப்பமும் இல்லை. விண்மீன்கள் ஒரு சீரான முறையில் இயங்குகின்றன. முழு இருத்தலும் சீராக இயங்குகிறது. முற்றான இசையில் அது இருக்கிறது. மனிதரின் மனம் மட்டுமே குழப்பத்தில் இருக்கிறது. மேலும் வெளியில் நீங்கள் காணமுடிகிற குழப்பமும் செயற்கையே, மனிதர் உண்டாக்கியதே.

அ-மனமாக (-மனமற்றவராக) ஆகும்வரை மனிதர் குழப்பமாகவே இருப்பார். மனமே குழப்பம். குழப்பமாகத்தான் மனம் இருக்கமுடியும். அதனுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். மனம் என்பது என்ன? இறந்த காலம் கூட்டல் எதிர்காலம். நிகழ்காலம் என்பது மனதின் பகுதியாக இருப்பதே இல்லை. நிகழ்காலம். இருந்தலுக்குச் சொந்தமானது. இருத்தலோ முழுமையான இணக்கமாகும். இறந்தகாலம் இப்போது இல்லை. வருங்காலமோ இன்னும் வரவில்லை. ஆனால் உங்கள் மனம் இந்த இல்லாத இரண்டாலும்தான் ஆகியதாக இருக்கிறது. நினைவுகளும் கற்பனைகளும் நினைவுகளும் ஆசைகளும், நினைவுகளும் நம்பிக்கைகளும் ஆக அது இருக்கிறது. இதனால்தான் நீங்கள் ஒருமித்த நிலையில் வாழ்ந்து வருகிறீர்கள்.

உள்ளுக்குள் ஒவ்வொருவரும் பித்தராகவே இருக்கிறார். ரொம்பவும் எல்லைதாண்டிப் போகாதவரை எவரையும் நாம் பைத்தியம் என்று அழைப்பதில்லை. ஆனால் அகநலம் அற்றவர் களுக்கும், அகநலம் உடையவர்கள் எனக் கருதப்படுகிறவர்களுக்கும் இடையிலான வேறுபாடு சதவீத ரீதியானது மட்டுமே. எதுவும் அதைத் தூண்டிப் பாதித்துவிட முடிகிறது. சுமார் 99 டிகிரிக்குப் பக்கத்தில் ஏதோ ஒரு புள்ளியில் நீங்கள் வெந்துகொண்டிருக்கிறீர்கள். இன்னும் ஒரு டிகிரி அதிகரித்தால் போதும். உங்கள் தொழில் முடங்கிவிட்டாலோ, உங்கள் பொருளதாரம் திவாலாகி விட்டாலோ, உங்கள் மனைவி இறந்துவிட்டாலோ போதும். அந்த ஒரு டிகிரி உங்கள் 99 டிகிரியுடன் சேர்கிறது. நீங்கள் கொதித்து ஆவியாகத் தொடங்குகிறீர்கள். நிங்கள் பைத்தியமாகிறீர்கள்.

உளவியலாளர்களும் உளசிகிச்சைக்காரர்களும் ஆகிய எல்லோருமே உங்களை எல்லைகளுக்குள் இருத்தமட்டுமே பார்க்கிறார்கள். உங்கள் இயல்பின்மையில் நீங்கள் இயல்பாக உணரும்படி அவர்கள் உங்களைக் கட்டுப்படுத்துகிறார்கள். அதுவே அவர்களின் செயல்பாடாக இருக்கிறது. அவர்கள் இந்தச் சமுதாயத்தின் தரகர்களாக இருக்கிறார்கள். அப்படித்தான் முன்னாட்களில் புரோகிதர்கள் அந்த சமுதாயத்தின் தரகர்களாக இருந்தார்கள். மன மருத்துவ நிபுணர்கள் புதிய புரோகிதர்களாக-பதில் ஒரு புரோகித வகுப்பாக இருக்கிறார்கள். இந்த வகுப்பு இந்தச் சமுதாயம் தொடர்ந்து இயங்கும்படி செய்கிறது. எல்லாமே இங்கு சரியாக உள்ளது என இந்தச் சமுதாயத்தைத் தொடர்ந்து நம்பும்படி செய்கிறது.

எதுவுமே சரியில்லை. ஒவ்வொருவரும் நிலைகுலைவின் விளிம்பில் இருக்கிறார். எதுவும்- எந்தத் தற்செயல் நிகழ்வும்- உங்களை முழுப் பைத்திய நிலைக்குள் தள்ளிவிட முடியும். நீங்கள் தயாராகிக் கொண்டிருக்கிறீர்கள். எப்போதும் தயாராகியபடியே இருக்கிறீர்கள். எந்த அளவுக்கு நீங்கள் கூருணர்ச்சி உடையவரோ, எந்த அளவுக்கு நீங்கள் உயிர்த்துடிப்பு நிரம்பியவரோ, அந்த அளவுக்கு நீங்கள் பைத்தியம் ஆவதற்கான சாத்தியம் அதிகம்.

தன் மனைவியின் இறுதிச் சடங்கின்போது பரெல்லி பயங்கர கல்லுணிவேடம் போட்டான். அது மிகவும் பயங்கரமாக இதயத்தை நெகிழவைப்பதாக இருந்தது. உண்மையில் கல்லறைக்குள் குதித்து அவனுடைய காதலி மரியாளுடன் புதையுண்டு போகாதபடி அவனை அவனுடைய நண்பர்கள் வலுக்கட்டாயமாக தடுத்து நிறுத்த வேண்டி இருந்தது. பின் வாடகைக் காரில் வீட்டுக்கு இட்டுச்செல்லப்படும் போதும் மிகுந்த துயரத்தோடேயே இருந்தான். உடனடியாக முழுமையாகத் தன்னை தனிமைப்படுத்திக் கொண்டான்.

ஒருவாரம் கழிந்தது. அவனைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. இறுதியாக பரிதாபத்துக்குரிய அம்மனிதனைக் குறித்து, அவனுடைய இறந்துபோன மனைவியின் சகோதரன் கவலையடைந்தவனாய் அந்த வீட்டுக்குப் போனான். பத்து நிமிடங்களாக அழைப்பு மணிப் பொத்தானை அழுத்தினான். பின் இன்னும் அதிக கவலையுடன் அந்த மைத்துனன் முகப்புக்கதவைக் கடப்பாரையால் நெம்பித்திறந்து மாடிக்குப் போனான். அங்கே இறந்துபோன தன் சகோதரியின் கணவன், வேலைக்காரியை மும்முரமாக இடித்துக்கொண்டிருப் பதைக் கண்டான்.

படுக்கையறை ஒரே அலங்கோலமாக இருந்தது. காலி மதுப்புட்டிகள் சிதறிக் கிடந்தன.

"இது அநியாயத்துக்கு மோசம். பரெல்லி" அதிர்ச்சியடைந்த குரலில் தெரிவித்தான் மச்சினர், "உன் மனைவி, என் சகோதரி இறந்து ஒருவாரம் தான் ஆகிறது. அதற்குள் நீ இதை செய்து கொண்டிருக்கிறாயே!

சவாரியில் மிகவும் மும்முரமாக இருந்த பரேலியால் கஷ்டப்பட்டு கழுத்தை மட்டுமே திருப்பமுடிந்தது. "நானே எப்பேர்ப்பட்ட துக்கத்தில் மூழ்கி இருக்கிறேன், (அப்படி இருக்க) நான் செய்வது இன்னதென எனக்கு எப்படித் தெரியும்? எப்பேர்ப்பட்ட துக்கத்தில் மூழ்கி இருக்கிறேன் நான்!"

மக்கள் ஒரே அலங்கோலமாக இருக்கிறார்கள். எவ்வாறோ முகத்தைக் காப்பாற்றிக் கொண்டு மாத்திரம் இருக்கிறார்கள். ஒரு வெளித்தோற்றத்தைத் தந்து சமாளித்தபடி இருக்கிறார்கள். எல்லாமே சரியாக உள்ளதாக நடித்துக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால் எதுவுமே சரி இல்லை.

பெருங்குழப்பத்தில் இருந்தே நாம் கற்றுக் கொள்கிறோம் என்று சொல்லப்படுகிறதே என என்னிடம் கேட்கிறாய் சொல்.

ஆம். அது உண்மைதான். ஆனால் உள்நோக்கிச் சென்றால் மட்டுமே. குழப்பத்துக்குள் உணர்வுடன்- வலியத் தெரிந்தே பிரவேசித்தால் மட்டுமே, நாம் குழப்பத்தில் இருந்து கற்றுக் கொள்கிறோம். குழப்பத்தை எதிர்கொள்ளும்போது நாம் கற்றுக் கொள்கிறோம்தான். கற்றுக் கொள்வதற்கு வேறு வழி கிடையாது. உண்மையில் இந்தப் பெரும் குழப்பத்தில் இருந்துதான் நட்சத்திரங்கள் பிறக்கின்றன. இந்தப் பெரும் குழப்பத்தில் இருந்துதான் புத்தர்கள் பிறக்கிறார்கள். ஆனால் அதை நீ எதிர்கொண்டாக வேண்டும்.

ஆனால் நாம் நேர் எதிரானதையே செய்துகொண்டு போகிறோம்; தொடர்ந்து அதை மூடி மறைத்தபடி இருக்கிறோம்; அதை வேறு யாருக்கும் காட்ட நாம் விரும்புவதில்லை. நாமாகவே அதைப் பார்ப்பதற்கும் விரும்புவதில்லை. அந்த அளவுக்கு நாம் அஞ்சிநடுங்குகிறோம்; அரண்டு போயிருக்கிறோம். அதை நம்மால் கட்டுப்பாடாகக் கையாள முடியாமல் போகலாம் என பயப்படுகிறோம். எனவே வெளியில் இருக்கும் எதன்மீதாவது தொற்றிக்கொள்கிறோம். தொற்றிக்கொள்ள எந்தச் சாக்குப் போக்குக் கிடைத்தாலும் போதும். ஏதாவது ஒரு சாக்குப்போக்கைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, நம்மை நாமே தொடர்ந்து தவிர்த்துக் கொண்டே போகிறோம்.

உங்கள் வாழ்வில் நீங்கள் மிகவும் தவிர்க்கும் மனிதர் நீங்கள்தான். ஒருபோதும் உங்களை நீங்கள் எதிர்ப்படாத வழியிலேயே உங்கள் முழு வாழ்க்கையையும் நடத்திக்கொண்டு போகிறீர்கள். உங்களை நீங்கள் ஒருபோதும் சந்திக்காத வழியிலேயே நீங்கள் பயிற்சி தரப்பட்டு, வளர்க்கப்பட்டு, நாகரிகப்படுத்தப்பட்டு, பண்புகள் ஏற்றப்பட்டு இருக்கிறீர்கள். உங்களைத் தவிர மற்ற ஒவ்வொருவரையும் நீங்கள் சந்திப்பீர்கள். உங்களைத்தவிர மற்ற ஒவ்வொருவருடனும் நீங்கள் அறிமுகம் ஆவீர்கள். இதற்கான எளிய

காரணம், உள் முரண்பாட்டை (குழப்பத்தை) கையாளுவது எவ்வாறு என்பதைச் சமுதாயம் அறிந்திருப்பது இல்லை என்பதே.

ஒரு ஆசானின் முன்னிலையில்தான், ஒரு புத்த களத்துக்குள் தான். மக்கள் தமக்குத் தாமே முகம்கொடுக்கத் துணிவைச் சேகரித்துக் கொள்கிறார்கள். தொடக்கத்தில் அது ஒரு தடையாக இருந்தாலும், அதற்குள் உணர்வுடன் நீங்கள் செல்லச் செல்ல, கூடிய விரைவில் அந்தத் தடையே ஒரு தடையுடைத்த பாதை ஆகிறது.

தடைகளை தடையுடைந்த பாதைகளாக நிலைமாற்றுவதே ஆசானின் முழு வேலையுமாக இருக்கிறது. உளநோய் சிகிச்சை நிபுணர் உங்களை வெறுமனே ஒட்டுச் சேர்க்கிறார். உங்கள்மீது சில கட்டுகள் போடுகிறார். இங்குமங்குமாக கொஞ்சம் களிம்பு தடவுகிறார். உங்கள் இரண்டு கால்களாலும் மீண்டும் நீங்கள் பழைய முறையில் எழுந்து நிற்க உதவுகிறார். உங்களை உங்கள் பழைய தன்மையிலேயே அவர் ஆக்குகிறார். நீங்கள் செயல்படத் தொடங்குகிறீர்கள்; அதே பழைய முறையிலேயே நடக்கத் தொடங்குகிறீர்கள். இதுவரை செய்துவந்ததையே இனியும் செய்துவருகிறீர்கள். அதுவே அவருடைய வேலை. உங்களை அடியோடு மாற்றுவதற்காக அவர் இல்லை.

உங்களுக்குத் தேவை ஒரு கடந்தநிலை உளவியல், புத்தர்களின் உளவியல்.

ஒரு நிலைகுலைவுக்குள் உணர்வுடன் பிரவேசிப்பது வாழ்வில் ஒரு மாபெரும் சாகசமாகும். அது ஒரு மிகப்பெரிய துணிகர முயற்சியாகும். ஏனெனில் முற்றான குழப்பத்தில் இருந்து தானாக ஒரு புதிய பாதை வெளிப்படும் என்பதற்கு உத்தரவாதம் இல்லை. அது நடக்கவே செய்கிறது. ஆனாலும் இந்த விசயங்களை முன்னதாகவே உறுதிபடக் கூறிவிடமுடியாது. உங்கள் குழப்பம் மிகப் பழமையானதாக இருக்கிறது. பலப்பல பிறவிகளாக நீங்கள் பெருங்குழப்பத்தில் இருந்து வந்திருக்கிறீர்கள். அது தடித்தும் இறுகியும் உள்ளது. அதுவே தன்னளவில் ஒரு பிரபஞ்சமாக உள்ளது. எனவே உங்களின் குறைந்த அளவு சக்தியுடன் அதில் நீங்கள் புகும்போது அதில் அபாயம் இருக்கவே செய்கிறது. ஆனால் இந்த அபாயத்தை எதிர்கொள்ளாமல், ஒருவரும் ஒருபோதும் ஒருங்கிணைந்தவராக ஆனதில்லை. ஒருவரும் ஒருபோதும் ஒரு தனியாளாக, பிரிக்கமுடியாத முழுமையாக ஆனதில்லை.

சோல். அந்தக் கூற்று முற்றிலும் சரிதான். பெரும் குழப்பத்தில் இருந்துதான் நாம் கற்றுக்கொள்கிறோம். ஆனால் பெரும்

குழப்பத்தின் ஊடாக நாம் போனால் மட்டுமே கற்றுக் கொள்கிறோம். அதுவும் குழப்பத்தின் ஊடாக ஒரு குறிப்பிட்ட வழியில்- பாணியில்- முறையில் நாம் போக வேண்டி இருக்கிறது. எந்த முறையும் இல்லாமல் குழப்பத்துக்குள் போவது என்பது முறிவாகவே இருக்கும்; உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்.

ஸென் அல்லது தியானமே அந்த முறையாகும். இது குழப்பத்தின் ஊடாக, ஆன்மாவின் காரிருளின் ஊடாக, சமனத்தோடு- கட்டுப்பாடாக- உன்னிப்பாகச் செல்ல உங்களுக்கு உதவுகிறது. விடியல் இன்னும் தொலைதூரத்தில் இல்லை. ஆனால் விடிவை நீங்கள் அடைய முடியும்முன், காரிருட்டைக் கடந்தாகவேண்டி உள்ளது. மேலும் விடியல் நெருங்கும் போதுதான் இரவு மிகுந்த இருட்டாக மாறுகிறது.

இதுதான் கூட்டுவாழ்க்கைச் சங்கங்களின் (கம்யூன்களின்) உண்மையான பணியாகும். ஏனெனில் தனிப்பட்ட உங்களால் அதைச் செய்ய முடியாமல் போகலாம். ஆனால் ஒரு கம்யூனில் (ஆசிரமத்தில்) பலர் உங்களைவிட முன்னால் இருக்கிறார்கள். பலர் உங்களை விடப் பின்னால் இருக்கிறார்கள். விடியலை அடைந்து விட்டிருக்கிற ஒரு ஆசான் உடனிருக்கிறார். அவர் உங்களுக்குத் தொடர்ந்து அழைப்புவிடுத்துக் கொண்டே இருக்கிறார். "கவலைப்பட வேண்டாம்; இலக்கு வெகுதூரத்தில் இல்லை" என உங்களிடம் சொல்லிக்கொண்டே இருக்கிறார்... உங்களைவிட முன்னுக்குச் சென்றவர்கள் இருக்கிறார்கள். அவர்கள், "கவலைப்படத் தேவையில்லை. அத்தகைய நிலையைக் கடந்தே நாங்களும் வந்திருக்கிறோம். நீங்களும் அதனூடாகக் கடந்து செல்வீர்கள். இன்னும் கொஞ்சம் அதிக முயற்சி, இன்னும் கொஞ்சம் அதிகப் பொறுமை, இன்னும் கொஞ்சம் அதிக காத்திருப்புத்தான் தேவை" என்கிறார்கள்.

பிரகாசமான விடிவெள்ளியாக ஆசான் வேறு இருக்கிறார். அவர், எல்லா வகையிலும் உங்களுக்கு உதவிக்கொண்டே இருக்கிறார். நீங்கள் ஓடிவிட, தப்பிக்க, உங்கள் பழைய உலகுக்குத் திரும்பிச் செல்ல, இது பயங்கரத் தீக்கனவாய் இருப்பதால் இதையெல்லாம் மறந்துவிட விரும்பும் போதெல்லாம் அவர் உங்கள் கைகளைப் பிடித்துக் கொள்கிறார்.

ஆம் சோல், கற்றுக்கொள்ளலாம்தான். ஆனால் கடின வழியில்தான் கற்றுக்கொள்ள வேண்டும். குறுக்கு வழி கிடையாது.

மனிதர் விழிப்புப் பெறுவதற்கு இன்னும் எவ்வளவு கூடுதலான குழப்பம் தேவைப்படுகிறது என்று நீ கேட்கிறாய்.

இன்னும் எவ்வளவு கூடுதல் என்ற கேள்வியே இதில் இல்லை. அளவுபற்றிய பிரச்சனை அல்ல இது. ஒன்று நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள். அல்லது விழித்திருக்கிறீர்கள். ஒருவரும் மற்றவரைவிட அதிகமான உறக்கத்தில் இல்லை. எவ்வளவு கூடுதலாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். தூங்குபவர் எல்லாம் ஒரேவிதமாகவே தூங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பது இங்கு பொருட்டில்லை. இது அதைப் பற்றிய பிரச்சனை அல்ல. நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள். அதுவே போதுமானது. விழிப்பின் விஷயத்திலும் இதுவே நிலை. நீங்கள் விழித்திருந்தால் விழித்திருக்கிறீர்கள்- அவ்வளவே. கூடுதல் விழிப்பு அல்லது குறைந்த விழிப்பு என்ற நிலையில் யாரும் இருப்பதில்லை.

பல நூற்றாண்டுகளாக (இதை) இறையியலாளர்கள் விவாதித்து வந்திருக்கிறார்கள்... இறையியலாளர்கள் எப்போதுமே மடத்தனமான காரியங்களையே விவாதிக்கிறார்கள். இந்தியாவில் அவர்கள் பல நூற்றாண்டுகளாக "யார் அதிகம் விழிப்புப் பெற்றவர், மகாவீரரா? புத்தரா?" என விவாதித்து வந்திருக்கிறார்கள். மகாவீரரே அதிகம் விழிப்பு பெற்றவர் என சமணர்கள் சொல்லுகிறார்கள். புத்தரின் சீடர்களோ புத்தரே அதிகம் விழிப்புப் பெற்றவர் என்கிறார்கள். ஆக முழுநோக்கமுமே அனர்த்தமாயிருக்கிறது. மொத்த வாதமும் முட்டாள்தனமாய் இருக்கிறது. இதில் அதிகம் அல்லது குறைவு என்னும் பேச்சுக்கே இடமில்லை. ஒருவர் விழிப்புப் பெற்றவர் என்றால் அவர் விழிப்புப் பெற்றவர், அவ்வளவே. புத்தர் விழிப்புப் பெற்றவர். மகாவீரர் விழிப்புப் பெற்றவர். இரவு முடிந்தது.... குழப்பமானது (ஒழுங்கீனம்), தெளிவாக (ஒழுங்குலகமாக) உருமாற்றப்பட்டுவிட்டது.

இதுதான் அற்புதம் நீங்கள் முற்றிலும் விழிப்புடன் இருக்கையில் உங்கள் பெருங்குழப்பமே ஒழுங்குலகமாக ஆகிறது. ஏனெனில் அது ஒரு கூட்டிசையின் பகுதியாக அமர ஆரம்பிக்கிறது. ஓசையானது இசையாக ஆகிறது. திடீரென அந்தப் பித்த நிலை/ மூடத்தனம் யாவும் புத்த நிலையாக/ ஞானநிலைபேறாக உருமாற்றம் பெறுகிறது. இரண்டும் ஒரே ஆற்றல்தான்! குழப்பம் என்றால் ஆற்றல்- அதைப்பற்றி நீங்கள் உணர்வற்றிருக்கிற ஆற்றல். நீங்கள் உணர்வுமயம் ஆகும்போது, உணர்வென்னும் அந்த நிகழ்வே ஒரு நிலைமாற்றம் நிகழ்வாக இருக்கிறது. நீங்கள் எதையும் செய்யத் தேவை இல்லை. உணர்வுடன் இருத்தல் மட்டுமே போதுமானது.

வசந்தம் வந்துவிட்டது. திடீரென மொட்டுகள் அவிழத் தொடங்குகின்றன. பூக்கள் பூக்கின்றன- ஆயிரக்கணக்கான பூக்கள் அகவுலகம் நறுமணத்தால் நிறைகிறது.

மனிதரோ ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கிறார்.

ஒரு பண்ணை வீட்டின் கூரைமுகட்டின் உச்சியில் ஒரு கிளி குந்தி இருந்ததை, குடித்திருந்த முல்லா நசுருதீன் கண்டு கொண்டார். அதன் பளிச்சென்ற வண்ணத்தால் கவரப்பட்டவராய், ஒரு ஏணியை விரைந்து எடுத்து வந்தார். கூரைமேல் ஏறினார். தன் தொப்பியை பறவைமேல் போட்டு மூடப்போனார். அப்போது கிளி தன் மணிக்கண்ணால் அவரை நிறுத்தி "என்ன செய்கிறதாக உன் நினைப்பு?" என்று கோபத்துடன் கேட்டது.

"கடவுளே. நான் ஒன்றையும் செய்வதாக நினைக்கவில்லை" என்ற முல்லா, "நீங்கள் ஒரு பறவை என்று நினைத்துவிட்டேன்!" என்றார்.

மக்கள் தம் உணர்வில் இல்லை! நீங்கள் விழித்திருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள். அதுதான் மிகப்பெரிய தவறுகளில் ஒன்று- அது உங்களை விழிப்பற்றவர்களாகவே தொடர்ந்து இருத்துகிறது. நீங்கள் விழிப்புடன் இருக்கிறீர்கள் என்ற எண்ணமே ஒரு சுய ஏமாற்றுத்தான். ஏற்கெனவே விழிப்புடனேயே இருப்பதாக நீங்கள் நினைக்கும்போது, பின் விழிப்படைவதற்கு எதையும் செய்யத் தேவையில்லாமல் போகிறது.

நீங்கள் குடிபோதையில் இருப்பதை உணரவேண்டும். பொருளாசை, காமம், கோபம், புகழ்நாட்டம், அகங்காரம் போன்ற பலவித போதைகளில் இருக்கிறீர்கள். இவை எல்லாம் போதைப் பொருள்கள்தான்! இது ஒரு விசித்திரமான உலகம்; சாதாரணமான மருந்துகள், அவ்வளவு தீமை செய்யாதவை, தடை செய்யப்பட்டு உள்ளன. புகை பிடிப்பதற்கு எதிராக மக்கள் ஓயாமல் பேசி வருகிறார்கள். ஆனால் அது அவ்வளவு கெடுதல் அல்ல. அது ஒருவிதப் பிராணாயாமம்-மூச்சுப் பயிற்சி. மூச்சை உள்ளே இழுக்கிறீர்கள்- வெளியே விடுகிறீர்கள். சுத்தமான காற்றையே நீங்கள் சுவாசிக்க முடியும் என்னும் போது இந்த அசுத்தப் புகையைச் சுவாசிப்பதும், அதற்கு விலையும் கொடுப்பதும் சற்று மூடத்தனம்தான். ஆனால் அதைப்பற்றி இந்த அளவுக்குக் கவலைப்பட ஒன்றுமில்லை. அல்லது, மக்கள் மதுபானத்துக்கு (ஆல்கஹாலுக்கு) எதிராக இருக்கிறார்கள். எப்போதாவது ஒரு தடவை சிறிது மது அருந்துவதில் கேடு ஒன்றும் இல்லை.

கேளிக்கைதான்! அத்துடன் மது சுத்த சைவமாகும்! யாருக்கும் நீங்கள் எந்தத் தீங்கும் செய்யவில்லை. ஆனால் குடிக்கும் புகைக்கும் மிகுந்த எதிர்ப்புத் தெரிவிக்கப்படுகிறது.

புதிதாக வந்துள்ள போதைப் பொருள்கள் ஆல்கஹாலைவிட மேல் காட்டாக, ஆல்கஹாலைவிட எல்எஸ்டி எவ்வளவோ மேல். ஆல்கஹால் அளவுக்குக்கூட அதில் கெடுதல் இல்லை. சரியான அளவில் சரியான துணையுடன் சரியான சூழலில் எடுத்துக் கொண்டால் அது உங்களுக்கு பல செய்திகளை வெளிப்படுத்த முடியும். உங்களை நீங்களே எதிர்கொள்வதற்கு அதுவும் ஒரு முறையாக உதவமுடியும். உங்கள் ஜீவனைக் குறித்தும் இருத்தலைப் பற்றியுமே புதிய பார்வைகளை, புதிய உள்ளொளிகளை அது உங்களுக்கு வழங்க முடியும். ஆனால் மக்கள் அதற்கு எதிராக இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் பொருளாசைக்கு எதிராக இல்லை; அகங்கார ஆட்டங்களுக்கு எதிராக இல்லை; புகழ் நாட்டத்துக்கு எதிராக இல்லை.

சில மாதங்களுக்கு முன்புவரை மொரார்ஜி தேசாய் இந்தியாவின் பிரதமராக இருந்தார். அவர் ஆல்கஹாலுக்கு மிகவும் எதிராக இருந்தார். அந்த எதிர்ப்புணர்வால் பீடிக்கப்பட்டிருந்தார். முழுமையான மதுவிலக்கை அவர் கொண்டுவர விரும்பினார். ஆனால் மற்ற எவரையும்விட அதிக போதைத்தன்மையில் தான் இருப்பதை அவர் உணரவில்லை. அப்படிப்பட்ட அகங்காரர் அவர். பொருளையும் புகழையும்நாடி ஓடுவோரில் அவரைப்போல். இன்னொருவரைக் காண்பது மிகவும் அரிது. தன் வாழ்நாள் முழுவதும் ஏதாவது ஒரு பதவியில் ஒட்டிக் கொள்ள அவர் முனைந்து வந்திருக்கிறார். இப்போது அவருக்கு 85 வயது. ஆனாலும் சில நாட்களுக்குமுன் அவர் சொன்னார். "மக்கள் விரும்பினால் மறுபடியும் நான் தேர்தலில் நிற்பேன்." குஜராத்தின் முதல்வராக ஆவதற்குக்கூட அவர் விரும்பிக்கொண்டிருந்தார் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாகும். இந்தியாவுக்கே பிரதமராக இருந்தபின் அதன் மாநிலங்களில் ஒன்றுக்கு முதல்வராக ஆகவும்கூட அவர் தயாராக இருந்தார். அவ்வளவு அதிகார மோகம் கொண்ட மனிதர்கள்!

ஆனால் பொருளாசை, புகழாசை, பதவியாசை இவை எல்லாம் போதைப் பொருள்களே என எவரும் நினைப்பதில்லை. இவை மனித குலத்தை ஒரு பெரும்குழப்பத்தில் இருத்தி வைத்துள்ளன. இப்படித்தான் மக்கள் இருக்கிறார்கள். அவர்கள்

மட்டுமல்ல. நாம் யாவரும் ஒரே நிலையிலேயே இருக்கிறோம். சிலர் அதிகாரத்தின் பின்னே வெறியோடு அலைகிறார்கள். வேறுசிலர் அந்த அளவுக்கு அதிகாரத்துக்காக வெறிபிடித்து அலைவதில்லை. ஆனாலும் ஒவ்வொருவரும் அதிகாரம், பணம், அந்தஸ்து, கவுரவம் என்கிற ரீதியிலேயே சிந்திக்கிறார்கள். இந்த விஷயங்கள் உங்களை தொடர்ந்து போதையிலேயே வைத்திருக்கிறது. அதன்பின் ஒருவர் எதையும் செய்துவிட முடிகிறது.

தன்னால் முடியும்வரை வாழ விரும்புகிறார் மொரார்ஜி தேசாய். ஒருவேளை தன் சொந்த சிறுநீரைத் தொடர்ந்து குடிப்பதன்மூலம் உடல் ரீதியாகச் சாகாவரம் பெறமுடியும் என தன் அடிமனதில் அவர் நினைக்கிறார் போலும்! ஆல்கஹாலை அவர் எதிர்க்கிறார். ஆனால் தன் சொந்த சிறுநீரைக் குடிப்பதற்கு அவர் எதிராயில்லை. ஆனால் ஆல்கஹாலோ சுத்தப் பழச்சாறுதான். உங்கள் சொந்த சிறுநீரைக் குடிப்பதை விடவும் அது எவ்வளவோ மேல்! ஆனால் அதை அவர் சிறுநீர் என்பதில்லை. "அமுதபானம்" என்கிறார்!

சமீபத்தில்தான் பிரதமர் இல்லத்துக்கு இந்திரா குடிபோனார். 2;3 மாதங்களாக அவர் அங்கு போகாமலேயே இருந்தார். ஏன்? ஏனென்றால் 2;3 ஆண்டுகளாக மொரார்ஜி அங்கே வசித்ததால் மொத்த வீட்டையும் சுத்தம் பண்ண வேண்டியிருந்ததுதான்! பாத்திரங்களைக் கூட கழுவவும் மாற்றவும் வேண்டி இருந்தது. குளியலறையில் பதித்திருந்த ஓடுகளையும் பெயர்த்து அகற்ற வேண்டி இருந்தது. முழு வீடும் நாறிக் கொண்டிருந்தது!

அவர் அமெரிக்காவுக்குப் போனபோது அங்கே மிகவும் குழம்பிப் போனார் என்று கேள்விப்பட்டேன். பல உபசார நிகழ்ச்சிகளுக்கு அவரை அழைத்திருந்தார்கள். ஆனால் அவர் போன இடத்தில் எல்லாம் அங்கிருந்த பெண்கள் அறையின் மறுகோடிக்குப் போய் ஒண்டிக் கொண்டார்கள். ஏன் என்று விசாரித்தார். ஆனால் அதற்கு யாரும் பதிலளிக்கவில்லை. நாசூக்காக பேச்சை மாற்ற முயன்றார்கள். ஆனால் அவர் வலியுறுத்திக் கேட்டார். கடைசியாக ஒருவர் சொன்னார். "ஐயா, தாங்கள் வற்புறுத்துவதால் நாங்கள் சொல்ல வேண்டியதாகிறது. உங்களுக்கு திடீரென தாகம் ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்றுதான் அந்தப் பெண்கள் பயப்படுகிறார்கள். எனவேதான் அவர்கள் சற்று ஒதுங்கியே இருக்கிறார்கள்."

இத்தகையவர்கள்தான் மனித குலத்தை ஆதிக்கம் செய்து வந்திருக்கிறார்கள். பேராசை பிடித்தவர்கள்! இப்போது அவர் (நீண்ட காலம்) உயிர்வாழ விரும்புகிறார். எதற்கு? இன்னும் அதிக அதிகாரத்தைப் பெறுவதற்கு; அதிக காலம் அதிக அதிகாரத்தைப் பெற்றிருப்பதற்கு.

மரிஜுவானா, எல்எஸ்டி போன்ற அற்பப் பொருள்களால் மனிதர் அதிகம் நாசமாவதில்லை. இன்னும் ஆழமான விசயங்களால்தான் அவர் அழிந்து போகிறார். பேராசையே மிகவும் விஷமான விசயம். (இதுகுறித்து) நாம் உணர்வற்றவர்களாக இருக்கிறோம்.

சோல், நம் அக நச்சுக்களைப்பற்றி மிகுந்த விழிப்புப் பெற்றவர்களாக நாம் ஆகாத வரை. நம் ஜீவன்களை இருட்டில் இருந்து வெளிச்சத்துக்கு உருமாற்ற நம்மால் முடியாது. நிரந்தர ஒளியாக மாறும் திறன் இருந்தும் நாம் கருந்துளைகளாகவே நீடிப்போம்.

அதிக மப்பில் இல்லாத மூன்று ஐரிஷ்காரர்கள் ஒரு பேருந்து நிலையத்தில் சேர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். தம் பந்து வீச்சு கெலிப்பு எண்களைப்பற்றிய ஒப்பீட்டில் அவர்கள் முற்றிலுமாக மூழ்கி இருந்தார்கள். இதனால் பேருந்து வந்து நின்றதை அவர்கள் கவனிக்கவில்லை. "எல்லோரும் மேல வா" என்று ஓட்டுநர் நீட்டி முழக்கிய பிறகுதான் அவர்கள் நிமிர்ந்து பார்த்தார்கள். அதிர்ச்சி அடைந்தார்கள். நடைபாதையில் இருந்து பாய்ந்து ஓடினார்கள். இருவர் எப்படியோ பேருந்தின்மீது தொற்றிக் கொண்டார்கள். மூன்றாமவனால் முடியவில்லை.

தூரத்தில் போய்க்கொண்டிருந்த பேருந்தைப் பார்த்தபடியே சோகத்துடன் நின்று கொண்டிருந்த அவனை; ஒரு பழக்கமில்லாத ஆள் நெருங்கி, தேற்ற முயன்றார். "இதுக்குப்போயி அலட்டிக்கலாமா? மூணு பேரில் ரெண்டு பேர் ஏறிட்டதே சாதனைதானே?"

ஐரிஷ்காரன் மறுத்துக் கூறினான், "ஆனால் அவர்கள் என்னை வழியனுப்ப வந்தவர்கள்."

குடித்திருப்பவர்கள் மட்டும்தான் இப்படி என்பதில்லை. அரசியல் போதை ஏறியவர்கள் மட்டும்தான் இப்படி என்பதில்லை. உங்களின் ஆன்மிக வாதிகளும் இப்படித்தான் இருக்கிறார்கள். மனித குலத்துக்கு தாம் உதவுவதாக நினைக்கிற மாபெரும் மதப்பிரச்சாரகர்கள். பொதுநலச் சேவர்கள்- இவர்களும் மிகவும் விஷமக்

காரர்களாகவே இருக்கிறார்கள். இதற்கான எளிய காரணம். அவர்கள் தாமே குழப்பத்தில் இருந்துகொண்டு பிறருக்கு உதவ முயல்வது தான். இவர்கள் உங்கள் குழப்பங்களை இரட்டிப்பு ஆக்குகிறார்கள். பன்மடங்காகவும் ஆக்கிவிடுகிறார்கள்.

மதப் பிரச்சாரகர்களோ, பொதுநல ஊழியர்களோ இல்லாவிட்டால் இந்த உலகம் இன்னும் அதிக மகிழ்ச்சியாகவும் அதிக மன நலத்தோடும் விளங்கும். மக்களை அவர்களின் போக்கில் இயங்க அனுமதித்தால் அவர்கள் விரைவாக தன்னுணர்வு பெறுவார்கள். ஆனால் மக்கள் தொண்டர்கள் இருக்கிறார்களே. அவர்களால் உங்களை விடமுடியாது. உங்களைத் தனியேவிட அவர்களால் முடியாது.

ஒருவன் ஒரு வயதான பெண்ணை தெருவில் வைத்து அடித்துக் கொண்டிருந்தான். கும்பல் கூடிவிட்டது. அந்த ஆள் மிகவும் பலசாலியாக, உயரமாக, வாட்டசாட்டமாகக் காணப்பட்டான். ஆனால் கடைசியில் கூட்டத்தில் ஒருவர் துணிச்சலை வரவழைத்துக்கொண்டு கேட்டுவிட்டார். "என்ன விஷயம்? பாவம் இந்தப் பாட்டியம்மாளை எதுக்காகப் போட்டு அடிக்கிறீங்க?"

அவன் சொன்னான். "இந்தம்மாள் சாலையின் அந்தப் பக்கத்துக்குப் போக உதவி செய்ய நினைக்கிறேன். ஆனா இவங்க போகமாட்டேன்னு அடம்பிடிக்கிறாங்க. வயசானவங்க சாலையைக் கடக்க உதவுறதுக்கே நான் இங்கே இருக்கிறேன். போக்குவரத்தோ ஆபத்தான முறையில் இருக்கிறது."

இதுதான் நடக்கிறது. மதபோதகர்களும் பொதுநல ஊழியர்களும் உங்களுக்கு உதவுவதற்காக வரிந்து கட்டிக்கொண்டு நிற்கிறார்கள்!

ஜேக் என்னும் நாவிதர் விடிகாலைக்கும் முந்திய வேளையில் ஒரு குடியிருப்பைக் கடந்து சென்றார். அப்போது கதவோரம் சாய்ந்து ஆடியபடி ஒரு மனிதன் நிற்பதைக் கண்டார்.

"என்ன விஷயம்? குடிச்சிருக்கீங்களா?" என பரிவுடன் கேட்டார்.

"ஆமாங், அப்படித்தான் நெனக்கிறன்..."

"இந்த வீட்லயா இருக்கீங்க?"

"ஆங்."

"படியேறிப்போக உங்களுக்கு உதவிசெய்யட்டா?"

"செய்ங்க. ரொம்பப தேங்ஸ்".

"எந்த மாடியில் இருக்கீங்க?"

"ரெண்டு."

மிகுந்த சிரமத்துடன், ஜேக் அந்த தளர்ந்த உருவத்தை பாதி தூக்கியபடி பாதி இழுந்தபடி, இருட்டான மாடிப்படி வழியே இரண்டாம் தளத்துக்கு இட்டுச் சென்றார்.

"இதுதான் உங்க வீடா?"

"ஆங்" ஆமோதித்தான் அந்த ஆள். அவன் கண்கள் அதற்குள் கிறங்கி மூடி இருந்தன.

சாத்தி இருந்த கதவை ஜேக் எத்தித் திறந்து குடிகாரனை உள்ளே திணித்தார். பின் தட்டுத் தடுமாறி வழியைத் துழாவிக்கொண்டு கீழே இறங்கினார். ஆனால் தாழ்வாரத்தில் வந்து கொண்டிருக்கும்போது இன்னொரு மனிதனின் மங்கலான உருவத்தைக் கண்டுகொண்டான். இவன் முதலில் வந்தவனைக் காட்டிலும் மோசமான நிலையில் இருந்தான். குடியிருப்பின் முன் தள்ளாடிக்கொண்டு நின்றிருந்தான்.

"என்னய்யா பிரச்னை? நீரும் மப்பா?"

"ம்" என ஈனமாக பதில் வந்தது.

"நீரும் இதே வீடா?"

"ம்."

"நீரும் ரெண்டாவது மாடிக்குத்தானா?"

"ம்."

மறுபடியும் அப்புதியவனை ஜேக் பாதி தூக்கியபடி இரண்டாம் அடுக்குக்கு இழுத்துச் சென்றார். அதே கதவை திறந்து இருட்டறைக்குள் அம்மனிதனைத் தள்ளிவிட்டார்.

கட்டடத்தில் இருந்து வெளியேறிய போது ஜேக் மூன்றாவது ஒருவனைக் கண்டுபிடித்தார். இவன் முந்தைய இருவரைவிட வெளிப்படையாகவே மோசமான நிலையில் இருந்தான். தலையிலும் முகத்திலும் வெட்டுக்காயம், சிராய்ப்பு ஏற்பட்டு ரத்தம் ஒழுகிக் கொண்டும் தாறுமாறாக நிலைகுலைந்தும் இருந்தான். அவனை நெருங்கி அவனுக்கு உதவப் போனார் ஜேக். அப்போது, அவரது கரிசனத்துக்கு உள்ளான அம்மனிதன் வீதியில் பாய்ந்து ஒரு காவலரிடம் தஞ்சம் புகுந்தான்.

"போலீஷ்கார்!" நடுங்கும் விரலால் ஜேக்கைச் சுட்டிக்காட்டி அவன் திக்கிமுக்கிப் பேசினான். "இந்த ஆள்கிட்ட இருந்து என்னய காப்பாத்துங்க. ராத்திரி முச்சூடும் இவன் என்னய தரதரன்னு இழுத்துட்டு மேல கொண்டு போறது, அங்கிருந்து எலிவேட்டர் குழியில் பிடிச்சித் தள்ளிவிடறது- இப்படியே பண்ணிட்டிருக்கான் சார்!"

சோல். மனிதர் இன்னும் எவ்வளவு கூடுதலாக விழிப்படைவது தேவை என்பதல்ல பிரச்சனை. மனிதர் விழிப்படைந்தாலே போதும் என்பதே விழிப்படைய ஒரே வழி தியானமே வேறு வழி இல்லை. ஸென் மட்டுமே... "ஸென்னில் நடத்தல், ஸென்னில் இருத்தல்."

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**அன்று உங்கள் பேச்சைக் கவனித்த பிறகு, காமம் மடத்தன மானது என்பதைக் கேட்ட பிறகு, நாங்கள் அதை அப்போதே பரிசோதித்துப் பார்த்தோம். எங்களுக்குப் புரியவில்லை [காமத்தில்] நீங்கள் என்ன மடத்தனத்தைக் காண்கிறீர்கள்?**

**ரித்மோ, தேவமஸ்தானந்தோ.**

**உ**ங்களுக்கு நான் வேறு பல விஷயங்களையும் சொல்லி வந்திருக்கிறேன். அவற்றை எப்போதாவது அப்போதே முயன்று பார்த்திருக்கிறீர்களா? ஒவ்வொரு நாளும் தியானத்தைப் பற்றி உங்களுக்கு நான் சொல்லிக் கொண்டே வருகிறேன். நீங்களோ அதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போகிறீர்கள்! காமத்தையோ அப்போதே ஆராய்ச்சி பண்ணி விட்டீர்கள்! எனக்கொரு பெரிய நன்மை செய்து விட்டீர்கள்; அதாவது இங்கேயே நீங்கள் பரிசோதித்துப் பார்த்துவிடவில்லை! இதுவே அதன் மடத்தன் மையைக் காட்டுகிறது.

காமம் மடத்தனமானது அல்ல. நீங்களே மடையர்களாக இருக்கிறீர்கள்! உங்களால்தான் பாவம் காமமும் மடத்தனமாகிறது. இன்னும் கொஞ்சம் உயராத வரை நீங்கள் ஒருபோதும் அதை அறியவும் மாட்டீர்கள். இன்னும் கொஞ்சம் உஷாராக ஆகாதவரை அந்த மடத்தனத்தை நீங்கள் காணமாட்டீர்கள். இருக்கிற மட்டத்திலேயே இருக்கும்வரை உங்களால் அதைக் காண முடியாது- ஏன், ஒருவராலும் காணமுடியாது.

பைத்தியர் விடுதிக்குப் போங்கள். எந்தப் பைத்தியத்திடமும் "நீ பைத்தியமா?" என கேளுங்கள். அவன் உங்களைப் பைத்தியமாக்கி

விடுவான்! ஆனால் தான் ஒரு பைத்தியம்'' என்பதை எந்தப் பைத்தியனும் ஒத்துக்கொள்ள மாட்டான். ''யாரைப்பற்றி என்ன பேச்சு பேசுகிறாய் நீ! என்னைத் தவிர உலகம் முழுதும் பைத்தியம். நானே முழுக்கவும் தெளிவாக இருக்கிறேன்'' என அவன் கூறுவான். எந்தப் பைத்தியனும் தான் பைத்தியம் என்பதை ஒத்துக்கொண்டதில்லை. நான் ஒரு பைத்தியம்தான் என ஒரு பைத்தியன் ஒப்புக்கொள்கையில், அது, அவன் தன் பைத்திய நிலையில் இருந்து வெளியேறுகிறான். நலமாகி வருகிறான் என்பதற்கான உறுதியான அறிகுறியாகும்.

இன்னும் கொஞ்சம் கூடுதலான தியானத்தன்மையை நீங்கள் கற்காதவரை, காமத்தின் மடத்தனத்தை உங்களால் காண முடியாது. தியானத் தன்மையில்தான் உங்களால் அவதானிக்க முடியும். விட்டுவிலகி இருக்கமுடியும். வாய்ப்பான கோணத்தில் இருந்து பார்க்க முடியும். கொஞ்சம் பரந்த கண்ணோட்டத்தைப் பெறமுடியும். இப்போதிருக்கிற நிலையில் நீங்கள் கொஞ்சமேனும் விசாலப்பார்வை கொண்டிருக்கவில்லை. நீங்கள் மிகவும் கிட்டே இருக்கிறீர்கள்.

உங்கள் மூக்கு நிலைக் கண்ணாடியைத் தொடும்படி கண்ணாடிக்கு மிகவும் கிட்டே நின்று பாருங்கள்- உங்கள் சொந்த முகத்தைக்கூட உங்களால் பார்க்க முடியாது. அது கண்ணாடியின் பிழை அல்ல. நீங்கள் கொஞ்சம் இடைவெளி விடவேண்டும். அப்போதுதான் கண்ணாடி உங்களைப் பிரதிபலிக்க முடியும். நீங்கள் ரொம்பவும் கிட்டே இருக்கிறீர்கள்.

காமமே மிகப்பெரிய ஆட்டிப்படைக்கும் சக்தி எனத் தோன்றுகிறது. இதற்கான முழுப் 'பெருமையும்' சாமியார்களையே சாரும். நூற்றாண்டுகளாக அவர்கள்தான் காமத்தை பாவம் என கேவலப்படுத்தி வந்திருக்கிறார்கள். அதன்மூலம் அதை ஒரு ஆட்டிப்படைக்கும் சக்தியாக அவர்கள் ஆக்கிவிட்டிருக்கிறார்கள்.

காமம் ஒரு பாவம் என நான் சொல்ல மாட்டேன். அது ஒரு மடமை என்றே சொல்கிறேன். நீங்கள் நரகத்தில் துன்புறுவீர்கள் என நான் சொல்லவில்லை- இதைவிட எந்தப் பெரிய நரகத்தில் நீங்கள் துன்புறவேண்டி இருக்கிறது? ஏற்கெனவே நீங்கள் அதை அனுபவித்துக் கொண்டு இருக்கிறீர்கள். அது உங்களுக்கு தொடர்ந்தும் எதைத் தந்து கொண்டிருக்கிறது? உங்களை வெறுமனே ஆட்படுத்தி வைக்கிறது- மற்றவரில் உங்களை ஈடுபடுத்துகிறது. அதன்மூலம்

உங்களிடம் இருந்து நீங்கள் தப்பித்துக்கொள்ள முடிகிறது. அதுதான் அதன் அடிப்படை மடத்தனம்; அது உங்களை அறியாமையில் இருத்துவது, எப்படி என்றால், உங்களை நீங்களே புறக்கணிக்கும்படி அது செய்கிறது. பெண்ணிடத்தில் ஆண் ஆர்வம் கொள்கிறான். ஆணிடத்தில் பெண் ஆர்வம் கொள்கிறாள். ஒவ்வொருவரும் அடுத்தவர்மீதே ஆர்வம் காட்டுகிறார்கள். அடுத்தவர்தான் உங்களுக்குத் தேவையான அனைத்தையும் பெற்றிருக்கிறார் என்பதாகத் தோன்றுகிறது. மற்றவரும், தனக்குத் தேவையான அனைத்தும் உங்களிடம்தான் உள்ளதாக நினைத்துக் கொள்கிறார். இருவரும் பிச்சைக்காரர்களாக இருக்கிறார்கள். மற்றவரிடம் தான் ராஜ்ஜியம் இருப்பதாக நம்புகிறார்கள்.

முன்னில்லாவிட்டால் பின் நீங்கள் நிராசை அடைகிறீர்கள். ஆனால் உங்கள் நிராசை உங்களுக்கு எதையும் கற்பிப்பதில்லை. எதையும் கற்றுக் கொள்வது என்பது அவ்வளவு கடினமாயிருக்கிறது. ஒரு பெண்ணுடனான உறவு தோல்வி அடைந்துவிட்டால் அடுத்த பெண்களைத் தேட ஆரம்பிக்கிறீர்கள். ஒரு ஆண் உங்களின் எதிர்பார்ப்புத் தரத்தில் இல்லை என்றால் மற்ற ஆண்களில் தேட ஆரம்பிக்கிறீர்கள். (எந்த ஆணாலும் முடியாது, எந்தப் பெண்ணாலும் முடியாது. ஏனென்றால் அது சாத்தியமில்லை. ஏனென்றால் அது இயற்கையில் இல்லை.)

அதில் எல்லா விதமான வக்கிரங்களும் உள்ளன. ஆனால் வக்கிரபுத்தியுள்ள எந்த ஆணை நீங்கள் விசாரித்தாலும், அதில் எந்த மடமையையும் தான் காண்பதாக அவர் சொல்லமாட்டார்.

வேறொருவரின் மனைவியுடன் ஒரு பிரெஞ்சுக்காரன் உடலுறவில் ஈடுபட்டுக்கொண்டிருந்தான். அப்போது அவள் கணவன் தன் வியாபாரப் பயணத்தை 2 நாட்கள் முன்னதாக முடித்துவிட்டு வீடு திரும்பினான். கண்ணிமைக்கும் நேரத்தில் பிரெஞ்சன் போர்வைக்குள் இருந்து தட்டுத்தடுமாறி வெளிப்பட்டான். பெரிய பெரிய குருவிபோல வெளியில் எடுத்தான். இருந்தாலும், கோபமடைந்த கணவன் அதேவேகத்தில் ஒரு துப்பாக்கியை உருவி பிரெஞ்சனின் கொட்டைகளை சுட்டு வீழ்த்தினான். துளியும் கலங்காதவனாய் பிரெஞ்சன் தன் மிக நீளமான நாக்கை நீட்டிக் காட்டிக் கத்தினான்- 'நான்தான் தப்பிச்சிட்டனே."

இந்த பிரெஞ்சுக்காரனிடம் கேட்டுப் பார்த்தால், தான் எந்த மடத்தனமான காரியத்தையும் செய்ததாகச் சொல்லமாட்டான்.

உலகத்திலேயே மிகவும் மகத்தான காரியத்தையே தான் சாதித்த்தாகச் சொல்வான்.

நீண்ட நான்குமாத தொடர் உழைப்புக்குப் பின் மூன்று விறகு வெட்டிகள் நகருக்குத் திரும்பினார்கள். அந்த நான்கு மாத காலத்தில் அவர்கள் மரங்களையும் கோடாலிகளையும் தவிர எதையும் பார்க்கவோ கேள்விப்படவோ இல்லை. வந்து சேர்ந்த சிலமணி நேரத்துக்குள்ளேயே மூவரும் மூக்கு முட்டக் குடித்துவிட்டார்கள். உள்ளூர் விபச்சார விடுதிக்குப் போவதென முடிவு செய்தார்கள்.

விடுதியின் தலைவிக்குப் பிரச்சனையாயிற்று. அவளிடம் 2 பெண்கள்தான் இருந்தார்கள். ஆனால் மூன்றாவது வாடிக்கை யாளரையும் அவள் இழக்க விரும்பவில்லை. எனவே ஒரு படுக்கையில் காற்றூதிய விளம்பர பொம்மையைக் கடத்திவிடும்படி ஒரு பெண்ணிடம் சொன்னாள்.

விறகு வெட்டிகளில் இருவரை நிஜப் பெண்கள் படுக்கைக்கு இட்டுச்சென்றபோது, அவர்களில் ரொம்பவும் குடித்திருந்தவன். காற்றடித்த பொம்மையுடன் படுக்க வைக்கப்பட்டான்.

மறுநாள் காலை மூவரும் சந்தித்தனர். தம் அனுபவங்களைப் பரிமாறிக் கொண்டனர். காற்றூதிய ரப்பர் 'பெண்ணுடன்' படுத்தவனின் முறை வந்தபோது அவன் சொன்னான். "முதலில் அது மிகவும்' அருமையாகவே இருந்தது. ஆனால் அவள் மிகவும் பேசா மடந்தையாக இருந்தாள். பின் அவள் காம்பை நான் கடித்ததுதான் தாமதம், பெரிய குசு ஒன்றை விட்டுவிட்டு சன்னல் வழியாக பறந்து விட்டாள்."

ரித்மோ, மஸ்தானந்தா; நீங்கள் செய்து கொண்டிருப்பது இன்னதென உங்களால் பார்க்க முடியவில்லை. கொஞ்சம் கூடுதலான தியானத் தன்மையுடன் இருங்கள். இவ்வளவு அவசரப்படாதீர்கள்; நான் சொன்னதால், அப்போதே... என்பது ஒரு சாக்காகவே தெரிகிறது. ஆராய்ச்சி மேற்கொள்வதாக நீங்கள் நினைத்துக்கொண்டீர்கள். சுற்றறிவதற்காக ஒன்றைச் செய்து பார்த்ததாக நீங்களாக நினைத்துக் கொண்டீர்கள். மக்கள் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ள முடியும். ஆனால் என்னை நீங்கள் ஏமாற்ற முடியாது! மனிதர்கள் ஒவ்வொன்றையும் நியாயப்படுத்திக்கொண்டே போகமுடியும். காமம் மடத்தனம் என்று நான் சொன்னதாலா அதைச் செய்து பார்த்ததாக நீ நினைக்கிறாய்? எப்படியும் அதை நீ செய்திருப்பாய். 'காமம் மிகவும்

புத்திசாலித்தனமானது' என்று நான் சொல்லியிருந்தாலும் அதை நீ செய்திருப்பாய். காமத்தைப்பற்றி நான் எதைச் சொல்லி இருந்தாலும் அப்போதும் அதில் நீ ஈடுபட்டிருப்பாய்.

உன் மனதை ஒரு நோட்டம் விடு. எப்படி (நீ செய்யும்) ஒவ்வொன்றையும் நியாயப்படுத்திக் கொண்டும் உன்னையே தொடர்ந்து ஏமாற்றிக்கொண்டும் போகிறாய் என்பதைப் புரிந்துகொள்ள முயற்சி செய். ஆயின், இப்போது நீ இருக்கும் உணர்வு மட்டத்தில் இருந்து சற்றேனும் உயராதவரை நான் சொல்வதை உன்னால் புரிந்து கொள்ளமுடியாது. அதிகமாகப் பார்க்க வேண்டும் என்றால் உயரமாகப் போகவேண்டும்.

இது, நீங்கள் சாலையிலும் நான் மரத்தின் உச்சியிலும் இருப்பதைப் போன்றது. "சாலையில் ஒரு மாட்டுவண்டி வந்துகொண்டிருக்கிறது" என நான் உங்களிடம் கூறுகிறேன். "இல்லையே, ஒன்றையும் காணவில்லையே" என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் என்னால் பார்க்க முடிகிறது. நான் உயரத்தில் இருப்பதால் என் பார்வைப்பரப்பு விரிவானதாக உள்ளது. மாட்டுவண்டி உங்களுக்கு இன்னும் அருகில் வந்த பின்தான் உங்களால் அதைப்பார்க்க முடியும் பின் கொஞ்சநேரம் போனபின் அது மறுபடியும் உங்கள் பார்வையிலிருந்து மறைந்துவிடும். ஆனால் நானோ உங்களிடம் "அது மறையவில்லை. இன்னும் சாலையி லேயே இருக்கிறது" என்பேன். நீங்களோ "இல்லை, அதுபோய் விட்டது" என்பீர்கள்.

எவ்வளவு உயரமாக எழுவீர்களோ அவ்வளவு அதிகமாகக் காணமுடியும். அறுதி உயரமாகிய புத்தநிலையை அடைந்ததும் எல்லாவற்றையும் உங்களால் பார்க்கமுடியும். அப்போது கடந்தகாலம், எதிர்காலம் என்பவை இல்லை. நிகழ்காலம் மட்டுமே இருக்கிறது. அந்தத் தெளிவில் இருந்து பார்க்கும்போதுதான், காமம் மிகவும் மடத்தனமான காரியமாக இருக்கிறது. ஏனென்றால் அதுதான் உங்களை அநியாயத்துக்கு அடிமைத்தனத்தில் இருத்துகிறது. அதை நான் சபிக்கவில்லை. ஒரு உண்மையைக் கூறமட்டுமே செய்கிறேன். அது உங்களின் அடிமைத்தனமாக இருக்கிறது. அது உங்களை உணர்வற்ற நிலையில் வைக்கிறது. நீங்கள் செய்வது. இன்னது என்பதை நீங்கள் காண்பதற்கு அது உங்களை அனுமதிப்பதில்லை. நீங்கள் அதனால் ஆட்கொள்ளப்பட்ட நிலையில் இருக்கிறீர்கள்.

1960களின் ஆரம்பத்தில் பிரான்ஸ் தன் கடைசி காலனியப் போரை நடத்திக்கொண்டிருந்தபோது, ஒரு பாரிஸ்காரன்- படைப்பிரிவில் சேராமல் ஏமாற்ற நினைத்தவன்- தரைப்படைக்கு ஆள் எடுக்கும் மையத்தில் நடந்த உடல் தகுதிச் சோதனை களின்போது தன் கண்பார்வையில் குறைபாடு இருப்பதுபோல் நடித்தான்.

படைமருத்துவர் அதை மனம் கொள்ளவில்லை. அவர் ஒரு வாளிப்பான இளம் தாதியை அவன் முன்விட்டு, அவள் தன் உடைகளைக் களையுமாறு சொன்னார்.

"என்ன தெரிகிறது தம்பீ?" என்று கேட்டார்.

"எல்லாம் ஒரே மங்கலாகக் காட்டுது. டாக்டர்" என்றான் அந்தச் சோம்பேறி.

ராணுவ எம்.டி. சொன்னார். "உன் கண்கள் வேண்டுமானால் சரியாகக் காட்டாமல் இருக்கலாம். ஆனால் உன் குறிநேராக அல்ஜீரியாவைக் காட்டிக்கொண்டு நிற்கிறதே!"

அதனால்தான் அதை நான் மடத்தனம் என்கிறேன். அது உங்களை உணர்வற்ற நிலையில் இருத்துகிறது. ஒருவித ஆட்பட்ட நிலையில் இருத்துகிறது. அது ஹார்மோன்கள் சம்பந்தப்பட்டது. ரசாயனம் சம்பந்தப்பட்டது. அது நீங்கள் அல்ல. அது உங்கள் உடல் கூறுதான். அதுதான் சில காரியங்களைச் செய்யுமாறு உங்களை நெருக்கிக் கொண்டே இருக்கிறது. கவனித்துப் பார்த்தால் நீங்கள் பிரமித்துப் போவீர்கள். என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்? ஏன் அதைச் செய்து கொண்டிருக்கிறீர்கள்? கவனித்துப் பார்த்தால் நீங்கள் அதிர்ச்சி அடைவீர்கள். அதிலிருந்து உங்களுக்குக் கிடைப்பது என்ன? இதுவரை உங்களுக்குக் கிடைத்தது என்ன? உங்களின் அதிக ஆரோக்கியமான கணங்களில், நான் சொல்வதை நீங்களும் மிகவும் சரியாக அறிந்திருக்கிறீர்கள். புரிந்திருக்கிறீர்கள். ஆனால் அந்த ஆரோக்கியமான கணங்கள் என்பவை மிகவும் மேலோட்டமாக உள்ளன. வந்து போய்விடுகின்றன- விரைவிலேயே நீங்கள் மறுபடியும் அதே பொறிக்குள் மாட்டி இருக்கிறீர்கள்.

மஸ்தானந்தா, திரும்பவும் போ. இப்போதே செய் அதை. ஆனால் விழிப்பாயிரு. தியானத்தன்மையுடன் இரு. மேலும், நானும் அங்கு இருப்பேன். உன் பக்கத்தில் நிற்பேன். என்ன நிகழ்கிறது. எனப் பார்த்து விடுவோம். ஒன்று அதை நீ செய்யவே முடியாது போகும். அல்லது அது ஒரு உடலியல் உந்துதல், ஒரு பீடிப்பு அது அல்ல நீ

என்பதைக் கண்டு கொள்வாய். உன் உணர்வானது மேலே மிதந்தவாறு இருக்கும். பள்ளத்தாக்கின் அடியாழத்தில் அது நிகழும். ஆனால் நீயோ விடுபட்டு பற்றற்று, அமைதியாக இருப்பாய். அதுவே உனக்கு உள்ளொளி வழங்கும்.

தியானம் கூடும்போது காமம் ஒரு தாந்திரிக அனுபவமாக ஆகிறது.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ, கூடலின்போது ஏன் மனைவிமார்கள் எப்போதும் தம் கண்களை மூடிக்கொள்கிறார்கள்?**

**கியானேஷ்,**

**தம் கணவர்கள் கொஞ்ச நேரமாகிலும் சந்தோசமாக இருப்பதைக் காண அவர்களுக்குப் பொறுப்பதில்லை.**

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**என் கணவர் என்னை ஏமாற்றுகிறார் என்பது உறுதியாகத் தெரிகிறது. நேற்று இரவு அவர் வீடு திரும்பியபோது அவர் சட்டையில் உதட்டுச்சாயம் இருந்தது. ஆனால் அதைப் பற்றிக் கேட்டபோது அது தக்காளிச் சாறு என்று சொல்லி விட்டார். நான் என்ன செய்வது?**

**வந்தனா,**

**"யார் அந்தத் தக்காளி?" என்று அவரிடம் கேள்.**



# 2

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**ஸென் என்றால் என்ன?**

**சாகர்,**

இதற்குப் பதிலளிப்பது ஏறக்குறைய அசாத்தியம்.

ஏனென்றால் ஸென் ஒரு தத்துவம் அல்ல. அது ஒரு கோட்பாடு அல்ல. அது ஒரு அனுபவம் புறநிலையான அனுபவம் அல்ல. உன் சொந்த அக உலகின்- அகத்தன்மையின்- அனுபவம் அது. அது உனக்கு வெளியில் உள்ள ஒரு பொருளாக இருக்குமேயானால் அதை விளக்க பகுத்தாய - வரையறுக்கச் சாத்தியம் உண்டு. ஆனால் அது தன் இயல்பிலேயே வரையறுக்க முடியாததாக இருக்கிறது. புத்தியின் கிரகிப்புக்குள் அது உட்படுவதில்லை. அது உன் மனதைக் கழட்டிவிட்ட ஒரு அனுபவம். மனதிலிருந்து ஜீவனுக்குள் மறைந்து விடும் ஒரு அனுபவம். மனதிலிருந்து நழுவி உன் ஜீவனுக்குள் பிரவேசிக்கும் ஒரு அனுபவம்.

மனம் ஒரு பொய்ப்பொருள். உங்கள் ஜீவனே உங்களின் மெய்யான முகம். உங்களின் அசலான முகம். மனம் சமுதாயத்தால் உருவாக்கப்படுகிறது. எனவே இந்து மனம், கிறித்தவ மனம், யூதமனம் என பலவிதமான மனங்கள் இருக்கின்றன. ஆனால் ஜீவனோ ஒன்றே. அது கிறித்தவ ஜீவனோ, இந்து ஜீவனோ, முகமதிய ஜீவனோ அல்ல. ஜீவன் என்பது தனி மனிதனுடையது கூட இல்லை. அது பிரபஞ்சத்துடையது.

சமுத்திரத்திற்குள் பனித்துளி கலந்து போவது போன்றது இது. பனித்துளி என்னும் வகையில் அது மறைந்து போகிறது. பனித்துளி

என்னும் வகையில் அதன் மிச்சம் ஏதும் இருப்பதில்லை. அது சாகிறது. ஆனால் மறுபடியும் அது பிறக்கிறது- சமுத்திரமாக ஆகிறது. ஆனால் நிகழ்ந்ததைத் தெரிவிக்க யாரும் அங்கு இருப்பதில்லை. அதைச் சொல்லுவதற்கு வழியும் இல்லை; வார்த்தைகளும் இல்லை.

அது எப்படி நிகழ்கிறது என்பதை நான் உங்களுக்குச் சொல்ல முடியும். ஆனால் அது என்ன என்பதை என்னால் சொல்ல முடியாது. அதை உங்களுக்குச் சுட்டிக்காட்ட முடியும். நிலவை விரல்களால் சுட்டிக் காட்டுவதுபோல... ஆனால் விரல்களே நிலா அல்ல. ஆயின் கோடிக்கணக்கான மக்கள், விரல்களையே தொடர்ந்தும் வழிபட்டு வருகிறார்கள். விரல்களுடன் எவ்வளவு அதிகமாக நீங்கள் உங்களைச் சொந்தப்படுத்திக் கொள்வீர்களோ அவ்வளவு குறைவாகவே உங்களால் நிலவைக் காண முடியும். விரல்களை மறந்தாக வேண்டும். எங்கே பார்ப்பது என்ற தெளிவான குறிப்புக் கிடைத்தவுடன் விரல்களை மறந்துவிடுங்கள். நிலவைப் பாருங்கள்.

மிகத் தூய்மையான ஆன்மிக அனுபவங்களில் ஸென்னும் ஒன்று. எந்தச் சிந்தனையாலும் இறையியலாலும் ஊகக் கருத்தாலும் கறைப்படுத்தப்படாத அனுபவம் அது. வாக்கு வாதம் சாராத, வாக்குவாதம் கடந்த அனுபவம் அது. அது ஒரு தனித்த அனுபவம்.

யோக்கா கூறுவதைக் கவனியுங்கள். யோக்கா கூறுகிறார்:

> **அன்பு நண்பா, உண்மையான ஸென் மனிதரை நீ அறிவாயா? ஆழமான புரிதலை அடைவதற்காக தான் கற்றுக் கொண்ட அறிவுரீதிப் புரிதல் அனைத்தையும் மறந்துவிட் டிருக்கிறவர் அவர். அவர் உள்ளச் சமநிலையில் வாழ்கிறார். அமைதியாகவும் நிறைவாகவும் இருக்கிறார். எல்லாக் கவலைகளில் இருந்தும் விடுபட்டிருக்கிறார். இயல்பாகவும் விவேகத்துடனும் செயல்படுகிறார். மருள்நிலை [மாயை] மறுக்கவோ அருள்நிலை [சட்டோரி, அனுபூதிநிலை] அடையவோ அவர் போராடுவதில்லை.**
>
> **மருள்நிலை என்பது ஆதாரமற்றது எனவும் அருள்நிலை என்பதோ தன்னிலை [சுயம்] அன்றி வேறில்லை எனவும் அவர் அறிகிறார்.**
>
> **அறியாதிருப்பது என்னும் நிசமான இயல்பே புத்தரின் இயல்பும் என அவர் காண்கிறார். தன் மாயமான [அழியக் கூடிய] உடலின் நிசத்தன்மை... புத்த உடம்பின் நித்தியத் துவத்துக்குச் [அழியாத் தன்மைக்கு] சமமானது என காண்கிறார்.**

**புத்த உடம்பை—பிரபஞ்ச விதிப்படியான உடம்பை— அவர் முழுமையாகக் கைவரப் பெற்றதும் அவரிடம் ஒன்றுமிருப் பதில்லை. அவர் ஒன்றுமின்மை ஆகிறார்.**

**அவர் தானே எல்லாப் பொருள்களின் மூலாதாரமாகவும் இருக்கிறார். அவரது சாதாரண வாழ்வே நித்திய புத்தத்தின் மற்றுமொரு பெயராக இருக்கிறது.**

இந்தப் புரிதலில் நீங்கள் வாழ்ந்தால் ஒரு கணத்தில் நீங்கள் மாறிவிட முடியும். உங்களை ஒரேயடியாக மாற்றிவிட முடியும்-காலத்தை வீணடிக்கத் தேவையில்லை.

இவை அழகான செயல்பாட்டுக் குறிப்புகள். முதலில் நீங்கள் கற்ற எல்லாவற்றையும் நீங்கள் மறந்தாக வேண்டும். நீங்கள் படித்த யாவும் ஒரு தடைக்கல்லாக இருக்கிறது. அதை எறிந்து விடுங்கள். ஸென்னைக் கற்க முடியாது; கற்பிக்க முடியாது. ஆனால் அதை நீங்கள் உள்வாங்க முடியும். அதன் சாரத்தை நீங்கள் உட்கொள்ள முடியும்.

ஒரு குருவுடன் வாழும்போது கண்ணுக்குப் புலப்படாத அமுதத்தை நீங்கள் அருந்த முடியும். அதனால் நீங்கள் நிரம்ப முடியும். ஆனால் ஒரு நிபந்தனையை நீங்கள் நிறைவேற்ற வேண்டி இருக்கும். உங்கள் மனத்தை அப்புறப்படுத்த வேண்டும்.

என்னைக் கவனிக்கும்போது தனக்கு எழுந்து ஆடத் தோன்றுகிறது என்று கயன் எனக்கு எழுதி இருக்கிறாள். அப்படி சீடர் உணர்ந்தே தீருவார். உங்களுக்குள் ஏதோ ஒன்று ஆடவும், பாடவும் தொடங்குகிறது. உங்களுக்குள் ஏதோ ஒன்று ஆனந்தத்தால் நிறைகிறது. உங்களுக்குள் ஏதோ ஒன்று குருவுடன் உடனடியாக இசைகிறது. ஒரு ஆழமான ஒத்திசைவு நிகழ்கிறது. அதைக் கற்பிக்க முடியாது; கற்க முடியாது. ஆனால் கடத்த முடியும். அந்தக் கடத்தலானது சொற்களுக்கு அப்பாற்பட்டது. சாத்திரங்களுக்கு அப்பாற்பட்டது. அது முற்றிலும் புதிய ஒரு கலையைத் தேவைப்படுத்துகிறது. அதுதான் சரணடையும் கலை. முழுமையாக விட்டு விடுதலையாகும் கலை.

முதல் நிபந்தனை: நீங்கள் கற்றுக் கொண்டுள்ள யாவற்றையும் மறந்து விடுங்கள். இரண்டாவது நிபந்தனை; அமைதியாக, அடங்கி, உள்நிறைவுடன் இருங்கள். ஆசையானது, நிகழ் கணத்திலிருந்து உங்களை வெகுதூரம் தள்ளிக்கொண்டு போகிறது. ஸென்னோ இங்கேயே இப்போதே இருக்கும் யதார்த்தத்தின் சுவையாகும். நிகழ்

கணத்தின், நிகழ் இடத்தின் உணர்தலாக அது இருக்கிறது. செத்த பிறகான எந்தக் கடவுளையும் பற்றியதல்ல ஸென். இப்போதே இங்கேயே உங்களைச் சூழ்ந்திருக்கும் கடவுள் தன்மைமீதான அக்கறையே ஸென்.

இந்த ஒலிகள், இந்தப் பறவைகள்; இந்த மரங்கள்; இந்த மனிதர்கள்; இந்த மோனம்... மூவாயிரம் மக்கள் தம் அடையாளங்களை- அகங்காரங்களை இழந்து ஒரே அமைதியில் மறைந்து கரைந்து போயிருக்கிறார்கள்... அப்பொழுதிலேயே அங்கு ஸென் இருக்கிறது! ஏறக்குறைய தொட்டுணர முடியுமளவில் அது அங்கு இருக்கிறது. அதை நீங்கள் தொட முடியும். அதை நீங்கள் உண்ணமுடியும். குடிக்க முடியும். ஆனால் அதை வார்த்தைகள் மூலம் தெரியப்படுத்த மட்டும் வழி இல்லை. நிகழில் நீங்கள் இருக்க முடிவதற்கு, அமைதியாகவும் ஆரவாரமின்றியும் உள்ள நிறைவோடும் நீங்கள் இருந்ததாக வேண்டும். எல்லாக் கவலைகளில் இருந்தும் நீங்கள் விடுபட்டு இருக்க வேண்டி இருக்கிறது.

கவலை என்பதன் பொருள், இருத்தலின்மீது உங்களுக்கு ஆழமான நம்பிக்கை இல்லை என்பதுதான். உங்களை நீங்களே கவனமாகப் பார்த்துக்கொள்ள முயலுகிறீர்கள். நீங்கள் பயப்படுகிறீர்கள். இருத்தல் உங்களை கவனமாகப் பார்த்துக் கொள்கிறது. உங்களுக்கு தாயாகு தந்தையாக இருந்து பராமரிக்கிறது என்பதை இன்னும் நீங்கள் அறியாதிருக்கிறீர்கள். காற்றாகவும் கதிராகவும் நீராகவும் நெருப்பாகவும் உங்களைச் சூழ்ந்திருக்கிற பாசத்தை பராமரிப்பை நீங்கள் உணர ஆரம்பித்ததுமே உங்களை நீங்களே கவனித்துக் கொள்வது நின்றுவிடுகிறது. கவலைப்படத் தேவையில்லாது போகிறது. இருத்தலுடன் இசைந்து ஒழுக ஆரம்பிக்கிறீர்கள். ஆற்றை நீங்கள் தள்ளிவிடுவதை நிறுத்துகிறீர்கள். அப்போதுதான் சாகர், ஸென் என்பதை நீ புரிந்துகொள்ள முடியும். இயல்பாகவும் விவேகத்துடனும் நீ வாழ்ந்ததாக வேண்டும்.

சமுதாயம் உங்களை முற்றிலும் செயற்கையாக ஆக்கி வைத்திருக்கிறது என்பதை நினைவில் வையுங்கள். அது உங்களுக்கு குறிப்பிட்ட கருத்துகளைத் தந்திருக்கிறது. உங்கள்மீது குறிப்பிட்ட ஒழுக்கங்களை விதித்திருக்கிறது. குறிப்பிட்ட நடத்தைமுறைகளைச் சுமத்தி இருக்கிறது. உங்கள் சுயேச்சை நிலையை அது அழித்து விட்டிருக்கிறது. அந்நிலையை நீங்கள் திரும்பவும் அடைந்தாக வேண்டும். மீண்டும் அதை மீட்டாக வேண்டும். அதுதான் செய்யப்பட வேண்டிய மிகவும் சாரமான விசயம்.

உங்கள் இயற்கைத் தன்மைக்கு நீங்கள் உரிமை கோரியதுமே ஸென் உங்களுக்குள் ஊற்றெடுக்கத் தொடங்குகிறது. ஸென் உங்களின் சொந்த இயற்கைக் குணம் ஆகும். தன்னியல்பாகவும் விவேகமான முறையிலும் (இயற்கை அறிவோடும்) நீங்கள் இருக்கையில், முன்கூட்டித் தயாரித்த எந்த வாய்ப்பாடுகளும் இல்லாமல், யதார்த்தத்துக்கு கணத்துக்குக் கணம் பதிலிறுக்கையில், யதார்த்தத்தைக் கண்ணாடிபோல் பிரதிபலிக்கையில், நீங்கள் ஸென் வாழ்க்கை வாழ்கிறீர்கள். அதுதான் விவேகமான வாழ்வு பகுத்தறிவான (ரேசனல்) அல்ல. விவேகமான (ரீசனபிள்) என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

விவேகமுள்ள மனிதர் பகுத்தறிவுள்ள மனிதராக இருப்பதில்லை. அவை இரண்டும் ஒன்றல்ல. பகுத்தறிகிற மனிதர் ஒருபோதும் விவேகமுள்ளவராக இருப்பதில்லை. பகுத்தறிவாளர் பகுத்தறிய முடியாத அனைத்தையும் கண்டனம் செய்ய முயலுகிறார். ஆனால் பகுத்தறிவு. பகுக்காத அறிவு (இர்ரேசனல்) இரண்டும் சேர்ந்ததே வாழ்க்கை. இரண்டையும் விவேகி ஏற்கிறார். வாழ்க்கை எனும் புதிரை அவர் ஏற்றுக்கொள்கிறார். பகுத்தறிவை அவர் ஏற்கிறார். பகுத்தறிவு அல்லாதையும் ஏற்கிறார். அவற்றுக்கிடையில் எந்த முரண்பாட்டையும் அவர் காண்பதில்லை. எனவே அவர் பிளவுபடாமல் இருக்கிறார். எதுவும் அவரில் பிளவு ஏற்படுத்த முடியாது. அவரது ஜீவனில் எந்தப் பிரிவினையும் இல்லை. அவரும் எங்கும் பேதத்தைக் காண்பதில்லை. வாழ்வு சாவு இரண்டும் அவருக்கு ஒன்றே. வெப்பமும் தட்பமும், அவருக்கு ஒன்றே. ஆண்களும் பெண்களும் அவருக்கு ஒன்றே. இன்பமும் துன்பமும் அவருக்கு ஒன்றே. பிரிவினைகள் என்பவை மேலோட்டத்தில் உள்ளவை; அடியாழத்திலோ எல்லாமே ஒன்று என அவர் அறிகிறார். உயிரின் ஒருமையை அவர் அறிகிறார். எனவே எந்த முரண்பாடுகளாலும் அவர் கலங்குவதில்லை.

ஸென் மனிதர் எல்லா முரண்பாடுகளாலும் நிரம்பியவர். அவர் மிகப் பரந்தவர்- முரண்பாடுகளை அவர் தன்னில் உள்ளடக்கி இருக்க முடியும். புதிர்களை அவர் ரசிக்கிறார். வாழ்க்கையை ஒரு பிரச்சனையாக அவர் மாற்றுவதில்லை. வாழ்க்கையை ஒரு மர்மமாகவே அவர் காண்கிறார். அதைத் தீர்ப்பதில் அவருக்கு ஆர்வம் இல்லை. அதை வாழ்வதில்தான் அவரது அக்கறை உச்ச பட்சமாக வாழ்ந்து விடுவது...

**மருள்நிலை என்பது ஆதாரமற்றது என அவர் அறிகிறார்....**

எனவே உலகே மருள் நிலையானது (மாயம்) என்று உலகத்தில் இருந்து தப்பும் இந்துத் துறவிகளைப் போல் இந்த ஸென் மனிதர் கவலை கொள்வதில்லை. இதன் அபத்தத்தை நீங்கள் காண்கிறீர்களா? உலகம் மாயை- பொய் என்றால் அதிலிருந்து நீங்கள் ஏன் தப்பிக்க வேண்டும்? அல்லது அது மாயை இல்லை, நிசம் என்றாலோ அதிலிருந்து நீங்கள் எப்படித் தப்பிக்க முடியும்?

ஒரு மனிதன் ஓடிக்கொண்டிருப்பதைப் பார்த்து நீங்கள் அவனிடம் "ஏன் ஓடுகிறாய்?" என்று கேட்கிறீர்கள். அதற்கு அவன், "அங்கு ஒரு கயிறு கிடக்கிறது. அது பாம்புபோலத் தோன்றுகிறது. ஆனால் அது பாம்பல்ல. எனவே அந்தப் பாம்புத் தோற்றத்திடமிருந்து நான் தப்பி ஓடுகிறேன்" என்பானே ஆகில் அதற்கு நீங்கள் என்ன கூறுவீர்கள்? "முட்டாளாக இருக்கிறாயே. அது கயிறு என உனக்குத் தெரியுமானால் ஓடுவதை நிறுத்து. அல்லது அது கயிறில்லை என நீ அறிந்திருப்பாயானால் அது மாயை என்று சொல்வதை நிறுத்து. ஏனெனில் அப்போது அது வெறுமனே பார்வைக்கு அப்படித் தென்படுவதுதானே?" என்பீர்கள்.

ஆனால் இதைத்தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த துறவிகள் முனிவர்கள் என்பவர்கள் செய்து வந்திருக்கிறார்கள். உலகம் மாயை பொய் என்பார்கள். அதேபோது அதைத் துறப்பார்கள். "உன் மனைவி ஒரு மாயை- எனவே அவளைத் துற, உன் மக்கள் என்பது மாயை- எனவே அவர்களைத் துற, உன் நடைமுறை வாழ்வு ஒரு மாயை- எனவே அதைத்துற" என்றார்கள். எல்லாமே மாயை- எனவே இமயமலைக்குத் தப்பி ஓடு என்றார்கள். ஆனால் அந்நிலையில் நீங்கள் ஏன் தப்பி ஓட வேண்டும்? எதிலிருந்து?

இங்குதான் ஸென்னின் அழகு சிறப்பு இருக்கிறது. ஸென் கூறுகிறது.

> **மருள்நிலை என்பது ஆதாரமற்றது எனவும் அருள் நிலை என்பதோ தன்னிலை [சுயம்] அன்றி வேறில்லை எனவும் அவர் அறிகிறார்.**

எல்லாமே மாயை. எனவே தப்பிஓடத் தேவை இல்லை. அதற்கு அடிப்படை இல்லை. அதைப்பற்றி நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. அது ஒரு கயிறுதான். அது பாம்பு போல தோன்றுகிறது. எனவே ஏன் ஓடுவது? ஏன் துறப்பது? அது பாம்பாகவே தோன்றட்டும். அது கயிறாகவே இருக்கட்டும். அது எதுவாயினும், அந்த காட்சித் தோற்றம் ஆதாரமற்றதாய் இருக்கிறது. எனவே அதைத் துறப்பது அவசியமில்லை.

ஸென் துறவைப் போதிப்பதில்லை. புரிதலை- விழிப்புணர்வை- உஷார்த் தன்மையையே போதிக்கிறது. பொருள்கள் எப்படி உள்ளனவோ அப்படியே அவற்றைக் காணும் திறனைப் போதிக்கிறது. எங்கிருந்தும் எங்கும் தப்பி ஓடத் தேவை இல்லை. நீங்கள் எங்கிருந்தாலும் அங்கிருந்த படியே இளைப்பாற ஸென் உங்களுக்கு உதவுகிறது.

மேலும் கடவுளைத் தேடவும் தேவையில்லை. சட்டோரியை- சமாதியை- ஞானநிலைபேற்றைத் தேடவும் தேவையில்லை. தேடலே ஒரு தடங்கல்தான். நம் சீவனுக்குள் இல்லாத பொருள் களைத் தான் நாம் தேடுவோம். அவை நம் சீவனுக்குள்ளேயே இருக்கும்போது அவற்றைத் தேடி ஓடத் தேவையில்லை. சும்மா இளைப்பாறுங்கள்! அந்த இளைப்பாறுதலிலேயே அவற்றை நீங்கள் கண்டுகொள்கிறீர்கள். அருள்நிலை நம் இயல்புநிலை. சமாதி நிலை நம் இயல்பு. கடவுள் என்பது நம் இயற்கைத் தன்மை. எனவே ஸென் மனிதர் எங்கும் போவதில்லை தன்னில்தான் அப்படியே இளைப்பாறுகிறார்.

**அறியாதிருப்பது என்னும் நிசமான இயல்பே புத்தரின் இயல்பும் என அவர் காண்கிறார்...**

அறியாதிருப்பது என்னும் நிலையில் இருந்து செயல்படுவது என்பது நிகழ்கணத்தில் செயல்படுவதாகும். அறிந்திருக்கும் நிலையில் இருந்து நீங்கள் செயல்படுவது என்பது கடந்த காலத்தில் இருந்து செயல்படுவதாகும். எல்லா அறிவும் கடந்த காலத்திலிருந்து வருவதே. அறிவு என்றாலே கடந்த காலம்தான். உங்களின் அனுபவங்களும், நினைவுகளும்தானே அது? அவற்றின் மூலமாக நீங்கள் இயங்கினால் யதார்த்தத்துடன் நீங்கள் உறவுகொள்வதில்லை. யதார்த்தத்துடன் வினைபுரிய ஒரேவழி, முற்றிலும் மனமற்று இருப்பதுதான்.

அறிவு நிலையில் இருந்து நீங்கள் செயல்படும் போது உங்கள் செயல் முழுமையானதாகவும் எப்போதுமே போதுமானதாகவும் இருக்கிறது. அது எப்போதுமே நிறைவை, விடுதலையை அளிப்பதாக உள்ளது. எனவே தான் யோக்கா அதை "புத்தரின் இயல்பு" என்கிறார்.

மேலும், இதை நீங்கள் முழுமையாக கைவரப் பெறுகையில் நீங்கள் சூனியமாக ஆகிறீர்கள். "ஞானமடைந்த ஆத்மாவாக நீங்கள் ஆகிறீர்கள்" என்பதில்லை. நீங்கள் மறைந்து விடுகிறீர்கள். அகங்காரத்தை அங்கு காண முடிவதில்லை. ஞானம் பெறுவதற்கு

அங்கு யாருமில்லை. அதுவே ஞானநிலைபேறு ஸென்னைப் பொறுத்தவரை, ஞானம்பெற யாருமற்றுப் போகிற நிலையில் ஞானநிலைபேறு நிகழ்ந்திருக்கிறது. நீங்கள் ஒரு சுத்த பாழ் ஆக இருக்கையில், மிகவும் ஆழமான, அழகான முடியாத ஒரு அமைதி (அதை அளக்க வழியில்லை)- மிகவும் புத்தம்புதிய, மிகவும் தூய்மையான அமைதி, (ஒருபோதும் ஒருவரும் அதில் நடந்ததில்லை. நீங்களுமே அதில் புகமுடியாது)- அங்கு இருக்கிறது. நீங்கள் மறைந்து விடும்போது மட்டும்தான் அது இருக்கிறது.

இந்த ஒன்றுமின்மையே அறுதி உண்மை. புத்தர் இதை சூனியம், பாழ் என்கிறார். இந்த ஒன்றுமின்மையில் நீங்கள் வாழ முடியும்போது, பின் உங்கள் சாமானிய வாழ்வே புனிதமான வாழ்வின் இன்னொரு பெயராக இருக்கிறது.

இதுவே ஸென்னின் மாபெரும் நற்செய்திகளில் ஒன்று அது உங்கள் சாதாரண வாழ்க்கையை அழிக்கிறதில்லை. மாறாக அதனைச் செழுமைப்படுத்துகிறது. மற்ற மதங்கள் யாவும் அழிவுத்தன்மை கொண்டவனாய் உள்ளன. அவை எல்லாம் விஷமூட்டுபவையாகவும் சாபம்- கண்டனம் தெரிவிப்பவையாகவும் இருந்திருக்கின்றன. அவை உங்கள் சாமானிய வாழ்வைத் தூற்றுவதாகவும் எங்குமே இல்லாத ஒரு லட்சிய வாழ்வைப் போற்றுவதாகவும் இருந்துள்ளன. அவை இருப்பதை இகழ்ந்து இல்லாததைப் புகழ்கின்றன.

ஸென் கூறுகிறது. இதுவே எல்லாம் வேறு பிறவி என்பது இல்லை. வேறு இருத்தல் என்பது இல்லை. இந்தச் சாமானிய இருத்தலே அழகாக இருக்கிறது. வேறு எந்த உலகுக்கும் அவசியமில்லை. இந்த உலகே தேவைக்கும் அதிகம். "ஸென் என்பது மிகப்பெரும் ரசவாதமாக உள்ளது. அது உங்களின் சாமானிய இகலோக வாழ்வைப் புனிதமான பரலோக வாழ்வாக மாற்றுகிது.

ரின்ஸாய் என்னும் ஸென் ஆசானிடம் கேட்டார்கள். "ஞானநிலை பெறுவதற்குமுன் நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?"

அவர் சொன்னார், "இப்போது செய்கிறவற்றையே செய்து வந்தேன். என் ஆசானுக்கு கிணற்றில் இருந்து நீர் இறைத்து வருவேன். என் ஆசானுக்கும் ஆசிரமத்துக்கும் விறகு பிளந்து கொடுப்பேன். இப்பவும் அதையே தொடர்கிறேன்: என் சீடர்களுக்காக கிணற்றில் இருந்து நீர் இறைத்து வருகிறேன். விறகு பிளக்கிறேன்."

"அப்படியானால் ஒரு ஞானம்பெற்ற மனிதருக்கும் ஞானம்பெறாத மனிதருக்கும் என்னதான் வேறுபாடு?" என்று அவர்கள் கேட்டார்கள்.

அதற்கு ரின்ஸாய் சொன்னார், "விறகு வெட்டுவதும் கிணற்றில் இருந்து நீர் இறைப்பதும் சாதாரண வேலை என அஞ்ஞானி நினைக்கிறான். ஞானியோ இது புனிதமானது. தெய்வீகமானது என அறிந்திருக்கிறான்."

சாகர், கடைசியாக, நினைவில் கொள்ள வேண்டிய ஒரு விசயம். படிப்படியான வளர்ச்சியில் ஸென்னுக்கு நம்பிக்கை இல்லை. ஏனென்றால் புத்த நிலையே உன் இயல்பு என்றால் ஞானநிலைபேறே உன் சுபாவம் என்றால் அதை நீ இப்போதே பெற்றிருக்க முடியும் என்கிறது அது. ஒரு கணம்கூடத் தாமதிக்கத் தேவை இல்லை. உடனடியாக ஞானத்தை ஸென் நம்புகிறது. எனவேதான் அது கணப்பொழுதில் நிகழ முடியும் என்கிறார் யோக்கா.

மற்ற மதங்கள் தள்ளிவைப்புகளாக உள்ளன. பலப்பல தடவைகள் நீங்கள் பிறந்தாக வேண்டும். என இந்துக்கள் கூறுகிறார்கள். அதன் பிறகுதான் நீங்கள் ஞானநிலை பெறமுடியும் என்கிறார்கள். ஏன்? "ஏனென்றால் உங்கள் கடந்த பிறவிகளில் நீங்கள் செய்திருக்கிற தீய கருமங்களை முதலில் நீங்கள் கட்டவிழ்க்க வேண்டி இருக்கிறது" என்கிறார்கள். ஆனால் நீங்கள் கோடிக்கணக் கான பிறவிகளை எடுத்திருக்கிறீர்கள். அந்த கருமங்களை எல்லாம் தொலைக்க இன்னும் எத்தனை பிறவிகள் எடுப்பது தேவை? மேலும் அந்தப் பழைய கருமங்களைத் தொலைத்து வரும்போதே புதிய கருமங்களை கட்டிக் கொள்கிறீர்கள். எனவே மறுபடியும் தீய கருமங்கள் குவிந்துவிடும். இதன் பொருள், ஞானநிலைபேறடைவது என்பதற்குச் சாத்தியமே இல்லை. அல்லது அது அவ்வளவு அசாத்தியம் என்பதாகும்.

ஸென் கூறுகிறது. இதுவரை நீங்கள் செய்திருக்கிறது எல்லாம் ஒரு கனவில் செய்தவை. விழித்தெழுந்தால் எல்லாம் தீர்ந்தது. நீங்கள் விழித்தெழுந்ததும் உங்கள் கனவில் நீங்கள் செய்தவற்றை முதலில் தொலைத்தாக வேண்டும் என்பதில்லை. விழித்தெழுந் தாலே எல்லாக் கனவுகளும் தொலைந்து போகின்றன. அவை கனவுகள்தான் என அறிவதே அவற்றுக்கு முடிவுகட்டுவதாகும். பல பிறவிகளாக நீங்கள் உங்கள் தூக்கக் கலக்கமான வாழ்வை வாழ்ந்து வந்திருக்கிறீர்கள். நீங்கள் செய்தவை எல்லாம் உங்களின் தூக்கத்தில்

செய்யப்பட்டவை. அதில் பெரிய முக்கியத்துவம் ஒன்றும் இல்லை. கனவுகள் எதனால் ஆனவையோ அதனால்தான் அவையும் ஆக்கப்பட்டுள்ளன.

விழித்துக்கொள். அதுவேபோதும்!

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மனிதர் தூங்கிக் கொண்டிருக்கிறார் என்றே எல்லா விழிப்படைந்த ஞானிகளும் கூறுவதேன்? இதை நான் ஏற்க மாட்டேன். நான் முழு விழிப்புடன் இருப்பதாகவே நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?**

**நீரஜ்.**

நீயும் விழித்தெழாத வரை. விழிப்படைந்த ஞானிகள் கூறுவதை நீ புரிந்துகொள்வதற்கு வாய்ப்பே இல்லை. அவர்கள் உன் மொழியில் பேசுகிறார்கள். அவர்கள் உன் மொழியில் பேசுவது முற்றிலும் அவசியம் கருதியே. ஏனென்றால் வேறுமொழி இல்லை. ஆனால் அவர்களின் அர்த்தம் முற்றிலும் வேறாகும்.

நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என புத்தர்கள் சொல்லும் போது அவர்கள் சாதாரண உறக்கத்தைக் குறிப்பதில்லை. சாதாரண அர்த்தத்தில் நீங்கள் தூங்கிக்கொண்டு இருக்கவில்லை; விழித்துத்தான் இருக்கிறீர்கள். இரவில்தான் தூங்குகிறீர்கள். ஆனால் ஒரு நாளைக்கு 24 மணி நேரமும் நீங்கள் தூங்கிக் கொண்டிருப்பதாகவே புத்தர்கள் கூறுகிறார்கள். "தூக்கம்" என்னும் சொல்லை நீங்கள் பழகி இருக்கிற அதே பொருளில் அவர்கள் பயன்படுத்தவில்லை என்பது உறுதி. அவர்கள் வேறு ஒன்றை- முற்றிலும் வேறுபட்ட ஒன்றைக் குறிப்பிடு கிறார்கள். அவர்கள் ஒரு தத்துவ வகைப்பட்ட தூக்கத்தைப்பற்றிப் பேசுகிறார்கள். உணர்வின்மை என்னும் அகநிலைமைபற்றி அவர்கள் பேசுகிறார்கள்.

நீங்கள் நடக்கிறீர்கள்; பேசுகிறீர்கள்; ஆயிரத்தி ஒரு காரியங்களைச் செய்கிறீர்கள். ஆனால் தூக்கத்தில் நடப்பவரைப் போன்று யந்திரத்தனமாக வாழ்கிறீர்கள். உணர்வுடன் நீங்கள் வாழ்வதில்லை. விழிப்படைந்த ஞானிகள் பேசுவதை கவனிக்கும் போதுகூட. உங்கள் உறக்கத்தில் நீங்கள் உருவாக்கி இருக்கிற அனைத்துத் தடைகளின் வழியாகவும், உங்கள் உறக்கத்தின் அனைத்து அடுக்குகளின் மூலமாகவும்தான் அவற்றைக் கவனிக்கிறீர்கள். தொடர்ந்தும் அவற்றைத் தவறாகவே வியாக்கியானப்படுத்திக்

கொண்டு போகிறீர்கள். நீ விழித்திருப்பதாகச் சொல்வது சரிதான் நீரஜ். அந்தப் பொருளில் பார்த்தால் எல்லா புத்தர்கள் சொல்வதும் தவறுதான். அவர்களுக்கும் அது தெரிகிறது. ஆனால் நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய் என்று அவர்கள் சொல்லும்போது அவர்கள் சாதாரணத் தூக்கத்தையோ சாதாரண விழிப்பையோ குறிக்க வில்லை. மிகவும் அடிப்படையான வேறொன்றைக் குறிப்பிடு கிறார்கள்.

"விழித்தெழுக!" என அவர்கள் உங்களிடம் சொல்லும் போது அதன் பொருள். உங்கள் ஜீவனில் எந்த மூலை முடுக்கும் உணர்வற்ற- இருண்ட- பகுதியாக எஞ்சியிராதபடி முழுமையான உணர்வுநிலை பெறுக என்பதுதான். இப்போதைக்கு அதன் மிகச்சிறு பகுதிதான் (உதாரணமாக) பத்தில் ஒரு பகுதிதான்- உணர்வுடன் இருக்கிறது. இது மிகவும் பலவீனமாயுள்ளது. எங்கள் ஜீவனின் பத்தில் ஒன்பது பகுதிகள் உணர்வற்றுள்ளது. நீங்கள் ஒரு பனிப்பாறை போலவே இருக்கிறீர்கள். அதன் ஒரு சிறு பகுதியே சரியாக பத்தில் ஒரு பகுதி மட்டுமே- வெளியில் தெரிகிறது. பத்தில் 9 பாகங்கள் நீருக்கடியில் இருக்கிறது.

விழிப்படைந்தவர்களின் உரைகளை நீங்கள் கவனிக்கும்போது அவர்களின் மொழியைப் புரிந்துகொள்ள நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டி இருக்கும் உங்களின்படி அல்ல, அவர்களின்படி.

ஐரோப்பாவின் தலைநகரங்களுக்கு தன்னை ஏற்றிச் செல்வதற்காக நின்று கொண்டிருந்த சிறப்பு விமானத்தில் ஏறுவதற்காக பிரதம மந்திரி நின்று கொண்டிருந்தார். அப்போது அவரை வழியனுப்ப வந்த உள்துறைச் செயலர், அவரிடம் மெதுவான குரலில் கேட்டார். "ஹோமோ செச்சுவல்பில் (ஒருபால் புணர்ச்சியர் பற்றிய மசோதா) விஷயத்தில் உங்கள் கருத்து என்ன?"

"ஓ.... அதுவா... உம்ம்" என்ற பிரதமர், "நான் திரும்பி வந்ததும் அவருக்குரியதைச் செலுத்திவிடுவோம் என்று அவரிடம் சொல்லி விடுங்கள்!" என்றார்.

உங்களுக்கு ஏற்ற முறையிலேயே நீங்கள் கவனிக்கிறீர்கள். கவனிக்கும்போது அமைதியாக இருப்பதில்லை நீங்கள். உங்கள் மனதை அப்பால் வைத்துவிட்டு கவனிப்பதில்லை நீங்கள்.

கவர்ச்சிக் கன்னியான இத்தாலிய இளம்பெண்ணிடம் "இதற்கு முன் உங்களுக்கு எப்போதாவது எக்ஸ்-ரே எடுத்ததுண்டா?" என்று கேட்டார் மருத்துவர்.

"இல்லை டாக்டர். ஆனால் இரண்டு தடவைகள் நான் அல்ட்ராவயலேட் (Voilate) பண்ணப்பட்டிருக்கிறேன்" என்றாள் அவள்.

உங்கள் மனம் ஓயாமல் திரிந்தபடி இருக்கிறது. தான் செவிமடுக்கிற ஒவ்வொன்றுக்கும் தன் சொந்த வண்ணத்தைத் தந்து கொண்டிருக்கிறது. உங்கள் மனம் உங்களை முட்டாள் ஆக்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் உங்கள் மனம் உங்களைப் புத்திசாலி ஆக்கிக் கொண்டிருக்கிறது என நீங்கள் நினைக்கிறீர்கள்.

புத்தர்கள் சொல்வதை கவனிப்பதற்கு குறிப்பிட்ட வெளி வித்தியாசமான தன்மைகொண்ட உள்வெளி தேவைப்படுகிறது. மிகவும் அமைதியுடன் நீங்கள் கவனிக்க வேண்டி இருக்கிறது. எந்த எண்ணமும் இன்றி கவனிக்க வேண்டி இருக்கிறது. எந்த முன்கருத்தும் தற்சாய்வும் இன்றி நீங்கள் கவனிக்க வேண்டி இருக்கிறது. சார்பாகவோ எதிராகவோ முன்முடிவு கட்டாதிருக்க வேண்டி இருக்கிறது. அவர்கள் சொல்வது சரியா தவறா என்பதைத் தீர்மானிக்க நீங்கள் பறக்கக் கூடாது. சார்பாகவோ எதிராகவோ நிலையாமல் வெறுமனே கவனியுங்கள். பதற்றப் படாதீர்கள். இல்லாவிட்டால மடத்தனமாக ஏதாவது செய்துவிடுவீர்கள்.

காவல் நிலையத்தில், குற்றவாளியை அடையாளம் காட்டுவதற்காக பல குற்றவாளிகளையும் வரிசையாக நிறுத்தி இருந்தார்கள். அந்த வரிசையில் போலந்தைச் சேர்ந்த கற்பழிப்புக் குற்றவாளியும் நின்று கொண்டிருந்தான். அவன் முகத்தில் பிரகாசமான விளக்குகள் வெளிச்சம் பாய்ச்சின. அவனுக்கு இருபுறத்திலும் மோசமான குற்றவாளிகள் நின்றிருந்தார்கள்.

கற்பழிப்புக்குப் பலியான பெண்ணை காவலர்கள் கூட்டி வந்தார்கள். உடனே அவன் முன்னுக்குக் குதித்து "அவள்தான்!" என்று கத்துகிறான்.

உங்கள் மூடமனதை மூடுங்கள். "தயவு செய்து அமைதியோடிரு" என்று அதனிடம் சொல்லுங்கள். சாதாரண உலகத்துக்கு அது பொருத்தம். புத்தர்களுடன் புழங்கும்போது, விழிப்புணர்வு பெற்றவர்களுடன் இருக்கும்போது அது பொருந்திவராது.

புதுச் சீடர்கள் வந்த போதெல்லாம் கவுதம புத்தர் அவர்களிடம் சொல்வார்: "இரண்டு ஆண்டுகளுக்கு என் அருகில் அமைதியாக இருங்கள். பின்தான் ஏதாவது சாத்தியமாகும். பின்பே நான் உங்களுக்கு ஏதாவது சொல்ல முடியும்."

ஒருதடவை மவுலிங்கபுட்டர் என்னும் பெரிய தத்துவர். புத்தரைப் பார்க்க வந்தார். மவுலிங்கருக்கே ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்தார்கள். அவர் பிரபலமான ஒரு தத்துவர். மிகவும் மதிக்கப்பட்டவர். பெரிய பண்டிதர். எனவே, புத்தர் அவரிடமும் "இரண்டு ஆண்டுகள் என் அருகில் அமைதியாக இரும். பின்புதான் எனக்கும் உமக்கும் இடையில் ஏதாவது பரிமாற்றம் சாத்தியம்" என்றதும், அவர் அவமதிப்புற்றார்.

அவர் சொன்னார், "நீர் சொல்வதைப் புரிந்துகொள்ள முடியாத ஒரு மூடன் என என்னை நினைத்துக் கொண்டீரா? நீர் என்ன சொல்ல விரும்பினாலும் அதை இப்போதே சொல்லும். இரண்டு ஆண்டுகள் காத்திருப்பது எனக்கு அவசியமில்லை. வேதங்கள், உபநிடதங்கள், கீதை அனைத்தையும் என்னால் புரிந்துகொள்ள முடிகிற போது உம்மைப் புரிந்துகொள்வது ஏன் முடியாது?"

புத்தர் சொன்னார்: "வேதங்களையும் உபநிடதங்களையும் கீதையையும் நீர் புரிந்து கொண்டிருக்கிறீர் என்னும்போது இங்கே ஏன் வந்திருக்கிறீர்? உமது கேள்விகளுக்குத்தான் விடைகள் கிடைத்துவிட்டிருக்குமே! உபநிடதங்களை நீர் புரிந்துவிட்டால் வேறு என்ன மிச்சம் உள்ளது? அப்படியானால் என் நேரத்தை வீணடிக்க வேண்டாம். உமக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கிறது. எனவே போய்ச் சேரும்!"

அவர் மிகுந்த அதிர்ச்சிக்குள்ளாகி இருக்கவே வேண்டும். ஐநூறு சீடர்களுடன் அவர் வந்திருந்தார். அவர்களும் அதிர்ச்சி அடைந்தார்கள். ஆனால் அவர் மிகவும் தகுதியான ஆளாகவே இருந்திருக்க வேண்டும். ஏனெனில் சொல்லப்பட்ட கருத்தை அவர் உணர்ந்து கொண்டார். அவர் சொன்னார், "அது சரிதான். நான் புரிந்திருந்தேன் என்றால்- உண்மையாகவே புரிந்திருந்தேன் என்றால்- உம்மிடம் வந்திருக்கத் தேவை இருந்திராதுதான். என் கேள்விகளுக்கு இன்னும் விடை கிடைக்காததால் தான் உம்மிடம் வந்திருக்கிறேன். வேதங்கள் அனைத்தையும் உபநிடதங்கள் அனைத்தையும் நான் அறிவேன். ஆனால் அவை என் ஜீவனை உருமாற்றவில்லை."

அதற்கு புத்தர் சொன்னார், "நான் சொல்கிறதுபடி நடவும். இரண்டு ஆண்டுகளுக்கு எந்தக் கேள்வியும் கூடாது. கற்றதை எல்லாம் கலைத்துவிடும். இரண்டு ஆண்டுகளுக்குப் பேசாதிரும். அமைதியாக இங்கு அமரும்."

இந்த உரையாடல் நடந்து கொண்டிருக்கும்போது அங்கு உட்கார்ந்து கொண்டிருந்தவர்களில் ஒருவர் சிரிக்கத் தொடங்கினார். அவர் பெயர் சாரிபுட்டர். கவுதம புத்தரின் மாபெரும் சீடர்களில் ஒருவர்.

மவுலிங்க புட்டர் கேட்டார். "ஏன் இந்த ஆள் சிரிக்கிறார்? இவருக்கென்ன மூளை குழம்பிவிட்டதா அல்லது வேறெதாவது ஆகிவிட்டதா?"

"அவரையே கேளும்" என்றார் புத்தர்.

கேட்டார் மவுலிங்கர். அதற்கு சாரிபுட்டர் சொன்னார்.

"இந்த ஆள் உண்மையிலேயே மிகவும் தந்திரசாலிதான்" - இவ்வாறு புத்தரைப்பற்றிக் குறிப்பிடுகிறார். அதனால்தான் சிரித்தேன். நானும் உம்மைப் போலத்தான் வந்தேன். 2 ஆண்டுகள் பேசாமல் அமைதியாக இருக்குமாறு என்னிடமும் இவர் சொன்னார். அந்த 2 ஆண்டுகளில் என் கேள்விகள் யாவும் ஒழிந்தன. இப்போது கேட்பதற்கு என்னிடம் எதுவுமில்லை. ஆனால் அவரோ என்னிடம் கேட்டபடியே இருக்கிறார். "சாரிபுட்டா, ஏன் நீ இப்போது கேட்கவில்லை?" என்று. எனவே நான் உமக்குச் சொல்லும் யோசனை என்னவென்றால். கேட்பதாய் இருந்தால் இப்போதே கேளும். கேட்க விரும்பவில்லை என்றால் அவர் சொல்கிறபடி கேளும். இரண்டு ஆண்டுகள் மவுனமாயிரும்."

அப்படியே நடந்தது. சரியாக 2 ஆண்டுகளுக்குப் பின் புத்தர் மவுலிங்க புட்டரிடம் கேட்டார். "உமது கேள்விகள் எங்கே?"

அதற்கு அவர் சிரித்தார். குனிந்தார். புத்தரின் பாதம் பணிந்தார். பின்னர் சொன்னார்- "அவை அமைதியில் மறைந்துவிட்டன. உங்களை வெறுமனே கவனித்தபடி. பார்த்தபடி இருந்ததன் மூலமே மெதுமெதுவாக என் தெளிவு மென்மேலும் அதிகரித்து வந்தது. முற்றிலும் வேறுவிதமான ஒரு உறவுமுறை நேர்ந்திருக்கிறது. ஏதோ ஒரு பரிமாற்றம் நிகழ்ந்திருக்கிறது. இப்போது கேள்விகள் இல்லை. பதில்களும் இல்லை. ஆனால் நான் முற்றிலும் நிறைவடைந்த வனாய் இருக்கிறேன். நான் வீடு சேர்ந்து விட்டிருக்கிறேன்."

ஒருவன் தன் நண்பனிடம் சொன்னான், "நியூயார்க் போனதும் என் கல்லூரித் தோழன் ஜிம்மி செக்சவருடன் தொலைபேசி மூலம் தொடர்புகொள். அவன் இப்போது XYZ கம்பெனியில் வேலை செய்கிறான்."

நகரப் பரிச்சயம் இல்லாத நண்பன் நியூயார்க்கை அடைந்ததும் XYZ கம்பெனிக்குத் தொலைபேசியில் வரவேற்பாளரிடம் "அங்கு செக்கசவர்னு யாராச்கும் இருக்காங்களா?" என்று கேட்டான்.

அதற்கு அவள் "செக்ஸ் அவரா? (செக்ஸ் இடைவேளையா?) நாசமாய்ப்போக காபி பிரேக் கூட (தேனீர் இடைவேளைகூட) இங்கு கிடையாது!" என பதிலளித்தாள்.

நீரஜ். மனிதர் தூங்கிக் கொண்டிருக்கிறார் என்றே விழிப்படைந்த ஞானிகள் எல்லோரும் கூறுவதேன் என்கிறாய் நீ.

ஏனெனில் மனிதர்கள் தூங்கிக்கொண்டிருக்கிறார்கள்! இது ஒரு எளிய உண்மை. உன்னையே நீ கவனித்துப் பார். அந்த உண்மையை நீ கண்டுகொள்வாய்.

இதை நான் ஏற்க மாட்டேன் என்கிறாய்.

உன்னால் ஏற்க முடியாது. ஏற்பு நிகழ நீ மறைய வேண்டி இருக்கிறது. நீ மல்லுக் கட்டினால் ஏற்பு சாத்தியமில்லை. நீ ஏற்பு இரண்டும் ஒருசேர நடப்பது சாத்தியமில்லை. ஒன்றா சம்மதம் சாத்தியம். அப்போது அங்கே சம்மதம் நிகழாது.

மேலும் நீ கூறுகிறாய். நான் முழு விழிப்புடன் இருப்பதாகவே நினைக்கிறேன்.

நீ விழித்திருந்தால் நீ விழித்திருப்பதாக நீ நினைக்க வேண்டிய அவசியமில்லை. ஒரு பெண்ணை நீ காதலித்தால் "உன்னை நான் காதலிக்கிறேன் என்றே நினைக்கிறேன்" என்று சொல்லமாட்டாய். அப்படி நீ சொன்னால் அவள் கையால் உனக்கு அறைவிழும்! அவளை நீ காதலித்தால் அவளை நீ காதலிக்கிறாய்- அவ்வளவுதான்" 'என்று நினைக்கிறேன்' என்பதற்குப் பொருள் என்ன? உனக்கு தாகமாய் இருக்கும் போது "எனக்குத் தாகமாயிருக்கிறது என்று நினைக்கிறேன்" என்றா சொல்வாய்? நீ தாகமாயிருந்தால் நீ தாகமாய் இருக்கிறாய்" நான் தாகமாயிருக்கிறேன்" என்று மட்டுமே சொல்வாய்.

"நான் முழு விழிப்புடன் இருப்பதாகவே நினைக்கிறேன்" என்கிறாய்.

நீ நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்கிறாய். ஒருவேளை விழித்திருப்பதாக உன் தூக்கத்தில் நீ கனவு கண்டு கொண்டிருக் கலாம்.... அது சாத்தியமே. நினைப்பது என்பது மொத்தமும் அதுதான் கனவு காண்பது. கண்களைத் திறந்து வைத்துக் கொண்டே கனவு காண்பதுதான் நினைப்பு என்பது.

புத்தர்கள் சொல்வதை கவனி. கூடுதலான அமைதியில் மோனத்தில்- ஓய்வில் இரு. உன் மோனத்தில் நீ மறைந்து போவாய். பின் ஏற்பு-இசைவு நிகழும்.... தத்துவ அளவில் ஒத்துக்கொள்ளும் பிரச்சனை அல்ல இது. விழிப்படைந்தவருடன்- அவருடைய ஜீவனுடன்- ஒத்திசையும் விசயம் இது. அதுதான் உண்மையான ஒப்புதல்.

நீரஜ். இப்படியே நீ தொடர்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தால் என்னை முற்றிலுமாகத் தவறவிட்டு விடுவாய். இங்கே எண்ணத்துக்கு வேலை இல்லை. எண்ணமற்ற விழிப்புணர்வே தேவை. எண்ணுவதைத் தள்ளி வைப்பது கடினமே. ஏனென்றால் எண்ணுவதற்கே நாம் மிகவும் பழக்கப்பட்டுப் போயுள்ளோம். ஒவ்வொன்றைப் பற்றியும் சிந்திப்பது மிகவும் புத்திசாலித்தனமானது என்றே நாம் எண்ணுகிறோம். நீ சிந்திக்க முடியாத விசயங்கள் உள்ளன. (அவை பற்றி) ஒன்று உனக்கு தெரியும் அல்லது தெரியாது. நான் பேசிவரும் விஷயங்கள் அந்த வகையைச் சேர்ந்தவை. அதுபற்றி உனக்குத் தெரியும் அல்லது தெரியாது.

நீ முற்றிலும் விழிப்புடன் இருந்தால் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? எவ்வளவு அருமையான ஆள் நீ! இங்கே உனக்கு என்ன வேலை? முற்றிலும் நீ விழிப்படைந்திருந்தால் போய் மற்றவர்களும் முழுமையாக விழிப்படைய உதவு. ஆனால் நீ விழிப்படையவில்லை. உன்னை நான் அறிவேன். உன் தூக்கத்தை நான் அறிவேன். அது ஆழமானது. உன் தலைமேல் ஒரு பயங்கர அடிகொடுப்பது தேவை. உன் மண்டையே பிளந்தால் ஒழிய நீ விழிப்படைய மாட்டாய். உன்னால் முடியாது.

சாதாரண உசுப்பல்கள் உனக்குப் போதாது. அதனால் தான் அசாதாரண உசுப்பல்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறேன். எனவேதான் உன்னை ஒரு குழுவில் இருந்து வேறொரு குழுவுக்கும் இழுத்தடிக்கிறேன். இதன் பொருள், இழுவைக்கும் தள்ளலுக்கும் அடிக்கும் குலுக்கத்துக்கும் அதிர்ச்சிக்கும் நீ உள்ளாகிறாய் என்பதே. நீ தூங்கியபடியே இருக்க உனக்கு நாங்கள் எந்த வாய்ப்பையும் கொடுப்பதில்லை. கொஞ்சமாவது உனக்குள் விழிப்பு நிகழும்போது மட்டுமே இங்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது. எனக்கும், இங்கு என்னை சூழ்ந்திருக்கிற பித்தர்களுக்கும் இடையே என்ன பரிமாற்றம் நடந்து கொண்டிருக்கிறது- என்பதை நீ புரிந்து கொள்ளக் கூடும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மனத்தின் தளை நீக்கத்துக்கு [டி–கன்டிசனிங்]**

**ஏற்புத் தன்மை உதவமுடியுமா?**

**ஆனி ஹல்ப்பா,**

மறுப்புகள் மூலம் மட்டுமே தளை நீக்கம் சாத்தியம். ஏற்புகள் மூலம் ஒருபோதும் முடியாது. ஏற்பு என்பது மனதைத் தளைப்படுத்தும்- கட்டுப்படுத்தும்- முறைதான். மறுப்பு என்பதே உனக்குத் தேவை. உபநிடதங்கள் 'நேதி நேதி' இதுவல்ல அதுவுமல்ல என்கின்றன. மறுப்பதற்குக் கடைசியாய் எதுவும் மீதமாகாத வரை நீங்கள் மறுத்துக் கொண்டே போக வேண்டியதே. முற்றான வெறுமை வந்ததும், மேலும் மறுக்க எந்த உள்ளடக்கமும் மீதமிராத போது, அதுவே தளையறுத்த மனத்தின் நிலை.

தளையறுத்த மனம் என்பது மனமே இல்லை. அது அம்மனம் (நோ-மைண்ட்) அம்மனத்தை ஏற்புகள் மூலம் எப்படி நீங்கள் சாதிக்க முடியும்? ஏற்புகள் என்றால் ஒன்றை ஓயாமல் திரும்பத் திரும்பச் செய்வதாகும்; ஒரு சுயவசியச் சூழலை உருவாக்குவதாகும். இதைத்தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்கள் செய்து கொண்டு வந்திருக்கிறார்கள். குழந்தையிடம் ஓயாமல் "கடவுள் இருக்கிறார். அவர்தான் உலகைப் படைத்தார் என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கும் போது; வீட்டிலும் வெளியிலும் பள்ளியிலும் கோயிலிலும் சமுதாயம் முழுவதிலும் இதைத் திரும்பத்திரும்ப ஓதும்போது- குழந்தை அதனால் தளைப்படுகிறது. பின் அது கடவுள் இருக்கிறார் என்பது தனக்கு ஏற்கெனவே ரொம்பவும் தெரிந்த மாதிரி எண்ண ஆரம்பிக்கிறது. அது ஒரு இசைத் தட்டுப் பதிலாக ஆகிவிடுகிறது! கடவுள் இருக்கிறார் என அதன் மனதில் பதிந்துவிடுகிறது. அக்குழந்தை சோவியத் ருசியாவில் பிறந்திருந்தால் நிலைமை தலைகீழாக இருந்திருக்கும். ஏனென்றால் அங்கு அவர்கள் "கடவுள் இல்லை" என்பதை உருப்போடுவார்கள்.

என் நண்பர்களில் ஒருவர் சோவியத் ருசியாவைச் சுற்றிப் பார்க்கச் சென்றார். அவர் ஒரு ஆசிரியர். சோவியத் கல்வி முறையில் அவர் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். எனவே நிறைய பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்களுக்குப் போய்ப் பார்த்தார். சிறு குழந்தைகூட கடவுள் என்னும் கருத்தைக் கேட்டு எள்ளி நகைக்கிறது என்று அவர் என்னிடம் சொன்னார்.

முதலில் அவர் அங்கிருந்த ஒரு சிறு பள்ளிக்குப் போனார். சின்னக் குழந்தைகளிடம் "நீங்கள் கடவுளை நம்புகிறீர்களா?" என்று கேட்டார். அவர்கள் எல்லோரும் சிரித்தார்கள். "நீங்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "நான் கடவுளை நம்புகிறேன்" என்றார். அதற்கு அவர்கள் சொன்னார்கள்: "கடந்த காலத்தில் நாகரிகமில்லாத மக்கள் கடவுளை நம்பும் வழக்கம் இருந்தது. அறியாமையில் இருந்த மக்கள் கடவுளை நம்பும் வழக்கம் இருந்தது. இப்போது எவரும் அதை நம்புவதில்லை" இந்தக் குழந்தைகள். கடவுள் இல்லை என நம்பும்படி தளைப்படுத்தப் பட்டிருக்கிறார்கள்.

"இல்லை" என்ற சொல்லைப் பார்த்ததுமே அது மறுப்பு என நினைக்காதீர்கள். அதுவும் ஒரு ஏற்புதான். ஏற்பு என்பது நம்பிக்கை சார்ந்தும் இருக்க முடியும்; அவநம்பிக்கை சார்ந்தும் இருக்க முடியும்.

உண்மையான மறுப்பு என்பது எல்லாவிதமான நம்பிக்கைகள்- அவநம்பிக்கைகளில் இருந்தும் மக்கள் வெளியேற உதவுவதாகும். சமுதாயம் உங்களின்மீது வலியச் சுமத்தும் அனைத்துத் தளைகளில் இருந்தும் விடுபட உங்களுக்கு உதவுவதாகும்.

அடால்ப் ஹிட்லர் தன் சுயசரிதையில் எழுதுகிறான். "உண்மைக்கும் பொய்க்கும் இடையில் மிகச்சிறிய வேறுபாடுதான் உள்ளது. பல தடவைகள் திரும்பத் திரும்பச் சொல்லப்படும் பொய்யே. உண்மை எனப்படுகிறது- அவ்வளவுதான்."

அவன் சொன்னது பலவகையிலும் சரிதான். எந்தப் பொய்யையும் திரும்பத்திரும்பச் சொல்லுங்கள். சொல்லிக் கொண்டே இருங்கள். முந்தியோ பிந்தியோ மக்கள் அதை நம்ப ஆரம்பிக்கிறார்கள். மக்கள் எல்லா விதமான விஷயங்களையும் நம்பியிருக்கிறார்கள். இதற்கான எளிய காரணம். அதிகாரத்தில் இருப்போர் நம்பிக்கையாளர்களாக இருக்கிறார்கள். குறிப்பிட்ட விசயங்களை அவர்கள் நம்புகிறார்கள். அதிகாரத்தில் இருப்பவர்கள் கடவுளை நம்பினால் பொதுமக்களும் கடவுளை நம்புகிறார்கள். மக்கள் அதிகாரிகளையே ஏறிட்டுப் பார்க்கிறார்கள். புரோகிதர்கள்- அரசியல்வாதிகள்- பணக்காரர்கள்- படிப்பாளிகள்- விஞ்ஞானிகள் போன்றோரையே பொதுமக்கள் சார்ந்து நம்பி இருக்கிறார்கள். அவர்கள் யாவரும் கடவுளை நம்பினால் கடவுள் இருந்தே ஆகவேண்டும். அவர்கள் யாவரும் கடவுள் இல்லை என்பதை நம்பினால் கடவுள் இல்லை! பொது மக்கள் அவர்களை அப்படி அப்படியே பின்பற்ற ஆரம்பிக்கிறார்கள். வெறுமனே பார்த்தொழுகு பவர்களாக மட்டுமே அவர்கள் இருக்கிறார்கள். சமுதாயமும்-

எல்லாச் சமுதாயமும்தான்- ஒவ்வொரு விதமான தளைச் சூழலை உருவாக்குகிறது. இதுவரை உலகில் நிலவும் எந்தச் சமுதாயமும் இந்த தளைப்படுத்தும் நடைமுறையின் ஊடாகத்தான் வாழ்ந்து வருகிறது.

தளைப்படுத்தும் நிகழ்முறையோ முற்றிலும் கெடுதலானது. விஷமானது. ஏனென்றால் தனிமனிதரின் சுதந்திரத்தை அது அழிக்கிறது. உண்மையைத் தேடுவதற்கு அவருக்குள்ள திறனை அது அழிக்கிறது. வாழ்விலும் அவர் சாகசப் பயணம் மேற்கொள்வதை அது அழிக்கிறது. இருப்பது என்ன என்னும் ஆராய்ச்சிகளில் அவர் முன்முயற்சி எடுப்பதை அது அழிக்கிறது. எப்போதாவது அவர் ஒரு கேள்விகேட்கும் முன்பாகவே பதில் அவர்மீது பதியப்பட்டு இருக்கிறது. இதைச் செய்து கொண்டே இருக்கிறவர்களுக்கு, அதனால் பெறக்கூடிய பல சுயநலங்கள் இருக்கின்றன. உங்களை ஆத்திகர்கள் ஆக்குவதற்கு பூசாரிகள் விரும்புகிறார்கள். உங்களை நாத்திகர்கள் ஆக்குவதற்கு கம்யூனிஸ்டுகள் விரும்புகிறார்கள். உங்கள் மீது அக்கறை செலுத்த யாரும் இல்லை. அவர்கள் யாவரும் தம் சொந்த ஆதாயங்கள் பற்றியே அக்கறை காட்டுகிறார்கள்.

எனவே ஆனி ஹல்ப்பா, ஏற்புகள் உதவ முடியாது. எல்லா ஏற்புகளும் கட்டுப்படுத்தல்களாகவே தளைகளாகவே உள்ளன. உனக்குத் தேவை முழுமையான மறுப்பு.

அதுவே ஸென். அது மறுக்கிறது. அது கடவுள் இல்லை என்கிறது. ஆன்மா இல்லை என்கிறது. சொர்க்கம் இல்லை என்கிறது. எதுவுமே இல்லை என்கிறது. நீங்கள் நம்புவதற்கு எதையும் அது விட்டுவைப்பதில்லை. ஒன்றுமின்மையில் நீங்கள் நம்பிக்கை வைப்பதாயினும், ஸென் ஆசான் உங்களை கடுமையாகத் தாக்கவே போகிறார்.

ஒரு நடந்த கதை.

பொக்குஜூவின் சீடர் ஒருவர் திரும்பத்திரும்ப அவரது புதிய அனுபவங்களைக் கொண்டுவந்தார். சக்தி தன் தண்டுவடத்தில் ஏறுவதாக உணர்வதாகச் சொன்னார். உடனே சாத்தப்பட்டார். பொக்குஜூ சொன்னார்: "ஓடிவிடு இங்கிருந்து! இத்தகைய அபத்தத்தைஎல்லாம் என்னிடம் கொண்டு வராதே! நீ அதுவல்ல. ஆற்றலானது எழும்புவதைக் கவனிக்கும் கவனிப்பாளனே நீ. எனவே அதனுடன் உன்னை அடையாளப்படுத்தாதே. அப்படிச் செய்தால் அது ஒரு புது அடையாளமாகவே புது அகங்காரமாகவே இருக்கும். அதாவது ஆன்மிக அகங்காரம்- இதுவோ சாதாரண அகங்காரங்களை விடவும் எவ்வளவோ அதிக ஆபத்தானது."

பின் அவர் ஒருநாள் வந்து "நீங்கள் சொன்னது சரிதான். இப்போது நான் மாபெரும் ஒளியைக் காண்கிறேன். நான் ஒளியால் நிரம்பி இருக்கிறேன். எல்லாம் ஒளிமயம்!" என்றார்.

மறுபடியும் அவருக்கு மொத்து விழுந்தது. "நீ ஒளியுமல்ல. அதை கவனிப்பவன். ஒளியைப் பார்க்கிறது யார்? நீ (அந்த) பார்ப்பவன்" என்று அவருக்குச் சொல்லப்பட்டது.

இது இப்படியே திரும்பத் திரும்ப பல ஆண்டுகளாக நடந்தது. பத்து ஆண்டுகள் கழித்து அவர் ஒருநாள் உண்மையாகவே பரவசத்துடன் வந்தார். ஆசானின் பாதங்களில் விழுந்து வணங்கினார். "இப்போது நீங்கள் என்னைக் குறித்து மகிழ்ச்சி அடைவீர்கள். அடிக்கத் தேவை இருக்காது. இப்போதுதான் நான் ஒன்றுமின்மையை உணர்கிறேன்!"

ஆனால் இந்தத் தடவைதான் ஆசானுக்குக் கடும்கோபம் மூண்டது! அவரை அலாக்காகத் தூக்கி சன்னல் வழியே வீசி எறிந்தார்! அது ஒரு இரட்டைமாடி வீடு. அவர் ஒரு பாறைமேல் போய் விழுந்தார். ஆசான் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தார். "இப்போது எப்படி உணர்கிறாய்?" என்றார்.

அடிபலமாக இருந்தது- இந்தத் தடவை உண்மையாகவே அவர் தன்னிலைக்கு வந்து சேர்ந்து விட்டார்! அவர் சிரிக்கத் தொடங்கினார். பாறைமேல் கிடந்தபடியே சிரிக்கத் தொடங்கினார். குருவும் சன்னலில் இருந்து கீழே குதித்து சீடரைத் தழுவிக்கொண்டு சொன்னார், "இப்போது, நான் மகிழ்ச்சி அடைகிறேன். உள்ளபடியே மகிழ்ச்சி அடைகிறேன்!"

"இப்போது என்ன நடந்துவிட்டது? ஒன்றும் விளங்க வில்லையே" என்றார்கள் மற்ற சீடர்கள்.

பொக்குஜூ சொன்னார், "ஒன்றுமின்மையை உணர்கிறேன். என்பதுவும் தவறே. ஏனென்றால் இப்போது ஒன்றுமின்மையை ஒரு புறப்பொருள் ஆக்கியிருக்கிறீர்கள். இம்முறை ஒன்றுமின்மை உங்களின் ஏற்பாக, எண்ணமாக, உள்ளடக்கமாக ஆகியிருக்கிறது. இந்த ஒன்றுமின்மையையும் நீங்கள் மறுக்க விட்டொழிக்க வேண்டும். அவர் சிரித்தபோது, அந்தச் சிரிப்பில் நான் உண்மையான சூனியத்தைக் காணமுடிந்தது. அங்கே சிரித்தவர் யாருமில்லை. வெறும் சிரிப்பு மட்டுமே அங்கே இருந்தது. உரிமை கோரலோ, கோருபவரோ அங்கு இல்லை. வெறும் சிரிப்பு- தூயசிரிப்பு மட்டுமே இருந்தது. சிரிப்பவர் யாரும் அதில் இல்லை."

அந்தக் கணமே முதன்முறையாக சீடருடன் இணைப்புற்றதாக குரு உணர்ந்தார். மற்ற அனுபவங்கள் எல்லாம் தடைகளையே உருவாக்கிக் கொண்டிருந்தன.

ஏற்புகள் உதவ முடியாது. எல்லா ஏற்புகளும் தளைகளே.

மணமாகாத பெரும் பெண் சொன்னாள், "பூனைகளைப் பார்த்தாலே எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது. ஒரு இனிமையான வானம்பாடிக் குஞ்சு என்னிடம் இருந்தது. ஒரு பூனை அதை தூக்கிச் சென்றுவிட்டது. ஒரு அருமையான கிளி என்னிடம் இருந்தது. ஒரு பூனை அதைக் கவர்ந்து சென்றுவிட்டது. ஒரு கண்ணியமான கனவான் எனக்கு நிச்சயிக்கப்பட்டிருந்தார்... ச்சே. பூனை என்ற பேச்சையே என்னிடம் எடுக்காதீர்கள்!"

இப்படித்தான் தளைகள் உருவாகின்றன. இங்கே 'பூனை' என்னும் சொல்லே பலப்பல மோசமான அனுபவங்களுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. உங்களின் அந்த அனுபவங்களுக்கும் 'பூனை' என்னும் சொல்லுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை.

பூனைக்களால்தான் நெப்போலியன் தோற்கடிக்கப்பட்டான் என்கிறார்கள். எதிரித்தளபதி தன் சேனையின் முகப்பில் 70 பூனைகளைக் கொண்டு வந்து நிறுத்தினான். ஏனென்றால் பூனைகளைப் பார்த்ததுமே நெப்போலியன் பித்துப்பிடித்தது போலாகி விடுவான்; சமநிலை குலைந்து பொறிகலங்கி அறிவுகுழம்பிப் போவான் என்பது எதிரித் தளபதிக்கு தெரியவந்தது.

அது உண்மைதான்: ஏனெனில் நெப்போலியன் வெறும் ஆறுமாதக் குழந்தையாக இருந்தபோது ஒரு காட்டுப்பூனை, வெறிபிடித்த பூனை அவன் நெஞ்சு மீது பாய்ந்திருந்தது. அதிலிருந்து, யானைகளுடன் கூட அவனால் போரிட முடிந்தாலும் பூனை என்று மட்டும் யாரும் அவனிடம் குறிப்பிட்டு விடக்கூடாது! அந்த அளவுக்கு அது அவனில் மிக ஆழமாகப் பதிந்து அவனறியாமலே எதிர்வினை புரிவதாகி விட்டிருந்தது.

உலகம் முழுவதிலும் உள்ள நடத்தைவாதிகள். இயந்திரத்தன மான மனித சமுதாயத்தை உருவாக்குவதற்காக மேற்படி தளை நிகழ்முறையைக் கையாள முயன்று வருகிறார்கள். சில ஆண்டுகளுக்குள் மனித சமுதாயம் முழுவதையும் நாம் மாற்றிவிட முடியும் என்றார் ஸ்கின்னர். மனித குலத்தை மாற்ற புத்தரோ இயேசுவோ முகமதோ தேவையில்லை. அவர்களால் முடியவும் இல்லை. நூற்றாண்டுகளாக அவர்கள் போதித்து வந்திருக்கிறார்கள்;

ஒன்றுமே நடக்கவில்லை. மனித இனம் அப்படியேதான் இருக்கிறது. மனிதகுலத்தை நம்மால் வெகு எளிதாக மாற்ற முடியும். தேவையானது எல்லாம், மக்களைத் தளைப்படுத்தும் சில உத்திகள் மட்டுமே.

திருடாதவனாக ஒருவனை நீங்கள் மாற்ற விரும்பினால் அவனை பத்து ஆண்டுகள் சிறையில் போட அவசியமில்லை. அது உதவவும் போவதில்லை. சொல்லப்போனால் அது அவனை முன்பைவிடவும் பெரிய திருடனாகவே உருவாக்கும். ஏனென்றால் சிறையில் அவன் பலவித திருடர்களுடன் பழகியிருப்பான். தன்னைவிடக் கில்லாடிகளான திருடர்களுடன் வாழ்ந்திருப்பான். சிறைவாழ்க்கையால் அவன் புரிந்துகொள்ளப் போவதெல்லாம் எப்படி அவன் பிடிபட்டான் என்பதைத்தான். அடுத்த தடவை அதே தவறை அவன் மறுபடியும் செய்யாமல் பார்த்துக்கொள்வான்.

எனவேதான் ஒருவன் ஒருதடவை சிறைக்குப் போய் விட்டால் பின் அதற்கு பழக்கப்பட்டு விடுகிறான். மறுபடியும் மறுபடியும் வருகிறான். பின் சிறையே அவனது வீடாகிறது. அவன் ஒரு சிறைப்பறவை ஆகிறான். தான் கற்றதை நடைமுறைப்படுத்தவே வெளியில் போகிறான். மீண்டும் வீட்டுப்பாடம் படிக்கவே சிறைக்குத் திரும்புகிறான். சிறையிலேயே அவனது வீட்டுப்பாடம்.

காலத்தை வீணாக்கத் தேவையில்லை என்கிறார் ஸ்கின்னர். அவனுக்கு மின் அதிர்ச்சி மட்டும் கொடுங்கள்; 2-3 வாரங்களில் அவனை "திருத்தி" விடலாம் என்கிறார். அதன்பின் ஒருபோதும் அவன் திருட நினைக்கவும் மாட்டான். திருடுவது என்ற நினைப்பு வந்தால் கூட அவனுக்கு உடல் நடுங்கி விழுந்துவிடுவான். வெறும் நினைப்பேகூட அவனுக்கு பதற்றம் உண்டாக்கிவிடப் போதுமானது... அந்த மின் அதிர்ச்சிகள் அனைத்தையும் அவன் நினைவில் வைத்திருப்பான்.

மனித குலத்திடம் இருக்கும் ஒவ்வொரு தீமையையும் மின் அதிர்ச்சி மூலமோ அதைப்போன்ற தண்டனை முறைகள் மூலமோ நிறுத்திவிட முடியும் என்பதை அவர் முன்வைக்கிறார். எல்லா நற்குணங்களையும், பரிசுகள்- அழகான பரிசுகள்- அளிப்பதன் மூலம் நிறுவிட முடியும் என்கிறார்.

உதாரணமாக, உங்கள் தலைக்குள் வெவ்வேறு அனுபவங் களுக்கு வெவ்வேறு மையங்கள் இருப்பதாகக் கண்டுபிடித்திருக் கிறார்கள். இன்ப மையம் ஒன்று உள்ளது. நீங்கள் காமத்தில்

ஈடுபடும்போது அதிலிருந்து நீங்கள் பெறும் இன்பத்துக்கும் உங்கள் இனப்பெருக்க உறுப்புகளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அது உங்கள் தலைக்குள் நிகழ்கிறது. இனப்பெருக்க உறுப்புகள், ஒரு நிகழ்முறையைத் தூண்டிவிட மட்டுமே செய்கின்றன. உண்மையில் உங்கள் தலைக்குள் உங்கள் மூளையில் தான் இன்பம் ஏற்படுகிறது.

இங்கே ஸ்கின்னர், அவ்வளவு நீளமான காதல் பழக்கம்- ஒரு பெண்ணிடம் அல்லது ஆணிடம் அபத்தமாக உளறிக் கொட்டுவது- பின் திருமணத்தில் பிணைக்கப்படுவது- பின் ஏற்படும் ஆயிரத்தொரு தொல்லைகள் யாவும் தேவையில்லை என்கிறார். எளிய முறைகள் சாத்தியம் என்கிறார். உங்கள் சட்டைப்பைக்குள். ஒரு சிறு பெட்டியை வைத்துக்கொண்டால் போதும். அது உங்களின் தலைக்குள் இருக்கும் இன்ப மையத்துடன் இணைக்கப்பட்டிருக்கும். ஆனால் மின்கம்பித் தொடர்பு இருக்காது. கம்பியற்ற இணைப்பு இருக்கும். எனவே உங்கள் தலையில் இருந்து மின்கம்பிகள் கிளம்பி வெளிவந்திருப்பதை மற்றவர்கள் காண்பார்களோ என்னும் கவலை இல்லை. அதேபோல் உங்கள் பைக்குள் என்ன வைத்திருக்கிறீர்கள் என்பதை ஒவ்வொருவரும் அறிந்தே இருப்பார்! பைக்குள் ஒரு சிறிய பெட்டி போதும். அதன் பொத்தானை நீங்கள் அமுக்கினால் போதும்; திடீரென பெரும் கலவி இன்பம் உண்டாகும்! உங்கள் வாயெல்லாம் பல்லாகும்!

மக்களின் நற்குணங்களுக்கு- நற்செயல்களுக்கு சன்மானம் அளிக்க இந்த இன்ப மையத்தைத் தூண்டினாலே போதும். அவர்கள் அச்செயல்களைச் செய்தபடியே இருப்பார்கள் என்கிறார் ஸ்கின்னர்.

உதாரணமாக நீங்கள் கோயிலுக்குப் போகிற போதெல்லாம் திடீரென உங்களுக்கு பெரும் கலவி இன்பம் உண்டானால் இயல்பாகவே அங்கு நீங்கள் அடிக்கடி போகத் தொடங்கி விடுவீர்கள்! உண்மையைச் சொன்னால் கோயிலைவிட்டு வெளியே வரவே மாட்டீர்கள்! வெளியே வந்து வேறெதையும் செய்யும்படி உங்களைக் கழுத்தைப் பிடித்துத்தள்ள வேண்டி இருக்கும்!

ஸ்கின்னர் ஒரு எலியை வைத்துச் சோதனை செய்து வந்தார். எலியின் இன்ப மையத்தை ஒரு சிறு பெட்டியுடன் இணைத்து அதன் பொத்தானை அமுக்குவதற்கு எலிக்குப் பயிற்சி தந்தார். எலி என்ன செய்தது என்பதை அறிந்தால் நீங்கள் அதிர்ச்சி அடைவீர்கள்! ஆறாயிரம் தடவை அது பொத்தானை அமுக்கியது. அப்படியே செத்து விழும்வரை அமுக்கியபடியே இருந்தது! வேறு எல்லாவற்றையும் அது மறந்துவிட்டது. உண்ண மறந்துவிட்டது. குடிக்க மறந்து

விட்டது. எல்லாவற்றையும் மறந்து விட்டது. அமுக்கிக்கொண்டே இருந்தது. ஆறாயிரம் தடவைகள்! பாவம் அது! அவ்வளவு இன்பத்தை அதனால் தாங்க முடியவில்லை! செத்து விழுந்தது. ஆனால் பரவசத்தோடு செத்தது!

மனிதருக்கும் இதைச் செய்ய முடியும். இது செய்யப்படவே போகிறது. ஏனென்றால் இந்த யோசனை எளியது; மிகவும் எளியது. அதற்கான செய்முறையும் சுலபமானது. அரசாங்கங்கள் இதைப் பயன்படுத்தவே செய்யும். ஏனெனில் சில காரியங்களைச் செய்யாதிருக்கும் படியும் வேறு சில காரியங்களைச் செய்யும்படியும் மனிதர்களைக் கட்டுப்படுத்துவது இதில் எளிது. அதன்பின் எல்லோரும் மகாத்மாக்களாக இருப்பார்கள். பாவாத்மாவாக யாரும் இருக்க மாட்டார்கள். ஆனால் பாவியோ புனிதரோ- அவர்கள் இயந்திரங்களாகவே இருப்பார்கள் அவர்களின் சொந்த விருப்பத் தேர்வு எதுவும் இராது.

கடைசியாக தனித்தனி சிறுபெட்டிகள் கூட தேவையில் லாதபடி செய்துவிடலாம். ஒவ்வொரு நாட்டின் தலைநகரிலும் புது தில்லியில். வாஷிங்டனில், லண்டனில்- பிரதமரோ அதிபரோ கையில் பொத்தானை வைத்திருக்கிறார். அவ்வப்போது அவர் பொத்தானை அமுக்குகிறார். நாடு முழுவதும் கலவி இன்பத்தில் திளைக்கிறது! பின் ஒவ்வொருவரும் கீழ்ப்படிதலாக இருப்பார். எவரும் எந்த கட்டளைகளையும் மீறமாட்டார். அவற்றுக்கு எதிராகப் போகமாட்டார். அவ்வாறே ஒரு பொத்தானை அமுக்குவதன்மூலம் நாடு முழுவதையும் தண்டிக்க முடியும். ஏனென்றால் மூளையில் இன்பமையம் ஒன்று இருப்பதைப் போலவே துன்ப மையம் ஒன்றும் இருக்கிறது. அதைத் தூண்டினால் போதும் நீங்கள் சொல்லமுடியாத நரகவேதனையை அனுபவிப்பீர்கள்.

ஆனால் இது மனித குலத்துக்குச் சுதந்திரத்தைக் கொண்டுவரப் போவதில்லை. எல்லா, சுதந்திரத்தையும் சுதந்திரத்துக்கான எல்லா வாய்ப்பையும் நாசமாக்குவதாகவே இது இருக்கும். இது தடுத்து நிறுத்தப்பட வேண்டும்.

ஆனி ஹல்ப்பா, ஏற்புகள் பழைய- அநாகரிக முறையில் திரும்பத்திரும்பச் செய்யப்பட்டாலும் அல்லது அதி நவீன அறிவியல்- தொழில்நுட்ப முறையில் செய்யப்பட்டாலும் எல்லாம் ஒன்றுதான். எல்லாத் தளைகளில் இருந்தும் மனிதர் முழுமையாக விடுபடுவது அவசியம். முழுமையான மறுப்பு மூலமாக மட்டுமே அது சாத்தியம். தூய உணர்வு மட்டுமே மிச்சம் விடப்பட்டு மற்ற

யாவும் மறுக்கப்பட வேண்டும். அப்போது கவனிப்பவர் மட்டுமே மீதமாகிறார்- கவனிப்பதற்கு ஒன்றுமில்லை. பார்ப்பவர் மட்டுமே மீதமாகிறார். பார்ப்பதற்கு ஒன்றுமில்லை. அனுபவிப்பவர் மட்டுமே மீதமாகிறார். அனுபவிப்பதற்கு ஒன்றுமில்லை.

இதைத்தான் கிழக்கில் நாங்கள் 'சாட்சி நிலை' என்கிறோம். அதுவே கடந்த நிலையும் ஆகும். எல்லாத் தளைகளில் இருந்தும் கடந்த நிலை உடலில் இருந்தும் மனதில் இருந்தும், உடலும் மனமும் உங்கள் மேல் சுமத்தும் அனைத்து வரம்புகளில் இருந்தும் கடந்த நிலை. நிர்வாணம் சாத்தியமே. முற்றான விடுதலை சாத்தியமே- ஆனால் முற்றான மறுப்பின் மூலமாக மட்டுமே அது சாத்தியம்.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**கருணை என்றால் என்ன?**

**ஆனந்த் ஷாமா.**

வெறி (பேஷன்) என்றால் என்ன என்பதை நாம் அறிவோம். எனவே கருணை (கம்பேஷன்) என்றால் என்னவாக இருக்கும் என்பதைப் புரிந்துகொள்வது அவ்வளவு கடினமல்ல. வெறி என்பது ஒரு உயிரியல் காச்சல்நிலை- சூடானது. உணர்வற்ற உயிரியல் ஆற்றல்களாலேயே பெரும்பாலும் நீ ஆட்கொள்ளப்பட்டிருக்கிறாய். எனவே உனக்கு நீ எசமானனாக இல்லை. வெறும் அடிமையாகவே இருக்கிறாய்.

கருணை என்றால், உயிரியலை நீ கடந்துவிட்டாய் என்று பொருள். இனி நீ அடிமை அல்ல. எசமானன் ஆகிவிட்டாய். அதன்பின் நீ உணர்வுடன் செயல்படுகிறாய். உணர்வற்ற முறையில் வெளி விஷயங்களால் தூண்டப்படுவதோ இயக்கப்படுவதோ இனி இல்லை. உன் ஆற்றல்களைக் கொண்டு என்ன செய்ய விரும்புகிறாய் என்பதை நீயே தீர்மானிப்பவனாக இருக்கிறாய். நீ முற்றிலும் விடுபட்டிருக்கிறாய். அந்நிலையில் வெறியாகிய அதே ஆற்றலே கருணையாக நிலைமாற்றம் பெறுகிறது.

வெறி என்றால் காமம். கருணை என்றால் காதல்- அன்பு வெறி என்றால் ஆசை. கருணை என்றால் ஆசையின்மை. வெறி என்றால் பொருள் குவித்தல். கருணை என்றாலோ பகிர்ந்து பயன்படுத்தல் வெறி. பிறரை ஒரு சாதனமாகப் பயன்படுத்த விரும்புகிறது. கருணை. மற்றவரை அவராகவே வைத்து மதிக்கிறது. வெறி, மண்ணோடு சேற்றோடு கட்டுண்ட நிலையில் உங்களை வைக்கிறது- ஒருபோதும்

நீங்கள் செந்தாமரையாக ஆவதில்லை. கருணையோ உங்களை ஒரு தாமரையாக மலர்விக்கிறது. ஆசைகள், பொருள்பற்று, கோபம் என்னும் சேற்றுலகத்திலிருந்து நீங்கள் ஒரு செந்தாமரையாய் மேலெழத் தொடங்குகிறீர்கள். கருணை உங்கள் ஆற்றல்களின் பண்புமாற்றமாய் இருக்கிறது.

சாதாரணமாக நீங்கள் சிதறி சின்னாபின்னப்பட்டு இருக்கிறீர்கள். உங்களின் ஆற்றலில் கொஞ்சத்தை உங்கள் கோபம் உறிஞ்சிக் கொள்கிறது. கொஞ்ச ஆற்றலை உங்கள் பொருள்பற்று உறிஞ்சிக் கொள்கிறது. கொஞ்ச ஆற்றலை உங்கள் காமம் உறிஞ்சிக் கொள்கிறது. இப்படியே தொடர்கிறது. ஏராளமான ஆசைகள் உங்களைச் சூழ்ந்துள்ளன. எனவே கடைசியில் உங்களுக்குள் ஆற்றல் ஏதும் மிஞ்சுவதில்லை. நீங்கள் உள்ளீடின்றிக் காலியாக எஞ்சுகிறீர்கள்.

இப்போது வில்லியம் பிளேக் கூறுவதை நினைத்துப் பாருங்கள். அதில் பெரியநுட்பம் இருக்கிறது. "ஆற்றலே ஆனந்தம்" என்கிறார் அவர். உங்களிடமோ ஆற்றல் ஏதும் மிச்சமில்லை. உங்கள் ஆற்றல் அனைத்தும் உறிஞ்சப்பட்டு கழிந்தபடி இருக்கிறது. இந்த ஆற்றல்கள் எல்லாம் வீணடிக்கப்படாதபோது உங்களின் உள்சாகரத்தை-உங்களின் உள்ளிருக்கும் ஜீவனை அவை நிரப்பத் தொடங்குகின்றன. நீங்கள் நிறைவானவர் ஆகிறீர்கள். உங்களில் ஒரு பெரும் களிப்பு எழுகிறது. நீங்கள் நிரம்பி வழியத் தொடங்கும்போது நீங்கள் ஒரு புத்தராகி இருக்கிறீர்கள்; வற்றாத ஊற்றைக் கண்டடைந்திருக்கிறீர்கள்.

கருணை என்பது ஒரு அடிப்படையான சொல். ஆனால் தியானத்துக்குள் ஆழமாகப் போனால் மட்டுமே அதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். தியானமே, வெறியைப் பரிவாக நிலையாற்றும் அடிப்படை ஆகும். நீங்கள் இன்னும் அதிக உணர்வுள்ளவர்களாக ஆதல் வேண்டும். இப்போது நீங்கள் உணர்வின்றி இருக்கிறீர்கள். உங்களைப் பற்றி நீங்கள் என்ன நினைத்துக் கொண்டாலும் நீங்கள் உணர்வில்லாமலே இருக்கிறீர்கள்.

ஒரு பெண் ஒரு அலுவலகத்தில் வேலைக்குச் சேரப் போகிறாள். அவளுக்கு வேலை தர இருக்கிறவர். அவள் எவ்வளவு சம்பளம் எதிர்பார்க்கிறாள் என கேட்கிறார்.

"வாரம் 20 டாலர்" என்கிறாள்.

"20 டாலரா? சந்தோசத்துடன் தரலாம்" என்கிறார்.

"சந்தோசத்துடன் என்றால் 30 டாலர்" என்கிறாள்.

நீங்கள் என்ன செய்கிறீர்கள். என்ன சொல்கிறீர்கள். என்ன நினைக்கிறீர்கள் என்பதை நீங்களே கவனியுங்கள். ஆச்சரியப்பட்டுப் போவீர்கள். மதுபானம் எதுவும் அருந்தாமலே, போதைப் பொருள் எதுவும் எடுக்காமலே நீங்கள் குழம்பித்தான் இருக்கிறீர்கள்.

ஓ- ப்ரையனின் மனைவி, முந்திய இரவு நடந்த விருந்தில் தன் கணவன் குடித்துவிட்டு நடந்துகொண்ட முறைக்காக அவனைத் திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தாள்.

"அந்தமாதிரி கூத்தும் கும்மாளமும் அடித்ததின் மூலம் (அந்த கூட்டத்தில்) உன்னை நீயே பரிகாசத்துக்குரியவனாக ஆக்கிக் கொண்டாய் என்பது மட்டும் நிச்சயம்" என அவள் அடித்துக் கூறினாள்.

"நான் கலாட்டாவும் செய்யவில்லை. ஒன்றும் செய்யவில்லை" என்று தன்னை நியாயப்படுத்தினான். ஓ-பிரையன். "அங்கிருந்த வேறெந்த மனிதரையும் போலத்தான் நானும் மிகவும் நே... ராக நடந்தேன்.... அந்த மனிதர்கள் எல்லோரும்தான் வரிசையாய் என் கைகளுக்குள் வந்து விழ ஆரம்பித்தார்கள்!"

உனக்கும் உன் மனைவிக்கும் நீ செய்து வந்திருப்பது என்ன என்பதைச் சற்றே பார். உன்னை நீ என்னவாக ஆக்கியிருக்கிறாய்? இதனால் என்ன ஆதாயம் அடைந்திருக்கிறாய்? என்ன அர்த்தத்தைக் கண்டிருக்கிறாய்? என்ன முக்கியத்துவத்தை அனுபவித்திருக்கிறாய்? இப்படிப்பட்ட தர்மசங்கடமான கேள்விகளை மக்கள் கேட்டுக் கொள்வதில்லை. ஏனென்றால் உடனடியாக அவர்கள் மிகவும் மனம் நொந்து போகிறார்கள். ஆனால் இத்தகைய கேள்விகளைக் கேட்கவே வேண்டும். இந்தக் கேள்விகளைக் கேட்காதவரை நீங்கள் மாறப்போவதில்லை.

குடிபெயர்ந்து வந்துள்ள ஒரு அயர்லாந்துக்காரன் ஒரு விற்பனை இயந்திரத்திடம் போனான். அதற்குள் ஒரு நாணயத்தைச் செலுத்தினான். "காப்பி, இரண்டு பங்கு பால், சர்க்கரை" என்று குறிப்பிட்டிருந்த பொத்தானை அமுக்கினான். ஒரு கோப்பையும் வரவில்லை. பின் இரண்டு குழாய்கள் இயங்கின. ஒன்றிலிருந்து காப்பி வந்தது. மற்றதில் இருந்து பால் வெளிப்பட்டது. கோப்பை இருக்க வேண்டிய இடத்துக்கு நேராக இரண்டும் குறித்த அளவு கொட்டியதும் இயந்திரம் நின்றுவிட்டது.

"ஆகா, இதுதான் உண்மையான தானியங்கி!" என்று வியந்தான் ஐரிஷ்காரன், "இது உங்களுக்காக தானே குடித்தும் விடுகிறதே!"

மனிதர் ஒரு இயந்திரம் போலவே வாழ்ந்து கொண்டு போகிறார். நன்றாகவே திறமையாகவே இயங்குகிறார். உண்மையில், எந்த அளவுக்கு இயந்திரமாகிறீர்களோ அந்த அளவுக்குச் செம்மையானவராக மதிக்கிறது. ஏனெனில் இது இயந்திரங்களின் சமுதாயம். இங்கு விழிப்படைவது- உஷாராக இருப்பது- உணர்வுடன் இருப்பது என்பது ஆபத்தானது? இது ஒரு குருட்டுச் சமுதாயம். இங்கு பார்வை பெற்றிருப்பது அபாயத்தை வரவழைத்துக் கொள்வதாகும்.

ஆனால் உணர்வை உருக்காதவரை அழகை ஒருநாளும் நீங்கள் அறியப்போவதில்லை. உங்கள்மேல் கடவுள் பொழியும் அருளை ஒருபோதும் நீங்கள் உணரப் போவதில்லை. வளர்ச்சி பெற உங்களுக்குத் தரப்பட்டிருக்கும் மாபெரும் வாய்ப்பை ஒருபோதும் நீங்கள் புரியப் போவதில்லை. ஒளிரும் சிகரங்களாக இருக்க வேண்டிய நீங்கள் வெறும் கருத்துளைகளாகவே இருப்பீர்கள்!

"ச்சே! இன்று காலையில் நீதிமன்றத்தில் எனக்குக் கிடைத்தது சரியான மூக்கறுப்பு" என்றான் போலரிஸ்.

"சுரங்கப் பாதையில் நான் கண்ட எவளோ ஒரு பொம்பளையைக் கற்பழிக்க முயன்ற குற்றத்துக்காக நீதிபதி எனக்கு 500 டாலர் அபராதம் விதித்தார். பின் அவள் முகத்தை நிமிர்ந்து பார்த்த பின், நான் அப்போது குடித்திருந்ததாக கூறி பத்து டாலர் கூடுதல் அபராதம் விதித்துவிட்டார்!"

குறைந்தபட்சம், நீங்கள் விழிப்புடன் இல்லை என்னும் ஒரு விஷயத்தில் நீங்கள் விழிப்பாயிருந்தால்கூட அது ஒரு சிறந்த துவக்கம்தான்.

ஒரு குண்டு ஐரிஷ்காரன் சுரங்கப்பாதையில் தான் எதிர்ப்பட்ட குடும்பப்பாங்கான பெண்ணிடம், "அடேங்கப்பா, இன்னைக்கி ராத்திரி நீ ரொம்பவுமே அழகாயிருக்கிற போ" என்றான்.

"அப்படியா, ரொம்ப நன்றிங்க."

"ஆனா நான் சொன்னதை நீ பெருசா எடுத்துக்காத. இன்னைக்கு நான் போதையில் இருக்கேன்."

நீங்கள் போதையில் இருக்கிறீர்கள் என்னும் அந்த அளவுக்கு நீங்கள் விழிப்பாயிருந்தால்கூட நீங்கள் முற்றிலுமான போதையில் இல்லை என்றாகும்.

"உங்களுக்குத் தெரியவில்லை என்பதை நீங்கள் தெரிந்திருந்தால் அதுவே ஒரு அருமையான தொடக்கம்" என்கிறார் சாக்ரட்டீஸ்.

“அப்போது நீங்கள் அறிந்துகொள்ள வாய்ப்புள்ளது.” ‘நான் அறியாமையில் இருக்கிறேன்’ என்பதை உணர்ந்திருப்பதே உண்மையை- உங்களின் உண்மையை- உங்களின் சொந்த அந்தரங்கத்துக்குள் தேடும். துழாவும் சாத்தியத்தை உருவாக்குகிறது.

வெறியுணர்வின் இறுதியான நிலைமாற்றமே பரிவுணர்வு. நீங்கள் வெறியாகத்தான் இருக்கிறீர்கள். ஆனால் இப்போது இருக்கிற நிலையிலேயே நீங்கள் சரியாகத்தான் இருக்கிறீர்கள். என நீங்கள் நினைத்துக் கொண்டே போகிறீர்கள். உங்களை நீங்கள் தற்காத்தபடி இருக்கிறீர்கள். உங்கள் சொகுசை, எந்திரத் தனமான வாழ்க்கையைக் கலைக்கும் எதற்கும் நீங்கள் எதிராகப் போகிறீர்கள்.

இங்கு வருகைபுரிந்த ஒருவர் எனக்கு பின்வருமாறு எழுதியிருக்கிறார்: “உங்கள் மருந்து மிகவும் கசப்பாகத் தோன்றுகிறது. நீங்கள் மனித மருத்துவரா அல்லது மிருக வைத்தியரா என்பதை உறுதி செய்து கொண்டீர்களா பகவான்?” என்னைச் சூழ்ந்திருக்கும் எல்லாக் குரங்குகளையும் கழுதைகளையும் அமெரிக்கர்களையும் பார்க்கும்போது நானும் வியக்கிறேன்- நான் மிருகவைத்தியனாகத் தான் இருக்கவேண்டும்.

மருந்து கசப்பானதுதான் அதை உங்கள் தொண்டைக்குள் குத்தி இறங்குவது கடினமானதுதான்.

ஒரு கதை கேள்விப்பட்டேன்.

முல்லா நசுருதீன் ஒரு கால்நடை மருத்துவரிடம் போனார். “என் குதிரை ரொம்பவும் சோம்பேறியாகி விட்டது. அதுக்கு ஏதாவது செய்தாக வேண்டும். அது ஓடமாட்டேன்கிறது. அது நடக்கக்கூட மாட்டேங்கிறது. பின் ஓடுவதைப் பற்றி என்ன சொல்ல இருக்கிறது? எனவே உண்மையிலேயே சக்திவாய்ந்த ஒரு மருந்தைக் கொடுங்கள்” என்றார்.

மருத்துவர் சொன்னார். “எங்களிடம் அதற்கான மருந்து இருக்கிறது. ஆனால் அது மிகவும் கசப்பானது. குதிரை அதை எடுக்காமல் போகலாம். எனவே ஒரு உத்தியைக் கையாள வேண்டி உள்ளது. இந்த மூங்கில் குழாயை எடுத்துக்கொள். அதில் மருந்தை- இந்தப் பொடியை- நிரப்பு.” பொடியைக் கொடுத்தார். “குழாயின் ஒரு முனையை குதிரையின் வாய்க்குள் வை. மறு முனையை உன் வாயில் வைத்துக்கொள். பின் மருந்து குதிரையின் தொண்டைக்குள் இறங்கும் படியாக ஊதிவிடு.”

கடைசிக் கட்டத்துக்கு முன்புவரை எல்லாமே சொன்னபடி நடந்தது.... பின், குதிரை முதலில் ஊதிவிட்டது! 80 வயதான நசுருதீன், தன் தோட்டத்தின் வேலியைத் தாண்டிக் குதித்து மிகவும் வேகமாக ஓடினார். எந்த ஒலிம்பிக் ஓட்டக்காரரும் அவருடன் போட்டிபோட முடியாத அளவுக்கு படுவேகமாக ஓடினார்.

அவர் மனைவி கால்நடை மருத்துவரிடம் விரைந்தாள். "உடனடியாக எனக்கு அதைப்போல் இரண்டு மடங்கு மருந்தைக் கொடுங்கள். ஏனெனில் அவர் தப்பி ஓடிவிட்டார். அவரை நான் பிடிக்க வேண்டும்."

உங்களைப் பார்க்கையில் நான் ஒரு கால்நடை மருத்துவர் என்றே சொல்ல வேண்டும். ஆனால் நான் ஊதுவதற்குள் நீங்கள் ஊதிவிடாத படிக்கு எல்லா முன் எச்சரிக்கைகளையும் எடுத்துக் கொள்கிறேன் நான்!

மருந்து கசப்பானதுதான், காரணம்: முதலாவதாக, உங்களுக்கு எதுவும் தெரியாது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது. இதை ஏற்பது கசப்பாகத்தான் இருக்கும். இரண்டாவது விஷயம் நீங்கள் ஒரு இயந்திரமாகத்தான் இருக்கிறீர்கள். இதுவும் ஏற்பதற்கு மிகவும் கசப்பானதே. மூன்றாவது விஷயம். நீங்கள் சேற்றுக்குள்தான் சேறாகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். இருண்ட குழிகளுக்குள் ஊர்ந்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால் சூரியனை நோக்கி வானத்தில் பறக்கும் உள்ளாற்றல் உள்ளவர்கள் நீங்கள். இப்படிச்சொன்னால் அதை ஏற்பது உங்களுக்குக் கடினமாக இருக்கிறது. நீங்கள் தாலாட்டுகளையே விரும்புகிறீர்கள். நீங்கள் ஆழமாகத் தூங்கும்படியாக, அவற்றில் அருமையான கனவுகளைக் காணும்படியாக நான் உங்களுக்கு அழகான தாலாட்டுப் பாடல்களைப் பாட வேண்டுமென விரும்புகிறீர்கள்.

என்னிடம் நீங்கள் வரும்போது நீங்கள் விழிப்படைந்து கொள்வதற்காக வருவதில்லை. அழகான, இனிய கனவுகளைக் காண்பதற்காகவே வருகிறீர்கள். இங்கு வருவதில் உங்களின் நோக்கம் அது. நான் இங்கு இருப்பதன் நோக்கம் அதுவல்ல. இங்கு வந்து சேர்ந்ததுமே நீங்கள் பிடிக்கப்பட்டு விடுகிறீர்கள். பின் மெதுமெது வாக நான் உங்களின் கனவுகளை அகற்றத் தொடங்குகிறேன். மெதுமெதுவாக உங்களின் கற்பனைகளை அழித்துக்கொண்டு போகிறேன். உங்களின் மாயைகள் கைவிடப்பட்டதும், உங்களின் கனவுகள் தகர்க்கப்பட்டதும், ஒரு மாபெரும் விழிப்பு உங்களுக்கு

காத்திருக்கிறது. அந்த மாபெரும் விழிப்பு உங்களை ஒரு புத்தர் ஆக்குகிறது.

புத்தராக இருக்கும்போதே, புத்தரான பிறகே, கருணை என்றால் என்ன என்பது உங்களுக்கு அனுபவமாகும். அது ஒரு குளுமையான அன்பு, குளிர்ந்து விறைத்ததல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். மாறாக குளிர்ச்சி பொருந்திய அன்பு. முழு இருத்தலுடனும் உங்கள் மகிழ்ச்சியைப் பங்கிட்டுக் கொள்வதாகும் அது. முழு உலகத்துக்கும் உங்களுக்குமே நீங்கள் ஒரு ஆசீர்வாதமாக இருப்பீர்கள். அதுதான் கருணைக் கண்ணோட்டம் உணர்ச்சி வேகம்-வெறி என்பது அசிங்கமானது. கருணையோ அழகானது. வெறி ஒரு சாபம். கருணையோ ஒரு வரம்.

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**உங்களுக்கு 20 கேள்விகள் எழுதி எல்லாவற்றையும் கிழித்து விட்டேன். நான் கூற விரும்புவது எல்லாம், "ஓஷோ அவர்களே, நானும் இங்கு இருக்கிறேன்" என்பதையும், சொற்பொழிவில் என் பெயரை நீங்கள், குறிப்பிடக் கேட்க வேண்டும் என்பதையும்தான் எனப் புரிந்து கொண்டேன்.**

தேவமோகன் அவர்களே, எப்படி இருக்கீங்க?

OOO

# 3

முதல் கேள்வி:

ஓஷோ,

“மனத்தைக் கடந்து செல்லுங்கள். அதன் தொண தொணப்புக்கு காது கொடுக்காதீர்கள். அதை ஒழுங்குபடுத்தி அதை ஒரு பணியாளாக ஆக்குங்கள்— அதன் அடிமையாக இருக்காதீர்கள்” என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் மனம் எப்போது ஒழுங்குபட்ட நிலையில் இருக்கிறது என்றும் அறிந்து கொள்வது எவ்வாறு?

மேலும், அன்று இரவு நான் சந்நியாசம் ஏற்றபோது, உங்களிடம் நான் மாட்டிக்கொள்ளக்கூடாது என்றீர்கள். ஆனால் இந்தக் குதிரை ஏற்கெனவே தப்பி ஓடிப்போன பிறகுதான் நீங்கள் கொட்டகையின் கதவை இழுத்து மூடிக்கொண்டு இருக்கிறீர்கள் என்பதை உங்களுக்கு நான் சொல்லியாக வேண்டும்.

பிரேம் லிசா.

வேறுபாடு மிகப் பெரியது- அதைக் கவனிக்காது விடுவதற்குச் சாத்தியமே இல்லை. உன் மனதுடன் போரிடுவதன் மூலமாகத் தான் ஒடுக்குமுறை உண்டாகிறது. கவனமாக, விழிப்பாக, உஷாராக இருப்பதன் மூலமாகத்தான் ஒழுங்கு உண்டாகிறது. ஒழுங்கில் சண்டை உண்டாவதில்லை. ஒழுங்கில் கண்டனம், மதிப்பீடு, தீர்ப்பு வழங்குவது என்பவை இல்லை. மனதை ஒருவர் வெறுமனே அமைதியாகப் பார்க்கிறார். மொத்தப் போக்குவரத்தையும் வெறுமனே பார்த்துக்கொண்டிருக்கிறார். இது சரி- அது தவறு. இதைச் செய்யலாம்- அதைச் செய்யக்கூடாது என்று சொல்லிக்

கொண்டிருப்பதில்லை. சாலையின் ஓரத்தில் நின்றபடி அதில் போய்வரும் மனிதர்களைக் கவனிப்பது போன்றதே இது. சாலையில் பாவிகள்- புண்ணியர்கள், அழகானவர்கள்- அசிங்கமானவர்கள், நல்லவர்கள்- கெட்டவர்கள் யார் வந்தாலும் போனாலும் அது குறித்து நீங்கள் அலட்டிக் கொள்வதில்லை. அதற்கும் உங்களுக்கும் வந்த சம்பந்தமும் இல்லை. நீங்கள் அதற்கு வெளியில் இருக்கிறீர்கள்.

சரியாக அதுதான் 'பரவசம்' என்னும் சொல்லின் பொருளாகும். பரவசம் என்றால் மனத்துக்குப் புறம்பே இருத்தல் என்று பொருள். நீங்கள் வெறுமனே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். வானத்தில் மேகங்கள் போவதையோ ஆற்றில் தண்ணீர் போவதையோ பார்ப்பதுபோல் விருப்புவெறுப்பின்றி பற்றற்று பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். ஏதாவது ஒன்றுடன் ஒட்டிக்கொள்ளவோ எதையாவது ஒன்றை உங்களிடமிருந்து கழட்டிவிடவோ நீங்கள் முயலாதிருக்கிறீர்கள்.

அதுதான் தூய விழிப்புணர்வாகும். நீங்கள் ஒரு கண்ணாடியாக மட்டுமே இருக்கிறீர்கள். அவ்வாறு கண்ணாடியாக மாத்திரம் இருப்பதாலேயே அற்புதம் நிகழ்கிறது- ஒழுங்கு என்னும் அற்புதம் மெதுமெதுவாக போக்குவரத்து மறையத் தொடங்குகிறது. மென்மேலும் குறைவான எண்ணங்களே சாலையில் போகின்றன. மென்மேலும் குறைவான சித்திரங்களே திரையில் தோன்றின. நினைவுகள், மனக்கண் பிம்பங்கள் குறைந்துகொண்டே போகின்றன. இடைவெளிகள் தோன்ற ஆரம்பிக்கின்றன.

ஒரு தாய் தன் குழந்தையிடம் கூறினாள், "பள்ளிக் கூடத்துக்குப் போகும் வழியில்மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஏனென்றால் போக்குவரத்து அதிகமாக இருக்கும் நேரத்தில் சாலையைக் கடப்பது ஆபத்தானது."

அதற்குக் குழந்தை கூறினாள். "கவலைப்படாதீங்க. எப்போதும் நான் சாலையின் ஓரத்தில் காத்திருக்கிறேன். இடைவெளி வரும்போது சாலையைக் கடந்துவிடுகிறேன்."

"இடைவெளி வரும்போது...." உங்கள் மனதை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது நீங்கள் திகைத்துப் போவீர்கள்: இடைவெளிகள் வருகின்றன. அப்போது பார்ப்பதற்கு ஒன்றும் இருப்பதில்லை. பார்ப்பவர் ஏகாந்தமாய் இருக்கிறார். அவர் ஏகாந்தமாய் இருப்பதாலேயே அது பார்ப்பவராக இல்லாது போகிறது. பார்ப்பதற்கு ஏதும் இல்லாததால் அதை நீங்கள்

பார்ப்பவர் என்று அழைக்கவும் முடியாது. கண்ணாடி இருக்கிறது. ஆனால் அது எதையும் பிரதிபலிக்கிறதில்லை. பார்க்கப்படுவது பார்ப்பவர் என்னும் இருமை அங்கு இல்லை. இத்தகைய இடைவெளியில்தான் ஒழுங்கு உதிக்கிறது.

"ஒழுங்கு" என்னும் சொல்லும் அழகானதே. அவ்வப்போது சொற்களின் வேர்களுக்குள் போய்ப்பார்ப்பது மிகுந்த முக்கியத்துவம் உடையதாக இருக்கிறது. "ஒழுங்கு" என்னும் சொல் ஒழுகுதல் கற்றல் என்னும் பொருளுடைய வேர்ச்சொல்லில் இருந்து வருகிறது. ஒரு இடைவெளியை நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கிற போதே கற்றல் நிகழ்கிறது. எதைப்பற்றிக் கற்பது? தன்னைப்பற்றி. ஏனெனில், அங்கு வேறு ஒன்றும் இல்லை. நீங்கள் விழிப்புணர்வு மயமானவர்கள். நீங்கள் என்பது பொங்கித் ததும்பும் உங்கள் ஜீவனே. ஆக, நீங்கள் நீங்களாக இருக்கும்- பொங்கிவழியும்- வேறெதனாலும் கவனம் சிதறடிக்கப்படாதிருக்கும்- எதனாலும் நிலையின் திரியாதிருக்கும்- இந்த அனுபவமே மாபெரும் கல்வியாகும். உண்மையை அறிவதற்கான மாபெரும் வாய்ப்பாகும். இதுவே ஒழுங்கு ஆகும்.

ஒழுங்கு (டிசிப்ளின்) என்னும் சொல் வந்த அதே வேரில் இருந்தே சீடர் (டிசைப்பிள்) என்னும் சொல்லும் வருகிறது. சீடர் என்பதற்கு அர்த்தம். ஆசானின் பிரசன்னத்தில் முற்றிலும் அமைதியாக இருக்க முடியக்கூடியவர் என்பதே ஆகும். ஆசானுடன் இருக்கும்போது தன்னுள் இடைவெளி நிகழ அனுமதிக்கிறவரே சீடர் ஆவார். ஆசானுடன் நீங்கள் இணைப்புற்றிருப்பது மவுனத்தின் மூலமாக மட்டுமே. உங்கள் மனதில் ஒன்றுமில்லாத போதே நீங்கள் இளைப்பாறுகிறீர்கள். அப்போது குருவுக்கும் சீடருக்கும் இடையில் ஏதோ ஒன்று வெளிப்பட்டு நிகழ்கிறது. குருவிடமிருந்து சீடரின் இதயத்துக்குள் ஒரு சுடர் பாய்கிறது. சீடரின் ஒளி கொளுத்தப் பட்டிராத விளக்கு திடீரென ஒளிகொளுத்தப்பட்டதாகிறது. எங்கும் ஆனந்தமும் பிரகாசமும் அன்பு மயமுகமாக இருக்கிறது. ஒரு மாபெரும் நர்த்தனம் எழுகிறது.

லிசா, ஒழுக்கம் என்பதை ஒருபோதும் ஒடுக்கம் எனத் தவறாகப் புரிந்துகொள்ள முடியாது. ஒடுக்குதல்கள் முற்றிலும் வேறானவை. ஒடுக்குதலில், ஒன்றை தவறு என ஏற்கெனவே நீங்கள் தீர்மானித்து விடுகிறீர்கள். தர்க்கரீதியான முன்கூட்டிய முடிவுகளை நீங்கள் எடுத்து விடுகிறீர்கள். உண்மையில், உங்களுக்கு எது சரி எது தவறு என்பதை. மற்றவர்களே தீர்மானித்திருப்பார்கள். இப்போது அந்த

மற்றவர்களின் கருத்துகளையும் அபிப்பிராயங்களையும் உங்கள் மீது திணிக்கமட்டுமே நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள். உங்கள் இயற்கைத் தன்மையை நீங்கள் ஒடுக்கவேண்டி இருக்கும். தவறானதை- அல்லது தவறானது என்று உங்களுக்குச் சொல்லப் பட்டிருப்பதை- உணர்வற்ற ஆழ்மனத்துக்குள் நீங்கள் தள்ளிவிட வேண்டி இருக்கும். ஒரு போராட்டமும் பெருத்த குழப்பநிலையும் இருக்கும். உங்களுக்குள் அமைதியைக் கொண்டுவருவதற்குப் பதில், ஒடுக்கும் முறை ஒவ்வொன்றும் உங்களுக்குள் அதிகப்படியான கிளர்ச்சியையே கொண்டு வருகிறது.

எனவேதான் மதவாதிகள் என்பவர்கள் அதிக சலனத்தோடும் அதிக கவலையோடும் இருக்கிறார்கள். நீங்கள் இந்த உலகைப் பற்றி மட்டுமே கவலைப்படுகிறீர்கள். அவர்களோ அடுத்த உலகைப் பற்றியும் கவலைப்படுகிறார்கள். இந்த வாழ்க்கையைப் பற்றி மட்டுமே நீங்கள் கவலைப்படுகிறீர்கள். அவர்களோ பலப்பல கடந்தகால வாழ்க்கைகளையும் வருங்கால வாழ்க்கைகளையும் பற்றிச் சேர்த்துக் கவலைப்படுகிறார்கள்! மதவாதிகள் எனப்படுவோரின் கவலைகளுடன் ஒப்பிட்டால் உங்கள் கவலைகள் ஒன்றுமே இல்லை. அவர்களோ ஒரு எரிமலையின் வாயில் உட்கார்ந்திருக்கிறார்கள். ஏனெனில் அமுக்கப்பட்டதெல்லாம் உள்ளுக்குள் இருக்கவே செய்கிறது. அது ஒழிந்து போகவில்லை. ஒடுக்கம் ஒருபோதும் எதையும் ஒழிப்பதில்லை. அதன் வாயின்மேல் நீங்கள் ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்- அவ்வளவுதான். ஆனால் ஒரு நாளைக்கு 24 மணி நேரமும் நீங்கள் அதன்மீது குந்தி இருக்க முடியாது என்பதுதான் இதிலுள்ள அபாயம். உங்களுக்கும் வரம்புகள் உள்ளன. நீங்கள் களைத்துப் போகிறீர்கள். உங்களுக்குக் கொஞ்சம் ஓய்வு தேவை. அவ்வாறு நீங்கள் களைத்துப் போகும் போதெல்லாம்- உங்களுக்கு ஓய்வு தேவைப்படும் போதெல்லாம்- ஒடுக்கிவைத்தவை உங்களுக்குள் இருந்து எகிறத் தொடங்குகின்றன.

எனவே உங்களின் ஆகப்பெரிய புனிதர்களும்; தாம் ஒடுக்கிவைத்த யாவற்றையும் குறித்தே சதா சிந்தித்துக்கொண்டும் கற்பனை செய்து கொண்டும் கனவுகண்டுகொண்டும் தான் இருக்கிறார்கள்.

மகாத்மா காந்தி தன் சுயசரிதையில் பின்வருமாறு எழுதி இருக்கிறார்: "என் பகல் பொழுதைப் பொறுததவரை என் காம உணர்வை என்னால் கட்டுப்படுத்தி வைக்க முடிந்திருக்கிறது. ஆனால் இரவிலோ என் கனவுகளில் அது வன்மத்துடன் வெளிப்படுகிறது."

இப்படி அவர் எழுதியபோது அவருக்கு வயது 70.... வாழ்நாள் முழுவதும் ஒடுக்கிவைத்ததின் பலன்...!

ஆம், பகலில் எப்படியோ உங்களால் சமாளித்துவிட முடிகிறது. ஆனால் பகலில் நீங்கள் அமுக்கிவைத்தவை அனைத்தும் இரவில் கனவுகளில் வந்து பழிதீர்த்துக்கொள்ளவே போகின்றன. அது உங்களுக்குள் இருந்து திரும்பவும் வெளிப்படும்; வெடித்தெழும்.

எனவேதான் காலங்காலமாக உங்கள் புனிதர்கள் தூங்குவதற்கு அவ்வளவுதூரம் அஞ்சி இருக்கிறார்கள். அவர்கள் தம் தூக்கத்தின் அளவை, 5 மணி நேரம்- 4 மணி நேரம்-3 மணிநேரம்- 2 மணிநேரம் என குறுக்கிக்கொண்டே போகிறார்கள். ஆயின் எந்த அளவுக்கு குறைவாகத் தூங்குவார்களோ அந்த அளவுக்கு அதிக ஆபத்து. ஏனென்றால் அவர்களின் அமுக்கங்கள் அனைத்தும் அந்த 2 மணி நேரத்திலேயே, மிகவும் அடர்த்தியான- செறிவான வடிவில் வெளிப்பட வேண்டி இருந்தது. அவை நாலாப்புறமிருந்தும் வந்து குவிக்கின்றன. ஆனால் மக்கள் அவர்களை வணங்குகிறார்கள்! ஒரு தவசி எவ்வளவுக்கு குறைவாகத் தூங்குகிறாரோ அவ்வளவுக்கு மக்கள் அவரை வணங்குகிறார்கள். "அவர் எவ்வளவு பெரிய தியாகம் செய்திருக்கிறார் பார்த்தீர்களா! எவ்வளவு பெரியதவம் செய்துகொண்டிருக்கிறார் அவர்! -தூக்கத்தைக்கூட துறந்துவிட்டார்! அல்லது ஓரிரு மணிநேரமே தூங்குகிறார்" என்கிறார்கள்.

உண்மை என்னவென்றால் தூங்குவதற்கு அவர் பயப்படுகிறார். அந்த பயம் எங்கிருந்து வருகிறது? விழித்திருக்கும்போது உங்களை நீங்கள் கட்டுப்படுத்த முடியும். ஆனால் தூங்கும்போது உங்களைக் கட்டுப்படுத்த யார் இருக்கிறார்கள்? இதிலிருந்துதான் பயம் வருகிறது. கட்டுப்படுத்துபவர் தூங்குகிறார். இளகிய நிலையில் இருக்கிறார். எல்லா அமுக்கங்களின் மீதும் அவரால் உட்கார்ந்திருக்க முடியாது. அப்போது அவை தம்மை உறுதியாகத் தெரிவிக்கின்றன.

எனவே லிசா, எதனுடனாவது நீ சண்டைபிடித்துக் கொண்டிருந்தால் அது ஒழுங்கு ஆகாது. நான் சண்டையைக் கற்பிக்கவில்லை. விழிப்புணர்வையே கற்பிக்கிறேன். இருட்டுடன் சண்டைபிடிப்பதில் பயனில்லை; முற்றிலும் பயனில்லை. அது மடத்தனமானது. வெளிச்சத்தைக் கொண்டு வா. ஏன் இருட்டுடன் சண்டை பிடிக்கிறாய்? இருட்டுடன் சண்டை பிடிப்பதன்மூலம் எப்போதாவது வென்றுவிடலாம் என்று நீ எப்படி நம்ப முடியும்? வெளிச்சத்தை எடுத்துவா- இருட்டை அங்கு காணமுடியாது.

பொருள்பற்று, கோபம், பொறாமை, காமம், பேராசை, அகங்காரம் முதலிய பல இருட்டுகளால் நீங்கள் சூழப்பட்டிருக்கிறீர்கள். இவை இருட்டின் பல அடுக்குகள். இந்த அடுக்குகளுடன் எல்லாம் நீங்கள் சண்டைபோடத் தொடங்கினால் நீங்கள் வெல்லப்போவது இல்லை. ஏனெனில் இருட்டுடன் நேரடியாக மோத வழி இல்லை. முதலாவதாக இருள் என்ற ஒன்று இல்லை. ஒளியின்மையே அது. எனவே இருட்டை ஏதாவது செய்ய நீங்கள் விரும்பினால் அதை நேரடியாகச் செய்ய முயலாதீர்கள். வெளிச்சத்தை வைத்து ஏதாவது செய்யுங்கள். இருளை நீங்கள் விரும்பினால் ஒளியை அகற்றுங்கள். இருளை நீங்கள் விரும்பவில்லை என்றால் ஒளியை ஏற்றுங்கள். ஆனால் எப்போதும் ஒளியை வைத்துச் செய்யுங்கள். இருளை மறந்துவிடுங்கள். ஒளி இருந்தால் இருள் அங்கு இராது. ஒளி இல்லை என்றால் அங்கு இருள் இருப்பதை நீங்கள் தவிர்க்க முடியாது. உங்கள் கண்களை நீங்கள் மூடிக்கொள்ள முடியும்; அதை நீங்கள் மறக்க முயற்சிசெய்ய முடியும். வேறெதிலாவது நீங்கள் ஈடுபட்டிருக்க முடியும். அதனிடமிருந்து உங்கள் மனதை வெகு தொலைவுக்கு விலக்கிச்செல்ல முடியும். ஆனால் என்னசெய்தாலும் அது அங்கேயே அப்படியேதான் இருக்கிறது. உங்கள் செயல்களில் எண்ணங்களில், நடத்தையில் அது தன்னை வெளிப்படுத்தும், திரும்பத் திரும்ப மேலுக்கு வரும். அதை நீங்கள் மறைக்க முடியாது. அதை மறைப்பது அசாத்தியம். உங்களின் ஜீவனின் உண்மைநிலை- அது என்னவாக இருந்தாலும்- வெளிப்பட்டே தீரும்.

லிசா, விழிப்பாயிரு, இது சரி- அது தப்பு என நான் சொல்லவில்லை. விழிப்பாயிரு என்று மட்டுமே சொல்கிறேன்; அல்லது விழிப்பே சரி- விழிப்பின்மையே தப்பு என்றுமட்டுமே சொல்கிறேன். நீங்கள் விழிப்பாயிருக்கும்போது, விஷயங்கள் தாமாக மாற ஆரம்பிக்கும். பின், மனம் ஒரு சேவகனாகச் செயல்படும். அது ஒரு இயந்திரம் அழகான இயந்திரம். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இயற்கை சமைத்துள்ள மிக நுணுக்கமான இயந்திரம். அதற்கு இணையாக மனிதர் இன்னும் எதையும் உருவாக்கவில்லை. மிகச்சிறந்த கணிப்பொறியும் அந்தளவு திறனுடையதாக இன்னும் ஆகவில்லை.

தனி ஒரு மனிதரின் மனம், உலகில் உள்ள மொத்த நூலகங்களையும் தன்னுள் அடக்க முடியும். அது ஏறக்குறைய எல்லையற்றது. அதன் திறன் பெரிது. அதன் பயன் மாபெரிது.

ஆனால் அது உங்களின் பணியாளாக இருக்க வேண்டும். ஆண்டையாக ஆகக்கூடாது. ஒரு பணியாள் என்னும் வகையில் அது அழகானது. ஒரு ஆண்டை என்னும் வகையில் அது ஆபத்தானது.

உணர்வுநிலையே உங்களின் எசமானாக இருக்கட்டும். மனம் உங்களின் ஊழியனாக இருக்கட்டும். விழிப்பின் மூலமாக இது நிகழ்கிறது. மனத்தைக் கட்டுப்படுத்தும்படி உங்களிடம் நான் சொல்லவில்லை. ஏனெனில் கட்டுப்பாடு எல்லாம் ஒடுக்குதலே- அமுக்குதலே. சண்டை பிடிக்கும்படி உங்களிடம் நான் சொல்லவில்லை. ஏனெனில் எல்லாச் சண்டையும், ஆற்றலை வீணே விரயம் செய்வதே. உங்களின் சொந்த ஊழியனோடேயே நீங்கள் சண்டை பிடிக்கிறீர்கள்- உங்களின் ஆற்றலையே நீங்கள் வீணடிக்கிறீர்கள். உங்களின் ஊழியனுடன் நீங்கள் சண்டைபோட அவசியமில்லை. "நான்தான் எசமான்" என சொல்லி விடுங்கள்- அதுவே போதும் நீங்கள் எசமானாக இருந்தாலே போதுமானது- பணியாள் பணிந்துவிடுகிறான். எசமான் வந்துவிட்டார் என்பதை உடனடியாக ஊழியன் உணர்ந்து கொள்கிறான். எசமான் எப்படி வருகிறார்? நீங்கள் விழிப்புற்ற அக்கணமே எசமான பிரவேசிக்கிறார்.

"மனத்தைக் கடந்து செல்லுங்கள். அதன் தொண தொணப்புக்கு காது கொடுக்காதீர்கள். அதை ஒழுங்குபடுத்தி ஒரு பணியாளாக ஆக்குங்கள். அதன் அடிமையாக இருக்காதீர்கள்" என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் மனம் எப்போது ஒழுங்குபட்ட நிலையில் இருக்கிறது என்றும் எப்போது எடுக்கப்பட்ட நிலையில் இருக்கிறது என்றும் அறிந்து கொள்வது எவ்வாறு?" என்று கேட்டிருக்கிறாய் லிசா.

அது மிகவும் எளிது. இந்த இரண்டையும் எவரும் ஒருபோதும் குழப்பமுடியாது. தவறாக மாற்றிக் கருத முடியாது. அவை இரண்டும் வெவ்வேறாக உள்ளன. ஒளியையும் இருளையும்போல், அன்பையும் வெறுப்பையும் போல், பூக்களையும் முட்களையும்போல், அமுதத்தையும் ஆலகால விஷத்தையும்போல் வெவ்வேறாக உள்ளன. அவை ஒன்றிலிருந்து மற்றது முற்றிலும் வேறாக உள்ளன. ஆனால் அவற்றைக் குறித்து நீ எண்ணினால் நீ குழம்பிப் போவாய். எண்ணுவதன்மூலம் அவற்றை உன்னால் பாகுபடுத்திக் காண முடியாது. அவற்றைக் குறித்து எண்ணாதே. சோதித்துப்பார். அனுபவித்தறி. அப்போது பாகுபாடு தெள்ளத் தெளிவாகும்.

மேலும் நீ கூறுகிறாய்: ஓஷோ.... அன்று இரவு நான் சந்நியாசம் ஏற்றபோது, உங்களிடம் நான் மாட்டிக்கொள்ளக் கூடாது என்றீர்கள். ஆனால் இந்தக் குதிரை தப்பி ஓடிப்போன பிறகுதான் நீங்கள் கொட்டகையின் கதவை இழுதது மூடிக்கொண்டு இருக்கிறீர்கள் என்பதை உங்களுக்கு நான் சொல்லியாக வேண்டும்.

லிசா, நான் குதிரை மருத்துவன் மட்டுமல்ல. குதிரை நேசனும் கூட. நல்ல குதிரையைக் கண்டுவிட்டால் உடனடியாக அதன்மேல் காதல் கொள்கிறேன் நான். கண்டதும் காதல் என்பதை நம்புபவன் நான். ஏனெனில் அதில் நேரம் மிச்சமாகிறது. லிசா, உன்னை நான் கண்ட அக்கணமே, அன்பும் ஆனந்தமும், நம்பிக்கையும் சரணாகதியும் உன் கண்களில் கண்ணீராக வெளிப்படக்கண்டேன். இந்த ஆரஞ்சு அங்கிக் கொள்ளைக் கூட்டத்தில் உன்னையும் ஒரு உறுப்பினராக என் அடியாழத்தின் அன்றே நான் ஏற்றுக்கொண்டேன்!

மேலும், நீ முற்றிலுமாக மாட்டிவிட்டாய். இனி தப்பி ஓட வழியே இல்லை என்பதை நன்கு அறிந்த பின்பே 'என்னிடம் மாட்டிக் கொள்ளாதிரு' என்கிறேன்! எல்லாரிடமும் இப்படி நான் சொல்வதில்லை. ஏற்கெனவே உள்ளே வந்துவிட்டவர்களிடம் மட்டுமே அதை நான் கூறுகிறேன். இப்போது அதை அவர்கள் உணராதிருக்கலாம்; பிற்பாடு உணர்ந்துகொள்ளலாம்.

நீ மாட்டி இருக்கிறாய்- என்மேல் மயங்கி இருக்கிறாய் என்பதை நான் பார்த்துவிட்டேன். இனி திரும்பிப் போவதென்பது இல்லை. இனி இதுதான் உன் முழு உலகமாக இருக்கப் போகிறது. நானே உன் வீடு. இனி நீ தப்பி ஓடிப்போக சாத்தியமே இல்லை, நீ கரைந்து கலந்து கொண்டிருக்கிறாய் என்பதைக் குறித்து எனக்கு முற்றிலுமாக- திட்டவட்டமாக- உறுதியாகத் தெரிந்த பிறகு மட்டுமே இதை நான் சொல்கிறேன். அதன் பிறகு மட்டுமே என் தாராளத்தைக் காட்டிக் கொள்வதற்காக "என்னிடம் மாட்டிக் கொள்ளாதே என்று சொல்லிவைக்கிறேன். லிசா முடிந்தாள் என நான் அறிகிறபோதே. அப்படி நான் துணிந்து சொல்ல முடியும்!

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**புத்த தர்மத்தின்— அதாவது புத்தரின் சமயத்தின்— சாரம் என்ன?**

**மவுனா,**

**யோக்கா கூறுகிறார்:**

> புத்தரின் ஸென்னை நீ அடைந்துவிட்டால் அக்கணமே நீ எல்லாவற்றையும் அடைந்துவிட்டாய்.
>
> உன் கனவில் பல பாதைகள் உள்ளன. ஆனால் நீ விழித்தெழுந்ததும் அவை ஒன்றுமில்லாமல் போகின்றன–
>
> அவை பிழையானதோ, மகிழ்ச்சியானதோ, இழப்பானதோ, ஆதாயமானதோ எதுவுமில்லாமல் போகின்றன.
>
> உன் ஜீவனின் சாரத்தில் எதையும் தேடிக் கண்டுபிடிக்க முடியாதே உன் கண்ணாடியில் படிந்திருக்கும் தூசியை நீ துடைத்து பலகாலம் ஆகிறது. அதன் பிரகாசத்தைச் செவ்வனே அறிய இதுவே தருணம்.
>
> எண்ணாதிருக்க முடிகிறவருக்கு எல்லாம் அவருடையதே.
>
> புத்தராவதற்காக நீ தருமம் செய்தால்
>
> என்றைக்கு நீ வெற்றிபெறுவாய்? ஒரு தடவைகூட– ஆயிரம் தடவைகளில் ஒரு தடவைகூட– நீ வெற்றிபெற மாட்டாய்.
>
> உங்கள் நில் இயல்புப் பிடிகாரம் குடியுங்கள், உண்ணுங்கள் பிரபஞ்சத்தின் அனைத்துப் பொருள்களும் நிலையற்றவை.
>
> எனவே இருத்தல் முழுவதும் சூனியமாயிருக்கிறது.
>
> இதுவே புத்தரின் முழுப் புரிதலுமாகும்.

இதுதான் புத்த தருமத்தின்- புத்தரின் சமயச் சாரமாகும். முதலாவது: நீங்கள் அறிவு ரீதியாகப் புரிந்து கொள்ள முடிகிற தத்துவம் அல்ல இது. இதை அறிய நீங்களே ஒரு புத்தராக ஆகவேண்டி உள்ளது.எனவே யோக்கா கூறுகிறார்:

புத்தரின் ஸென்னை- புத்த நிலையை- நீ அடைந்துவிட்டால் அக்கணமே எல்லாவற்றையும் நீ அடைந்துவிட்டாய்.

விழிப்புணர்வின் அறுதி நிலையை நீங்கள் அடைகையில் எதுவுமே விட்டுப் போவதில்லை. எல்லாமே நிறைவேறி இருக்கிறது. நீங்கள் முற்றிலும் திறந்திருக்கிறீர்கள். முதல் முதலாக, வாழ்க்கை ஒரு மாபெரும் முக்கியத்துவம் உடையதாக, ஒரு மாபெரும் நடனமாக, ஒரு கொண்டாட்டமாக அறியப்படுகிறது. முதன்முதலாக வாழ்க்கை முற்றிலும் செம்மையானதாக அறியப் படுகிறது. பொருள்கள். அவை இருப்பதில் இருந்து வேறுவிதமாக இருக்கவேண்டும் என்னும் எவ்வித புகாரோ, ஆசையோ நாட்டமோ இருக்கிறதில்லை. ஒருவர் வெறுமனே திருப்தியுடன் முழு நிறைவுடன் இருக்கிறார். எல்லா ஆசைகளும் மறைகிறது.

புத்த நிலை என்பது என்ன? யோக்கா கூறும் இந்த "புத்தரின் ஸென்" என்பது என்ன? அது மனமின்மை (அ-மனம்) என்னும் நிலையே ஆகும். எனவேதான் யோக்கா கூறுகிறார்.

எண்ணாதிருக்க முடிகிறவருக்கு எல்லாம் அவருடையதே.

வாழ்வில் அனுபவிக்க வேண்டிய மாபெரும் நிலை. எண்ணமற்ற (மன) நிலையே ஆகும். வாழ்வின் மாபெரும் கலை, மனமற்று இருக்க முடிதலே ஆகும். ஒரு கண நேரமே அது நிகழ்ந் தாலும்- கண்ணிமைக்கும் பொழுதளவுக்கே அது சாத்தியப் பட்டாலும்- நீங்கள் அம்மாபெரும் நிலையை அடைந்துவிட்டீர்கள். திரும்பி வராத இடத்தைக் கடந்து விட்டீர்கள்.

அது என்ன என- அதைக்குறித்து சிந்தித்துக்கொண்டே போகாதீர்கள். சிந்திப்பதன்மூலம் அதை நீங்கள் தவறவிட்டபடியே போவீர்கள். எண்ணுவதுதான். புத்த தருமத்தை தவறவிடுவதற்கு மிக நிச்சயமான வழியாகும். எண்ணாதிருப்பதே அதை அடையும் வழியாகும். அதுவே உங்களின் இயற்கை நிலையாக இருக்கிறது!

விளங்காத மாபெரும் புதிர்களையோ, மறைவான ரகசியங்களையோ, சிலருக்கு மட்டுமே வெளிப்படுத்தக் கூடிய ஞானத்தையோ பற்றி புத்தர் பேசுவதில்லை. புராணிகத்தில் அவருக்கு நம்பிக்கை இல்லை. இயற்கைமீறிய சக்திகள் அவரிடம் இல்லை. அவர் மிக எளிய- சாதாரண மனிதர் சாதாரண இருத்தலை அவர் நம்புகிறார். உங்கள் அன்றாட வாழ்வே எல்லாம் என்கிறார். அதை நீங்கள் ஆனந்தமாக- அமைதியாக- புரிதலுடன்- கவனிப்புடன் வாழ முடிந்தால், செய்வதற்கு வேறு ஒன்றுமில்லை. உங்கள் சாதாரண வாழ்வே அசாதாரண வாழ்வாகத் தொடங்குகிறது.

உங்கள் நிச இயல்புப் பிரகாரம் குடியுங்கள் உண்ணுங்கள் என்கிறார் யோக்கா.

இதை மட்டும் நினைவில் கொள்ளுங்கள். உங்களின் இயற்கைத் தன்மையைத் திரிக்காதீர்கள். உங்களின் இயற்கைத் தன்மைக்கு உண்மையாக நடந்துகொள்ளுங்கள். உங்களின் சொந்த இயற்கைத் தன்மையைக் கவனித்து அதைப் பின்பற்றுங்கள். வேறு எதையும் எவரையும் பின்பற்றாதீர்கள்.

"வழியில் உங்களை எதிர்ப்படுவது நானாக இருந்தால்கூட உடனடியாக என்னைக் கொன்று போடுங்கள்" என்கிறார் புத்தர். என்னைப் பின்பற்றாதீர்கள் என்கிறார். குறிப்பால் உணர்த்தப் படுகிறதை மட்டும் எடுத்துக்கொள்ளுங்கள். புரிந்துகொள்ள

முயலுங்கள். அந்த உணர்வை உட்கிரகித்துக் கொள்ளுங்கள். என் பிரசன்னத்தை உணருங்கள். பின் உங்கள் வழியில் போங்கள். உங்களின் சொந்த ஒளியின்படி- அது எவ்வளவு சிறிதாயினும் அதன்படி- வாழுங்கள். ஆனால் அது உங்களின் சொந்த ஒளியாயின், அதன்படி நீங்கள் வாழ்வீர்களாயின், அது வளர்ந்துகொண்டே செல்லும்.

"உனக்கு நீயே ஒளியாக இரு" என புத்தர் கூறுகிறார். இதுவே அவருடைய மாபெரும் நற்செய்தியாகும். முழு உலகத்திலும், முழு மனித வரலாற்றிலும், வேறெவரும் கௌதம புத்தரைப்போல் மற்றவர்களுக்கு இவ்வளவு மதிப்பை அளித்ததில்லை" உனக்கு நீயே ஒளியாவாய்."

விரல்கள் நிலவைச் சுட்டிக் காட்டுவதுபோல், வழியைச் சுட்டிக்காட்ட மட்டுமே செய்கிறார் புத்தர் நீங்களே. பயணப்பட்டாக வேண்டும். உங்களின் சொந்த இயல்புப்படி நீங்கள் அவ்வழியைப் பின்பற்ற வேண்டும். நீங்கள் அமைதியாக மவுனமாக இருக்க வேண்டும். அப்போதுதான் உங்களுக்குள் இருந்துவரும் அந்த மெலிதான குரலைக் கவனிக்க முடியும்- பின் அதைப் பின்பற்றவும் முடியும். அது எங்கே இட்டுச்சென்றாலும் நல்லதே. ஆழமான விசுவாசத்துடன் போங்கள். உங்களின் சொந்த (மன) சாட்சி சொல்வதைப் பின்பற்றுங்கள். தன்னியல்பாக இயற்கையாக, சாமாளியமாக இருங்கள். இதுதான் அசாதாரணமாக ஆகும் வழி. சாமானியமாக இருக்கும் அதேபோது விழிப்பாயும் இருந்தால், சாமானியம், புனிதம் ஆகிறது.

பிரபஞ்சத்தின் அனைத்துப் பொருள்களும் நிலையற்றலை...

எனவே கவலைப்படாதீர்கள். எல்லாமே நிலையற்றதுதான் இன்பம்- துன்பம், வறுமை- வளமை, வெற்றி- தோல்வி, பிறப்பு- இறப்பு, நட்பு-பகை எல்லாமே தற்காலிகம்தான். எல்லாமே ஒரு இயக்கத்தில் உள்ளன. எல்லாமே நிலையற்றது. எனவே வருத்தம் ஏன்? எல்லாமே மாறியபடி உள்ளது. எனவே எதிலும் ஒட்டாதீர்கள். ஒட்டுதல் துன்பத்தைக் கொணர்கிறது. பற்றுதல் உங்களின் புரிதலின் மையையே காட்டுகிறது. ஒன்றை நீங்கள் பற்றிக்கொண்டதும் அது நிலையாக இருக்கும் என்ற கருத்துடன் நீங்கள் வாழத் தொடங்குகிறீர்கள். ஆனால் எதுவுமே நிலையாக இருக்க முடியாது. அதற்கு ஒன்றும் செய்யவும் முடியாது. ஏனெனில் பொருள்களின் இயல்பே நிலையாமை என்பதுதான்.

வானவில்லைக் கைப்பிடிக்க நீங்கள் முயலுகிறீர்கள். அது அழகாயுள்ளது. ஆனால் அதை நீங்கள் கைப்பற்ற முடியாது. இந்தக் கணத்தில் அது இங்கு உள்ளது. அடுத்த கணத்தில் அது இல்லாது போய்விடும். எனவே எதனோடும் பிணைப்புற்றுக் கொள்ளாதீர்கள். ஏனெனில் எல்லாமே நிலையற்றது. மேலும் எதற்கும் ஆசைப்படாதீர்கள். ஏனெனில் அதை நீங்கள் அடைந்தாலும் பின் இழக்கவே போகிறீர்கள். அதை ஆசித்து அடையாவிட்டாலோ நிராசை அடைவீர்கள். அடைந்து பின் இழந்தாலும் நிராசையே அடைவீர்கள். எவ்வழியிலும் நீங்கள் அவலத்தில்தான் இருப்பீர்கள். அதனை நீங்கள் வருந்தி அழைக்கிறீர்கள். எனவே எதன்மீதும் பற்றுக் கொள்ளாதீர்கள். எதன்மீதும் தொற்றிக் கொள்ளாதீர்கள்.

எது வந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளுங்கள். அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். (இதை புத்தர் தடாகதம்- தலைமை- என்கிறார்). அதனூடாக அமைதியாய் வாழுங்கள். அதனால் அலைக்கழியாமல் வாழுங்கள். துன்பம் வரும் போய்விடும். இன்பம் வரும் போய்விடும். எல்லாமே போய்விடும். எதுவுமே தங்கி இராது. எனவே எதைக் குறித்தும் வருந்தத் தேவையில்லை.

எல்லா விதமான அனுபவங்களின் வழியாகவும் செல்லுங்கள். அப்போதுதான் உலகினூடாக ஒருவர் மாசின்றி மருவின்றி கடந்துசெல்ல முடியும் என்பதை அறிவீர்கள். அரண்மனைகளிலும் ஒட்டாது வாழ முடியும். அப்போது அவர் சந்நியாசி. குடிசையிலும் பற்றுக்கொண்டு வாழமுடியும். அப்போது அவர் சந்நியாசி அல்லர்.

எனவேதான் நான் உங்களிடம் உலகைத் துறங்கள் என்று சொல்லவில்லை. கவனமாக இருங்கள் என்றுமட்டுமே சொல்கிறேன். அதுவே புத்தரின் செய்தியின் சாரம்.

“ஆனால் புத்தர் உலகைத் துறந்தாரே, அவர் ஏன் துறந்தார்?” என்று மக்கள் என்னிடம் கேட்கிறார்கள். அவர் புத்தராக இல்லாதபோது துறந்தார். மற்ற யாரையும்போல் அஞ்ஞானியாக இருந்தபோது துறந்தார். அறியாமையால் துறந்தார்.

உண்மையை அடைந்து- சத்தியத்தை அனுபவித்து வீடு திரும்பியதும் அவர் மனைவி அவரிடம் ஒரே ஒரு கேள்வியை மட்டும் கேட்டாள்: “இதற்கு மட்டும் பதில் சொல்லுங்கள்: நீங்கள் எதைச் சாதித்திருந்தாலும்... நீங்கள் இப்போது பண்புமாற்றம் பெற்றுள்ள ஒரு பிரளபாக இருக்கிறீர்கள் என்பதை என்னால் காணமுடிகிறது. நீங்கள் ஒளிமயமாக விளங்குகிறீர்கள். முந்தி இருந்த அதே நிலையில்

இப்போது நீங்கள் இல்லை. பழையது போயேவிட்டது. நீங்கள் மீண்டும் புதிதாகப் பிறந்திருக்கிறீர்கள். அது எனக்குத் தெளிவாக தெரிகிறது- என்னைப் போன்ற பார்வையற்ற ஒருத்தியால்கூட அதைப் பார்க்க முடிகிறது. ஆகவே இந்த ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல்லுங்கள். நீங்கள் எதைச் சாதித்திருந்தாலும், அதை இங்கே என்னுடன் இந்த அரண்மனையில் வாழ்ந்தபடியே சாதித்திருக்க முடியாதா?" என்று அவள் கேட்டாள்.

அதற்கு புத்தர் மவுனம் சாதித்தார்: கீழே தரையைப் பார்த்தபடி இருந்தார்- என்கிறது கதை. மனைவி சொல்வது சரிதான். எனவேதான் அவர் வாயைத் திறக்கவில்லை.

எதையும் சொல்லாதிருப்பது, ஒத்துக்கொண்டதற்கு அடையாளம் என கிழக்கில் கருதப்படுகிறது. மௌனம் சம்மத லட்சணம். 'மௌனம் சம்மதத்துக்கு அறிகுறி', "ஆம்" என்று புத்தர் சொல்லியிருந்தால் தெரிவதைவிட அதிகமானவற்றை அது தெரிவிக்கிறது. அவரது மவுனம் நிறையப் பேசுகிறது. அது அதிக பொருள் பொதிந்ததாக உள்ளது.

"அவள் சொல்வது சரிதான்" என அவர் உடனடியாக உணர்ந்தார். தான் அடைந்தது எதுவாயினும் அதை எங்கிருந்த படியும் அடைந்திருக்க முடியும். காட்டுக்கு ஓடத் தேவையில்லை.

நீங்கள் எங்கும் போகத் தேவையில்லை. நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் புத்தத் தன்மையை- புத்த நிலையை- நீங்கள் நிறுவ முடியும். நீங்கள் விழிப்படைந்தவராக முடியும்.

மனத்திலிருந்து நழுவுதலே- வெளியேறுதலே சாரமான விஷயம். மனமே ஒரு உலகமாயிருக்கிறது. ஆசைகள்- பற்றுதல்கள்- ஏக்கங்கள்- எதிர்பார்ப்புகள் ஆகியவற்றால் நிரம்பியதே மனம். மனத்தில் இருந்து வெளியேறுங்கள்! உங்களுக்கும் மனத்துக்கும் இடையில் கொஞ்சம் இடைவெளியை உருவாக்குங்கள். காவலாளாக-மலை உச்சியில் நின்று கவனிக்கும் காவலாளாக ஆகுங்கள். நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். மனத்தை நீங்கள் கவனிக்க கவனிக்க அந்த இடைவெளி அதிகரித்தபடியே செல்கிறது. மனதை நீங்கள் கவனிக்கையில், கவனிப்பில் அதிகமதிகம் நீங்கள் உறுதிப்படுவீர்கள். உடனே மனம் மென்மேலும் விலகி விலகிச் செல்கிறது. ஒருநாள் அது நிகழ்கிறது. மனத்தின் சலசலப்பை உங்களால் கேட்க முடிவதில்லை. அது அங்கு இல்லை. அது அப்படியே முற்றிலும் மௌனமாகி இருக்கிறது. அந்த மோனத்தில்

உண்மை உங்கள்மீது இறங்குகிறது. அந்த மோனத்தில் நிங்கள் உங்களை எதிர்கொள்கிறீர்கள். உங்களின் மிகவும் உள்ளார்ந்த மையத்தைத் தொடுகிறீர்கள். அதுவே அகில பிரபஞ்சத்தின் உள்ளார்ந்த மையமும் ஆகும். அந்நிலையில் உங்கள் ஜீவன், அனைத்தின் ஜீவனுமாக இருக்கிறது.

மனங்களால், உடம்புகளால் நாம் தனித்தவர்கள்; உணர்வால் அல்ல. உணர்வில் நாம் சந்திக்கிறோம். உணர்வால் நாம் ஒன்று. அந்த உணர்வுக்குப் பெயர்தான் கடவுள். அந்தச் சந்திப்பில், அந்த ஒன்றிப்பில் எல்லா வேறுபாடுகளும் கரைகின்றன. அங்கு நாம் அதன்பிறகும் தனித்தனிப் பனிக்கட்டிகளாக இருப்பதில்லை. பிரபஞ்சத்துடன் கரைந்து மறைந்து விடுகிறோம். அதையே நிர்வாணம் என்கிறார் புத்தர். இந்தச் சொல் அழகானது. அதன் பொருள் அகங்காரத்தை நிறுத்துதல். அகங்காரம் நின்றதும் நீங்களே கடவுள், நீங்களே புத்தர், நீங்களே இயேசு. அகங்காரம் தான் உங்களுக்கு ஒரு வரம்பைக் கட்டுகிறது. அகங்காரம்தான் உங்களை ஒரு சிறைக்குள் குறுகிவாழும்படி வைக்கிறது. அகங்காரத்தைவிட்டு வெளியேறுங்கள்! யாரும் உங்களைத் தடுக்கவில்லை. நீங்களேதான் கட்டிப்பிடித்துக் கொண்டு விடுபடாதிருக்கிறீர்கள். உங்களின் சொந்தப் பற்றுதலே தடையாக இருக்கிறது. உங்களின் அடிமைச் சங்கிலிகளுடன் மிகவும் ஒன்றிணைந்து போய்விட்டிருக்கிறீர்கள். உங்கள் சிறை அறையிடம் மிகவும் அபிமானம் கொண்டுவிட்டிருக் கிறீர்கள். அதுவே உங்களின் வீடு என நினைக்கிறீர்கள். இல்லை; அதைவிட்டு வெளியே வாருங்கள்! விழித்தெழுங்கள்!

விழித்தெழுவதே புத்தராயிருப்பதாகும். யோக்கா கூறுவது சரியே. அவர் கூறுகிறார்:

புத்தரின் ஸென்னை- புத்த நிலையை- நீ அடைந்துவிட்டால் அக்கணமே நீ எல்லாவற்றையும் அடைந்துவிட்டாய்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மதங்களைப்பற்றி நீங்கள் பேசும்போது வழக்கமாக கிறித்தவர்கள், முகமதியர்கள், இந்துக்கள் பற்றியே குறிப்பிடு கிறீர்கள். யூதர்களைப்பற்றிக் குறிப்பிடுவதே இல்லை. இதற்கு ஏதாவது காரணம் இருக்கிறதா?**

**வீட் அதீத்.**

ஒரு காரணம் இருக்கிறது: இந்தியாவில் இருக்கும் ஒரே ஒரு யூதன் நான்தான்!

ஒருமுறை நான் ஒரு கடில்லாக் காரில் அழைத்துச் செல்லப்பட்டேன். அதன் உடைமையாளர் அதை விற்க நினைத்தார். நான் வாங்க விரும்பினேன். எல்லா ரகமான கார்களையும் நான் பயன்படுத்தி இருக்கிறேன்- கடில்லாக்கைத் தவிர. அது ஒரு அழகான கார். தனிச்சிறப்பாகத் தயாரிக்கப்பட்டது. அதை நான் விரும்பினேன்.

"என்ன சொல்கிறீர்கள்? எப்படி உணர்ந்தீர்கள்? (எப்படி இருந்தது)" என்று அவர் என்னிடம் கேட்டார்.

"ஒரு யூதனைப்போல் உணர்ந்தேன்" என்றேன். "இந்தக் காரை நான் வாங்க மாட்டேன். அது என் அடையாளத்தை வெளிக்காட்டி விடும். ஏற்கெனவே ஒரு மனிதனால் சமாளிக்க முடியக்கூடியதை விடவும் அதிகத் தொல்லைகளில் இருக்கிறேன். இப்போது என்னை ஒரு யூதன் என அறிவித்துக் கொள்வது இன்னுமதிகத் தொந்தரவை வருவிப்பதாகும். தொல்லையை வருவித்துக் கொள்வதில் யூதர்கள் நிபுணர்கள்!"

வயதான ஒரு யூதர் பல ஆண்டுகளாக கடவுளிடம் பிரார்த்தித்து வந்தார். ஆனால் ஒருபோதும் எதையும் கேட்பதில்லை. கடவுள் சலித்துப் போனார். ஏதாவது ஒன்றைக் கேட்டால் அதைக் கொடுத்துவிட்டுத் தலைமுழுகி விடலாம்! ஆனால் அவரோ எதையுமே கேட்கவில்லை. வெறுமனே செபித்துக்கொண்டே, செபித்துக்கொண்டே, செபித்துக்கொண்டே இருந்தார்.

எனவே ஒருநாள் கடவுள் கேட்டார். "இந்தா, உனக்கு என்ன வேண்டும்? உனக்கு என்னதான் வேண்டும் என்பதை ஏன் சொல்ல மாட்டேன்கிறாய்? அதை நிறைவேற்றித்தர நான் தயாராக இருக்கிறேன்."

கிழ யூதர் சொன்னார். "நாங்கள் உம்மால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்பது உண்மைதானா?"

"ஆமாம். உண்மைதான்" என்றார் கடவுள்.

"இனி தயவுசெய்து வேறு யாரையாவது தேர்ந்தெடுத்துக் கொள்ளும்" என்றார் யூதர். "மூவாயிரம் ஆண்டுகளாக உம்மால்தான் நாங்கள் எவ்வளவோ துன்பப்பட்டுவிட்டோம். போதும்போதும்! இனி நீர் வேறுயாரையாவது தேர்ந்தெடுத்துக்கொள்ளும்!"

வீட் அதீத், நீயும் ஒரு யூதனாகவே இருக்க வேண்டும். இல்லா விட்டால் ஏன் இந்தக் கேள்வி வருகிறது? யூதர்கள் எப்போதும், சாத்தியமான ஒவ்வொரு வகையிலும், யூதர்களைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள்.

யானை நண்பர்கள் கழகம்- நோய்வாய்ப்பட்ட, வயதான, ஆதரவற்ற யானைகளுக்கு உதவுவதற்காக உண்டாக்கப்பட்ட சங்கம். யானை என்றால் என்ன என்பதை பெரும்பாலானவர்கள் தெரிந்திருந்தாலும் அந்த பெரிய விலங்கைப்பற்றி எந்த சிரத்தைக்குரிய- திட்டவட்டமான ஆய்வு ஏதும் இதுவரை நடத்தப்பட்டதில்லை என அந்தக் கழகத்தினர் முடிவு செய்தார்கள். எனவே யானையைப்பற்றி எழுதப்படும் மிகச் சிறந்த நூலுக்கு ஆயிரம் டாலர் பரிசு என ஒரு போட்டியை அறிவித்தனர்.

ஒரு ஆங்கிலேயர் தன் நூலுக்குப் பின்வருமாறு தலைப்புத் தந்து தொடங்குகிறார், "யானையின் வரலாறும் புள்ளி விவரங்களும்".

ஒரு ஜெர்மானியர் மூன்று தொகுதிகளாக எழுதத் திட்டமிட்ட தன் நூலுக்கு பின்வருமாறு தலைப்புத் தருகிறார். "யானையின் உடலமைப்பும் உள் இயக்கமும்."

ஒரு பிரஞ்சுக்காரர் மெலிசாக 100 பக்க அளவில் ஒரு நூல் எழுதத் தொடங்கி அதற்குத் தலைப்பு வைக்கிறார. "யானையின் காதல் லீலைகள்."

ஒரு இத்தாலியர் 5 நிமிட நேரம் அந்த திட்டம்பற்றி தீவிரமாகப் பரிசீலிக்கிறார். பின் அதைக் கைவிட்டு நண்பர்களுடன் சேர்ந்து இத்தாலிய இடியாப்பம் தின்னப் போய்விடுகிறார்.

யூதரோ ஒரு காவியமே இயற்ற ஆரம்பிக்கிறார். தலைப்பு: "யானையும் யூதர் பிரச்சனைகளும்."

இப்போது, அதீத், இந்தக் கேள்வி ஏன் உன் மனதில் எழுகிறது? நான் யூதர்களைப் பற்றி அதிகம் பேசாததன் காரணம் இந்தியாவில் யூதர்கள் இல்லை. இந்துக்கள் இருக்கிறார்கள்; கிறித்தவர்கள் இருக்கிறார்கள்; முகமதியர்கள் இருக்கிறார்கள்; சமணர்கள் இருக்கிறார்கள்; பவுத்தர்கள் இருக்கிறார்கள். யூதர்கள் மட்டும் இல்லை. எனவே நானும் அவர்களைப் பற்றி அதிகம் குறிப்பிடுவதில்லை. ஆனாலும் யூதர்கள் இங்கு இல்லாமல் இல்லை. இந்தியா முழுவதிலும் ஆயிரக்கணக்கான யூதர்கள் ஒரே இடத்தில் இருக்கும் ஒரே இடம் இதுவாகத்தான் இருக்கவேண்டும்- ஆனால் அவர்கள் இப்போது யூதர்களாக இல்லை!

அதீத், இது உனக்குள் ஒரு எச்சமாக மிச்சமிருக்க வேண்டும். உன் பெயரின் பொருளை நீ அறிவாயா? வீட் அதீத் என்றால் கடந்த காலத்தையும் தாண்டிப் போவது என்று பொருள். யூதனாக இருந்ததன் போதை இன்னமும் உனக்குள் இறங்கவில்லை எனத் தோன்றுகிறது. ஆனால் இங்கு ஆயிரக்கணக்கில் யூதர்கள் இருப்பதால் அவர்களைப் பற்றிப் பேசாமல் இருப்பதே நல்லது. ஏனெனில் எல்லாவற்றுக்குமே வாக்குவாதம் செய்யும் மக்கள் அவர்கள்.

புனித பூமியைத் தரிசிக்கச் சென்ற ஒரு கிறித்தவன் ஒரு இஸ்ரேல்காரனிடம் உரையாடத் தொடங்கினான்.

"நீங்களும் அராபியரும் சமாதானமாக ஒன்றுசேர முடியவில்லை என்பதைக் கண்டு நான் உண்மையாகவே அதிர்ச்சியடைகிறேன்."

இஸ்ரேலியன் சொன்னான், "அப்பனே, யூதர்கள் மிகவும் வாக்குவாதம் செய்யும் மக்கள், இரண்டு யூதர்கள் சேர்ந்து ஒத்துப்போகும் ஒரே விஷயம். மூன்றாவதுயூதன் தருமத்துக்கு எவ்வளவு செலவிட வேண்டும் என்பதில் மட்டும்தான்."

அது உண்மைதான்.

மத்தியக் கிழக்கில் சமாதானம் பற்றிய பேச்சுவார்த்தைகளை மீண்டும் தொடங்க சதாத்தும் பெகினும் கடைசியில் ஒத்துவருமாறு செய்தார் ஜிம்மி.

பிற்பாடு சதாத் சொன்னார், "பகையை விட்டொழிப்பதில் நான் மகிழ்கிறேன். இனி வருங்காலத்தில் நீங்கள் எமக்குக் கிடைக்க வாழ்த்தும் யாவும் உமக்கும் கிடைக்க வாழ்த்துகிறேன்."

பெகின் பதிலளித்தார், "பாரும், மறுபடியும் (பகையை) தொடங்குகிறீர்!"

எனவேதான் அதீத், யூதர்களைப்பற்றி அதிகம் நான் குறிப்பிடவில்லை. அது ஆபத்தானது! ஆயிரக்கணக்கான யூதர்களால் சூழப்பட்டுள்ள நிலையில், அவர்களைப்பற்றி ஒன்றும் குறிப்பிடா திருப்பதே நல்லது!

மேலும் யூதம் ஒரு செத்த மதம்- இந்து மதத்தைப் போலவே உண்மையில் உலகில் இரண்டு மூல மதங்களே இருந்திருக்கின்றன. அவை இந்து மதமும் யூத மதமும் ஆகும். இரண்டும் செத்துவிட்டன. சமணமும் புத்தமும் இந்து மதத்தின் கிளைகள். ஆனால் வேர் செத்துவிட்டதால் கிளைகளும் செத்துவிட்டன. கிறித்தவமும்

இசுலாமும் யூத மதத்தின் கிளைகள். ஆனால் வேர் செத்துவிட்டதால் கிளைகளும் செத்துவிட்டன. இவை எல்லாம் இறந்த மதங்கள். இறந்த காலத்தைப்பற்றி நான் அதிகம் அக்கறை கொள்வதில்லை.

ஆம்- யூதத்தில் அழகான ஒன்றும் நிகழ்ந்திருக்கிறது. அதுதான் ஹசீதியம். அதைப்பற்றி நான் நிறையவே பேசி இருக்கிறேன். புத்த மரபில் ஸென் காரர்களை நான் நேசிப்பது போலவே மோயீசனின் மரபில் ஹசீதுகளை நான் நேசிக்கிறேன். அவ்வாறே முகமதின் மரபில் சூபிக்களைக் காதலிக்கிறேன். இந்த மூன்றும் இன்னும் ஒரு சிறு அளவிலாவது உயிரோடுள்ளன. ஏனென்றால் இவை மூன்றும் ஒருபோதும் நிறுவன மதமாக ஆகவில்லை. இவை எப்போதும் நிறுவன எதிர்ப்பானதாகவே இருந்து வந்துள்ளன. நிறுவன மதத்துக் கான மாற்றுகளாகவே அவை எப்போதும் இருந்து வந்துள்ளன. எப்போதும் அவை கலகத் தன்மையுடனேயே இருந்து வந்துள்ளன.

ஹசீதியத்தைப்பற்றிப் பேசல் தகும். யூதம் பற்றி அல்ல. ஹசீதியத்தைப்பற்றி நான் பேசி இருக்கிறேன். என் சொந்த அனுபவத்தைக் கொண்டு ஹசீதியத்தை அணுகியிருக்கிறேன். ஹசீதியத்தை நான் சமகாலப்படுத்தி இருக்கிறேன். அதை 20ஆம் நூற்றாண்டின் பகுதியாக்க முயற்சித்திருக்கிறேன். ஹசீதியமே யூதத்தின் சாரம், அதன் நறுமணம்.

மேலும் எனக்குள்ளும் ஹசீதுகளில் கொஞ்சம் இருக்கிறார்கள். எனவேதான் சில சமயங்களில் என்னை நான் யூதன் என அழைத்துக் கொள்கிறேன். ஹசீதுக்கள் வாழ்வைக் காதலிக்கிறார்கள். வாழ்வை ஆதரிக்கிறார்கள். துறவை அவர்கள் நம்புவதில்லை.களிகூறுவதையே அவர்கள் நம்புகிறார்கள். ஆடலை- பாடலை- கொண்டாட்டத்தை அவர்கள் நம்புகிறார்கள்- சரியாக என் அணுகுமுறையும் அதுதான்.

என் சமயம், ஸென்- சூபியம்- ஹசீதியம் மூன்றின் இணைவும் அத்துடன் கொஞ்சம் அதிகமும் ஆகும்.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**உண்மையில் தத்துவம் பேசுவது எனக்குப் பிடித்தமானது. இந்தமாதிரி இடத்தில் அந்தத் திறமையை வைத்துக் கொண்டு என்ன செய்வது?**

**தேவ அனுரதி.**

**அ**னாவசியமாக உன் ஆற்றலை வீணடிப்பதே தத்துவமாகும்.

அதே ஆற்றல் உன் தியானமாக ஆக முடியும். அதே ஆற்றல் உன் விழித்தெழுதலாக ஆக முடியும். தத்துவம் என்பது கனவு காண்பது போன்றது; அழகான கனவுகளை நீங்கள் காண முடியும். ஆனால் கனவு கனவுதான். கடவுளை நீங்கள் சிந்திக்க முடியும். ஆனால் கடவுளைச் சிந்திப்பது என்பது கடவுளை அறிவதாகாது. கடவுளைப்பற்றி அறிவதும் கடவுளை அறிவது ஆகாது. "பற்றி" என்றாலே சுற்றி எனப்பொருள். நீங்கள் சுற்றிச்சுற்றி வரமுடியும்.... நீங்கள் வட்டமடிக்க முடியும். ஒருபோதும் இலக்கை அடைய மாட்டீர்கள். ஏனெனில் மையமே இலக்கு. சுற்றுவட்டம் அல்ல.

தத்துவம் சுற்றுவட்டமானது. சுற்று ஓரத்தில் இருப்பது. அது உங்களை ஏமாற்ற முடியும். கோடிக்கணக்கான மக்களை அது ஏமாற்றி இருக்கிறது. ஏனென்றால் அது அன்பைப்பற்றி- கடவுளைப்பற்றி- தியானத்தைப் பற்றிக் கூடப் பேசுகிறது. ஒவ்வொன்றைப்பற்றியும் அது தத்துவம் பேசுகிறது.

ஆனால் தத்துவம் என்பதன் பொருள். உங்கள் மனமே இன்னும் உங்களின் ஆண்டையாக இருக்கிறது என்பதாகும். மனமே தத்துவம் பேசுகிறது. நீ மனசுக்கு அப்பால் போக வேண்டியுள்ளது அனுரதி- அது தத்துவத்தின் மூலமாக நடைபெற முடியாது; தியானத்தின் மூலமாக மட்டுமே நடைபெற முடியும்.

இப்போது தியானத்தைப் பற்றி நீ தத்துவம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டும்: அப்படி என்றால் என்ன, அதை வரையறுப்பது எப்படி... இப்படி... ஆயிரக்கணக்கான வரையறைகள் உள்ளன. வரையறைகளின் காட்டில் நீ காணாமல் போய்விட முடியும்.

உன் சிரமத்தை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. உனக்கு உரியதல்லாத இடத்தில் இருப்பதாக நீ உணரவே கூடும். ஏனெனில் இங்கு தத்துவம் தடை செய்யப்பட்டிருக்கிறது. நான் ஒரு தத்துவமற்ற சூழலை உருவாக்கிக் கொண்டிருக்கிறேன். இங்கு நடக்கும் முழு முயற்சியும் மனதுக்கு அப்பால் போக உனக்கு உதவுவதே ஆகும். அன்பைப்பற்றி நீ சிந்திக்க வேண்டும் என நான் விரும்பவில்லை; நீ அன்பாகவே இருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். கடவுளைப்பற்றி நீ சிந்திக்க வேண்டும் என நான் விரும்பவில்லை; கடவுளை நீ அறியவேண்டும். கடவுளாகவே நீ ஆக வேண்டும் என்றே விரும்புகிறேன்.

நீங்கள் தாகமாயிருக்கும்போது தண்ணீரைப்பற்றி எண்ணிக் கொண்டே போவதில் பொருள் என்ன? உங்கள் எண்ணத்தின்மூலம்

நீரில் $H_2O$ இருக்கிறது என நீங்கள் கண்டுபிடித்தாலும் அதனால் உங்கள் தாகம் தணியப் போவதில்லை. இதுதான் தத்துவம் என்பது- அதாவது $H_2O$ என்பது நீங்கள் தாகமாயிருக்கிறீர்கள். தத்துவமோ "தாகப்படாதீர்கள். தண்ணீர் என்பது வெறும் $H_2O$ தான். எனவே காகிதத்தில் $H_2O$ என்று எழுதி அதைத் தின்று விடுங்கள்" என்கிறது!

தத்துவர்கள் தாள்களைத் தின்றுகொண்டு இருப்பவர்கள். உபநிடதங்கள், வேதங்கள், குரான்கள், பைபிள்கள் என கத்தை கத்தையாக அவர்கள் விழுங்குகிறார்கள். அவர்களுக்கு அகோரக் காகிதப்பசி! காகிதம் தின்பவர்கள் நிறையப் பேராக இருப்பதால்தான் உலகில் இவ்வளவு காகிதப்பஞ்சம் உள்ளது. சரியான கிறுக்கர்கள்!

ஆம்- எப்போதாவது ஒரு தடவை ஒரு மாறுதலுக்காகக் கொஞ்சம் தத்துவம் என்பது நல்லதாகலாம்.

மல்லி வண்டு கார் ஓட்டக் கற்றுக் கொண்டிருந்தாள். அதற்குள் தனக்கு பிரமாதமாக கார் ஓட்ட வரும் என நினைத்தாள். எனவே கற்றுத் தருபவரை வரவேண்டாம் என்று சொல்லிவிட்டாள். அனுபவர் துணையோ ஓட்டுநர் உரிமமோ இல்லாமல் நெடுஞ்சாலையில் ஓட்டத் துணிந்திறங்கினார்.

பிராங்சில் எதற்கு நிழற்சாலையின் வழியாக, போகுமிடத்தை நிர்ணயிக்காமல் அவள் தடுமாறிப் போய்க் கொண்டிருந்தாள். அப்போது ஒரு பால்காரன் நன்றாக ஓடக்கூடிய ஒரு குதிரையை ஓட்டிக்கொண்டு மூலையில் திரும்பிக்கொண்டிருந்தான். திருமதி வண்டு ஏககாலத்தில் அநேக காரியங்களைச் செய்ய முயன்றாள். பிரேக்கைப் பிடித்தாள். மோதலைத் தவிர்க்க முயன்றாள். வெளிப்புறமாக வளைத்தாள். உள்புறமாக வளைத்தாள். இடது பக்கம் திருப்பினாள். வலது பக்கம் திருப்பினாள். வேகம் எடுத்தாள். வேகம் குறைத்தாள். இன்னும் என்னென்னவோ செய்தாள்.

அந்த "இன்னும் என்னென்னவோ" வில் பால்வண்டியின் பக்கவாட்டில் நேராகப் போய் இடித்ததும் நடுவீதியில் அது கவிழும்படிச் செய்ததும் குதிரையும் குதிரை ஓட்டியும் அந்த இடிபாட்டுக்குள் சிக்கிக்கொண்டதும் அடங்கும்.

அந்தப் பெண்மணி குழம்பிவிட்டாள். காரின் கட்டுப் பாட்டையும் விட்டுவிட்டாள். வேகமாக ஓட்டிச் சென்று, ஓடித்து பார்வையில் இருந்து மறைந்தாள். பின், சக்கரங்கள் கிறீச்சிட சந்திப்பில் திரும்பினாள். ஒரு நிமிடம் கழித்து விபத்து நடந்த

இடத்தில் திரும்பவும் தோன்றினாள். இப்பவும் செலுத்தும் கருவியுடன் (ஸ்டியரிங் வீல்) மல்லுக்கட்டிக் கொண்டிருந்தாள். இதற்குள் களேபரத்தில் இருந்து தன்னை ஒருவாறு விடுவித்துக் கொண்ட பால்காரன், திருகிய சேணத்தில் திணறிக்கொண்டிருந்த எஞ்சின் ஒன்றின் தடதடத்த, உறுமும் ஓசை நெருங்குவதைக் கேட்டான், நிமிர்ந்து பார்த்தான். அதே காரில் அதே பெண் மறுபடியும் சரியாக அவனையே நோக்கி வந்துகொண்டிருந்தாள். கண்ணிமைக்கும் நேரத்தில் அப்பால் பாய்ந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டான்.

இரண்டாவது தடவையாக மோதி நொறுக்கிவிட்டு மறுபடியும் அந்தத் தேர்ச்சிபெறாத கார்க்காரி தன் அழிவுப்பாதையில் தொடர்ந்து முன்னேறினாள். குடைகவிழ்ந்த பால்வண்டி இப்போது முற்றிலும் நாசமாகி இருந்தது. ஆனால் பால்காரன் ஒரு பிறவித் தத்துவன். சேதங்களின் மத்தியில் நின்று கொண்டு, தன் தோள்களைக் குலுக்கியபடி அங்கே வேடிக்கைபார்க்கக் கூடிய பொது ஜனங்களிடம் அவன் குறிப்பிட்டான். "அந்தப் பெண்மணியின் ஓட்டும் திறமைபற்றிச் சொல்லுவதானால் அவளை தகுதி படைத்தவள் எனச் சொல்ல முடியாது. ஆனால் அவளுக்கிருக்கும் ஒரு தகுதி பற்றி சும்மா (குறை) சொல்லக்கூடாது. அவள் செய்வன திருந்தச் செய்பவள்! (எடுத்த காரியத்தை முழுசாக முடிக்காமல் விடமாட்டாள்!)"

இப்படிப்பட்ட கட்டங்களில் கொஞ்சம் தத்துவம் நல்லதுதான். நிதானத்தை இழக்காமல் இருக்க அது உங்களுக்கு உதவுகிறது. ஆனால் அதற்குமேல் அதனால் பயன் இல்லை. அனுரதி, ஒரு புதிய இருத்தல் முறையை நீ கற்றாக வேண்டும். இங்கு நீ இருந்தால்- இங்குதான் நீ இருக்கிறாய்- தத்துவம் அளப்பதை நிறுத்து... அனுபவிக்க ஆரம்பி. ஏனெனில் அனுபவம் மூலம் மட்டுமே உண்மையை ஒருநாள் நீ அறியவருகிறாய்.

தர்க்கவாதம் மூலம் அடைய முடியும். முடிவு அல்ல உண்மை. முக்கூற்று நியாயம் மூலம் அடைவதல்ல மெய்மை உண்மை என்பது அமைதியான. அலுங்காத பிரக்ஞையின் அனுபவம்.

அதிகமதிக மோனமும் நிலைப்பும் பெறக் கற்றுக்கொள்.

அனுரதிக்கு நான் பதிலளிக்கும் முதல் கேள்வி இது. அவள் நூற்றுக்கணக்கான கேள்விகளைக் கேட்டிருக்க வேண்டும் - அவற்றை நான் தூர எறிந்தபடியே இருக்கிறேன். அனுரதியின் பெயரை நான்

பார்த்ததுமே கேள்வித் தாள் குப்பைக்கூடைக்குப் போகிறது. இதற்கான எளிய காரணம். அவளது தத்துவ மனத்தை நான் ஊக்குவிக்க விரும்பவில்லை. அவளது தத்துவப் பிரச்சனைகளைப் பற்றி நான் பேச ஆரம்பித்து விட்டால் அவள் அவற்றுக்குள்ளேயே இன்னும் அதிகமாகப் போய்விடுவாள்.

"எல்லாரின் கேள்விகளுக்கும் நீங்கள் பதிலளிக்கிறீர்கள். என் கேள்விக்கு மட்டும் ஏன் பதிலளிப்பதில்லை" என அவளும் கேட்டபடியே இருக்கிறாள். எனவேதான் குறைந்தது ஒரு கேள்விக்காவது பதில் சொல்லிவிடுவோம் என இன்று நான் தீர்மானித்தேன்.

தத்துவம் ஒரு நோய். இதை நான் நேரடியாக அறிவேன்! நானே ஒரு தத்துவப் பேராசிரியராக இருந்திருக்கிறேன். எனவே என்னை நீங்கள் நம்பலாம்! அதனால் நான் துன்பப்பட்டிருக்கிறேன். அது வெகு நாள்பட்ட ஒரு நோய் என அறிந்திருக்கிறேன். உங்களின் அமைப்புக்குள் அது புகுந்துவிட்டால் பின் அதை வெளியே எடுத்தெறிவது மிகவும் கடினம். அனுரதியிடம் எனக்கு அனுதாபம் உண்டு. ஆகவே சரியான முயற்சி செய்யப்பட்டால் அதிலிருந்து நீ விடுபட்டுவிட முடியும். குணப்படுத்த முடியாத நோய் அல்ல அது. மேலும் அது உனக்கு ஒருபோதும் எதையும் வழங்காததால்... அது நிறைய வாக்களிக்கிறது. ஆனால் ஒருபோதும் எதையும் வழங்குவதில்லை.

அனுரதி, உன் தத்துவக் கனவில் இருந்து விழித்தெழு! அது எவ்வளவு இனியதாயினும் அது கனவுதான். மேலும் எதற்கும் பயனற்றது அது. எந்தத் தரப்புக்கும் ஒரு வாதத்தை அதில் நீங்கள் எப்போதும் கண்டுபிடித்துவிட முடிகிறது. தத்துவம் ஒரு பரத்தை. யாரோடும் அது போக முடியும்.

மர்பியின் பொன்மொழியை தியானியுங்கள். ஒவ்வொரு தத்துவ முனைவர் பட்டத்துக்கும் (Ph.D) அதற்குச் சமமான நேரெதிர் தத்துவ முனைவர் பட்டம் இருக்கிறது.

சார்பாகவும் வாதிடலாம். எதிராகவும் வாதிக்கலாம். தத்துவத்துக்கு அடித்தளம் கிடையாது? அது சதுரங்கத்தைப்போல ஒரு விளையாட்டு அது உங்களை பொழுதுபோக்க வைக்கிறது. ஏதோ மாபெரும் காரியத்தில் ஈடுபட்டிருப்பதைப் போன்ற உணர்வைத் தருகிறது. ஆனால் அது முழுக்கவும் கனவால் ஆனது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

ஓரிரவு ஸோர்பா என்னும் கிரேக்கன் தன் தீவைவிட்டு வெளியேற வேண்டி இருப்பதாகக் கனவு கண்டான். எனவே துறைமுகத்துக்குப் போய் ஒரு படகில் கால் வைத்தான்.

படகின் தலைவன் அவனைத் தடுத்து நிறுத்தி, "நூறு டிராக்மா கட்டணம் செலுத்த வேண்டும்" என்றான்.

"இது கொள்ளையைத் தவிர வேறில்லை" என ஆர்ப்பரித்தான் ஸோர்பா. "50 டிராக்மாவுக்கு மேல் தரமாட்டேன்" என்றான்.

"நூறு டிராக்மாவை எடுத்துவை. இல்லாட்டி நீந்திக்கிட்டே போ!

"அதுவும் அப்படியா?" என்றான் ஸோர்பா. "பேசாமல் 50 டிராக்மாவை வாங்கிக்கொள். இல்லாவிட்டால் நான் விழித்துவிடுவேன். உனக்குக் கிடைப்பதும் போய்விடும்!"

அனுரதி, தயவு செய்து விழித்துவிடு! ஆனால் மக்கள் விழித்தெழ பயப்படுகிறார்கள். கிடைப்பதையும் இழந்துவிடுவோம் என்பதே அவர்களின் பயம். ஏனெனில் அவர்களுக்குக் கிடைக்கிறதெல்லாம் கனவுப்பொருளே தவிர வேறல்ல. அவர்களின் தத்துவம் என்பது அவர்களின் கனவு. அவர்களின் மதம் அவர்களின் கனவு. அவர்களின் அறிவு அவர்களின் கனவு. அவர்களின் அகங்காரம் அவர்களின் கனவு. தம் கனவில் பல பொருள்களையும் அவர்கள் திரட்டி இருக்கிறார்கள். எனவேதான் அவர்கள் விழித்தெழ அஞ்சுகிறார்கள். ஏனெனில் விழித்தெழும் கணத்திலேயே அவையெல்லாம் காணாமல் போய்விடும்.

ஓரிரவு முல்லா நசுருதீன், ஒரு மனிதன் தனக்குக் கொஞ்சம் பணம்தர விரும்புவதைப் போல கனவு கண்டார். அவன் மிகவும் தாராளப்பிரபுவாக இருந்தான். ஆகவே முல்லா ஒரேயடியாக "நூறு ரூபாய் கொடு" என வலியுறுத்திக் கேட்டார்.

அந்த ஆளோ, "90 ரூபாய் வாங்கிக்கொள்.... 91....92...93" என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

ஆனால் முல்லா முழுசாக நூறு ரூபாய் வேண்டும் என்பதில் விட்டுக்கொடுக்காமல் இருந்தார். ஏனென்றால் அந்த மனிதன் பெருந்தன்மையன் எனத் தெரிவதால் மிகவும் அன்பானவன் என தெரிவதால்- அவன் நூறு ரூபாயுமே தரச் சம்மதித்து விடலாம். அப்படி இருக்கும்போது ஏன் அதற்குக் குறைவாகக் கேட்க வேண்டும்?

அந்த ஆள், "பாரு, கடைசியாகச் சொல்றேன். 99 ரூபாய் வாங்கிக் கொள்" என்றான்.

"நூறு ரூபாய் தான்!" என்றார் முல்லா. ஆனால் அதை வாய் விட்டுச் சொல்லிவிட்டதால் விழித்துவிட்டார்! கண்களைத் திறந்தார்- அந்த ஆளும் மறைந்துவிட்டான். பணமும் மறைந்துவிட்டது.

உடனடியாக அவர் கண்களை மூடிச் சொன்னார், "சரிசரி, 99 ரூபாயே. கொடு!" ஆனால் இப்போது அங்கு யாருமில்லை. உடனே அவர் சொன்னார். "கோவிச்சுக்காதே, 98...97...." ஆனால் அங்கு யாரும் இல்லை. ஏனெனில் அது வெறும் கனவு.

நீங்கள் அழகான கனவுகளைக் கண்டு கொண்டிருக்கிறீர்கள். தத்துவம் என்பது மிகவும் புத்திசாலித்தனமான ஒரு கனவு.

அனுரதி. அதிலிருந்து வெளியே வா! மேலும் இது தத்துவம் பேசுவதற்கான இடமல்ல. அதை வேறெங்காவது நீ செய்துகொள்ள முடியும். அத்தகைய மடத்தனங்களில் வேறெங்கும் நீ ஈடுபட்டுக்கொள்ள முடியும். அத்தகைய மடத்தனங்களுக்காக நீ அமெரிக்காவில் இருந்து இந்தியா வந்திருக்கத் தேவை இல்லை! நிசமான ஏதாவது ஒன்றைச் செய். நம்பகமான ஏதாவது ஒன்றைச் செய். உன் வாழ்வை மாற்றக்கூடிய- உனக்கு ஒரு புதுப்பிறவி அளிக்கக்கூடிய ஒன்றைச்செய்.

"மறுபடியும் நீங்கள் பிறக்காவிட்டால் என் கடவுளின் அரசுக்குள் உங்களால் நுழைய முடியாது."

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**இந்தியா முழுவதும் நான் பயணம் செய்திருக்கிறேன். ஆனால் இந்த பூனா நகரம்பற்றி எங்கும் யாரும் ஒரு தவறான வார்த்தை கூட பேசக் கேட்கவில்லை நான்.**

**ரமேஷ்,**

ஒருவேளை அது, செத்துப் போனவர்களைப்பற்றித் தவறாக பேசக்கூடாது என்பதால் இருக்கலாம்!

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஏன் நீங்கள் கிரேக்கர்களுக்கு எதிராக இருக்கிறீர்கள்? ஏன் அவர்களை "கடவுளால் சபிக்கப்பட்ட கிரேக்கர்கள்" என்று அழைக்கிறீர்கள்.**

**வீரா,**

கிரேக்கர்கள் மாபெரும் மனிதர்கள்- அவர்களை நான் நேசிக்கிறேன். சாக்ரடீசை நான் நேசிக்கிறேன்; பித்தகோரசை நான் நேசிக்கிறேன்; ஹெராக்ளிட்டசை நான் நேசிக்கிறேன்- அப்படியே முக்தாவையும் நான் நேசிக்கிறேன். ஆனால் அவர்கள் "கடவுளால் சபிக்கப்பட்டவர்கள்."

ருசியனை ஒரு நாடோடியால் (ஜிப்சியால்) மட்டுமே ஏமாற்ற முடியும். நாடோடியை யூதனால் மட்டுமே ஏமாற்ற முடியும். யூதனை கிரேக்கனால் மட்டுமே ஏமாற்ற முடியும். கிரேக்கனையோ சாத்தானால் மட்டுமே ஏமாற்ற முடியும்!

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் பிரிட்டிஷ்காரன். இதைக் குறித்து நான் ஏதாவது செய்ய முடியுமா?**

**மார்க்**

காலம் ரொம்பவும் கடந்துவிட்டது. அடுத்த தடவை உன் பெற்றோர்களைத் தேர்வதில் கொஞ்சம் கூடுதல் கவனமாயிரு!

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**குழந்தைகளால் சத்தியத்தைப் புரிந்துகொள்ள முடியுமா?**

**ராஜ்,**

குழந்தைகளால் சத்தியத்தைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் தாம் புரிந்து கொண்டுள்ளதைப் புரிந்து கொள்ள அவர்களால் முடியாது. நீங்கள் புரிய முடிவதைவிட அதிகத் தெளிவுடன் அவர்கள் புரிகிறார்கள். ஏனென்றால் அவர்கள் அதிகத் தெளிவுடன் அதிக அப்பாவித் தன்மையுடன் இருக்கிறார்கள். ஆனால் தாம் புரிந்துகொள்ள முடிவதாகப் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு அவர்கள் அப்பாவிகளாக இருக்கிறார்கள்.

எனவே உங்களுக்கு இன்னொரு குழந்தைப் பருவம்- இரண்டாவது குழந்தைப் பருவம்- தேவைப்படுகிறது. முதலில் உங்கள் முதல் குழந்தைப் பருவத்தை நீங்கள் இழக்க வேண்டி இருக்கிறது. ஆதாமும் ஏவாளும் பரலோகத்தை இழந்த பைபிள் கதைக்கு அதுதான் அர்த்தம். அது ஒரு மகத்தான முக்கியத்துவமுடைய கதை. அதற்குப் பலவித அர்த்தங்கள் உள்ளன. அந்தளவுக்கு பலபக்க

பரிமாணங்கள் கொண்ட உவமைக் கதை அது. அதற்குச் சமமான வேறொரு உவமைக் கதை இருப்பதாக நான் நினைக்கவில்லை.

பல கோணங்களில் அதை நீங்கள் பார்க்க முடியும். முதல் குழந்தைப் பருவத்தை இழப்பதை அது குறிக்கிறது- இது தவிர்க்க முடியாததே. ஆதாமும் ஏவாளும் எந்தப் பாவமும் செய்யவில்லை. உண்மையில் "பாவம்" (சின்) என்னும் சொல். மறத்தல் என்னும் பொருளுடைய வேரில் இருந்தே வருகிறது. ஆயின் அது ஒரு அழகான அர்த்தம், அவர்கள் ஒன்றை மறந்து விடுகிறார்கள், அவ்வளவே.

ஒவ்வொரு குழந்தையும் தன் அப்பாவித் தன்மையை இழக்கவே வேண்டி உள்ளது. ஒவ்வொரு குழந்தையும் உலகினுள் தொலைந்து போகவே வேண்டியுள்ளது. ஒவ்வொரு குழந்தையும் வழிதவற வேண்டி உள்ளது. பலப்பல தவறுகளைச் செய்யவும் பலவித அனுபவங்கள் பெறவும், இன்பம், துன்பம் முதலான எல்லாவிதமான இருமைகளின் ஊடாகச் செல்லவும் வேண்டி உள்ளது. இதன் பயனாகவே ஒருநாள் அவன் மறுபடியும் தன் வீட்டுக்குத் திரும்ப பெரும் விருப்பம்கொள்ளத் தொடங்க முடிகிறது. உலகின் பாலைவனங்களில் காணாமல் போகையில், ஒருநாள் வீடுதிரும்பும் ஏக்கம் எழுகிறது.

அந்த ஏக்கமே சந்நியாசம். அந்த ஏக்கமே சமயம். பின் ஒருவர் உணர்வுடன் தன் குழந்தைப் பருவத்தைத் திரும்பவும் அடைகிறார். இதுவே இரண்டாவது குழந்தைப் பருவம். இப்போது அவர் புரிந்து கொள்கிறார். தான் புரிந்து கொள்வதாகவும் புரிந்து கொள்கிறார். முதல் குழந்தைப் பருவம் மிகவும் அப்பாவித் தனமானது. அது இழக்கப்படவே நேரும். ஏனெனில் அது இயற்கையின் கடவுளின்- கொடை இரண்டாவது குழந்தைப் பருவம் ஒருபோதும் இழக்கப்படுவதில்லை. ஏனெனில் அது உங்களின் சம்பாதனை. அதற்கு நீங்கள் தகுதியாகி இருக்கிறீர்கள். அது தானமாகக் கிடைத்தது அல்ல. அதற்கு நீங்கள் தகுதியாக இருக்கிறீர்கள். அது ஒரு வளர்ச்சி, பரிசு அல்ல. அது உங்களின் முதிர்ச்சி.

ஆதாமும் ஏவாளும் தம் முதல் குழந்தைப் பருவத்தை இழக்கிறார்கள். புத்தர், இயேசு கிறிஸ்து, ஜராதுஷ்டிரர், மோயீசன் போன்றவர்களில் இரண்டாம் குழந்தைப் பருவம் சம்பவிக்கிறது. கிறிஸ்துவில், ஆதாம் திரும்பவும் பரலோகத்துக்கு போகத் தொடங்குகிறான். ஆதாம் என்பது பரலோகத்திலிருந்து விலகிச் செல்கிறதாகும். இயேசு என்பது வீட்டுக்குத் திரும்புவதாகும்.

ஆனால் குழந்தைகளை நீங்கள் கவனித்தால் அவர்கள் ஒவ்வொன்றைப்பற்றியும் எவ்வளவு தெளிவாக இருக்கிறார்கள் என்பதைக் காண்பீர்கள்- உங்களைவிட அவர்கள் அதிகத் தெளிவாக இருக்கிறார்கள். நீங்களோ அதிகமாய் குழம்பியே இருக்கிறீர்கள். உங்களைக் குழப்ப ஏராளமான எண்ணங்கள் இருக்கின்றன. குழந்தைகள் (அவ்வளவு) குழப்பமாக இல்லை. அவர்களைக் குழப்புமளவுக்கு அதிக எண்ணங்கள் அவர்களில் இல்லை. அவர்களின் ஜோதிகள் புகையின்றி, சுடர்விட்டு எரிகின்றன. அவர்கள் ஆச்சரியமும் பிரமிப்பும் நிரம்பியவர்களாக இருக்கிறார்கள். ஒன்றைப் பார்த்தவுடனே அவர்கள் புரிந்து கொள்கிறார்கள். ஏனெனில் இடையில் தடை இல்லை.

குழந்தைகள் தியானத் தன்மையில் இருக்க அவர்களுக்கு நாம் உதவ முடிந்தால், முழு உலகையும்- அதன் ஆற்றல், உணர்வு முழுவதையும் நாம் மாற்றி அமைத்துவிட முடியும். ஆனால் நாம் அவர்களுக்கு வேறு எதைஎதை எல்லாமோ- புவியியல், வரலாறு மற்றும் முற்றிலும் உதவாக்கரையான அனைத்து விதமான அபத்தங்களையும்- கற்றுத் தருகிறோம். தியானத்தை மட்டும் ஒருபோதும் சொல்லித் தருவதில்லை. இப்போது திம்புக்தூ எங்கிருந்தால் என்ன? எனக்குத் தெரியாது. அது எங்கிருந்தாலும்- அந்தப் பெயர் மட்டும் எனக்கு பிடிக்கிறது. ஆனால் குழந்தைகளுக்கு மடத்தனமான செய்திகளை எல்லாம்- செங்கிஸ்கான், நாதிர்ஷா, தாம்பர்லேன் பற்றி எல்லாம்- கற்றுத் தருகிறார்கள். எதற்காக? ஏன் அவர்களின் தலைகளுக்குள் நீங்கள் குப்பைகளை நிரப்புகிறீர்களா?

அவர்களை விழிப்படையச் செய்ய இதுவே தருணம். ஏனெனில் இப்போது அவர்கள் இயல்பாகவே விழிப்பாயிருக்கிறார்கள். அவர்களின் விழிப்பை, அப்பாவித் தன்மையைப் புரிந்து கொள்ள அவர்களுக்கு நாம் உதவினால், முதல் குழந்தைப் பருவம் இரண்டாவது குழந்தைப் பருவத்தை நோக்கிய இயக்கமாய் மாறமுடியும்.

பிரெஞ்சுக் குடியானவனின் மகன் ஒருநாள் பள்ளிக்கு வரவில்லை. மறுநாள் அதன் காரணத்தை ஆசிரியருக்கு விளக்கினான். முக்கியமான குடும்பச் சோலி இருந்ததால் வரமுடியவில்லை என்றான்.

"எருதை பசுக்களிடம் கூட்டிப்போக வேண்டியிருந்தது" என விளக்கினான்.

"ஆனால் உன் அப்பா அதை இன்னும் சிறப்பாகச் செய்ய முடியாதா?" தெரிந்து கொள்வதற்காக ஆசிரியர் கேட்டார்.

"என் அப்பா அருமையான காதலர்தான். ஆனால் இந்த விஷயத்தில் அவரைவிட எருதே இன்னும் சிறப்பாகச் செய்ய முடியும் என்று நினைக்கிறேன்" என்றான் அந்த பிரஞ்சுப் பையன்.

உங்களின் அறிவுஜீவிகள் எனப்படுகிறவர்களைவிட குழந்தைகள் அதிகத் தெளிவானவர்களாக இருக்கிறார்கள்.

கலிபோர்னியாவில் நிறையப் பேர் கிறுக்கர்கள். டாக்டர்கள் கூட அங்கு கிறுக்கர்களாய் இருப்பார்கள். ஒரு இளம்பெண் ஒரு எம்.டி.யை பார்க்கப் போனாள். தன் மாதவிடாய் சைக்கிளில் (சுழற்சியில்) கோளாறு இருப்பதாகத் தெரிவித்தாள்.

"பிரச்சனையே இல்லை குழந்தாய்" என்றார் டாக்டர். "ஏன் நீ அதை ஒரு ஹோண்டாவுக்கு மாற்றிக் கொள்ளக் கூடாது?"

மிருகக் காட்சிச் சாலைக்குப் போயிருந்தபோது பொடியன் தன் தாயிடம் கேட்டான். "அம்மா, சிங்கங்கள் (லயன்ஸ்) எப்படி உடலுறவு கொள்கின்றன?"

அவள் பதில்சொன்னாள், "அதுபற்றி எனக்கு ஒன்றும் தெரியாது கண்ணு. உன் அப்பாவின் நண்பர்கள் பெரும்பாலோர் ரோட்டரியர்கள்."

"என் புதுக் கணவன் ஒரு காம வெறியனாக இருக்கிறான்" இளம்பெண். நீதிபதியிடம் புகார் செய்தாள். "தேனிலவில் தொடங்கி இடைவேளை விடாமல் என்னுடன் உடலுறவு கொண்டு வருகிறான். இரவு, பகல் எந்நேரமும் எனக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லை. நான் மணவிலக்குப் பெற விரும்புகிறேன்."

"சரி, ஆனால் முதலில் நீங்கள் உங்கள். அப்ளிக்கேசனை (வாய்மொழி பிராதை) ஃபைல் பண்ண (எழுத்துமூலமாகச் சமர்ப்பிக்க மனுச்செய்ய) வேண்டி இருக்கும்."

"என்ன, என் அப்ளிக்கேசனை (பிரயோக சாதனத்தை) ஃபைல் பண்ணுவதா (ராவுவதா)?" சீறி விழுந்தாள் அம்மாது. "அது ஏற்கெனவே கையாளப்பட்டதில் கையால் தொடவும் முடியாதபடி நொந்து புண்ணாகியிருக்கிறது என்கிறேன்!"

ஆசிரியை ஒரு காகிதத்தில் ஏதோ குறிக்க மேசைமேல் தாழக் குனிந்தாள். முன் இருக்கையில் இருந்த சிறுவன் ஜானி "டீச்சர், எனக்கு ஒண்ணு தெரியுது" என்கிறான்.

"இது மிகவும் அநாகரிகம் ஜானி. நாளைக்கு நீ பள்ளிக்கு வராதே" என நயமாகக் கண்டிக்கிறாள் ஆசிரியை.

ஒருவாரம் கழித்து ஒரு சாக்குக் கட்டியை எடுக்கக் குனிகிறாள் ஆசிரியை. இப்பவும் முன் இருக்கையில் இருந்த ஜானி, பேசாமல் எழுந்து கதவை நோக்கி நடையைக் கட்டுகிறான். "எங்கே போகிறாய்?" கண்டிப்புடன் கேட்கிறாள் ஆசிரியை.

"என் பள்ளி நாட்கள் முடிந்தது, டீச்சர்."

குழந்தைகள் மிகவும் தெளிவாகப் பார்க்கிறார்கள். அவர்களுடைய கண்கள் நிர்மலமாக உள்ளன. ஆனால் விரைவில் அவர்கள் தம் அப்பாவித் தன்மையை இழக்க வேண்டி இருக்கிறது. அதை இழக்குமாறு நாம் அவர்களை நெருக்குகிறோம். அவர்களின் தலைக்குள் குப்பைகளைக் கொட்டுகிறோம். இதனால் அவர்களின் கண்கள் பார்ப்பதை நிறுத்துகின்றன. குழந்தை தானாகவே விழிப்புப் பெற ஆரம்பிக்கும் முன்பாகவே அதன் மனதில் மடத்தனமான விசயங்களை நிரப்ப ஒவ்வொரு பெற்றோரும் முயலுகிறார்கள். ஒவ்வொரு சமுதாயமும் முயல்கிறது. ஒவ்வொரு மதமும் முயல்கிறது. இல்லாவிட்டால் அவன்/ அவள் கலகக்காரன்/ காரி ஆகியிருப்பான்/ள். எனவே உங்களுக்கு மூன்று, நான்கு வயதாகும்போதே உங்களுக்குள் விஷயங்கள் கொட்டப்படுவது தொடங்கிவிட்டிருக்கிறது. உங்களை ஒழுங்காக கோயிலுக்கு அனுப்புகிறார்கள். உங்களுக்கு மதபாடம் (ஞானோபதேசம்) கற்பிக்கப்படுகிறது. என்னவோ மதத்தைப் பாடமாய்க் கற்றுக்கொடுக்க முடிவதுபோல!

மதத்தைப் படிக்க முடியாது. பிடிக்க மட்டுமே முடியும். இயேசு அல்லது புத்தர் போன்ற மனிதரின் சகவாசத்தில் நீங்கள் இருக்கும்போது மட்டுமே அதை நீங்கள் பிடிக்க முடியும். யோக்கா, ரின்ஸாய், போதிதர்மர் போன்ற மனிதர்களின் கூட்டுறவில் நீங்கள் இருக்கும்போது மட்டுமே அதை நீங்கள் பிடிக்க முடியும். அது பிடிக்கப்படுவது. சொல்லித் தரப்படுவதல்ல. சொல்லித்தந்து வரும் மதம் குப்பையே. ஆனால் நம் குழந்தைகளை அவசரமாக கிறித்தவர், இந்து, முகமதியர் என ஆக்கவே நாம் ரொம்ப ஆர்வம் காட்டுகிறோம்.

ஒரு நல்ல அதிக மனிதத்தன்மை உள்ள உலகில், குறைந்தது 21 வயது வரை குழந்தைகளுக்கு கிறித்தவம். இந்து தத்துவம், சமணம், யூதம் போன்ற எந்த மதமும் கற்பிக்கப்பட மாட்டாது. 21 வயது வரை வாக்களிக்கும் வயது வரும்வரை அவர்கள் தாமாகவே விசாரிக்கும்

படி விட்டு விட வேண்டும். அப்போது கிறித்தவம், சமணம், புத்தம், யூதம், முகமதியம் யாவும் உலகில் இருந்து மறைந்துபோகும் என உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன். 21 வயது வரை குழந்தைகளை அவர்களாகவே இருக்கும்படி விட்டுவிட்டு, பின், அவர்களுக்கு கிறித்தவத்தைப் போதித்துப் பாருங்கள்! அவர்கள் எழுப்பும் கேள்விகளில், உங்களுக்கே கிறித்தவத்தில் ஏதாவது மதிப்புக்குரியது இருக்கிறதா என்னும் சந்தேகம் எழுந்துவிடும். ஆனால் பாவம், 3 வயதே ஆன இளம் பிஞ்சுகளை நீங்கள் பலாத்காரம் செய்கிறீர்கள்... அவர்களால் எதிர்க்க முடியாது. தம்மைத் தற்காத்துக் கொள்ள முடியாது. தம் உயிர்ப்பிழைப்புக்கு அவர்கள் உங்களைச் சார்ந்திருக்கிறார்கள். எனவே நீங்கள் அவர்களுக்கு எதை வேண்டுமானாலும் செய்ய முடிகிறது.

ஆயின் இதுவே குழந்தைகளுக்கு இழைக்க முடியக்கூடிய மாபெரும் அநீதி ஆகும். கடந்த காலங்கள் நெடுகிலும் பெற்றோர்கள் குற்றவாளிகளாகவே இருந்து வந்திருக்கிறார்கள். உங்கள் குழந்தைகளின் மனங்களைக் கட்டுப்படுத்துவதே நீங்கள் செய்யும் மாபெரும் கெடுதல். தேடுவதற்கான சுதந்திரத்தையும் தாமே தேடிக் கண்டுபிடிக்கும் சுதந்திரத்தையும் அவர்களுக்கு நீங்கள் அனுமதிப்பதில்லை. தெரிந்தே பெற்றோர்கள் அப்படிச் செய்கிறார்கள் என்பதில்லைதான். அவர்களின் பெற்றோர்கள் அவர்களை அப்படி தளைப்படுத்தி விட்டார்கள். அந்தப் பாணியையே அவர்கள் வெறுமனே பின்பற்றி வந்திருக்கிறார்கள். உங்கள் சொந்த நன்மைக்காகவே அப்படிச் செய்து வந்ததாக அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். உண்மையில் மிகப் பெரும் பாதகங்கள் எல்லாமே உங்கள் சொந்த நன்மைக்காக என்று சொல்லித்தான் செய்யப்பட்டுள்ளன. 'உன் நன்மைக்காகத்தான் இதை நான் செய்கிறேன்' என்று யாராவது உங்களிடம் கூறும்போது எச்சரிக்கையாயிருங்கள். ஏனெனில் உங்களின் சொந்த நலனுக்காக வேறு யாரும் எதையும் செய்யத் தேவையில்லை.

ஆம்-பெற்றோர்கள் உங்களுக்காக ஊட்டுவதும் உடுத்துவதும் உங்களை ஆதரிப்பதும் தேவை. உங்களை உடல்ரீதியாக பலசாலி ஆக்குவதும், உங்கள் விசாரங்களில் தேடலில் உங்களுக்கு உதவுவதும், நீங்கள் சுதந்திரமாக ஆராயும் பொருட்டு உங்களுக்கு எல்லாவித ஆதரவும் பாதுகாப்பும் வழங்குவதும் தேவை. அப்போது உலகம் முழுதும் அறியொணாமை வாதிகள், தேடுவோர்கள் நிரம்பி இருப்பார்கள். அதுதான் புவியில் மெய்யான சமயத்தின் தொடக்கமாக இருக்கும். ஆயின் அது குழந்தைப்பருவம் முதலே

நிகழ வேண்டி இருக்கிறது. ஏனெனில் முதலில் அவர்களின் மனங்களை நாசமாக்குவது, காலத்தை மடத்தனமாக வீணடிப்பதாக இருக்கிறது. ஏனெனில், பின் அவர் களைதளை நீக்கம் செய்வது மிகவும் கடினமாகிறது. அவர்கள் எதிர்ப்புக் காட்டத் தொடங்கு கிறார்கள். ஏனெனில் பின் அவர்கள் தம் சொந்த மனங்களோடு தம்மை அடையாளப்படுத்திக் கொள்ள ஆரம்பிக்கிறார்கள்.

ஒவ்வொரு நாளும் எனக்கு முரட்டுத்தனமான கேள்விகள் அசிங்கமான கேள்விகள் வருகின்றன. ஏனெனில் யாராவது தன் மனம் புண்பட்டதாக உணர்ந்தால் உடனே அவரது தளைப்பட்ட மனம் எதிர்வினை புரிகிறது. கோபத்தில் ஏதாவது எழுதி விடுகிறார்.

நீங்கள் நீங்களாக இருக்க, சுயேச்சையாக இயங்க உங்களுக்கு உதவவே நான் முயல்கிறேன். நீங்களோ என்னிடம் கோபம் கொள்கிறீர்கள். ஏனெனில் நீங்கள் விடுபடுவதை நீங்களே விரும்பவில்லை. அடிமைகளாக இருப்பதில் நீங்கள் பழகிப் போயிருக்கிறீர்கள். ஆனால் அது அடிமைத்தனம் என்பதை நீங்கள் உணர்வதில்லை. அதை அறிவு ஞானம் என நினைக்கிறீர்கள். உங்களுக்கு பைபிள், தெரியும். கீதை தெரியும். குரான் தெரியும் என நினைக்கிறீர்கள். ஆனால் அதை நான் அழித்தபடி, மறுத்தபடி போகையில் நீங்கள் பயந்து நடுங்குகிறீர்கள். உங்கள் அறிவை எல்லாம் எடுத்துவிட்டால் என்ன மிஞ்சும்? அந்த வெறுமை குறித்து நீங்கள் மிகவும் பயப்படுகிறீர்கள். ஆனால் அதுதான் ஒரு புதுப்பிறப்பின் மெய்யான துவக்கம் ஆகும்.

ஒவ்வொருவரும் மறுபடியும் வெறுமையாக, ஒரு குழந்தையாக, எளிய மனத்தவராக ஆக வேண்டி உள்ளது. அதன் பிறகு மட்டுமே உண்மையை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

குழந்தைகள் அதைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் தாம் புரிந்துகொள்வதாக அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. அதற்கு நீங்கள் கொஞ்சம் காத்திருக்க வேண்டும். ஆனால் குழந்தைகளை நாம் தயார் படுத்த முடியும். அவர்கள் தம் புரிந்துகொள்ளும் திறனைப் பயன்படுத்தி அதிக சுதந்திரமுள்ளவர்களாக, அதிக சாகசம் நிரம்பியவர்களாக, அதிக துணிச்சல் மிக்கவர்களாக ஆவதற்கு நாம் உதவ முடியும்.

உங்கள் குழந்தைகளை உண்மையாகவே நீங்கள் நேசித்தால், ஒரு துணிகரப் பயணத்தில் இறங்கும்படியும் அதன் மூலம் கடவுளை அவர்கள் தாமாகவே கண்டுபிடிக்க முடியும்படியும் அவர்களுக்கு நீங்கள் உதவுவீர்கள். உண்மையைக் கண்டுபிடிப்பது அழகானது.

இன்னொருவரின் உண்மையை நீங்கள் சுமந்து கொண்டிருப்பது அசிங்கமானது. அது ஒரு செத்த சுமை மட்டுமே. அது உங்களை முடக்குகிறது. கொல்கிறது. உங்களுக்கு விஷமூட்டுகிறது.

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**இதில் எந்தக் கேள்விக்கும் இடம் இல்லை. சர்ஜனோவே என் எல்எஸ்டி [போதை மருந்து]; கவர்ந்து மயக்கும் திறனும் அனுபவமும் நிரம்பிய அவரே என் மன்மதன் [மான் ஜுவான்]. ஆசிரமமே இதற்குச் சரியான சூழலாகத் தோன்றுகிறது. நீங்களே இந்த அனுபவத்தின் வழியாக என்னை நடத்துபவர் என்பதும் அறிவேன். ஆனால் அவரை உட்கொள்வதற்கான சரியான அளவு என்ன?**

**சத்ய பாரதி.**

**எ**ல்லாப் பெண்களாலும் விரும்பப்படுபவன் சர்ஜனோ. எனவே அவனை உட்கொள்ளும் சரியான அளவைப் பற்றி யோசிப்பதில் நேரத்தை வீணாக்காதே. ஏனெனில் நாளைக்கே அவன் கிடைக்காமல் போகலாம். முடிந்தால் அவனை முழுசாக முழுங்கிவிடு! நீ கவனிக்க வேண்டிய காரியம் ஒன்றே ஒன்றுதான்; இத்தாலிய இடியாப்பம் உனக்குப் பிடிக்காது என்றால் அவனைத் தின்பதும் உனக்கும் சிரமமாகத்தான் இருக்கும். அவனுக்குள் முழுக்க அதுதான் இருக்கிறது!

இத்தாலியனைச் சாப்பிட்டபின் நரமாமிசம் தின்பவன் என்ன கூறுவான்? "கறியில் கொழுப்பு கொஞ்சம் அதிகம்!"

எனவே அவன் கிடைக்கிற போதே தின்றுவிடு. சரியான அளவு எவ்வளவு, எவ்வளவில்லை என்பதை எண்ணி நேரத்தைக் கடத்தாதே.

சர்ஜனோ காற்று மாதிரி. இன்றைக்கு இங்கிருப்பான். நாளை வேறிடத்தில் இருப்பான். மேலும் இதையும் நன்றாகத் தெரிந்துகொள். அவன் உன்னைச் சாப்பிடுமுன் நீ அவனைச் சாப்பிட்டுவிடு. ஏனெனில் இந்த இத்தாலியர்கள் உண்மையாகவே அபாயகரமான மனிதர்கள்!

அன்று ஒருநாள் ஒரு கேள்வி வந்தது. "ஒரு இத்தாலியனைக் காட்டிலும் அதிக அபாயமானவர் யார்?" வேறுயார். இரண்டு இத்தாலியர்கள்தான்!.

OOO

# 4

முதல் கேள்வி:

**ஓஷோ,**

**"இதுவுமல்ல அதுவுமல்ல" என்னும் பார்வை மிகவும் எதிர்மறையானதாக உள்ளது. இதை நான் எப்படி ஏற்றுக் கொள்ளவோ இதைக்கொண்டு படைப்புத் தன்மையுடன் இருக்கவோ முடியும்? நான் முற்றிலும் குழம்பியவனாக உணர்கிறேன்.**

**பிரேம் ஹெல்மட்.**

உடன்பாடு-எதிர்மறை என்னும் இருமையில்தான் மனம் உயிர் வாழ்கிறது. அது ஒரு ஊசலைப் போல் வாழ்கிறது. ஆம் என்பதிலிருந்து இல்லைக்கும் இல்லையில் இருந்து ஆமுக்கும் போய்க் கொண்டிருக்கிறது. முற்றான ஆமில் அதனால் வாழ முடியாது. முற்றான இல்லையிலும் அதனால் வாழ முடியாது. முற்றான ஆம் என்றால் இனி ஊசல் எங்கும் போக வழியில்லை என்று பொருள். முற்றான இல்லை என்றாலும் அப்படியே பலவித விளையாட்டுகளை மனம் விளையாட இடமில்லை. முற்றான எதுவும் மனத்தின் மரணமாக இருக்கிறது.

மனத்தைக் கொல்ல- மனத்தைக் கடக்க- இரண்டு வழிகளே உள்ளன. ஒன்று முற்றான ஆம். மற்றது முற்றான இல்லை. உபநிடதங்கள். முதல் வழியை- முற்றான ஆமைப்- பயன்படுத்தி உள்ளன. புத்தர் இரண்டாவது வழியை- முற்றான இல்லையை- பயன்படுத்தி இருக்கிறார். ஆனால் ஆழமாகப் பார்த்தால் அவற்றுக்கிடையில் வேறுபாடில்லை. முற்றுமை என்னும் ஒரே தன்மையால் அவை இணைக்கப்பட்டுள்ளன என்பதை நீங்கள்

காண்பீர்கள். முற்றான எதுவும் மனத்தின் கல்லறையாகிறது. மனம் நிலை இருமை தேவை.

எனவேதான் முற்றான எதிர்மறையைக் கண்டு நீங்கள் பயப்படுகிறீர்கள். ஏனெனில் முற்றுமையில் நீங்கள் மறையத் தொடங்குகிறீர்கள். நீங்கள் உங்கள் மனமாக இருக்கிறீர்கள். உங்களில் உங்கள் மனத்தை விடவும் அதிகமான ஒன்றும் இருக்கிறது. ஆனால் அதை நீங்கள் அறியாதிருக்கிறீர்கள். நீங்கள் மறைய ஆரம்பிக்கையில் பயம் எழுகிறது; குழப்பம் எழுகிறது; பீதி அடைகிறீர்கள். தொற்றிக்கொள்ளக் கிடைப்பது எதுவாயினும் அதைத் தொற்றிக்கொள்ள விரும்புகிறீர்கள்.

முற்றுமையின் இந்த அற்புதத்தினால்தான் கடவுள் என்பது முற்றுமையின் இன்னொரு பெயராக இருந்திருக்கிறது. கடவுள் என்றால் முற்றுமை. ஒன்று முற்றாக ஆம் என்று சொல்லுங்கள்- அப்போது உங்கள் மனம் மறைகிறது. அல்லது முற்றாக இல்லை என்று சொல்லுங்கள்- அப்போதும் உங்கள் மனம் மறைகிறது.

புத்தர் ஏன் முற்றான இல்லையைத் தேர்ந்தெடுத்தார்? ஏன் முற்றான ஆமைத் தேர்ந்தெடுக்கவில்லை? அதற்கு ஒரு குறிப்பான காரணம் இருக்கிறது. முற்றான ஆமில் ஒரு ஆபத்து இருக்கிறது. என்ன ஆபத்து என்றால் ஆயின் முற்றுமைத் தன்மையை நீங்கள் புரிந்துகொள்ளாது போகக்கூடும். அது உங்களின் பழைய உடன்பாட்டுத் தன்மையே என தொடர்ந்தும் நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கக்கூடும். முற்றான இல்லையில் சாவு தெள்ளத்தெளிவாக தெரிகிறது- அதை நீங்கள் பார்க்காமல் தவறவிட முடியாது. எனவேதான் குழப்பம்.

இந்தக் குழப்பம் நல்லதுதான். அதிலிருந்து தப்பிக்க முயலாதே. அதற்குள் இன்னும் ஆழமாக போ. விரைவில் அது மாபெரும் குழப்பமாகும். வெறும் குழப்பம் அல்ல. மாபெரும் குழப்பம். உன்னைப்பற்றி நீ அறிந்திருக்கிற அனைத்தும் தகர்ந்து போகையில், நீ நம்பிக் கொண்டிருக்கும் அனைத்தும் ஆவியாகிப் போகையில், நீ உன்னுடன் அடையாளப்படுத்தியிருக்கிற அனைத்தும் உன் கைகளில் இருந்து நழுவிச் செல்கையில், நீ நின்று கொண்டிருக்கும் அடித்தளமே உனக்கு இல்லாமல போகையில், அடியற்ற பாதாளத்துக்குள் வீழ்ந்தபடியே இருக்கிறாய்- அது பெருங்குழப்பம். ஆயின் பெருங்குழப்பத்தில் இருந்தே நட்சத்திரங்களும் பிறக்கின்றன. பெருங்குழப்பத்தில் இருந்தே படைப்புத்தன்மை உருவாகிறது.

இதை நான் எப்படி ஏற்றுக்கொள்ளவோ இதைக்கொண்டு படைப்புத் தன்மையுடன் இருக்கவோ முடியும் என்று நீ கேட்கிறாய்.

ஏற்றுக்கொள்வது என்னும் கேள்விக்கே இடமில்லை. ஏனெனில் ஒவ்வொரு ஏற்பும், அடியாழத்தில் மறுப்பு என்றே பொருள்படுகிறது. இல்லாவிட்டால் ஏற்பு பற்றிய கேள்வியே ஏன் வருகிறது? ஏற்றுக் கொள்வது என்பதைப் பற்றியே முதலில் ஏன் நீங்கள் எண்ணுகிறீர்கள்? எங்கோ ஓரிடத்தில் நீங்கள் மறுத்துக்கொண்டு இருக்க வேண்டும்.

நான் வாழ்வை ஏற்பதில்லை. ஏனெனில் முதலில் அதை நான் மறுப்பதும் இல்லை. அது என் ஏற்பு மறுப்புக்கு வெளியே அதுபாட்டுக்கு இருக்கிறது. அது அத்தகையதே புத்தர் இதை தடாதம்-சுயத்தன்மை என்கிறார்.

ஒருவன் புத்தரிடம் வந்து, "சாவைக் குறித்து நாங்கள் என்ன செய்ய வேண்டும்? அதை நாங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமா?" என்று கேட்டான்.

புத்தர் சொன்னார், "ஏற்பது அல்லது மறுப்பது என்னும் கேள்விக்கே இடமில்லை. சாவு இருக்கிறது. அவ்வளவுதான். அதுதான் பொருள்களின் தன்மை. அவை ஒருநாள் பிறக்கின்றன. ஒருநாள் இறக்கின்றன."

ஏற்பது அல்லது மறுப்பது என்னும் ரீதியில் நீ ஏன் எண்ணு கிறாய்? அதை நீ ஏற்க முயன்றால் அது ஒருவித ஒடுக்குமுறையாகவே ஆகும். முதலில் நீங்கள் மறுத்திருக்க வேண்டும். இப்பவும் நீங்கள் மறுத்துக் கொண்டிருக்க வேண்டும். பின் உங்களின் அந்த மறுப்பை ஏற்பினால் மூடி மறைக்கிறீர்கள். அடியாழத்தில் நீங்கள் கோபத்துடன் இருக்கிறீர்கள். வெளிப்புறத்தில் நீங்கள் புன்னகைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் வாயெல்லாம் பல்லாக இருக்கிறது. அடியாழத்தில் நீங்கள் சோகமாக இருக்கிறீர்கள். மேலுக்கு நீங்கள் சிரித்துக் கொண்டிருக்கிறீர்கள். உண்மையை மற்றவர்களிடம் இருந்து மட்டுமல்ல. உங்களிடமிருந்துகூட மறைக்க முயன்று கொண்டிருக் கிறீர்கள்.

பிரெட்ரிக் நீட்சே கூறியிருக்கிறார்: "நான் ஏன் சிரிக்கிறேன் என்றால், சிரிக்காவிட்டால் நான் அழவும் கதறவும் தொடங்கி விடுவேன் என்று பயந்துகொண்டிருக்கிறேன். அழுது கதறி விடுவதைத் தவிர்க்கவே சிரித்தபடியே இருக்கிறேன். அழவும் கதறவும் நான் விரும்பவில்லை. மாறாக எனக்குள் இருக்கும் கண்ணீர்களை மறைக்கவே விரும்புகிறேன்."

ஆனால் அது ஒரு கவசம் மட்டுமே. அந்தச் சிரிப்பு உண்மையானது அல்ல. அது புத்தர்களின் சிரிப்பல்ல. அப்படி இருக்க முடியாது. ஒரு பிளவுபட்ட மனதின் அசாத்திய முயற்சியே இது. இதுவே ஆளுமைப் பிளவு ஒரு பகுதி அழ விரும்புகிறது. இன்னொரு பகுதி அதை மறைக்க விரும்புகிறது. நீங்கள் மோதலில்- முரண்பாட்டில் இருக்கிறீர்கள். ஆனால் மோதலில்தான் நாம் வளர்க்கப்பட்டிருக்கிறோம். முரண்பாடுகளுக்குள் வாழ்வது எப்படி என்றே கற்பிக்கப்பட்டிருக்கிறோம். அதுவே நம் சொந்த வாழ்க்கைப்பாணி ஆகியிருக்கிறது. ஏற்பது பற்றிய பிரச்சனை அல்ல இது.

மெய்யான ஏற்பு ஏற்பே அல்ல. என் வாசகத்தைக் கேட்டு நீங்கள் வியப்பு அடையலாம்: மெய்யான ஏற்பு ஏற்பே அல்ல. மெய்யான ஏற்பு என்பது, மறுப்பு- ஏற்பு இரண்டும் அற்ற நிலையே ஆகும். இப்படித்தான் விசயங்கள் இருக்கின்றன- 'இதுதான் பொருள்களின் சுயத்தன்மை- தடாகதம்' என்பதை ஒருவர் அறிகிறார். அவ்வளவே.

புத்தரின் பெயர்களில் ஒன்று அழகானது. தடாகதர். புத்த நூல்கள் எப்போதும் அவரை தடாகதர் என்றே குறிப்பிடுகின்றன. தடாகதர் என்றால் ஏற்காமல் மறுக்காமல் சுயத்தன்மையில் வாழ்கிறவர்; நிலவரம் எதுவாயினும் அதைப் பார்த்தபடியே, பிரதிபலித்துக் கொண்டு மட்டுமே இருக்கிறவர்.

இந்த முற்றான எதிர்மறைத் தன்மையில் படைப்புத் தன்மையுடன் இருப்பது எப்படிச் சாத்தியம் என்று நீ கேட்கிறாய். படைப்புத்தன்மை பற்றி உனக்கு ஒன்றும் தெரியவில்லை. முழுமையான மறுப்பிலிருந்து மட்டுமே படைப்புத்தன்மை எழுகிறது. முழுமையான வெறுமையில் இருந்தே அது வருகிறது. முழு உலகும் ஒன்றுமின்மையில் இருந்தே வந்திருக்கிறது. ஒருநாள் முழு உலகும் ஒன்றுமின்மைக்குள் போய்விடும்.

இப்போது விஞ்ஞானிகள், இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட மிக முக்கியமான கண்டுபிடிப்புகளில் ஒன்றைத் தற்செயலாக வந்தடைந்திருக்கிறார்கள்: அதுதான் கருந்துளை என்பதைக் கண்டுபிடித்ததாகும். கருந்துளை என்று அழைக்கப்பட முடியக்கூடிய சில பகுதிகள் பேரண்டத்தில் உள்ளன. அவற்றின் அருகில் எது வந்தாலும் அது அவற்றால் உறிஞ்சப்பட்டு மறைந்து போகிறது. ஒன்றுமில்லையாகிறது என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

ஆனால் இது கண்டுபிடிப்பின் ஒரு பாதிதான். மறுபாதியை இன்னும் கண்டுபிடிக்கவில்லை. அதுவும் விரைவில் கண்டு பிடிக்கப்படும் என நான் முன்னறிவிக்க முடியும். அதுதான் வெண்துளை கருந்துளையின் மறுபக்கம் இதிலிருந்தே பொருள்கள் ஒன்றுமின்மையில் இருந்து உருவாகி வெளிவருகின்றன. இருத்தல் ஓய்வெடுக்கையில் ஒன்றுமின்மை மேலோங்கி நிற்கிறது. ஓய்வு முடிந்ததும் மறுபடியும் இருத்தல் செயல் தீவிரமாகிறது. வெளிப் படுவதாகிறது. அப்போது படைப்புத் தன்மை மேலோங்குகிறது. ஒன்றுமின்மையில்- சூனியத்தில்- இருந்தே படைப்புத் தன்மை வருகிறது.

எந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் ஒன்றுமற்றவர் ஆவீர்களோ எந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் அகம் அழிந்தவராக இருப்பீர்களோ. அந்த அளவுக்கு அதிகமாய் உங்கள் மூலமாக படைப்புத்தன்மை பாய்ந்தோடுகிறது. நீங்கள் ஒரு வாகனமாக இருப்பீர்கள்.நீங்கள் ஒரு வாயிலாக இருப்பீர்கள். உங்களில் இருந்து பாடல்கள் பொழியும்- இசையும் அன்பும் மகிழ்வும் பொங்கும். நீங்கள் தொட்டதெல்லாம் பொன்னாகும். நீங்கள் சொல்வதெல் லாம் கவியாகும். நீங்கள் செய்வதெல்லாம் கலையாகும். அதில் ஒரு தெய்விகம்- புனிதம் இருக்கும்.

படைப்புத்தன்மை என்பது நீங்கள் செய்யக்கூடிய ஒன்றல்ல. நீங்களே அதற்குத் தடங்கலாக இருக்கிறீர்கள். உங்களால்தான் படைப்புத் தன்மை தடுக்கப்பட்டுள்ளது. வழிவிடுங்கள். குறுக்கே நிற்காதீர்கள். உங்களை வெளியில் எடுங்கள். உங்கள் வெளியானது- உள்வெளியானது- இருத்தலை எதிர்கொள்ள அனுமதியுங்கள். உள் வெற்றிடமானது இருத்தலைப் பிரதிபலிக்கிறது. அந்த பிரதிபலிப்பில் இருந்து படைப்புத் தன்மை பிறக்கிறது.

ஆனால் நான் கூறுவது சாதாரண படைப்புத் தன்மையை அல்ல. நீங்கள் ஒரு கவிதை எழுதுவதையோ, சிறு ஓவியம் வரைவதையோ, சிலை வடிப்பதையோ நான் கூறவில்லை. இந்தக் காரியங்களை படைப்புத் தன்மை இல்லாமலே செய்துவிட முடியும். அவற்றில் உங்களுக்குத் தேவையானது எல்லாம், அந்தக் கலைகளை- அவற்றைச் செய்யும் தொழில் நுணுக்கங்களை- அறிவது மட்டும்தான். படைப்பாளிகள் எனப்படுகிற நூறு பேரில் நிசமான படைப்பாளிகள் ஓரிருவரைக் காண்பதுகூட அரிது 99 சதவீதர் வெறும் ஜோடனைக் காரர்களே; படைப்பாளிகள் அல்லர்; வார்த்தைகளை இட்டுக் கட்டுவது என்பதை அவர்கள் கற்றிருக்கிறார்கள்; புத்திசாலிகளாக-

தந்திரசாலிகளாக, வித்தை அறிந்தவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் செய்வதெல்லாம் படைப்பு அல்ல. பொருள்களை அவர்கள் சேர்த்து ஒப்பேற்றுகிறார்கள். அவை புதிய வடிவங்களில் இருக்கலாம். ஆனால் அசலானது அவற்றில் ஒன்றுமில்லை.

அசலானது எப்போதும் அகங்காரமற்ற நிலையில் இருந்தே வருகிறது. நீங்கள் இல்லாதிருக்கிற நிலையிலேயே எப்போதும் அது வருகிறது. நீங்கள் இல்லாதிருக்கிற போது பிரக்ஞை இருக்கிறது. கடவுள் இருக்கிறது. அப்போது அற்புதம் நிகழத் தொடங்குகிறது- உங்களால் அல்ல. உங்களின் வாயிலாக. அது உங்களுக்குள் ஒரு மாபெரும் தாழ்ச்சி உணர்வை, நன்றி உணர்வை எழுப்புகிறது.

எனவே முற்றான எதிர்மறைத்தன்மை / மறுப்புத் தன்மை பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. அதுவே, இருப்பதற்கான மிக அழகான இடங்களில் ஒன்று முற்றான ஏற்புத்தன்மையின் வழியாகவும் அவ்வெளியில் நீங்கள் வாசம் பண்ண முடியும். ஆனால் அதில் ஒரு அபாயம் உள்ளது. முற்றான உடன்பாட்டுத் தன்மை குறித்து உங்கள் மனம் சூழ்ச்சிகள் செய்யமுடியும். முற்றான எதிர் மறையில் அது உங்களை ஏய்க்கமுடியாது. முற்றான உடன்பாட்டு நிலையில் அது ஏதோ ஒரு வடிவில் இனியும் தப்பியிருக்கலாம் என நம்ப முடியும். உடன்பாட்டு நிலையானது. அபயமளிக்கும் நிலையாக, பாதுகாப்பான நிலையாகத் தோன்றுகிறது.

எனவே கௌதம புத்தரைத் தவிர மற்ற மதங்கள் ஒவ்வொன்றும் உடன்பாட்டுத் தன்மையையே உபதேசிக்கின்றன. புத்தர் மட்டுமே எதிர்மறைத்தன்மையை கையாண்டிருக்கிறார். ஆனால் மற்ற அணுகு முறைகள் அனைத்தின் மூலமாகவும் விழிப்படைந்த மொத்தப் பேரைவிட அதிகமான பேர் கௌதம புத்தர் ஒருவரின் அணுகுமுறையின் மூலம் விழிப்படைத்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிய வேண்டும். இதற்கான எளிய காரணம், முற்றான எதிர்மறையில்/ மறுப்பில் மனத்துக்கு அறவே பாதுகாப்பு இல்லை. அகங்காரத்துக்கு தப்பி ஒளிந்துகொள்ள இடமே இல்லை என்பதுதான். அது முழு மரணமாக இருக்கிறது.

எனவேதான் நீ குழம்புகிறாய். நீ குழம்பி இருப்பதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். உன் குழப்பம் மாபெரும் குழப்பமாக ஆகுமானால் நான் அதிக மகிழ்ச்சி அடைவேன். ஒரு கருந்துளைக்குள் நீ காணாமல் போய் விடுவாயானால் நான் இன்னும் அதிக மகிழ்ச்சி அடைவேன். ஏனென்றால் அதன்பின், ஒரு

வெண்துளை வழியாக நீ வெளிப்படுவதே உனக்குச் சாத்தியமான ஒரே விஷயம் ஆகும். நீ மீண்டும் உயிர்த்தெழுவாய்.

சிலுவை மரணமே உயிர்த்தெழுதலுக்கு வழியாகும். இறப்பே மறுபிறப்பின் வழியாகும்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சட்டோரி என்றால் என்ன? அதை அடைவது எவ்வாறு?**

**பிரதிமா.**

சட்டோரி என்பது உன் சாதாரண இயல்பேதான். அசாதாரணமான ஏதும் அல்ல அது. எனவே அதை அடைவது என்னும் கேள்விக்கே இடமில்லை- ஏனெனில் ஏற்கெனவே அதுதான் நிலவரம்! நீங்கள் அதில்தான் இருக்கிறீர்கள். அதை மறந்துவிட்டிருக்கிறீர்கள்- அவ்வளவே. புற உலகுக்குள் தேவைக்குமேல் புகுந்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் சொந்த ராஜ்ஜியத்தை மறந்து விட்டிருக்கிறீர்கள். உங்கள் சொந்தப் பொக்கிஷத்தை மறந்து விட்டிருக்கிறீர்கள். உங்களையே நீங்கள் மறந்து விட்டிருக்கிறீர்கள். மற்றவர்களைப் பற்றியே அதிகமாய் அக்கறைப் பட்டிருக்கிறீர்கள். உலகத்துக்குள் அதிகமாய் ஈடுபட்டிருக்கிறீர்கள். எனவே உங்களின் உள்ளியற்கையானது உங்களுடன் உரையாட சில ரகசியங்களையேனும் உங்களுக்கு வெளிப்படுத்த நேரமோ இடமோ உங்களால் ஒதுக்க முடியவில்லை. நீங்கள் செயற்கையாகி இருக்கிறீர்கள்.

மையமின்றி யாரும் வாழ முடியாது என்பதால் ஒரு பொய்யான அகங்காரத்தை நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள். உங்கள் மெய்யான மையத்தை மறந்துவிட்டிருக்கிறீர்கள். ஆனால் ஒரு மையமில்லாமல் எவராலும் வாழமுடியாது. எனவே அதற்குப் பதிலாக ஒரு போலி மையத்தை நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள். அதுதான் அகங்காரம். அகங்காரம் என்றால் ஒரு போலி மையத்துடன் வாழ்வது என்றே பொருள்.

சட்டோரி என்பது பொய்யைக் கைவிட்டு, நிசத்துக்குள் பிரவேசிப்பதாகும். நீங்கள் நீங்களாக, உங்களின் இயற்கையான தானாக- சாதாரண தானாக- இருப்பதாகும்.

"சாதாரணம்" என்னும் சொல்லை நினைவில் கொள்ளவேண்டி இருக்கிறது. ஏனெனில் சாதாரணத்தில் மனம் ஆர்வம் கொள்வதே

இல்லை. அசாதாரணமாக இருக்கவே அது விரும்புகிறது. தனிச்சிறப்பாக இருக்கவே அது விரும்புகிறது. சிறப்பாக இருப்பதன் மூலமாக மட்டுமே அகங்காரம் உயிர் பிழைத்திருக்கிறது. அதிக விசேஷமாக, இன்னும் அதிக விசேஷமாக ஆவதற்கே ஓயாமல் அது வருந்தி முயன்றபடி இருக்கிறது. அதிக வளமையாக, அதிக வலிமையாக, அதிக மதிப்பாக ஆக அது விரும்புகிறது. அது பேராசை கொண்டது. எனவேதான் 'சாதாரணம்' என்னும் சொல் மனதுக்கு உகந்ததாக இல்லை. அதுதான் 'சாதாரணம்' என்னும் சொல்லின் அழகு மனதுக்குப் பிடித்ததாக இல்லை என்பதே அதன் அழகு ஆகும்.

மனம் சாதிக்க நிற்பது. சாதாரணத்தையோ சாதிக்கத் தேவையில்லை. ஏற்கெனவே இருப்பது அது. அசாதாரணத்தைத்தான் அடைய வேண்டி இருக்கிறது. அசாதாரணம் என்பதே இலட்சியம் ஆகிறது. அது தொலையில் உள்ளது. எல்லாவித முயற்சிகளையும் நீங்கள் எடுத்தாக வேண்டும். அதற்காக நீங்கள் போராட வேண்டும். அதற்காக நீங்கள் போட்டிபோட வேண்டும். ஏனெனில் போட்டியாளர்கள் பலராக இருக்கிறார்கள்.

சாதாரணமாக இருப்பதற்கு.... போட்டியே இல்லை. சும்மாவே நீங்கள் சாதாரணமாக இருக்க முடியும். யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. போட்டித்தன்மையுள்ள பந்தயத்தில் இருந்து நீங்கள் விடுபட்டுக் கொண்டீர்கள் என்பதற்காக மக்கள் உங்கள்மேல் பரிதாபமே கொள்வார்கள். ஒரு போட்டியாளர் குறைந்தார் என்பதில் அவர்களுக்குத் திருப்தியாகவே இருக்கும்-ஆனால் மேலுக்கு பச்சாதாபப்படுவார்கள். "பாவம்! அவருக்கு என்ன ஆனது? ஏன் அவர் விலகிக்கொண்டார்?" என்பார்கள். விலகிக் கொண்டவர்களுக்கு மதிப்பு அளிக்கப்படுவதில்லை.

புத்தர் ஒரு விலகிக்கொண்ட ஆள். உண்மையான ஆசான்கள் யாவரும் விலகிக் கொண்டவர்களே. சந்நியாசியாக இருப்பது என்றாலே விலகி இருப்பது என்றே அர்த்தம். வெறிபிடித்த பந்தயத்திலிருந்து வெளியே இருப்பதே உள்ளே பிரவேசிப்பதாகும். ஏனெனில் நீங்கள் பந்தயத்தில் இருக்கிறபோது உங்களால் உள்ளே பிரவேசிக்க முடியாது. பந்தயத்தில் ஈடுபடாத போதோ உங்களுக்கு வேறு போக்கிடமில்லை. நீங்கள் உள்நோக்கிப் போக ஆரம்பிக்கிறீர்கள். ஏனெனில் வாழ்க்கை ஒரு ஓயாத இயக்கமாகும். புறம்நோக்கிப் போகாவிட்டால அகம் நோக்கிப் போய்த்தானாக வேண்டும். தொலைதூரத்தில் வருங்காலத்தில் ஒரு இலக்கு

இல்லாவிட்டால் உங்கள் இயல்பில் நிகழ்காலத்தில் இயங்கத் தொடங்குகிறீர்கள். அதுதான் சட்டோரி.

சட்டோரி என்பது மிகச் சாதாரணமானது. சட்டோரி என்றால் உங்கள் இயல்பு. அதனூடாகவே நீங்கள் வந்திருக்கிறீர்கள். அதுவே உங்களின் அசலான முகம். மற்ற முகங்கள் எல்லாம் முகமூடிகள்தான்.

யோக்கா கூறுகிறார்:

> **அறுதியான, முற்றான சத்தியத்துக்கு இசைவாக சீடர் பேசுகிறார்.**
>
> **கிளைகளையும் இலைகளையும் அல்ல வேரையே வெட்டவேண்டும் என்பதை நினைவில் கொள்க.**

உங்கள் துன்பத்தின் வேர் எது? உங்கள் பற்றே. ஆசையே வேர். ஒருவர் ஏதாவது ஒன்றாக ஆக விரும்புகிறார். இதையோ அதையோ அடைய ஆசிக்கிறார். குறிப்பிடத்தக்க- பெயர் சொல்லும்படியான- ஒருவராக விளங்க விரும்புகிறார்.

யோக்கா கூறுகிறார்: வேரை வெட்டு... அதன் பிறகே நீங்கள் சீடராகிறீர்கள். கிளைகளையோ இலைகளையோ அல்ல வேரை வெட்டும், அப்போதே நீங்கள் அறுதி உண்மையை அடைகிறீர்கள். அறுதி உண்மை இறுதியில் எங்கோ இல்லை. இப்போதே இருக்கிற உண்மை அது அது உங்களின் உண்மை. உங்களின் சொந்த ஜீவனே- இருப்பே அதுதான்.

> **ஒப்பற்ற மணியை– உயர் ஞானமணியாகிய சட்டோரியை பெரும் பாலோர் கண்டுகொள்கிறதில்லை. அது தடாகதரின் மறைவிடத்தில், கண்டுபிடிக்கப்படுவதற்காகக் காத்திருக் கிறது.**

அது உங்களின் சுயத்தன்மையில் வாழ்வதாகும். அது உங்களின் சுயத்தன்மையில் மறைந்திருக்கிறது. நீங்கள் எப்படியாக இருந்தாலும் அதை வாழுங்கள். எந்த முரண்பாட்டையும் உருவாக்கிக் கொள்ளாதீர்கள். லட்சிய கருத்தின் மூலமாக வாழாதீர்கள். கருத்துவாதியாக இராதீர்கள். இயல்பாக இருங்கள்- போதும்.

ஆனால் லட்சியவாதியாக இருக்கும்படியே ஒவ்வொருவருக்கும் கற்பிக்கப்படுகிறது. "இயேசுவாகு", "புத்தராகு", "கிருஷ்ணராகு" என்கிறார்கள். நீ நீயாக இரு என யாரும் உங்களிடம் சொல்வதில்லை. நீங்கள் ஏன் இயேசுவாக இருக்க வேண்டும்? ஒரு இயேசுவே போதும். அவரே அழகு. அவர் உலகுக்கு

செழிப்பூட்டுகிறார். பல இயேசுகள் ஆளுக்கொரு சிலுவையை தூக்கிக்கொண்டு திரிந்தால், நீங்கள் போகுமிடம் எல்லாம் ஒரு இயேசுவை நீங்கள் சந்தித்தால்... அது பார்க்க அழகாக இராது. அது இவ்வுலகின் அழகுக்கு அழகு சேர்க்காது. மொத்த உலகையும் அது அசிங்கமாக்கிவிடும். நீங்கள் போகும் திசையில் எல்லாம் ஒரு மகாவீரர் அம்மணமாக நின்று கொண்டிருந்தால்...

இதனால்தான் கடவுள் ஒரு ஆளை ஒரு தடவைக்கு மேல் படைக்கிறதில்லை. அவர் ஒருபோதும் பழசை நகல் எடுப்பதில்லை. அவர் எப்போதும் அசலாக இருக்கிறார். எப்போதும் ஒரு புது ஆளையே கொண்டு வருகிறார். இதற்குமுன் நீங்கள் இருந்ததில்லை. உங்களைப் போல் ஒருவர் இதுவரை இருந்ததில்லை. இனியும் உங்களைப்போல் ஒருவர் ஒருபோதும் இருக்கப்போவதில்லை. இதன் அற்புதத்தைப் பாருங்கள். இதன் மகத்துவத்தைக் காணுங்கள். கடவுள் உங்கள் மீது வைத்திருக்கும் பெருமதிப்பை உணருங்கள். இதைவிடப் பெரிய மதிப்பு என்ன வேண்டி இருக்கிறது? உங்களின் தனித்தன்மையைப் பாருங்கள். நீங்கள் தனித்தன்மையராக ஆகத் தேவையில்லை. ஏற்கெனவே அப்படித்தான் இருக்கிறீர்கள். ஒவ்வொருவருமே தனிச்சிறப்பானவராகவே இருக்கிறார். உங்களின் சாமானியத் தன்மையில்- உங்களின் சுயத்தில்- நீங்கள் தனிச்சிறப்பானவராகவே இருக்கிறீர்கள்.

சட்டோரி, உங்களின் சுயத்தின் மறைவிடத்தில், கண்டு பிடிக்கப்படுவதற்காகக் காத்திருக்கிறது என்கிறார் யோக்கா.

அதை உண்டாக்க வேண்டியதில்லை. அது ஏற்கெனவே இருக்கிறது. அதை நீ கண்டுபிடித்தாலே போதும். உள்ளே போய்க் கண்டுகொள். அது நீண்டகாலமாக காத்துக்கொண்டே இருக்கிறது. நூற்றாண்டுகள்- பலப்பல பிறவிகள்- கடந்துவிட்டுள்ளன. நீயோ வெளிப்போக்கின் போதையில் சிக்குண்டு இருக்கிறாய். ஒருபோதும் உள்ளே போவதில்லை.

தியானமே, சட்டோரியை நோக்கிய முதல் அடிவைப்பாகும். தியானம் நிறைவேறுகிறபோது, தியானம் அறுதி மலர்ச்சியை அடைந்து விடும்போது, தியானத்தின் அந்த அறுதி அனுபவமே சட்டோரியாகும்.

யோக்கா கூறுகிறார்:

> **உலகம் முற்றிலும் மாயையாக இருக்கிறது. இருந்தாலும் மாயை எனச் சுட்டிக்காட்ட முடியும் எதுவும் இல்லை.**

உங்களின் மனதின்மூலமாக நீங்கள் உருவாக்கி இருக்கும் உலகம் மாயையானது. ஆனால் உங்களின் உருவாக்கம் அல்லாத இன்னொரு உலகம் இருக்கிறது. உங்களின் மனம் மறைந்ததும் அவ்வுலகை நீங்கள் கண்டடைகிறீர்கள். அது சுயத்தின் உலகம். அங்கு கிடைக்கும் அனுபவம் முற்றிலும் வேறானது. அதை வருணிக்க எந்த வார்த்தையும் இல்லை. ஆயிரக்கணக்கான மறைஞானிகள் அதை விவரிக்க முயன்றுள்ளார்கள். ஆனால் அதை விவரிக்க இதுவரை ஒருவராலும் முடியவில்லை. இனியும் முடியப் போவதில்லை. அது அவ்வளவு மர்மமானது. எந்த வார்த்தையாலும் வெளிப்படுத்த இயலாது அளவுக்கு அழகானது அது. எந்தக் கவிதையும் அதன் முடிவைக் கண்டதில்லை. எந்த இசையும் அதன் அடியைத் தொட்டதில்லை.

> **இந்த ஞானமாகிய ஒப்பற்ற ஒளி ஒருவரை விழிப்புறச் செய்கிறது.**

மனம் என்றால் பொருள்நாட்டம். மனம் என்றால் இதுவாக அதுவாக இருக்க அலையும் அகங்காரத்தின் ஓட்டம். உங்கள் மனதை நீங்கள் அப்புறப்படுத்தியதுமே, ஒரு பேரொளி உங்களுக்குள் வெடிக்கிறது. நீங்கள் ஞானநிலை பேறு பெறுகிறீர்கள். அதுதான் சட்டோரி. அது வெளியில் இருந்து வருவதில்லை. வேறு ஒருவரால் நீங்கள் ரட்சிக்கப்பட முடியாது. உங்களின் சொந்த ஜீவனாலேயே- உங்களின் சொந்த இயற்கைக் குணத்தாலேயே- நீங்கள் மீட்கப்படுகிறீர்கள்.

> **ஸாஸென்னை ஊகத்துக்கு அப்பால்பட்டுப் பயின்றால் மட்டுமே அது சாத்தியம். கண்ணாடியில் நீங்கள் மேகமூட்டங்களை பார்க்க முடிவது இயல்பானதே. ஆனால் பிரதிபலிப்பை அப்படியே நிறுத்திவைப்பது/ பிடித்துக் கொண்டு தொங்குவது சாத்தியமில்லை.**

ஸாஸென்னைப் பயிலுவதன் மூலம் மட்டுமே அது சாத்தியம்....

ஸாஸென்னைக் கடைப்பிடிப்பதன் மூலம் மட்டுமே சட்டோரி சாத்தியம். ஸாஸென் என்றால்:

எதையும் செய்யாமல் சும்மா இருப்பது.

வசந்தம் வந்ததும் புல் தானே வளர்வது.

உங்கள் சொந்த ஜீவனில் நீங்கள் அப்படியே இளைப்பாறுகிறீர்கள்- எதையுமே செய்கிறதில்லை. (ஏனெனில்) இது செய்தலின்

பிரச்சனை இல்லை; ஜீவனின் பிரச்சனை உங்களின் ஜீவனுக்குள் இளைப்பாறிக் கொண்டே போகிறீர்கள். நீங்கள் உங்கள் முழுத் தூய்மையில், முழு எளிமையில், முழு நிர்மலத்தில் இருக்கும் ஒரு கட்டம் வருகிறது அதுதான் சட்டோரி.

ஸாஸென் என்பது ஒரு அழகிய சொல். அமர்வது என்பது மட்டுமே அதன் பொருள்; தியானம் செய்வது என்பதுகூட அல்ல. உண்மையில் தியானத்தை நீங்கள் செய்ய முடியாது. சும்மா அமைதியாய் உட்கார்ந்திருப்பதே தியானம். அது ஒரு செய்கைகூட அல்ல. ஏதாவது செய்தால் உங்கள் தியானத்தை நீங்கள் கலைக்கிறீர்கள்.

ஒருவர் ஒரு மந்திரத்தை ஓதுகிறார். அவர் தன் தியானத்தைக் கலைக்கிறார். இன்னொருவர் ஏதோ ஒன்றின்மேல் மனத்தைக் குவிக்கிறார். அவரும் தன் தியானத்தைக் குலைக்கிறார். இன்னொருவர் மன ஒருமையில் ஈடுபடுகிறார். இன்னொருவர் செபிக்கிறார். இன்னொருவர் கடவுளைச் சிந்திக்கிறார். இவர்கள் எல்லோரும் இதன்மூலம் தம் தியானத்தைக் கலைக்கிறார்கள். இவை எல்லாம் மனதின் செய்கைகள். செய்கை தொடரும்போது மனம் தொடர்கிறது. செய்கையை நிறுத்தினால் மனம் எங்கிருக்கிறது? செய்கை மறைகையில் மனமும் மறைகிறது. மனதின் மறைவே சட்டோரி.

இது ஊகத்துக்கு அப்பால்பட்டது என்கிறார் யோக்கா. அதாவது அதை நீங்கள் கருத முடியாது. அனுபவிக்க மட்டுமே முடியும். அது உண்மை. அழகு, அன்பு, ஆனந்தம், கடவுள், நிர்வாணம் என்பவற்றின் அறுதி; அனுபவமாகும். உடனடி அனுபவமும் ஆகும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**காமம் மடத்தனமானது என்பதை இன்னும் என்னால் நம்ப முடியவில்லை.**

**யோகேஷ்.**

**நீ** நம்ப முடிவதையோ நம்ப முடியாததையோ சார்ந்தது இல்லை அது. தன்னளவிலேயே அது அப்படித்தான். நான் என்ன செய்ய? காமம் மடத்தனமானதுதான். உனக்காக நான் வருந்துகிறேன். ஆனால் ஒருநாள் இல்லையென்றால் ஒருநாள் நான் உண்மையைச் சொல்ல வேண்டியதே. ஆம்- “காமத்திலிருந்து

கடவுளுக்கு" என நான் உனக்குச் சொல்லி வந்திருக்கிறேன். நீயும் மிகுந்த மகிழ்ச்சியாக இருந்திருக்கிறாய்- "காமத்தில் இருந்து" என்பதை மட்டுமே நீ கேட்டிருக்கிறாய். "கடவுளுக்கு" என்பதை கேட்கவில்லை.

மேலும், எனக்கு எதிராக இருப்பவர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள். எனக்கு ஆதரவாக இருப்பவர்களும் அப்படியே இருக்கிறார்கள். மனிதர் ஏறக்குறைய ஒரே மாதிரிதான் இருக்கிறார். நண்பர்களும் எதிரிகளும் மிகவும் வேறுபட்டில்லை. எதிராளிகள் என்னைத் தவறாக புரிந்துகொள்கிறார்கள். அதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் ஆதரவாளர்களும் என்னைத் தவறாகவே புரிந்து கொள்கிறார்கள். இதை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. எதிராளிகளை மன்னித்துவிட முடியும். ஆதரவாளர்களையே மன்னிக்க முடியாது.

"காமம் மடத்தனமானது" என்று நான் சொன்னதால் பல கோபக் கணைகள் என்னை நோக்கி வந்துள்ளன. என் சீடர்களில் ஒருத்தியாகிய மாயா பின்வருமாறு எழுதி இருக்கிறாள்: "காமம் மடத்தனமானது என்று கூற உங்களுக்கு எவ்வளவு துணிச்சல் இருக்கவேண்டும்!" அவள் புண்பட்டிருக்க வேண்டும். அதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது? ஒரு குறிப்பிட்ட முறையில் நீங்கள் வாழ்ந்துவரும்போது அம்முறையை மடத்தனமானது என விமர்சிப்பதை உங்களால் தாங்க முடிவதில்லை. தாம் மடையர் என அழைக்கப்படுவதை யாருமே விரும்புவதில்லை. நீங்கள் கலங்குவது காமம் பற்றிய கருத்தைக் குறித்தல்ல. உங்கள் வாழ்முறையைக் குறித்தே. அது மடத்தனம் என்றால். அப்படியே நீங்கள் வாழ்ந்து வரும்போது, நீங்கள் மடையர் என்றே அர்த்தமாகும். அது உறுத்துகிறது- வலிக்கிறது. ஆனால் அது வருத்தினாலும் நான் அதைக் கூறவே வேண்டி உள்ளது. ஏனெனில் வாழ்வில் காமத்தைவிட அதிகமான ஒன்று. மேலான ஒன்று, பெரிதான ஒன்று, அதிகக் களிப்பான ஒன்று, அதிக இன்பமான ஒன்று இருக்கிறது என்பதை நீங்கள் உணரும்படி செய்வதற்கான ஒரே வழி அதுதான்.

காமம் ஒரு தொடக்கமே; முடிவல்ல. தொடக்கத்தில் அதை நீங்கள் எடுத்துக் கொண்டால் அதில் தவறு ஒன்றுமில்லை. தொடர்ந்து அதிலேயே நீங்கள் தொற்றி இருக்கத் தொடங்கும் போதே பிரச்சனைகள் எழத் தொடங்குகின்றன. ஒரு பால்புணர்ச்சி பற்றி நான் ஏதாவது சொன்னால் உடனடியாக ஒரு பால்புணர்ச்சியர் எனக்கு எழுத ஆரம்பித்து விடுகிறார்கள். எதற்கு எதிராகவும் எதை

நான் சொன்னாலும் எழுத ஆரம்பித்துவிடும் ஆட்கள் இருக்கிறார்கள். உங்கள் அகங்காரத்தை அது தாக்கினால் உடனடியாக நீங்கள் தற்காக்கத் தயாராகிறீர்கள்- தற்காக்க மட்டுமல்ல. (திருப்பித்) தாக்கவும் தயாராகிறீர்கள்.

யோகேஷ், நீ என்னென்ன செய்தாலும் மடமை ஆகத்தான் இருக்கும். ஏனெனில் தியானத்திலிருந்து விளையாத எதுவும் மடமையே. இது காமத்தைப் பொறுத்த பிரச்சனை மட்டுமல்ல. நீங்கள் உண்ணும் முறை மடத்தனமானது. நீங்கள் உண்ணும் பொருள்கள் மடத்தனமானவை. இதற்கு வேறெந்தக் காரணமும் இல்லை- ஒரே காரணம். நீங்கள் எதைச் செய்தாலும் விழிப்புணர்வு இல்லாமல் செய்கிறீர்கள் என்பதே மடமை என்பது உறக்கம், விழிப்பின்மை.

மக்களை ஒரு தோட்டம் விடுங்கள்- அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள். என்னென்ன விதமான காரியங்களில் அவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை வெறுமனே பாருங்கள். அவர்கள் எதைச் செய்துகொண்டிருந்தாலும், அதுவே சரியான செயல்- மிகவும் அறிவான செயல்- என்னும் எண்ணத்துடன் செய்து கொண்டிருக்கிறார்கள்.

இருபாலர் பள்ளியில் படிக்கும் தடமுலையான் அபி தன் உடை களையும்போது அவள் அறைத்தோழி மூான் "உன் வயிற்றில் பெரிய எம் (14) தடம் உள்ளதே எப்படி" என்றாள்.

அபி மறைக்காமல் சென்னாள். "எனக்கு நிச்சயிக்கப்பட்டவன் இந்த வார இறுதியில் நகரில் இருக்கிறான். அவன் தன் கால்பந்து எழுத்துப் பொறித்த கம்பளிச்சட்டையைப் போட்டுக் கொண்டே உடலுறவு கொள்வதைத்தான் விரும்புவான்."

"எந்தப் பள்ளியில் படிக்கிறான் அவன்- மிச்சிகனிலா (Michigan) மின்னசோட்டாவிலா (Minnesota)" என்று கேட்டாள் மூான்.

"இரண்டிலுமில்லை" இளித்தான் அபி. "அவன் விஸ்கான் சினுக்கு (Wisconsin) போகிறான்!"

ஆனால் அவளுக்கு நிச்சயிக்கப்பட்டவனிடம் போய் இது மடத்தனமானது என்று சொல்லிப்பார், தடியைத் தூக்கிவிடுவான்.

பார்வைக்கு அழகாயிராத, சிறிய உருவம் கொண்ட ஒரு இத்தாலியனுக்கு ஒவ்வொரு இரவும் அவன் வாடிக்கையாக வரும்

குடிப்பிடத்தில் தொடர்ந்து மிக அழகான பெண்கள் மிக எளிதாகக் கிடைத்துக்கொண்டிருந்தார்கள். கடைக்கு வரும் மற்ற பயல்களுக்கு, அப்படிப்பட்ட ஒரு மூஞ்சி மீது பெண்களுக்கு எப்படி அவ்வளவு கவர்ச்சி உண்டாகிறது என்பதை விளங்கவே முடியவில்லை.

ஓரிரவு அவர்கள் கடைக்காரனிடம் கேட்டார்கள். "அந்தப் பேர்வழி வெற்றி மேல் வெற்றி பெறுகிறானே- அதன் ரகசியம் என்ன?"

கடைக்காரன் சொன்னான் "அவனுடைய மற்ற திறமை பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் இங்கு வருபவர்களில் அவனுக்கு மட்டுமே தன் நாக்கால் தன் புருவங்களைத் தொடமுடியும்."

ஆனால் ஒருவனும் அந்த ஆளிடம் "நீ மடையன்" எனச் சொல்ல முடியாது.

நீங்கள் செய்துகொண்டிருக்கும் காரியம்தான் உலகிலேயே மிகவும் புத்திசாலித்தனமான காரியமாக உங்களுக்குத் தோன்றுகிறது. நீங்கள் இருக்க நேர்கிற இடம்தான் நீங்கள் இருக்கவேண்டிய சரியான இடமாக உங்களுக்குத் தோன்றுகிறது. மற்ற ஒவ்வொருவரும் தவறாக இருக்கலாம். நீங்கள் மட்டும் தவறாக இருக்க முடியாது! இந்த நினைப்பைக் குறித்து நீங்கள் விழிப்பாயிருக்க வேண்டி உள்ளது. இது மனித இனத்தின் மாபெரும் மாயைகளில் ஒன்றாக இருக்கிறது. நீங்கள் கவனிப்புடன் இருக்க வேண்டி இருக்கிறது. ஆம், நீங்கள் செய்துவரும் காரியங்களில் பலவும் மடத்தனமானவையாக உள்ளன என்பதைப் பார்க்க நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டி இருக்கிறது. அவை வேறு எப்படி இருக்கமுடியும்? நீங்கள்தான் தியானத்தன்மையில் இல்லையே!

யோகேஷ், நீ புத்தனாகவில்லை. விழிப்புப் பெறவில்லை. எனவே நீ மடத்தனம் அல்லாத ஒன்றைச் செய்ய முடிவது எப்படிச் சாத்தியமாகும்? எனவே நீ எதைச் செய்தாலும் அது விழிப்பற்ற நிலையில் செய்யப்படுவதால் அது மடத்தனமாகவே இருக்கும். ஏன் செய்கிறோம் என்பதைச் சரியாக அறியாமலேயே காரியங்களைச் செய்துகொண்டு போகிறாய் நீ. எப்படி அவற்றைக் கற்றுக் கொண்டாய்? யாரிடமிருந்து கற்றுக் கொண்டாய்? ஏன் கற்றுக் கொண்டாய்? கோடிக்கணக்கான மக்கள் உன்னைப் போலவே மடையர்களாக இருக்கிறார்கள். அவர்களிடம் இருந்து நீ பார்த்தொழுகுகிறாய். அவர்களிடமிருந்து நீ கற்றுக்கொண்டே போகிறாய்.

காமம் மாபெரும் போதைகளில் ஒன்று. உங்கள் உடலியலிலேயே அது இருக்கிறது. உங்கள் ரத்த ஓட்டத்திலேயே ஒரு குறிப்பிட்ட மருந்தை- ரசாயனத்தை- அது கலக்கிறது. உடனடியாக நீங்கள் ஆட்கொள்ளப்படுகிறீர்கள். அதன்பின் நீங்கள் பிரக்ஞையுடன்- உங்கள் சுயஉணர்வில்- இருப்பதில்லை. என்ன செய்கிறோம் என்பதை நீங்கள் அறிவதில்லை. அதைச் செய்யுமாறு நீங்கள் நெருக்கப்படுகிறீர்கள். ஒரு அறியப்படாத சக்தி- அதை இயற்கை, உயிரியல், ரசாயனம், ஹார்மோன்கள் என எப்படி வேண்டுமானாலும்- எப்படி அழைக்க விரும்புவீர்களோ அப்படியெல்லாம் அழைத்துக் கொள்ளுங்கள்- அந்த அறியப்படாத சக்தி. அந்த ஏதோ ஒன்று, ஏதாவது செய்யும்படியாக உங்களை நெருக்குகிறது. நிதானமாயிருக்கும் நேரங்களில் நீங்களும் அதை மடமை என அறிந்திருக்கிறீர்கள். "நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன்? ஏன் செய்து கொண்டிருக்கிறேன்? அதிலிருந்து எனக்கு என்ன கிடைக்கிறது?" இப்படிப்பட்ட ஆரோக்கியமான கணங்களையும் நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

எனவேதான். காமத்தில் திளைத்த பிறகு பல பெண்கள் அழவும் வருந்தவும் செய்கிறார்கள். இதற்கான எளிய காரணம், மொத்தக் காரியமுமே அவ்வளவு அர்த்தமற்றதாகத் தெரிகிறது. ஏன்? ஏனென்றால் ஒரு கணநேரம் அது இன்பம் தரலாம். ஆனால் அதே இன்பத்தையே திரும்பத் திரும்பப் பெறுவது என்பது செய்வதையே திரும்பத் திரும்பச் செய்வது போலத்தான். நீங்கள் எங்கும் சென்று சேர்கிறதில்லை. உடலுறவு கொண்டதும் உடனடியாக ஆண் தூங்கப் போகிறான். இதற்கான எளிய காரணம், அடுத்து வரும் நிதான கணத்தை- ஆரோக்கிய கணத்தை- அவன் தவிர்க்க விரும்புகிறான். அப்போது அதுபற்றிப் புரிந்து கொள்ளும் தேவையில்லாது போகிறது. மறுநாள் காலையில் கண்விழிக்கும்போது அதை எல்லாம் முற்றிலுமாக அவன் மறந்து போயிருப்பான்.

உடலுறவு கொண்டதும் குறைந்தது ஒரு மணி நேரம் ஸாஸென்னில் அமருங்கள். அப்போது நான் கூறுவதை என்னவென்று நிச்சயம் காண்பீர்கள். காமம் மடத்தனமானது என்று கூறும்போது நான் என்ன பொருள் கொள்கிறேன் என்பதைப் புரிந்துகொள்வீர்கள். உடலுறவில் ஈடுபட்டபின் ஒரு மணி நேரம் ஸாஸென்னில் அமர்ந்து, நடந்திருக்கிறதை வெறுமனே கவனிப்பது என்று உறுதி கொள்ளுங்கள். நீங்கள் அதன் எசமானாய் இருந்தீர்களா அல்லது வெறும் அடிமையாய் இருந்தீர்களா? நீங்களே எசமானாக

இருந்தீர்கள் என்றால் அது மடமை அல்ல. நீங்கள் அடிமையாக இருந்தீர்கள் என்றால் அது மடமை. ஏனெனில் அதை திரும்பத் திரும்பச் செய்வதன் மூலம் உங்கள் அடிமைத்தனத்தை மென்மேலும் வலுவாக்குகிறீர்கள். உங்களின் அடிமைத்தனத்தை ஊட்டி வளர்க்கிறீர்கள்.

யோகேஷ், நான் உனக்குக் கூறுவதை எல்லாம், தியானத்தின் மூலமாக மட்டுமே நீ புரிந்துகொள்ள முடியும். வாதத்தின் மூலம் முடிவு செய்கிற விஷயம் அல்ல இது. உங்களின் சொந்த தியானத்தின் மூலம்- உங்களின் சொந்தப் புரிதலின் மூலம்- உங்களின் சொந்த விழிப்புணர்வின் மூலம் மட்டுமே தீர்மானிக்க முடிவது இது.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் விபாசனாவில் இருக்கிறேன். எனக்கொரு சிரிப்புத் துணுக்குச் சொல்லுங்கள்!**

**ஆனந்த் கந்தர்தாஸ்,**

**உ**னக்காக நான் உண்மையாகவே இரங்குகிறேன்!

விபாசனா என்பது உண்மையாகவே கடுமையானது! இந்தப் பூவுலகத்திலேயே நரகத்தினூடாக நீங்கள் கடந்துசெல்ல முடிவதற்காகவும் உண்மையான நரகத்துக்கு நீங்கள் போக அவசியம் ஏற்படாதிருப்பதற்காகவும் புத்தர் அதை உருவாக்கினார். உங்கள் கடந்தகால வினைகள் அனைத்திலிருந்தும் உங்களைச் சுத்திகரிக்கும் ஒரு நிகழ்முறையாகும் விபாசனா. அதை முடித்துவிடுவதே நல்லது! நீண்ட நேரத்துக்கு அமைதியாக அமர்வது எப்படி என்பது உங்களுக்குத் தெரியாததால்தான் அது ஒரு சித்திரவதையாக இருக்கிறது. உங்கள் மனம் ஆயிரம் வழிகளில் பிரயாணம் மேற்கொள்கிறது. உட்கார்ந்து உட்கார்ந்து உட்கார்ந்து கொண்டே இருக்கையில்... உங்களுக்குத் தூக்கக் கலக்கமாக இருக்கிறது. ஆனால் அதற்கு அனுமதி இல்லை. நீங்கள் தூங்கி விழத் தொடங்கினால் தலைமேல் அடி விழுகிறது- உங்களை தன்உணர்வுக்கு திரும்பவும் கொண்டு வருமளவுக்கு செமத்தியான அடி உண்மையாகவே தரப்படுகிறது! உங்களால் தப்பித்துக்கொள்ளவும் முடிவதில்லை. ஏனெனில் விபாசனாவை நான் பாட்டுக்கு வானளாவப் புகழ்ந்து கொண்டே போகிறேன். விபாசனா இல்லாமல் சட்டோரி இல்லை. ஞானநிலை பேறு இல்லை என்று சொல்லிக்கொண்டே இருக்கிறேன்.

எனவே நீங்களும் சொல்கிறீர்கள்.. "அப்படியானால் சரி. எப்படியாவது நான் அதன் வழியாக கடந்து போவேன். இது சில நாட்கள் மட்டுமே பிடிக்கிற காரியம்தானே? மேலும் ஒரு விஷயம் உறுதி- அதாவது பலரும் உயிரோடு மீண்டிருக்கிறார்கள். எனவே உயிருக்கு ஆபத்து இல்லை!" ஆம்- உங்கள் மூட்டுகள் நோகின்றன. உங்கள் உடம்பு வலிக்கிறது. நீங்கள் மிகவும் அமைதியின்றி உணர்கிறீர்கள். ஆனால் நீங்கள் அசைவதற்கு அனுமதிக்கப்படு வதில்லை. புத்தர் சிலைபோல் அசையாமல் நீங்கள் உட்கார்ந்து கொண்டு, மிகவும் சலிப்புத் தருவதான ஒரு காரியத்தைச் உங்கள் மூச்சை கவனித்துக் கொண்டிருக்கும் காரியத்தை- செய்ய வேண்டி இருக்கிறது. இப்போது, ஒரு புத்திசாலி மனிதர் செய்வதற்கான காரியமா என்ன இது? இன்னும் இதுபோல் ஆயிரக்கணக்கான கேள்விகள் எழுகின்றன. "என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ? எவ்வளவு அருமையான ஆள் நீ- இப்படி உட்கார்ந்து உன் மூச்சையே கவனித்துக் கொண்டிருப்பதாவது!" நீங்கள் உங்கள் காதலியுடன் குதூகலிக்க முடியும். ஆயிரத்தோரு வேறு வேலை செய்ய முடியும். இன்னும், சுவையான உணவுப் பண்டங்கள் தோன்றுகின்றன. ஸாஸென்னில் உட்கார்வதை விட புளூ டயமண்டில் (உணவகம்) உட்கார்வது எவ்வளவோ மேல் எனத் தோன்றுகிறது! "ஏன் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறேன்? என்ன இங்கே செய்து கொண்டிருக்கிறேன்?"

மனம் உங்களிடம் கேள்வி தொடுத்துக்கொண்டே இருக்கிறது. உண்மையாகவே அதிலிருந்து விடுபட வழியே இல்லை போல் தோன்றுகிறது. ஏனெனில் இதெல்லாம் நீங்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டதுதான். யாரும் உங்களைக் கட்டாயப்படுத்தவில்லை. அது மட்டுமல்ல. அதற்காக நீங்கள் கட்டணமும் செலுத்த வேண்டி இருக்கிறது! நரகவேதனை அனுபவிப்பதற்கு கட்டணம் வேறு செலுத்த வேண்டி இருப்பதை எப்போதாவது கேள்விப்பட்டிருக் கிறீர்களா? ஆனால் அதற்காக நீங்கள் பணம் செலவழிக்கும்போது, அந்தத் துன்பம் தகுதியானதே என நீங்கள் நினைக்கிறீர்கள்.

முல்லா நசுருதீன் சொன்னார்: முதன்முதலாக அவர் இந்தியாவுக்கு வந்தபோது அவருக்கு மிகுந்த பசியாக இருந்ததாம். இமயமலையின் வழியாக அவர் நுழைந்தபோது ஒரு மனிதன் ஒரு வினோதமான பழத்தை விற்றுக்கொண்டு எதிர்ப்பட்டான். அந்தப் பழம் மிகவும் சிவப்பாக, மிகவும் அழகாக இருந்தது. விலையைக் கேட்டார். "ஒரு கூடைப் பழத்துக்கு இரண்டே பைசா" என்றான்

அம்மனிதன். எனவே கூடைப் பழத்தையும் விலைக்கு வாங்கிச் சாப்பிட ஆரம்பித்தார் முல்லா. அது செம காரம்! கண்களில் கண்ணீராய் கொட்டியது!

இதைக் கவனித்துக் கொண்டிருந்த ஒரு மனிதன் சொன்னான். "என்ன செய்துகொண்டிருக்கிறீர் நீர்? இது சாதாரணப் பழமல்ல. செத்துகித்து விடப்போகிறீர்! இது மருத்துவ குணமுடைய ஒரு பழம். சில குறிப்பிட்ட நோய்களுக்காக மிகச் சிறு அளவில் உட்கொள்ள வேண்டியது இது. நீர் என்னவென்றால்... உமக்குப் பைத்தியம் பிடித்துவிடும்!"

அவர் சொன்னார், "எது வேண்டுமானாலும் நடக்கட்டும். ஆனால் இதை நான் இரண்டு பைசா விலைகொடுத்து வாங்கி இருப்பதால் இதை முழுவதும் நான் சாப்பிட்டே ஆகவேண்டும்!"

மேலும் அவர் சொன்னார்: "நான் அழுதுகொண்டே, கண்ணீர் பெருக்கியபடியே அதை முடித்துவிட்டேன். அந்த சனியன்பிடித்த ஒரு கூடை சரக்கையும் சாப்பிட்டுவிட்டேன்!"

காசு செலுத்திவிட்டால் நீங்கள் தப்பிக்க முடிவதில்லை. மேலும் நீங்கள் தப்பிக்க எந்த சந்துபொந்துகளையும் நாங்கள் விட்டுவைப்பதும் இல்லை. யாருமே தப்ப முடியாத அளவுக்கு எல்லா நடவடிக்கைகளையும் எடுத்திருக்கிறோம்!

கற்பழிப்பு, கொலை, கொள்ளை, கடத்தல் ஆகிய குற்றங்களுக்காக ஒரு மனிதன் சிறையில் இருந்தான்.

வழக்கறிஞர் சொன்னார், "உன் வழக்கில் ஒரு தப்பிக்கும் வாய்ப்பை நான் கண்டுபிடித்திருக்கிறேன். 1911 சனவரி 6 அன்று அப்ரமோவிட்சுக்கும் அர்கரோவுக்கும் இடையில் நடந்த வழக்குத் தீர்ப்பு ஏடு III பிரிவு II பக்கம் 6 பத்தி 13இல் இதற்கு விடை இருக்கிறது என நினைக்கிறேன். கவலைப்படாதே. உன்னை நான் வெளியே கொண்டு வந்துவிடுகிறேன். இதை என்னிடம் விட்டுவிடு-போதும், நான் திங்கள்கிழமை வாஷிங்டனுக்குப் புறப்படுகிறேன். வெள்ளிக்கிழமை திரும்பிவிடுவேன். அதற்கிடையில்- தப்பித்துவிட முயற்சிசெய்!".

முதற்கண் நாங்கள் எந்தத் தப்பிக்கும் வாய்ப்பையும் விட்டுவைப்பதில்லை. தப்பிக்க வாய்ப்பும் இல்லை. ஏனெனில் ஒருவர் விபாசனாவில் இருந்து தப்பிக்கும் போதெல்லாம் நான் அவரை மறுபடியும் அதற்கே அனுப்புகிறேன். விபாசனாவை அவர் அனுபவித்தே ஆக வேண்டும். அதற்கான ஒரே காரணம், அது

உங்களை- உங்கள் பதற்றத்தை, உங்கள் பரபரப்பை, உங்கள் அசங்கியத்தை, உங்கள் பைத்திய நிலையை- நீங்களே எதிர் கொள்ளும்படி கட்டாயப்படுத்துகிறது. உங்களுக்குள் நீங்கள் சுமந்து கொண்டிருக்கும் குப்பை அனைத்தையும் நீங்களே காணும்படி அது உங்களைக் கட்டாயப்படுத்துகிறது. கடந்து செல்ல இது மிகவும் அத்தியாவசியமான நடவடிக்கைகளில் ஒன்றாக இருக்கிறது.

எதையாவது நீங்கள் கடந்து செல்ல விரும்பினால், முதலில் அதை நீங்கள் எதிர்கொண்டாக வேண்டும். அப்படி எதிர்கொள் ளாமல் அதை நீங்கள் கடந்து செல்லுதல் என்பது இல்லை. குறுக்குவழி கிடையாது. பக்க வழியில் கடக்கும் வாய்ப்பு இதில் இல்லை.

புத்தர் மற்றவரின் துன்பத்தில் இன்பம் காண்பவர் என்பதோ உங்களை அவர் சித்திரவதை செய்ய விரும்புகிறார் என்பதோ அல்ல, நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பதை நீங்களே உணரும்படி செய்ய மட்டுமே இருக்கிறார் அவர். உங்கள் அன்றாட வியாபாரங்களில், உங்கள் அன்றாட விவகாரங்களில் நீங்கள் ஈடுபட்டுக் கிடக்கும்வரை ஒருபோதும் அதை நீங்கள் உணரப் போவதில்லை. காலைமுதல் இரவுவரை முற்றிலும் நீங்கள் விஷயங்களில் ஈடுபட்டிருப்பதால்; உள்ளே பார்க்கவோ- உங்களையே உணரவோ, நீங்கள் யார் எங்கே இருக்கிறீர்கள்- என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் காணவோ உங்களுக்குச் சிறிதும் நேரமோ இடமோ இருப்பதில்லை.

விபாசனா உங்களை நெருக்குகிறது. போவதற்கு இடமில் லாதபடி செய்கிறது. உங்கள் மூச்சையே நீங்கள் கவனித்தாக வேண்டி இருக்கிறது. இரவும் பகலும் உங்கள் எண்ணங்களையே நீங்கள் பார்த்தாக வேண்டி இருக்கிறது.

ஏழாவது நாளுக்குப் பிறகு ஏதோ ஒன்று படியத் தொடங்குகிறது. நீங்கள் விட்டுக் கொடுக்காமல் இருந்தால்- விடாப்படியாக இருந்தால்- போதுமான அளவுக்குப் பொறுமையாக இருந்தால், உங்கள் உடம்பு படியக் கற்கிறது. உங்கள் மனம் படியக் கற்கிறது. உங்கள் மூச்சு அமைதியாக- நிதானமாக ஆகிறது. ஏறக்குறைய தென்படாத அளவுக்கு ஆகிறது. ஆனால் ஏதோ ஒன்று மாறியிருப்பதை நீங்கள் உணர முடிகிறது. சூழல் மாறி இருக்கிறது. இப்போது நீங்கள் பதைப்புடன் இல்லை. படபடப்பாக இல்லை. திடீரென சூரியன் உதித்துவிட்டதுபோல், பைத்தியக்காரத்தனமான போராட்டம் எல்லாம் மறைகிறது. நரகம் முடிந்தது. ஒரு பெரும்

சமாதானம்- புயலுக்குப் பின்வரும் அமைதி- உங்கள்மேல் இறங்குகிறது. எல்லாமே சுத்தமாக- பரிசுத்தமாக- துளி மாசும் இல்லாமல் தூய்மையாக, நிர்மலமாகத் தோன்றுகிறது. உங்கள் உணர்வில் கவிந்திருந்த ஒரு தூசிப் படலம் மறைந்துவிட்டது போல் தோன்றுகிறது. உங்கள் உணர்வு ஊடுருவிக் காணக்கூடியதாகத் தெரிகிறது. வாழ்க்கையிலேயே முதல் முறையாக மரங்களின் பச்சை சிவப்பு- பொன்னிறங்களை நீங்கள் பார்க்க முடிகிறது. முதல் முறையாக பறவைகளின் இன்னிசையை நீங்கள் கேட்கமுடிகிறது- உங்கள் கண்களில் இருந்த திரை போன்ற ஒன்று, உங்கள் காதுகளை அடைத்திருந்த தடை போன்ற ஒன்று மறைந்துவிட்டதைப் போல் இருக்கிறது. திடீரென நீங்கள் லேசாக, மிக லேசாக உணர்கிறீர்கள்.

தேவதூதர்கள் தம்மை மிகவும் லேசாக எடுத்துக்கொள்கிற படியால்தான் பறக்க முடிகிறது என்பார்கள். நீங்களும் திடீரென மிகவும் லேசாக, மிகவும் ஒளி நிரம்பியவர்களாக உணர்கிறீர்கள்- உங்களால் பறக்கமுடியும்போல், இதோ பறந்தே விடுபவர்கள்போல் உணர்கிறீர்கள். புவிஈர்ப்பு மறைந்துவிட்டிருக்கிறது. வேறொரு உலகில்- அருள் உலகில்- நீங்கள் பிரவேசித்திருக்கிறீர்கள்.

அதன்பின் சுந்தர்தாஸ். ஒரு வித்தியாசமான தன்மை கொண்ட சிரிப்பு உன்னிடமிருந்து எழுவதை நீ அறிவாய். அது உன் உதடுகளில் பூசப்படும் சிரிப்பல்ல. உன் உள்ளத்திலிருந்து பூரிக்கும் சிரிப்பு. அப்போது நீ காரணமே இல்லாமல் சிரித்துக் கொண்டிருப்பாய். நீ சிரிப்பாய் இருப்பாய். அதுவே ஸென் சிரிப்பு- அதற்கு உள்நோக்கமில்லை. சுத்த ஆனந்தத்தில் இருந்து சுத்த களிப்பில் இருந்து சுத்த உள்ளொளியில் இருந்து அது வருகிறது.

ஆம். ஒரு அழகான சிரிப்புத் துணுக்கு உனக்குத் தேவை!

ஜெனிவாவில் உலக மதங்களின் மாநாட்டில் ஒருநாள் முழுவதும் விவாதங்கள் நடைபெற்ற பிறகு நடந்த விருந்தில் ராபி ஸக்கர்மன், தான் இருந்த அதேபந்தியில் ஃபாதர் ஓமல்லேயும் இருக்கக் கண்டார். ராபி (யூதகுரு) யூதமரபுச்சட்டப்படி தயாரிக்கப் பட்ட கன்று இறைச்சியில் பங்கெடுத்துக் கொண்டிருந்தார். கிறிஸ்தவப் பாதிரியார் பக்குவம் செய்த பன்றித் தொடையின் பெரிய துண்டு ஒன்றை வெட்டிக்கொண்டிருந்தார்.

"இந்த பன்றி இறைச்சியில் கொஞ்சத்தை முயன்று பார்க்கிறீரா ராபி" என கேட்டார் பாதிரி, "மிகவும் அருமையாக இருக்கிறது!"

"அச்சோ வேண்டாம்" என்றார் சக்கர்மன். "அது எங்கள் மதத்துக்கு எதிரானது."

"அட, ஆனால் இது மிகவும் சுவையாக இருக்கிறது! உண்மையாகவே உமக்கு ருசிபார்க்க விருப்பமில்லையா?"

"இல்லை, நன்றி" என்றார் ராபி. "அபிரகாமின் காலம்தொட்டு பன்றியானது எம் மக்களால் தூய்மையற்றதாக- தீட்டாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. பன்றி மாமிசம் எந்த வடிவிலும் எமக்கு விலக்கப்பட்டிருக்கிறது."

"அடடா, நீர் எப்பேற்பட்ட சுவையை இழக்கிறீர் என்பதை அறியமாட்டீர் ராபி" என்றார் பாதிரி, இன்னொரு துண்டு பன்றி இறைச்சியை வாய்க்குள் தள்ளிக்கொண்டே.

"அச்சோ! ஆனால் என் மனைவி சமைக்கும் மீன்கறியை நீர் ருசி பார்த்திருக்க வேண்டும். உங்கள் மனைவி எப்படி ஃபாதர்? அவர் சமையலில் சிறந்தவரா?"

"அதை என்னால் சொல்ல முடியாது ராபி. ஏனெனில் எனக்குத் திருமணம் ஆகவில்லை."

"திருமணம் ஆகவில்லையா? அப்படியானால் போடுவதற்கு என்ன செய்வீர்கள்?"

"எதற்கென்று சொன்னீர்?"

"அதாவது உடலுறவுக்கு என்ன செய்வீர்கள்?"

"உடலுறவா?!" என்றார் பாதிரி. "அந்தோ ராபி, எங்கள் மதத்தில் எங்களுக்கு- எம் கர்த்தரின் ஊழியர்களுக்கு- அது- மாமிசத்தின் வழியில் பங்கெடுப்பது- விலக்கப்பட்டிருக்கிறது."

"அப்படியானால் நீங்கள் ஒருபோதும் உடலுறவு கொண்டதில்லையா?" என்று கேட்டார் ராபி.

"இல்லவே இல்லை" என்றார் பாதிரி.

"ஓகோ! அதை நீங்கள் முயன்று பார்க்கவேண்டும்... பன்றி இறைச்சியைக்காட்டிலும் அது அருமையானது!"

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**அழகிய எதுவும் இத்தாலியில் இருந்து ஒருநாளும் வந்த தில்லை என்று உண்மையாகவே நீங்கள் நினைக்கிறீர்களா?**

**கௌதமா.**

இத்தாலியைப்பற்றிய விவரங்களில் நான் நிபுணன் இல்லை. இத்தாலிய இடியாப்பத்தைக்கூட (ஸ்பாகட்டியைக் கூட) இதுவரை நான் ருசிபார்த்ததில்லை!

என் முதல் இத்தாலிய சந்நியாசியாகிய வீத் சந்தே ஒருதடவை எனக்காக ஸ்பாகட்டியை தயாரித்தாள். ஆனால் அதிலிருந்து சகிக்க முடியாத நாற்றம் வீசியது- இத்தாலியர்களைப் போலவே! எனவே அதை என்னால் சாப்பிட முடியவில்லை. வீத் சந்தேவும் மிகச்சரியான இத்தாலியர்களில் ஒருத்தி: தன் வாழ்நாள் முழுவதிலும் ஒருதடவையாவது அவள் குளித்திருப்பாள் என நான் நினைக்கவில்லை!

எனவே இத்தாலியில் இருந்து அழகிய எதுவும் எப்போதாவது வந்திருக்கிறதா என்பதை உண்மையாகவே நான் அறியேன். ஆனால் நிபுணர்கள் சொல்வதை உனக்கு நான் திருப்பிச்சொல்ல முடியும். இத்தாலியில் இருந்து இரண்டு அழகான விஷயங்கள் வந்திருப்பதாக அவர்கள் சொல்கிறார்கள். ஆனால் அந்த இரண்டும் சோபியா லாரனுக்குச் சொந்தமானவை.

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**முழு உலகிலும் வைத்து நானே மிகவும் பேராசையுள்ள மனிதனாக இருக்க வேண்டும். இதைக் குறித்து நான் என்ன செய்ய வேண்டும்?**

கமல்,

நீ வருத்தப்பட்டுச் சொல்கிறாயா பெருமையாகச் சொல்லிக் கொள்கிறாயா? உலகம் மிகவும் பெரியது ஆயின் முழு உலகையும் பற்றி உனக்கு என்ன தெரியும்? எதிலும் முதலாவதாக இருப்பது அசாத்தியம். பேராசையிலும்கூட நீ முதலாவதாக வர முடியாது. ஏனெனில் மக்கள் வட்டங்களிலேயே வளைய வருகிறார்கள். யாரும் இதில் முதலாவதாக இல்லை. உன் பேராசையின்மீது அதிகமாக அக்கறை செலுத்தாதே. அதேபோது குற்ற உணர்வும் கொள்ளாதே. எல்லோருமே பேராசைக்காரர்கள்தான்.

சாவு என்பது உனக்குக் கிடையாது என்பதை அறியாத வரை நீ பேராசையாகத்தான் இருப்பாய். சாவினால்தான் பேராசை வருகிறது. இதைப்பற்றி நீ ஒருபோதும் எண்ணியிராமல் இருக்கலாம். ஆனால் சாவைக் குறித்து நாம் அஞ்சுவதால்தான் பேராசை வருகிறது. சாவு இருப்பதால் வாழ்வை எவ்வளவு முடியுமோ

அவ்வளவுக்கு அனுபவித்துவிட நாம் விரும்புகிறோம். நாம் பேராசைக்காரர்களாய் இருக்கிறோம். நாம் அதிகமாக உண்ண விரும்புகிறோம். எத்தனை பெண்களுடன் அல்லது ஆண்களுடன் சேர முடியுமோ அத்தனை பேருடனும் சேர விரும்புகிறோம். எவ்வளவு பணம் சேர்க்க முடியுமோ அவ்வளவும் சேர்க்க விரும்புகிறோம். ஏனென்றால் சாவு இருக்கிறது. "சீக்கிரமே எல்லாம் முடிந்துவிடும். எனவே அது நேர்வதற்குள் சாத்தியமான எல்லாவற்றையும் நுகர்ந்துவிடு. எதையும் அனுபவிக்காமல் விட்டுவிடக் கூடாது." இப்படித்தான் பேராசை எழுகிறது. பேராசை என்பது சாவுபயமே தவிர வேறில்லை. பயத்தில் இருந்தே பேராசை எழுகிறது. பயந்தாங்கொள்ளி மனிதரே பேராசை மனிதர் ஆகிறார்.

உண்மையாகவே பயமற்ற மனிதர் பேராசை கொள்ளவே மாட்டார். அவர் பங்கிடுகிறார். அவர் உடைமை மனப்பான்மை கொண்டவர் அல்ல. கொடுப்பதில் அவர் மிகவும் மகிழ்கிறார். தன்னிடம் உள்ளதை எல்லாம் அவர் தந்தபடியே இருக்கிறார். தருவதில் உள்ள மகிழ்ச்சிக்காக மட்டுமே அவர் தந்துகொண்டே போகிறார்.

உன் சாசுவதத்தை நீ அனுபவிக்காத வரை- கமல்- நீ பேராசைக்காரனாகவே இருப்பாய். சாவு உன்னில் எந்த வடுவையும் உண்டாக்கப் போவதில்லை. சாவு உன்னில் எந்த மாற்றத்தையும் உண்டாக்கப் போவதில்லை. ஏனெனில் சாவு என்பது உடலுக்கு மட்டுமே. உங்கள் உணர்வு தொடர்கிறது. உங்கள் உணர்வு மட்டுமே ஒரே நிரந்தர நிகழ்வு. மற்ற யாவும் மறைகிறது. ஆனால் உங்கள் உணர்வோ மாறுவதில்லை. ஆனால் உணர்வைப் பற்றி உனக்கு எதுவும் தெரியாது. எனவேதான் பேராசை.

பேராசைப்படாதே என உலகில் உள்ள மதங்கள் அனைத்தும் போதித்து வந்திருக்கின்றன. ஆனால் அதனால் எந்த வேறுபாடும் நேரவில்லை. அது மக்கள் மறு உலகின் மீது பேராசை கொள்ள மட்டுமே செய்திருக்கிறது. வானகத்தின்மீது சொர்க்க இன்பங்களின் மீதும் மக்கள் பேராசைகொள்ள மட்டுமே அது செய்திருக்கிறது. ஆனால் அவர்களின் பேராசை மாறிவிடவில்லை. சொல்லப் போனால் அதிகரித்திருக்கிறது?

பேராசைப்படாதே என உனக்கு நான் சொல்லுவதில்லை; உணர்வாயிரு. அதிக உணர்வாயிரு என்றே சொல்கிறேன். நீயே ஆச்சரியப்படுவாய்; உன் உணர்வு வளர வளர பேராசை மறைந்து போக ஆரம்பிக்கிறது. காய்ந்த சருகுகள் போல் உதிர ஆரம்பிக்கிறது.

எந்தத் தடயத்தையும் அது தன்பின் விட்டுச் செல்வதில்லை.

ஸ்கார்ஸ்டேலைச் சேர்ந்த கருமியான ஸ்கோல்னிக் ஒருநாள் காலையில் கண்விழித்ததும் இரவே தன் மனைவி செத்து விட்டிருந்ததை கண்டான். தன் பக்கத்தில் கிடந்த அந்தச் சடலத்தை ஒருதடவை பார்த்தான். பின் படுக்கையில் இருந்து துள்ளி எழுந்து கூடத்திற்குள் பாய்ந்தான்.

அங்கிருந்து, சமையலறையில் இருந்த வேலைக்காரியை அழைத்தான், "டெய்சி, படிக்கட்டுக்குப் பக்கம் வா, சீக்கிரம்!"

"வந்துவிட்டேன்" என கத்தினாள் அவள், "என்ன விஷயம்?"

"இன்று காலை உணவுக்கு ஒரு முட்டை போதும்!"

இதை விட நீ முதலில் வரமுடியுமா?

உள்நாட்டு வருவாய்த்துறை, பெர்ன்ஸ்டீனை இழுத்துப் பிடித்து அவன் அம்மா இறந்து 5 ஆண்டுகள் ஆகி இருந்தும் அவன் ஏன் அவளை ஒரு விதிவிலக்காகக் கொள்கிறான் என்பதை அறிய விரும்பியது. அதற்கு அவன் சொன்னான், "ஆனால் அம்மா இன்னும் என் நெஞ்சில் உயிரோடுதான் இருக்கிறாள்."

ஒரு யூத ஜோடி ஒரு வணிக வளாகத்துக்குப் போனது. வளாகத்தின் முன்னே இருந்த மற்ற சரக்கு வண்டிகளுடன் தம் வண்டியையும் குழந்தையையும் விட்டுவிட்டு உள்ளே சென்றது. சாமான்கள் வாங்கிய பின் அவர்கள் வீடுதிரும்ப ஆரம்பித்தார்கள். சில கடைகளைத் தாண்டி வந்ததும் வண்டியைத் தள்ளிவந்த கணவனிடம் மனைவி கலவரத்துடன் அலறினாள் "ஐயையோ, இது நம்ம குழந்தை இல்லீங்க."

"தொறக்காத, மூடு!" என்றான் அவன், "இது நல்ல சரக்கு வண்டி."

பேராசையில்தான் மக்கள் வாழ்ந்து வருகிறார்கள், கமல். இவர்களில் நீ முதலாவதாக வருவது கஷ்டம்! நீ பேராசையாய் இருக்கிறாய் என்பதை உணர்வதேகூட ஒரு நல்ல அறிகுறிதான். அப்படி நீ உணர்வதாயின் அது ஒரு நல்ல தொடக்கமாகும். அதைக்குறித்து குற்ற உணர்வு கொள்ளக் கூடாது என்பதை நினைவில் வை. ஏனெனில் அதன்மூலம் உன் உணர்வை மறுபடியும் நீ இழந்துவிடுவாய். மனம் வருந்தத் தொடங்காதே. ஏனெனில் மனம் வருந்துவது என்றால் இப்போது இல்லாத கடந்தகாலத்தைக் குறித்து நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய் என்று பொருள். பேராசை

இல்லாதிருக்க முயற்சிக்கத் தொடங்காதே. ஏனெனில் நீ செய்வ தெல்லாம் பேராசையே- பேராசைப்படாதிருக்க முயல்வதுவும் பேராசையிலேயே வேர் கொண்டிருக்கும். பின் பேராசைப் படாதிருப்பதில் பேராசைப்படுபவன் ஆகிவிட முடியும்.

பேராசைப் படாதிருப்பதில் மிகுந்த பேராசை உள்ளவராகி ஒவ்வொன்றையும் துறந்துகொண்டே செல்லும் மனிதர்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்களின் பேராசை ஒரு புதிய திருப்பத்தை எடுத்துள்ளது. இப்போது அது தலைகீழாக நிற்கிறது- சிரசாசனம் செய்கிறது! இப்போது அவர்கள் பேராசைப்படாதிருப்பதன் மேல் பேராசைப்படுகிறார்கள். ஆசையின்மை என்பதே அவர்களின் ஆசையாக- அவர்களின் ஆஸ்தியாக- அவர்களின் அதிகாரமாக ஆகியிருக்கிறது. இப்போது அவர்கள் அவர்களின் பேராசை யின்மைக்காக மதிக்கப்படுகிறார்கள். முன்பு அவர்களிடம் இருந்த பணத்துக்காக அவர்கள் மதிக்கப்பட்டார்கள். இப்போது பணத்தை துறந்ததற்காக அவர்கள் மதிக்கப்படுகிறார்கள். இப்போது அவர்கள் தம்மால் முடிந்தவரை அதிகமாக- அதிகபட்சமாக துறந்து கொண்டே போக ஆரம்பிக்கிறார்கள். அவர்கள் தம் ஆடைகளைத் துறந்துவிட முடிகிறது. நிர்வாணமாக நிற்க முடிகிறது. எல்லாவற்றையும் அவர்கள் துறந்துவிட முடிகிறது. ஆனால் அடிமனதில் பேராசை அப்படியே இருக்கிறது. இப்பவும் அவர்கள் பேராசைக் காரர்களாகவே இருக்கிறார்கள். அது சுத்தமான பேராசையே தவிர வேறில்லை. இப்போது அவர்கள் பரலோகத்தில் தமக்கு பரிசு கிடைக்கும் பெரிய சன்மானம் தமக்கு காத்திருக்கிறது என நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்.

எனவே பேராசை இல்லாதவன் ஆக முயலாதே. பேராசைக்காரனால் அதைக் குறித்து எதையும் செய்ய முடியாது. மேலும் மற்ற விஷயங்களிலும் அதுதான் சங்கதி. கோபமில்லாமல் இருக்க முயலும் கோபக்காரன் தன் வாழ்வை மாற்றிக் கொள்ளப் போவதில்லை. அகிம்சாவாதியாக இருக்க முயலும் இம்சாவாதி இனியும் வன்முறையாளனாகவே இருப்பான். இனி அவனது வன்முறையானது நுட்பமான வேறு வடிவங்களை எடுக்கும்.

சாத்தியமான ஒரே விஷயம். உங்கள் பேராசையைக் குறித்து உணர்வுடன் இருப்பதுதான். உங்களுக்கு மறுவுலகில் தக்க சன்மானம் கிடைக்கும் என நான் கூறவில்லை. வருங்காலத்தைப்பற்றி எதுவுமே நான் கூறவில்லை. பேராசையைக் குறித்து விழிப்புடன் இருந்தாலே அது மறைகிறது என்று மட்டுமே கூறுகிறேன். அப்படி அது

மறைந்ததும் வாழ்க்கை- வருங்காலப் பரிசாக அல்ல- இங்கேயே இப்போதே ஆனந்தமாகிறது.

பேராசை உங்களை முடக்குகிறது. கோபம் உங்களை முடக்குகிறது. வன்முறை உங்களை முடக்குகிறது. இவை எல்லாம் மறைந்ததும்.... இவை எல்லாம் ஒரு முறையின் மூலம் மறையும். ஒரே முறையே போதும்- தியானமே போதும். எல்லா நோய்களும் (இந்த) ஒரே மருந்தை உட்கொள்வதால் மறைகின்றன.

மருந்து (மெடிசின்), தியானம் (மெடிட்டேசன்) என்னும் வார்த்தைகள் ஒரே வேர்ச்சொல்லில் இருந்து வருகின்றன. தியானமே மாமருந்து. அது உங்கள் அனைத்து நோய்களையும் குணமாக்குகிறது.

யோக்காவை மறுபடியும் நினைத்துக்கொள்ளுங்கள். அவர் கூறுகிறார்: கிளைகளை வெட்டாதீர்கள், வேரை வெட்டுங்கள்.

கமல், உணர்வு இன்மையே வேர். வேரை வெட்டு உணர்வாயிரு. பின், இப்போது இங்கு இருந்தே நீ ஒரு புதுமனிதன். இப்போது இங்கிருந்தே உன் வாழ்க்கை நிலைமாற்றம் அடைகிறது. நீ ஒளிமயம் ஆகிறாய். நீ பரவசத்தால் ஒளிர்கிறாய். பேரின்பத்தால் ஒளிர்கிறாய். பரலோகமே ஆகிறாய்.

விழிப்புணர்வுள்ள மனிதர் போகுமிடமெல்லாம் சொர்க்கமாகிறது. பரவசமும், விழிப்புணர்வும், தியானமும், சட்டோரியும் ஆன மனிதரை உங்களால் நரகத்துக்கு அனுப்ப முடியாது. ஏனெனில் அவர் நரகத்தை அடைந்ததும், நரகம் அவருக்கு சொர்க்கம் ஆகிவிடும். உணர்வற்ற மனிதனை உங்களால் சொர்க்கத்துக்கு அனுப்ப முடியாது. ஏனெனில் அவன் எங்கு சென்றாலும் தான் நரகத்தில் இருப்பதாகவே உணர்வான். நரகம் இல்லை என்றால் அவன் அதை உருவாக்கி விடுவான்- அவனது உணர்வின்மையே அவனுக்கான நரகத்தை வெளிப்படுத்தும்.

விழிப்புணர்வு பெற்ற எல்லா மகான்களின் மொத்த தத்துவத்தையும் ஒரே வாசகமாகச் சுருக்கினால் அது இதுதான். உணர்வின்மையே நரகம். உணர்வுநிலையே மோட்சம்.

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் பெப்ருவரி 29ஆம் தேதி பிறந்தேன். எனவே நான்கு ஆண்டுகளுக்கு ஒரு தடவை மட்டும் என் பிறந்தநாள் வருகிறது. இதில் ஏதாவது முக்கியத்துவம் இருக்கிறதா?**

**கந்தர்லா.**

ஜனவரியோ பெப்ருவரியோ மார்ச்சோ, பெப்ருவரி 26ஓ 29ஓ இவை எல்லாம் எதேச்சையானவை. இவை எல்லாம் நாம் ஏற்றியுள்ள கருத்துகள் இருத்தலுக்கு பெப்ருவரி, மார்ச் தெரியாது. ஏப்ரல் 1ஆம் தேதி நீ பிறந்திருந்தாலும் அதில் முக்கியத்துவம் ஒன்றும் இல்லை. இப்போது இருப்பதைவிட பெரிய முட்டாளாக நீ இருக்க மாட்டாய். இப்படியேதான் இருப்பாய். பெப்ருவரி 29க்கு என்ன முக்கியத்துவம் இருக்கமுடியும்? ஆனால் மனிதர்களுக்கு ஏதாவது தனி முக்கியத்துவம் தேவைப்படுகிறது.

பெப்ருவரி 29ஆம் தேதி நடந்த ஒரே ஒரு விபத்தைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். மொரார்ஜி தேசாயின் பிறப்பு அது!

மிருகக்காட்சி சாலைப் பராமரிப்பாளன், பார்க்க வந்தவர்களிடம் கூறினான், "இந்தக் கூண்டில் நாம் பார்ப்பது சிறுத்தைப்புலி. ஆண்டின் ஒவ்வொரு நாளும் இந்த விலங்கு ஒரு கருப்புப் புள்ளியைப் பெற்றிருக்கும்.

ஒருகிழவி, "லீப் ஆண்டில்?"

பராமரிப்பாளன், விரைந்து சிந்தித்து: "சரியான கேள்வி! தாயே. இதோ இதன் வாலை நான் தூக்குகிறேன். அங்கு பிப்ருவரி 29ஆம் தேதியை நீங்கள் பார்க்கலாம்!"

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**எத்தனையோ அழகான பேருரைகளை வழங்க எப்படி உங்களால் இவ்வளவு எளிதாக முடிகிறது?**

**திவாகர்,**

**எ**ன்ன பேருரைகள்? இந்த வெற்று அரட்டைக் கச்சேரியை நீ பேருரை என்கிறாயா? பேருரை என்பது சிரத்தைக்குரிய விஷயம்! பேருரை என்பது மதச் சார்பானது, தூய்மையானது, புனிதமானது. அது கோயில்களிலும், சர்ச்சுகளிலுமே வழங்கப்படுவது. இந்த இடமோ சர்ச் அல்ல. இது குடிகாரர் மடம்; கேளிக்கை விடுதி! எது பேருரை? நான் எப்போதும் எந்தச் பேருரையும் ஆற்றியதில்லை. ஆம் நான் புறணி (gossip) அளக்கிறேன். அது உண்மையே. ஆனால் அதில் எந்த நற்செய்தியும் (gospel) இல்லை; எந்த நாசூக்கும் இல்லை; எந்த ஒளிவுமறைவும் இல்லை. அது மிகவும் எளியது- என்முறை மிகவும் எளியது.

ஒரு பேரரசன் ஒரு சிற்றூரின் வழியாகப் போய்க் கொண்டிருந்தான். அவன் அந்தக் காலத்தில் மிகவும் புகழ்பெற்ற போர்வீரர்களில் ஒருவன். வில்வித்தை அபிமானி. வில்வித்தையில் மிகச் சிறந்தவர்களை அவன் போற்றினான். அந்தச் சிற்றூரின் வழியாக போகும்போது அவன்; பல மரங்களிலும் விளக்குக் கம்பங்களிலும்தோட்ட வேலிகளிலும் வரைந்திருந்த வட்டங்களின் நடுமையத்தில் குறிதவறாமல் அம்புகள் ஏறி இருந்ததைக் கண்டான். இம்மியும் பிசகாமல் வட்டங்களின் மையப்புள்ளியில் அம்புகள் குத்திட்டு நின்றன. ஏராளமான அம்புகள் எங்கு பார்த்தாலும்... அவன் வியந்து போனான்.

அவன் சொன்னான், "யார் இந்த மனிதன்? இவ்வளவு செம்மையான வில்லாளியை நான் இதுவரை கண்டதில்லை! அவனது இலக்கு துல்லியமாக இருக்கிறது. ஒரு இடத்திலும் அவன் குறி தப்பவில்லை. ஒரு அங்குலத்தில் ஒரு பிரிவு அளவுகூடப் பிசகவில்லை. எல்லா இடத்திலும் அம்பு சரியாக மையத்தில் பதிந்துள்ளது. ஒவ்வொரு இலக்கும் அதற்குச் சான்றாக உள்ளது. "அவன் தன் தேரை நிறுத்தினான். ஊர் மக்களை அழைந்தான். "யார் இந்த மனிதன்" என கேட்டான்.

அதற்கு அவர்கள் எல்லோரும் நகைத்தார்கள். பின் சொன்னார்கள், "அவனைப்பற்றி அலட்டிக் கொள்ளாதீர்கள். அவன் ஒரு பித்தன்!"

"பித்தன் என்று எப்படிச் சொல்கிறீர்கள் நீங்கள்? அவன் பித்தனாயிருக்கலாம். ஆனால் நான் பார்த்தவர்களில் அவனே மாபெரும் வில்லாளியாக இருக்கிறான்."

அவர்கள் சொன்னார்கள், "அதற்கும் வில் வித்தைக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவனுக்கு வில்வித்தை பற்றி ஒன்றுமே தெரியாது."

அரசன் சொன்னான், "அப்படியானால் இது ஒரு அற்புதம் தான்! எப்படி இது அவனால் சாத்தியமாகிறது?"

அவர்கள் சொன்னார்கள். "அது எளிது. முதலில் மரத்தின்மீது அம்பு எய்கிறான். பின் போய் அதைச்சுற்றி ஒரு வட்டம் வரைந்து விடுகிறான்!"

சரியாக அதுதான் என் முறையும்! அது எளிது! எனவே எதைக் குறித்தும் நீங்கள் கேட்க முடியும். ஆனால் நான் என்ன சொல்ல

விரும்புகிறேனோ அதையே சொல்கிறேன். முதலில் நான் அம்பு விடுகிறேன். பின் அதைச்சுற்றி ஒரு வட்டம் வரைந்துவிடுகிறேன்- இறுதித் திருத்தம் சேர்ப்பதுபோல!

ஒரு பங்குத் தந்தை (பாதிரி) தன் ஆயருடன் (பிஷப்) சில வார்த்தைகள் பேசிக் கொண்டிருந்தார். உரையாடலின் போக்கில் அவர் சொன்னார். "உங்களுக்கு பிரச்சனையே இல்லை ஆண்டவரே நீங்கள் ஒரே பிரசங்கத்தைத் தயாரித்தால் மறைமாவட்டத்தில் உள்ள அத்தனை சர்ச்சுகளுக்கும் அதையே தாங்கள் அனுப்பிவிட முடிகிறது. ஆனால் ஒவ்வொரு ஞாயிறும் நான் புதிது புதிதாக இரண்டிரண்டு பிரசங்கங்களைத் தயாரிக்க வேண்டி இருக்கிறது."

ஆயர் பதிலளித்தார் "ஒரு நிமிட அவகாசத்தில் ஏறக்குறைய எந்தத் தலைப்பிலும் பிரசங்கம்செய்ய உங்களால் முடிய வேண்டும். என்னால் அது முடியும்."

பாதிரி சொன்னார், "வரும் ஞாயிறு அன்று என் பங்கில் நீங்கள் பிரசங்கம் செய்யுங்கள். உங்களை நான் சோதித்துப் பார்க்கிறேன். அதன் பிறகே நீங்கள் கூறுவதை ஏற்றுக் கொள்வேன்."

ஆயர் ஒத்துக்கொண்டார். அவ்வண்ணமே அந்த நாளில் பீடத்தின்மீது ஏறினார். அங்கு ஒரு சீட்டில் "மலச்சிக்கல்" என்று தலைப்பு தரப்பட்டிருந்தது. சற்றும் தயக்கமின்றி அவர் தொடங்கினார். "அக்காலத்தில் மோயீசன் இரண்டு டேப்லட்டுகளை எடுத்துக்கொண்டு மலையின் பக்கமாகப் போனார்..."

*(டேப்லட்=1 கற்பனைகள் 2 மாத்திரைகள்)*



# 5

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**சாட்சியாய் இருப்பதும்கூட (Witnessing) ஒருவித எண்ண மெனத் தோன்றுகிறது. அப்படியானால் சாட்சித் தன்மைக்கும் சாட்சி எனும் எண்ணத்துக்கும் என்ன வேறுபாடு?**

**சத்யேந்திர சரசுவதி.**

சாட்சியாயிருப்பது ஒரு எண்ணம் அல்ல. ஆனால் சாட்சியாயிருப்பதைப் பற்றி நீ எண்ணத் தொடங்க முடியும். அதையும் ஒரு எண்ணமாக நீ ஆக்கமுடியும். அதை ஒரு எண்ணமாக நீ ஆக்கிய கணமே அது மேற்கொண்டும் சாட்சியாயிருப்பதாக இல்லாது போகிறது. ஒன்று அது சாட்சிநிலை அல்லது அது ஒரு எண்ணம். ஏககாலத்தில் இரண்டுமாக அது இருக்க முடியாது.

நீ சாட்சியாய் இருக்கும்போது நீ சாட்சியாக இருப்பதாக எண்ணிக் கொண்டு இருப்பதில்லை. சாட்சியாயிருப்பதாக நீ எண்ணிக் கொண்டிருந்தால் அது சாட்சியாக இருப்பதாகவே ஆகாது. அது இன்னொரு விதமான எண்ணமாகவே ஆகும். சாட்சியா யிருப்பது எளிதாக இயல்பாக இருந்தால் சாட்சியாயிருப்பதைப் பற்றிய எண்ணமே இராது. உங்கள் பார்வையின்முன் எண்ணங்கள் வெறுமனே கடந்து சென்றால், அவற்றுக்கு நீங்கள் சாட்சியாக மாத்திரம் இருந்தால், "நான் சாட்சியாக இருக்கிறேன்" என்னும் கருத்து உங்களில் எழாதிருந்தால் அது தூய சாட்சியாயிருக்கும் நிலையே ஆகும். அது எண்ணமோ அல்ல. அது எண்ணமற்ற ஒரு நிலை; அ-மனம் கடந்துபோவது எதுவாயினும் அதையெல்லாம் வெறுமனே நீங்கள் பிரதிபலித்துக்கொண்டு இருக்கிறீர்கள்.

"ஆகா, இதுதான் சாட்சியாயிருக்கும் நிலை. எனவே நான் சாட்சியாயிருக்கிறேன். இதுதான் தியானநிலை இதுதான் விழிப்புநிலை" என்று நீங்கள் சொல்கிற கணத்திலேயே நீங்கள் அதை தவறவிட்டு விட்டீர்கள். மனமாகிய சேற்றில் மறுபடியும் புதைந்துவிட்டீர்கள். அதன்பின் நீங்கள் சாட்சியாக இல்லை. உங்களை அடையாளப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். சாட்சி யாயிருப்பதை ஒரு எண்ணமாகக் குறுக்க முடியாது.

ஆக உன் பிரச்சனை முக்கியமானதே. ஏறக்குறைய ஒவ்வொரு தியானியும், சந்திக்கும் பிரச்சனைதான் இது. தவறான ஒரு முறையில் சாட்சியாயிருப்பதற்கு நாம் பழக்கப்பட்டு விட்டிருக்கிறோம். சாட்சியாயிருக்கிறோம் என நாம் நினைக்கிறோம். நாம் தீர்ப்பிடுகிறோம். மதிப்பிடுகிறோம்- ஆனால் (அப்போது) நாம் சாட்சியாயிருப்பதாக நினைத்துக் கொள்கிறோம். நாம் சாட்சியாயிருப்பதாக நாம் நினைத்துக்கொள்வது சாட்சியாய் இருப்பதாக ஆகாது. தவறான விதமான ஒரு சாட்சி நிலையுடன் நம்மை சம்பந்தப்படுத்திக் கொண்டிருக்கிறோம். அந்தக் கருத்தே நீண்டகாலமாக தங்கி இருக்கிறது.

இரண்டாவதாக, ஒவ்வொரு அனுபவத்தையும் உடனடியாக ஒரு எண்ணமாக குறைக்கும்படி நாம் கட்டுப்படுத்தப்பட்டிருக் கிறோம். எந்த அனுபவமும் சில கணங்களுக்கேனும் தூய அனுபவ மாகவே இருக்கும்படி நாம் ஒருபோதும் அனுமதிக்கிறதில்லை.

தோட்டத்தில் ஒரு அழகான ரோசாமலரைக் காண்கிறீர்கள். அதைப் பார்த்ததுமே- ஏறக்குறைய அதே கணத்திலேயே- "எவ்வளவு அழகான பூ!" என உங்கள் மனது சொல்லிவிடுகிறது. அந்த அழகு உங்களுக்குள் இறங்க நீங்கள் இடம் விட முடிவதில்லை. அழகு பற்றிய எண்ணம் ஒரு குறுக்கீடாகிறது. "எவ்வளவு அழகு!" என்று உங்கள் மனம் கொண்ட மாத்திரத்திலேயே, கடந்த காலத்தில் நீங்கள் பார்த்திருக்கிற அத்தனை ரோசாக்களுடனும் இந்த ரோசாவை உங்கள் மனம் அதற்குள் ஒப்பிட ஆரம்பித்து விட்டது. ரோசாக்களைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிற அனைத்துடனும் அதை நீங்கள் ஒப்பிட ஆரம்பித்துவிட்டீர்கள். இந்த ரோசாவை அதன்பின் நீங்கள் காண்கிறதில்லை. அதன் சுயத்தை நீங்கள் இழந்து- தவறவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். கடந்த காலத்துக்குள் நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீர்கள். முன்பு நீங்கள் பார்த்திருக்கிற ரோசாக்கள் எவை என்பதைக் கண்டுபிடிக்க உங்கள் நினைவடுக்குகளில் தேடிக்கொண்டிருக்கிறீர்கள். அவற்றில் இதுவே வெகு அழகு."

ஆனால் இந்த ரோசா அதன்பிறகு உங்கள் கவனத்தில் இருப்பதில்லை. உங்கள் கவனம் விழிப்பு மிகவும் புகைமூட்டம் கொண்டதாகி இருக்கிறது. கடந்த காலத்திலிருந்து ஏராளமான புகை புழுதி கிளம்பி, உங்கள் கண்ணாடி இனியும் அழகைப் பிரதி பலிக்காதபடி ஆகியிருக்கிறது. நீங்கள் இப்போது இங்கு இல்லை.

ரோசாவும் அதன் நறுமணமும் அதன் அழகும், காற்றிலும் வெயிலிலும் அது ஆடும் ஆட்டமும் உங்களை ஊடுருவ அனுமதியுங்கள். உங்கள் மனத்தை உள்ளே கொண்டு வராதீர்கள். "இது அழகானது" என்று கூற அவசியம் இல்லை. அது அப்படித்தான் எனில் அதைக்கூறத் தேவையில்லை. அது அப்படி இல்லை என்றாலோ பின் அப்படிக் கூறுவது பொய். ஒன்று அது அப்படி இருக்கிறது. அல்லது அது அப்படி இல்லை. அதைப்பற்றி எவ்வகையிலும் ஒரு எண்ணத்தை உருவாக்குவதானது உங்கள் உணர்வில் அதிர்வலைகளை உருவாக்குவதாகும். இது அமைதியான ஏரியில் கல்லெறிவது போன்றது. ஒரு கணத்துக்கு முன்புதான் அது நிலவையும் நட்சத்திரங்களையும் அழகாக பிரதிபலித்துக் கொண்டிருந்தது. உங்கள் கல் அதிர்வலைகளை உருவாக்கிவிட்டது. நிலவும் விண்மீன்களும் முற்றிலும் உருச்சிதறுகின்றன.

உங்களுக்குள் ஒரு எண்ணம் எழும் போதெல்லாம் இதுதான் நடக்கிறது. உங்கள் உணர்வு கலங்குகிறது. அலைவுறத் தொடங்குகிறது. உங்களில் அலைகள் எழத் தொடங்குகின்றன. இருக்கிறதை உங்களால் பிரதிபலிக்க முடிவதில்லை.

தீர்ப்பிடாமல் பொருள்களைப் பார்க்கும்- பெயரிடாமல் பொருள்களைப் பார்க்கும்- மதிப்பிடாமல் பொருள்களைப் பார்க்கும் புதிய கலையை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டி இருக்கிறது. ரோசாவைப் பாருங்கள். சிறகடித்துப் பறக்கும் பறவையைப் பாருங்கள். நட்சத்திரங்கள் நிறைந்த இரவைப் பாருங்கள். ஓடும் ஆற்றைப் பாருங்கள். போக்குவரத்தைப் பாருங்கள். பறவைகளின் பாட்டை, ரயில் கடந்து செல்வதை கவனியுங்கள். பிரதிபலித்தபடி மாத்திரம் புதியகலையை, எந்த எண்ணத்தையும் குறுக்கே கொண்டுவராதிருக்கும் புதிய கலையை, எதையுமே சொல்லாதிருக்கும் புதிய கலையைக் கற்கத் தொடங்குங்கள்.

இதற்குக் கொஞ்சம் காலம் பிடிக்கும்- பழைய பழக்கங்கள் மறைவது கடினமே. ஆனாலும் ஒருநாள் அது நடக்கிறது. நீங்கள்

விடாப்பிடியாக இருந்தால், போதிய பொறுமையுடன் இருந்தால், உங்கள் அகஉலகைச் சுத்திகரிக்கும் வேலையில் மேலும்மேலும் போய்க்கொண்டே இருந்தால் ஒருநாள் அது நிகழ்கிறது. அந்த நாளின் ஆசீர்வாதம் அபரிமிதமானது. உண்மையில் அன்று நீங்கள் புதிதாயப் பிறக்கிறீர்கள். பழைய உலகையே புதிய கண்களுடன் பார்க்கத் தொடங்குகிறீர்கள். ஏனென்றால் உங்கள் கண்கள் மிகவும் தெளிவாக இருக்கின்றன. உங்கள் கண்ணாடி மிகவும் ஆழமாக மிகவும் முழுமையாக எந்த உருத்திரிபும் இன்றி பிரதிபலிக்கிறது. அந்த மரங்கள்- முன்பு ஆயிரக்கணக்கான தடவைகள் நீங்கள் பார்த்திருக்கிற அதே மரங்கள்- அவை முன் எப்போதும் இருந்ததை விடவும் அதிக பசுமையாய் இருக்கின்றன. அவற்றின் அந்தப் பசுமையும் சாமானியப் பசுமை அல்ல. ஒளிப்பச்சை, பிரகாசமான மரகதப் பச்சை.

அதே உலகம்தான், அதே மக்கள்தான்... ஒரே விதமான உலகத்தில்தான். ஒரு புத்தரும் இயேசுவும் நடக்கும் அதே உலகில்தான்- அதே மரங்கள், அதே மலைகள், அதே மக்கள், அதே ஆகாயத்தின் மத்தியில் தான் நீங்களும் நடக்கிறீர்கள். ஆனால் அவர்கள் பரலோகத்தில் வாழ்கிறார்கள். நீங்களோ நகரத்தில் வாழ்கிறீர்கள். இந்த வேறுபாடு மனத்தினால் உருவாக்கப்படுகிறது.

இந்த மனதைக் கைவிட இன்னும் கொஞ்ச காலம் பிடிக்கும். அது நீண்டகாலமாக உங்கள்மேல் ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கிறது. எனவே அதிலிருந்து உங்களைத் திடுமென விடுவித்துக் கொள்வது ஆரம்பத்தில் கடினமாகவே இருக்கிறது. அது அப்பிக் கொள்கிறது. உங்கள் மீதான தன் அதிகாரத்தை அவ்வளவு எளிதாக அது விட்டுவிட முடியாது. எனவே அது பின்வாசல் வழியாக திரும்பத்திரும்ப வந்து கொண்டே இருக்கிறது.

நீங்கள் அமைதியாக உட்கார்ந்திருக்கிறீர்கள். ஒரு அழகான நிலைப்புத்தன்மை எழுகிறது. அப்போது மனம் பின்கதவு வழியாக உள்ளே நுழைந்து "பார்த்தாயா, எவ்வளவு அழகிய தருணம் இது!" என்கிறது. அப்படியே உங்களை தள்ளிக்கொண்டு போய்விடுகிறது! மிகவும் அமைதியாக, எந்த சத்தமும் செய்யாமல் அது வருகிறது. அதனால் நீங்களும் மிகவும் நுட்பமான முறையில் அதனிடம் சிக்கி விடுகிறீர்கள். உங்களுக்கே அது தெரியாமல் போய்விட முடிகிறது. நீங்கள் களிகூறுகிறீர்கள். மனத்துக்கு நன்றி கூறுகிறீர்கள்... ஆனால் அது உங்கள் ஸ்திரத் தன்மையை அழித்துவிட்டிருக்கிறது.

நிலைப்புத்தன்மை நிசமாகவே மெய்யானதாயின் அதைக்குறித்து எதையும் கூற அங்கே மனம் இருக்காது. சாட்சியாயிருக்கும் தன்மை உண்மையானதாக இருக்கையில் நீங்கள் ஒரு சாட்சியாக மட்டுமே இருக்கிறீர்கள். "நான் சாட்சித் தன்மையில் இருக்கிறேன்" என்று நீங்கள் நினைக்கிறதில்லை. "நான்" அங்கு இல்லை. நினைக்கிறதும் இல்லை. சாட்சித்தன்மை மட்டுமே இருக்கிறது. ஏனெனில் எல்லா சிந்தனையும். "நானும்" எல்லாம் உங்கள் சாட்சித்தன்மையின் உள்ளடக்கப் பொருள்களாகியுள்ளன. மேலும் சாட்சியாயிருத்தல் என்பது அதற்கே புறப்பொருளாக இருக்க முடியாது. எந்த கண்ணாடியும் தன்னையே தான் பிரதிபலிக்க முடியாது. உங்கள் கண்களால் தம்மைத்தாமே காண முடியாது. உங்கள் சாட்சியால் தனக்குத் தானே சாட்சியாயிருக்க முடியாது. அது அசாத்தியம்.

உன் கேள்வி பொருத்தமுடையதே. நீ மிகமிக விழிப்பாக, கவனமாக இருக்கவேண்டி இருக்கிறது. இது கத்தி முனையில் நடப்பது போன்றது. மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டி இருக்கிறது. ஏனெனில் விழுந்தால் அதலபாதாளம்தான். சாமானிய மக்கள் விழமாட்டார்கள். அவர்கள் விழ வழியில்லை- அவர்கள் ஏற்கெனவே அடிமட்டத்தில்தான் இருக்கிறார்கள். ஆனால் மேல்நோக்கி நீங்கள் போகத் தொடங்குகையில் விழும் சாத்தியம் நாளுக்குநாள் அதிகரிக்கிறது. உங்கள் உணர்வுநிலை எவரெஸ்டை அடைந்ததும், லேசான சறுக்கல் கூட, லேசான தப்பு அடிவைப்பு கூட உங்களை அதல பாதாளத்துக்குள் வீழ்த்திவிடும்.

தியானம் எவ்வளவு பெரிதாகிறதோ, அதை இழக்கும் ஆபத்தும் அவ்வளவு பெரிதாகிறது. இது இயல்பே. பணம் உள்ளவனைத்தான் கொள்ளையிட முடியும். ஏழையிடம் முடியாது. எனவேதான் மதியத்தில் மரத்தடியில் பிச்சைக்காரன் தூக்கம்போட முடிகிறது. போக்குவரத்து, சந்தைக்கடை இவற்றின் இரைச்சல்... எதுவும் அவனது தூக்கத்தைக் கெடுப்பதில்லை. எந்த இடத்திலும் அவனால் தூங்க முடிகிறது. ஆழ்ந்து தூங்க முடிகிறது. இழப்பதற்கு அவனிடம் எதுவுமில்லை- எனவே அவனுக்கு பயமுமில்லை.

ஒருநாள் இரவு, மிக நூதனமாக ஒரு மனிதன், மிக ஒளிபொருந்திய ஒரு மனிதன் ஒரு மரத்தடியில் மிக அமைதியாக, மவுனமாக, விழிப்பாக நின்றுகொண்டிருப்பதை ஒரு ராஜா கண்டான். ராஜாவுக்கு "ஏன் அவன் அங்கு நின்று கொண்டிருக்கிறான்" என்ற கரிசனம் உண்டாயிற்று. அவனது

தோற்றத்தில் இருந்து அவன் ஒரு துறவிபோல் உலகைத் துறந்தவன்போல் காணப்பட்டான். ராஜா மிகவும் நாகரிகம் அறிந்த மனிதன். எனவே "அவரை தொந்தரவு செய்வது சரியல்ல" என நினைத்தான். ஆனால் ஒவ்வொரு இரவும் இப்படியே நடந்தது.

அது ராஜாவின் தினசரி நடைமுறை. தினமும் இரவில் மாறு வேடத்தில் தலைநகரைச் சுற்றிவந்து நிலைமைகளைப் பார்வையிடுவது அவன் வழக்கம். காவலர்கள் தம் பணியைச் செவ்வனே செய்கிறார்களா என பார்ப்பது, பொதுமக்களுடன் கலந்து பழகுவது, உணவகங்கள், நாடக அரங்குகள் முதலியவற்றுக்கு திடீர் விஜயம் செய்து எப்படி அவை நடக்கின்றன என்று பார்ப்பது அவன் வழக்கம்.

ஒவ்வொரு இரவும் அந்த மனிதரை அவன் காண நேரிடும். அநேக தடவைகள் அவரை அவன் கண்டுள்ளதால் அவரைப்பற்றிய ஆர்வம் மேலிடுவதை தடுப்பது அசாத்தியம் ஆயிற்று. ஒரு நாள் அவன் அவரை அணுகிக் கேட்டான், "ஐயா, குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். நீங்கள் மிகவும் அமைதியாகக் காணப்படுகிறீர்கள். ஆனால் ஏன் இரவு முழுவதும் இங்கேயே நின்று கொண்டிருக்கிறீர்கள்? எதை நீங்கள் காவல்காத்துக் கொண்டு இருக்கிறீர்கள்? இந்த மரத்தின் அடியில் ஏதேனும் புதையல் உள்ளதா?"

அந்த ஞானி சிரித்தார். அவர் சொன்னார், "இந்த மரத்தின் அடியில் இல்லை. ஆனால் எனக்குள் ஒரு பொக்கிசம் உள்ளது. அதை நான் காத்துக்கொண்டு இருக்கிறேன். அந்தச் செல்வம் நாள்தோறும் வளர்ந்து வருகிறது. அது மென்மேலும் பெரிதாகி வருகிறது. எனவே நானும் மென்மேலும் கூடுதல் விழிப்புடன் இருக்கவேண்டி இருக்கிறது."

மேலும் அந்த ஞானி ராஜாவிடம் சொன்னார், "நீ தூங்க முடியும். இழப்பதற்கு உன்னிடம் எதுவுமில்லை. என்னால் முடியாது. என்னிடம் இழப்பதற்கு எவ்வளவோ உள்ளது. எனவே நான் விழித்தே இருந்தால்தான் எனக்கு பெரிய ஆதாயம்."

ராஜா மிகவும் ஈர்க்கப்பட்டான். அவரைத் தன் அரண்மனைக்கு வருமாறு அழைத்தான். துறவி ஒப்புக்கொண்டார். மன்னன் சிறிதே குழம்பினான். ஒரு தடவை கூட பெயருக்கும் மறுக்காமல் மிக உடனடியாக துறவி வர ஒப்புக் கொண்டது அவனுக்கு சரியாகப் படவில்லை. ஒரு துறவி என்றால் "இல்லை. அரண்மனைக்கு என்னால் வர முடியாது. நான் உலகைத் துறந்துவிட்டவன். எல்லாம்

வீண். எல்லாம் கனவு. மாயை இந்த உலகுக்கு என்னால் திரும்ப வர முடியாது. நான் எங்கிருப்பினும் அங்கேயே நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்'' என்று கூறி இருக்க வேண்டும்.

ஆனால் இந்தத் துறவி அப்படி எதையும் கூறவில்லை. அவர் ஒரு ஸென் துறவி. அரசன் தன் மனதுள் பின்வருமாறு நினைக்கத் தொடங்கினான். இந்த மனிதனிடம் நான் ஏமாந்துவிட்டேனா? என் கண்ணில் படவென்றே தினமும் இங்கே இவன் வெறுமனே நின்று கொண்டிருந்தானா?''

ஆனால் இனி ஒன்றும் செய்வதற்கில்லை. அவரை அவன் அழைத்துவிட்டான்.

ஞானி அரண்மனைக்கு வந்தார். அரசனுடன் வாழ்ந்தார். அரசனை விட ஆனந்தமாக வாழ்ந்தார். ஏனெனில் அவருக்கு ராஜ்ஜியத்தைப் பற்றிய வருத்தங்கள், கவலைகள், பிரச்சனைகள், பதற்றங்கள் இல்லை. நல்ல உணவை ரசித்து உண்டார். அரண்மனையில் உள்ள மிக வசதியான அறையை அரசன் அவருக்கு ஒதுக்கியிருந்தான். அவர் ஒரு சக்கரவர்த்தி போலவே வாழ்ந்தார்.

ஆறு மாதங்கள் கழிந்தன. இப்போது அரசன் உள்ளுக்குள் வெந்துகொண்டிருந்தான்: ''என்ன விதமான துறவு இது? நீர்தான் வேலைக்காரர்கள், நல்ல உணவு, நல்ல உடைகள், அழகிய அரண்மனை எல்லாவற்றையும் அனுபவிக்கிறீரே'' என்று கேட்டுவிட துடித்துக் கொண்டிருந்தான்.

ஒருநாள் தோட்டத்தில் உலவும்போது அவன் ஞானியிடம் கேட்டான், ''உங்களை நான் ஒன்று கேட்கலாமா? அதனால் உங்களை மனம் புண்படுத்தி விடுவேனாயின் அதற்காக என்னை மன்னித்து விடுங்கள், என்கேள்வி இதுதான். இப்போது உங்களுக்கும் எனக்கும் என்ன வேறுபாடு?''

ஞானி ராஜாவைப் பார்த்துச் சொன்னார், ''இதற்கு ஏன் ஆறு மாதங்கள் காத்திருக்கிறாய்? முதல்நாள் இரவே இதை நீ என்னிடம் கேட்டிருக்க முடியும். நீ என்னை அழைத்ததுமே உன் அழைப்பை நான் ஏற்றுக் கொண்டேன். அப்போதே இந்தக் கேள்வி உன் மனதில் எழுந்துவிட்டது. ஆயின் ஆறுமாதங்கள் என் காத்திருந்தாய்? அனாவசியமாக உன்னை நீயே வருத்திக் கொண்டு சித்திரவதை அனுபவித்தாய். இதை நான் எந்தக் கணத்திலும் எதிர்பார்த்தே இருந்தேன். என் மனம் புண்பட ஒன்றுமில்லை இது இயற்கையாக எழக்கூடிய கேள்விதான்.

"ஒரு வேறுபாடு இருக்கிறது. ஆனால் அது மிக நுட்பமானது. அதை உண்மையாகவே நீ அறிய விரும்பினால் வா என்னோடு. இங்கே வைத்து அதை நான் உனக்குச் சொல்லமாட்டேன். ஒரு குறிப்பிட்ட இடத்தில்- காலத்தில்- வைத்தே சொல்வேன். என்னுடன் வா."

இருவரும் நகருக்கு வெளியே சென்றார்கள். "இப்போது சொல்ல முடியுமா?" என்றான் ராஜா.

"இன்னும் வா" என்றார் ஞானி.

அவனது ராஜ்ஜியத்தின் எல்லையை அவர்கள் கடக்கும் இடம் வந்தபோது மாலையாயிற்று. அரசன் கேட்டான். "என்ன செய்கிறீர்கள்? எங்கே என்னை இட்டுச் செல்கிறீர்கள்? இதோடு என் நாட்டின் எல்லை முடிகிறது. இன்னொருவரின் நாட்டுக்குள் நாம் நுழைந்துகொண்டு இருக்கிறோம். இதற்கு நான் பதில்சொல்ல கடமைப்பட்டவன். மேலும் எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது. உமது பதிலைச் சொல்லும்."

அதற்கு ஞானி சொன்னார். "நான் போய்க்கொண்டிருப்பதே என் பதில், நீ என்னுடன் வருகிறாயா இல்லையா? நான் திரும்பி வருவதில்லை."

மன்னன் சொன்னான். "நான் எப்படி உம்முடன் வரமுடியும்? எனக்கு பரந்த ராஜ்ஜியம் உள்ளது. என் மனைவி, மக்கள் இருக்கிறார்கள். நான் எப்படி உம்முடன் வர முடியும்?"

ஞானி சொன்னார், "அது தான் வேறுபாடு. நான் போகிறேன்!" மறுபடியும் ராஜாவுக்கு அந்த மனிதரின் ஒளி, அழகு புலப்பட்டது. அவர் காலில் விழுந்தான். அவன் சொன்னான், "திரும்பி வாருங்கள்! நான் சுத்த முட்டாள். இந்த ஆறு மாதங்களை நான் வீணாக்கிவிட்டேன். முற்றிலும் அசிங்கமான எண்ணங்களையே எண்ணிக் கொண்டிருந்திருக்கிறேன். என்னைப் பொருத்தருளி திரும்பிவாருங்கள்."

ஞானி சொன்னார், "இதில் எனக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. நான் திரும்பிவர முடியும். ஆனால் மறுபடியும் நீ அதேவிதமாகவே யோசிப்பாய். இப்போது நான் முன்னேறிப் போவதே உசிதம். கதை முடிந்தது- அந்த அத்தியாயம் முடிந்தது. நான் போனால்தான் அந்த வேறுபாட்டை நீ நினைவில் வைக்க முடியும்."

சாட்சியானவர் ஒரு கண்ணாடிபோல் ஒவ்வொன்றையும் பிரதிபலித்தபடி உலகில் வாழ்கிறார். அவர் குடிசையில் இருக்கலாம். கோபுரத்திலும் இருக்கலாம். அதனால் எந்த வேறுபாடும் நேர்வதில்லை. ஒரு கண்ணாடி குடிசையில் இருந்தாலும் கோபுரத்தில் இருந்தாலும் அதன் பிரதிபலிப்புத் தன்மையில் என்ன வேறுபாடு நேர்ந்துவிடப் போகிறது? அழகான வைரக்கற்களைப் பிரதிபலித்தாலோ சாதாரண கூழாங்கற்களைப் பிரதிபலித்தாலோ அதனால் கண்ணாடியின் தன்மையில் என்ன மாறுபாடு நேர்ந்துவிடப் போகிறது? கண்ணாடிக்கு எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை.

சாட்சியாயிருக்கும் கலை, உலகைக் கடந்து நிற்கும் கலையாகும். சாட்சியாயிருப்பதுவே ஸென்னின் சாரமாகும்; சமயத்தின் சாரமுமே அதுதான். ஆனால் அதை ஒரு எண்ணமாக ஆக்காதீர்கள். அது ஒரு எண்ணமே அல்ல. எண்ணங்களுக்கும் சாட்சியாயிருக்க வேண்டும். சாட்சித்தன்மைப் பற்றிய எண்ணம் வந்தாலும் அந்த எண்ணத்துக்கும் சாட்சியாயிருக்க வேண்டும். அது சாட்சியாயிருப்பதல்ல. அது ஒரு எண்ணம் மட்டுமே என்பதை நினைவு கூர்ந்து அதற்கு சாட்சியாயிருக்க வேண்டும். அது உங்கள் முன்னால் உள்ளது. நீங்கள் அதற்குள் இருப்பதில்லை.

சாட்சியை எந்த எண்ணமாகவும் குறுக்கமுடியாது. அது எல்லாவற்றுக்கும் பின்னுக்கு நழுவியபடி இருக்கிறது. எந்த எண்ணத்தினாலும் அதை உங்களால் கைப்பற்ற முடியாது. ஒவ்வொரு எண்ணத்துக்கும் அது சாட்சியாயிருக்க முடியும்-சாட்சியாயிருப்பதான எண்ணம் உட்பட. எனவே அது நானே ஒரு போதும் ஒரு எண்ணமாக முடியாது.

அடுத்த தடவை நீ தியானிக்கும் போது இதை நினைவில் வை. சத்யேந்திர சரஸ்வதி, "இது ஒரு அழகான தருணம். என் மனம் அமைதியாக உள்ளது. என் ஜீவன் நிலைப்பில் இருக்கிறது. இதுவே சாட்சியாயிருப்பது என்பதாகும்!" என்ற எண்ணத்தில் லயிக்க ஆரம்பித்து விடாதே. அதை நீ சொல்லும் கணத்திலேயே அதை நீ இழந்திருப்பாய்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**தயைசெய்து ஸென் மனிதரைப் பற்றி இன்னும் கொஞ்சம் அதிகமாகச் சொல்கிறீர்களா?**

பிரதிபா,

**ஸெ**ன் மனிதர் மிகவும் சாதாரணமானவர்: அசாதாரணமான அளவுக்கு சாதாரணமானவர். எந்த அளவுக்கு சாதாரணமானவர் என்றால், அவரை நீ சந்தித்தால் அவரை உன்னால் அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் போவதற்கே எல்லாச் சாத்தியமும் இருக்கிறது. அவர் உன்னைப் போலவே வாழ்கிறார். உன்னைப் போலவே உண்கிறார்; உன்னைப் போலவே உறங்குகிறார். எல்லா வகையிலும் உன்னைப் போலவே அவர் இருக்கிறார். வெளித் தோற்றத்தைப் பொறுத்தவரை உனக்கும் அவருக்கும் எந்த வேறுபாடும் இல்லை.

நிச்சயமாக வேறுபாடு இருக்கிறது. ஆனால் அது அகவேறு பாடு அவரிடம் உள்ளொளி இருக்கிறது. தெளிவு இருக்கிறது. அவருக்கு பார்க்கும் கண்கள் உள்ளன. நீங்களோ குருடாக இருக்கிறீர்கள். அவர் விழித்திருக்கிறார். நீங்களோ தூங்கிக் கொண் டிருக்கிறீர்கள். நீங்கள் போதையில் இருக்கிறீர்கள். ஆசை எனும் மதுவால், மோகம் என்னும் மதுவால், கோபம்; பேராசைவெறி-அகங்காரம் என்னும் மதுவால் மதிமயங்கி இருக்கிறீர்கள்.

ஸென் மனிதர் எந்த மயக்கத்திலும்இல்லை. அவர் தன் சுய உணர்வில் இருக்கிறார். உணர்வுடன் நடக்கிறார், உணர்வுடன் உட்கார்கிறார். "ஸென்னில் நடக்கிறார், ஸென்னில் இருக்கிறார்" அவர், எந்த வகையிலும் தனிச்சிறப்பானவர் அல்லர் அவர். புனிதர்கள் எனப்படுவோரைப் போல் அவர் இல்லை. முள்படுக்கையிலோ ஆணிப்படுக்கையிலோ அவர் படுப்பதில்லை. தன் தலையின் மீது அவர் நிற்பதில்லை. அவர் மடத்தனமானவர் அல்ல. வேடதாரி அல்ல. வீதிகளில் ஆடையின்றி அவர் நடக்க மாட்டார். அவர் பைத்தியம் அல்ல. சித்தம் கலங்கியவர் அல்ல! மிகச் சாதாரண வழியில், மிக இயல்பான வழியில் அவர் வாழ்கிறார்.

எனவேதான் ஸென் மனிதரை அடையாளம் கண்டுகொள்வது. அவ்வளவு கடினமான காரியமாக இருக்கிறது. நீர்மேல் நடக்கிற புனிதரை நீ அடையாளம் கண்டுகொள்ள முடியும். அவர் தனிச்சிறப்பானவர் என வெளிப்படையாகத் தெரிகிறது. ஆனால் ஸென் மனிதர் நீர்மேல் நடப்பதில்லை. அவர் எந்த அற்புதங்களையும் சாதிப்பதில்லை. எந்த விதமான அகங்கார விளையாட்டுகளையும் அவர் ஆடுவதில்லை. அவர் ஒரு அகங்காரமாய் இல்லை. ஒரு ஆளாக இருக்கிறார். ஒரு பிரசன்னமாக, ஒரு இல்பொருளாக இருக்கிறார். முற்றான இன்மையாக அவர் இருக்கிறார். முற்றான ஒன்று மின்மையிலேயே- சூனியநிலையிலேயே அவர் முழு விழிப்புடன்

இருக்கிறார். அவர் எதைச் செய்தாலும் முழுமையாக அதைச் செய்கிறார். குடிபோதையில் இல்லாத மனிதரே எதையும் முழுமை யாகச் செய்யமுடியும். இல்லாவிடில் ஒருவர் முழுமையில்லாமலே இருக்கிறார். ஒரு பகுதி ஒன்றை செய்துகொண்டு போகும்; அதே வேளையில் பிற பகுதிகள் அதற்கு நேர் எதிராகப் போகும். அழிவு பயப்பதாக இருக்கும். ஒரு கையால் ஒன்றை நீங்கள் ஆக்கிக் கொண்டே மற்ற கையால் அவற்றை அழித்துக் கொண்டிருக்கக் கூடும்.

குடித்திருக்கும் மனிதனுக்கு தான் எங்கே போய்க் கொண்டிருக்கிறான் என்பது தெரியாது. தான் சரியான பாதையில் போவதாகவே அவன் நினைக்கிறான். ஆனால் அது அவனுடைய கற்பனை- கனவு மட்டுமே.

ஊர்சுற்றி விற்பனையாளனான பாரி ஹிக்கின்ஸ் ஒருநாள் மதியம். வருங்காலத்தில் தன் வாடிக்கையாளராகும் வாய்ப்புத் தெரிகிற ஒருவரோடு சேர்ந்து மூக்குமுட்ட குடித்து மதிய உணவுண்டு விட்டு லண்டனுக்கு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். பின்புறம் காட்டும் கண்ணாடிமூலம், ஒரு காவல்துறை கார் பின்னால் நீல விளக்கொளி பாய்ச்சிக்கொண்டு வருவதை கண்டுகொண்டான். அவன் முதுகுத்தண்டில் ஒரு நடுக்கம் பரவியது. தன் காரோட்டத்தை சீராக்க, திசைமாற்றும் வளையத்தை இறுகப்பற்றினான். நீல வெளிச்சம் நெருங்கியது. ஒரு ஊதல் ஒலி ஓலமிட்டது. 'காவல்' கார் அவனை முந்தியது. வண்டியை நிறுத்துமாறு ஒரு கை சைகை காட்டியது.

போலீஸ்காரன் காரிலிருந்து இறங்கிவருவதை பாரி கலவரத்துடன் பார்த்தான். அவன் சுவாசம் கடுமையாயிற்று. திசை மற்றும் வளையத்தைப் பிடித்திருந்த அவன் கைகள் வேர்வையால் ஈரமாகின. தான் என்ன சொல்லப் போகிறோம் என்று திகைத்துக் கொண்டிருந்தான்.

போலீஸ்காரன் வந்து காரின் சன்னல் வழியாக பேசுவதற்குக் குனிந்தான். "ஏய், ஏய், இந்த வஸ்து, கொஞ்சம் வச்சிருக்கியா?"

பாரியால் தன்னைக் கட்டுப்படுத்த முடியாமல் உளறிக் கொட்டினான்: "ஓ... போலை வணக்கம், மாலீஸ்சார், நான்... வந்து, நீங்க குடிக்கிற அளவுக்கு நான் நெனைக்கலை!"

ஸென் மனிதர் முற்றிலும் உணர்வுடன் இருக்கிறார். பொருள் பற்றில்லை, கோபமில்லை, பொறாமை இல்லை, பேராசை வெறி

இல்லை. இவை அனைத்தும் மயக்க மருந்துகளாக, போதைப் பொருள்களாக இருக்கின்றன. இவை தொடர்ந்து உங்களை தூக்கத்தில் வைத்துள்ளன. உங்கள் ரத்த ஓட்டத்தில், உங்கள் நாடி நரம்புகளிலேயே இவ்வளவு விஷயங்கள் பாய்ந்து கொண்டிருந்தும் உங்கள் வாழ்வை நீங்கள் நடத்திக்கொண்டு போவது பெரிய அதிசயம்தான். இதுமட்டுமே வேறுபாடு. மற்றபடி வெளியிலிருந்து பார்த்தால் கண்டுபிடிக்க மாட்டீர்கள்.

உள் மாற்றம் இன்மையால் வெளிவேறுபாடுகளைச் செய்து கொள்ளும் புனிதர்கள் என்னும் ரகத்தினரும் இருக்கிறார்கள். இவர்கள் நிர்வாணமாக நிற்கவேண்டி இருக்கிறது; தம் உடம்புகளை சித்திரவதைக்குள்ளாக்க வேண்டி இருக்கிறது; தொடர்ந்து உண்ணா நோன்பிருக்க வேண்டி உள்ளது. தம் உடம்புகளை அலங்கோல மாக்க, உருச்சிதைக்க வேண்டி இருக்கிறது. உங்களை விட தனிச் சிறப்பானவர்களாக யோக்கியர்களாக தங்களைக் காட்டிக்கொள்ள இப்படி எதையாவது அவர்கள் செய்ய வேண்டி இருக்கிறது.

ஸென் மனிதர் 'உங்களைக் காட்டிலும் உத்தமர்' அல்லர். உங்களை விட எவ்வகையிலும் தான் உயர்ந்தவர் என்னும் எண்ணமே அவருக்கு கிடையாது. அவர் வெறுமனே தன் இயற்கைப்படி வாழ்கிறார்.

யோக்கா கூறுகிறார்: ஸென் மனிதர் ஏகாந்தமாய்ச் செல்கிறார்.

இதுதான் அவருடைய முதல் குணாதிசயம். கும்பல் உளவியலின் பகுதியாக அவர் இல்லை. அவர் இந்து அல்லர். அவர் முகமதியர் அல்லர். அவர் கிறித்தவர் அல்லர். அவர் யூதர் அல்ல. அவர் இந்தியரோ ஜப்பானியரோ சீனரோ அல்லர். அப்படி அவர் இருக்க முடியாது. எந்தக் கும்பலையும் அவர் சேர்ந்தவர் அல்ல. அவர் ஏகாந்தமாய் இருக்கிறார். அவர் ஒரு கலகக்காரர். தன் ஒளியின் பிரகாரம் அவர் வாழ்கிறார். அவர் யாரையும் பின்பற்றுவதில்லை. நகல் செய்வதில்லை. தன் இலக்கை அவர் அடைந்திருக்கிறார்.

எது இலக்கு? உங்களுக்கு வெளியே எங்கேயோ இருப்பதல்ல அது. அது அங்கே தூரத்தில் நட்சத்திரத்தைப் போன்று இல்லை. அது உங்களுக்குள் இருக்கிறது. அது உங்கள் சொந்த அகத்தன்மை. அவர் தன் சொந்த அகத்தன்மைக்குள் பிரவேசித்திருக்கிறார். அவ்வாறு தன் இலக்கை அடைந்துவிட்ட மனிதர்.

....நிர்வாணப் பாதையில் விளையாட முடியும்.

அவர் விளையாட்டுத் தன்மையானவர், தீவிரத் தன்மையற்றவர். தீவிரத் தன்மையில் அவரால் இருக்கமுடியாது. வாழ்க்கை முழுவதும் தெய்வீக விளையாட்டு, லீலை. அவர் அதன் பகுதி. அதில் ஒரு பாத்திரத்தையே அவர் ஏற்றிருக்கிறார். தன்னால் முடிந்தவரை அழகாக, செம்மையாக அந்தப் பாத்திரத்தில் அவர் நடிக்கிறார். ஆனால் உலகம் முழுவதும் ஒரு பெரிய மேடை, ஒரு பெரிய நாடகம்- அன்றி வேறில்லை என அவர் அறிகிறார். எனவே அதைக் குறித்த அலட்டல் அவரிடம் இல்லை.

ஸென் மனிதர் இயல்பான பண்புகளைப் பெற்றிருக்கிறார். இசைவான தன்மையுடன் இருக்கிறார்.

தனிச்சிறப்பானவராக அவர் நடிப்பதில்லை. அவர் இயற்கையான பண்புகளையே பெற்றிருக்கிறார். அவர் மிகவும் மனிதத்தனமானவர். முற்றிலும் மனிதத்தனமானவர். அவரது மனிதத்தன்மை உன்னதமானது, உக்கிரமானது, முழுமையானது. எந்தப் புனிதத் தன்மையையும் அவர் கோருவதில்லை- அப்படி கோராததாலேயே அவர் புனிதமாய் இருக்கிறார். அவர் இசைவாக இருக்கிறார். தனக்குள் அவர் பிளவு பட்டில்லை. தனக்குள் ஓயாது சண்டையிட்டுக்கொண்டு இல்லை. ஓயாத உள்நாட்டு யுத்தத்தில் அவர் ஈடுபட்டில்லை. அவர் ஒரு இசையாக, பண்ணாக இருக்கிறார். அவரின் அருகில் அமர்ந்தால் நீங்கள் அவ்விசையைச் செவிமடுக்க முடியும்.

சமீபத்தில்தான் ஒருநாள் நவநீதம் கேட்டான்: "பகவான், நான் உங்களை நெருங்கிவரும் போதெல்லாம் உடனடியாக ஒரு வினோத மணம் கமழ்வதை முகர்கிறேன். அது என்ன மணம்?" நான் எந்த வாசனைத் திரவியங்களையும் பயன்படுத்துவதில்லை- என்னால் முடியாது என்பது நவநீதம் ஒரு டாக்டர் ஆனதால் அவனுக்கே தெரியும். எனவே இந்தக் கேள்வி அவனைப் பொறுத்தவரை அதிக நியாயமான கேள்வி. மேலும் என்னருகில் அவன் வரும்போதெல் லாம் அதே மணத்தையே எப்போதும் உணர்வதாக அவன் கூறுகிறான்.

அந்த மணத்துக்கும் எந்த வாசனைப்பொருளுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அது இசைவின் மணம். இசையின் மணம். அது பலபரிமாணங்களில் தன்னை வெளிப்படுத்துகிறது. சிலசமயங்களில் ஒரு அமைதியான முணுமுணுப்பு ஒலியாக அதை நீங்கள் கேட்கலாம். ஊசியிலை மரங்களின் வழியாக காற்று வீசுவது

போலவோ ஓடும் நீரின் சலசல ஒலியைப்போலவோ அது இருக்கிறது. சிலசமயங்களில் அதை ஒரு இசையாகக் கேட்கிறீர்கள். சிலசமயங்களில் அதை ஒரு மணமாக- நறுமணமாக அனுபவிக்கிறீர்கள். சிலசமயங்களில் அதை ஒரு சூழ்நிலையாக, ஒளியாக, மிகுந்த மர்மமானதாகக் காண்கிறீர்கள்.

ஆனால் ஸென் மனிதர் வெறுமனே ஒத்திசைவில் வாழ்கிறார். ஒத்திசைவில் இருந்து இந்த விஷயங்கள் எல்லாம் வெளிப்பாடா கின்றன.

> **அவரது ஆன்மா தூயது, எளியது, சுத்தமானது, நேரியது. அவரது ஸென்னை யாரும் காண்பதில்லை. அதுவோ மதிப்பரிய பொக்கிஷமாய் இருக்கிறது.**

அவரது உடலை நீங்கள் பார்க்க முடியும். அவரது ஸென்னை நீங்கள் பார்க்கமுடியாது. அவரது உட்புற தியானத் தன்மையை உங்களால் பார்க்க முடியாது. நீங்களே விழிப்புணர்வுள்ளவர்களாக ஆனால் ஒழிய அவரது விழிப்புணர்வை உங்களால் காணமுடியாது. நீங்கள் எந்த மட்டுக்கு அனுபவம் பெற்றிருக்கிறீர்களோ அம்மட்டுக்கே உங்களால் அறிய முடிகிறது.

நவநீதம், ஒரு குறிப்பிட்ட மணத்தை நீ அனுபவிக்கிறாய் என்ற மட்டில் நீ ஆசிர்வதிக்கப்பட்டிருக்கிறாய். இதன் பொருள் ஒரு குறிப்பிட்ட ஆழத்தை அடைந்துவிட்டாய், உன் ஜீவனின் ஒரு குறிப்பிட்ட உயரத்தை எட்டிவிட்டாய் என்பதே,

> **யாரும் காணாத அவரது ஸென் மதிப்பரிய பொக்கிசமாக இருக்கிறது.**
>
> **அபூர்வமானதும் விலைமதிக்க முடியாததுமான இந்த ரத்தினம். அதை எவ்வளவுதான் பயன்படுத்தினாலும் ஒரு போதும் மாறுகிறதில்லை. மற்றவர்களும் எல்லாச் சந்தர்ப்பங் களிலும் அதனால் தாராளமாக பயன்பெற முடிகிறது.**

ஸென் மனிதர் எப்போதும் ஆனந்தம் பொங்கி வழிபவராக இருக்கிறார். அதில் உங்களால் பங்கு பெறமுடிகிறது. அவர் வள்ளலாக இருக்கிறார். களிப்பை, ஆனந்தத்தை, அழகை, உண்மையை அவர் வாரிவழங்குகிறார். அவர் சத்தியத்தை கடவுளைப் பிரகாசிக்கிறார். ஆனால் எவ்வளவோ அமைதியாக... எவ்வித பிரகடனமும் இன்றி பிரகாசிக்கிறார். இருத்தலுக்குள் தன் ஆசிகளை அவர் பொழிந்தபடி இருக்கிறார். உலகுக்கு அவர் ஒரு ஆசிர்வாதமாக இருக்கிறார்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**என் காதல் நாறுகிறது. அப்படியானால் நான் ஏன் அந்த நாற்றத்தை அண்டியே இருக்கிறேன்?**

**பிரேம் அம்ருதோ.**

கடந்தகாலத்துக்கேற்பவே நாம் வாழ்ந்து வருகிறோம். நமது வாழ்க்கை முழுவதும் இறந்த காலத்திலேயே வேர்கொண்டுள்ளன. இறந்த காலத்தால் நாம் தளைப்படுத்தப்பட்டிருக்கிறோம். இறந்தகாலம் மிகவும் சக்திமிக்கதாக இருக்கிறது. எனவேதான் நீங்கள் ஒரு குறிப்பிட்ட பாணியிலேயே வாழ்ந்துகொண்டு போகிறீர்கள். அது நாறினாலும் அதையே திரும்பத்திரும்ப செய்துகொண்டு போகிறீர்கள். வேறு என்ன செய்வதென்றும் உங்களுக்குத் தெரிய வில்லை. அதனால் நீங்கள் கட்டுப்படுத்தப்பட்டு இருக்கிறீர்கள். இது ஒரு இயந்திரத்தனமான நிகழ்வாக இருக்கிறது. இது உனக்கு மட்டும் நடப்பதல்ல அம்ருதோ; புத்தராக ஆகாத வரை ஏறக்குறைய ஒவ்வொரு மனிதப்பிறவிக்கும் இப்படித்தான் நடக்கிறது.

புத்தராக ஆவது என்றால் கடந்தகாலத்தை விட்டொழித்து நிகழ்கணத்தில் வார்வதாகும். கடந்தகாலம் எல்லையற்றது, மிகப்பரந்தது, விரிந்தது, கோடிக்கணக்கான பிறவிகளைக் கொண்டது. இதுவரை ஒரு குறிப்பிட்ட முறையில் நீ வாழ்ந்து வந்திருக்கிறாய். இப்போது, இங்கு இருக்கையில் உன் அன்பு நாறுவதை நீ உணரவந்திருக்கலாம். ஆனால் அந்த உணர்வு மிகவும் ஆழமாயில்லை. அது மிகவும் மேலோட்டமாகவே உள்ளது. அது உண்மையாகவே ஆழமுள்ளதானால், உன் ஜீவனின் நடுமையம்வரை அது ஊடுருவி இருந்தால், நீ உடனடியாக அதிலிருந்து எட்டிக் குதித்து வெளியேறி இருப்பாய்.

இது எப்படி என்றால் உன் வீடு தீப்பிடித்துக் கொண்டால் அதிலிருந்து எப்படி வெளியேறுவது என்று யாரிடமும் நீ கேட்கமாட்டாய். பிரித்தானிய கலைக்களஞ்சியத்தைப் புரட்டிக் கொண்டிருக்க மாட்டாய். யாராவது ஒரு அறிவர் வந்து சொல்லும்வரை காத்திருக்க மாட்டாய். சன்னல் வழியாக குதிப்பது சரியா தவறா என ஆராய்ந்து கொண்டிருக்க மாட்டாய். எதைப் பற்றியுமே நீ பொருட்படுத்த மாட்டாய். அம்மணமாகக் குளித்துக் கொண்டிருந்தாலும் அப்படியே சன்னல்வழியே வெளியே குதித்து விடுவாய். துணிகளைப் பற்றிக்கூட கவலைப்பட மாட்டாய்.

ஏனெனில், வீடு தீப்பிடித்து எரியும்போது உன் உயிர்வாழ்வே ஆபத்தில் இருக்கிறது. இப்போது மற்ற எல்லாம் இரண்டாம்பட்சமே.

உன் அன்பு நாறுமானால்- இதுவே உன் அனுபவம்- பின் அதைவிட்டு நீ வெளியில் வருவாய். வெறுமனே ஒரு கேள்வி கேட்டுக் கொண்டிருக்க மாட்டாய். வெளியே குதித்துவிடுவாய்.

ஆனால் உன் கருத்து வெறும் அறிவுசார்ந்த கருத்து என நினைக்கிறேன். ஏனென்றால் ஒவ்வொரு தடவை நீ காதலில் ஈடுபடும் போதும் ஏதாவது துயரம் சூழ்கிறது. ஒவ்வொரு தடவையும் ஏதாவது மோதல், போராட்டம், சண்டை, பொறாமை, உடைமை மனப்பான்மை எழுகிறது. எனவே நீ ஒரு அறிவுரீதி நிலைபாட்டை எடுக்கத் தொடங்கி இருக்கிறாய். "என் காதல் நாறுகிறது. ஆயின் ஏன் அந்த நாற்றத்தை நான் தொற்றிக்கொண்டிருக்க வேண்டும்?" ஏனென்றால் அது இன்னும் உண்மையில் உன் இருத்தலியல் (வாழ்க்கை) அனுபவமாகவில்லை.

மேலும் அது உன் சொந்த நாற்றம்தான். எவரும் தன் சொந்த நாற்றத்துக்கு பழக்கப்பட்டு விடுகிறார். எனவேதான் மனிதர்கள் தனியாக இருக்கும் போது அவர்கள் எந்த நாற்றத்தையும் உணர்வதில்லை. வேறு ஒருவருடன் சேர்ந்து இருக்கும்போது மட்டுமே அதை அவர்கள் அனுபவிக்கிறார்கள்.

நீங்கள் காதலில் ஈடுபட்டிருக்கும்போது உங்கள் நிஜ முகத்தைக் காட்ட ஆரம்பிக்கிறீர்கள். காதல் ஒரு கண்ணாடி. மற்றவர் ஒரு கண்ணாடியாக செயல்படத் தொடங்குகிறார். ஒவ்வொரு உறவும் ஒரு கண்ணாடியாகவே செயல்படுகிறது. தனியாயிருக்கையில் உங்கள் சொந்த நாற்றத்தை நீங்கள் உணர்வதில்லை- உங்களால் முடியாது. அதற்கு எதிர்ப்புச்சக்தியைப் பெற்றுவிடுகிறோம். அதனுடன் நீண்ட காலமாக நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள். அப்படி இருக்க எப்படி அதை உங்களால் முகர முடியும்? மற்றவரோடு இருக்கும்போது மட்டும் தான் அவர் நாறுகிறதா நீங்கள் உணரத் தொடங்குகிறீர்கள்: நீங்கள் நாறுவதாக அவர் உணரத் தொடங்குகிறார். சண்டை ஆரம்பிக்கிறது... உலகம் முழுவதிலும் இருக்கும் எல்லாத் தம்பதிகளின் கதையும் இதுதான்.

"அந்த வெள்ளாட்டுடன் எங்கே போகிறாய் யுவான்?" என்று கேட்டான் போலீஸ்காரன்.

"இதை வளர்க்க வீட்டுக்குக் கூட்டிப் போகிறேன்" என்றான் யுவான்.

"வீட்டிலா?"

"ஆமா."

"நாத்தமடிக்குமே?"

"அதனாலென்ன நாத்தத்தைப்பத்தி எல்லாம் அது கவலைப் படாது!"

உங்கள் சொந்த நாற்றமே உங்களைத் தொந்தரவு செய்வதில்லை. உண்மையில் திடீரென அது மறைந்துவிட்டால்தான் உங்களுக்கு கொஞ்சம் தூக்கிவாரிப்போடும்; உங்கள் அடிப்படை கொஞ்சம் ஆட்டம் காண்பதுபோல் உணர்வீர்கள்; உங்களின் சொந்த இருப்பாக உணரமாட்டீர்கள்; ஏதோ தவறு நேர்ந்துவிட்டது போல் உணர்வீர்கள்.

நீங்கள் காதலித்து அதில் பொறாமை இல்லாவிட்டால் நீங்கள் காதலிக்கிறீர்களா இல்லையா என உங்களுக்கே சந்தேகமாகி விடும்! என்ன வித காதல் இது? இதில் பொறாமை இருப்பதாக தெரியவில்லையே! நீங்கள் ஒரு ஆணைக் காதலிக்கிறீர்கள். அந்த ஆள் எப்போதாவது ஒருதடவை வேறொரு பெண்ணுடன் போகிறான். அதற்காக நீங்கள் பெரிதாக ஆர்ப்பாட்டம் செய்வதில்லை. அதை இயல்பாக எடுத்துக் கொள்கிறீர்கள். ஒரு மாறுதல் என்பது முற்றிலும் நல்லதே. அதனால் உன் காதலன் புருசன் சந்தோசமடைந்தால், ஏன் அவனை சந்தோசமாக இருக்கவிடக்கூடாது? நீ அவனை நேசிக்கிறாய். அவனை நீ மெய்யாகவே நேசித்தால் அவனது மகிழ்ச்சியையும் நீ மதிப்பாய். அத்துடன் அவனும் எப்போதைக்கு மாகப் போய்விடுவதில்லை.

உண்மையில் அவ்வப்போது ஜோடிகளுக்கு கொஞ்சம் சுதந்திரம் அனுமதிக்கப்பட்டால் அவர்கள் பிரியமாட்டார்கள். மணவிலக்கு வீதம் உலகில் குறைந்துவிடும். திருமணம் மிகவும் இறுக்கமாக இருப்பதால் மட்டுமே மணவிலக்கும் நிலவுகிறது. திருமண உறவை சற்றே தளர்த்தினால் மணவிலக்கு மறைந்துவிடும். திருமணத்தின் துணைவிளைவே மணவிலக்கு, திருமண வாழ்க்கைமுறை எந்த அளவுக்கு இறுக்கமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு மணவிலக்கும் அதிகரிப்பது முற்றிலும் தேவையாகி விடுகிறது. அப்படி மணவிலக்கு அனுமதிக்கப்படாவிட்டால் நீங்கள் இரட்டை வாழ்க்கை நடத்துகிறீர்கள். சமுதாயத்துக்குக் காட்டுவதற்கு ஒன்று, வாழ்வதற்கு ஒன்று.

திருமணம் காரணமாகவே விபச்சாரமும் உலகில் நிலவுகிறது. இதற்கான முழுப்பழியும் திருமண அமைப்பு முறையையே சாரும். மக்கள் கொஞ்சம் அன்பு கூடியும் பொறாமை குறைந்தும் இருந்தாலே, மனித இயல்பைப் புரிந்துகொண்டிருந்தாலே, விஷயம் சுலபமாகிவிடும்.

ஒவ்வொரு நாளும் ஒரேவிதமான உணவையே நீங்கள் சாப்பிடுகிறீர்கள். அது உங்களுக்கு சலித்து வெறுத்துப் போகிறது. ஒருநாள் நீங்கள் கடைக்குப் போக விரும்பலாம். வீட்டில் கிடைப்பதைவிட கடை உணவு மோசமாகக் கூட இருக்கலாம். அப்போதும் அது நல்லதே- குறைந்தபட்சம் அதனால் வீடே பரவாவில்லை என உங்களுக்குத் தெரியலாம். அப்படி மறுநாள் நீங்கள் திரும்பி வரும்போது மீண்டும் வீட்டுக்கே திரும்பிவிட்டோம் என்னும் இறுக்கம் தளர்ந்ததாக நீங்கள் உணர்வீர்கள். மறுபடியும் அதே பழைய உணவையே மகிழ்ச்சியுடன் உண்ணத் தயாராயிருப்பீர்கள்!

மனித மனத்தை அதிகமதிகம் புரியப்புரிய திருமணமானது அதிகமதிகமாக தளர்த்தப்படும். திருமணத்துக்கு சில நாட்கள் ஓய்வு கொடுப்பது முற்றிலும் நல்லதே. பெண் தன் ஆண்நண்பர்களுடன் சேர்ந்திருக்க அனுமதிக்கப்பட வேண்டும். அவ்வாறே ஆண் தன் பெண் நண்பர்களுடன் சேர்ந்திருக்க அனுமதிக்கப்பட வேண்டும். குறைந்தது, வாரத்துக்கு ஒருநாள் மதத்துக்கு என்று நீங்கள் விடுமுறை விடுவதைப்போல (சண்டே ரெலிஜன்) திருமணத்துக்கும் வாரம் ஒருநாள் விடுதலை கொடுத்துவிட வேண்டும் (சண்டே மேரேஜ்) அப்போதுதான் உங்கள் சொந்த மனைவியே எவ்வளவோ தேவலை என அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். மறுபடியும் ஒரு தேனிலவு- குட்டித் தேனிலவு- ஆரம்பிக்கிறது. மறுபடியும் ஆனாவிலிருந்து தொடங்குகிறீர்கள்.

இப்படி பல பெண்களுடனும் பல ஆண்களுடனும் இருப்பது திருமண ஏற்பாட்டை பாதிக்காது- நிச்சயமாகப் பாதிக்காது. இது மனித குலத்தில் மேலோங்கிக் காணப்படும் மிகவும் அனர்த்தமான ஒரு கருத்தாகும். அதாவது அது திருமணத்தையும் குடும்பத்தையும் நாசமாக்கிவிடும் என்பது. அப்படிக் கிடையாது, மாறாக அதற்கு மிகவும் ஆதாரமாகவே இருக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி அதிகரிக்கவும் சண்டை குறையவும் அது உதவும். இல்லாவிட்டால் மனைவி ஓயாமல் கணவனை வேவுபார்த்துக் கொண்டிருப்பாள். கணவன் ஓயாமல் மனைவியை வேவுபார்த்துக் கொண்டிருப்பான்.

இவ்வாறு ஒருவர் ஒருவரை ஓயாமல் கடித்துக் குதறிக் கொண்டிருக்கும் இரண்டு பேரின் மத்தியில் காதல் எப்படி நிலவ முடியும்?

ஆம்; உன் காதல் நாறுகிறது. ஒவ்வொருவரின் காதலும் நாறுவது போலவே. ஆனால் நீ உறவில் இருக்கும்போதுதான் அதை நீ உணர்கிறாய். அதற்கு உண்மையில் உன்னிடம்தான் ஒன்றைச் செய்ய வேண்டி இருக்கிறது என்பதை இன்னும் நீ உணரவில்லை. அடுத்தவரிடமே ஏதோ கோளாறு என்பதாகத் தான் உன் அடிமனதில் இப்படியும் நீ உணர்கிறாய். மனமே அப்படித்தான் செயல்படுகிறது; பொறுப்பை அது மற்றவர்கள்மேல் வீசி எறிகிறது. தன்னை அது அப்படியே ஒத்துக்கொள்கிறது; மற்றவர்களிடமே எப்போதும் அது குறை காண்கிறது.

ஒரு திரை அரங்கின் முன்வரிசையில் நிறையப் பேர் உட்கார்ந்த்திருக்கிறார்கள். காட்சி தொடங்கிவிட்டிருக்கிறது. திடீரென கடுமையான துர்நாற்றம் கிளம்புகிறது.

படம் பார்த்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் தனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவனைப் பார்த்து "பேண்ட்டோடு மலம் கழித்து விட்டாயா?" என்கிறார்.

அதற்கு அவன் பதில் கூறுகிறான்; "ஆமாம், அதுக்கென்ன?"

மக்கள் தம்மைக்குறித்து முழுமையாக ஒத்துக்கொள்கிறார்கள்! அவர்கள் எதைச்செய்தாலும் அது சரியானது: "ஏன், அதிலென்ன தவறு? என் பேண்ட், என் பீ. அப்படியிருக்க நீ ஏன் குறுக்கிடுகிறாய்? மேலும், சுதந்திரம் ஒவ்வொருவரின் பிறப்புரிமையாக்கும்!"

அம்ருதோ, உன் அன்பு நாறினால், உண்மையில் நாறுவது எது என்பதை கண்டுபிடிக்க முயற்சிசெய். அன்பு நாறாது. வேறொன்றுதான் நாறுகிறது. அன்புக்கு இயல்பான நறுமணம் உண்டு. அது நாறமுடியாது. அது ஒரு தாமரைப்பூ. வேறு ஏதோ- பொறாமை, உடைமை மனப்பான்மை அதில் இருக்க வேண்டும். ஆனால் பொறாமையையோ உடைமை மனப்பான்மையையோ நீ குறிப்பிடவில்லை. அவற்றை நீ மறைக்கிறாய். அன்பு ஒரு போதும் நாறுவதில்லை. அதற்கு வாய்ப்பில்லை. அது அன்பின் இயல்பல்ல. நாற்றத்தை விளைப்பது உண்மையிலேயே எது எனக் காண தயவு செய்து முயற்சிசெய். அதை அடக்கிவை என நான் கூறவில்லை. தேவையானதெல்லாம் அதைப்பற்றிய தெளிவே- அது என்ன என்பதே.

அது பொறாமை என்றால். நான் ஒரு யோசனை மட்டும் சொல்வேன்; உன் பொறாமையைக்குறித்து அதிக விழிப்பாயிரு. அடுத்த தடவை. அது எழுகிறபோது வெறியனாவதற்குப் பதில் உன் கதவுகளைச் சாத்து. அமைதியாக அமர். தியானத்தில் அமர், உன் பொறாமையைக் கவனி. உள்ளபடியே அது என்ன என்பதைப் பார். அது புகைபோல். அசுத்தமான புகைபோல் உன்னைச் சூழ்ந்திருக்கிறது. அது உனக்கு மூச்சுத்திணற வைக்கிறது. வெளியே போய் வேறெதிலாவது புகுந்து கொள்ள விரும்புவாய். ஆனால் அப்படி எதுவும் செய்யாதே. ஒன்றும் செய்யாத நிலையிலேயே இரு. ஏனென்றால் பொறாமையாயிருக்கும் அந்தக்கணத்தில் செய்யப்படும் எதுவும் அழிவுத்தன்மையதாகவே இருக்கும். வெறுமனே கவனி அதை ஒடுக்கும்படி நான் கூறவில்லை. ஏனெனில் அது மறுபடியும். வேறொன்றை செய்யப் புகுவதேயாகும்.

மக்கள் ஒன்று எதையாவது வெளிப்படுத்திக் கொண்டோ அல்லது உள்ளமுக்கிக்கொண்டே இருக்கிறார்கள். இரண்டு வழிகளுமே தவறானவை. வெளிப்படுத்தினால் மற்றவருக்கு கேடு செய்தவராகிறீர்கள். உங்களிடம் சிக்கித் துன்புறும் ஆள் யாராயிருந்தாலும் அவர் பழிவாங்கவே போகிறார். தெரிந்தே-உணர்வுப்பூர்வமாக அவர் பழிவாங்காதிருக்கலாம். ஆனால் தன் உணர்வின்றியே அது நடந்துவிடும்.

சில மாதங்களுக்கு முன் கிருஷ்ணபாரதி ஒரு பெண்ணுடன் காதல் வயப்பட்டான். அதில் அசாதாரணம் ஒன்றும் இல்லை. ஆனால் தீட்சாவுக்கு வெறிகண்டு விட்டது! அந்தக் கருத்தை தீட்சா வால் ஏற்க முடியவில்லை. ஒரு ஆண் அல்லது பெண் உங்களை நேசித்தபின் அந்த ஆண் அல்லது பெண் வேறொருவருடனும் போனால் அது உங்களை நிராகரித்தது போலாகும் என பல நூற்றாண்டுகளாகவே நமக்குச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது.

இது சுத்த அபத்தமாகும். அது நிராகரிப்பல்ல. உண்மையில் அதற்கு நேர் எதிரானதே. ஒரு ஆண் ஒரு பெண்ணை காதலித்து அவளுடன் இன்பம் கண்டால் அடுத்த பெண்ணுடன் எப்படி இருக்கும் என அவன் கற்பனை செய்யத் தொடங்குகிறான். உண்மையில் இந்தப் பெண் அவனுக்குத் தந்த இன்பத்தினால்தான் அவனது கற்பனை தூண்டிவிடப்பட்டிருக்கிறது. முதல் பெண்ணை அவன் நிராகரிக்கிறான் என்பதில்லை. உண்மையில் இவள் கொடுத்த ஊட்டத்தால்தான் அடுத்த பெண்களும் எப்படி இருக்கிறார்கள் என்பதைக் காண விரும்புகிறான் என்பதால். அது இவள்மேல் அவனுக்குள்ள ஈடுபாட்டின் அறிகுறிதான். கயிற்றைக் கொஞ்சம்

தளர்த்திவிட்டால் அதிக தூரம் போய்விட மாட்டான். திரும்பி வருவான். ஏனெனில் அடுத்த பெண்ணுடன் ஆன உறவு புதுமையாய், புதியதாய் இருக்கலாம். ஆனால் ஊட்டமளிப்பதாய் இருக்க முடியாது. ஏனெனில் அங்கு அந்நியோன்னியம் எதுவும் இருக்காது. அந்த இடம் வெறுமையாகவே இருக்கும். அங்கு காமம் இருக்கும், காதல் இருக்காது.

காதல் வளர கால அவகாசம் தேவை; அந்நியோன்னியம் தேவை. உண்மையாகவே அதற்கு நீண்ட காலம் தேவை. 2.3 வாரத்தில் பூத்து அடுத்த 2.3, வாரத்தில் வாடிப் போய்விடும் பருவகால மலர்அல்ல அது. அது அந்நியோன்னியத்தின் ஒரு நீண்டகால நிகழ்முறை. மெதுமெதுவாக இரண்டு ஆள்கள் ஒருவரில் ஒருவர் உருகி ஒன்று கலக்கிறார்கள். அப்போதே அது ஊட்டமளிப்பதாகிறது. அடுத்த பெண்ணோ ஆணோ அப்படி இருக்க முடியாது. அது வெறும் சாகசம் ஆகலாம். கிளர்ச்சியூட்டுவதாகலாம். ஆனால் பின்பு திடீரென இந்த எண்ணம் உதிக்கிறது- உதிக்கவே செய்யும் அதாவது ஆட்டத்துக்கு இது நல்லதுதான். ஆனால் ஊட்டத் துக்கு நல்ல தல்ல என்று உடனே அந்த ஆள் திரும்பிவிடுவார்.

இப்படித்தான் கிருஷ்ண பாரதி திரும்பிவிட்டிருப்பான். ஆனால் தீட்சாவுக்கு வெறிபிடித்து விட்டது. மற்ற எந்தப் பெண்ணையும் போலவே அவள் நடந்து கொண்டாள். ஆனால் நான் காத்துக் கொண்டிருந்தேன். கூடிய சீக்கிரம் அவள் பழி எடுக்கப் போகிறாள் என்று, இப்போது அவள் பழிவாங்கிக் கொண்டிருக்கிறாள். கிருண்ஷ பாரதிக்கு நலமில்லாமல் போனது அவன் மருத்துவமனையில் இருந்தான். தீட்சாவுக்கு சற்று சுதந்திரம் கிடைத்தது. அவள் தன் கைக்கு எட்டிய மனிதனைக் காதலித்தாள். அவன் உண்மையாகவே கைக்கடக்கமாகவே இருந்தான்! இப்போது கி.பா. நரகத்தில் இருக்கிறான்.

இதைக்குறித்து அந்த அளவுக்கு அலட்டிக்கொள்ளத் தேவையில்லை. கி.பா.வுக்கு நான் ஒரு செய்தி அனுப்பி இருக்கிறேன். "பொறு. வருத்தப்படாதே அவள் பழிதீர்க்கட்டும். அந்த உணர்வற்ற மனதின் பாரம் கொட்டித் தீர்க்கப்படுவது நல்லதுதான்."

நாம் ஒருவரை ஒருவர் கொஞ்சம் கூடுதலாகப் புரிந்து கொண்டால், மனித இயல்பை இன்னும் கொஞ்சம் கூடுதலாக நாம் புரிந்துகொண்டால் பொறாமை என்பது இராது. ஆனால் கடந்த நூற்றாண்டுகள் வழங்கிய மரபுச் 'சொத்தாக' அது இருக்கிறது.

எனவே, அம்ருதோ, அதை இக்கணமே கைவிட்டுவிடு என நான் சொல்ல முடியாது. அதன்மீது நீ தியானிக்க வேண்டி உள்ளது. உன்னை அது ஆட்கொள்ளும் போதெல்லாம் அதன் மீது தியானி. மெதுமெதுவாக உனக்கும் பொறாமைக்கும் இடையில் தியானமானது இடைவெளியை உருவாக்கும். இடைவெளி எந்த அளவுக்கு அதிகமாகிறதோ அந்த அளவுக்கு பொறாமை எழுவது குறையும். ஒருநாள் பொறாமையே எழாதபோது உன் அன்பு ஒரு சுகந்தத்தை வெளியிடும். அந்த நறுமணத்துடன் எந்த மலரும் போட்டிபோட முடியாது. அன்பின் வாசத்துடன் ஒப்பிட்டால் எந்தப் பூக்களின் வாசமும் கிட்டே வரமுடியாது.

ஆனால் பொறாமை, உடைமை மனப்பான்மை, பழிகார கோபம் என்பவற்றால் உன் காதல் முடமாக்கப்பட்டிருக்கிறது.

நாறுவது அன்பல்ல, என்பதை நினைவில் கொள். ஏனெனில் நாறுவது அன்பே என நினைத்து தம்மை மூடிக்கொள்ளும், அன்பு செய்வதை நிறுத்திவிடும் மக்களை நான் பார்த்திருக்கிறேன்.

காலங்காலமாக லட்சக்கணக்கான துறவிகளுக்கும் கன்னியர்களுக்கும் இதுதான் நடந்திருக்கிறது. அன்பின் வழியை அவர்கள் அடைத்து விட்டார்கள். அன்பு எனும் கருத்தையே அவர்கள் கைவிட்டுவிட்டார்கள். அதற்கு மாறாக பொறாமையைக் கைவிட்டிருந்தால் ஒரு புரட்சியே நடந்திருக்கும். உடைமை மனப்பான்மையைக் கைவிட்டிருந்தால் அது அளவற்ற மதிப்புடையதாக ஆகியிருக்கும். அதற்குப் பதிலாக காதலை அவர்கள் கைகழுவி விட்டார்கள். அது மிகவும் எளியது. பெரிய விஷயமல்ல. யாரும் அதைச் செய்ய முடியும். துறவியாகவோ கன்னியாஸ்திரியாகவோ இருப்பது மிகவும் சுலபம். ஆனால் அன்பாயிருப்பதும் பொறாமை இல்லாமல் இருப்பதும், அன்பாயிருப்பதும் உடைமை மனப்பான்மை அற்றிருப்பதும், அன்பாயிருப்பதும் அடுத்தவருக்கு முழுசுதந்திரம் அளித்திருப்பதும் உண்மையிலேயே மிகக் கடினமான காரியம்தான். அதன்பிறகு மட்டுமே நீங்கள் அன்பையும் அதன் நறுமணத்தையும் உணர்வீர்கள்.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**இயேசு தாம் வாக்களித்தபடி இந்த பூமிக்குத் திரும்பவும் வருவாரா மாட்டாரா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

**சுஜாதா,**

**வி**ழிப்படைந்து விட்ட மனிதர் திரும்பிவர முடியாது. தன் கருணையினால் அவர் வாக்களிக்கிறார். ஆனால் அது சாத்தியமில்லை. அது சாத்தியமில்லை என்பது ஏனென்றால் வாழ்வின் நியதிக்கு அது எதிராக இருக்கிறது. திரும்பிவருவதாக இயேசு வாக்களித்தார்தான். புத்தரும் திரும்பி வருவதாக வாக்களித்திருக்கிறார். கிருஷ்ணரும் திரும்பி வருவதாக வாக்களித்திருக்கிறார். ஆனால் இதுவரை ஒருவரும் வரவில்லை. இனிமேலும் வரப்போவதில்லை. வாழ்வின் நியதிக்கே எதிரானது அது. அவர்கள் வாக்களிப்பது அவர்களின் கருணையினால், அவர்களின் அன்பினால், உங்கள் துன்பத்தை அவர்கள் பார்ப்பதால், உங்கள் துயர நிலைகளை அவர்கள் பார்ப்பதால், உங்கள் கண்ணீர்களை அவர்கள் பார்ப்பதால் அவர்கள் அவ்வாறு வாக்களிக்கிறார்கள். அவர்களின் வாக்குறுதியால் ஒரு குறிப்பிட்ட நோக்கம் நிறைவேறுகிறது. அவர்களின் வாக்குறுதியின் காரணமாகவே அவர்களை நீங்கள் நினைவில் வைத்துக் கொண்டே இருக்கிறீர்கள். அந்த நினைவு உங்களுக்கு உதவுகிறது. அவர்களின் வாக்குறுதியின் காரணமாக அவர்களுடன் தொடர்ந்து நீங்கள் தொடர்பு கொள்கிறீர்கள். அவர்களை சரணடைகிறீர்கள். அந்தச் சரணாகதி உதவுகிறது. ஆனால் அவர்களால் தம் வாக்குறுதியை நிறைவேற்ற முடியாது.

விழிப்படைத்துவிட்ட மனிதர் ஒருபோதும் மறுபடியும் பிறக்க வாய்ப்பு இல்லை. தன்னில் இன்னும் உணர்வற்ற பகுதி மிச்சமிருக்கும் மனிதர் மட்டுமே பிறக்க முடியும். வாழ்க்கை என்பது உணர்வு பெறுவதற்கான ஒரு சந்தர்ப்பமாகும். அது ஒரு பள்ளிக்கூடம், பயிற்சிக்கூடம் இங்கு மக்கள் மையங்கொள்ள, வேர்கொள்ள, ஒருங்கிணைந்தவராகப் படிக்கிறார்கள். ஒருங்கிணைந்தவராக அவர்கள் ஆனதும், சுய தரிசனத்தை அவர்கள் அடைந்ததும் மறுபடியும் அப்பள்ளியில் அவர்கள் அனுமதிக்கப்பட முடியாது. அவர்கள் பிரபஞ்சத்துக்குள் மறைந்து விடுகிறார்கள். கடவுளின் பகுதியாகி விடுகிறார்கள்.

எனவே நினைவில் இருத்த வேண்டிய முதல் விஷயம். இயேசு புத்தர்- கிருஷ்ணர் போன்றவர்கள் திரும்பிவர முடியாது. ஆனால் விழிப்புப் பெற்ற மனிதர்களே இனி இங்கே இருக்க மாட்டார்கள் என்பது இதன் பொருள் அல்ல. இயேசுவை, புத்தரை, கிருஷ்ணரைப் போன்றவர்கள். அதே தன்மை கொண்டவர்கள் இருப்பார்கள். அவர்களின் முகங்கள் அதேமாதிரி இல்லாதிருக்கலாம். அவர்களின் உடல்கள் அதேமாதிரி இல்லாதிருக்கலாம்...

மேலும் இயேசுவுக்கு இருந்தது போன்ற உடம்பை யார் விரும்புவார்கள்? உங்களுக்கு இயேசுவைப் பற்றி ஒன்றும் தெரியாது- அதனால்தான் அவர் வெறும் நான்கு அடி ஐந்து அங்குல உயரம்தான் இருந்தார்; அத்துடன் கூன் முதுகு வேறு! மேலும் பழைய ஏடுகளில், இந்த உலகில் பிறந்தவர்களிலேயே மிகவும் விகாரமான தோற்றமுடையவர் அவர் என கூறப்பட்டிருக்கிறது. அவருக்கு இருந்ததுபோன்ற உடம்பு யாருக்குப் பிடிக்கும்?

ஆனால் அவர் மிகவும் அழகான மனிதர் என்று அவருடைய சீடர்கள் சொல்லி இருக்கிறார்கள். அவருடைய அழகை- உள் அழகை- அவர்கள் கண்டார்கள். எனவே இதில் முரண்பாடு ஏதுமில்லை. சீடர்கள் உட்புறத்தைக் காண்கிறார்கள். அவர்கள் உண்மையான இயேசுவைக் கண்டார்கள். அவரது உணர்வின் மையத்தை கண்டார்கள். அவரது அகத்தன்மையை கண்டார்கள். அவரது ஜீவனுடன் அவர்கள் ஐக்கியமானார்கள். ஆம்- அவரைப்போல அழகான மனிதர் இருந்ததில்லை.

ஆனால் மற்றவர்கள் அவருடைய உடம்பை மட்டுமே பார்த்தார்கள். மற்றவர்களால் அவருடைய ஆன்மாவைப் பார்க்க முடியவில்லை. மற்றவர்களால் அவருடைய ஸென்னைப் பார்க்க முடியவில்லை. அவருடைய சீடர்களால் மட்டுமே அவருடைய ஸென்னை, அவருடைய தியானத்தன்மையை அவருடைய அன்பைப் பார்க்க முடிந்தது. அவருடைய சீடர்கள் மட்டுமே அவர் யார் என்பதை, அவரது தெய்வீகப் பண்பை உணரமுடிந்தது. "இந்த உலகில் இதுவரை அவதரித்தவர்களிலேயே அவர்தான் மிகவும் அழகிய மனிதர்" என அவர்களால் கூறமுடிந்தது.

விவரணைகள் ஒன்றுக்கொன்று முரணாக உள்ளன. எனவே எதுசரி என தீர்மானிப்பது எவ்வாறு என்பது ஒரு பிரச்சனையாகவே ஆகி இருக்கிறது. இரண்டும் சரிதான் முடிவு செய்யத் தேவையில்லை. இதையோ அதையோ தேர்வதல்ல பிரச்னை.

இரண்டாவதாக, அப்படியே அவரால் திரும்பிவர முடியும் என்றிருந்தாலும் திரும்பிவர அவருக்கென்ன பைத்தியம் என்று நினைத்தீர்களா? அவர் இங்கிருந்தபோது அவரை நீங்கள் என்ன செய்தீர்கள் என்பதை மறந்துவிட்டீர்களா? அதற்குமுன் வேறெவருக்கும் செய்திராத அளவு சித்திரவதைகளை அவருக்குச் செய்தீர்கள்.

சாக்ரடீசின் மரணம் ஒரு சித்திரவதையாக இருக்கவில்லை. அவருக்கு விஷம் தரப்பட்டது. சில நிமிடங்களில் அவர் இறந்தார். அவரது மரணம் அமைதியான மரணம்.

இயேசு சிலுவையில் கொல்லப்பட்டது. மிகவும் குரூரமான மரணங்களில் ஒன்றாகும்... சில சமயங்களில் சிலுவையில் அறையப்பட்டவர் மரிக்க, மூன்று நாட்கள் ஆகும். சிலுவையில் ஆணியால் அறையப்பட்டவுடன் ஒருவர் செத்துவிட மாட்டார். அவர் உடம்பிலிருந்து மெதுமெதுவாக ரத்தம் வடிய ஆரம்பிக்கிறது. உயிர் வடிய ஆரம்பிக்கிறது. மெதுமெதுவாக, மிகவும் பலவீனமான மனிதன்கூட இம்முறையில் சாவதற்கு குறைந்தது, ஆறுமுதல் 18 மணி நேரம் ஆகும். ஆரோக்கியமான மனிதன் என்றால் மூன்றுநாட்கள் அல்லது அதற்கும் மேல் ஆகும். இது உண்மையிலேயே நரகம்தான்! உண்மையிலேயே கொடுமைதான்!

அவர் சிலுவையில் மடிந்துகொண்டிருந்தார். மக்கள் அவர் மேல் கற்களையும் வசைமொழிகளையும் விட்டெறிந்து கொண்டிருந் தார்கள். படைவீரர்கள் அவர் உடம்பில் தம் ஈட்டிகளை குத்தி ஏற்றினார்கள். அவர் உடம்பில் இருந்து ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. அவர் உயிரோடிருந்தார். அவருக்குத் தாகமாயிருந்தது. அவர்களோ அவருக்கு தண்ணீரும் தரவில்லை. தண்ணீருக்காக அவர் கதறினார். இந்தச் சித்திரவதையை பார்க்க ஒரு நூறாயிரம் மக்கள் கூடி இருந்தார்கள்.

இயேசு இங்கிருந்தபோது அவருக்கு நீங்கள் என்ன செய்தீர்கள்? இது ஒன்றே இந்த பூமிக்கு அவர் இனி ஒருபோதும் வராதிருப்பதற்கு போதுமானது என்றே நான் நினைக்கிறேன்!

ஒரு புது ஆள் வந்து சொர்க்கவாசலைத் தட்டினான். இயேசு வாயிற்பணியில் இருந்தார். கதவைத் திறந்துவிட்டார்.

"நீங்கள் யார்?" என்று கேட்டார்.

"அடால்ஃப் ஹிட்லர்" என்று பதில் வந்தது.

"அடால்ஃப் ஹிட்லர்! நீ இங்கு வர முடியாது. உலக ஆதிக்கத்துக்காக வெறி பிடித்து அலைந்த தற்பெருமைக்காரன் நீ. அகன்று போ!"

"ஆனால் நான் என் வழிகளைத் திருத்திக்கொள்ள விரும்புகிறேன்!"

"வழியே இல்லை! வெளியே போ!"

"என்னை நீர் உள்ளேவிட்டால் உமக்கொன்று தருவேன்."

"அப்படியா?" இயேசு கொஞ்சம் சுருதி குறைந்தார்," என்ன அது?"

ராணுவச் சீருடையில் இருந்த ஹிட்லர் அவனது சிறப்பு இரும்புச் சிலுவை (அயன் க்ராஸ்) விருதை உருவி இயேசுவிடம் காட்டிக் கேட்டான், "இப்போது நான் உள்ளே வர முடியுமா?"

"இங்கேயே கொஞ்சம் இரும். நான் போய் என் அப்பாவிடம் கேட்கிறேன்."

கடவுள் தன் படிப்பறையில் இருப்பதை இயேசு கண்டார். "அப்பா, ஒரு புது ஆள் வாசலில் நிற்கிறான். உள்ளே வர விரும்புகிறான்."

"யார் அது?"

"அடால்ஃப் ஹிட்லர்"

"அடால்ஃப் ஹிட்லரா? உலக ஆதிக்கத்துக்காக வெறிபிடித்து அலைந்த அந்த தற்பெருமைக்காரனா? அவன் இங்கு வரக்கூடாது!"

"ஆனால் ஒரு விசேஷமான பொருளை எனக்கு அவன் தருவதாக கூறுகிறான்."

"என்ன அது?"

"அவனுடைய இரும்புச் சிலுவை."

கடவுள் தன் நாற்காலியைக் குத்தினார், "நாசமாய்ப்போக, அந்த மரச் சிலுவையையே உன்னால் தூக்க முடியவில்லை, உனக்கு எதுக்கு இரும்புச் சிலுவை!"

இயேசுவே தன் சிலுவையைச் சுமக்கும்படி நீங்கள் பாவம்- அவரைக் கட்டாயப்படுத்தினீர்கள். அவர் பலவீனமாகி இருந்தார். ஒரு இரவு முழுதும் அவர் தூங்கி இருக்கவில்லை- அந்த இரவு முழுவதும் அவரைச் சித்திரவதை செய்தார்கள். கேள்வி விசாரணைகளால் துளைத்தார்கள். பின் அவர் பெரிய கனத்த சிலுவையைச் சுமக்க வேண்டியிருந்தது. சிலுவையின் பாரம் தாங்கமாட்டாமல் மூன்று முறை அவர் சாலையில் விழுந்தார். அவர் நோகடிக்கப்பட்டார். புண்படுத்தப்பட்டார். ஆனாலும் படைவீரர்கள் மறுபடியும் அவரைச் சாட்டைகளால் விளாசி அவருடைய சிலுவையைத் தூக்கிச் செல்லும்படி கட்டாயப்படுத்தினார்கள்.

அவருக்கு 33 வயதே ஆகி இருந்தது. வாழ்க்கையை இன்னும் அவர் அதிகமாய் ருசிபார்த்திருக்கவில்லை. உண்மையில் அப்போதுதான் தொடங்கி இருந்தார். புத்தரைப் போல் நீண்டகாலம் அவர் வாழ்ந்திருந்தால் உலகம் இன்னும் அதிக வளம் பெற்றிருக்கும். புத்தர் 84 ஆண்டுகள் உயிர்வாழ்ந்தார். மகாவீரர் 80 வயது வரை

வாழ்ந்தார். கிருஷ்ணரும் ஏறக்குறைய அத்தனை ஆண்டுகள் வாழ்ந்தார். அவர்கள் பழுத்த முதிர்ந்த வயதில் இறந்தார்கள். வாழ்க்கையின் எல்லா ஏற்ற இறக்கங்களையும் வெற்றி தோல்விகளையும் இன்ப துன்பங்களையும் துக்க பரவசங்களையும் அவர்கள் கண்டார்கள். அவர்கள் முதிர்ந்து கனிந்து போனார்கள். (எனவே) அளவு கடந்த மதிப்புக்குரியதை உலகுக்கு அவர்களால் அளிக்க முடிந்தது.

இயேசுநாதர் 3 ஆண்டுகள் மட்டுமே விட்டுவைக்கப்பட்டார். 30 வயதாக இருக்கும்போது அவரது பணியைத் தொடங்கினார். 33 வயதில் கொல்லப்பட்டார். மூன்றே ஆண்டுகள்தான்! அவரால் அதிகமாகச் செய்ய முடியவில்லை. மனித குலத்துக்கு அவர் அதிகமாகச் செய்திருக்க முடியும். ஆனால் நாம் அவரைக் கொன்றுவிட்டோம். கொன்றுவிட்டு, இப்போது அவர் அடுத்து எப்போது வருவார் என்று காத்துக் கொண்டிருக்கிறோம்.

அப்படியே அவர் வந்தால் நீங்கள் அதையே திரும்பவும் அவருக்குச் செய்வீர்கள். ஏனென்றால் அந்தத் தன்மை, தீர்க்கதரிசனம் உள்ள மக்களுக்கு அதையேதான் நீங்கள் மறுபடி மறுபடி செய்து வருகிறீர்கள். புத்தர்களிடம் நீங்கள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு மனிதத்தன்மையற்ற முறையிலேயே எப்போதும் நடந்து வந்திருக்கிறீர்கள்.

இயேசு ஒரு புத்தர். கிறிஸ்து என்னும் சொல்லின் நேர்ப் பொருள் அதுவே. கிறிஸ்து என்றாலும் புத்தர் என்றாலும் ஒன்றுதான். புத்தர் என்றால் ஞானநிலைபேறு பெற்றவர் எனப்பொருள். கிறிஸ்து என்றால் முடிசூட்டப்பட்டவர் எனப்பொருள். விழிப்புணர்வே உங்களின் கிரீடமாயிருக்கிறது; அதுவே உங்களை பேரரசர் ஆக்குகிறது; உங்களிடமிருந்து துன்பம் யாவற்றையும் நீக்குகிறது; கடவுளின் அரசை உங்களுக்கு வழங்குகிறது.

இல்லை- அவரால் வர முடிந்தாலும் வர அவர் தீர்மானிக்க மாட்டார்.

மனிதன் எதையுமே கற்றுக் கொள்ளவில்லை. இயேசுவுக்குப் பின் அல்- இலாஜ் மன்சூருக்கும் அதையே நீங்கள் செய்தீர்கள். அல்- இலாஜ் மன்சூரிடம் இன்னும் அதிக அசிங்கமான நடத்தையைக் காட்டினீர்கள். இன்றைக்கும் பொதுமக்களின் மனோபாவம் அப்படியே இருக்கிறது. எதுவுமே மாறி இருக்கவில்லை. மனிதன் தேங்கிவிட்டதாக, பிடிவாதம் பிடிப்பதாகத் தெரிகிறது. உணர்வற்ற வாழ்க்கை வாழ்ந்துகொண்டு அதையே திரும்பத்திரும்ப நடத்தி வருவதாகத் தோன்றுகிறது.

ஆனால் சுஜாதா, நீ ஏன் காத்திருக்க வேண்டும்? -விழிப்புணர்வு பெற்ற ஞானிகளை எப்போதும் நீ கண்டுகொள்ள முடியும். எப்போதும் அவர்கள் கிடைக்கிறார்கள். புத்தர் ஆன யாராவது ஒருவர் அதிர்ஷ்டவசமாக எப்போதும் இருந்து வருகிறார். உண்மையான தேடுவோர்கள், கண்டிப்பாக அவரைக் கண்டடைவார்கள். ஏனென்றால் அவரும் உண்மையான சாதகர்களை எப்போதும் தேடியபடி இருக்கிறார். இது ஒருவழித் தேடல் அல்ல.

என்னைத் தேடி நீங்கள் இங்கு வந்திருந்தாலும் நானும் எனக்கே உரிய வழியில் உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இது ஒருவழி அல்ல. நீங்கள் இங்கு இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் இங்கு இருக்கும்படி உங்களை நான் அழைத்ததாலேயே இங்கு இருக்கிறீர்கள். உங்களை இங்கிருக்கும்படி நான் வரவேற்றதாலேயே இங்கு இருக்கிறீர்கள்.

எனவே இயேசு வருவாரா மாட்டாரா என்பதைப்பற்றிச் சிந்தித்து உங்கள் காலத்தை வீணாக்காதீர்கள். ஏன் இயேசுவையே விரும்புகிறீர்கள்? இயேசு உங்களுக்கு தரமுடியும் அனைத்தையும் உங்களுக்குத் தர தயாராக நான் இருக்கிறேன். ஏற்புத்தன்மையுடன், சரணாகதித் தன்மையுடன் இருங்கள். ஏனென்றால் அவரும் இதே நிபந்தனைகளைத்தான் நிறைவேற்றும்படி கேட்டார். நீங்கள் இப்போது இருக்கிற நிலைமையிலேயே உங்களை ஈடேற்ற எவராலும் முடியாது. சில நிபந்தனைகளை நீங்கள் நிறைவேற்ற வேண்டியிருக்கும். உங்கள் அகங்காரத்தை நீங்கள் விட வேண்டி யிருக்கும். அதுதான் அடிப்படைத் தேவை. அதை நிறைவேற்றுங்கள்.

நானே உங்களின் இயேசுவாக இருக்கிறேன். உடல் வேறுதான். மனம் வேறுதான். ஆனால் உணர்வோ ஒருபோதும் வேறல்ல. விழிப்புப் பெற்ற இரண்டு பேர் ஒரே மாதிரியாக இருக்கிறார்கள். ஒரே பரிமாணத்தை, ஒரே நறுமணத்தை, ஒரே ஒத்திசைவை, ஒரே பரவசத்தை, ஒரே தெய்வீகத்தைச் சேர்ந்தவர்களாக அவர்கள் இருக்கிறார்கள்.

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**புது கம்யூனில் விளையாட்டுப் போட்டிகளுக்கு இடம் அளிக்கப்படுகிறதா?**

**ஆனந்த மூர்த்தி.**

புதுக் கம்யூனில் அனாமதேய உடற்பயிற்சி விளையாட்டுகள் எனப்படும் புது அமைப்பு இருக்கும். கோல்ஃபோ, பேஸ்பாலோ அல்லது உடல் செயல்பாடு தொடர்பான வேறெதையாவதோ விளையாடும் உந்தல் உங்களுக்கு உண்டாகும்போது, அந்த உந்தல் கடந்துபோகும் வரை உங்களுடன் குடிப்பதற்கு ஒருவர் அனுப்பி வைக்கப்படுவார்.

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் மதத்தால் யூதன், நாட்டால் இத்தாலியன், தொழிலால் உளவியலாளன். எனக்கு ஏதாவது வாய்ப்பு இருக்கிறதா?**

**ஆனந்த சிரவணன்.**

உண்மையாகவே நீ கொடுத்து வைத்தவன்! உனக்கு எல்லா வாய்ப்பும் உண்டு. உண்மையில் உன்னால் தவறவிடவே முடியாது. நீ தவறவிட விரும்பினாலும் உன்னால் முடியாது. ஏனென்றால் பரிதாபத்துக்குரிய இத்தாலியனை யூதன் கொன்று விடுவான். பரிதாபத்துக்குரிய யூதனை உளவியலாளன் கொன்றுவிடுவான். உளவியலாளனுக்கு வேறு யாரும் மிஞ்சாத போது, பெரும்பாலும் எப்போதும் அவர்கள் தற்கொலை செய்துகொள்கிறார்கள்!

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**என் இன்பத்தைத் தூண்டிவிடும் பொத்தானை நீங்கள் அமுக்கிக் கொண்டிருக்கிறீர்களா? பேருரையில் உட்காரும் போது நான் சிரித்துக்கொண்டே இருக்கிறேன். பின் என் முகத்திலிருந்து அதை வழித்தெடுக்க பலமணி நேரம் ஆகிறது.**

**பர்மிதா,**

முட்டாளே! ஏன் அதை வழித்தெறிய முயல்கிறாய்? அதை உருவாக்க நான் எவ்வளவோ சிரமம் எடுத்தால், நீ மணிக்கணக்கில் உட்கார்ந்து அதைத் துடைத்துக்கொண்டு இருக்கிறாய்! இனி ஒருபோதும் இப்படிச் செய்யாதே அப்போதுதான் அது நிரந்தரமான ஒன்றாக, உனக்கு அத்தியாவசியமான ஒன்றாக, இயல்பான ஒன்றாக, உன்னைச் சூழ்ந்திருக்கும் ஒன்றாக ஆகிறது.

ஆனால் மக்கள் சிரிப்பதற்கு பயப்படுகிறார்கள் என்பதை நான் அறிவேன். ஏனென்றால் எந்தக் காரணமும் இல்லாமல் நீ சிரித்துக் கொண்டிருக்கும்போது நீ கையும் மெய்யுமாக பிடிக்கப்பட்டு விட்டால் உங்களுக்கு கிறுக்கு என்று அவர்கள் நினைக்கிறார்கள். எனவே மக்கள் தம் புன்னகையை அடக்குகிறார்கள். எனவேதான் பர்மிதா அதைத் துடைத்துவிட முயன்றிருக்க வேண்டும்.

ஆனால் நான் பொத்தானை அமுக்கினால் அமுக்கினதுதான். இனி மேல் அதை இன்னும் நன்றாக அழுத்தப்போகிறேன்! மணிக்கணக்கில் அல்ல நாள் கணக்கில் நீ முயன்றாலும் அதை உன்னால் வழித்தெறிய முடியாது! அனுபவி! நீ கிறுக்கு என மற்றவர்கள் நினைத்தால் என்ன? அதைப்பற்றி ஏன் கவலைப்படுகிறாய்? கிறுக்காயிருப்பதில் தவறு ஒன்றுமில்லை குறைந்தபட்சம் இங்கு, எல்லாமே கிறுக்காகத்தான் இருக்கிறது!

அன்றுதான் யாரோ கேட்டார்கள், "பகவன், ஆசிரமத்தில் நிறைய கடிகாரங்கள் உள்ளன. அவை எல்லாம் ஏன் வெவ்வேறு நேரங்களைக் காட்டுகின்றன?" கிறுக்குதான்! அவை எல்லாம் ஒரே நேரத்தைக் காட்டினால் அத்தனை கடிகாரங்களுக்குத் தேவை என்ன? பிறகு ஒன்றே போதுமே!

பர்மிதா, உனக்கொரு சிரிப்பு:

புதிதாக வேலையில் சேர்ந்த இளம் தாதிக்குத் தரப்பட்ட முதல் வேலை, அறை எண் 305இல் இருந்த ஆளைக் குளிப்பாட்டுவதாகும். அவள் தன் கடமையைச் செவ்வனே முடித்துவிட்டு சுருக்காக தனது இருப்பிடத்துக்கு திரும்பினாள்.

"எப்படி அவன்?" என்று கேட்டாள் வயதான, அனுபவம் பெற்ற அவளது மேற்பார்வையாளர்.

"நன்றாக இருக்கிறான்" என்றவள், "ஆனால் ஒரு விசேஷம்.... அவனது மணியில் 'சின்ன' என்று பச்சை குத்தியிருக்கிறான்."

மூத்த தாதி மிகவும் ஆர்வத்துடன் அதைச் சோதித்தறிய விரும்பினாள். 45 நிமிடம் கழித்து, முடி கலைந்து உடை கலைந்து திரும்பி வந்தாள். இளம் தாதியிடம் சொன்னாள், "தேனே, அந்த பச்சைக்குறி "சின்ன" என்பது மட்டுமல்ல. அதில் "சின்னப் பாறை, அரக்கன்சாஸ், தென்னாட்டின் சிறப்பிடம்" என்றுள்ளது!"

○○○

# 6

**முதல் கேள்வி:**

**நீங்கள் சொல்வதுபோல நான் என்பது இல்லாத போதே ஞானநிலை பேறு வாய்க்கிறது என்றால் இப்போது நான் ஏன் விழிப்பு பெற விரும்புகிறேன்? இது மிகவும் முரண்பாடாகத் தெரிகிறதே.**

**தேவ சத்யார்த்தி.**

**அ**கங்காரம் உனது உண்மையானதான் அல்ல.

அகங்காரம் ஒரு போலி உருப்படி, எதேச்சையானது. அகங்காரமே உனது தூக்கமாயிருக்கிறது. ஒரு மேகம்போல் உன்னைச் சூழ்ந்து போர்த்தியிருக்கும் இருளாயிருக்கிறது. இந்த இருட்டுக்குள் மறைந்து இருப்பதே உன் உண்மையான ஜீவன், உன் நிசமான இருப்பு. அது விழித்தெழ விரும்புகிறது, இந்த புகையில் இருந்தெல்லாம், இந்த இருட்டில் இருந்தெல்லாம் விடுபட விரும்புகிறது. அகங்காரமாகிய இந்தச் சிறையில் இருந்து வெளியேற விரும்புகிறது.

உண்மையில் இதில் எந்த முரண்பாடும் இல்லை. அப்படித் தோன்றுகிறது. முரண்பாடாக அது தோன்றுகிறது. உன் கேள்வி சரியானது போல் தெரிகிறது... ஆனால் உனக்கு இரண்டு அகங்கள் உள்ளன. ஒன்று நிசமானது. அதனோடேயே நீ பிறந்தாய். நீ பிறப்பதற்கு முன்பே அது இருக்கிறது. மரணம் நேரிட்டபின்பும் அது இருக்கும். இது மறைவான அடிநீரோட்டம் போல் தொடர்ந்து இருப்பது. மற்றது உன்னால், உன் குடும்பத்தால், உன் கோயிலால், உன் சமுதாயத்தால், உன் அரசால், கும்பலால் உருவாக்கப்படுகிறது.

இந்தப் போலி அகம் ஒரு வேடதாரி. மெய்யான அகமாக அது ஒடிக்கிறது. தன்னைச் சூழ்ந்திருக்கும் இந்தப் பொய் அகத்திலிருந்து வெளியேற மெய்யான அகம் விரும்புகிறது. மெய்யான தானுக்கு இது ஓயாத துன்பமாய் இருக்கிறது. ஏனென்றால் உண்மையல்லாததால் உண்மை நெரிக்கப்படுகிறது. இருண்ட கூட்டுக்குள் சிறைப்படுத்தப் பட்டுள்ளதாக மெய்யான தான் உணர்கிறது மெய்யான தான் பரந்தளாவியது; இப்போது மிகக்குறுகிய இடத்தில் அது கட்டுண்டிருக்கிறது. அது முடக்கப்பட்டு செயலிழந்து கிடக்கிறது.

எனவே 'நீ இல்லாத போதே' நிலைபேறு வாய்க்கிறது என்று நான் சொல்கிற போது, 'உன் பொய்யான தான் போயானதும்' என்றே நான் பொருள் கொள்கிறேன். இப்போதைக்கு நீ அறிந்திருக்கிற ஒரே 'நான்' அந்த போலிதான்- அதைத்தான் 'நான்' என உன்னை நீ அடையாளப்படுத்திக் கொள்கிறாய். எனவேதான், உன்னைப்பற்றி நீ அறிந்திருக்கிறது எதுவானாலும் அது, விழிப்புணர்வு நேர்ந்ததின்பின் அங்கு இராது என நான் சொல்கிறேன். நீ இருப்பாய் ஆனால், அந்த "நீ" புத்தம் புதிதாக, இப்போதைக்கு நீ அனுபவித்துக் கொண்டிருக்கும் இந்த "நீ"யுடன் முற்றிலும் தொடர்பற்றதாயிருக்கும்; அதைப்பற்றிக் குறிப்பிடாதிருப்பதே நல்லது.

எனவேதான் புத்தர் அதைக்குறித்து மௌனம் சாதித்தார். அது மட்டுமல்ல... நீ வற்புறுத்தினால் உன் மெய்யான தானை அனாத்தா (அனாத்மா) தானற்று என அழைக்கிறார். இதற்கான ஒரே எளிய காரணம், அதையும் 'தான்' என்றால் குழப்புவதாகலாம். பொய்நானையே தான் என நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்; மெய் நானையும் தான் என்றே அவர் அழைத்தால் நீங்கள் குழம்பிப் போகலாம். ஏற்கெனவே நீங்கள் அளவுக்குமீறி குழம்பியிருக்கிறீர்கள்! எனவே புத்தர் அதை தானற்றது என அழைக்கிறார்.

ஆனால் மனம் தளராதீர்கள். கவலைப்படாதீர்கள். முழுசாக செத்துப்போவோம் என பயப்படாதீர்கள். நீங்கள் இப்போது இருக்கிற விதத்தில் அப்போது இருக்கமாட்டீர்கள்; ஆனால் எப்படி நீங்கள் இருக்கவேண்டுமோ அப்படி இருப்பீர்கள். உங்கள் இயற்கையான, சுயேச்சையான ஜீவன் அங்கு இருக்கும்.

அதை 'தான்- அல்ல' என புத்தர் அழைத்ததும் சரியே. ஏனென்றால் மெய்யான தான் இருக்கும்போது "நான்" என்னும் எண்ணமே கருத்தே உங்களுக்கு இருக்காது. "நான் என்பது ஒரு எண்ணம். நிசமானதானுக்கு "நான்" என்னும் கருத்து இருக்காது,

மெய்யான தான் பிரபஞ்ச தானுடன் (ஜீவனுடன், ஆன்மாவுடன்) ஒன்றி இருக்கிறது. இருத்தலில் இருந்து தனித்ததல்ல அது; ஒரு தீவல்ல அது. மெய்யற்ற தான் தனியானது; மெய்யற்ற தான் பிரிவினையை விதைக்கிறது; அதன்மூலம் அது துன்பத்தை உருவாக்குகிறது முழுமையில் இருந்து தனிமைப்படுவதே துன்பம் முழுமையுடன் ஒன்றுவதே இன்பம், பேரின்பம்.

இதிலிருக்கும் முரண்பாடு பார்வைக்குத் தெரிகிற முரண்பாடே உள்ளபடி யதார்த்தத்தில் இதில் எந்த முரண்பாடும் இல்லை.

லிட்டில் வேக்பீல்டு புனித மேரி ஆலயத்தில் ஒரு ஞாயிறு காலை அன்றைய பிரசங்கத் தலைப்பு அறிவிப்புப் பலகையில் கொடுக்கப் பட்டிருந்தது: "எங்கள் அத்துமீறல்களுக்காக எங்களை மன்னியும்" என்பதே தலைப்பு.

சில அடிதூரம் தள்ளி இன்னொரு பலகை புல்தரைமேல் நாட்டி வைத்திருந்தது. அதில் எழுதி இருந்தது. "அத்துமீறிப் பிரவேசிப் பவர்கள் தண்டிக்கப்படுவார்கள்."

இதே போலத்தான்: உண்மையில் எந்த முரண்பாடும் இல்லை. ஆனால் இருப்பதாகத் தோன்றுகிறது. ஒருபுறம் ஒரு அறிவிப்பு "மீறல்களை மன்னியும்" என்கிறது. மறுபுறம் இன்னொரு அறிவிப்பு "மீறினால் தண்டனை" என்கிறது. ஆனால் இரண்டும் ஒரே விசயத்தைப்பற்றி அவ்வாறு தெரிவிக்கவில்லை. அவற்றின் அர்த்தம் முற்றிலும் வெவ்வேறானது.

நீங்கள் இருக்கமாட்டீர்கள் என்று நான் சொல்லும்போது உங்கள் செயற்கையான தானைப்பற்றி பேசுகிறேன்- அது நீங்கள் அல்ல. ஆனால் அதுவே நீங்கள் என நம்பி வந்துவிட்டீர்கள். உங்கள் நிசமான தான் அங்கேயே இருக்கிறது. அது தான் நீங்கள். ஆனால் அதை முற்றிலுமாக நீங்கள் மறந்துவிட்டிருக்கிறீர்கள்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**யோக்காவின் பின்வரும் வார்த்தைகளுக்குப் பொருள் கூறுங்கள்: சாசென்மூலம் அறுதி உண்மையை நாம் நேரடியாக அடைய முடியும்.**

**பண்டிதர்கள் 'புலவர்'கள் மற்றவர்களுக்கு போதிக்க விரும்புகிறார்கள். ஆனால் அவர்களுக்கே அதில் ஆழமான நம்பிக்கை' ஈடுபாடு கிடையாது.**

**ஒரு தடவை உங்கள் முன்னூகங்களை தப்பெண்ணங்களை நீங்கள் வெளிப்படுத்திவிட்டால், உங்கள் மெய்யான தானை உங்களால் பார்க்க முடியும்.**

**வெளிப் போராட்டங்களிலேயே நீங்கள் அலைந்து திரிவது [அதன்பிறகு] எப்படி முடியும்?**

**அனுராக்.**

**யோ**க்காவின் வார்த்தைகள் எப்போதும் மகத்தான அழகுள்ளவையாக இருக்கின்றன. மாபெரும் ஸென் ஆசான்களில் அவர் ஒருவர். ஸென் மறைஞானிகள் பலர் இருந்திருக்கிறார்கள். ஆனால் ஆசானுக்கும் மறைஞானிக்கும் வேறுபாடு இருக்கிறது.

மறைஞானி என்பவர் உண்மையை அறிந்திருக்கிறவர்; ஆனால் அதை மற்றவர்களுக்கு தெரியப்படுத்த முற்றிலும் இயலாதிருக்கிறவர். அதற்கான வாய்ப்புகள் அவரிடமில்லை. அதற்கான முறைமைகளை வகுக்க அவரால் முடியாது. அதற்கான திறமைகள் அவரிடம் இல்லை. அவரால் வரைய முடியாது. அவரால் பாட முடியாது. அவரால் ஆட முடியாது, அவரால் வெளிப்படுத்த முடியாது. அவர் முழு ஊமையாகி இருக்கிறார். (பேரின்ப) அனுபவமானது அவரை போதையில்- முழுமையான போதையில் ஆழ்த்திவிடுகிறது. ஏதோ ஒன்று- மகத்தான முக்கியத்துவமுடைய ஏதோ ஒன்று- அவருக்கு நிகழ்ந்திருக்கிறது என்பதை உங்களால் பார்க்க முடிகிறது. அவரைச் சுற்றி ஒருவித உயிர்த்துடிப்பை உங்களால் உணரமுடிகிறது. என்ன நிகழ்ந்திருக்கிறது என்பதை உங்களால் புரிந்துகொள்ள முயற்சிக்க முடிகிறது. ஆனால் தொடர்புகொள்ள, உறவுகொள்ள அவர் தரப்பிலிருந்து எந்த முயற்சியும் இல்லை. தான் கண்டதால் மிகவும் திக்குமுக்காடி போயிருக்கிறார் அவர். மிகவும் பிரமித்துப் போயிருக்கிறார்- அதனால் மொழியையே மறந்து போய் விட்டார். அ-மனத்தில் பிரவேசித்துவிட்டார். பழைய மனத்துடன் தொடர்புகொள்ளும் வழியை மறந்துவிட்டிருக்கிறார். முன்பு அவர் வழக்கமாக மனத்தில் வாழ்ந்தார். பின் அ-மனத்தை நோக்கிய வழியைக் கண்டுபிடிக்க தீவிரமாக முயன்றார். இப்போது அவர் அ-மனத்தில் இருக்கிறார். ஆனால் மனத்துக்குப் போகும் வழியை மறந்துவிட்டார். மனத்தை அவரால் பயன்படுத்த முடியாது- தன் மனத்தை அவர் இழந்துவிட்டார். ஏறக்குறைய எல்லா நடைமுறைக் காரியங்களிலும் அவர் பித்தரே. முழுமையான ஆனந்தம். பொங்கிவழியும் பரவசம். அழகு, அருள் எல்லாமாக இருக்கிறார்.

இது காணத்தக்க ஒன்று, கடந்த தன்மையைச் சேர்ந்தது- ஆனால் நடைமுறைப் பயன் அற்றது.

ஆசான் (குரு) என்பவர் அறுதிநிலையை அடைந்திருக்கிறவர். ஆனால உலகத்துக்கு நீங்கள் இருக்கிற நிலைக்கு திரும்ப இறங்கிவர முடியக்கூடியவர். உணர்வின் கொடுமுடியை அடைந்துவிட்டாலும், இருண்ட பள்ளத்தாக்கிற்கு திரும்பி வர முடியக்கூடியவரே ஆசான். இப்பள்ளத்தாக்கில்தான் கோடிக்கணக்கான மக்கள் இன்னமும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். தெரியப்படுத்த முடியாததைப்பற்றி ஏதாகிலும் அவர்களுக்குத் தெரியப்படுத்தவும், உயர்சிகரத்தை நோக்கிய சில அடையாளக் குறிப்புகளை அவர்களுக்கு வழங்கவும் அவரால் முடிகிறது. அவர் விரல்கள் சுட்டும் நிலவை நோக்கி லட்சத்தில் ஒருவர் பார்க்க முடிந்தாலும் அதுவே பெரிதுதான்.

ஆசான் என்பவர் ஒன்று அதிகமானவர். மறைஞானிக்குத் தெரிகிறது. ஆனால் அவரால் உங்களுக்கு உதவ முடிவதில்லை. ஆசானுக்குத் தெரியவும் செய்கிறது. நீங்களும் அறிய உதவவும் முடிகிறது.

யோக்கா ஒரு ஆசான். பெருந்திறமையான ஆசான். எனவே அவருடைய வார்த்தைகள் தியானிக்கத்தக்கன. ஒவ்வொரு வார்த்தையும் முக்கியத்துவம் உடையது. அவர் கூறுகிறார்.

> **சாசென்மூலம் அறுதி உண்மையை நேரடியாக நாம் அடைய முடியும்.**

முதலாவதாக: சாசென்... சாசென் என்றால் சும்மா உட்கார்ந்திருப்பது, எதையும் செய்யாதிருப்பது. ஸென்னில் மிகவும் பிரத்தியேக நிகழ்வாகும் அது. வேறெதிலும் அது நிகழ்ந்ததில்லை. சும்மா இருக்கும் இந்த சாதனத்தை வேறெந்த மதமும் உருவாக்க முடியவில்லை. ஒவ்வொரு மதமும் உங்களை ஏதாவது ஒன்றை செய்யவே சொல்லுகிறது. மந்திரம் ஓது, செபம் சொல், புனித நூல்களில் இருந்து எடுத்த குறிப்பிட்ட சொற்களை திரும்பத் திரும்ப உச்சரி, சடங்கு செய்- ஆனால் எதையாவது செய்: யோகா போன்ற உடற்பயிற்சி செய். அல்லது உருவகித்தல், மனஒருமைப்படுத்தல், ஆழ்ந்து சிந்தித்தல், போன்ற மனப்பயிற்சிகளைச் செய். ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயமானது. எல்லா மதங்களும் உங்களை ஏதாவது ஒரு செய்கையில் ஈடுபடுத்துவதற்கான சாதனங்களையே வழங்கி இருக்கின்றன.

ஆனால் ஸென்னோ, ஏதாவது ஒன்றை நீங்கள் செய்தபடி இருந்தால் மனம் தொடர்ந்து பிழைத்தபடியே இருக்கும் என்கிறது-

இது ஆழ்ந்த உள்நோக்குக் கொண்டது- அதை உங்களால் கடக்க முடியாது என்கிறது. அதை உங்களால் கட்டுப்படுத்த முடியலாம். ஆனால் கட்டுப்படுத்தல் என்பது கடந்து செல்லுதல் அல்ல. அதை மேலும் நற்குணம் உள்ளதாக்க உங்களால் முடியலாம். ஆனால் நற்குணமுடையோராக இருப்பது என்பது. அறியமுடியாததை அறிந்துகொள்வது ஆகாது. நற்குணம் என்பது ஒரு தெரிவு. ஆயின் நீங்கள் ஒன்றைத் தேடும் போதெல்லாம் அடிமைத் தன்மையையே தேர்ந்து கொள்கிறீர்கள். எல்லாத் தெரிவுகளும் தளைப்படுத்தலுக்கே இட்டுச் செல்கின்றன.

ஒருவர் பாவியாக ஆனால்- அவர் இரும்புச் சங்கிலியை தேர்ந்தெடுத்திருக்கிறார். இன்னொருவர் புனிதராக ஆனால்- அவர் தங்கச் சங்கிலியை, அழகான சங்கிலியை விலை மதிப்புமிக்க சங்கிலியை தேர்ந்தெடுத்திருக்கிறார். ஆனால் சங்கிலி என்றால் சங்கிலிதான். அவை தங்கத்தால் செய்திருந்தாலும் இரும்பால் செய்திருந்தாலும் எந்த வேறுபாடும் இல்லை. உண்மையில் தங்கச் சங்கிலிகள் அதிக ஆபத்தானவை. ஏனென்றால் இரும்புச் சங்கிலிகள் மீது முன்பில்லாவிட்டால் பின்பு உங்களுக்கு வெறுப்பு ஏற்படமுடியும். அவற்றிலிருந்து உங்களை விடுவிக்க விரும்புவீர்கள்- அவை கேவலப்படுத்துவதாக அவமானகரமாக இருப்பதாக உணரவாய்ப்புள்ளது. தங்கச்சங்கிலியையோ நீங்கள் அடிமைச் சங்கிலியாக உணராமல் ஆபரணமாக கருதி விடுகிறீர்கள். அவற்றை நேசிக்க- பூசிக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். அவற்றைச் சார்ந்திருக்க- தொற்றிக்கொள்ள ஆரம்பிக்கிறீர்கள்- அவைதான் மதிப்புமிக்க தாயிற்றே! அவற்றைப் பெற்றிருப்பதில் மகிழ்கிறீர்கள். அவற்றால் பிணிக்கப் பட்டிராத மற்றவர்களை பாவப்பட்டவர்கள் பரிதாபத்துக்குரியவர்கள் என்று பார்க்கிறீர்கள்.

பாவிகளை துரதிருஷ்டசாலிகள் என்றே உங்கள் புனிதர்கள் பார்க்கிறார்கள். அவர்களுக்காக பச்சாத்தாபப்படுகிறார்கள் ஏனென்றால் பாவிகள் நரகத்துக்கு போகவே விதிக்கப்பட்டவர்கள். தாமோ சொர்க்கத்துக்கு போய்க் கொண்டிருக்கிறோம் என அவர்கள் எண்ணுகிறார்கள். இருவருமே நரகத்தில்தான் இருக்கிறார்கள்!

உண்மையை உங்களிடம் சொல்லிவிடுகிறேன். நரகம் இரண்டு பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளது! ஒரு பிரிவில் புனிதர்கள் இருக்கிறார்கள். அடுத்த பிரிவில் பாவிகள் இருக்கிறார்கள். பாவிகள் கொஞ்சம் அதிக வசதிக்குறைவுடன் வாழ்கிறார்கள்- மூன்றாம் வகுப்புச் சிறை என அதை நீங்கள் அழைக்க முடியும். இந்தியாவில்

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் வகுப்புப் பிரிவினைகள் வழக்கில் இருந்தன. குற்றவாளிகளுக்கு மூன்றாம் வகுப்பு. மகாத்மாகாந்தி, பண்டித ஜவகர்லால் நேரு போன்ற அரசியல்வாதிகளுக்கு முதல் வகுப்பு. அவ்வாறே நரகத்தில் இரண்டு பிரிவுகள் உள்ளன: ஒன்று பாவிகளுக்கு, இன்னொன்று புண்ணியர்களுக்கு.

புண்ணியர்களுக்கு சில வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன. புனிதராக வாழ்ந்ததில் ஏற்கெனவே அவர்கள் நிறைய கஷ்டம் அனுபவித்து விட்டார்கள். எனவே அவற்றுக்கு இவ்வாறு ஈடுகட்டப்படுகிறது. பாவிகள் அதிகமாக இன்பம் அனுபவித்து விட்டார்கள். எனவே அவற்றுக்குப் பரிகாரமாக கொஞ்சம் அதிக துன்பம். ஆனால் மற்றபடி பெரிய வேறுபாடில்லை. தேர்ந் தெடுத்தாலேயே நீங்கள் அடிமைத் தளையில்தான் இருக்கிறீர்கள்.

ஸென் உங்களுக்கு தெரிவற்ற விழிப்பணுர்வைப் போதிக்கிறது. இதுவுமல்ல அதுவுமல்ல (நேதி நேதி) என்கிறது. முற்றான மறுப்பை அது போதிக்கிறது. அதுதான் சாசென்னின் உட்பொருள். ஒன்றும் செய்யாதிருப்பது. சினிமாப்பாட்டையும் பாடக்கூடாது பிரார்த்தனையும் செய்யக் கூடாது. அமைதியாக இருக்கவேண்டும். எதையும் செய்யாதிருக்க வேண்டும்.

எதையாவது நீங்கள் செய்யும்போது மனம் வலுப்பெறுகிறது. ஏனெனில் மனமே கர்த்தா. நீங்கள் செயல்படும் கணமே அகங்காரம் திரும்பிவிடுகிறது. ஏனெனில் அகங்காரம் ஒரு செயலர். செயல்படாத நிலையில் நீங்கள் இருக்கையில் மனம் மறைய வேண்டியிருக்கிறது.

செயலின்மையே மனத்தின் மரணம். அகங்காரத்தின் மரணம் அதுவே. சாசென்னின் அர்த்தம். யோக்கா கூறுகிறார்:

> **சாசென்மூலம் அறுதி உண்மையை நேரடியாக நாம் அடைய முடியும்.**

காத்திருக்கத் தேவையில்லை. படிப்படியாக வளரத் தேவையில்லை. நேரடியாகவே உண்மையை அறிய முடியும். வேறெதுவும் தேவையில்லை அறுதி உண்மையை உடனடியாக நாம் அறிய முடியும். மனதில் இருந்து அ-மனத்துக்கு ஒரே தாண்டில் தாண்டிவிட முடியும்.

சும்மா அமைதியாக உட்கார்ந்திருக்கும்- எதையும் செய்யாதிருக்கும் கலையைக் கற்றுக்கொள்ளுங்கள்... வசந்தம் வருகிறது. புல்தானே வளர்கிறது.

ஸென் என்பது, உடனடி விழிப்பு முறை ஆகும். படிப்படியான விழிப்பு முறை அல்ல. படிப்படியான விழிப்பு என்னும் பேச்சுக்கே இடமில்லை. அளவுரீதி பற்றிய பிரச்சனையே இதில் இல்லை. ஒன்று அதை நீ பெற்றிருக்கிறாய்; அல்லது பெற்றிருக்கவில்லை. ஸென் கூறுகிறது. குதித்துவிடு, துணிந்துவிடு, அதை முழுமையாகவே அடைந்துகொள். இக்கணமே அது சாத்தியமாயிருக்கிறது. இப்போது, மட்டுமே அது சாத்தியம். இப்போதே இருக்கிறது. அல்லது எப்போதுமில்லை!

**பண்டிதர்கள் மற்றவர்களுக்கு போதிக்க விரும்புகிறார்கள். ஆனால் அவர்களுக்கே அதில் ஆழமான நம்பிக்கை– ஈடுபாடு இருப்பதில்லை.**

பண்டிதர்களைத் தவிருங்கள். அவர்களுக்கு தங்களைப்பற்றியே தெரியாது. ஏனெனில் இருந்தே அவர்கள் கற்றிருக்கிறார்கள். சொந்த அனுபவம் அவர்களுக்கு இல்லை. நேரடியாக அவர்கள் கண்ட தில்லை. அவர்களே இன்னும் அடையவில்லை. அவர்கள் கூறுவது அவர்களின் அனுபவத்தை அல்ல. பண்டிதர்களைத் தவிருங்கள்.

**ஒருதடவை உங்கள் தப்பபிப்பிராயங்களை நீங்கள் வெளிப் படுத்திவிட்டால் உங்கள் மெய்யான தானை உங்களால் பார்க்க முடியும்.**

தேவையானது எல்லாம் உங்கள் தப்பெண்ணங்களைக் கைவிடுவதே. உங்கள் மனம் என்பது உங்கள் அபிப்பிராயங்களால் ஆனதுதான். நான் இந்தியன். ஜப்பானியன், இத்தாலியன், ஜெர்மானியன், நான் இந்து, யூதன், முகமதியன் என்னும் முற்கருத்துகளால் ஆனதுதான்.

எனவேதான் இத்தாலியர்களையும் ஜெர்மானியர்களையும் பிரிட்டிஷாரையும் இந்தியர்களையும் நான் தாக்கிக்கொண்டே போகிறேன். இப்போது ஸ்பானிஷ் சந்நியாசிகளிடமிருந்து ஏராளமான வேண்டுகோள்கள் எனக்கு வந்துகொண்டிருக்கின்றன. அவர்கள் எனக்கு "பகவன், எங்களை ஏன் விட்டுவிட்டீர்கள்?" எனக் கடிதங்கள் எழுதுகிறார்கள். "ஆஸ்திரேலியாவை சுத்தமாக மறந்தே விட்டீர்களா?" என ஆஸ்திரேலிய சந்நியாசிகள் எழுதுகிறார்கள்- பொறுங்கள்! வரிசையாக எல்லாரையும் நான் தாக்கப் போகிறேன்! யாரையும் நான் விட்டு வைக்கப் போவதில்லை.

உங்கள் தவறான முற்கருத்துகள் யாவும் அழிக்கப்படவேண்டும். தகர்க்கப்பட வேண்டும். அதன் பிறகு மட்டுமே நீங்கள் உங்களின் யதார்த்தநிலையை அடைவீர்கள்.

*யோக்கா கூறுகிறார்:*

**வெளிப் போராட்டங்களிலேயே நீங்கள் அலைந்து திரிவது [அதன்பின்] எப்படி முடியும்?**

உங்கள் தப்பெண்ணங்கள் அனைத்தையும்- அதாவது உங்கள் மனதை- நீங்கள் கைவிட்ட உடன்- உங்களது வெளிப்போக்கு அனைத்தும் மறைகிறது. உங்கள் பேராசைகள் அனைத்தும் மறைகின்றன. பின் சாதிக்க ஒன்றுமில்லை. (ஏனெனில்) பொக்கிஷங்களுக்கெல்லாம் மீறிய பொக்கிஷத்தை, கடவுளின் ராஜ்ஜியத்தையே அப்போது நீங்கள் கண்டடைந்து இருக்கிறீர்கள்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஏறக்குறைய எல்லாவற்றையும் என்னால் லேசாக எடுத்துக் கொள்ள முடிகிறது– ஆனால் என் கணவர் பிரவசியை மட்டும் அப்படி எடுத்துக்கொள்ள முடியவில்லை. அது ஏன்? ஏன் நான் அவருடன் இப்படி சண்டை பிடிக்கிறேன்? ஏன் அவரை திருத்துவதற்கே எப்போதும் நான் முயற்சி செய்கிறேன்?**

**தேவ நிர்தோஷ்.**

இது மிகவும் பழைய கதை. இது உனக்கும் பிரவசிக்கும் மட்டுமே குறிப்பாக நடக்கிற கதை அல்ல. திருமணம் என்னும் நிறுவனமே ஒரு அசிங்கமான ஏற்பாடுதான்- உண்மையில் இதைப்போல அசிங்கம் வேறில்லை. மற்ற எல்லா அசிங்கமான நிறுவனங்களும் ஏற்பாடுகளும் இந்தத் திருமணம் என்னும் நிறுவனம் ஏற்பாட்டின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன.

திருமணம் உலகில் இருந்து மறைந்துவிடும் அன்றே அரக்கன் அழிந்துவிடும். தேசங்கள் ஒழிந்துவிடும் ஏனென்றால் அவை அனைத்தின் அடிப்படை அலகே குடும்பம்தான். மத நிறுவனங்கள் மறைந்துவிடும். மதங்கள் மறைந்துவிடும். இதுவரையான கடந்தகாலம் முழுவதுமே குடும்பத்தைதான் அடித்தளமாகக் கொண்டுள்ளது. குடும்பமோ திருமணம் என்னும் கண்டுபிடிப்பை தன் அடித்தளமாகக் கொண்டுள்ளது.

திருமணம் ஏன் அசிங்கமானது என்றால் இரண்டு தனிநபர்களின் சுதந்திரத்தை அது நாசமாக்குகிறது. சுதந்திரம் என்னைப் பொறுத்தவரை அறுதியான மதிப்புடையது ஆகும். சுதந்திரத்தை

நாசமாக்கும் எதுவும் மனித இயற்கைக்கு, விரோதமானதாகும். உங்கள் சுதந்திரம் அழிக்கப்படும் போது உங்களில் கோபம் மூளுகிறது. உங்களுக்குள் ஆத்திரம் பீறிடுகிறது. உங்கள் ஆத்திரத்தை எல்லாம் யாரிடம் நீங்கள் (எ) காட்ட முடியும்? மனைவி கணவனைப் பிடித்துக் கொள்கிறாள். கணவன் மனைவியைப் பிடித்துக் கொள்கிறான். அவர்களே அருகில் இருக்கிறார்கள். கைக்குச் சிக்குபவர்களாக இருக்கிறார்கள். எளிதாக தப்பிக்க முடியாதபடி சேர்த்துக் கட்டப்பட்டிருக்கிறார்கள். தப்பிப்பதை எல்லா வழியிலும் கடினமாக- ஏறக்குறைய அசாத்தியமாக ஆக்கியிருக்கிறது சமுதாயம்.

திருமணத்துக்கு உள்ளே வழி உண்டு. 'வெளியே' வழி இல்லை. அல்லது சில நாடுகளில் வெளியேறும் வழி சாத்தியமாக இருந்தாலும் உண்மையில் அது மதிக்கப்படுவதில்லை; சபிக்கப்படுகிறது; நுட்பமான முறையில் கண்டனம் செய்யப்படுகிறது. திருமணமோ வாழ்த்தப்படுகிறது. "திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன" எனப் புரோகிதர்கள் சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். "இந்த பந்தம் புனிதமான ஒன்று" என்று அவர்கள் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். திருமணத்தின் புனிதத்தத்துவத்தையே மொத்த அமைப்பும் சார்ந்திருக்கிறது. ஆனால் அது புனிதமானது அல்ல; உண்மையில் மிகவும் அசிங்கியமானது. மனித குலம் முழுவதையுமே அது நாசமாக்கிவிட்டிருக்கிறது.

புரோகிதனை- மதகுருவை- நீங்கள் பழிவாங்க முடிவதில்லை. ஏனெனில் அவன் நேரடியாக அங்கு இல்லை. மிகவும் மறைமுகமான வழியிலேயே அவன் செயல்படுகிறான். அரசியல்வாதியை நீங்கள் பழிவாங்க முடிவதில்லை. அவன் மிகவும்ராஜதந்திரத்தோடு நடந்துகொள்கிறான். கூடவே இருக்கிற ஆளை- கண்ணுக்குப் புலப்படுகிற ஆளை- அதாவது மனைவியை கணவனைத்தான் உங்களால் கண்டுபிடிக்க முடிகிறது. எனவே அவர்மீதே உங்கள் முழுக் கோபமும் பொழியத் தொடங்குகிறது.

கணவன்-மனைவிகள் ஒருவருக்கொருவர் பகைவர்கள்போல் ஓயாமல் தமக்கிடையில் தகராறு, சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நட்பாக இருக்கும் தம்பதிகளைக் காண்பது மிகவும் அபூர்வமாயிருக்கிறது. மற்றவர்களுடன் இருக்கும்போது அவர்கள் நட்பைக் காட்டுகிறார்கள். விருந்தாளிகள் வந்தால் உடனடியாக புன்னகை புரிகிறார்கள். தம் குழந்தைகளின் முன்னிலையில் முகமூடிகளை அணிந்துகொள்கிறார்கள். மோதல்களைத் தவிர்க்கிறார்கள். தெருக்களில் அவர்கள் சண்டைபோடுவதில்லை;

ஆனால் ஒரு நாளைக்கு 24 மணிநேரமும் அவர்கள் பூசலிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அவர்களின் சண்டை பலப்பல வடிவங்களை எடுக்கிறது. அது பல பரிமாணம் கொண்டதாக இருக்கிறது. அவர்களின் ஆற்றலை அது விரயம்செய்கிறது. பின் மறுபடியும்அவர்கள் தலைவிதிபோல்- சேர்ந்து வாழவேண்டி இருக்கிறது. ஒப்பேற்றிக்கொண்டு போக வேண்டியிருக்கிறது.

பிரச்சனைகளை மழுங்கடிக்க, பூசிமெழுக ஒரு வழியாக மட்டுமே காமம் இருக்கிறது. முதலில் சண்டை போடுவது; பின் எப்படியும் அந்த ஆளுடன் சேர்ந்து வாழவே வேண்டி இருப்பதால், தற்போதைக்கு சமாதானமாக இருக்க, உங்கள் அன்பையும் மென்மையையும் காட்ட, காமத்தைப் பயன்படுத்துவது என்னும் வழி அது. ஆனால் அந்தச் சமாதானம் நீடிப்பதில்லை. அது கெடுபிடிப் போர்தான்; சமாதானமல்ல. மறுபடியும் யுத்தம் வெடிக்கிறது. காலையானதும் மீண்டும் பழைய கதை தொடர்கிறது.

திருமணம் என்னும் பெயரால் மிகவும் மடத்தனமான ஒரு காரியம் நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது என்பதை நாம் உணராதவரை, நிர்தோஷ். அது தொடரவே போகிறது.

குறைந்த பட்சம் என் சந்யாசிகளாவது விழிப்பாக இருக்க வேண்டும்; உங்கள் கணவர் உங்களுக்கு எந்தத் தப்பும் செய்யவில்லை. உங்கள் மனைவி உங்களுக்கு எந்தத் தப்பும் செய்யவில்லை. எதிலாவது தப்பு என்றால் திருமணக் கட்டுப்பாடுதான்- அந்தக் கட்டுப்பாட்டு உணர்வுதான்- தப்பு. அந்தத் தளையைக் கைவிடுங்கள்; ஒருவர் மற்றவருக்கு அதிக சுதந்திரம் கொடுங்கள். வேறெதையும்விட சுதந்திரத்தை மேலாய் மதியுங்கள். ஏனெனில் சுதந்திரமே உன்னத இலட்சியம்- அன்பைவிட உயர்ந்தது அது. உங்கள் அன்பானது சுதந்திரத்தைக் கொண்டுவந்தால் அது நல்லது.

உங்கள் அன்பானது சுதந்திரத்தைக் கொணராவிட்டால் அது நல்லதல்ல- அது அன்பே அல்ல.

உங்கள் அன்பானது பொறாமையை, உடைமை மனப் பான்மையை கொண்டுவந்தால் ஒருபோதும் அது சுதந்திரத்தைக் கொண்டுவராது. சுதந்திரத்துக்கான அனைத்துச் சாத்தியங்களையும் அது அழிக்கிறது. ஆதியில் இருந்தே இது தொடங்கிவிட்டது...

உன் சாமியார் உனக்குக் கூறியதை மறந்துவிடு. காதல் வாழ்வைப் பற்றி அவருக்கு என்ன தெரியும்? உண்மையில் இப்படித்தான் நடந்தது.

"ஆதாம் கண்ணு. நீ என்னை முழுமையாகவும் உண்மையாகவும் காதலிக்கிறாயா?" ஏதேன் தோட்டத்தில் தான் பறித்த forget-me-not பூக்களால் செய்த பூங்கொத்து ஒன்றை அன்பின் பரிசாக அளித்தபடி ஏவாள் கேட்டாள்.

"நிச்சயமாக!" என்றான் ஆதாம். "வேறு வழி?"

நிர்தோஷ். உன் கதை அப்பவே தொடங்கிவிட்டது!

ஒவ்வொரு நாளும் ஆதாம் தன் பகல்பொழுதின் சாகசங்களை முடித்துத்திரும்பிய பின் இரவில் ஏவாள் அவனுடைய விலா எலும்புகளை எண்ணிப்பார்ப்பாள் எனக் கேள்விப்பட்டிருக்கிறேன்!

அது ஒரு மிகவும் பழமையான கதை. மிக ஆதியிலேயே ஏதோ ஒன்று தப்பாகிவிட்டது.

உனக்குத் தெரியுமோ தெரியாதோ: ஏவாள் முதல் மனுசியே அல்ல. கடவுள் முதலில் ஆதாமையும் லிலித்தையும் உண்டாக்கினார். முதல் இரவன்று- முதல் தேனிலவின்போது- ஒரே ஒரு படுக்கை தான் இருந்ததால் அதற்காக சண்டை தொடங்கியது. அக்காலத்தில் இருவர் படுக்கும் படுக்கைகள் தயாரிக்கப்படவில்லை போலும்! இதுவே கதையின் தொடக்கம்: ஒருவர் படுக்கும் படுக்கைதான் இருந்தது. எனவே யார் படுக்கையில் படுப்பது, யார் தரையில் படுப்பது என்ற சர்ச்சை.

வேறெந்த ஆணையும் போலவே ஆதாமும் ஆணாதிக்க வெறிபிடித்த பன்றியாகவே இருந்தான்! அவன் அதிக தசைப்பற்றுடன், அதிக உடல் பலத்துடன் இருந்ததால் படுக்கையை தன்னுடைமை ஆக்கிக்கொண்டான். ஆனால் லிலித் அதற்கு ஒப்பவில்லை. "நாம் சமமானவர்களே. சமமாகத் தான் நாம் படைக்கப்பட்டிருக்கிறோம்" என்றாள். அவளே பெண் விடுதலை இயக்கத்தின் உண்மையான நிறுவனர்!

அவர்கள் நீண்டநேரம் போராடினார்கள். ஒருவர்மீது ஒருவர் துணிமணிகளை வீசி எறிந்தார்களா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் துணிகள் இருந்திருந்தால் அவை வீசியெறியப்பட்டிருக்கவே வேண்டும்! நடு ராத்திரியில் அவர்கள் கடவுளின் வீட்டுக் கதவைத் தட்டினார்கள். லிலித் சொன்னாள், "இப்படியே காலம்தள்ள முடியாது. என்னையும் சமமாக அங்கீகரிக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்த மனிதனை நான் தலைமுழுகுகிறேன்."

ஆக, அந்தத் திருமணம் நிறைவு பெறவில்லை.

கடவுளும் ஒரு ஆண் ஆனதால் அவர் ஆதாமையே ஆதரித்தார். எனவே அவர் லிலித்தை இல்லாமல் செய்துவிட்டு ஏவாளை உண்டாக்கினார். ஆதாமின் உடம்பிலிருந்து ஒரு விலா எலும்பை எடுத்து அவளை உண்டாக்கினார். எப்போதும் ஏவாள் இரண்டாம்பட்சமாகவே இருப்பதை, ஆதாமின் உடலின் பகுதியாகவே இருப்பதை உறுதி செய்யவே இந்த ஏற்பாடு. மேலும் அதைவிட அவள் சமத்துவத்தைக் கோர முடியாதபடி செய்யவும் இப்படிச் செய்தார். அவள் தரையிலேயே படுத்துறங்க வேண்டும்!

இது என்ன மடத்தனம் பார்த்தீர்களா? தேவையானதெல்லாம் ஒரு இரட்டைப்படுக்கை தான்! நம்முடைய அசீஷை விட்டால் செய்து தந்திருப்பான்- அவ்வளவு எளிய விஷயம்! ஆனால் கடவுள் அவ்வளவு கஞ்சனாயிருந்தார்!

நிர்தோஷ், ஒரு பழைய கதையை, ஒரு பழைய பாணியைத்தான் நீ திரும்பத்திரும்பச் செய்துகொண்டிருக்கிறாய். அந்தப் பழைய பாணியில் இருந்து வெளியே வா! சந்நியாசியாக வேறு இருப்பதால் அதுதான் நீ செய்ய வேண்டிய முதல் விசயம்.

உன் கணவன் பிரைவசியை ஒரு பொருட்டாக எடுக்கத் தேவையில்லை. ஏன் பாவம் அவனைத் தொந்தரவு செய்கிறாய்? அவன் உனக்கு என்ன செய்துவிட்டான்? மற்ற எல்லாவற்றையும் லேசாக எடுத்துக் கொள்ள முடியும்போது பின் உன் கணவனையும் ஏன் லேசாக எடுத்துக் கொள்ளக்கூடாது?

ஆனால் இதில் தப்பு உன்பேரில் மட்டுமில்லை. தன்னை ஒரு பொருட்டாகக் கருதவேண்டும் என்பதில் பிரைவசியும் கண்டிப்பாக இருந்திருக்கவேண்டும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஒவ்வொரு கணவனும் இதைத்தான் செய்து கொண்டிருக்கிறான். அவனை நீ ஒரு பொருட்டாக கருதவேண்டும்- ஏனெனில் அவன் சாதாரண ஆள் கிடையாது, உன் புருஷன்!

இந்தியாவில் "கணவனே கண்கண்ட தெய்வம்" என்று புருசன்மார்கள் பெண்டாட்டிமார்களுக்கு போதித்து வந்திருக் கிறார்கள். கணவர்களே மனைவிகளுக்கு உபதேசிக்கிறார்கள்! தம்மை கடவுளராக ஏற்கும்படி அப்பாவிப் பெண்களை அவர்கள் வலுக்கட்டாயப்படுத்தி இருக்கிறார்கள். ஆனால் பெண்கள் பழியெடுக்கிறார்கள்- பழி எடுக்கவே செய்வார்கள். அதை அவர்களால் ஏற்க முடியாது. அத்தகைய அவமதிப்பை யாராலும் ஏற்க முடியாது.

ஆனால் பெண்ணின் வழி மிகவும் நுணுக்கமாயிருக்கிறது. ஆணின் வழி கரடுமுரடாய் இருக்கிறது. மனைவியை அடித்து தன் மேலாண்மையைத் திணிக்கிறான். பெண்ணோ மிக நுட்பமான வழிகளில் அவளைச் சீரழிப்பதன் மூலமாக தன் ஆதிக்கத்தைத் திணிக்கிறாள்- அவளுடைய நுட்பமான வழிகளின் முன்னால் அவனால் தன்னை தற்காக்கவும் முடிவதில்லை.

உங்களுடன் ஒருவர் சண்டை போட்டுக்கொண்டிருக்கும் போது நேருக்குநேர் அவர் உங்களை தாக்கினால் உங்களால் தற்காத்துக் கொள்ளச் சாத்தியம் இருக்கிறது. நீங்கள் கராத்தே கற்றுக்கொள்ள முடியும்- இதற்கு சுயசிதானந்தா உங்களுக்கு உதவமுடியும்- எதிராளிக்கு சில செமத்தியான அடிகளை தரமுடியும். ஒவ்வொரு பெண்ணும் கராத்தே கற்றுக்கொள்ள வேண்டும். ஏனெனில் பொறுத்ததுபோதும்! எனவே, "என்னை மதித்து நட" "எனக்குப் பயந்து நட" என உங்கள் கணவன் உங்களை கட்டாயப்படுத்த முயன்றால் அவனுக்கு செம்மையான சில கராத்தே உதைகளை நீங்கள் விட முடியும்! அப்படியே என்ன நடக்கிறது என்பதை சுற்றுப்புறம் முழுவதுமே தெரிந்துகொள்வதற்காக சில கராத்தே கூச்சல்களையும் நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

வாழ்க்கையை லேசாக எடுத்துக்கொள்ள வேண்டும். கணவனையும் முனைப்பாக எடுத்துக்கொள்ளத் தேவையில்லை. மனைவியையும் முனைப்பாக எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. முனைப்புத்தன்மை நல்ல விஷயம் அல்ல. இரண்டு பேருக்கிடையில் முனைப்பு ஒரு சுவரை எழுப்புகிறது. அந்நியோன்னியத்தை அது அழிக்கிறது. ஆனால் ஒருவரை ஒருவர் ஆதிக்கம் செய்யவே நீங்கள் முனைந்து நின்றால் இயல்பாகவே நீங்கள் இறுக்கமானவராகவே இருக்கவேண்டி இருக்கிறது. விளையாட்டுத் தன்மையுடன் நீங்கள் ஆதிக்கம் செய்ய முடியாது. நீங்கள் விளையாட்டானவராக ஆகி நடக்கிறவற்றை வேடிக்கையாக எடுத்தால் உங்களால் ஆதிக்கம் செலுத்த முடியாது. உங்களின் அகங்காரம், உலா வர முடியாது. தீவிரத்தன்மையான சூழலில் மட்டுமே அகங்காரம் செயல்படுகிறது.

"கண்ணே, வசியம் என்றால் என்ன?" என்று கேட்டான் கணவன்.

"ஒருவனை தன் ஆளுகையின் கீழ்கொண்டு வருவதும், பின் நீங்கள் விரும்புவதை எல்லாம் அவனைக்கொண்டு செய்விப்பதுமே மனோவசியம் எனப்படும்" என்று பதில் சொன்னாள் மனைவி.

"அது திருமணமாச்சே. வசியமல்லவே!" என மறுப்புத் தெரிவித்தான் கணவன்.

மனைவிகளைத் தம் நிழல்களாக மட்டுமே இருக்குமாறு கட்டாயப்படுத்த கணவர்கள் முயன்று கொண்டிருக்கிறார்கள். கணவர்களைத் தம் நிழல்களாக மட்டுமே இருக்குமாறு கட்டாயப்படுத்த மனைவிகள் முயன்று கொண்டிருக்கிறார்கள். இந்த மொத்த நடப்புமே மனிதத்தன்மையற்றதாக, சமயத்தன்மை அற்றதாக, ஆரோக்கியமற்றதாக, மனநலமற்றதாக இருக்கிறது!

உண்மையாகவே வாழ்வை நீ கொண்டாட விரும்பினால் வாழ்வின் மீது இத்தகைய நிர்பந்தங்களைச் சுமத்தாதே. எல்லாவற்றையும் இறுக்கமற்ற முறையில் எடுத்துக்கொள். நீ உன் கணவருடன் சேர்ந்து மனம்விட்டுச் சிரித்து எவ்வளவு காலமாயிற்று. உன் விருப்பப்படி உன் கணவருடன் சேர்ந்து ஆடி எவ்வளவு காலமாயிற்று என்பதை நினைத்துப் பார்- சம்பிரதாயமாக அல்ல. ஏதாவது திருமண வாழ்வில் அல்ல. ரோட்டரியர்கள் அல்லது லயன்களின் கூட்டத்தில் அல்ல, மாறாக உள்ளார்ந்த மகிழ்ச்சியால் இப்படிச் சிரித்து ஆடிப்பாடி எவ்வளவு காலமாயிற்று? இருவரும் சேர்ந்து வாக்குவாதம் செய்யாமல், பேசாமல், நச்சரிக்காமல், திருமணம் என்பதன் பேரால் தொடரும் அத்தகைய அனைத்து அபத்தங்களையும் செய்யாமல்; நீங்கள் இருவரும் சேர்ந்து அமைதியாக அமர்ந்து இசையைக் கவனித்து எவ்வளவு காலமாகிறது?

மனைவிக்கும் கணவனுக்கும் இடையில் ஒரு சுவர் எழுப்பப் பட்டிருக்கிறது. சமுதாயம் அந்தச் சுவரை நிலைநிறுத்துகிறது. நீங்களும் எப்படிப்பட்ட முட்டாளாக இருக்கிறீர்கள் என்றால், உங்கள் உறவுகளை நாசமாக்கவும் உங்கள் உறவுகளின் அழகை நாச மாக்கவும் இந்தச் சமுதாயத்துக்கு உதவிக்கொண்டே போகிறீர்கள்.

எம்.ஜி. சாலையில் நடந்து கொண்டிருக்கும்போது நடுவயதான ஆள் தன் மனைவியிடம் "ஏய், அந்த அழகிய சின்னப் பெண் என்னைப் பார்த்துப் புன்னகைப்பதைப் பார்த்தாயா?" என்றான்.

"இது என்ன பிரமாதம்? முதல் தடவை உங்களை நான் பார்த்தபோது வாய்விட்டே சிரித்தேன்!" என்றாள் மனைவி.

ஒரு பிரெஞ்சுக்காரன் ஒருநாள் நேரத்தோடு வீடு திரும்பினான். தன் ஆருயிர் நண்பன். தன் மனைவியுடன் படுக்கையில் சேர்ந்திருப்பதைக் கண்டான்.

நம்பமுடியாமல் தலையை மறுத்து ஆட்டியபடி அவன் சொன்னான். "பியர், நான் இருக்க வேண்டிய இடத்தில் நீயா!"

இல்க்மன்டிரிக் ஒருநாள் எதிர்பார்த்ததைவிட முன்னதாக வீட்டுக்கு வந்தார். ஒரு அன்னியனுடன் தன் மனைவி படுக்கையில் இருக்கக் கண்டார்.

"ரெண்டுபேரும் என்ன செஞ்சுகிட்டிருக்கீங்க?" என்று இரைந்தார்.

"நான் சொன்னது சரியாச்சா?" என்றாள் மனைவி தன் காதலனிடம். "அடுத்தவர் அந்தரங்கத்தை எட்டிப் பார்க்கும் பேர்வழி!"

பிராவர்மன் தம்பதியர் தம் கடைசி மகளையும் கட்டிக் கொடுத்தார்கள். பின் தம் வீட்டை விற்று வாடகைக் குடியிருப்புக்கு குடிசெல்ல தீர்மானித்தார்கள்.

தான் வாடகைக்கு பிடித்த வீட்டை பிராவர்மன் தன் மனைவிக்குக் காட்டினார்.

"எனக்குப் பிடிக்கவில்லை" என்றாள் திருமதி பிராவர்மன்.

"ஏன்?" என்று கேட்டார் பிராவர்மன்.

"குளியலறைக்கு மறைப்பு இல்லை. ஒவ்வொரு தடவை நான் குளிக்கும் போதும் அண்டை வீட்டார் என்னை அம்மணமாக பார்ப்பார்கள்!"

"கவலைப்படாதே" என்றார் அவள் கணவன். "அண்டையர் உன்னை அம்மணமாகப் பார்த்தால், அவர்கள் மறைப்பு கட்டிக்கொள்வார்கள்!"

"காலம்சென்ற என் மனைவி உண்மையிலேயே மிகவும் குறிப்பிடத்தக்க பெண்மணிதான்" என்று லண்டனில் ஒரு பூங்கா பெஞ்சியில் உட்கார்ந்துகொண்டு, ஒரு மென்மையான பண்புகொண்ட வயதான ஆங்கிலேயன் தன் நீண்டநாள் நண்பன் ஒருவனிடம் சொல்லிக் கொண்டிருந்தான். மேலும் அவன் தொடர்ந்து சொன்னான். "மிகவும் மதப்பற்றுள்ள பெண் அவள். ஒருநாள் கூட சர்ச்சுக்குப் போகத் தவறியதில்லை அவள். வீட்டிலும் காலை முதல் இரவு வரை ஒரே பிரார்த்தனையும் சங்கீதமும்தான்."

"எப்படி அவங்க இறந்து போனது?" என விசாரித்தான் நண்பன்.

“கழுத்தை நெரித்தே கொன்றுவிட்டேன்.”

நிர்தோஷ். ஏன் அவரைத் திருத்துவதற்கே எப்போதும் நான் முயற்சி செய்கிறேன் என்கிறாய்.

இதை நிறுத்திவிடு! இல்லாவிட்டால் உன் கழுத்தை அவன் நெரிக்கும்போது உன்னைக் காப்பாற்றுவது சிரமமாகப் போய்விடும். ஒவ்வொரு மனைவியும் தன் கணவனைத் 'திருத்த' முயன்று கொண்டேதான் இருக்கிறாள். அவனை ஆதிக்கம் செய்வதற்கான ஒரு நுட்பமான தந்திரம் இது. அது ஒரு கண்டனம். “நீ செய்வது தப்பு. உன்னை சரியாக்க வேண்டி இருக்கிறது” இந்த உபாயத்தில் கணவர்கள் தம்மை தற்காத்துக் கொள்ள முடிவதில்லை. ஏனெனில் தாமே தப்பென்று நினைக்கும் சில காரியங்களை அவர்கள் செய்கிறார்கள். எனவே அவர்களால் தம்மை நியாயப்படுத்திக் கொள்ள முடிவதில்லை.

உதாரணமாக அவர்கள் புகைபிடிக்கிறார்கள். அவர்களே அது கெடுதல் என்கிறார்கள். எனவே “புகைபிடிப்பதை விட்டுவிடுங்கள்” என மனைவி நச்சரித்துக் கொண்டே இருக்கிறாள். உண்மையில் அவள் நச்சரிப்பது அதிகமாக ஆக கணவன் புகைப்பதும் அதிகமாகிறது. ஏனென்றால் அவன் அதிகப் பதற்றம் உடையவன் ஆகிறான். அப்படிப் பதற்றமாக இருக்கும்போது புகைப்பதைத் தவிர அவனுக்கு தப்பிக்க வேறு வழி இல்லை. புகைக்காவிட்டால் மனைவியின் கழுத்தை நெரித்து விடுவான்! எனவே ஒரு சிகரெட்டை நெரிக்கிறான். அல்லது சவ்வை மெல்லத் தொடங்குகிறான். இல்லாவிட்டால் மனைவியை மென்று விடுவான்! இந்த கோபக் கணம் கடந்துபோவதற்காக ஏதாவது ஒன்றில் அவன் தன்னை ஈடுபடுத்தியபடி இருக்கவேண்டி இருக்கிறது.

மனைவிக்கும் ஒரு நல்ல காரணம் கிடைத்திருக்கிறது. உங்கள் நன்மைக்காகத்தானே அவள் அப்படிச் செய்கிறாள்.உங்கள் உடல் நலத்துக்காக, நீங்கள் நீடித்த ஆயுசுடன் வாழ்வதற்காக! கணவனோ கூடிய சீக்கிரத்தில் செத்துவிட விரும்புகிறான்! இந்த மனைவியுடன்,... நீடித்த ஆயுசுக்கும் வாழ்வதா?! புகைபிடிப்பது உண்மையாகவே உயிரைப் போக்கிவிடும் என்னும் நம்பிக்கையில் அவனும் இன்னும் அதிகமாக புகைபிடித்து தள்ளியபடியே இருக்கிறான்!

அவன் குடிக்கிறான்.நீங்கள் அதற்கு எதிராக இருக்கிறீர்கள். அவனும் தனக்கு எதிராகவே இருக்கிறான். ஏனெனில் முழுச்சூழலுமே அப்படித்தான் இருக்கிறது. குடிப்பழக்கம் தவறு

என்று அவனுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. அவனும் அக்கருத்தை ஏற்றுக் கொண்டு விட்டான். எனவேதான் செய்வது சரிதான் என்று அவனால் சொல்ல முடியாது. அப்படிச் சொல்ல அவனுக்குத் துணிச்சல் கிடையாது. தன் மனைவியின் கருத்தே சரி என்பதை அவன் ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. பெண்கள் புகைபிடிப்பதில்லை, குடிப்பதில்லை, சூதாடுவதில்லை. தவறான எதையும் அவர்கள் செய்வதில்லை. அவ்வளவு புனிதைகள்!

புனிதராக இருப்பதில் உள்ள ஒரு 'நல்ல' விஷயம் இது; யாரையும் நீங்கள் வதைக்க முடியும்! உண்மையில் யாரையும் உங்களால் சித்திரவதை செய்ய முடியாவிட்டால் நீங்கள் ஒரு புனிதராக இருக்கவே மாட்டீர்கள்- அதன் சந்தோஷமே அதுதான். அதுவே முடியாவிட்டால்!

தம் கணவர்களையும் குழந்தைகளையும் மற்றும் ஒவ்வொரு வரையும் சித்திரவதை செய்ய முடிகிற ஒரே காரணத்துக்காகவே மனைவிகள் மிகவும் புனிதவதிகளாக, மிகவும் மதாபிமானம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் மாபெரும் புண்ணியவதிகள்! அவர்களோடு ஒப்பிட்டால் மற்ற ஒவ்வொருவரும் மாபாவி.

நடுங்கியபடியே உதறல் எடுத்தபடியே வீட்டுக்கு வருகிறான் கணவன். தான் தப்பான காரியங்களைச் செய்துகொண்டிருப்பதாக அவன் அறிகிறான். ஆனால் புகைபிடிப்பதில் எந்தத் தப்பும் இல்லை! அவ்வப்போது மது அருந்தினால் எந்தத் தப்பும் இல்லை. அது முற்றிலும் மனிதத்தனமானதே. எந்த மிருகமாவது புகைவிடுவதை எப்போதாவது நீங்கள் கண்டிருக்கிறீர்களா? அது உங்களைத் தனித்தன்மையுடன் எடுப்பாகக் காட்டுகிறது! மற்றபடி உங்களிடம் வேறென்ன தனித்தன்மை இருக்கிறது? எந்த மிருகமாவது குடிப்பதை, பீர்பாட்டில்களை தூக்கிக்கொண்டு விடுதிக்கு போவதை பார்த்திருக்கிறீர்களா? அதுவே உங்களை மனிதராக காட்டுகிறது! அதில் எந்தத் தப்புமில்லை.

அன்றைக்குத்தான் எனக்கொரு கடிதம் வந்தது.

வினோபா பாவேயின் ஆசிரமத்தில் இருந்து ஒரு பெண் நம் ஆசிரமத்தை பார்ப்பதற்காக வந்திருந்தாள்... அவளால் வேறெதையும் பார்க்க முடியவில்லை. சொற்பொழிவுக்கு வந்து கவனிக்க நேரம் இருக்கவில்லை, தியானங்களில் பங்கேற்க நேரம் கிடைக்கவில்லை என்று அவள் எழுதுகிறாள். ஆனால் புஜூ

டயமண்டுக்கும் மற்ற ஓட்டல்களுக்கும் போய் சந்நியாசிகள் என்ன சாப்பிடுகிறார்கள் என்பதைப் பார்க்க அவளுக்குப் போதிய நேரம் கிடைத்திருக்கிறது. அவள் எழுதுகிறாள்; "சந்நியாசிகள் எல்லோரும் சைவ உணவு சாப்பிடவில்லை என்பதையும் அவர்கள் குடிக்கவும் செய்கிறார்கள் என்பதையும் கண்டேன். பகவான்,அவர்கள் இப்படிச் செய்வதில் இருந்து அவர்களை நீங்கள் தடுக்கவேண்டும். ஏனென்றால் அவர்கள் மதத்தன்மை உள்ளவர்களாயின், அவர்கள் தியானிகள் ஆயின், அவர்கள் எப்படி புலால் உண்பவர்களாகவும் மது அருந்துபவர்களாகவும் இருக்க முடியும்?"

இதில் எந்தப் பிரச்சனையையும் நான் காணவில்லை. இயேசு மது அருந்தியுள்ளார்- அவர் சமயத்தன்மை உள்ளவர்தான்- புத்தரைப் போலவே. உண்மையில் புத்தரைவிட இயேசு அதிக சமயத்தன்மை உள்ளவர் ஆவார். ஏனெனில் குடித்தால் தன் சமயத்தன்மை இழக்கப்படலாம் என புத்தர் கொஞ்சம் அஞ்சி இருக்கவேண்டும். இயேசுவுக்கோ தன் சமயத்தன்மையைப் பற்றி முழுமையான நிச்சயப்பாடு இருந்திருக்க வேண்டும். கிடைக்கிறபோது கொஞ்சம் குடிப்பதனால் பெரிய கேடு நேரப் போவதில்லை. மேலும் ஆல்கஹாலைப் பொறுத்தவரை அது முற்றிலும் சைவமானதே- அதில் எந்தத் தப்பும் இல்லை!

ஆனால் அந்தப் பெண் இந்த விஷயங்களைத்தான் கவனித்தாள். இதில் முதல் விஷயம். அவள் ஒரு பெண். இரண்டாவது, அவள் ஒரு காந்திய ஆசிரமத்தில் இருந்து வருகிறாள் என்பது... எனவே, இருமடங்கு தப்பு! அவளால் இங்கு கண்டுபிடிக்க முடிந்ததெல்லாம் அவ்வளவுதான்.

முகமது சைவர் அல்லர். ராமகிருஷ்ணர் சைவர் அல்லர். கிருஷ்ணரோ, ராமனோ, உபநிடத அறிவர்களோ, வேதரிஷிகளோ கூட சைவ உணவினர் என நான் நினைக்கவில்லை. அவர்கள் சைவர்களாக இருக்கவில்லை. இருந்தாலும் அவர்கள் அறுதி நிலையை அடைந்தார்கள். எனவே நீங்கள் என்ன உண்ணுகிறீர்கள். எதைக் குடிக்கிறீர்கள் என்பதால் பெரிய வேறுபாடு ஏற்பட முடியாது.

ஆகவே நீங்கள் மாமிசம் சாப்பிடுங்கள் என உங்களுக்கு நான் சொல்லவில்லை. முடிந்தால் மாமிசம் சாப்பிடாதிருப்பது அதிக தூய்மையானது என்று மட்டுமே சொல்கிறேன். ஆனால் அதற்கும் ஆன்மிகத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. மாமிசம் உண்ணாதிருப்பது அழகியலானது. மாமிசம் உண்ணாதிருப்பது

கவிதைத்தன்மை சார்ந்தது. ஆனால் அதற்கும் சமயத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவ்வாறே உங்களை குடிகாரர்கள் ஆகுங்கள் என்று நான் சொல்லவில்லை. ஆனால் அது ஆன்மிகத்தன்மை அற்றது என என்னால் சொல்ல முடியவில்லை. எப்போதாவது ஒரு தடவை கொஞ்சம் மதுவின் மூலம் சிறிது ஆனந்தம் பெறுவது முற்றிலும் சரியானதே, மனிதத்தனமானதே.

என் முழு அணுகுமுறையும் மனிதத்தன்மையானது. சோகமும் கண்டிப்பும் நிறைந்த புனிதர்களாக நீங்கள் ஆவதை நான் விரும்பவில்லை. இந்தப் புனிதர்களை எல்லாம் பார்த்து நாம் சலித்தாயிற்று!

நிர்தோஷ், தயவுசெய்து அவனைத் திருத்த முயலாதே. அன்பு என்றால் ஏற்றுக்கொள்வது; மற்றவரை அவர் இருக்கிறபடியே ஏற்றுக்கொள்வதே அன்பு. இந்த வழிகள் வெறுப்பின் வழிகள்... ஒருவரைத் திருத்த முயல்வது அன்பு அல்ல. அவனைத் துரத்தாதே. உன்னைத் திருணம் செய்ததின் மூலம் அவன் எந்த தப்பையும் செய்துவிடவில்லை! அவனை அதிகமாக துன்புறச் செய்யாதே. அவனே எந்தத் தப்பும் செய்யாதபோது ஏன் இந்த அளவுக்கு தண்டிப்பது? அவனுக்கு சுதந்திரம் கொடு. சுதந்திரத்தை கொடுக்கும்போது உன் சுதந்திரத்தையும் நீ பெறுவாய். ஏனெனில் சுதந்திரம் கொடுத்தால்தான் நாம் சுதந்திரம் பெற முடியும்.

அப்படி இரண்டு பேர் பரஸ்பரம் சுதந்திரம் வழங்கும்போது மட்டுமே அன்பு வளர முடியும். பூரண சுதந்திரத்தில் பூரண அன்பு வளர்கிறது. அன்பு சுதந்திரமும் சேர்ந்திருக்கும்போது அவற்றின் அழகு அபாரமானது,

என் சந்நியாசிகள் சுதந்திரம், அன்பு, தியானம், பரவசம்- இவற்றை வாழ வேண்டும். ஒருவருக்கொருவர் அவலத்தை உருவாக்கும் இந்தத் தவறான வாழ்க்கைப் பாணிகள் அனைத்தையும் கைவிடுங்கள்.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஏன் நீங்கள் இந்த அளவுக்கு அறிவை எதிர்க்கிறீர்கள்?**

**பிரகிதோ,**

**உ**னக்குள் இருக்கும் அளவற்ற மதிப்புக்குரிய ஒன்றை அறிவு அழிக்கிறது; உன் வியப்பார்வத்தை அது அழிக்கிறது. அதிசய

உணர்வின் மூலமே கடவுளை நாம் அறிய வருகிறோம்; அறிவின் மூலம் அல்ல. சின்னக் குழந்தைகளுக்கு இருக்கின்ற ஆர்வத்தால் விரியும் விழிகள் உங்களுக்கும் தேவை. சூரியோதயத்துக்கு முன்பும் நட்சத்திரங்கள் நிரம்பிய வானத்தின் முன்பும் ஆர்ப்பரித்தெழும் சமுத்திரத்தின் முன்பும் பிரமிப்பாக உணரும் திறன் உங்களுக்குத் தேவை. பிரமிப்பை உங்களால் உணர முடியாவிட்டால் கடவுளை உங்களால் உணர முடியாது. ஏனென்றால் கடவுள் என்பது ஒரு மர்மம். பிரமித்து நிற்க முடிபவர்களுக்கு மட்டுமே. மலைத்து நிற்க முடிபவர்களுக்கு மட்டுமே அவர் கிடைக்கிறார்.

அறிவு, வியப்பார்வத்தை அழிக்கிறது. பிரமிப்புணர்வுத் திறனை அழிக்கிறது. எல்லாவற்றையும் விளக்கித் தள்ளிவிடும் திறனுடைய வர்களாக உங்களை ஆக்குகிறது. வாழ்க்கையில் இருந்து கவிதை அனைத்தையும் அது எடுத்து விடுகிறது. வாழ்க்கையில் இருந்து எல்லா அர்த்தத்தையும் அது எடுத்து விடுகிறது. அறிவார்ந்த மனிதர் எதற்கும் ஒருபோதும் திகைப்படைவதில்லை. எல்லாவற்றுக்கும் அவரிடம் விளக்கங்கள் உள்ளன- அப்புறம் ஏன் திகைக்க வேண்டும்? ஆனால் உண்மையில் எந்த விளக்கமும் உண்மையல்ல. விளக்கங்கள் எதையுமே விளக்குவதில்லை. புதிர் நீடிக்கவே செய்கிறது. ரகசியத்துக்கு எல்லையில்லை.

ஆனால் அறிவார்ந்த மனிதன் தன் அறிவால் மிகவும் கனத்து; அழகை, அருளை, ஆட்டத்தை, இருத்தலின் பரவசத்தைக் கண்ணாடி போல் பிரதிபலிக்கும் தன்மையை இழந்துவிடுகிறான்.

எனவேதான் நான் அறிவுக்கு எதிராக இருக்கிறேன். ஆனால் அறிதலுக்கு நான் ஆதரவாக இருக்கிறேன். அறிதல் என்பது முற்றிலும் வேறுபட்ட ஒரு நிகழ்வாகும். அறிதல் என்றால் அப்பாவித்தன்மை அறிவு என்றால் புத்திசாலித்தனம், சூழ்ச்சி குணம். அறிதல் இதயத்தின் செயல் மட்டுமே. அறிவோ தலையின் செயல். அறிவு என்றால் உங்களிடம் ஏராளமான தகவல் சேர்ந்திருக்கும். உங்கள் நினைவில் நிறைய தகவலை நீங்கள் சேகரித்திருப்பீர்கள். உங்கள் நினைவு ஒரு வங்கியாகி இருக்கிறது. உங்கள் நினைவு என்பது ஒரு உயிரியல் கணினியே தவிர. வேறல்ல. அது உங்களை ஞானவான் ஆக்குவதில்லை; ஒருபோதும் ஆக்காது. முதலில் உங்கள் நினைவில் போட்டு வைத்தவற்றையே திரும்பத் திரும்ப நீங்கள் எடுக்க முடியும். நினைவு ஒருபோதும் உங்களுக்கு எந்த அசலான அனுபவத்தையும் தரமுடியாது- எந்த மூலமான தரிசனத்தையும் தர முடியாது. அது உங்களிடம் இருந்து பலவற்றை எடுத்துக் கொள்கிறது;

தருவதோ ஒன்றுமில்லை- உங்களுக்குத் தெரியும் என நீங்கள் நினைப்பதால் அதிக அகங்காரம் உள்ளவர்களாக ஆவதைத் தவிர.

ஒரு வணிக சங்கத்தின் சீட்டாட்ட அறையின் வழியாக நடைபோட்டுக் கொண்டிருந்த ஸ்டிம்சன், மூன்று மனிதர்களுடன் ஒரு ஏர்டேல் டெரியர் ஜாதி நாய் உட்கார்ந்து போக்கர் விளையாடிக் கொண்டிருந்தைக் கண்டு வியந்தான். கவனித்து நின்றவன் நாயின் அபார விளையாட்டுத் திறமையை மெச்சினான்.

"அதற்கு கருத்துப் போதாது" என்றான் ஏர்டேலின் சொந்தக்காரன்.

"ஒவ்வொரு தடவை அதற்கு நல்ல சீட்டுக் கிடைக்கும்போதும் அது தன் வாலை ஆட்டிவிடுகிறது!"

பெர்கின்ஸ் தன் புது அண்டை வீட்டானாகிய நெல்சனைப் பார்க்கப் போனான். அவர்கள் தனியறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு நாய் உள்ளே வந்து 'சண்டே டைம்சை' யாராவது பார்த்தீர்களா என்று கேட்டது. அதனிடம் செய்தித்தாளைக் கொடுத்ததும் அது போய்விட்டது.

"அதிசயமாக இருக்கிறதே" என்று வியப்புடன் கூறினான் பெர்கின்ஸ். "ஒரு நாய் பேப்பர் படிக்கிறதே."

"அதைப் பார்த்து ஏமாந்து விடாதீர்கள்" என்றான் நெல்சன். "அது படக்கதையை மட்டுமே பார்க்கும்."

டிக்சன் ஒரு திரைப்பட அரங்கில் உட்கார்ந்திருந்தான். தன் முன்வரிசையில் இருந்த மனிதன், அவனுக்கு பக்கத்து இருக்கையில் இருந்த மிகப் பெரிய ஆப்பிரிக்க வேட்டை நாயின் தோளில் கைபோட்டிருந்ததை கவனித்தான்.

அந்த நாய் நல்ல புரிதலுடன் படத்தைப் பார்த்தது என்று தெரிந்தது. ஏனென்றால் வில்லன் பேசும்போது அது மெதுவாக எரிச்சல்பட்டு உறுமியது. விகடமான வரிகளைக் கேட்டு மகிழ்வுடன் குரைத்தது.

டிக்சன் முன்னே குனிந்து முன்னால் இருந்தவனின் தோளில் தட்டி, "மன்னிக்கவும், இந்த நாயின் நடத்தையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை" என்றான்.

"ஆமா, எனக்கும் ஆச்சரியம்தான்" என்றான் அம்மனிதன். "ஏன்னா, புத்தகம் படிப்பதென்றால் அதற்கு வெறுப்பு."

ஆச்சரியம், புதிர், அதிசயம் இவற்றை அனுபவிக்க அறிவாளி மனிதன் முற்றிலும் இயலாதவனாயிருக்கிறான். கடவுளே அவன் முன் நின்று கொண்டிருந்தாலும்கூட "அதுக்கென்ன?" என்பான். எதுவும் அவனை வியக்கச் செய்யாது. எனவே எதுவும் அவனுக்கு மகிழ்ச்சி விளைக்காது.

"நீங்கள் சிறு குழந்தைகள்போல் ஆகாவிட்டால் கடவுளின் அரசில் நுழைய மாட்டீர்கள்" என்கிறார் இயேசு.

வண்ணத்துப் பூச்சிகளின் பின்னே நீங்கள் ஓடிக்கொண்டிருந்த- கடற்கரையில் கிளிஞ்சல்களையும் வண்ணக் கல்லுகளையும் பொறுக்கி அவற்றையே பெரிய பொக்கிஷமாக நீங்கள் நினைத்துக் கொண்டிருந்த- உங்கள் குழந்தைப் பருவத்தின் இனிய தருணங்களை மறுபடியும் நீங்கள் பெற முடிவதற்கு, அறிவை எடுத்து அப்புறம் வைக்க வேண்டி இருக்கிறது. அந்த வண்ணக்கற்கள் உங்களுக்கு கோகினூர் கற்களை விடவும் அதிக முக்கியத்துவம் உடையனவாக இருந்தன. அந்த தேவதை உலகத்தை நீங்கள் திரும்பப்பெற வேண்டும். மறுபடியும் நீங்கள் அதே கண்களுடன் உலகத்தைப் பார்க்க வேண்டும். அப்போது அது முழுவதும் கடவுள்மயமாக இருக்கும். அப்போது பறவைகள் பாடுவதும் தூரத்துக்குயில் ஒன்று கூவுவதும், பூக்கள்... பின் ஒவ்வொன்றும் மிகுந்த அதிசயமாகத் தோன்றும்: எங்கெங்கு நோக்கினாலும் எங்கெங்கு போனாலும் நீங்கள் நன்றிசெலுத்த விரும்புவீர்கள். நன்றியறிதலை உணர்வீர்கள். மண்மேல் மண்டியிட்டு தொழ வேண்டுமென உணர்வீர்கள். எந்த சர்ச்சுக்கும் கோயிலுக்கும் நீங்கள் போகத் தேவையில்லை. பிரபஞ்சம் முழுவதுமே அவரது கோயிலாக ஆகிறது- அவரது கோயிலாகவே இருக்கிறது.

பிரகிதோ, நான் அறிவுக்கு எதிராக இருக்கிறேன். ஏனென்றால் அறிவு உன் ஞானத்துக்கு தடையாக இருக்கிறது. அறிவை நீ ஒதுக்கி வைக்காவிட்டால் உன் இயற்கையானது நுண்ணறிவாக வெடித்தெழ முடியாது. அறிவை அப்புறப்படுத்து; அப்புறம் பார், நீ பெருவியப்புக்குள்ளவாய்; வேறு ஒருவிதத்தில், சுயேச்சையான விதத்தில் நீ இயங்கத் தொடங்குவாய்.

அறிவு என்பது ஏற்கெனவே தயாராகி வருவது. அது உங்களை கடந்தகாலத்துடன் கட்டிப் போடுகிறது. எனவே உங்கள் பதில்கள் எல்லாம் காலம் கடந்ததாக இருக்கிறது. ஒருபோதும் பிரச்சினையை ஒட்டி அமைவதில்லை. எப்போதும் பற்றாக்குறையாகவே

அமைகிறது. போதுமான அளவில் ஒருபோதும் இருப்பதில்லை. இருக்கவும் முடியாது. வாழ்க்கை ஒவ்வொரு கணமும் மாறியபடி இருக்கிறது. எப்போதும் புதிதாகவே இருக்கிறது. உங்கள் பதிலோ ஒரு பதிலாக இல்லை, எதிர்வினையாக இருக்கிறது. அது கடந்த காலத்தில் இருந்து வருகிறது. உங்களிடம் ஏற்கெனவே தயாரான நிலையில் ஒரு விடை இருக்கிறது. தற்போதைய சூழ்நிலையை நீங்கள் பார்ப்பதுகூட இல்லை. இசைத்தட்டுப் போல் அந்த ஆயத்த விடையை வெறுமனே திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்.

எனவே வாழ்வில் இருந்து நீங்கள் பின்தங்கி இருக்கிறீர்கள். வாழ்விலிருந்து நீங்கள் பின்தங்கி இருந்தால் உங்கள் ஜீவனில் பரவசத்தைப் பெற்றிருக்க மாட்டீர்கள். எப்போதும் தவறவிட்டுக் கொண்டிருப்பதையே உணர்வீர்கள். ஏதோ ஒன்று குறைகிறது என்பதை எப்போதும் உணர்வீர்கள். அந்த ஒன்று என்ன? வாழ்வுடன் இசைந்து இணையாக நீங்கள் இல்லை என்பதே. ஏதோ ஒரு நிலையத்தை நோக்கி எப்போதும் ஓடிக்கொண்டும் விரைந்து கொண்டும் இருப்பதாகவே எப்போதும் கனவு காண்பீர்கள். அதை நீங்கள் அடையும் நேரத்தில் வண்டி நிறுத்தத்தில் இருந்து விலகிப் போய்க்கொண்டிருக்கிறது. அந்தக் கனவு ஒரு குறியீடாக இருக்கிறது. நீங்கள் ஒருபோதும் நிகழ்காலத்தில் உயிர்ப்புடன் விழிப்புடன் இல்லை. எப்போதும் பிந்துகிறீர்கள் என்பதையே அது காட்டுகிறது. காரணம் உங்களின் கடந்தகாலமே; ஏற்கெனவே எனக்கு விடைகள் தெரியும் என நீங்கள் நினைப்பதே காரணம். எனவே ஒருபோதும் நீங்கள் கேள்விகளைக் கவனிக்கிறதில்லை. உங்களின் எதிரில் நிற்கும் சூழ்நிலையை ஒருபோதும் நீங்கள் கவனிப்பதில்லை.

ஒரு ஸென் கதை:

பரம்பரையாகவே இரண்டு கோயில்கள் ஒன்றுக்கொன்று பகைமை பாராட்டி வந்தன. இரண்டு பூசாரிகளுக்கும் செய்தி கொண்டுபோக ஆளுக்கொரு சிறுவன் இருந்தான். இரண்டு பூசாரிகளும் தத்தம் பையன்களிடம் “அந்தக் கோயில் பையனிடம் பேசாதே. நாம் எதிரிகள்!” என்று சொன்னார்கள். பையன்கள் எப்படியும் சிறுவர்தானே என்பதால் ஒருவருக்கொருவர் நண்பராக தொடங்கிவிடலாம் என அவர்கள் பயந்தார்கள். பூசாரிகள் அதைச் சொல்லியிருக்கவில்லை என்றால் பையன்கள் அதை நினைத்துப் பார்க்காது இருந்திருக்கலாம். ஆனால் அவர்கள் பேசிக்கொள்ளக் கூடாது என்று வற்புறுத்தி இருந்ததால் ஈர்ப்பு பலமாக இருந்தது.

எனவே ஒருநாள் ஒரு பையன் மற்றவனை சாலையில் சந்தித்தபோது "எங்கே போகிறாய்?" என்று கேட்டான்.

மற்ற பையன் சொன்னான், "காற்று என்னை எடுத்துச் செல்லும் எந்த இடத்துக்கும்".

தத்துவ விவாதங்களையும் சொற்பொழிவுகளையும் கவனித்துக் கவனித்து அவனும் தத்துவமாகப் பேசுபவனாகி விட்டிருந்தான்.

முதல் பையன் வாயடைத்துப் போய்விட்டான். இப்போது என்ன சொல்வதென அவனால் யோசிக்க முடியவில்லை. பின் அவன் நினைத்தான், "என் குரு சொன்னது சரிதான்- இந்த பயல்கள் ஆபத்தானவர்கள்! 'எங்கே போகிறாய்?' என்ற எளிய கேள்வியைக் கேட்கிறேன்; அதற்கு இல்லாத தத்துவம் பேசுகிறான்!"

அவன் திரும்பி வந்தான். குருவிடம் கூறினான். "நீங்கள் சொன்னதற்கு கீழ்ப்படியாமல் போனதற்கு மன்னியுங்கள். இன்னது நடந்தது".

குரு கூறினார், "இது மிகவும் மோசமானது- அவனை நாம் தோற்கடித்தாக வேண்டும்! இப்படி ஒருபோதும் நடந்ததில்லை. அந்தக் கோயிலுடன் நடந்த ஒவ்வொரு வாதத்திலும் எப்போதும் நாமே வெற்றி பெற்று வந்திருக்கிறோம். எனவே நாளைக்கு மறுபடியும் நீ அவனை 'எங்கு போகிறாய்?' என்று கேள். அதற்கு அவன் 'காற்று என்னை எடுத்துச் செல்லும் எந்த இடத்துக்கும்' என்பான். உடனே நீ 'காற்றே அடிக்காவிட்டாலோ?' என்று கேள்."

பையனுக்கு மிகுந்த மகிழ்ச்சி! கொஞ்சம் முன்னாடியே கிளம்பிவிட்டான். அந்த இடத்தில் வந்து நின்று காத்திருந்தான். தான் கேட்கப் போவதைப் பற்றி முற்றிலும் தெளிவாக இருப்பதற்காக பல தடவைகள் அதைச் சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

மற்ற பையன் வந்தான். உடனே இவன் கேட்டான், "எங்கே போகிறாய்?"

அதற்கு மற்ற பையன் பதில் சொன்னான், "என் கால்கள் என்னை எடுத்துச்செல்லும் எந்த இடத்துக்கும்,"

இப்போது அந்த விடை பொருத்தமில்லாமல் போய்விட்டது. அவன் தயாரித்து வைத்திருந்ததெல்லாம் அர்த்தமில்லாமல் ஆகிவிட்டது. மறுபடியும் அவன் கையறு நிலையில் இருந்தான். மறுபடியும் குருவிடம் போனான்.

குரு சொன்னார், "அந்தப் பயல்கள் தந்திரக்காரப் பயல்கள், சூழ்ச்சிக்காரப் பயல்கள்! இனி அவன் 'என் கால்கள் என்னை எடுத்துச் செல்லும் எந்த இடத்துக்கும்' என்று சொன்னதும் 'காலே செயல்படாமல் பிறந்திருந்தாலோ?' என்று கேள்."

மறுபடியும் பையன் வந்தான். "எங்கே போகிறாய்?" என்று கேட்டான்.

"காய்கறி வாங்கப் போகிறேன்" என்றான் பையன்.

அப்படிப்பட்டதுதான் வாழ்க்கை. தயாரான ஒரு பதிலோடு நீ வருகிறாய். வாழ்க்கை மாறி இருக்கிறது. "காய்கறி வாங்கப் போகிறேன்" என்று அது சொல்கிறது. சொல்லித்தந்த எந்த விடையும் உதவப் போவதில்லை. வாழ்க்கையைப் பொறுத்தவரை அறிவு பயன்படப் போவதில்லை. அறிவாளி மனிதன் ஏறக்குறைய ஒரு சவத்துக்குச் சமம். அவன் கல்லறையில் வாழுகிறான்.

உங்கள் கல்லறைகளை விட்டு வெளியே வாருங்கள்! அதிக சுயேச்சையாக வாழுங்கள்; பதில் சொல்லத் தகுந்தவராக வாழுங்கள். கணத்துக்கு கணம் பதிலிறுங்கள். நிகழ்கணத்தை கவனித்து (பின்) அதற்கேற்ப செயல்படுங்கள். அப்போது உங்கள் செயல் முழுமையாயிருக்கும்: ஏனெனில் அது நிகழ்காலத்திலிருந்து எழும்; நிலைமையை உள்ளபடி அது பிரதிபலிக்கும்; உண்மையாகவே அர்த்தம் உள்ளதாக, முக்கியத்துவம் உடையதாக, திருப்தி ஏற்படுத்துவதாக, நிறைவு செய்வதாக இருக்கும். வாழ்க்கையுடன் இணைந்து நீங்கள் நடைபோடுகிறீர்கள். வாழ்க்கையுடன் இசைந்து நீங்கள் இருக்கிறீர்கள்.

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சமணத் துறவிகள் ஏன் அம்மணமாக வாழ்கிறார்கள்?**

அவர்கள் துனியச்சக் கோளாறு என்னும் வியாதியால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள்!

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நீங்கள் வெடிக்கிற சிரிப்புக் கண்ணிகளுக்கு தப்பிப் பிழைக்கும் போதெல்லாம் என் சிரிப்புக்கடியில் நான் ஒரு புல்டோசரால் நிரவப்பட்டு, முடிவில், மசித்த உருளைக்**

**கிழங்குபோல் உணர்கிறேன்! மறுபடியும் மறுபடியும் மசித்த உருளைக்கிழங்கு எத்தனை நாளைக்குத்தான் உயிர் பிழைத்திருக்க முடியும்?**

**ஆனந்த் பகவதி,**

இன்னுமா நீ உயிர் பிழைத்திருக்கிறாய்? இன்னும் நீ இருக்கிறாயா?

மனம் உலைவுற்ற பெண் மருத்துவமனைக்குச் சென்று சொன்னாள். "நீராவி உருளை (ஸ்டீம் ரோலர்) ஏறிய ஆள் என் கணவர். அவர் எந்தப் பிரிவில் இருக்கிறார் சொல்ல முடியுமா?"

தாதி சொன்னாள், "அவரா, அவர் 4,5 மற்றும் 6 ஆகிய வார்டுகளில் இருக்கிறார்!"

இங்கு நீ பார்க்கிற யாவரும்நசுக்கிய உருளைக்கிழங்குகளே! யார் யார் என தனித்தனியாக அறிவது மிகவும் கடினம்- எல்லாம் காவி உருளைக்கிழங்குகள்!

உனது கேள்வி கொஞ்சம் அதிகத் தாமதமாக வருகிறது, பகவதி. நீ ஏற்கெனவே முடிந்துவிட்டாய். இப்போது எதுவும் செய்ய முடியாது. மசித்த உருளைக்கிழங்கை மறுபடியும் பழையபடி ஆக்க முடியாது. அதற்கு வாய்ப்பே இல்லை!

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**இந்தியாவில் உள்ள பூனாவில் இருக்கும் ஸ்ரீரஜனீஷ் ஆசிரமத்துக்காக நான் வேலை செய்து வருகிறேன். தயவுசெய்து... எனக்கொரு சிரிப்புத் துணுக்குக் கூறுங்கள்.**

**தேவ யாஷென்,**

ஏன் ஒரு சிரிப்பு? நான் கருமியல்ல! உனக்கு மூன்று சிரிப்புகள் சொல்வேன்!

இத்தாலிய மணமகளும் மணமகனும் தம் தேனிலவு ('சாந்தி முகூர்த்த') அறைக்குள் போனார்கள். போவதற்கு ஆர்வமாயினும் லேசாக நாணிய மணமகள் வெளிச்சத்தை அணைத்துவிட்டு இருட்டுக்குள்தான் உடைகளைய வேண்டும் என வலியுறுத்தினாள்.

சில நொடிகளில் படுக்கைக்கு தயாராகிய மணமகள் அங்கே படுத்து விரகதாபத்துடன் பெரு மூச்செறிந்து சொன்னாள்: "ஓ என்

அன்பே, எனக்கு உண்மையாகவே திருமணமாகியிருக்கிறது என்பதை என்னால் நம்பவே முடியவில்லை."

இருட்டுக்குள் போராடும் ஒரு சத்தம் கேட்கவே, மறுபடியும் அவள் சொன்னாள், "ஓ என் அன்பே, எனக்கு உண்மையாகவே திருமணமாகி இருக்கிறது என்பதை என்னால் நம்பவே முடியவில்லை!"

இருட்டிலிருந்து மணமகனின் ஆத்திரங்கூடிய குரல் ஒலித்தது: "இந்த சிக்கியிருக்கிற ஜிப்பை மட்டும் என்னால் கழட்ட முடிந்துவிட்டால் நம்பிவிடுவாய்!"

இரண்டாவது:

ஒரு வயதான தத்துவர் மருத்துவரைப் பார்த்துச் சொல்கிறார். "டாக்டர், எனக்கொரு பிரச்சனை. அதைத் தீர்க்க உங்களால் உதவ முடியலாம். நான் 20 வயதுகளில் இருந்தபோது அவ்வப்போது என் தண்டு விறைத்துக் கொள்ளும். அதை என் இரண்டு கைகளாலும் பிடித்து வளைத்தாலும் என்னால் வளைக்க முடியாது. பின் என் 40களில் எனக்கு விறைப்பு தோன்றும். அப்போதும் என் இரண்டு கைகளாலும் பிடித்து வளைத்தாலும் வளையாது. இப்போது என் 70களில் டாக்டர், பாருங்கள், அன்றைக்கு எனக்கே ஆச்சரியமாகி விட்டது! எனக்கு விறைத்துக் கொண்டது. அதை என் இரு கைகளாலும் பிடித்து வளைக்கிறேன்; என்னால் வளைக்க முடிந்துவிட்டது! அப்படியானால் நான் பலசாலி ஆகிவருகிறேன் என்றுதானே அர்த்தம் டாக்டர்?"

OOO

# 7

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**கடவுளுக்காக ஏங்குவதற்கும் காதலுக்காக ஏங்குவதற்கும் என்ன வேறுபாடு?**

**பிரேம் நீட்டோ,**

எந்த வேறுபாடும் கிடையாது- எல்லா ஆசைகளும் ஒரே விதமானவையே. பணத்தை நீ ஆசிக்க முடியும், தியானத்தை நீ ஆசிக்க முடியும். அதிகாரத்துக்காக ஏங்க முடியும், ஆண்டவனுக்காக நீ ஏங்க முடியும். ஆனால் நீ அப்படியேதான் இருக்கிறாய். எதற்கு நீ ஆசைப்படுவாயோ அது உன்னை மாற்றிவிட முடியாது. நீ ஏங்கும் பொருள் உன் உள்ளுயிரின் மீது தாக்கம் ஏற்படுத்தி விடுவதில்லை. புதுப்புது வார்த்தைகளுடன் புதுப்புது ஆசைப் பொருள்களுடன் விளையாடும் அதே பழைய விளையாட்டாகவே அது இருக்கிறது.

ஒரு ஆளை நீங்கள் விரும்புகிறீர்கள். அவருக்காக நீங்கள் ஏங்குகிறீர்கள். ஏன்? -ஏனென்றால் நீங்கள் தனிமையாகி உணர்கிறீர்கள். உங்களில் நீங்கள் நிறைவானவர்களாக உணர்வதில்லை. உங்களுக்குள் ஒருவித வெறுமை இருக்கிறது. அதை மற்றவரின் இருப்பால் நிரப்ப நீங்கள் விரும்பலாம். அர்த்தமின்மையை நீங்கள் உணர்கிறீர்கள். அடுத்தவர் உங்கள் வாழ்க்கைக்கு அர்த்தம் வழங்க ஆசிக்கிறீர்கள். இது ஒருபோதும் நடப்பதில்லை- பொருள்களின் இயல்பிலேயே இது நிறைவேற வழியில்லை. ஏன் இது முடியாது என்றால் அடுத்தவரும் இதே காரணத்துக்காகவே உங்களை விரும்புகிறார். அவரும் தன்னில் வெறுமையாக உணர்கிறார். இப்போது இரண்டு வெறுமையான

மனிதர்கள் ஒருவர் மற்றவரின் மூலமாக நிறைவுபெறலாமென நம்புகிறார்கள். இரண்டு அர்த்தமற்ற வாழ்க்கைகள் ஒன்று மற்றதன் மூலமாக அர்த்தமும் முக்கியத்துவமும் பெறலாமென நம்புகின்றன.

இதுதான் அபத்தத்தின் உச்சம். கூடிய சீக்கிரமே இதை உணர்ந்து கொள்கிறீர்கள். ஏனென்றால் திரும்பத் திரும்ப நிராசையே ஏற்படுகிறது. திரும்பத் திரும்ப தோல்வியே ஏற்படுகிறது. திரும்பத் திரும்ப நம்பிக்கை வெறிச்சோடுகிறது. முன்பு இருந்ததை விடவும் அதிகமதிக ஆழமான குழப்பத்துக்குள்ளேயே நீங்கள் எஞ்சுகிறீர்கள். மறுபடியும் மறுபடியும் நீங்கள் நம்பிக்கை இழக்கிறீர்கள்.

இதனால்தான் ழான்-பால் சார்த்தர் "மற்றவர் ஒரு நரகமாய் இருக்கிறார்" என்று சொல்வது வழக்கம். உணர்வற்ற நிலையில் இருட்டுக்குள் அவர் துளாவினார். தனக்கே தெரியாமல் ஒரு உண்மையின் மீது இடறினார். ஆனால் அவர் அதை வெளிப்படுத்திய விதம், அது உண்மையில் எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதாக இல்லை. மற்றவர் நரகமல்ல. மற்றவர் மீதான உங்களின் ஆசையே நரகம்- இதைத்தான் காலங்காலமாக எல்லா புத்தர்களும் சொல்லி வந்திருக்கிறார்கள். ஆனால் "மற்றவரே நரகம்" என சார்த்தர் கூறும்போது உங்கள் அவலம், ஏமாற்றம், நம்பிக்கை இழப்பு எல்லாவற்றுக்கும் மற்றவர்தான் பொறுப்பு எனத் தோன்றுகிறது. மற்றவர் பொறுப்பாக முடியாது. உங்களின் சொந்த எதிர்பார்ப்புதான் தகர்ந்து போயிருக்கிறது. எதிர்பார்ப்பு எவ்வளவுக்கு பெரிதாக இருக்குமோ அவ்வளவுக்கு ஏமாற்றமும், நிராசையும் பெரிதாகவே இருக்கும்.

எனவே எங்கெல்லாம் ஏற்பாட்டுத் திருமணங்கள் மறைந்து காதல் கல்யாணங்கள் மலிந்தனவோ அங்கெல்லாம் அதிக நிராசை இருக்கிறது. ஏற்பாட்டுத் திருமணத்தில் உங்கள் எதிர்பார்ப்புகள் பெரிதாக இல்லை. அதில் காதல் சாகசமே இல்லை. அதன் மூலமாக சொர்க்கத்தை எட்டும் நம்பிக்கை உங்களுக்கு இல்லை. அது ஒரு இகலோக விவகாரம். உங்கள் பெற்றோர்கள், தாத்தா பாட்டிகள், சமுதாயம், குடும்பம், சாமியார், சோதிடர் முதலியோரால் ஏற்பாடு செய்யப்படுவது அது. அதில் உங்கள் கனவுகளுக்கு அதிக இடம் இல்லை. எனவே ஏற்பாட்டுத் திருமணமானது ஒப்பீட்டளவில் அதிக சுளுவான பாதையில் செல்கிறது: சிகரங்களும் இல்லை. பள்ளத்தாக்குகளும் இல்லை. ஏற்ற இறக்கம் இல்லை. சமதளமான தேசிய நெடுஞ்சாலையாக அது இருக்கிறது. இந்திய நெடுஞ்சாலைகூட அல்ல, ஜெர்மானிய நெடுஞ்சாலையாக

இருக்கிறது. அதில் எதுவும் முளைப்பதில்லை. அது உயிரற்றது. கல் அல்லது தார் அல்லது சிமிட்டியால் செய்யப்பட்டது. முற்றிலும் உயிரற்றது. ஆனால் பாதுகாப்பானது. அது ஒரு மலைப்பாதை அல்ல. அறியாத பிரதேசத்துக்குள் நீங்கள் பிரவேசிப்பதில்லை. உங்களிடம் வரைபடம் இருக்கிறது. வழியெங்கும் மைல்கற்கள் உள்ளன. எந்த இடத்தில் நீங்கள் இருக்கிறீர்கள் என்பதைக் குறிக்கும் அறிவிப்புப் பலகைகள் உள்ளன. எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள், சேரவேண்டிய இடம் எவ்வளவு தூரத்தில் உள்ளது. புறப்பட்ட இடத்தில் இருந்து எவ்வளவு தூரம் வந்திருக்கிறீர்கள் என்பதைச் சுட்டிக்காட்டும் பலகைகளும் உள்ளன. எல்லாமே தெளிவாக இருக்கிறது. இப்படித்தான் ஏற்பாட்டுத் திருமணம் செயல்படுகிறது.

அதிலும் நீங்கள் சிறுகுழந்தையாக இருக்கும்போதே, காதல், உடலுறவு, லீலை என்பவை பற்றிய விவரம் இல்லாதபோதே ஏற்பாட்டுத் திருமணம் நடந்துவிட்டால் நீங்கள் உங்கள் மனைவியை அல்லது கணவனை வெகு இயல்பாக ஏற்றுக்கொள்கிறீர்கள். உங்கள் சகோதர சகோதரிகளை இயல்பாக எடுப்பது போலவே எடுத்துக் கொள்கிறீர்கள். தன் தாயை மாற்றிக்கொள்வது என எவரும் எப்போதேனும் சிந்தித்ததுண்டா? அப்படியே, நீங்கள் குழந்தையாக, சின்னக் குழந்தையாக இருக்கிறபோது திருமணம் நடந்துவிட்டால் மணவிலக்கைக் குறித்தும் ஒருபோதும் நீங்கள் எண்ணுவதில்லை. நீங்கள் இருவரும் சேர்ந்தே வளர்கிறீர்கள். சகோதரரும் சகோதரியும் சேர்ந்து வளர்வது போலவே கணவனும் மனைவியும் சேர்ந்து வளர்கிறார்கள். தமக்கு நினைவு தெரிந்த நாளில் இருந்து நீண்டகாலமாக அவர்கள் சேர்ந்து வாழ்ந்திருக்கிறார்கள்.

என் அம்மாவுக்கு மணமுடிக்கப்பட்டபோது அவருக்கு வெறும் எழு வயதே ஆகி இருந்தது. அப்போது என் அப்பாவுக்கு 12 வயதுக்கு மேல் இருக்காது. அப்போது என்ன கனவுகள் சாத்தியம்? என்னத்தை அவர்கள் எதிர்பார்த்திருக்க முடியும்? உண்மையில் திருமணத்தின் ஆடம்பரம் அனைத்தையும் அவர்கள் ரசித்துக் கொண்டிருந்தார்கள். வாத்திய இசை, வாத்தியக் குழு, வாண வேடிக்கை ஆகியவற்றால், அவர்கள் வசீகரிக்கப்பட்டார்கள்- உண்மையாகவே அது மகிழ்ச்சியான அனுபவமாகவே இருந்தது- தாம் எதற்குள் இழுத்து விடப்பட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதைப் பற்றிய விவரமே அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. தெரிய வந்தபோதோ ஏற்கெனவே அதற்குள் வேரூன்றி விட்டிருந்தார்கள். ஒருவர் மற்றவருக்கு அத்தியாவசியமானவராகி விட்டிருந்தார்கள்.

ஆனால் காதல் மணத்தில் இது கடினமானது. அமெரிக்காவில் இரண்டில் ஒரு திருமணம் நொறுங்கிப் போகிறது. மணவிலக்கின் விகிதம் அத்தகையதாக இருக்கிறது. இரண்டு திருமணங்களுக்கு ஒரு மணவிலக்கு. மேலும், நொறுங்கிப் போகாத ஒரு மணமும் ஆனந்த உலகத்தில் சஞ்சரிக்கவில்லை என்பதையும் நினைவில் வையுங்கள். கோழைத்தனம், பாதுகாப்புப் பிரச்சனை என்கிற காரணத்துக்காக மட்டுமே மக்கள் அதில் தொடர்ந்து ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு துணிச்சல் அதிகமாக ஆக மணவிலக்கு வீதம் மென்மேலும் உயர்ந்தபடியேதான் இருக்கும். அதிகரித்தபடியேதான் இருக்கும்.

காதல் மணங்கள் ஏன் தோற்கின்றன? ஒரே காரணம், ஆழமான எதிர்பார்ப்பு இருப்பதும் அதை நிறைவேற்ற முடியாமல் போவதும்தான். நீங்கள் ஒரு முட்டாளாக இருந்திருக்கிறீர்கள் என்பதை விரைவில் உணர வருகிறீர்கள். விரைவில், அதாவது தேனிலவு ஓய்வதற்கு முன்பே, திருமணம் ஓய்ந்து விடுகிறது. பின் அது தொங்கிக் கொண்டிருக்கிறது... உங்களுக்கு எவ்வளவு தைரியம் இருக்கிறது என்பதைப் பொறுத்தது அது. நீங்கள் ஒரு கோழை என்றால் உங்கள் வாழ்நாள் முழுவதும் அது நீடிக்கலாம். நீங்கள் துணிவுள்ளவர் என்றால், உங்களால் பிரச்சனையைப் புரிந்துகொள்ள முடிந்தால், தேனிலவு முடிந்த கணமே நீங்கள் மணவிலக்குக் கோரலாம். ஏனெனில் திருமணமும் 'முடிந்து' விட்டது. நீங்கள் சுமந்துவந்த மாயையகள் எல்லாம் வெறும் மாயைகளே என்பதைப் பார்த்து விட்டீர்கள். வானவில் உலகத்தில் வாழ்ந்து கொண்டிருந்தீர்கள். கவிதை உலகில் வாழ்ந்து கொண்டிருந்தீர்கள், யதார்த்த உலகில் அல்ல.

அடுத்தவரே நரகம் என்று சார்த்தர் கூறுவது சரியல்ல. ஆனால் தனக்கே தெரியாமல் உண்மைக்கு மிகவும் சமீபமாக வந்திருக்கிறார் அவர்.

மற்றவர் அல்ல. மற்றவர் மீதான ஆசையே நரகம் என புத்தர்கள் சொல்கிறார்கள். அடுத்தவர்மீது பழியைப் போடுவது மனிதப்பிறவிகளின் மிகச் சாதாரணமான பழக்கவழக்கம்தான்.

மர்ஃபியின் பொன்மொழி ஒன்று கூறுகிறது: தவறு செய்வது மனிதத்தனம். அதன் பழியை மற்றவர்மேல் சார்த்துவதோ இன்னும் அதிகமாய் மனிதகுணம்.

அதைத்தான் சார்த்தர் செய்திருக்கிறார். நீங்கள் தவறிவிட்டீர்கள். இப்போது அடுத்தவரைப் பொறுப்பாளியாக்குகிறீர்கள்.

உண்மையாகவே நீங்கள் பிரச்சனையை பார்த்திருந்தால் ஆசையே காரணம் என்பதைக் கண்டிருப்பீர்கள். அதை நீங்கள் பார்க்காதபோது அடுத்தவரைத்தான் மாற்றுவீர்கள். பின் அந்த அடுத்தவர்தான் உங்கள் பிரச்சனைகளுக்கு காரணமாவார்- எனவே அவரை மாற்று. எனவே ஒரு மணவிலக்குக்குப் பின் இன்னொரு திருமணம், பின் இன்னொரு திருமணம், பின் இன்னொரு திருமணம். ஆனால் அதே பழைய பிரமையோடேயே நீங்கள் திரும்பத்திரும்ப வாழ்வீர்கள்! மேலும் மக்கள் மிகவும் புத்திகெட்டவர்களாய் இருக்கிறார்கள்; மிகவும் விழிப்பற்றவர்களாய் இருக்கிறார்கள்; உண்மையை ஒருபோதும் அவர்கள் பார்ப்பதில்லை; முழு உலகத்தையுமே நீங்கள் மாற்றியபடி போக முடியும். திரும்பத்திரும்ப உங்கள் துணையை நீங்கள் மாற்ற முடியும். ஆனால் நீங்கள் பழையமாதிரியே இருப்பதால் பழைய கதைதான் தொடரும் என்பதே அந்த உண்மை. எங்கே நீங்கள் போனாலும் நீங்கள் அதே ஆளாகவே இருக்கிறீர்கள். உங்கள் இதயம் அதே நிலையிலேயே இருக்கிறது. குழப்பம் இருக்கிறது. உங்களுக்குள் வெளிச்சம் இல்லை. இருட்டுமட்டுமே இருக்கிறது.

சாதாரண உறவுகள் சலித்து- கசந்து போகையில் மக்கள் கடவுளுடன் ஒரு உறவைக் கற்பனை செய்ய ஆரம்பிக்கிறார்கள். அதுதான் தெய்வீக நாட்டம்- கடவுள் மீதான ஏக்கம். இந்த உறவு சிறிது பரவாயில்லாமல் தோன்றுகிறது. ஏனெனில் இதில் ஒருபோதும் நீங்கள் ஏமாறமுடியாது. ஏனெனில் ஒருபோதும் அவரை நீங்கள் சந்திக்கப் போவதில்லை. தேனிலவே இருக்கப்போவதில்லை என்னும் எளிய காரணத்தினால் தேனிலவு ஒருபோதும் ஓய்ந்தும் போகாது. கடவுளுடன் சேர்ந்து வாழப் போவதே இல்லை என்னும் ஒரே காரணத்தினால் அவரை நீங்கள் தொடர்ந்து நம்பிக்கொண்டே போக முடிகிறது. இப்போது நீங்கள் தனியாக இருக்கிறீர்கள்: இப்போது உரையாடல் கிடையாது. ஒற்றையில் புலம்புவதுதான்.

எல்லா மனித உறவுகளும் தோற்கின்றன. காரணம், மற்றவர் அங்கிருக்கிறார். அவருடன் நீங்கள் மோதிக்கொள்ளத் தொடங்குகிறீர்கள். ஒருவரை ஒருவர் ஆதிக்கம் செய்கிறீர்கள். ஒருவரிடம் ஒருவர் பொறாமை கொள்கிறீர்கள். ஒருவரை ஒருவர் உடைமை கொள்கிறீர்கள். ஒருவர் மற்றவரை இழந்துவிடுவோமோ என்று பயப்படுகிறீர்கள். பின் ஒருநாள் இழப்பதற்கு ஒன்றுமில்லை. உங்களைப் போலவே மற்றவரும் வெறுமையாகத்தான் இருக்கிறா என காண்கிறீர்கள். ஒரு கனவு சிதைகிறது. பின் இன்னொரு கனவு....

மத கனவின் மகத்துவமே இங்குதான் உள்ளது: நீங்கள் விடாமல் கனவுகாண முடியும், அது சிதைவதென்பதே கிடையாது. கடவுளுடனான உறவு ஒருநாளும் கலைந்துபோக முடியாது. அது அசாத்தியம். ஏனென்றால் நீங்கள் தனியே தானே இருக்கிறீர்கள்? செபம் செய்யும்போது உண்மையில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? உங்களுடனேயே பேசிக்கொள்கிறீர்கள்! இது இருட்டுக்குள் சீக்கியடிப்பதைப் போன்றது. அதை கவனிப்பதற்கு அங்கு யாருமிருப்பதில்லை.

நீங்கள் ஏதாவது ஒரு உறவுமுறை கொள்ள முடிவதற்கு கடவுள் ஒரு ஆள் அல்ல. குறிப்பிட்டு நீங்கள் பேசுவதற்கும், எதிர்பார்த்து ஏங்குவதற்கும் கடவுள் என்று ஒருவர் இல்லை. ஆனால் உங்கள் நிராசைகள் அனைத்தும், தோற்றுப்போன உங்கள் உறவுகள் அனைத்தும்; அடுத்தவரிடம் ஆசைப்படும் மொத்தக் கருத்தையுமே தூக்கிப்போட்டு விடுவதே உத்தமம் என்னும் உண்மையை உணரும் அளவுக்கு உங்களை உஷாரானவர்களாக்கி இருக்கவில்லை. (எனவே) நீங்கள் ஒருபோதும் அடையப்போகாத ஒன்றுக்கு ஆசைப்பட இப்போது முயல்கிறீர்கள். இதில் ஒரு நல்ல அம்சம் உள்ளது: ஜென்ம ஜென்மத்துக்கும் இதை நீங்கள் நம்பியபடியே போக முடியும். இதற்கு ஒரு முடிவே வரப்போவதில்லை. இந்தப் பயணம் முடிவற்றது. இதில் மற்றவர் இல்லவே இல்லை. இப்போது நீங்கள் முற்றிலும் உங்கள் கனவுகளில் வாழ்கிறீர்கள். முன்பும் நீங்கள் கனவுகளில் தான் வாழ்ந்து வந்தீர்கள். ஆனால் அடுத்தவர் என்று ஒருவர் இருந்தார். எனவே அந்த இரண்டு யதார்த்தங்களுக்கும் இடையில் கனவுகள் நொறுங்கிப் போகவே வேண்டி இருந்தது. அவ்வாறே நொறுங்கியும் போயின. ஆனால் இப்போது எதிரில் யாருமில்லை. நீங்கள்மட்டும் தனியராய் இருக்கிறீர்கள். உங்கள் கடவுளை நீங்கள் விரும்பும் வகையில் நீங்கள் உண்டாக்கிக் கொள்ள முடியும்.

இந்தியாவில் மக்கள் கடவுளை வழிபடும் விதங்களைக் கண்டு நமக்கு அவர்கள்மேல் பரிதாபமே வருகிறது. ஒருமுறை நான் ஒரு பெண்ணுடன் தங்கி இருந்தேன். அவள் பெரிய கிருஷ்ண பக்தை. எவ்வளவு பெரிய பக்தை என்றால் தன் கணவனுடன் சேர்ந்து தூங்குவதை அவள் நிறுத்திவிட்டிருந்தாள். இரண்டு பேரை எப்படி நீங்கள் நேசிக்க முடியும்? அது துரோகமாச்சே. தன் உண்மையான கணவன் கிருஷ்ணன் தான் என அவள் நம்பினாள். அவள் கணவன் பாவம்- உண்மையிலேயே மிகவும் பைத்தியம் பிடித்த நிலையில் இருந்தான். அவள் செய்வது தவறு என்று சொல்ல அவனால்

முடியவில்லை. ஏனென்றால் அவனும் அதே கிருஷ்ணபக்தி மரபில் வளர்க்கப்பட்டவன்தான். அவனால் அதைச் சொல்ல முடியவில்லை. இத்தனைக்கும் அவன் ஒரு டாக்டர், மெத்தப் படித்தவன். ஆனால் இந்தியாவில் கல்வியால் மக்கள் மாற்றமடைவதில்லை; எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை. அவர்களின் தளை மிகவும் பழையதும், மிகவும் தொன்மையானதும் மிக ஆழமாக வேர் கொண்டதுமாக இருக்கிறது- ஆனால் கல்வி வெறும் மேல்பரப்பிலேயே இருக்கிறது. படித்த இந்தியர் எவரைச் சுரண்டிப் பார்த்தாலும் அழுகிப்போன முழு இறந்தகாலத்தையும் உள்ளே நீங்கள் காண்பீர்கள். எனவே அறிவு ரீதியாக தன் மனைவிக்கு கிறுக்குப்பிடித்திருக்கிறது. என் அவன் அறிந்திருந்தான். ஆனால் அறிவு, ரீதியாக மட்டுமே; உள்ளுக்குள். அவள் சரியாக இருக்கலாமோ என அவனே பயந்தான். ஏனென்றால் மீராவும் இதே மாதிரிதானே நினைத்துப் பழகினாள்? அவளும் கிருஷ்ணனே தன் உண்மையான கணவன் என்றாள். தன் சொந்தக் கணவனை விட்டுச் சென்றாள்.

குறைந்தது இந்தப் பெண் தன் கணவனை விட்டுச் செல்லவில்லை. தன் கணவனுடன் சேர்ந்து படுப்பதை மட்டுமே நிறுத்திவிட்டாள். வேறு அறையில் வழக்கமாகப் படுத்துறங்கினாள். அதன் கதவை உள்ளுக்குள் தாளிட்டுக் கொள்வாள். கிருஷ்ணனின் சிலையுடன் அவள் படுத்துக்கொள்வாள்.

அவர்கள் வீட்டில் நான் தங்கியிருந்த போது இந்தக் கூத்து முழுவதையும் கவனித்தேன். காலையில் அவள் கிருஷ்ணனைத் துயில்எழுப்பப் பாட்டுப் பாடுவாள். கிருஷ்ணன் உங்களை எழுப்பிவிட வேண்டி இருக்க அப்பெண் கிருஷ்ணனையே எழுப்பிவிட பாடுவாள். பின் கிருஷ்ணன் எழுந்திருப்பான். பின் காலை நடைமுறைகள் முழுவதும் தொடங்கும். அவன் குளிக்க வேண்டும் எனவே குளிக்க வைப்பாள்; காலை உணவு கொள்ள வேண்டும்... முழுநாளையும் கிருஷ்ணனுக்கே அர்ப்பணித்தாள். இத்தனைக்கும் அது ஒரு வெள்ளிச் சிலை மட்டுமே- மனிதர்யாரும் இல்லை! ஆனால் அவள் கிருஷ்ணனுடன் பேசுவது வழக்கம். அவளை நீங்கள் பார்க்க முடிந்திருந்தால் நீங்களே பிரமித்துப் போயிருப்பீர்கள். ஏனென்றால் அவள் ஆனந்தக் கண்ணீர் சொரிவாள். மெய்மறந்த பரவச நிலையில் ஆடுவாள்- அல்லது குறைந்தது வெளியில் இருந்து பார்க்கும்போது அப்படித்தான் இருந்தது.

மேலும் தன் காம உணர்வை எந்த அளவுக்கு அவள் அடக்கி வைத்தாளோ, (ஏனெனில் கணவனுடன் அவள் உடலுறவு வைத்துக்

கொள்ளவில்லை) அந்த அளவுக்கு கிருஷ்ணனிடம் அதிகமதிக பிரேமை கொண்டவளானாள். பின் அவள் இரவில் தன்னுடன் கிருஷ்ணன் உடலுறவு கொள்வதுபோல் கனவு காணத் தொடங்கினாள். ஒருமுறை அவள் கர்ப்பமானது போலக்கூட ஆனாள்- ஆனால் அது அவள் வயிற்றில் உஷ்ண வாய்வு நிரம்பியிருந்ததால்தான்; வேறொன்றுமில்லை.

நான் அவளுடன் பேசியபோது... அது உண்மையாகவே நான் செய்த கொடிய செயல்தான். ஆனால் நான் கொடியவன்தான்- கொடியவனாகவே இருக்க வேண்டி இருக்கிறது. நான் அங்கு 3 நாட்கள் மட்டும் இருக்கவே சென்றிருந்தேன். ஆனால் அவளைத் தன்னுணர்வுக்குக் கொண்டு வருவதற்காக 7 நாட்கள் அங்கு தங்கினேன். இறுதியாய் அவள் உண்மையைப் புரிந்துகொண்டாள்- அவர் ஒரு புத்திசாலிப் பெண்மணி. அந்தச் சிலையை எனக்குப் பரிசாக தந்து சொன்னாள், "இதை என்னிடமிருந்து எடுத்துச் சென்று விடுங்கள். இல்லாவிட்டால் மறுபடியும் இந்த மடமைக்குள் நான் சிக்கிக்கொள்ளக் கூடும். என் சொந்தக் கனவுடன் தான் நான் வாழ்ந்து வருகிறேன் என்பதை என்னால் பார்க்க முடிகிறது. என்னுடன் உறவுகொள்ள கிருஷ்ணனும் வரவில்லை. யாரும் வரவில்லை. எல்லாம் என் கனவுதான். அது முற்றிலும் காமத்தை ஒடுக்கியதன் விளைவுதான். "அவ்வாறே அவனை பள்ளி எழுப்பியதும் குளிப்பாட்டியதும் காலை உணவூட்டியதும், பின் மதிய உணவு, பின் கிருஷ்ணன் மதிய உறக்கம் போடுவான். பின் தேநீர்- எல்லாம் ஒரு நிஜமான ஆளுக்குச் செய்வதுபோலவே நிஜமாகவே அவள் சேவித்துக் கொண்டிருந்த மொத்த அபத்தத்தையும் கைவிட்டாள்.

பல நாட்களாக அந்த சிலை என்னிடம் இருந்தது. பின் அதை முக்தாவுக்கு கொடுத்தேன் என நினைக்கிறேன். இப்போதும் முக்தாவிடம் அது இருக்க வேண்டும். ஆனால் அந்தப் பெண் விடுபட்டாள். தன் மடத்தனமான தனிநபர் நாடகத்தில் இருந்து விடுபட்டாள்.

அது மடத்தனம். அதே மடத்தனம்தான். அதைவிட மோசமானதும்கூட ஏனெனில் நிஜமான ஆளைக் காதலிக்கும்போது குறைந்த பட்சம் ஒரு ஆள் நிசமாகவே எதிரில் இருக்கிறார்- அவர் நல்லவரோ கெட்டவரோ ஏமாறச் செய்பவரோ செய்யாதவரோ- எப்படி இருந்தாலும். ஆனால் இறைவனுக்காக ஏங்கும்போது முற்றிலும் அது அருவத்தில் வாழ்வது மட்டுமே ஆக இருக்கிறது.

நீட்டோ, கடவுளுக்காக ஏங்குவதற்கும் காதலுக்காக ஏங்குவதற்கும் என்ன வேறுபாடு என நீ கேட்கிறாள்.

எந்த வேறுபாடும் இல்லை. ஏக்கம் ஏக்கம்தான். அப்படியானால் நான் என்ன யோசனை கூறுவேன்? ஏக்கத்தின் இயல்பை. ஆசையின் தன்மையைப் புரிந்துகொள்ள முயலுங்கள். ஆசையின் தன்மையை நீங்கள் புரிந்துகொள்ளும்போது அந்தப் புரிதலிலேயே ஆசைப்படுவது மறைகிறது. பின் உங்கள் ஏகாந்தத்தில் நீங்கள் மகிழ ஆரம்பிக்கிறீர்கள். உங்களிடமே நீங்கள் முழு மகிழ்ச்சி அடைபவராக ஆகிறீர்கள். இனி மற்றவர் தேவை இல்லை. மற்றவரைச் சார்வது இல்லை.

அதன்பின் உங்களால் நேசிக்க முடியாது என நான் சொல்லவில்லை. உண்மையில் அதன்பின் தான் உங்களால் நேசிக்கவே முடியும். ஏனெனில் பின் அன்பு என்பது முற்றிலும் வேறுபட்ட தன்மையை, பகிரும் தன்மையைக் கொண்டிருக்கும். அதன்பின் நீங்கள் பிச்சைக்காரராக இருக்கமாட்டீர்கள். மகாராஜாவாக இருப்பீர்கள். ஏதாவதொன்றைப் பெறுவதற்காக அல்ல. உங்களிடம் இருப்பதைத் தருவதற்காகவே காதலிப்பீர்கள்: ஆனந்தத்தால் நீங்கள் பொங்கி வழிவதாலும் அதை மற்றவர்களுடன் நீங்கள் பகிர்ந்துகொள்ள விரும்புவதாலுமே அன்பு செய்வீர்கள். ஆனால் அப்போது அது ஒரு உறவு முறையாகவே இருக்காது.

அதை உறவாடல் என்பேன் நான். உங்களால் உறவாட முடியும். ஆனால் எந்தத் தளையையும் உருவாக்கிக்கொள்ளும் தேவை இருக்காது. எந்த திருமண ஏற்பாட்டுக்கும் அவசியம் இருக்காது. யாருடனும் நீங்கள் உறவாட முடியும். அதே ஆளுடன் உங்கள் வாழ்நாள் முழுதும் நீங்கள் உறவாட முடியும். ஆனால் நாளை என்பது திறந்தே இருக்கிறது. மூடப்பட்டு இல்லை. நாளைக்கும் சேர்த்து இன்றே முடிவு எடுக்க முடியாது. அதை இயல்பாக எடுத்துக் கொள்ள முடியாது. நாளையும் அதே ஆளுடன் பகிர நீங்கள் விரும்பலாம். அந்த ஆள் பகிர விரும்பலாம் அல்லது விரும்பாதிருக்கலாம். இருவரில் ஒருவர் பகிர விரும்பாவிட்டாலும் நீங்கள் ஒருவரிடம் ஒருவர் பிரியாவிடை சொல்லி மிகுந்த நன்றியறிதலுடன் விலக வேண்டியதே. பகிர்ந்த எல்லா இன்பத்துக்காகவும் நடந்த எல்லாக் காரியங்களுக்காகவும் வெளிப்படுத்திய எல்லா விஷயங்களுக்காகவும் நன்றி உள்ளவர்களாகப் பிரிகிறீர்கள். எவ்வித பொருமலோ, புகாரோ, சண்டையோ இல்லாமல் வெறுமனே பாதையில் பிரிகிறீர்கள். "நம்

பாதைகள் இப்போது பிரிகின்றன. மீண்டும் நாம் சந்திக்காமல் போகலாம்" என நீங்கள் அறிகிறீர்கள். எனவே இதயத்தில் ஒரு கீதத்துடனும் உதடுகளில் ஒரு புன்னகையுடனும், தழுவலுடனும் முத்தத்துடனும் நீங்கள் பிரிகிறீர்கள். ஆழ்ந்த நட்புத்தன்மையிலேயே நீங்கள் பிரிகிறீர்கள். அது மணவிலக்கு அல்ல. ஏனெனில் முதற்கண் மணமே நடக்கவில்லை. ஒருவருக்கொருவர் நீங்கள் கட்டுப்பட்டவர் கடமைப்பட்டவர் அல்ல. எனவே ஒருவரிடம் இருந்து ஒருவர் நீங்கள் விட்டு விடுதலையாவதும் இல்லை. எப்போதுமே ஏற்கெனவே நீங்கள் விடுதலையாகவே இருந்தீர்கள். எப்போதும் நீங்கள் தனிநபர்களாகவே இருக்கிறீர்கள்.

உறவாடும் இரண்டு தனிநபர்கள், தனிநபர்களாகவே தொடர்ந்தும் இருக்கிறார்கள். உறவுமுறையில் நுழையும் இரு தனிநபர்கள் தம் தனித்தன்மையை இழந்துவிடுகிறார்கள். அவர்கள் தம்பதி ஆகிறார்கள். தம்பதியாவதோ அசிங்கமான விஷயம். உங்கள் சுதந்திரத்தை நீங்கள் இழந்திருக்கிறீர்கள் என்பதே அதன் பொருள். நீங்கள் இனியும் நீங்களாகவே இல்லை. மற்றவரும் பின் அவராகவே இருப்பதில்லை. இருவரும் தம் சுதந்திரத்தை இழந்துவிட்டார்கள். அதனால் இருவரும் பெற்றது ஏதுமில்லை.

அதனால்தான் சார்த்தர் "மற்றவர் நரகமாயிருக்கிறார்" என்கிறார். ஆனால் இப்பவும் நான் உங்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். அடுத்தவர் அல்ல, அடுத்தவர் மீதான ஆசையே நரகம். ஆசையின் வீணான தன்மையை நீங்கள் புரிந்துகொள்ளும் போது பின் முற்றிலும் வேறுபட்ட ஒரு முறையில் நீங்கள் உறவாடுவீர்கள். ஒரு பண்புரீதி மாற்றம் உங்களில் நிகழ்கிறது. உங்களிடமே நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்பீர்கள். மற்றவரின் வழியாக மகிழ்ச்சியைத் தேட மாட்டீர்கள். நீங்களே பெரு மகிழ்ச்சியுடன் இருப்பதால் அதை யாருடனாவது பகிர விரும்புகிறீர்கள். அதனாலேயே உறவாடுகிறீர்கள்.

அவலத்தில் இருந்து உறவுமுறை தோன்றுகிறது. ஆனந்தத்தில் இருந்து உறவாடல் உதிக்கிறது.

மக்களுடன் நீங்கள் உறவாடத் தொடங்கும் போது இயற்கையுடனும் நீங்கள் உறவாடத் தொடங்குகிறீர்கள். அதுதான் உண்மைச் சமயம். அதாவது இயற்கையுடன் உறவாடுவது. அது கடவுளுக்காக ஏங்குவது அல்ல. இயற்கையை நீங்கள் கடவுள் என அழைக்க முடியும். அதில் எந்தப் பிரச்சனையும் இல்லை. ஆனால் அதை இயற்கை என்றே அழைப்பது நல்லது. ஏனென்றால் அதை

நீங்கள் கடவுள் என அழைத்துவிட்டால் அந்தச் சொல்லுக்குள் பழைய அர்த்தத் தொடர்புகள் யாவும் உள்ளே ஊர்ந்து வருகின்றன. வானத்துக்கு மேலே எங்கோ ஓரிடத்தில் ஒரு தங்க சிம்மாசனத்தில் ஒரு பெரியவர் உட்கார்ந்துகொண்டு உங்களைப் பார்த்தபடி. உங்களையே கவனித்தபடி இருப்பதாக எண்ண ஆரம்பிக்கிறீர்கள். அதிலிருந்து இன்னும் வினோதமான கருத்துகள் கிளம்பி வெளிவருகின்றன.

கார்ல் கஸ்ட்வ் யங் தன் நினைவுக் குறிப்புகளில் நினைவு கூர்கிறார்: அவரது குழந்தைப்பருவம் முழுவதும் அவருக்கு ஒரு எண்ணமே ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. அதாவது மேலே கடவுள் உட்கார்ந்திருக்கிறார். அப்போது சில சமயங்களில் அவர் சிறுநீர் கழித்துவிட்டால்? மலம் கழித்து விட்டால்? அவருடைய அப்பா ஒரு மதகுருவாக இருந்தார். எனவே அவர் தன் அப்பாவிடம் கேட்பது வழக்கம் அப்பா மிகவும் கோபம் கொள்வார். அவர் கூறுவார், "நிறுத்து! ஒருபோதும் இப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்காதே!" எனவே அப்படிப்பட்ட கேள்விகளை அவர் அடக்கி வைக்க வேண்டியதாயிற்று. எந்த அளவுக்கு அடக்கி வைத்தாரோ அந்த அளவுக்கு அவை அதிகமாக அங்கே இருந்தன. அந்த கருத்தால் தொடர்ச்சியாக அவர் ஆட்பட்டிருந்தார். அப்போது என்ன நிகழ்கிறது? அவர் சாப்பிட்டுக்கொண்டு இருப்பார். குடித்துக் கொண்டிருப்பார். அப்போது அவர் தலைக்கு மேல் இருந்துகொண்டு எந்த நேரத்திலும்... பின் கடவுள் சிறுநீர் கழிப்பதாகவும் அது பூமி முழுவதன் மீதும் விழுவதாகவும் அவரது மலம் பூமி முழுவதன் மீதும் விழுவதாகவும் அவர் கனவு காண ஆரம்பித்தார். அவருக்கே குற்ற உணர்வு ஏற்பட்டது. "என்ன நான் இப்படி....?" பாருங்கள்! அவர் மேலே இருப்பதாக நினைத்துக் கொண்டால் இதுதான் நடக்கப்போகிறது- எந்தக் கணத்திலும் நடக்கலாம்!

பின் முட்டாள் தனமான கேள்விகள் எழுகின்றன. முட்டாள் தனமான கருத்திலிருந்து அவை எழுந்தே தீரும்.

கடவுள் என்பது ஒரு ஆள் அல்ல. ஒரு தன்மை- கடவுள் தன்மை- கடவுள் அல்ல. இயற்கை கடவுள். தன்மையால் நிறைந்திருக்கிறது. ஆனந்தமாகவும் நிறைவாகவும் திருப்தியாகவும் இருக்க உங்களால் முடிகிற போது, ஆசைகளைக் குறித்து தியானியுங்கள். ஆசைகளின் வீண்தன்மையைக் காணுங்கள். அப்போது ஆசைகள் மறைகின்றன. நீங்கள் ஆசையின்றி எஞ்சுகிறீர்கள். திடீரென ஒரு பேரமைதி உங்கள்மேல் இறங்குகிறது. அந்த அமைதியில் உங்கள் சுயத்தன்மை

வெடித்து வெளிப்படத் தொடங்குகிறது. அதுவே பரவசம். அந்த பரவசம் அன்பாக ஒளி வீசிகிறது; மக்களை அடைகிறது, மரங்களை அடைகிறது, விலங்குகளை அடைகிறது, மேகங்களையும் விண்மீன்களையும் எட்டுகிறது. இறுதியாக முழுப் பிரபஞ்சத்தையும் அது எட்ட ஆரம்பிக்கிறது. அதுதான் இருத்தலுடன் உறவாடல் என்பது. பின் நீங்கள் கதிரவனின் மறைவைக் காணும்போது அந்த மறைவிலேயே கடவுளைக் காண்பீர்கள்- சிலுவைவில் இறக்கும் இயேசுவையோ குழலூதும் கண்ணனையோ அல்ல. அவையெல்லாம் குழந்தைத்தனமான கருத்துகள். நீங்களோ கடவுள் தன்மையைக் காண்கிறீர்கள்.

அழகான சூரிய அஸ்தமனத்தை எப்போதாவது நீங்கள் முழுசாகப் பார்த்திருக்கிறீர்களா? அதைவிடப் பெரிய கடவுள் தன்மை வேறென்ன இருக்க முடியும்? ஒரு ரோசா மலரை நீங்கள் பார்க்கிறீர்கள்- அதைவிட பெரிய கடவுள் தன்மை வேறென்ன இருக்கமுடியும்? அல்லது காற்றில் அசைந்தாடும் புல்லிதழையே பாருங்கள்... இந்த பச்சை, சிவப்பு பொன்னிறங்களைப் பாருங்கள்! இந்த பிரபஞ்சம் முழுவதுமே மிக நிறைவாக அமையாமல்- சமாதானத்தால்- சந்தோசத்தால்- பரவசத்தால் பொங்கி வழிவதாக இருக்கிறது. நீங்கள் அமைதியாக- சமாதானமாக- சந்தோசமாக இருக்க முடிகிறபோது அதனுடன் உறவாடத் தொடங்குகிறீர்கள். அந்த உறவாடலே சமயம்.

சமயம் என்பது கடவுள்மேல் ஆசைப்படுவதல்ல. கடவுள் தன்மையில் அனுபவப்படுதலே சமயம். கடவுளை எவ்வாறு கண்டு பிடிப்பது என்பதல்ல பிரச்சனை. ஆசையைக் கைவிடுவது எவ்வாறு என்பதே கேள்வி. பின்வருமாறு நினைவில் கொள்ள வேண்டும். மிக அழுத்தம்திருத்தமாக நினைவில் கொள்ள வேண்டும். கடவுளை நீங்கள் தேடவும் துழாவவும் தொடங்கினால் நீங்கள் ஒருபோதும் மாற மாட்டீர்கள். அதே பழைய ஆளாகவே தொடர்ந்தும் இருப்பீர்கள். ஆசையின் இயல்பைப் புரிந்து கொள்வதற்கு நீங்கள் முயற்சிசெய்யத் தொடங்கினால் ஒரு அடிப்படையான புரட்சியினூடாகச் சென்று சேர்வீர்கள். ஏனெனில் கொஞ்சமாகிலும் புத்தி உள்ளவன் ஆசையின் முற்றான வீண்தன்மையை அது எங்குமே கொண்டு சேர்ப்பதில்லை என்பதைக் கண்டே தீர வேண்டும். உங்கள் ஜீவனிலிருந்து ஆசையானது மறைகிற அக்கணத்திலேயே நீங்கள் வந்தடைந்து விடுகிறீர்கள்.

நீங்கள் எப்போதுமே அவ்விடத்தில் தான் இருக்கிறீர்கள். ஆசை தான் உங்களை அலைக்கழிக்கிறது. வழிதவற வைக்கிறது.

சிலசமயங்களில் ஆசை பணத்துக்காக, சில சமயங்களில் கடவுளின்மீது ஆசை. சிலசமயம் அதிகாரத்தின் மீது கவுரவத்தின் மீதும் ஆசை, சிலசமயம் வானகத்தின் மீது, சொர்க்கத்தின்மீது ஆசை ஆனால் எவ்வித ஆசையும் உங்கள் இயற்கைத் தன்மையில் இருந்து உங்களை பிறழவைக்கப் போதுமானதாகும். ஆசை இல்லாவிட்டால் நீங்கள் எங்கே போகமுடியும்? எல்லா ஆசைகளும் உங்களிடமிருந்து உங்களைத் தூர எடுத்துச் செல்கின்றன. ஆசை எதுவும் இல்லாதபோது உங்களின் ஜீவனில் சுயத்தில் நீங்கள் மையங்கொண்டு மாத்திரம் இருக்கிறீர்கள். அந்த மையங்கொண்ட நிலையே தான் ஆனந்தம், பரவசம், சமாதி, நிர்வாணம்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஏன் மக்கள் ஓயாமல் உங்கள்மேல் வெறுப்பைக் கக்குகிறார்கள்? ஏன்?**

**பிரதிபோ,**

இது முற்றிலும் இயல்பானதே. அவர்கள் என்மேல் வெறுப்பைக் கக்காவிட்டால்தான் அது மிகவும் இயல்பற்றதாக இருக்கும்.இது எதிர்பார்க்கக் கூடியதே. இப்படித்தான் நடக்கும். இப்படித்தான் மக்கள் எப்போதும் நடந்திருக்கிறார்கள். அவர்களைக் குறித்து முன்னறிவிப்பது மிக எளிது, இயந்திரங்களைப் போலவே அவர்கள் இயங்குகிறார்கள். ஒரே மாதிரியாகவே அவர்கள் செயல்பட்டுக் கொண்டு போகிறார்கள். அவர்களின் உணர்வுநிலை மாறியிருக்கவே இல்லை. அவர்கள் கிறித்தவராயினும், இந்துக் களாயினும் முகமதியராயினும் சமணராயினும் பவுத்தராயினும், இவையெல்லாம் வெறும் வார்த்தைகளே. அடியாழத்தில் அவர்கள் எப்போதும் போலவே உணர்வற்றவராகவே இருக்கிறார்கள். அவர்கள் எந்தத் தத்துவத்தை நம்புவதாயினும் அதனால் அவர்களில் பெரிய வேறுபாடு காணப்படுவதில்லை- அது ஒரு நம்பிக்கை மட்டும்தான். ஒரு வசதி- ஒரு சௌகரியம்- ஒரு ஆறுதல்- ஒரு தற்சமாதானம் அவ்வளவு தான்; ஆனால் முழுமையான மாறுதல் அல்ல. எந்த முழுமையான மாற்றத்தையும் அவர்கள் விரும்புவ தில்லை. முழுமையான மாற்றத்துக்கு அவர்கள் பயப்படுகிறார்கள். எனவே தன்னில் முழுமையான மாற்றம் சாத்தியமாகியிருக்கிற ஒரு மனிதர் வரும் போதெல்லாம் அவர்கள் மிகவும் பகைமையான ஒரு முறையிலேயே நடந்து கொள்வது இயல்பே.

யோக்கா கூறுகிறார்:

> **சில மனிதர்கள் ஸென் மீது வெறுப்பைக் கக்குகிறார்கள் அல்லது அதை கேள்விக்குள்ளாக்குகிறார்கள். அவர்கள் நெருப்புடன் விளையாடுகிறார்கள். வானத்தை எரித்துவிட வீணே முயல்கிறார்கள். ஸென்னின் உண்மையான சீடன் அவர்கள் சொல்வதை தேனினும் இனிய சொற்களைப் போல் கேட்டுக் கொள்ள வேண்டும். இருப்பினும் மனமற்ற பிரதேசத்துக்குள் அவன் நுழைகையில் அவற்றின் இனிமையையும் மறந்துவிடுகிறான்.**
>
> **புண்படுத்தும் சொற்களை, நன்மைத்தனமுள்ள செயல் களாகவே நான் மதிக்கிறேன். என்னைப் புண்படுத்துவோரை என் சிறந்த ஆசான்களாக நடத்துகிறேன். ஏனெனில் என்னை இழிவுபடுத்துபவனுக்கு ஆதரவாகவோ எதிராகவோ நான் எதுவும் உணர்வதில்லை.**
>
> **சகிப்புத்தன்மையின் இரண்டு ஆற்றல்களை, பிறப்பின்மை பற்றிய புரிதலை, சுயத்தை, நிர்வாணத்தை நான் விளக்கத் தேவை இல்லை.**
>
> **கங்கையில் இருக்கும் மணல்போல் எண்ணற்றவர்களான புத்தர்கள் அனைவரும் இந்த உண்மைக்குச் சாட்சிகளா யிருக்கிறார்கள்.**

உங்களை நீங்கள் அறிந்துகொண்டதும் எதுவுமே உங்களைத் தொல்லைப்படுத்துவதில்லை; எந்த அவமதிப்பும் உங்களை அவமதிக்க முடியாது. என்மேல் வெறுப்பைக் கக்கும் எல்லோரும் தம் சொந்த விரல்களையே சுட்டுக் கொள்வார்கள். அவர்கள் துன்புறுவார்கள். ஏனெனில் அவர்கள் செய்கிறதும் சொல்கிறதும் முற்றிலும் உண்மையற்றதாகும். ஆனால் அவர்களிடமிருந்து நாம் உண்மையை எதிர்பார்க்க முடியாது- ஏனெனில் உண்மை என்றால் என்ன என்று அவர்களுக்குத் தெரியாது.

ஆனால் பிரதிபோ, அவர்களைக் குறித்து நீ வருத்தம் அடையத் தேவையில்லை. அவர்கள் பொய் கூறுகிறார்கள். எல்லோருமே பொய்தான் கூறுகிறார்கள்- ஆனால் யாருமே அதை கவனிப்பதில்லை ஆகையால் அதைப் பொருட்படுத்தத் தேவையில்லை. மேலும் என்னைப் போன்ற மனிதன் தண்டிக்கப்பட வேண்டியவன் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நற்குணத்துக்கு அதுவே தண்டனையாக இருக்கிறது! நற்குணச் செயல்கள் ஒருபோதும் தண்டிக்கப்படாமல் போகாது. அல்லாவிட்டால் ஏன்

ஏசு சிலுவையில் கொல்லப்பட்டார்? ஏன் சாக்ரடீசுக்கு விஷம் கொடுத்தார்கள்? ஏன் மன்சூர் படுகொலை செய்யப்பட்டார்? நற்குணச் செயல்கள் ஒருபோதும் தண்டிக்கப்படாமல் போகாது. ஏன்? இதற்கான ஒரே காரணம், சாக்ரடீசைப் போன்ற மனிதர், பொய்களில் வேரூன்றிய சமுதாயத்துக்கு அபாயகரமானவராக இருக்கிறார். உண்மையான மனிதர். பொய்களில் வாழ்ந்து கொண்டிருக்கும் அனைவருக்கும் ஆபத்தானவராக இருக்கிறார். குருடர்களின் மத்தியில் கண்ணொளியுடன் வாழும் மனிதனை சகித்துக்கொள்ள முடியாது. ஏனெனில் கண்ணுள்ள இந்த மனிதன். கண்ணில்லாத மற்ற மனிதர்களை அவர்கள் குருடர்கள் என உணரச் செய்கிறான். அவன் இல்லாவிட்டால், அவர்கள் தாம் குருடர்கள் என ஒருபோதும் உணராதிருக்க முடியும். இப்போது அவனுடைய இருப்பு அவர்களை உறுத்துகிறது. அவனது பிரசன்னமே, தமக்கு ஏதோ கோளாறு என்பதை அவர்களுக்குக் காட்டுகிறது. மேலும் அவர்கள் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள். அப்படி இருக்க கோடிக்கணக்கான மக்கள் எப்படி கோளாறாக இருக்க முடியும்? எனவே இந்த மனிதன்தான் கோளாறுடையவனாக இருக்க வேண்டும். பெருங்கூட்டங்கள் தவறாக இருக்கமுடியாது. கும்பல்கள் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டி இருக்கிறது.

தன்னை ஏளனம் செய்வது, எள்ளி நகையாடுவது என்பது அவர்களின் தற்காப்புக்காகத்தானே தவிர வேறில்லை. ஆனால் அது நல்ல அறிகுறிதான்- அதாவது நான் இங்கு இருக்கிறேன் என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள் என்ற அளவில் அது நல்ல அறிகுறிதான். அவர்களுக்கும் அவர்களின் சமுதாயத்துக்கும் அவர்களின் சாத்திரங்களுக்கும் அவர்களின் மனங்களுக்கும் அவர்களின் தத்துவங்களுக்கும் சித்தாந்தங்களுக்கும் நான் ஒரு ஆபத்தாயிருக்கிறேன் என்பதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள். இப்போது அவர்கள், மக்கள் என்னிடம் வராதபடி திசைதிருப்ப, மக்கள் என்னை அடையாதபடி தடுத்து நிறுத்த சாத்தியமான ஒவ்வொரு வழியையும் கண்டுபிடிப்பார்கள். தம்மால் முடிந்ததை எல்லாம் அவர்கள் செய்வார்கள்.

ஆனால் சத்தியத்தைச் சிலுவையில் அறைந்தாலும் அது வெற்றியடைகிறது. பொய்களுக்கோ கிரீடமே சூட்டினாலும் அவை தோற்றே தீரும். இதுவே அறுதியான நியதி. இதுவே இருத்தலின் நிரந்தர விதி என்கிறார் புத்தர். எனவே அவர்கள் தாம் விரும்புவதை எல்லாம் செய்யட்டும்.

பிரதீபோ, அவர்கள் சொல்வதைக் குறித்து விசனப்படாதே. உண்மையில் அவர்கள் என்னை கவனிக்க ஆரம்பித்திருக்கிறார்கள் என்பதில் மகிழ்ச்சி கொள். அவர்கள் என்னைப் புறக்கணித்திருந்தால் அதுதான் மோசமான காரியமாக இருக்கமுடியும்.

கொஞ்சம் சிந்தித்துப்பார். அவர்கள் இயேசுவைப் புறக்கணித்திருந்தால், அவர் இருந்ததையே தெரியாததுபோல் நடந்துகொண்டிருந்தால் அவர்தானே செத்திருப்பார். அவரைச் சிலுவையில் அறைய தேவை இருந்திருக்காது. கொஞ்சம் அதிக ஆண்டுகள் அவர் உயிர்வாழ்ந்திருக்கலாம். ஆனால் எப்படியும் அவர் சாகப் போகிறவர்தான். அவரை அவர்கள் புறக்கணித்திருந்தால் கிறிஸ்தவ மதமே இன்று இருந்திருக்காது? இயேசுவை அவர்களால் புறக்கணிக்க முடியாததால்தான் கிறிஸ்தவ மதம் நிலவுகிறது.

சாக்ரடீசை அவர்கள் புறக்கணித்திருந்தால் சாக்ரடீசின் பெயரைக் கூட நீங்கள் கேள்விப்பட்டிருக்கப் போவதில்லை. இப்போதோ அவரைக் கேவலப்படுத்தியவர்கள் யார். இந்த அழகிய மனிதரைக் கொல்லக் கூடியிருந்தவர்கள் யார் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் சாக்ரடீஸ் சாகாவரம் பெற்றுவிட்டார். அவரது செய்தி அமரத்துவம் பெற்றுவிட்டது. இன்றைக்கும் அவரது செய்தி எதிரொலிக்கிறது. எங்கெல்லாம் மனிதர் உண்மையைத் தேடுவாரோ அவரெல்லாம் சாக்ரடீசின்மீது மகத்தான மதிப்பு கொண்டே இருப்பார். உண்மையான சாதகரின் இதயத்தை சாக்ரடீஸ் ஊடுருவுவதை எந்த நாடோ இனமோ தடுக்க முடியாது. அவரை அவர்கள் புறக்கணித்திருந்தால்- அவர்கள் அவருக்கு விஷம்கொடுத்த போதே அவர் தள்ளாத வயதில் இருந்தவர்- மேற்கொண்டு அதிகபட்சம் ஐந்து, பத்து ஆண்டுகளுக்குத்தான் அவர் உயிர் பிழைத்திருக்க முடிந்திருக்கும்.

அந்த ஐந்து, பத்து ஆண்டுகளில் அவர் என்ன குற்றம் இழைத்துவிட முடியும்? ஆனால் அவர்களால் அவரை புறக்கணித்தும் - சகித்துக் கொள்ள முடியவில்லை. அப்படி அவர்கள் மிகவும் பகைமை கொண்டது நல்லதற்கே. எந்த ஆற்றலும் இல்லாத அந்த ஒற்றை மனிதரைப் பற்றி அவர்கள் அளவுக்குமீறி அலட்டிக் கொண்டதால்தான்; 25 நூற்றாண்டுகள் கடந்தும், ஆற்றல்மிக்க ஆயிரக் கணக்கானவர்கள் பிறந்திருந்தும்; சத்தியத்தைத் தேடுவோரின் மேல் சாக்ரடீசுக்கு இருக்கிற ஆற்றல் (அவர்களில்) வேறு யாருக்கும் இல்லை.

புத்தரின் விஷயத்திலும் இதுவே உண்மை: அவரது இருப்பை அவர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவரைக் கொல்ல பல தடவைகள் முயற்சிகள் நடந்தன. அவரை அவர்களால் கொல்ல முடியவில்லை என்பது வேறு விஷயம். ஆனால் தம்மால் முடிந்தவரை அவர்கள் முயலவே செய்தார்கள். இப்போது அந்த ஆட்கள் யார் என யாருக்கும் தெரியாது. எங்கெங்கும் நீங்கள் காண்கிற கூட்டத்தை, கும்பலைச் சேர்ந்த மனிதர்களாகவே அவர்கள் இருந்திருக்க வேண்டும். ஆனால் மனிதப் பிரக்ஞையின் வரலாறு முழுவதிலும் மின்னும் ஒப்பற்ற நட்சத்திரமாக புத்தர் ஆனார். அவரைப்போல் பிரகாசமாக யாரும் ஒளிர்வதில்லை. அவரை அவர்கள் புறக்கணித்திருந்தால் அவரை நாம் தவறவிட்டிருப்போம். மகத்தான மதிப்புக்குரிய ஒன்றை நாம் இழந்துவிட்டிருப்போம்.

எனவே பிரதீபோ, மக்கள் என்னைக் குறித்து என்ன சொல்கிறார்கள் என்பதைப்பற்றி வருத்தம் கொள்ளாதே. என்மேல் அவர்கள் கவனம் செலுத்துபவர்களாக ஆகியிருப்பதைக் குறித்து மகிழ்ச்சிகொள். இந்த நாட்டில் மட்டுமல்ல, உலகம் முழுவதிலும்...

இங்கிலாந்தில் இருக்கும் ஒரு ஆயர் (பிஷப்) என் சந்நியாசிகளில் ஒருவருக்கு கடிதம் எழுதியிருக்கிறார். சந்நியாசி ஒரு பாதிரியாக இருக்கிறார். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் தனி குருவாக இருக்கிறார். ஆயர் அவருக்கு எழுதி இருக்கிறார்: "இந்த ஆபத்தான ஆளுடன் நீரும் சம்பந்தப்பட்டிருப்பதாக கேள்விப்படு கிறோம். ஒரு கிறிஸ்தவ மதகுருவுக்கு இது தகுதியல்ல. தயவு செய்து விளக்கம் தரவும். "நமது சந்நியாசி (அவர் பெயர் சின்மயா). ஆயருக்கு அழகான ஒரு பதில் எழுதியுள்ளார். அதில் அவர் சொல்லியிருக்கிறார்: "இந்த மனிதரை கவனிக்கும்போது இயேசு உண்மையாகவே இருந்தார் என்பதில் எனக்கு உறுதி ஏற்படுகிறது. இவரிடம் நெருங்கி வரவரத்தாள், இயேசு என்பது ஒரு கட்டுக்கதை அல்ல என்பதை முதன்முதலாக நான் உணர்ந்து கொண்டேன். "கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் தனிகுரு என்பது ஒரு முக்கியமான ஆள். அவரே.... ஆயர் மிகவும் தடுமாற்றமடைந்திருக்க வேண்டும்- "இந்த ஆளை என்ன செய்வது?" இப்போது கேம்பிரிட்ஜில் அவரது சர்ச்சில் டைனமிக் தியானம் நடத்தப் படுகிறது!

ஜெர்மனியில் இருக்கும் புராட்டஸ்டன்ட் திருச்சபை. ஜெர்மனியில் இருக்கும் தன் எல்லா சர்ச்சுகளுக்கும் ஒரு ஆணையை சுற்றுமடலாக பிறப்பித்திருக்கிறது. அதாவது எந்த சர்ச்சிலும் என்

பெயரைக் குறிப்பிடக்கூடாது. எந்தப் புத்தகங்களையோ, வாசகங்களையோ மேற்கோள் காட்டக்கூடாது. இது, அவை குறிப்பிடப்பட்டு பயன்படுத்தப்பட்டு வந்தன என்பதைத்தான் காட்டுகிறது. இல்லாவிட்டால் அவர்கள் ஏன் அலட்டிக்கொள்ள வேண்டும்? ஒரு விசாரணைக் குழு நியமிக்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் தான் மேற்கு ஜெர்மனி அரசாங்கம் ஒரு பிரசுரத்தை வெளியிட்டது. மக்களை- குறிப்பாக இளையவர்களை எச்சரிக்கும்துண்டுப்பிரசுரம்அது. அது கூறுகிறது: "உங்கள் கடையை, உங்கள் வீட்டை, உங்கள் வேலையை நீங்கள் துறக்கத் தேவையில்லை என்று இந்த மனிதர் கூறினாலும், மக்கள் காந்தம்போல் கவரப்பட்டு தம் வேலைகளை விட்டுப் போகிறார்கள். ஜெர்மனியில் இருந்து நிறையப் பேர் காணாமல் போகிறார்கள். இது சாதாரணப் பிரச்சனை அல்ல. அசாத்தியமான அளவில் வளர்ந்து கொண்டுபோகிறது."

ஒரு அரசாங்கமே கவலைப்படுகிறது- அதுவும் தொலைவில் உள்ள ஒரு அரசாங்கம்.... உலகம் முழுவதும் எனக்கு சார்பாகவும் எதிராகவும் கருத்தரங்குகள் நடத்தப்படுகின்றன. நான் அறையை விட்டுக்கூட வெளியே வருவதில்லை. ஆனால் தன் அறைக்குள்ளேயே வாழ்கிற, ஒருபோதும் வெளியே போகாத ஒரு மனிதனைக்கூட அவர்களால் புறக்கணிக்க முடியவில்லை. தோட்டத்தில் உலவுவதைக் கூட நான் நிறுத்திவிட்டேன்- அது யாருக்காகவது பிடிக்காமல் போகலாம் என்று! ஆனால் இது- ஒருவகையில்- ஒரு நல்ல அறிகுறிதான்.

இயேசு அவர் வாழ்ந்த ஒரு சிறு வட்டாரத்துக்குள் மட்டுமே விமர்சிக்கப்பட்டார். புத்தர் தாம் சுற்றிய சிறு மாகாணத்துக்குள் (பீகார்) மட்டுமே விமர்சிக்கப்பட்டார். அவரது நடமாட்டத் திலிருந்து அந்த மாகாணத்துக்கு அந்தப் பெயர் வந்தது- பீகார் என்றால் 'புத்தர் நடமாடிய இடம்' என்று பொருள். ஆக அந்த சிறு மாகாணத்துக்குள்தான் அவர் விமர்சிக்கப்பட்டார். உலகம் முழுவதாலும் விமர்சிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் முதல் மனிதன் நானே ஆகலாம். இன, தேச, மத பேதமின்றி எல்லோரும் ஒரு விஷயத்தை மட்டும் ஒத்துக்கொள்கிறார்கள்- அதாவது "இந்த மனிதன் ஆபத்தானவன்!" இது உண்மையிலேயே ஒருவரை மகிழ்ச்சி அடையச் செய்வதாகும்! நீங்கள் களிகூற வேண்டும் மகத்தான ஒன்று இதிலிருந்து சம்பவிக்கப் போகிறது. ஒரு சிறிய மாகாணத்தில் மட்டுமே புத்தர் விமர்சிக்கப்பட்டது. அவ்வளவு பெரிய ஆற்றலை உருவாக்கினால், எருசலேமைச் சுற்றியிருந்த சிறுபரப்புக்குள் இயேசு

விமர்சிக்கப்பட்டது. வரலாற்றின் மீது இவ்வளவு பெரிய தாக்கத்தை உருவாக்கியுள்ளதென்றால், பெரிய வாய்ப்பு இருக்கிறது.

உலகம் முழுவதிலும் என்னைக்குறித்து நடக்கும் விமர்சனம் மனிதகுலம் முழுவதையுமே பாதிக்கப்போகிறது. மனித குலத்தின் எதிர்காலம் முழுவதையுமே பாதிக்கப்போகிறது. இந்த நிமிஷத்தில் உங்களால் அதை உருவகிக்க முடியாது. ஏனெனில் மொத்த நிகழ்முறையின் பிரசவ வேதனையில் இப்போது நீங்கள் இருக்கிறீர்கள். இயேசுவைப் பின்பற்றியவர்கள் ஒருபோதும் நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்கள்... அவர் சிலுவையில் அறையப்பட்டதும் அவர்கள் தப்பிஓடி விட்டார்கள். மேலும் நிறையச் சீடர்களும் இருக்கவில்லை. 12 சீடர்கள்தான் இருந்தார்கள். அவரிடம் ஆழமான ஈடுபாடு கொண்டிருந்தவர்கள் ஒரு நூறு பேருக்கு மேல் இருக்கமாட்டார்கள். ஏதாவது ஒரு வகையில் அவரோடு தொடர்புடையவராக இருந்தவர்கள் மொத்தமாக ஒரு ஆயிரம் பேருக்குமேல் இருந்திருக்க மாட்டார்கள். எல்லோருமே அவருக்கு எதிராக இருந்தார்கள். இந்த தச்சனின் மகன், மிகவும் கேவலமான முறையில், இருபுறமும் ஒரு திருடன் இருக்க அவர்கள் மத்தியில் சாதாரண குற்றவாளியைப் போல சிலுவையில் இறந்த இவர், வரலாற்றின்மேல் மாபெரும் செல்வாக்குச் செலுத்துவார். வரலாறே அவர்பெயரால் பிரிக்கப்படும், அவரது பெயரே ஒரு எல்லைக்கோடாக ஆகும் (கி.மு., கி.பி) என யார்தான் அன்று நினைத்துப் பார்த்திருக்க முடியும்? யாரும் அன்று அதை கருதியிருக்கவும் முடியாது. அதற்குச் சாத்தியமே இல்லை.

இப்போது நிகழ்ந்து வருவதன் முக்கியத்தை உங்களால சரிவர கருத முடியாது. ஆனால் என்னால் முடிகிறது. இந்த விஷயங்கள் எல்லாம் நல்ல தகவல்களே, வருந்தாதே பிரதீபோ. உன் வழியிலேயே போய்க் கொண்டிரு. உன் சுயத்திலேயே வாழ்ந்து கொண்டிரு. உன் தியானத்திலேயே உன் கொண்டாட்டத்திலேயே இருந்துகொண்டிரு. இதுவே உங்களுக்கு நான் விடுக்கும் ஒரே நற்செய்தி: வாழ்க்கையைக் கொண்டாடுங்கள், வாழ்வில் களி கூறுங்கள். மற்றவர்கள் சொல்வதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அது அவர்களின் பிரச்சனை:

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சிலசமயங்களில் நான் முட்டாளா அல்லது பைத்தியம்தானா**

**என்பது எனக்கே தெரியவில்லை. முட்டாள்தனத்துக்கும் பைத்தியக்காரத்தனத்துக்கும் என்ன வேறுபாடு?**

**பிரேம் ரக்விபோ,**

**நீ** முட்டாளாயிருக்க முடியாது. ஏனென்றால் முட்டாள் மனிதனால் இப்படிப்பட்ட கேள்வியைக் கேட்க முடியாது. முட்டாள் இத்தகைய கேள்வியை ஒருபோதும் கேட்பதில்லை. முட்டாளுக்கு தெரிந்து கொள்ளும் ஆர்வம், விசாரம் இருக்கிறதில்லை. அவன் வாழ்வதில்லை, பிழைக்கிறான்.

"முட்டாள்தனத்துக்கும் பைத்தியக்காரத்தனத்துக்கும் என்ன வேறுபாடு?" என்னும் கேள்வி உன்னில் எழுகிறது என்றால் அது புத்திசாலித்தனத்தின் தெளிவான அறிகுறியாகவே இருக்கிறது.

நிச்சயமாக நீ பைத்தியமாயிருக்கவும் முடியாது. ஏனெனில் பைத்தியக்காரன் ஒருபோதும் தான் ஒரு பைத்தியம் என எண்ணுவதில்லை. பைத்தியத்தின் சிறப்புக் குணங்களில் ஒன்று இது: அதாவது பைத்தியம் ஒருபோதும் தன்னை பைத்தியம் என நினைப்பதில்லை. தன்னைத்தவிர உலகம் முழுவதும் பைத்தியம் என்றே நினைக்கிறான். "நான் பைத்தியமா?" என ஒரு பைத்தியன் விசாரிக்க கேள்வி கேட்கத் தொடங்குகிற கணத்திலேயே. அது ஒரு நல்ல அடையாளமாயிருக்கிறது. கொஞ்சம் தெளிவு நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அவன் தன்னுணர்வுக்குத் திரும்பிக் கொண்டிருக் கிறான் என்பதை இது காட்டுகிறது. "நான் பைத்தியம்" என அறிவதே பைத்தியத்தில் இருந்து வழிபடுவதாகும்.

எந்தப் பைத்தியர்மனைக்கும் போய் அங்குள்ளவர்களைக் கேளுங்கள்: தாம் பைத்தியர் என அவர்கள் எண்ணுவதில்லை.

தன் நண்பர்களில் ஒருவனுக்கு மறை கழண்டு ஒரு பைத்தியர் விடுதியில் வைக்கப்பட்டிருந்ததை கலீல் கிப்ரான் நினைவுகூர்கிறார். அவனை கிப்ரான் பார்க்கப் போனார். அவன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து தனக்குத் தானே சந்தோசமாயிருந்தான். ஒரு பாட்டுப் பாடிக் கொண்டிருந்தான். அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தான். கிப்ரான் அவன் அருகில் உட்கார்ந்து அவனிடம் சொன்னார், "இந்த விடுதியின் சுவர்களுக்குள் நீ வைக்கப்பட்டிருப்பதைக் குறித்து நீ வருந்திக் கொண்டிருக்க வேண்டும்."

அந்த மனிதன் சொன்னான், "என்ன பேசுகிறாய் நீ? நான் வருந்துவதா? கவலைப்படுவதா? நான் ஏன் வருத்தமும் கவலையும் கொள்ள வேண்டும்? உண்மையில் நான் அதிக மகிழ்ச்சியாக

இருக்கிறேன். இந்த சுவர்கள் என்னைச் சுற்றி இல்லை. இந்த உலகின் பைத்தியங்கள் அனைவரையும் சுற்றி இருக்கிறது. மிகச் சிலரான நலமான மனிதர்கள் மட்டுமே இங்கே வாழ்கிறோம். மனநலமற்ற அனைவரையும் வெளியில் விட்டுவிட்டோம். இங்கு நான் வந்து சேர்ந்ததில் இருந்து எவ்வளவோ புத்திசாலியான மனிதர்களை, எவ்வளவோ அற்புதமான மனிதர்களைச் சந்தித்திருக்கிறேன். வெளியிலோ எல்லோரும் அசிங்கமானவர்களாக இருக்கிறார்கள்."

இது இயற்கைதான். ஏனெனில் வெளியில் ஒவ்வொருவரும். "நீ பைத்தியம்" என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். இப்போது யாருமே அவனை பைத்தியம் என்று சொல்வதில்லை. உண்மையில் ஒவ்வொருவரும் மற்ற ஒவ்வொருவரின் பைத்தியத்தன்மையை ரசித்தபடி, ஏற்றுக் கொண்டபடி இருக்கிறார்கள். அது முற்றிலும் சரியானதாக தெரிகிறது. அதில் எந்த பிரச்சனையும் இருப்பதாகத் தெரிவதில்லை.

ரக்விபோ, நீ முட்டாள் இல்லை- முட்டாளாய் இருந்தால் இந்தக் கேள்வியே எழுந்திருக்காது- அல்லது நீ பைத்தியமும் அல்ல. நீ தூங்கிக் கொண்டு மட்டுமே இருக்கிறாய். ஆனால் இதுதான் மிகவும் ஆபத்தானது. ஏனெனில் பைத்தியத்தைக் குணப்படுத்த முடியும். முட்டாளை புத்திசாலியாக்க உதவ முடியும். ஆனால் தூங்கிக்கொண்டும் கனவு கண்டுகொண்டும் இருப்பவன் உண்மையாகவே மோசமான நிலையில் இருக்கிறான். ஏனெனில் அவனை நீங்கள் எழு என்றால் அவனுக்கு கோபம் வருகிறது- அவனுடைய கனவுகளை நீங்கள் கலைக்கிறீர்கள். தன் கனவுகளில் எவ்வளவோ அவன் முதலீடு செய்திருக்கிறான்- அதை நம்பிக் கொண்டிருக்கிறான். மகத்தான கனவுகளை அவன் கண்டுகொண்டு இருக்கும்போது நீங்கள் அவனைத் தொந்தரவு செய்கிறீர்கள்.

ஒரு ஜனாதிபதியிடம் போய் அதிகாரம் என்பது முற்றிலும் ஒரு குழந்தைத்தனமானது. ஆசை என்பது, அவருடைய கனவைத் தகர்ப்பதாகும். ஒரு பணக்காரனிடம் போய் பணம் என்பது, உன் காலித்தன்மையை நீ உணராதிருப்பதற்காக உனக்குள் நீ திணித்துக் கொள்ளும் குப்பையேதவிர வேறில்லை என்றால், உன்மேல் அவன் கோபம் கொள்ளவே செய்யும், மக்கள் தம் வாழ்வில் செய்துவரும் யாவும் பொம்மை விளையாட்டு போன்றதே என அவர்களிடம் கூறினால் உங்கள்மேல் அவர்களுக்கு வெறி மூளவே செய்யும். உங்கள் மேல் பாய்ந்து விடுவார்கள் அவர்கள். அவர்களின் வாழ்வை தூக்கம் என்று அழைக்க உங்களுக்கு என்ன துணிச்சல் இருக்க

வேண்டும்! எனவேதான் புத்தர்களை அவர்களால் மன்னிக்க முடிவதில்லை.

ஆனால் தரக்வியோ, நீ என் சந்நியாசியாக- சீடனாக இருக்கிறாய். எனவே நீ என்னை பொறுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதில் பிரச்சனை இல்லை- நீ தூங்கிக் கொண்டு மட்டுமே இருக்கிறாய். தேவையானது எல்லாம், தெள்ளத்தெளிவான விழிப்பே. உணர்வே, ஜாக்கிரதைத் தன்மையே, கவனிப்புத் தன்மையே அதுவே உன் தூக்கத்திலிருந்து உன்னை வெளிக் கொண்டுவர முடியும். பைத்தியத்தை மற்றவர்களாகக் குணப்படுத்த முடியும்; தூக்கத்தை முடியாது. முட்டாளை திருத்த முடியும். அவனுக்கு உதவ முடியும், ஏனெனில் எந்த குழந்தையும் பிறக்கும்போதே முட்டாளாகப் பிறப்பதில்லை.

ஒவ்வொரு குழந்தையும் தன்னைச் சுற்றி இருக்கும் முட்டாள் மக்களிடமிருந்தே முட்டாள்தனத்தைப் படிக்கிறது. அது பார்த்தொழுகுகிறது, பார்த்து அதே போல் செய்யவே வேண்டி இருக்கிறது. மூடர்களுடன் சேர்ந்து வாழ்வதென்றால் அவர்களைப் போலவே நடக்க வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் நீங்கள் தனியானவராக ஆரம்பிக்கிறீர்கள். ஆனால் கூட்டு மனத்தின் பகுதியாக நீங்கள் இருப்பதையே அவர்கள் விரும்புகிறார்கள். தனிநபர்களை அவர்கள் விரும்புவதில்லை. எனவே ஏதாவது ஒருவகையில் ஒவ்வொருவரும் மடையர் ஆகவேண்டி இருக்கிறது. கத்தோலிக்க மடையனாகவோ புராட்டஸ்டண்டு மடையனாகவோ இந்து மடையனாகவோ முஸ்லீம் மடையனாகவோ- ஆனால் ஏதாவது ஒரு மடையனாக நீ ஆக வேண்டி இருக்கிறது. அல்லது நாத்திக மடையனாக, கம்யூனிஸ்டு மடையனாக ஆகலாம். ஆனால் ஏதாவது ஒருவித மடத்தனத்துக்குள் உன்னை நீ கொண்டுவர, வேண்டி உள்ளது. அப்போதுதான் ஏதாவது ஒரு கும்பலைச் சேர்ந்தவனாக- சார்ந்தவனாக நீ இருக்க முடியும்.

ஆனால் முட்டாள்தனத்துக்கும் பைத்தியக்காரத் தனத்துக்கும் ஒரு தெள்ளத்தெளிவான வேறுபாடு இருக்கிறது. உண்மையாகவே மற்றவர்களை விட அதிகக் கூருணர்வு கொண்டவர்களே பைத்தியக்காரர்கள். அதனால்தான் அவர்கள் பைத்தியம் ஆகிறார்கள். மற்றவர்களைவிட அதிக நுண்ணறிவு கொண்டவர்கள் அவர்கள். அதனால்தான் அவர்கள்பித்தர் ஆகிறார்கள். அவர்களுக்கு அதிக நுண்ணறிவு உள்ளதால் தம்மைச் சுற்றிலும் இருக்கிற மக்கள்திரளின் முட்டாள்தனத்துடன் எல்லாம் சரிக்கட்டிக்கொண்டுபோக

அவர்களால் முடிவதில்லை. அவர்கள் அதிக புத்தியுள்ளவர்கள் ஆதலால் மடத்தனமாகவே நடக்கும்படி தம்மைத்தாமே அவர்களால் கட்டாயப்படுத்த முடிவதில்லை. அவர்கள் தனிநபர்களாக செயல்படத் தொடங்குகிறார்கள். அதிலிருந்து தொந்தரவு உண்டாகிறது. அவர்கள் அதிக மதி உள்ளவர்கள் ஆதலால் தங்கள் மீதும் உங்கள்மீதும் சுமத்தப்படும் அநேக திட்டங்களின் வீண்தன்மையை அவர்களால் பார்க்க முடிகிறது.

பேராசை கொள்ளும்படி நீங்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். இது அபத்தம்- இது உங்களுக்கு ஒருபோதும் எந்த இன்பத்தையும் தராது என்பதை புத்தியுள்ள மனிதன் காணமுடிகிறது. ஆம், பெருமளவான பிற மனிதர்களின் உயிரை அது நாசமாக்குகிறது- அது வன்முறையானது. அசிங்கமானது, அழிவு பயப்பது. அதற்குப் பிரதியாக அது உங்களுக்கு எதையும் வழங்குவதில்லை. பேராசையுள்ள மனிதன் முட்டாள் மனிதன். புத்திசாலி மனிதர் பேராசை கொள்வதில்லை. மற்றவர்களுடன் போட்டி போடும் எந்த பெருவிருப்பமும் இன்றி அவர் சாதாரணமாக வாழ்கிறார். ஏனெனில், ஒவ்வொருவரும் தனிச்சிறப்பானவர் என்பதை அவர் அறிகிறார். போட்டி என்ற கேள்விக்கே இடமில்லை. அவர் ஒருபோதும் ஒப்பிடுவதில்லை. உண்மையிலேயே நுண்ணறிவுடைய மனிதர் ஒருபோதும் தன்னை வேறு எவருடனும் ஒப்பிடமாட்டார். ஒருபோதும் தன்னை மேலென்றோ கீழென்றோ அவர் எண்ணுவதில்லை. அவர் ஒருபோதும் உயர்வு மனப்பான்மையாலோ தாழ்வு மனப்பான்மையாலோ துன்புறுவதில்லை- இவை இரண்டும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களே. "நான் நான்தான் நீங்கள் நீங்கள்தான்" என்பதை அவர் அறிந்திருக்கிறார். எனவே ஒப்பிடும் பிரச்சனையே எழுவதில்லை. ரோஜாவை தாமரையுடன் எப்படி ஒப்பிடமுடியும்? எல்லா ஒப்பீடுகளின் தொடக்கமுமே தவறாக உள்ளன. ஒவ்வொரு தனிநபரும் தனக்கே உரிய தனியழகு கொண்டிருக்கிறார். இவற்றை ஒப்பிடுவது சாத்தியமில்லை.

அப்படியானால் பேராசை கொள்வதன் பொருள் என்ன? உன்னை விட நானே உயர்வாக இருக்கவேண்டும் என்பதே பேராசையின் பொருள். மற்றவர்களை விடவும் நான் உசத்தி என்பதை நான் நிரூபித்தாக வேண்டும். இதற்காக நீ ஏன் புத்தியை இழக்க வேண்டும். மடையன் ஆக வேண்டும். எனவேதான் அரசியல்வாதிகள் சுத்த முட்டாள்களாக இருக்கிறார்கள். வேறுவிதமாக அவர்கள் இருக்க முடியாது. அவர்கள் எல்லோரும் அற்பர்கள், கேடுகெட்ட அற்பர்கள்!

ஒரு புறநகரின் புறச் சாலையில் ஒரு மனிதன் காரோட்டிச் சென்று கொண்டிருந்தான். மனநோய் மருத்துவமனையைக் கடக்கையில் ஒரு சக்கரத்தில் காற்றுப் போய்விட்டது.

அவன் காரிலிருந்து வெளியே வந்தான், பின்புறப் பெட்டியில் இருந்து கருவிகளை எடுத்தான். சக்கரத்தின் நட்டுகளை கழட்டி, அவற்றை அவனுக்குப் பக்கத்திலிருந்து சாலையோர வடிகாலில் (சக்கரத்தின்) குடமூடிக் கிண்ணத்தில் (hubcap) வைத்தான். அப்போது திடீரென இடிஇடித்து கனமழை பெய்யத் தொடங்கியது. சக்கரத்தை மாற்றும் அவசரத்தில் அவன் சக்கர மூடியைத் தட்டிவிட அதிலிருந்து நட்டுகள் வடிகால் நீரில் அடித்துச் செல்லப்பட்டன.

இப்போது அவனுக்கு பிரச்சனையாயிற்று. பத்து நிமிட நேரம் அவன் குழம்பிக் கொண்டிருந்தபின் யாரோ அவனை அழைப்பது காதில் விழுந்தது. நிமிர்ந்து பார்த்தால் அவனுக்கு எதிரே இருந்த உயரமான சுவரின் உச்சியில் ஒரு தலை எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. இந்த ஆள் இதுவரைக்கும் நடந்ததை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவன். அவன் சொன்னான், "ஏன் நீங்கள் மற்ற ஒவ்வொரு சக்கரத்தில் இருந்தும் ஒரு நட்டைக் கழட்டி காற்றுப்போன சக்கரத்தைத் திரும்பவும் பொருத்திக் கொண்டு, பக்கத்திலிருக்கும் பழுதுபார்க்கும் நிலையம் வரை ஓட்டிச் செல்லக்கூடாது? வேண்டியவற்றை அங்கு வைத்து வாங்கிச் செய்து கொள்ளலாமே!"

காரோட்டி மகிழ்ச்சியடைந்தான். அந்த ஆள் சொன்ன ஆலோசனைப் படியே செய்தான். பின் சுவர்மேலிருந்த ஆளைப் பார்த்து "ஏய், அந்த இடத்துக்குள் என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன்னைப் பைத்தியக் காரன் என்று நினைத்து விடுவார்கள்!"

அதற்கு சுவர்மேலிருந்த ஆள் திருப்பிக்கத்தினான், "இங்கிருக்கும் நாங்கள் பைத்தியமாயிருக்கலாம். ஆனால் நாங்கள் முட்டாள் இல்லை!"

இந்த முட்டாள்தனமான உலகத்தில் கூருணர்வுகொண்ட ஆள் பைத்தியமாகியே தீர்வான், அவன் தியானம் எனும் கலையை கற்கவேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் அவன் பைத்தியமாகவே நேரும். தியானம் மட்டுமே அவனுக்கு பைத்தியம் பிடிக்காதபடி காப்பாற்ற முடியும்.

பைத்தியக்காரர்கள் அதிக நுண்ணுணர்வும் எளிதாக பாதிக்கப்படும் தன்மையும் கொண்டவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் புத்திசாலிகள். ஆனால் தம்மைச் சுற்றியிருக்கும்

யதார்த்தத்துடன் சரிக்கட்டிப்போக முடியாதவர்கள் என்னும் விஷயத்தை இப்போது உளவியலாளர்களே உணர்ந்துகொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். சூழல் அதிக பாரமும், இவர்கள் மிகுந்த பலவீனமும் கொண்டிருப்பதால், அதன் எடையில் இவர்கள் சிதைந்து போகிறார்கள். தியானத்தின் மூலமாக அவர்களுக்கு உதவமுடிந்தால் அவர்களின் வீழ்ச்சி எழுச்சியாக மாற முடியும்.

தியானம் மட்டுமே ஒரே வழி. அது இல்லாவிடில் அதிகமதிகம் அறிவுள்ளவர்களாகும் மக்கள். அதிகமதிகம் பைத்தியம் பிடித்தே போவார்கள். அதுதான் நடந்து கொண்டும் இருக்கிறது.

வளராத நாடுகளில் சிலருக்கே பித்துப்பிடிக்கிறது. வளர்ந்த நாடுகளில் நிறையப் பேருக்கு பைத்தியம் பிடிக்கிறது. ஏன்? உதாரணமாக முற்றிலும் வறுமையில்- பட்டினிச்சாவில்- நோயில் இருக்கும் இந்தியாவில், அமெரிக்கா அளவுக்கு அதிக மக்கள் பைத்தியம் ஆவதில்லை. இதைக் குறித்து இந்து ஸ்வாமிகளும் இந்து மஹாத்மாக்களும் பீற்றிக் கொள்கிறார்கள். முக்தானந்தாக்களும் மகரிசி மகேஷ் யோகிகளும் இன்னபிறரும் உலகம் முழுவதும் சுற்றி பெருமை பேசிக்கொண்டே போகிறார்கள்: "இந்தியர்களுக்கு ஏன் பைத்தியம் பிடிப்பதில்லை? ஒரே காரணம் அவர்களின் ஆன்மிகம்தான்" என்கிறார்கள். அப்படியல்ல. உண்மை வேறு, முற்றிலும் வேறு. இந்தியாவுக்கு ஊட்டச்சத்து குறைவாக இருப்பதால் அதிக அறிவு பெற அதனால் முடியவில்லை. எனவேதான் அதிகம் பைத்தியமாக முடியவில்லை.

இந்தியமனம் ஊட்டச்சத்து குறைந்தது. இந்தியாவுக்கு எத்தனை நோபல் பரிசுகள் கிடைத்திருக்கிறது? எவ்வளவு பரந்த நாடு, மொத்த உலகில் ஆறில் ஒரு பங்கு! உலகின் மக்கள்தொகையில் ஆறுபேரில் ஒருவர் இந்தியர். ஆறு நோபல் பரிசுகளில் ஒன்று இந்தியாவுக்கு கிடைக்க வேண்டும். ஆனால் எத்தனை நோபல் பரிசுகள்...? ஏன் இது நிகழவில்லை? ஏன் இந்தியர்களால் பெரும் கண்டுபிடிப்பாளர்களாக முடியவில்லை? ஒரே எளிய காரணம் அவர்களின் உடலுக்கு போதிய ஊட்டமில்லை. புத்தி மலர்வதற்கான அத்தியாவசிய சத்துப்பொருள்கள் அவர்களுக்குப் போதவில்லை. வயிறு காய்ந்தால் அறிவு வளராது. அழகான, பெரிய ரோஜாக்களை நீங்கள் விரும்பினால் வளமான மண் தேவை. போதிய உரம், எரு போடுவது தேவை. எல்லாவித கவனிப்பும் தேவை. ஆனால் இந்தியாவில் மக்கள் சத்துக்குறைந்திருக்கிறார்கள். அவர்கள் உண்ணுவது சத்துக்குறைவானது. அவற்றால் அவர்களின்

மூளைகளுக்கு போதிய உயிர்ச்சத்துகள். போதிய புரதச்சத்துக்கள், போதிய பிற ரசாயனங்கள் ஆகியவற்றை வழங்க முடிவதில்லை. எனவே அவர்களால் செய்ய முடிவதெல்லாம், தலைகீழாக நிற்பதும் யோக ஆசனங்களைப் போடுவதும்தான். அதற்கு எவ்வித நுண்ணறிவும் தேவையில்லை. அவர்களால் செய்ய முடிவதெல்லாம், ஆயிரக்கணக்கான ஆண்டுகள் பழசான சாஸ்திரங்களை கிளிப்பிள்ளைகள் போல் திரும்பக் கூறுவதுதான்; உண்மையில் அவற்றால் எவ்வித பயனுமில்லை.

தான் நியூயார்க்கில் இருந்தபோது முக்தானந்தா மக்களின் கேள்விகளுக்கு பதில் சொன்னார் என எழுதியிருக்கிறார் ஒரு சந்யாசி. எல்லா பதில்களும் முற்றிலும் கீதையிலோ வேறெந்த இந்துமத நூலிலோ எவரும் வெளிப்படையாக பார்க்கக்கிடைக்கிற பதில்கள்தான். அவரிடம் கேட்கப்பட்டதில் ஒரே ஒரு கேள்விக்கு மட்டுமே கீதையில் விடை இல்லை. வேதங்களில் குறிப்பு இல்லை-அவற்றில் இருக்க முடியாது. அந்தக் கேள்வி: "ஸ்ரீரஜனீஷைப் பற்றியும் அவரது தாந்திரிகம்பற்றியும் என்ன நினைக்கிறீர்கள்?" இப்போது அவரது மனம் முற்றிலுமாக நின்றிருக்க வேண்டும்! என் பெயர் ஒரு வாள் போல் செயல்படுகிறது! அவருடைய பதில்: "இந்த விஷயத்தைக் குறித்து நாம் ஆராய்ச்சி செய்து கொண்டு இருக்கிறோம். ஆய்வு முடிந்ததும் பதிலளிப்போம்."

இவர்கள்தான் ஞானமடைந்த மனிதர்கள்! இப்படிப்பட்டவர்கள் தான் உலகம் முழுவதும் திரிந்து மக்களுக்கு தீட்சை கொடுப்பவர்கள். இவர்கள் தந்திரத்தின் மீதும் என்மீதும் ஆய்வு செய்து கொண்டிருக்கிறார்களாம். அவர் பதில் சொல்ல முடியாததற்கான எளிய காரணம். இதற்கான தயாரான பதில் கிடைப்பதில்லை என்பதே. மேலும் என்னைப்பற்றி பார்க்கிறவர்களிடம் எல்லாம் விசாரிக்கிறார். அதுதான் அவர் செய்யும் "ஆராய்ச்சி."

நிர்கிரந்தன் வந்திருக்கிறான். மியாமி கடற்கரையில் நிர்கிரந்தன் நடந்துபோவதை முக்தானந்தா பார்த்தார். அவனைக் கூப்பிட்டார்-மாலையையும் பதக்கத்தையும் அவர் கண்டிருக்க வேண்டும்-தன்னுடன் அவன் தங்கவேண்டும் என விரும்பினார். நிர்கிரந்தா அங்கு 2 நாட்கள் தங்கினான். அப்போது நீளமான விசாரணைகள்., 3 மணிநேர விசாரணைகள் நடந்தன: "ரஜனீஷ் எனக்கெதிராக இதைச் சொல்லியிருக்கிறாரா?" நிர்கிரந்தா சொன்னான், "இவை எல்லாம் பகிரங்கத்தில் சொல்லப்பட்ட விஷயங்கள். இவை எல்லாம் அச்சில் வந்துள்ளன. என்னை நீர் விசாரிக்கத் தேவையில்லை.

புத்தகங்களிலேயே பார்த்துக் கொள்ள முடியும்.'' இதுதான் ஆய்வு நடக்கும் லட்சணம்!

அவர்களுக்கு நுண்ணறிவு கிடையாது. அவர்களுக்கு தைரியம் கூட கிடையாது. ஆனால் அவர்கள் உலகம் முழுவதிடமும், 'இந்தியர்கள் பைத்தியமாவதில்லை, இந்தியர்கள் அதிகம் தற்கொலை செய்வதில்லை, ஏனென்றால் அவர்கள் ஆன்மிகவாதிகள்' என்று சொல்லிக்கொண்டே போவார்கள். இந்திய மக்கள் ஆன்மிக வாதிகளே கிடையாது. அவர்களுக்கு பைத்தியம் பிடிக்காததற்கு காரணம், பைத்தியமாவதற்கு முதலில் உனக்கு புத்தி வேண்டும். எந்த முட்டாளுக்காவது எப்போதாவது பைத்தியம் பிடித்ததாக கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அதற்குச் சாத்தியமே இல்லை. ஒரு மடையனுக்காவது பித்துப்பிடித்தது என எங்காவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா? மடையனுக்கு எப்படி பைத்தியம் பிடிக்கும்? பைத்தியம் பிடிப்பதற்கு, முதலில் உன்னிடம் கொஞ்சம் புத்தி இருக்க வேண்டும். ஒன்றை இழக்க முதலில் அதைப் பெற்றிருக்க வேண்டும்!

மிகவும் புத்தியுள்ள மனிதர்களே தற்கொலை செய்து கொள்ள முடிகிறது. மேலும் இவர்களே சந்நியாசிகள் ஆகவும் முடியும். தற்கொலை செய்ய முடிகிற மனிதர்களே சந்நியாசிகள் ஆகவும் முடிகிறது என்பதற்கான ஒரே காரணம், இந்த வாழ்க்கை பயனற்றது என்பதை அவர்கள் பார்த்திருக்கிறார்கள். இனி அவர்கள் ஒன்று இன்னொரு வாழ்வை- இன்னொரு வாழ்க்கைமுறையை- கண்டு கொள்ள வேண்டி உள்ளது. அல்லது இப்படியே தொடர்ந்திருப்பதில் அர்த்தமில்லை. அத்துடன் அவர்களுக்கு போதிய தைரியமும்- துணிச்சலும்- இருக்கிறது.

இந்த வாழ்க்கை உண்மையாகவே அர்த்தமற்றது- வீண்- என்பதைக் காண அதிக நுண்ணறிவு ஒன்றும் தேவையில்லை.

மர்ஃபி கூறுகிறார்: செருப்பு பொருத்தமாயிருந்தால் பிடித்தமாயில்லை. பிடித்திருந்தாலோ உங்களுக்கு வேண்டிய அளவில் இல்லை. பிடித்தும் இருந்து அளவும் சரியாயிருந்தால் பொருத்தமாயில்லை. உங்களுக்கு பிடித்தும் இருந்து பொருத்தமாகவும் இருந்தால் உங்களால் வாங்க முடிவதில்லை. பிடித்தும் இருந்து பொருத்தமாகவும் இருந்து உங்களால் வாங்கவும் முடிந்தாலோ முதல் தடவை அணிந்ததுமே பிய்ந்துவிடுகிறது.

கொஞ்சம் புத்தி இருந்தாலே, இப்படித்தான் வாழ்க்கை இருக்கிறது என்பதை உங்களால் பார்க்க முடியும்! பின் உங்களுக்கு

துணிச்சல் இருந்தால், ஒன்று, தற்கொலை செய்து கொள்வீர்கள், 'போதும்டா சாமி' என்று கடவுளிடம் சொல்லிவிடுவீர்கள்: அல்லது, உங்கள் ஜீவனை உருமாற்றிக் கொள்வீர்கள்- ஒரு சந்நியாசி ஆவீர்கள்.

பலரும் என்னிடம் கேட்கிறார்கள், "இந்தியர்கள் ஏன் உங்களிடம் வருவதில்லை?" என்று. ஏனெனில் அவர்கள் சமயத்தன்மை உடையவர்கள் இல்லை. அவர்கள் நுண்ணறிவு உடையவர்கள் இல்லை; அவர்களுக்குத் துணிச்சல் இல்லை; இந்த வாழ்க்கை வீண் என்பதைக் காண்பதற்கான புத்தி இன்னும் அவர்களுக்கு வளரவில்லை. வாழ்க்கை வியர்த்தமானது, வாழ்க்கை மாயம், உலகே மாயம் என கிளிப் பிள்ளைகளைப் போல அவர்கள் ஒப்பித்துக்கொண்டே போகலாம். ஆனால் அதெல்லாம் வெறும் பேச்சு, ஆங்கிலேயர்கள் வானிலை பற்றி பேசிக்கொண்டு போவதுபோல் இந்தியர்கள் வறட்டுத் தத்துவம் பேசிக்கொண்டு போவார்கள். ஆங்கிலேயரின் அந்தப் பேச்சுக்கும் எந்தப் பொருளுமில்லை...

ஒரு ஆங்கிலேயன் வெளியூரில் இருந்து குதிரை வண்டியில் திரும்பிக் கொண்டிருந்தான். அங்கு சில நண்பர்களை பார்ப்பதற்காகப் போயிருந்தான். அவனுடைய வண்டியை இழுத்து வந்த அவனுடைய குதிரை திடீரென "ரொம்ப உஷ்ணமாயிருக்கிறது" என்றது.

ஆங்கிலேயனால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை! அங்கு வேறு யாரும் இல்லை. வண்டியில் அவனுடைய நாய்தான் உட்கார்ந்திருந்தது. எனவே அவன் நாயிடம் சொன்னான், "கேட்டியா?" யாரிடமாவது அதைச் சொல்லிவிட வேண்டும்! எனவே நாயிடம் சொன்னான்.

அதற்கு நாய் சொன்னது: "நானும் பலதடவை கேட்டு விட்டேன். ஒவ்வொருவரும் வானிலையைப் பற்றிப் பேசுகிறார்களே ஒழிய அதுகுறித்து யாரும் எதையும் செய்வதில்லை!"

ஆக ஆங்கில நாய்களும் குதிரைகளும் கூட வானிலைப்பற்றிப் பேசுகின்றன. இந்திய நாய்களும் குதிரைகளுமோ தத்துவத்தையும், கடவுளையும் பற்றிப் பேசுகின்றன; கீதையையும் வேதங்களையும் ஓதுகின்றன. ஆனால் அவற்றிடம் கொஞ்சமாவது புத்தியையோ பிரகாசத்தையோ அவற்றின் கண்களில் ஒளியையோ நம்மால் காண முடிவதில்லை. யதார்த்தத்துக்கு வந்த பதில் வினையையும்அவை புரிவதாக நம்மால் காண முடிவதில்லை.

முட்டாளாக இருப்பதைவிட பைத்தியமாக இருப்பது மேல். ஆனால் ரக்விபோ, சாதாரணமாக மக்கள் பைத்தியம் ஆவதில்லை. எந்தக் கணத்திலும் பைத்தியம் பிடிப்பதன் விளிம்பிலேயே இருக்கிறார்கள். தியானத்தை நோக்கி உன் ஆற்றல்களை நீ திருப்பிவிடாவிட்டால் உனக்குப் பைத்தியம் பிடித்தவிடும்.

மேலும் உனக்கும் பைத்தியக்காரர்களுக்கும் இடையிலான வேறுபாடு சிறு அளவு ரீதியானதே என்பதை நினைவில் கொள். நீ 99 டிகிரியில் இருக்கலாம். பைத்தியர்கள் 100 டிகிரி எல்லையை தாண்டி இருக்கிறார்கள். எந்தச் சிறு சம்பவமோ, விபத்தோ உன்னை அந்த ஒரு டிகிரிக்கு தள்ளிவிட முடியும். உன் மனைவி யாருடனாவது ஓடிவிட்டால் போதும், உன் வியாபாரம் நொடித்து விட்டால் போதும், உன் வங்கி திவாலாகிவிட்டால் போதும், அரசாங்கம் தேசியமயமாக்கிவிட்டால் போதும்- எதுவாயினும் ஒரு டிகிரிபோதும்- எந்தக் கணத்திலும் நீ பைத்தியமாக முடியும். ஆனால் முட்டாளாக இருப்பதைவிட பைத்தியமாக இருப்பது மேல் என்பதை நினைவில் கொள்.

ஆனால் பைத்தியமாகவும் தேவையில்லை. ஏன் தியானம் செய்யக்கூடாது? மேலும் நான் எத்தனையோ பைத்தியக்கார விதமான தியானங்களை உருவாக்கியிருக்கிறேன்- எனவே நீங்கள் ஒரே சமயத்தில் பைத்தியங்களாகவும் தியானிகளாகவும் இருக்க முடியும்! மெதுமெதுவாக தியானமே வெல்லும்.

சுஜாதா கேட்டாள், "பகவான், உங்களிடம் கேட்க நான் மூன்று கேள்விகள் வைத்திருக்கிறேன்; குண்டலினி தியானத்தை எப்படி நீங்கள் கண்டுபிடித்தீர்கள்?" இது முதல் கேள்வி, எளிது, சுஜாதா: ஆற்றோரத்தில் சிவப்பு எறும்புகளின் புற்றின்மேல் நின்று தியானித்தபோது கண்டுபிடித்தேன்!

இரண்டாவது: "டைனமிக்?" அது இன்னும் எளிது, சுஜாதா: அதைக் கண்டுபிடிக்காதிருப்பது ஏறக்குறைய அசாத்தியம், இந்திய சாலைகளில் இந்திய கார்களை ஓட்டிச் செல்லும்போது அதைக் கண்டுபிடித்தேன்!

மூன்றாவது: "நாதபிரம்ம தியானத்தை?" ஹூம்!

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**ஏன் நான் உங்களுக்கு பயப்படுகிறேன்?**

**யோகேஷ்.**

**அ**து ஒரு நல்ல அறிகுறி. ஏதோ ஒன்று உருவாகி வருகிறது என்பதே அதன் பொருள். என்னை நீ நெருங்கி வரும்போதுதான் என்னைக் குறித்து நீ பயப்படுகிறாய். அது இயல்பானதே. ஆசானை அடுத்திருப்பது ஒரு வித சாவு அடுத்திருப்பதாகவே ஆகும். முட்டாள்களே பயப்பட மாட்டார்கள். ஏனெனில் நிகழவிருப்பதை அவர்களால் பார்க்க முடியாது; குத்துப் பாறையின் உச்சிக்கு மெதுமெதுவாக உன்னை நான் கூட்டிச்செல்கிறேன். அங்கே நீ வந்து சேர்ந்து, ஒரு சிரிப்பை ரசித்துக் கொண்டிருக்கும்போது உன்னை நான் தள்ளி விடுவேன்!

தன் சங்கத்தில் ஒரு கைவைத்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஒரு ஓய்வுபெற்ற பிரிட்டிஷ் காலனிய தரைப்படை அதிகாரி தன் வீர சாகசங்களில் ஒன்றை ஒரு இளம் படைத் தலைவனிடம் விவரித்துக் கொண்டிருந்தார்.

"அந்த அடர்ந்த காட்டின் வழியாக நான் பதுங்கிப் போய்க் கொண்டிருந்த போது, பையா ஒரு பிரம்மாண்டமான பெரிய புலி திடீரென என் முன் பாய்ந்தது."

"அடக்கடவுளே, சார், அப்புறம் என்ன நடந்தது?"

"அது அங்கே நின்றுகொண்டு உறுமியது.★"

"அடக்கடவுளே, சார், அப்புறம் என்ன நடந்தது?"

"நான் என் கால்சட்டையை அசிங்கமாக்கி விட்டேன்."

"அது மிகவும் கை ஒடிந்த மாதிரி ஆகியிருக்குமே, அப்புறம் என்ன நடந்தது?"

"இல்லை, இல்லை" குழறினார் வயதான கர்னல். "என் கால் சட்டையை (புட்டங்களை) அசிங்கமாக்கிக் கொண்டுவிட்டேன்."

"என்னது?" என்றான் இளம் கேப்டன் வெளிப்படையான அசவுகரியத்துடன் பெரியவரை கவனித்தபடி.

"இல்லை இல்லை. நான் உறுமியதும் என் கால்சட்டையை அசிங்கமாக்கிக் கொண்டு விட்டேன்!"

விளங்கியதா?

OOO

---

★ துப்பாக்கியின் பின்பகுதியில் அடைப்பு ஏற்பட்டு தடைப்பட்டு விட்டது என்று இன்னொரு பொருளும் கொள்ளலாம். (மொ-ர்)

# 8

முதல் கேள்வி:

ஓஷோ,

மூன்றாவது உளவியலை– புத்தர்களின் உளவியலை– உருவாக்க குருட்ஜீப்புக்கு அவுஸ்பென்ஸ்கி என்னும் இன்னொரு தலை தேவைப்பட்டது. ஆனால் நீங்களோ நீங்களாகவே வேலை செய்கிறீர்கள். மனநிலை, அ–மனநிலை இரண்டிலும் உங்களால் இருக்க முடிகிறது. இது எப்படிச் சாத்தியமாகிறது?

பிரேம் சனாதனா.

உலகில் இரண்டுவிதமான ஆசான்கள் இருந்து வந்திருக்கிறார்கள். முதல் விதத்தில் ஆசான் உணர்ந்திருக்கிறதை வெளிப்படுத்த, வியாக்கியானம் செய்ய தத்துவமாக்க, எடுத்துரைக்க எப்போதும் இன்னொருவர் தேவைப்படுகிறார். அதில் குருட்ஜீப் தனியாக இல்லை. அவருக்கு பி.டி. அவுஸ்பென்ஸ்கி தேவைப்பட்டார்- அவுஸ்பென்ஸ்கி இல்லாவிட்டால் அவர் அறியப்பட்டிருக்கவே மாட்டார். ராமகிருஷ்ணரும் இதே விதத்தில் வருகிறார். அவருக்கு ஒரு விவேகானந்தர் தேவைப்பட்டார்- விவேகானந்தர் இல்லாவிட்டால் ராமகிருஷ்ணர் முற்றிலும் மக்களால் கேள்விப்பட்டிராதவராகவே இருந்திருப்பார்.

இன்னும் பல ஆசான்களின் நிலவரமும் இதுவாகத்தான் இருந்திருக்கிறது. இதற்கான எளிய காரணம். அவர்களின் வேலை இதய மையத்துடன் சம்பந்தப்பட்டிருந்தது. இதய மையத்தில் அவர்கள் உறுதிப்பட்டுப் போயிருந்தார்கள். எந்த அளவுக்கெனில், தலை மையத்துக்குப் போய் தம் தலைகளைப் பயன்படுத்துவது

அவர்களுக்கு அசாத்தியமாகி விட்டிருந்தது. தம் தலையைவிட இன்னொருவரின் தலையைப் பயன்படுத்திக் கொள்வது அவர்களுக்கு அதிக சுலபமாகத் தோன்றியது.

ஆனால் இதில் ஒரு சிக்கல் இருந்தது. இதில் உள்ள சாதக அம்சம், ஆசானே ஓயாமல் இரண்டு கோடிகளுக்கும்- மனதில் இருந்து அ-மனத்துக்கும் அ-மனதில் இருந்து மனத்துக்கும் என- ஓடுவதில்லை. அவரது இருத்தலில் எந்த இயக்கமும் இல்லை. அவர் முற்றிலும் உறுதிப்பட்டிருக்கிறார். ஆனால் இதில் ஒரு சிக்கல் இருந்தது. ஊடகமாகப் பயன்படுத்தப்பட்ட ஆள்- அவுஸ்பென்ஸ்கி, விவேகானந்தர் முதலியவர்கள்- தான் விழிப்புணர்வு பெற்றவராக இருக்கவில்லை. அவுஸ்பென்ஸ்கியின் தலையை குருட்ஜீப் பயன்படுத்த முடிந்தது. ஆனால் அவர் விரும்பி இருக்கக்கூடிய அதே முறையில் பயன்படுத்த முடியவில்லை. அவுஸ்பென்ஸ்கியின் சொந்த மனம் குருட்ஜீப்பின் அனுபவத்தில் தன் வண்ணத்தைத் தோய்த்தே தீரும். அவர் தன் சொந்த அபிப்பிராயங்களை, சொந்த தத்துவத்தை, சொந்தப் புரிதலை அதற்குள் கொண்டு வரவே செய்வார். அவருக்குச் சுய அனுபவம் இல்லை. அவர் ஒரு ஊடகம்தான். ஆனால் ஊடகமாய் (மீடியமாய்) இருப்பவர் வெறும் வாகனமாய் மட்டும் இருப்பதில்லை; அவருக்கென்று ஒரு மனம் இருக்கிறது. அந்த மனதின் ஊடாக கடந்து செல்லும் எதுவும் இங்குமங்குமாய் சிறிது மாற்றப்படவே செய்யும்.

குருட்ஜீப்பை அவுஸ்பென்ஸ்கியே உலகத்துக்கு அறிமுகப் படுத்தினார். ஆனால் அவர் தன் சொந்த முறையிலேயே குருட்ஜீப்பை அறிமுகப்படுத்தினார். அவர் என்ன செய்ய முடியும்? அவர் தன்னால் முடிந்தவரை முயன்றார். எந்த ஆசானும் எக்காலத்திலும் தேடிப்பிடிக்க முடிந்த மிகச்சிறந்த வியாக்கியானிகளில் ஒருவராக அவர் இருந்தார் என்றே நான் நினைக்கிறேன்; இருந்தாலும் வியாக்கியானி வியாக்கியானி தான். இருவரும் ஒரே விதமாக இருக்க முடியாது. அதற்குச் சாத்தியமே இல்லை. எனவே முந்தியில்லாவிட்டால பிந்தி அவர்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் பிரிய வேண்டியதே.

அவுஸ்பென்ஸ்கியின் வாழ்வின் கடைசி நாட்களில் அவர் குருட்ஜீப்புக்கு ஏறக்குறைய ஒரு எதிரியாகிவிட்டார். இப்போது குருட்ஜீப்புக்கு புத்தி பேதலித்துவிட்டது. முதலில் அவர் சரியான திசையில் போய்க் கொண்டிருந்தார். ஆனால் பின்னாளைய குருட்ஜீப்போ பாதை மாறிவிட்டார்" என்று அவர் சொல்லத்

தொடங்கினார். குருட்ஜீப்பின் போதனை முழுவதுமே தவறானது என அவரால் சொல்ல முடியவில்லை. ஏனெனில் அவருடைய சொந்த போதனையே குருட்ஜீப்பின் போதனைகளைத்தான் அடிப்படையாக கொண்டிருந்தது. ஆனால் குருட்ஜீப்பை அவர் இரண்டாகப் பிரித்தார். குருட்ஜீப்பின் முதல்பகுதி (அவுஸ்பென்ஸ்கி அவருடன் இருந்த காலத்தது) சரியானது; பிற்பகுதி தவறானது என்றார். உண்மையில் முற்பகுதியின் முதிர்ந்த நிலையே பிற்பகுதி.

ஆனால் ஏன் இது நிகழ்ந்தது? இது நிகழவே செய்யும். ஏனெனில் ஏதாவது ஒரு சமயத்தில் அவுஸ்பென்ஸ்கியின் சொந்த மனம் ஒரு தடையாக மாறவே போகிறது. முதன்முதலாக அவர் குருட்ஜீப்பிடம் வந்தபோது முற்றிலும் அவரிடம் சரணடைந்தார்- சரணடைந்தார் என்றால் அவருடைய ஆளுமையால் கவர்ச்சிக்கப் பட்டார். அறிவுரீதியாக ஈர்க்கப்பட்டார்- ஏனென்றால் அவர் மாபெரும் அறிவுஜீவியாக இருந்தார்- அந்த அறிவார்த்தத்தில் முற்றிலுமாக சரணடைந்தார்; இருத்தலியல் அர்த்தத்தில் அல்ல, இருத்தல் ரீதியாக அவர் சரணடைந்திருந்தார் என்றால் அவர் பயன்பட்டிருக்கமாட்டார். ஏனெனில் குருட்ஜீப்புக்கு தேவைப் பட்டது ஒரு தலை. அவர் ஒரு தலையையே தேடிக் கொண்டிருந்தார். தம் மிக உள்ளார்ந்த மையத்தில் இருந்து அவரிடம் ஈடுபாடு கொண்டிருந்த வேறு அநேக சீடர்கள் அவருக்கு இருந்தார்கள். ஆனால் அவர்களால் அவரை உலகுக்கு விரித்துரைப்பவர்களாக ஆக முடியவில்லை.

அவுஸ்பென்ஸ்கி குருட்ஜீப்பிடம் வந்போதே அவர் உலக அளவில் பிரசித்தமான கணித அறிஞராக, தத்துவராக இருந்தார். அவருடைய சொந்த நூலான "டெர்சியம் ஆர்கனம்" ஏறக்குறைய உலகின் பெருமொழிகள் அனைத்திலும் ஏற்கெனவே மொழிபெயர்க்கப்பட்டிருந்தது. அந்த "டெர்சியம் ஆர்கனம்" என்னும் புத்தகம் உண்மையாகவே மகத்தானதாயிருந்தது. ஞானநிலை பெறாத ஒரு மனிதனிடமிருந்து அது வெளிவந்தது ஏறக்குறைய ஒரு அதிசயமே. அறிவுரீதியாக, வேறு யாரும் ஒருபோதும் சாதிக்க முடியாத ஒன்றை அவரால் சாதித்துவிட முடிந்தது. அவருக்கு ஒன்றும் தெரியாது. அவர் ஒன்றையும் அனுபவித்ததில்லை. ஆயினும் அந்த அறிவுக்கூர்மை, கிரகிப்புத்தன்மை.... அவரது நுண்ணறிவு உண்மையாகவே கூர்மையாக இருந்தது. மனித சமுதாயத்தின் வரலாறு முழுவதிலுமுள்ள உயர்மட்ட அறிவாளிகளின் வரிசையை அவர் சேர்ந்தவராயிருக்கிறார். அவருடன் சரிக்குச் சரி போட்டியிட மிகச்சில போட்டியாளர்களே இருக்கிறார்கள்.

சாக்ரடீஸ் அத்தகைய ஒரு மனிதரைப் பெற்றிருந்தார். அவர்தான் பிளேட்டோ போதனையின் இதயமாக சாக்ரடீஸ் இருந்தார். தலையாக பிளேட்டோ விளங்கினார். சரியாக அதேதான் குருட்ஜீப் விஷயத்திலும் நடந்தது. குருட்ஜீப் இதயமாக இருந்தார். அவுஸ்பென்ஸ்கி தலையாக ஆனார். இந்த 2 பேரில் தேர்ந்தெடுக்கச் சொன்னால் நான் அவுஸ்பென்ஸ்கியையே தேர்ந்தெடுப்பேன். பிளேட்டோவை அல்ல. நம்பவே முடியாத அவளுக்கு மேம்பட்டு இருக்கிறார் அவுஸ்பென்ஸ்கி. தன்னறிவு ஏற்படாமலேயே அவரது உள்ளொளி அவ்வளவு துல்லியமாக இருக்கிறது. இதனால், அனுபவப்பட்டிராத எவரும் அவுஸ்பென்ஸ்கியை ஒரு புத்தராக, கிறிஸ்துவாக எண்ணிவிடலாம். ஒரு புத்தரால் மட்டுமே அதிலுள்ள பிழைகளைக் கண்டுகொள்ள முடியும். வேறெவராலும் முடியாது. அவற்றில் பிழைகள் உள்ளன. ஆனால் சாதாரணமாக புலப்படக் கூடியவை அல்ல.

குருட்ஜீப்பைப்பற்றி புத்தகங்கள் எழுதத்தொடங்கினார் அவர். அவரது மாபெரும் பங்களிப்புகளில் ஒன்றாகிய 'அற்புதத்தைத் தேடி' என்னும் நூலை அவர் எழுதினார். பின் 'நான்காம் வழி'யை எழுதினார். இந்த இரு நூல்களும் குருட்ஜீப்பை உலகுக்கு அறிமுகம் செய்தன. மற்றபடி அவர் முற்றிலும் அனாமதேயமான ஒரு ஆசானாகவே இருந்திருக்கிறார். ஒரு சிலர் அவரை நேரில் தொடர்புகொண்டு பயன்பெற்றிருக்கலாம். ஆனால் அவரை லட்சக்கணக்கானவர்கள் அறியச் செய்தார் அவுஸ்பென்ஸ்கி.

ஆனால் அந்தப் புத்தகங்கள் உலகம் முழுதும் பரவி, ஆயிரக்கணக்கான மக்கள் குருட்ஜீப்பை நோக்கி வரத்தொடங்கியதும் அவுஸ்பென்ஸ்கி மிகவும் அகங்காரம் கொண்டவரானார். இது இயல்பே. ஏனெனில், மொத்தக் காரியத்துக்கும் காரணர் அவரே. உண்மையில் அவர் பின்வருமாறு எண்ணத் தலைப்பட்டார். "நானில்லாவிட்டால் குருட்ஜீப்புக்கு என்ன மதிப்பு?, நானில்லாவிட்டால் யார் இந்த குருட்ஜீப்? அவர் எப்படி இருந்தார்? அவரை நான் சந்தித்தபோது கான்ஸ்டான்டி நோபிளில் இருந்த ஒரு அகதிமுகாமில் சோத்துக்குச் செத்த அகதியாக இருந்தார். அவரைப்பற்றி யாருக்குமே தெரியாது. நானே அவரை உலகப் புகழ் பெறச் செய்தேன். மொத்தப் பெருமையும் என்னையே சாரும்." இந்த எண்ணம் அவர் தலையில் ஏறியதுமே அவரால் தாங்க முடியவில்லை- நுணுக்கமான வழிகளில் இயக்கத்தில் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்தார். ஆயின் குருட்ஜீப்பைப் போன்ற மனிதரை

உங்களால் ஆதிக்கம் செய்ய முடியாது. குருட்ஜீப்பைப் போன்ற மனிதரை உங்களால் அதிகாரம் பண்ண முடியாது. அவர்கள் பிரிய வேண்டியதாயிற்று.

தன் கடைசிகாலத்தில் அவுஸ்பென்ஸ்கி குருட்ஜீப்புக்கு எந்த அளவுக்கு எதிரானவராகிவிட்டார் என்றால், யாரேனும் குருட்ஜீப்பின் பெயரை தன்னிடம் கூறுவதைக்கூட சகிக்க முடியாதவரானார். அவர் முன்னிலையில் குருட்ஜீப்பின் பெயரைக்கூட உச்சரிக்கக் கூடாது. தன் நூல்களிலும் குருட்ஜீப்பின் பெயரை "கு" ("G") என குறுக்கிவிட்டார். முழுப்பெயர் மறைந்து விட்டது. முறிவுக்கு பிறகு "கு" மட்டுமே மிஞ்சியது- யாரோ ஒரு "கு"னா, "குருட்ஜீப் சொன்னார்" இல்லை, "கு" சொன்னார். மேலும் இதை அவர் தெளிவாக- மிகத் தெளிவாகவே- அறிவித்து விட்டார். "நாங்கள் பிரிந்தோம். நான் எந்த சொந்த அமைப்பை வளர்த்தேன்." தன் சொந்த சீடர்களை அவர் சேர்க்கத் தொடங்கினார். அந்த சீடர்கள் குருட்ஜீப்பைப் போய்ப்பார்க்க அனுமதிக்கப்பட வில்லை. அவுஸ்பென்ஸ்கி உயிரோடிருந்தவரை. யாராவது குருட்ஜீப்பை போய்ப் பார்க்க விரும்பினாலோ, அல்லது அவருடைய புத்தகங்களைப் படிக்க விரும்பினால்கூட அவர்கள்மீது மிகவும் சந்தேகப்பட்டார் அவுஸ்பென்ஸ்கி.

இப்படித்தான் நடக்கப் போகிறது என்பதை குருட்ஜீப் அறிந்திருந்தார். இருந்தாலும் வேறு வழி இருக்கவில்லை. ஏதாவது ஒரு தலையைப் பயன்படுத்த வேண்டி இருந்தது. குருட்ஜீப்பின் பணியின் தன்மையால் அவர் இதய ஸ்தானத்தில் ஸ்திரப்பட்டுப் போயிருந்தார். அவரால் தலை ஸ்தானுக்கு போக முடியவில்லை.

ராமகிருஷ்ணரின் நிலையும் இதுதான். விவேகானந்தர் ஒரு சாதாரண அறிவாளி. அவுஸ்பென்ஸ்கியின் திறமைகூட அவருக்கு இல்லை. ஆனால் அவர் ராமகிருஷ்ணரை உலகப்புகழ் பெற்றவராக்கினார். ராமகிருஷ்ணர் மிகவும் முன்னதாகவே இறந்து போனார். எனவேதான் ராமகிருஷ்ணரும் விவேகானந்தரும் பிரியும் நிலை வரவில்லை. இல்லாவிட்டால் அவர்கள் நிச்சயமாக பிரிந்து போயிருப்பார்கள். ஆனால் ராமகிருஷ்ணர் இறந்தார். விவேகானந்தர் அவருடைய முழு பிரதிநிதி- ஏக பிரதிநிதி- ஆகிவிட்டார். எல்லா சீடர்கள் மீதும் அவர் ஆதிக்கம் செலுத்தினார்; இயக்கம் முழுவதன் மீதும் ஆதிக்கம் செலுத்தினார். அவர்களுக்கு தானே ராமகிருஷ்ணரின் பிரதிநிதியாக ஆனார். ராமகிருஷ்ணர் உயிரோடு இருந்திருந்தால், அதே காரியம் என்றாவது ஒருநாள்

நடந்தே இருக்கும். ஏனென்றால் விவேகானந்தர் தலைமட்டுமே, வேறொன்றுமில்லை; அவரிடம் இதயம் இருக்கவில்லை. இதயத்தைப் பற்றிய அவருடைய பேச்சுகள்கூட தலைப்பேச்சே, இதயத்தைப் பற்றி தலை பேசுகிறது. இதயம் நிறைந்து பேசவில்லை. அதில் அன்பு இல்லை. தியானம் இல்லை. பிரார்த்தனைத்தன்மை இல்லை. வெறும் அறிவுரீதி பகுப்பாய்வே இருக்கிறது. அவருக்கு சாத்திரங்கள் தெரிந்திருந்தது. எனவே தன் கருத்துகளை ராமகிருஷ்ணரின் கருத்துகளின்மீது ஏற்றினார். ராமகிருஷ்ணர் இறந்துவிட்டதால் அப்படி இல்லை என்று கூற ஒருவரும் இருக்கவில்லை.

ராமகிருஷ்ணரின் அழகு முழுவதையுமே விவேகானந்தர் அழித்துவிட்டார். ஆனால் அப்படி நடக்கவே செய்யும். ஏனெனில் ராமகிருஷ்ணரிடம் தலையே இருக்கவில்லை.

ஆனால் இதுவேதான் எல்லோருடைய கதையம் அல்ல. புத்தர் ஒருபோதும் யாரையும் சார்ந்திருக்கவில்லை. மனதில் இருந்து அ-மனத்துக்கும் அ-மனதில் இருந்து மனத்துக்கும் போய்வரக் கூடியவராக இருந்தார். அதுவே, அவரின் பெருமை. குருட்ஜீப் அல்லது ராமகிருஷ்ணரின் சாதனையைக் காட்டிலும் எவ்வளவோ பெரிய சாதனை இது. ஏனென்றால் அவர்களின் சாதனைகள் ஒரு வகையில் மட்டுப்பட்டிருந்தன. புத்தர் மிகவும் இயக்கத்தன்மையுடன் இருக்கிறார். பாறைபோல் கடினமாக அவர் இல்லை; ஆற்றைப்போல் சரளமாக இருக்கிறார்.

லாவோ சுவும் அப்படியே: அவர் ஒருபோதும் யாரையும் சாரவில்லை. அவர் தான் சொல்லவேண்டியதை தானே சொன்னார்: எவ்வளவு அழகாக அது சொல்லப்படமுடியுமோ அவ்வளவு அழகாக சொன்னார். இவர்களின் தத்துவங்கள் அதிக தூய்மையாகவே இருக்கும். ஏனெனில் மூல மனிதரிடமிருந்தே அவை வருகின்றன. மூல அனுபவத்திலிருந்தே, மூல ஆதாரத்திலிருந்தே அவை வருகின்றன. எந்த இடை ஊடகமும் இங்கு இல்லை. இதுவே ஜராதுஷ்டிரர், இயேசு, கிருஷ்ணர், மகாவீரர் ஆகியோர் கதையும்.

இவர்கள் இரண்டாம் விதமான ஆசான்கள் ஆவார்கள். முதல் விதம் ஒருவகையில் எளிதானது. ஒரு மையத்தில் உறைந்து இருப்பது சுலபமானது. தலை- இதயம் ஆகிய இரண்டு கோடிகளிலும் உயிர்ப்புடன் இருப்பது அதி சிக்கலான நிகழ் முறையாகும். அதிக நீண்டதும் எவ்வளவோ அதிக சிரமமானதுமான பயணமாகும்.

ஆனாலும் அது சாத்தியமே. முன்பும் இது நிகழ்ந்திருக்கிறது. இப்போது உங்கள் முன்னிலையிலும் அது நிகழ்ந்துகொண்டு இருக்கிறது.

நான் அமைதியில் வாழ்கிறேன்: ஆனால் என் வேலை அதிகமும் அறிவுரீதி தொடர்பு கொள்ளுதலாக இருக்கிறது. நான் அமைதியில் இருக்கிறேன்; அதேபோது நான் வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டி இருக்கிறது. ஆனால் நான் வார்த்தைகளைப் பயன்படுத்துகிறபோது, அந்த வார்த்தைகளில் என அமைதி அடங்கி உள்ளது. என்னை விளக்கப்படுத்த எனக்கு வேறு யாரும் தேவையில்லை. எனவே நான் கூறுவதெல்லாம் அதிக காலத்துக்கு தூய்மை கெடாதிருக்க எவ்வளவோ அதிக வாய்ப்பு உள்ளது.

மேலும் இப்போது புத்தர் காலத்தை விட எவ்வளவோ அறிவியல் வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன.

அவுஸ்பென்ஸ்கி அல்லது பிளேட்டோ அல்லது விவேகானந்தரைப் போல் யாரையும் புத்தர் ஒருபோதும் பயன்படுத்தவில்லை. அவரே தன் சொந்த விரிவுரையாளராய் இருந்தார். இருந்தாலும் அவர் உண்மையாகவே என்ன சொன்னார் என்பதை நாம் அறிந்ததில்லை. அவர் இறந்ததும் ஒரு பிரச்சனை எழுந்தது. அவர் 42 ஆண்டுகளாக பேசினார். சுமார் 40 வயதில் அவர் ஞானம் அடைந்தார். 82 வயது வரை வாழ்ந்தார். 42 ஆண்டுகளாக அவர் காலையிலும் மதியத்திலும் மாலையிலும் பேசிக் கொண்டிருந்தார். அவர் பேசியதை பதிவுசெய்ய அன்றைக்கு அறிவியல் முறைகள் இல்லை. அவர் இறந்தபின் எழுந்த முதல் கேள்வி அவற்றை எல்லாம் தொகுப்பது எப்படி என்பது. அவர் நிறையவே சொல்லி இருந்தார். 42 ஆண்டுகள் என்பது நீண்ட காலம்தான். அந்த 42 ஆண்டுகளில் பலர் ஞானம் அடைந்திருந் தார்கள். ஆனால் அவ்வாறு ஞானம் அடைந்தவர்கள் தம் இதயத்தில் உறுதிப்பட்டுவிட்டார்கள். ஏனெனில் அதுவே எளிதானது, சுலபமானது, மக்கள் எளிய முறையை, குறுக்கு வழியை நோக்கியே இயல்பாகப் போகிறார்கள். வீண் சிரமப்படுவானேன்? ஒரு இடத்துக்கு நேராக, நேரடியாக போய்ச் சேரமுடியுமானால் ஏன் சுற்றி வளைக்க வேண்டும்? மேலும் புத்தர் உயிரோடு இருந்தபோது வேறெவரும் அவருக்கு பொருள்கூறத் தேவை இருக்கவில்லை. அவரே தன் பிரச்சாரகராக இருந்தார். எனவே அந்தத் தேவை. ஒருபோதும் உணரப்படவில்லை.

ஆயிரக்கணக்கான அருகதர்களும் போதி சத்துவர்களும் இருந்தார்கள். அவர்களில் ஞானம் அடைந்தவர்கள் மட்டுமே கூட்டத்துக்கு அழைக்கப்பட்டார்கள்- இவர்கள் புத்தரைத் திரித்துரைக்க மாட்டார்கள் என்பது வெளிப்படை அது உண்மைதான். அவர்களால் அவரை திரித்துரைக்க முடியாது- அவர்களுக்கு அது சாத்தியமில்லை. அதே அப்பாலை உலகத்தை அவர்களும் அனுபவித் திருந்தார்கள். அக்கரையை அவர்களும் அடைந்திருந்தார்கள்.

ஆனால் அவர்கள் எல்லோரும் சொன்னார்கள். "நாங்கள் விழிப்படைந்ததில் இருந்து அவருடைய வார்த்தைகளைப்பற்றி ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. அவரது சொற்கள் இனிமையாய் இருந்ததால் அவரை நாங்கள் கவனித்தோம். அவரது சொற்கள் தூய இசையாக இருந்ததால் அவரை நாங்கள் கவனித்தோம். அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பதே ஒரு ஆனந்தம் என்பதால் அவரை நாங்கள் கவனித்தோம். அவரை அணுகி இருக்க அது ஒன்றே வழி என்பதால் அவரை நாங்கள் கவனித்தோம். அவர் அருகில் அமர்ந்து அவரை கவனித்துக் கொண்டிருப்பதே ஒரு களிப்பாக, ஒரு அருள் ஆசியாக இருந்தது. ஆனால் அவர் என்ன கூறுகிறார் என்பதைப்பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. நாங்கள் அடைந்த பின் அதற்குத் தேவை இருக்கவில்லை. நாங்கள் தலையில் இருந்து கவனிக்கவில்லை; நினைவில் அதை சேர்க்கவில்லை; எம் தலைகளும் நினைவுகளும் செயல்படுவதை நிறுத்தி வெகு காலமாகிறது.

புத்தர் இறப்பதற்கு 30 ஆண்டுகளுக்கு முன் ஒருவர் ஞானம் அடைந்தார். இந்த 30 ஆண்டுகளாக அவர் அங்கு புத்தரின் அருகில் கூரை மீது அமர்ந்து, மரங்களினூடே செல்லும் காற்றை கவனிப்பது போலவும், பறவைகளின் சங்கீதத்தை கவனிப்பது போலவும் மழை விழுவதை கவனிப்பதுபோலவும் கவனித்துக் கொண்டிருந்தார். ஆனால் அவர்கள் அறிவுரீதியாக கவனிக்கவில்லை. எனவே அவர்கள் சொன்னார்கள். அதன் ஞாபகம் எதையும் நாங்கள் சுமந்திருக்க வில்லை. அவர் சொன்னதெல்லாம் அழகாகவே இருந்தது. ஆனால் அவர் சொன்னதை எல்லாம் எங்களால் நினைவுபடுத்த முடியாது. அவரோடு இருப்பதே அத்தகைய ஆனந்தமாய் இருந்தது.

இப்போது அவருடைய சொற்களைச் சேகரிப்பது எவ்வாறு என்பது மிகுந்த கடினமானதாக இருந்தது. நாற்பத்தி இரண்டு ஆண்டுகளாக புத்தருடன் இடைவிடாமல் வாழ்ந்திருந்த ஒரே மனிதர் ஆனந்தர். அவர் அவருடைய தனி கவனிப்பாளராக, காவலராக

இருந்தார். அவர் சொல்வதை கவனித்திருந்தார். புத்தர் சொன்ன ஏறக்குறைய எல்லா சொல்லையும் ஆனந்தர் கேட்டிருந்தார். யாருடனாவது அந்தரங்கமாக பேசும் வேளையிலும் ஆனந்தர் உடனிருந்தார். ஏறக்குறைய எல்லா வேளையிலும் ஆனந்தர் நிழல்போல் அங்கிருந்தார். அவர் உதடுகளில் இருந்து வெளிவந்த எல்லாவற்றையும் அவர் கேட்டிருந்தார். மேலும், யாருமே இல்லாத போதும் ஆனந்தரிடம் அவர் பல விஷயங்களை சொல்லி இருந்தார். இரவில் படுக்கப் போகும்போதும் அவர் பேசிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அவரை கவனித்துக் கொள்வதற்காக அதே அறையில் ஆனந்தர் படுப்பது வழக்கம்- இரவில் அவருக்கு ஏதாவது தேவைப் படலாம். அவர் குளிராக உணரலாம். வெப்பமாக உணரலாம். சன்னலை மூடவோ திறக்கவோ விரும்பலாம். அல்லது அவருக்கு தாகமாயிருக்கலாம். தண்ணீரோ வேறெதாவதோ தேவைப்படலாம். அல்லது- அவருக்கு வயதாகி வந்ததால்- அவர் நோய்வாய்ப்படலாம். எனவே ஆனந்தர் தொடர்ச்சியாக அங்கு இருந்தார்.

"நாம் ஆனந்தரைக் கேட்போம்" என்று அவர்கள் எல்லோரும் சொன்னார்கள். ஆனால் அப்போது இன்னும் பெரிய பிரச்சனை எழுந்தது. ஆனந்தர் இன்னும் ஞானமடையவில்லை. பொதுவிலும் தனியாகவும் புத்தர் உச்சரித்த அனைத்தையும் அவர் கேட்டிருந்தார். அவர்கள் இருவரும் சேர்ந்து ரகசியங்கள் பேசி இருக்க வேண்டும். "நான் புத்தரின் நண்பன்" என்று சொல்வதற்கு வேறு யாரும் இருக்கவில்லை. மேலும் ஆனந்தர் அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர் மட்டுமல்ல, புத்தரைவிட 2 ஆண்டுகள் மூத்தவர். எனவே அவர் தீட்சை பெற வந்தபோது அதற்கு முன்னதாக சில விஷயங்களைக் கேட்டுக் கொண்டார். இந்தியாவில் அப்பாவுக்குத் தரும் மதிப்பை அண்ணனுக்கும் தரவேண்டும். ஒன்றுவிட்ட அண்ணனையும் உங்கள் அப்பாவைப் போலவே மதிக்கவேண்டும்.

ஆக ஆனந்தர் புத்தரிடம் சொன்னார், "நான் தீட்சை பெறும் முன்பாக... நான் உனது பிக்கு- சந்நியாசி- ஆகிவிட்டால் உன் ஆணைகளை, கட்டளைகளை நான் பின்பற்ற வேண்டி இருக்கும். பின் நீ எதைச் சொன்னாலும் அதை நான் செய்ய வேண்டி இருக்கும். ஆனால் அதற்கு முன்பாக உன் அண்ணன் என்ற முறையில் உனக்கு நான் கட்டளை இடுகிறேன். எனக்கு நீ மூன்று உறுதிமொழி வரம் தரவேண்டும். இந்த மூன்று விஷயங்களையும் நினைவில் வை. முதலாவது; நான் எப்போதும் இங்கேயே இருப்பேன். நீ என்னிடம் "ஆனந்தா அங்கேபோ, அதைச்செய் என்று சொல்லக்கூடாது.

போதிக்கவும், மக்களை மாற்றவும் உன் நற்செய்தியை பரப்பவும் என்னை நீ வெளியூர்களுக்கு அனுப்பக்கூடாது இதுதான் என் முதல் நிபந்தனை இரண்டாவது: நான் எப்போதும் உன்கூடவே இருப்பேன். நீ யாருடனாவது அந்தரங்கமாக உரையாடும் போதும் அவற்றையும் நான் கேட்க விரும்புகிறேன். உன் வாழ்வில் நீ சொல்லப்போகும் எல்லாவற்றுக்கும் நான் காதுகொடுப்பவனாய் இருக்க விரும்புகிறேன். எனவே "இது ரகசியப் பேச்சு, நீ வெளியே போ" என்று நீ எனக்கு சொல்லக்கூடாது. சொன்னாலும் நான் போகமாட்டேன். இதை நினைவில் வை! மூன்றாவது ஞானமடைவதில் எனக்கு பெரிய விருப்பம் ஒன்றும் இல்லை. உன்னுடனேயே இருப்பதிலேயே எனக்கு அதிக விருப்பம். எனவே ஞானமடைவதால் உன்னை நான் பிரிய வேண்டும் என்றால் எனக்கு அந்த ஞானத்தைப்பற்றி துளியும் அக்கறை இல்லை. ஞானமடைந்த பின்னும் உன்னுடன் நான் இருக்க முடியும் என்றால் மட்டுமே ஞானமடைய நான் சம்மதிப்பேன். இல்லாவிட்டால் அதை மறந்துவிடு."

இந்த மூன்று நிபந்தனைகளுக்கும் புத்தர் சரி என தலையசைத்தார். வேறு வழியில்லை- ஆனந்தருக்கு அவர் தம்பியாகப் போய்விட்டார். இந்த மூன்றையும் தன் வாழ்நாள் முழுவதிலும் அவர் காப்பாற்றினார்.

ஆனந்தர் மட்டுமே புத்தரின் வார்த்தைகளை எடுத்துரைக்க முடியும் என்று அருகதர், போதிசத்துவர் அடங்கிய சபை முடிவுசெய்தது. அவருடைய நினைவாற்றலும் அபாரமானது. ஒவ்வொன்றையும் மிகக் கூர்ந்து அவர் கவனித்திருந்தார். "ஆனால் அவர் ஞானமடையவில்லை என்பதே பிரச்சனை. அவரை நாம் சார்ந்திருக்க முடியாது. அவரது மனம் சூழ்ச்சிகள் ஆடலாம். தனக்கே தெரியாமல் அவர் மனம் விஷயத்தை மாற்றலாம். வேண்டுமென்றே அவர் அப்படி செய்யாதிருக்கலாம். உணர்வுடன் அவர் அதை செய்யாதிருக்கலாம். இருந்தாலும் அவருக்குள் பெரிய உணர்வற்ற பகுதி இருக்கிறது. புத்தர் இன்னதைச் சொன்னார் என அவர் நினைக்கலாம். ஆனால் புத்தர் அப்படி ஒருபோதும் சொல்லா திருக்கலாம். அவர் சில வார்த்தைகளை கழித்துவிடலாம், சில வார்த்தைகளைக் கூட்டிவிடலாம். யாருக்கு தெரியும்? மேலும் நமக்கு எந்த உரைகல்லும் இல்லை. ஏனெனில் அவர் கேட்டிருக்கிற பலவற்றையும் அவர்மட்டுமே கேட்டிருக்கிறார். வேறு எந்த சாட்சியும் இல்லை."

ஆனந்தர் சபைக்கு வெளியே இருந்தார். கதவுகள் சாத்தப் பட்டிருந்தன. படிகளுக்கு வெளியே அவர் தேம்பி அழுது கொண்டிருந்தார். அவரை உள்ளே அனுமதிக்காததால் அவர் தேம்பிக்கொண்டிருந்தார். 84 வயது கிழவர் ஒரு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழுகிறார்! புத்தருடன் 42 ஆண்டுகள் சேர்ந்து வாழ்ந்தவருக்கு உள்ளே வர அனுமதி இல்லை! இப்போது அவர் உண்மையாகவே சஞ்சலப்பட்டார். ஏன் அவர் ஞானமடைய வில்லை? ஏன் அதற்கு வலியுறுத்தவில்லை? அவர் ஒரு சபதம் எடுத்தார்: "ஞானமடையாமல் இந்தப் படியில் இருந்து நகரமாட்டேன்." அவர் கண்களை மூடினார். முழு உலகையும் மறந்தார். அவருடைய ஆசனத்தில் எந்த அசைவும் இன்றி அமர்ந்த 24 மணி நேரத்துக்குள்ளாகவே அவர் ஞானமடைந்தார் என்று சொல்லப்படுகிறது.

அவர் ஞானமடைந்ததும் உள்ளே அனுமதிக்கப்பட்டார். பின் அவர் சொல்லலானார்... இந்த ஏடுகளை எல்லாம் எடுத்துச் சொன்னவர் ஆனந்தர்தான். ஆனால் யாருக்குத் தெரியும்? அவர் ஞானமடைந்தது பிற்பாடுதான். அந்த நினைவுகள் எல்லாம் ஞானமடைந்திராத மனத்தைச் சேர்ந்தவை. அவர் ஞானமடைந்து விட்டாலும், அந்த நினைவுகள் ஞானமடையாதவரின் நினைவுகளே. எனவே சொல்லப்பட்டது அனைத்தும் உள்ளவாறே புத்தர் சொன்னபடிதான் என்பதை முற்றிலும் உறுதியாக சொல்லமுடியாது.

இப்போது அறிவியல் அனைத்து தொழில்நுட்பத்தையும் வழங்கி இருக்கிறது. ஒவ்வொரு ஒற்றைச் சொல்லும்- சொல் மட்டுமல்ல அவற்றுக்கிடையிலான இடைவெளியும், சொற்களின் நுணுக்கமான வேறுபாடுகளும், அவை உச்சரிக்கப்பட்ட விதமும், அங்க அசைவுகளும் யாவும் இப்போது பதியப்பட முடிகிறது. வார்த்தைகளைப் பதிவுசெய்ய முடிகிறது. பாவனைகளைப் புகைப்படமெடுக்க, திரைப்படம் எடுக்க, ஒளிநாடாவில் எடுக்க முடிகிறது.

இப்போது எந்த ஞானமடைந்த மனிதருக்குமுள்ள மிகச் சிறந்த வழி, யாரையும் சார்ந்திராது இருப்பதுதான். இந்த வழி கடினம்தான்; அதிகக் கடினம்தான். ஏனெனில் இரண்டு காரியங்களையும் சேர்த்தே நீங்கள் செய்யவேண்டியது இருக்கிறது. ஓயாமல் நீங்கள் இங்கிருந்து அங்கும் அங்கிருந்து இங்கும் போய்வர வேண்டி இருக்கிறது. ஓயாமல் மௌனத்துக்குள் போகவும் அந்த வெறுமையிலிருந்து வெளிப்பட்டு வார்த்தைகளின் உலகத்துக்குள் வரவும் வேண்டி

யிருக்கிறது. இது கடினமான காரியம்தான். முழுப்பிரபஞ்சத்திலும் வைத்து மிகக் கடினமான காரியம்தான். ஏனெனில் அமைதிக்குள் நீங்கள் பிரவேசித்ததும் அது மிகவும் அழகாயிருப்பதால் அதிலிருந்து திரும்பவும் வார்த்தைகளின் உலகத்துக்கு வருவது அபத்தமாக, பொருளற்றதாக தோன்றுகிறது. இது, நீங்கள் ஒளிபொருந்திய சிகரங்களை அடைந்தபின், சமவெளியில் சேரிகளில் மக்கள்வாழும் இருண்ட பள்ளங்களுக்குத் திரும்பிவருவது போன்றது. ஒளிரும் சிகரங்களை நீங்கள் எட்டியபின் அங்கேயே நீங்கள் வாழமுடியும். எல்லையற்ற வானத்தில் மேகம்போல் மிதந்துசெல்ல முடியும். அப்படியிருக்க சகதியான பூமிக்கு திரும்பிவந்து அந்த சேற்றுக்குள்ளேயே வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களுடன் ஊர்வது என்பது மிகவும் அபத்தமாக இருக்கிறது. ஆனால் வேறு வழி இல்லை. உங்களிடம் போதிய கருணை இருந்தால் இந்த கடினமான நிகழ் முறையினூடாக நீங்கள் செல்லவே வேண்டியிருக்கிறது.

இது பல விஷயங்களையும் பொறுத்திருக்கிறது. ஒரு குரு தன் கடந்த பிறவிகளில் அடைந்திருக்கிற மொத்த நிகழ்முறையையும் இது பொறுத்திருக்கிறது. ராமகிருஷ்ணர் தன் எந்தப் பிறவியிலும் அறிவு ஜீவியாக இருந்ததில்லை. இந்தப் பிறவியிலும் அவர் ஒரு எளிய மனிதராகவே இருந்தார். அவர் ஒருவேளை விரும்பியிருந்தாலும் அவரால் ஒரு விவேகானந்தராகவும் இருப்பது அசாத்தியமாகவே இருந்திருக்கும். அந்த வேலையைச் செய்யக்கூடிய வேறொருவரைக் கண்டுகொள்வதே அதிக சுலபமானது.

குருட்ஜீப் மிக இளைஞராக 12 வயதே நிரம்பியவராக இருக்கும் போதே ஒரு சாதகர் குழுவில் தானும் ஒருவராக இருந்தார்: அவர்கள் 30 பேரும் சேர்ந்து ஒரு முடிவு எடுத்தார்கள். உலகின் வெவ்வேறு பகுதிகளுக்கும்போய் உண்மை என்பது வெறும் பேச்சுதானா அல்லது சிலராவது அதை அறிந்திருக்கிறார்களா என்பதை காண்பது என முடிவாயிற்று. அவர் 12 வயதே நிரம்பிய சிறுவன்தான் என்றாலும் அவர் மிகுந்த திடகாத்திரமும் ஆற்றலும் நிரம்பியவராக இருந்த ஒரே காரணத்தால் அவரும் அக்குழுவில் சேர தேர்ந்தெடுக் கப்பட்டிருந்தார். அவரைப்பற்றிய ஒரு விஷயம் மிக நிச்சயமானது. அவர் என்ன முடிவெடுத்தாலும் அதற்காக தன் எல்லாவற்றையும் அவர் பணயம்வைப்பார். திரும்பிப்பார்க்க மாட்டார். ஒருபோதும் தப்பித்து ஓட மாட்டார். தன் உயிரையே இழக்க வேண்டி இருந்தாலும் அதை இழப்பார். அவ்வாறே மூன்றுதடவைகள் அவர் அநேகமாக சுடப்பட்டு சாவதற்கிருந்தார். அநேகமாக ஆனால்

எவ்வாறோ பின்னுக்கிழுத்து உயிர் பிழைத்துக்கொண்டார். இலட்சியம் இன்னும் நிறைவேற்றப்படவில்லையே.

அந்த 3 பேரும் உலகம் முழுதும் பயணம் செய்தார்கள். அவர்கள் இந்தியாவுக்கு வந்தார்கள். திபெத்துக்குப் போனார்கள். மத்தியக்கிழக்கு முழுவதிலும் சுற்றினார்கள். எல்லா சூபி மடங்களுக்கும் இமயமலையில் இருந்த எலலா மடங்களுக்கும் அவர்கள் போனார்கள். மத்தியக்கிழக்கில் ஒரு குறிப்பிட்ட இடத்திற்குத் திரும்பிவந்து தாம் அடைந்ததையெல்லாம் பரிமாறிக் கொள்வது என அவர்கள் முடிவுசெய்திருந்தார்கள். 12 ஆண்டு களுக்குப் பிறகு அவர்கள் சந்திக்க இருந்தார்கள். முதல் 12 ஆண்டு களின் முடிவில் ஏறக்குறைய பாதிப்பேர் திரும்பவில்லை. அவர்கள் எவ்வாறோ இறந்திருக்க வேண்டும். தம் இலட்சிய காரியத்தை மறந்திருக்க வேண்டும்; அல்லது எங்கோ சிக்கிக்கொண்டிருக்க வேண்டும். அவர்களில் சிலர் திருமணம் செய்திருக்கக்கூடும். காதலில் விழுந்திருக்கக்கூடும். ஆயிரத்தொரு காரியங்கள் நடைபெற்றிருக்க முடியும்- மக்கள் தற்செயல்களில் மாட்டிக்கொள்ளும் மனச் சாய்வுடையவர்களாகவே இருக்கிறார்கள். பதினைந்து பேர் மட்டுமே திரும்பினார்கள். அதற்கடுத்த 12 வருஷங்களின் முடிவில் 3 பேர் மட்டுமே திரும்பி வந்தார்கள். மூன்றாவது தடவை குருட்ஜீப் மட்டுமே வந்திருந்தார். மற்ற யாவரும் மறைந்து விட்டிருந்தார்கள். அவர்களுக்கு என்ன நேர்ந்தது என்பது யாருக்கும் தெரியாது.

இந்த மனிதருக்கு தீர்க்கத்தன்மை மிகவும் அதிகமாக இருந்தது. அவர் ஒன்றைத் தீர்மானித்துவிட்டால் அதன்பின் எதுவும் அவரை அதிலிருந்து திரும்பவைக்க முடியாது. மூன்று முறை அநேகமாக அவர் செத்துப்போயிருக்க வேண்டும். அவரைக் காப்பாற்றிய ஒரே விஷயம், தன் லட்சியம், தான் திரும்பிப் போக வேண்டும் என்பது- அதுதான் அவரைச் சாவிலிருந்து இழுத்துக் காப்பாற்றியது. அதற்கு மிகுந்த உள் ஆற்றல் அவசியமாயிற்று.

அறிவுஜீவி ஆவதற்கு அவருக்கு அவகாசம் இருக்கவில்லை. அவர் மறைஞானிகளுடன் சுற்றிக்கொண்டிருந்தார். ஒரு மடத்திலிருந்து இன்னொரு மடத்துக்கும் ஒரு குகையில் இருந்து இன்னொரு குகைக்கும் ஒரு நாட்டில் இருந்து இன்னொரு நாட்டுக்கும் அவர் பயணம்செய்து கொண்டிருந்தார். அவர் இந்தியாவுக்கு வந்தார்: திபெத்துக்குப் போனார். ஜப்பானுக்குப் போனார். உலகம் முழுவதிலும் இருந்து அவர் அறிவைத் திரட்டினார். அவர் ஞானமடைந்தபோது அவற்றை

அறிவார்த்தமாக்க, வார்த்தைகளில் முன்வைக்க அவருக்கு அவகாசம் இருக்கவில்லை. அந்தச் சுவையை அவர் அறிந்திருந்தார். ஆனால் வெளிப்படுத்த வார்த்தைகள் இல்லை. அவருக்கு அவுஸ்பென்ஸ்கியைப் போன்ற ஒரு மனிதர் தேவைப்பட்டார்.

என் சொந்த அணுகுமுறை முற்றிலும் வேறாயிருந்தது. நான் ஒரு அறிவுஜீவியாகவே தொடங்கினேன். இந்தப் பிறவியில் மட்டுமல்ல, கடந்த பல பிறவிகளிலும் அப்படித்தான். பல பிறவிகளிலும் என் முழு வேலையும் நுண் அறிவுடன் சம்பந்தப்பட்டதாகவே- அதை செம்மைப்படுத்தல், கூர்மைப்படுத்தல் என்பதற்காகவே இருந்தது. இந்தப் பிறவியில் நான் ஒரு நாத்திகனாகவே தொடங்கினேன். கடவுளை முற்றிலும் மறுத்தேன். அதி புத்திசாலியாக நீங்கள் இல்லாவிட்டால் உங்களால் நாத்திகராக இருக்க முடியாது. நான் பூரண நாத்திகனாக இருந்தேன். மக்கள் என்னைத் தவிர்ப்பது வழக்கம். ஏனென்றால் எதைக் குறித்தும் நான் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தேன். என் சந்தேகம் மற்றவர்களையும் தொற்றிக் கொள்வதாயிருந்தது. எனவே என் ஆசிரியர்களும் என்னைத் தவிர்த்தார்கள்.

என் ஆசிரியர்களில் ஒருவர் இறந்துகொண்டிருந்தார். நான் அவரைப் பார்க்கப் போனேன். அவர் சொன்னார், "தயவுசெய்து.... நீ வந்ததில் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால் ஒரு வார்த்தைகூட சொல்லி விடாதே. இப்போது நேரம் இல்லை. நான் செத்துக் கொண்டிருக்கிறேன். கடவுள் இருக்கிறார் என நம்பியபடியே போக நான் விரும்புகிறேன்."

"உங்களால் முடியாது. என்னைப் பார்த்ததுமே உங்களுக்குள் சந்தேகம் எழுந்துவிட்டது" என்றேன் நான்.

"என்ன சொல்கிறாய்?" என்றார் அவர்.

உடனே சொல்லத் தொடங்கிவிட்டேன்! 12 மணி நேரம் கழித்து அவர் இறக்கும்முன் ஒரு நாத்திகனாக இறந்தார். எனக்கு ஒரே மகிழ்ச்சி! அதற்காக 12 மணி நேரம் இடையறாது நான் பேசவேண்டி இருந்தது. கடைசியில் வேறு வழியில்லாதவராக அவர், "சரி, என்னை அமைதியாகச் சாகவிடு. கடவுள் இல்லை என்பதை இப்போது நான் ஒத்துக்கொள்கிறேன். உனக்கு சந்தோசம்தானே? இனி என்னை நிம்மதியாக விடு!"

என் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் எப்போதும் என்னால் சிரமப்படுவார்கள்.. ஒவ்வொரு கல்லூரியில் இருந்தும் என்னை

வெளியேற்றினார்கள். பின் ஒரு பல்கலைக்கழகத்தில் இருந்து வெளியேற்றினார்கள். கடைசியில் ஒரு பல்கலைக்கழகம் ஒரு நிபந்தனையுடன் என்னை எடுத்துக்கொள்ளச் சம்மதித்தது. அந்த எழுத்துப்பூர்வ நிபந்தனையில் நான் கையெழுத்திட வேண்டி இருந்தது- அதாவது நான் எந்தக் கேள்வியும் கேட்கக்கூடாது; பேராசிரியர்களுடன் வாதிடக்கூடாது.

நான் சரி என்றேன். கையெழுத்திட்டேன். துணைவேந்தர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். நான் கேட்டேன், "சில சந்தேகங்கள். 'வாதிடுவது' என்று எதைச் சொல்கிறீர்கள்?"

"ஆரம்பித்துவிட்டாய்!" என்றார் அவர்.

நான் சொன்னேன், "எந்த விளக்கமும் கேட்க மாட்டேன் என்று நான் எழுதவில்லை. நான் விளக்கம் கேட்கமுடியும். 'வாதம்' என்று எதைச் சொல்கிறீர்கள்? நான் கேள்வியே கேட்கக் கூடாது என்றால் உங்கள் தத்துவத்துறை முழுவதுமே இருப்பதில் என்ன பயன்? ஏனெனில் உங்கள் தத்துவர்கள் எல்லோருமே கேள்விகளை கேட்கிறார்கள். சந்தேகத்தின்மீதே தத்துவம் மொத்தமும் நிற்கிறது. சந்தேகமே தத்துவம் அனைத்தின் அடித்தளம். உங்கள் மடத்தத்துவ வாதிகளையும் உங்களின் மடப் பேராசிரியர்களையும் நான் சந்தேகிக்கக்கூடாதென்றால் பின் நான் எப்படித் தத்துவம் கற்றுக் கொள்ளப் போகிறேன்?"

அவர் சொன்னார், "பேசுவதைப் பார்த்துப் பேசு!என் முன்னாலேயே என் பேராசிரியர்களை நீ மடையர்கள் என்கிறாய்!"

நான் சொன்னேன், "அவர்கள் மடையர்கள்தான் இல்லா விட்டால் ஏன் இந்த நிபந்தனைகள்? புத்திசாலியாக இருக்கும் ஒருவர் தன் மாணவர்கள் தன்னை கேள்வி கேட்கக்கூடாது என்பார் என நீங்கள் நினைக்க முடியுமா? இதுதான் புத்திசாலித்தனத்துக்கு அடையாளமா? ஒரு பேராசிரியர் என்றால் கேள்விகளை வரவேற்பார். அறிவுமிக்க பேராசிரியர், திறமையாக வாதிடும் மாணவனைக் குறித்து மகிழ்ச்சியே அடைவார்."

அது ஒரு பிரச்சனையாகவே நீடித்தது. வெகு ஆரம்பத்தில் இருந்தே என் அணுகுமுறை முழுவதும் ராமகிருஷ்ணருடையதைப் போல் இருக்கவில்லை. நான் பக்திமயமானவனே அல்ல. ஆத்திகம் மூலமல்ல நாத்திகம் மூலமே நான் கடவுளை அடைந்திருக்கிறேன். கடவுளை நம்பியதன்மூலமல்ல, அவரை முழுமையாக சந்தேகித்ததன் மூலமே அவரை அடைந்திருக்கிறேன். சந்தேகித்ததன் மூலமே,

இனியும் சந்தேகிக்க சாத்தியமில்லாது போகும்வரை- சந்தேகத்துக் கிடமற்ற ஒன்றை நான் எதிர்கொள்ளும் வரை- சந்தேகித்தபடியே போனதின் மூலமே, ஒரு நிச்சயத்தன்மைக்கு வந்திருக்கிறேன்.

குருட்ஜீப்பின் (நிகழ்) முறை அதுவல்ல. அவர் ஆசான்களிட மிருந்து கற்றுக்கொண்டார். ஒரு ஆசானிடம் இருந்து இன்னொரு ஆசானிடம் போய், உத்திகளையும் முறைகளையும் சாதனங்களையும் கற்றுக் கொண்டார். பல சாதனங்களை அவர் கற்றுக்கொண்டார்- ஆனால் மிகவும் சரணடைந்த தன்மையிலேயே, ஒரு சீடராக இருந்தே- அவற்றை அவர் கற்றார்.

நான் யாருக்கும் ஒருபோதும் சீடனாக இருந்ததில்லை. யாரும் என் குருவாக இருந்ததில்லை. உண்மையில் யாரும் என்னைச் சீடனாக ஏற்றுக்கொள்ளத் தயாராவில்லை. ஏனெனில் தொல்லையை விலை கொடுத்து வாங்க யார்தான் விரும்புவார்கள்?

என் பேராசிரியர்களில் ஒருவர் டாக்டர் எஸ்.கே. சாக்சனா. இப்போது அவர் உயிருடன் இல்லை. அவர் என்னை மிகவும் நேசித்தார். என் பேராசிரியர்கள் எல்லாரிலும் வைத்து இவர் மட்டுமே... நான் பல பேராசிரியர்களைப் பார்த்திருக்கிறேன். பல கல்லூரிகளையும் பல பல்கலைக்கழகங்களையும் நான் விட்டுவெளியேற வேண்டியிருந்தது. நான் சந்தித்த அளவு அதிகமான பேராசிாயர்களை வேறு யாரும் சந்தித்திருப்பது அரிது. அவர்மேல் மட்டுமே எனக்கு கொஞ்சம் மரியாதை இருந்தது. ஏனெனில் சந்தேகிப்பதை, கேள்விகேட்பதை அவர் ஒருபோதும் தடுத்ததில்லை. ஆயிரத்தொரு தடவையாயினும் அவர் தோல்வியை ஒப்புக் கொள்ளவே வேண்டியதாயிருந்தது. ஒரு மாணவனிடம் கூட தோல்வியை ஒத்துக்கொள்ளக் கூடியவராக அவர் இருந்ததால்தான் நான் அவரை மதித்தேன். "தோல்வியை ஒத்துக் கொள்கிறேன். நீயே வென்றவர். இதற்குமேல் என்னால் வாதிட முடியாது. நான் அடுக்கக்கூடிய வாதங்கள் அனைத்தையும் முன்வைத்துவிட்டேன். அவை எல்லாவற்றையும் நீ நிர்மூலமாக்கிவிட்டாய். இப்போது நீ ஏதாவது சொல்வதற்கு இருந்தால் சொல். நான் கவனிக்கத் தயார்," என்று மட்டுமே கூறுவார் அவர்.

அவர் மிகவும் பயந்தார்... தத்துவத்தில் முதுகலைக்கான என் இறுதித்தேர்வை நான் எழுதிக்கொண்டிருந்தபோது, அவர் மிகவும் பயந்தார். ஏனென்றால் அவர் என்னை வெகுவாக நேசித்தார். தேர்வை வெற்றிகரமாக நான் கடந்துவர விரும்பினார். ஆனால் அவர் பயந்தார்- பாடப்புத்தகத்தில் இல்லாததையோ அல்லது அவற்றில்

உள்ளதற்கு நேர் எதிராகவோ நான் ஏதாவது எழுதி விடுவேனோ என்று பயந்தார். சாதாண பேராசிரியர்களால் ஏற்றுக்கொள்ள முடியாத விஷயங்களை நான் சொல்லிவிடலாம். என்னைக் காப்பாற்றுவதற்காகவே, என் பதில் தாள்களை எல்லாம், நாடு முழுவதிலும் உள்ள அவருடைய நண்பர்களாகப் பார்த்து கொடுத்து அவர்களுக்கு பின்வருமாறு தெரிவித்துவிட்டார். "இந்த இளைஞரைப் பார்த்து மதிப்பிடுங்கள். அவருடைய பதில்களால் வெகுண்டு விடாதீர்கள். அதுவே அவருடைய முறையாக இருக்கிறது. ஆனால் அவரில் மிகுந்த உள்ளாற்றல் இருக்கிறது."

ஒரே ஒரு விஷயத்தைத்தான் அவரால் சமாளிக்க முடியவில்லை. அதை துணைவேந்தரே தீர்மானிப்பதாக இருந்தது. வாய்வழி தேர்வு. இதுவே கடைசியானது. இதற்கு பேராசிரியர் அலிகார் பல்கலைக் கழகத்தில் தத்துவத்துறைத் தலைவராயிருந்த ஒரு முகமதியப் பேராசிரியரை அழைத்திருந்தார். என் பேராசிரியர் மிகவும் கவலைப்பட்டார். அவர் என்னிடம் திரும்பத் திரும்பச் சொன்னார், "இந்த ஆளுடன் வாதம் செய்யாதே. முதலாவதாக அவர் ஒரு முஸ்லீம். முஸ்லீம்களுக்கு வாதம் என்றாலே என்னவென்று தெரியாது. அவர் ஒரு மதவெறியர். உன்னுடன் வாதிட முடியவில்லை என்றால் அவர் உன்னைப் பழிவாங்கிவிடுவார். அவரால் வாதிடமுடியாது என்பதை நான் அறிவேன்- அவரை எனக்குத் தெரியும். உன்னைப்பற்றியும் தெரியும். ஆனால் நீ பேசாமல் மௌனம் சாதித்துவிடு. ஏனெனில் இதுதான் கடைசி சோதனை. உனக்காக நான் எடுத்த மொத்த முயற்சியையும் நாசமாக்கிவிடாதே." அவர் மேலும் சொன்னார், "அது உன் தேர்வு அல்ல, என் தேர்வுபோல இருக்கிறது எனக்கு!"

"பார்ப்போம்" என்றேன் நான்.

முகமதிய பேராசிரியர் கேட்ட முதல் கேள்வி: "இந்தியத் தத்துவத்துக்கும் மேலைத்தத்துவத்துக்கும் என்ன வேறுபாடு?"

நான் சொன்னேன், "இது மடத்தனமானது. இந்த கருத்தே அபத்தமானது. தத்துவம்னா தத்துவம்தான். தத்துவம் எப்படி இந்திய தத்துவம் என்று இருக்கமுடியும்? தத்துவம் எப்படி கீழை, மேலை என்று இருக்கமுடியும்? அறிவியலில் கீழை, மேலை கிடையாதென்றால் தத்துவத்தில் மட்டும் ஏன்? தத்துவம் என்றால் உண்மையைத் தேடுதல். தேடல் எப்படி கீழை என்றும் மேலை என்றும் இருக்க முடியும்? தேடல் எங்கும் ஒரே மாதிரியாகவே இருக்கிறது!"

என் பேராசிரியர் மேசைக்கடியில் என் காலைப் பிடித்து இழுக்கத் தொடங்கினார். நான் சொன்னேன். "சார் நீங்கள் சும்மா இருங்கள்! என் காலைப்பிடித்து இழுக்காதீர்கள்! தேர்வு என்பதையே மறந்துவிடுங்கள்- முதலில் இந்த விஷயத்தை முடிவுசெய்தாக வேண்டும்!"

முகமதிய பேராசிரியருக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்ன நடந்து கொண்டிருக்கிறது? "என்ன விஷயம்?" என்றார் அவர்.

நான் சொன்னேன், "இவர் என் காலைப் பிடித்து இழுக்கிறார். நீங்கள் ஒரு முகமதியர்- மதவெறியர் என்கிறார் இவர். உங்களால் என்னிடம் வாதிட முடியாவிட்டால் நீங்கள் என்னைப் பழிவாங்கி விடுவீர்கள் என்கிறார் இவர்! ஆகவே நீங்கள் விரும்புவதை செய்து கொள்ளுங்கள். ஆனால் நான் உணர்வதை நான் சொல்லியே ஆகவேண்டும். இந்த பாகுபாடுகளில் எல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. உண்மையில் ஒருவர் தத்துவராகவும் இருந்து அதேசமயம் அவர் ஒரு முகமதியராகவும் இருக்கிறார் என்னும் கருத்தே தர்க்க முரணாக, பரிகாசத்துக்கிடமாகத் தோன்றுகிறது. ஏற்கெனவே ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டை, குறிப்பிட்ட மதத்தை நிங்கள் ஏற்றுக் கொண்டிருந்தால் எப்படி நீங்கள் உண்மையான தேடுபவர் ஆக முடியும்? காரண காரிய ஊகங்களில் இருந்து நீங்கள் தொடங்கினால், ஒரு நம்பிக்கையில் இருந்து நீங்கள் தொடங்கினால் ஒருபோதும் உங்களால் உண்மையை அடைய முடியாது. ஒன்றும் அறியாதிருக்கிற நிலையில் இருந்தே உண்மையான தத்துவம் தொடங்குகிறது. அதுதான் சந்தேகத்தின் சிறப்பு: எல்லா (மூட) நம்பிக்கைகளையும் அது அழிக்கிறது."

ஒருகணம் அவர் அதிர்ந்து நின்றார். ஏறக்குறைய வாயடைத்துப் போனார். பின் நூற்றுக்கு 99 மதிப்பெண்களை அவர் எனக்குத் தர வேண்டியதாயிற்று. "மீதி ஒரு மதிப்பெண்ணுக்கு என்ன நேர்ந்தது?" என்று அவரைக் கேட்டேன்.

"ஆம்! நீங்கள் எனக்கு 99 மதிப்பெண் கொடுக்கும்போது ஏன் இவ்வளவு கஞ்சனாக இருக்கிறீர்கள் என்று கேட்க எனக்கு எல்லாவித உரிமையும் உண்டு. கேவலம் ஒரே ஒரு மதிப்பெண்! அதை நூறாக் குங்கள்- வாழ்க்கையில் ஒரு தடவையாவது தாராளம் காட்டுங்கள்!"

அதை அவர் நூறாக ஆக்க வேண்டியதாயிற்று.

எனது முழு அணுகுமுறையும் ராமகிருஷ்ணர் மற்றும் குருட்ஜீப்புடைய அணுகுமுறைக்கு முற்றிலும் வேறுபட்டதாகும்.

சந்தேகத்தின் மூலமே நான் வந்தடைந்திருக்கிறேன். ஆழமான, அனைத்து தழுவிய ஐயவாதத்தின் வழியாகவே நான் அடைந்திருக் கிறேன். நம்பிக்கை மூலமாக அல்ல. எல்லா நம்பிக்கையையும் அவநம்பிக்கையையுமே மறுப்பதன் மூலமாகவே வந்து சேர்ந்திருக்கிறேன். ஏனெனில் அவநம்பிக்கையும் நம்பிக்கையின் ஒரு வடிவம்தான்- எதிர்மறை வடிவம்.

எல்லா நம்பிக்கைகளும் எல்லா அவநம்பிக்கைகளும் மறைந்து போன ஒரு கட்டம் என் வாழ்வில் வந்தது. அப்போது நான் முற்றிலும் வெறுமை ஆனேன். அந்த வெறுமையில் பெருவெடிப்பு நிகழ்ந்தது. எனக்கு கடினமாக இல்லாததால் என்னால் எளிதாக வாதிட முடிகிறது. வாதத்துக்கு எதிராகவும் என்னால் வாதிட முடியும். அதையே நான் தொடர்ந்தும் செய்து கொண்டிருக்கப் போகிறேன். நுண்ணறிவுக்கு எதிராக என்னால் வாதிட முடியும். ஏனெனில் அதை எவ்வாறு பயன்படுத்துவது என்பது எனக்குத் தெரியும்.

ராமகிருஷ்ணர் ஒருபோதும் தம் நுண்ணறிவைப் பயன் படுத்தியதில்லை. அவர் இதயத்தில் இருந்து தொடங்கினார். குருட்ஜீப்பின் கதையும் இதுவே. புத்தர் ஒரு ராஜாவின் மகன், நன்குபடித்தவர், பண்பாடு அறிந்தவர் என்பதால் அவரால் தன் நுண்ணறிவைப் பயன்படுத்த முடிந்தது. நாட்டில் இருந்த அனைத்துப் பெரிய தத்துவர்களும் அவருக்குக் கற்பிக்க வருவிக்கப்பட்டார்கள். அறிவுரீதி அணுகுமுறை எத்தகையது என்பதை அவர் அறிந்தார். அதனால் அது அவருக்கு தெவிட்டிப் போயிற்று.

அதுவே எனக்கும் நடந்தது. அறிவுத்துறை முயற்சியால் என்ன சாதிக்க முடியும் என்பதை நான் அறிகிறேன். அதன்மூலம் ஒன்றையுமே சாதிக்க முடியாது. இதை நான் சொல்லும்போது என் சொந்த அனுபவத்திலிருந்தே சொல்லுகிறேன்.

ஆனால் ஒருவகையில் அது அழகானது. அது எனக்கு உண்மையை வழங்குவதில் முடியவில்லை- யாருக்குமே அது உண்மையை வழங்க முடியாது- ஆனால் ஒரு மறைமுக வழியில் அது தளத்தைச் சுத்தப்படுத்தியது. தளத்தை தயாராக்கியது. அது என்னை நான் உளரும்படிச் செய்ய உதவவில்லை. ஆனால் நான் அடைந்தது என்ன என்பதை எனக்குத் தெரியப்படுத்த அது உதவி இருக்கிறது.

எந்தப் பிரச்சனையும் சிக்கலும் இன்றி உங்களுடன் மிக எளிதாக என்னால் தொடர்பு கொள்ள முடிகிறது. எல்லா விதமான

கேள்விகளையும் நீங்கள் கேட்க முடியும். நீங்கள் கேட்க முடியும், சந்தேகிக்க முடியும். ஏனெனில் இந்தக் கேள்விகள், சந்தேகங்கள் அனைத்தையும் இல்லாமலாக்க முடியும், நிர்மூலமாக்க முடியும் என்பதை நான் அறிகிறேன். நீங்கள் கேள்விகேட்டது நல்லதே. அப்போதுதானே உங்கள் கேள்விகளை நான் அழிக்க முடியும். அவ்வாறு உங்கள் கேள்விகள் அனைத்தும் அழிக்கப்பட்டதும் உங்கள் ஜீவனுக்குள் இருந்து விடை எழுகிறது. அந்த முற்றான வெறுமையில் ஏதோ ஒன்று ஊற்றெடுக்கிறது. அது ஏற்கெனவே அங்கு இருக்கிறதுதான்.

நம்புவதன்மூலம் சந்தேகத்தை ஒடுக்குவதை நான் ஆதரிப்பது கிடையாது. என்னை நம்புவதற்காக நீங்கள் இங்கு இல்லை. உங்கள் அவநம்பிக்கையை எல்லாம் வெளியில் எடுத்துவிடவே இங்கே நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் ஐயங்கள், உங்கள் கேள்விகள் எல்லாம் மதிக்கப்படுகின்றன; வரவேற்கப்படுகின்றன. அதன்மூலமே அவற்றை உங்களில் இருந்து வெளியே எடுத்தெறிய முடியும். மெதுமெதுவாக ஒரு அமைதி. ஒரு ஒன்றுமறியாத நிலை உதிக்கிறது. அந்த ஒன்றுமறியாத நிலையே ஞானநிலை; விழிப்புணர்வு நிலை.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் சட்டத் தொழிலைச் சேர்ந்தவன். மிகவும் சட்டப்பூர்வமான மனத்தை உடையவன். நானும் சந்நியாசி ஆக முடியுமா?**

**திவாகர்.**

சந்நியாசம் உன்மேல் எந்த நிபந்தனைகளையும் விதிக்கிறதில்லை.

ஒவ்வொருவரும் வரவேற்கப்படுகிறார்- பாவி, புனிதர், சட்ட வல்லுநர்கள், சட்டத்தை மீறுபவர்கள், நற்குணவான்கள், குற்றவாளிகள்- அனைவரும் வரவேற்கப்படுகிறார்கள். சந்நியாசத்தில் எந்த முன் நிபந்தனையும் இல்லை- ஆனாலும் அது உனக்கு சற்று சிரமமாக இருக்கும். ஆனால் அது உன் பிரச்சனை; என் பிரச்சனை அல்ல. நீ சட்டத்துறையை சேர்ந்தவன், சட்ட மனத்தை உடையவன் என்றால் உனக்கு கொஞ்சம் கஷ்டம்தான். அதனால் என்ன? அதை ஒரு சவாலாக ஏற்றுக்கொள்! அது கஷ்டமாகவே இருக்கட்டும்! உண்மையில் எந்த அளவுக்குக் கடினமோ, எந்த அளவுக்கு சவாலானதோ அந்த அளவுக்கு அதிக அதிக சுவாரசியம். அதிக

கிளர்ச்சி, அதிக கவர்ச்சி இருக்கும். ஒன்று மிகவும் எளிதானதாக இருந்தால் அதைச் செய்வதில் யாருக்கும் விருப்பம் இருக்கும்? ஒன்று கடினமாக இருக்கிற போதுதான் அது உங்களிடம் சவாலை தட்டி எழுப்புகிறது, உங்களின் நுண்ணறிவைத் தூண்டி விடுகிறது.

சட்டமனம் கொண்டவனுக்கு இது கடினமே, நிச்சயமாக கடினமே. ஏனெனில் சட்டமனம் என்றால் சூழ்ச்சி நிரம்பிய மனம். இதன் பொருள் புத்திசாலி மனம் என்பதன்று. உண்மையில் நுண்ணறிவுடைய மனம் சூழ்ச்சி நிரம்பியதாய் இராது. நுண்ணறிவிற்கு ஈடாகாத ஒரு பதிலே சூழ்ச்சிக் குணம். சட்டத் தொழில்தான் உலகிலேயே மிகவும் சூழ்ச்சி நிரம்பிய தொழில்.

இயேசுநாதர் குடிகாரர்களுடனும் சூதாடிகளுடனும் ஒரு விபச்சாரியுடனும் கூட பழகினார். ஆனால் சட்ட வல்லுநர்களுடன் அவர் பழகியதாக நான் கேள்விப்பட்டதில்லை. உண்மையில் யூத ராபி (மதகுரு) என்பவர் ஒரு சட்ட நிபுணரே தவிர வேறல்ல. ஏனெனில் யூதமதமே பெரிதும் ஒரு சட்டத்தொகுப்பே. மதம் என்று சொல்வதற்கு அதில் பெரிதாக ஒன்றுமில்லை. ஏறக்குறைய ஒரு சட்டத் தொகுப்பே அது. இயல் கடந்த தத்துவம் என அதில் அதிகம் இல்லை. வானளாவிய சிந்தனைகளும் அதில் இல்லை. அது மிகவும் மண்ணுலகு சார்ந்தது. என்ன செய்யவேண்டும்- என்ன செய்யக் கூடாது என்பதை அது உனக்கு விரிவாக சொல்கிறது. அந்த பத்துக் கட்டளைகள் இருக்கிறதே. அதுதான் சட்டத்தொழிலின் தொடக்கமாக இருந்திருக்கக் கூடும்.

நீ சந்நியாசி ஆக முடியும். அந்த ஆசை உனக்குள் எழுந்திருக் கிறது என்றாலே கொஞ்சம் நுண்ணறிவுக்காக இருக்கிறதாகவே தோன்றுகிறது. உன் சூழ்ச்சித்தன்மை அனைத்துக்கும் பின்னால் கொஞ்சம் நெருப்பு இன்னும் உயிரோடு இருக்கவேண்டும்.

திவாகர், கவலைப்படாதே. இந்த ஆரஞ்சு (காவி) நெருப்புக்குள் வந்துவிடு- அது எல்லாவற்றையும் எரித்துவிடுகிறது; உன்னையும் அது எரித்துவிடும். எல்லாவற்றையும் அது கபளீகரம் செய்கிறது; சட்ட நிபுணனையும் அது கபளீகரம் செய்துவிடும். ஆனால் கபளீகரம் செய்யப்பட நீ தயாராயிருந்தால் மட்டும்தான். உன் சூழ்ச்சித்தன்மையைக் கைவிட நீ ஆயத்தமாக இருந்தால் மட்டும்தான். ஏனெனில் அது கைவிடப்படவே வேண்டும். இதை ஒரு நிபந்தனையாக நான் கூறவில்லை. ஆனால் நீ ஒரு சந்நியாசி ஆகி, தியானத்துக்குள் செல்லும்போது, நீ அதிகமதிக நுண்ணறிவு

உடையவனாக ஆகத் தொடங்குவாய். அப்போது தானாக- ஒரு உடன்விளைவாக- சூழ்ச்சிக் குணம் மறைகிறது.

சட்டத்தொழில் உலகிலிருந்து மறைகிறபோது 90% சூழ்ச்சிக்குணம் அதனோடு சேர்ந்து மறைந்துவிடும். சட்டம் தெரிந்தவர்களே அதிகமதிக குழப்பத்தை உண்டாக்குபவர்கள்.

என் துணைவேந்தர்களில் ஒருவர் மாபெரும் சட்ட வல்லுநர். உலகப் புகழ்பெற்ற சட்ட வல்லுநர். அவர் மீண்டும் மீண்டும் பின்வரும் சம்பவத்தைக் கூறுவது வழக்கம். ஒரு தடவை ஒரு இந்திய மகாராஜாவுக்காக தனி நீதிமன்றத்தில் ஒரு வழக்கில் வாதாடிக் கொண்டிருந்தார். அவர் ஒரு பெரிய குடிகாரர்... முந்தின நாள் இரவு அவர் நிறைய குடித்திருந்தார். அதன் மப்பு இன்னும் இருந்தது. எனவே அவர் தான் மகாராஜாவுக்கு சார்பாக வாதாடுகிறோமோ எதிராக வாதாடுகிறோமா என்பதையே மறந்துவிட்டார். எனவே ஒரு மணி நேரமாக மகாராஜாவுக்கு எதிராக அவர் பேசினார்! மகாராஜாவுக்கு வேர்த்துக் கொட்டியது. அவரது உதவியாளர்கள் நடுங்கினார்கள். "என்ன செய்துகொண்டிருக்கிறார் இவர்?" தேநீர் இடைவேளை வந்தது. அவர்கள் அவரிடம் சொன்னார்கள். "என்ன காரியம் செய்துவிட்டீர்கள்? நம் கட்சிக்காரரை ஒழித்துக் கட்டிவிட்டீர்கள். இனி அவரைக் காப்பாற்ற வழியே இல்லை."

"என்ன நடந்துவிட்டது?" என்றார் அவர்.

"நம் சொந்த கட்சிக்காரருக்கே எதிராக இவ்வளவு நேரமும் பேசிக்கொண்டிருந்தீர்கள்!"

"கவலையை விடுங்கள். இன்னும் சந்தர்ப்பம் இருக்கிறது" என்றார்.

மறுபடியும் வழக்குமன்றம் தொடங்கியது. அவர் சொன்னார், "கனம் கோர்ட்டார் அவர்களே, ஒரு மணிநேரமாக நான் பேசுவதை பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்ததற்கு நன்றி. ஏனென்றால் எதிர்க்கட்சியார் முன்வைக்க சாத்தியமான எல்லா வாதங்களையும்தான் நான் தந்துகொண்டிருந்தேன். இனி நான் என் கட்சிக்காரரின் தரப்பைச் சொல்லுவேன்."

பின் தன் வாதங்களையே அவர் மறுத்து அந்த வழக்கில் வென்றார்!

சட்ட நிபுணனுக்கு உண்மையின் மீது ஈடுபாடு இருப்பதில்லை. உண்மையைப் பற்றி அவனுக்கு அக்கறையில்லை. பணம் தருகிறவர்களைப் பற்றி மட்டுமே அவனுக்கு அக்கறை. அவன் ஒரு

விபச்சாரியைவிட கேவலமானவன். விபச்சாரி தன் உடம்பை மட்டுமே விற்கிறாள். சட்ட நிபுணனோ தன் மனத்தை விற்கிறான். யார் அவனை விலைக்கு வாங்கினாலும்- யார் அவனுக்கு பணத்தைக் கட்டினாலும்- அவர்களுக்காக தயாராக இருக்கிறான் அவன். எது சரி, எது தவறு என்பதைப் பற்றி அவனுக்கு அக்கறை இல்லை.

ஆனால் நீ ஒரு தியானி ஆகிவிட்டால் எது சரி எது தவறு என்பதைக் குறித்து நீ அக்கறை கொள்ள ஆரம்பிப்பாய். நீ அக்கறை கொண்டுதான் ஆகவேண்டும் என்பதில்லை. அது ஒரு சட்டம் அல்ல. நீ பயிலவேண்டிய ஒரு பண்பாடு அல்ல அது. அது தானே நிகழ்கிறது- சூழ்ச்சிக் குணம் மறையத் தொடங்குகிறது.

எனவே உனக்கு எச்சரிக்கை செய்யவேண்டி இருக்கிறது. நீ ஒரு சந்நியாசி ஆகமுடியும். இதில் எனக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. "நீ யார்?" என யாரையும் நான் ஒருபோதும் கேட்பதில்லை. நீ சந்நியாசம் பெற விரும்பினால் நான் உனக்கு நிபந்தனையின்றி சந்நியாசம் கொடுக்கிறேன்.என் அன்பிலிருந்து நான் உனக்கு சந்நியாசம் கொடுக்கிறேன். என் மரியாதையில் இருந்து நான் உனக்கு சந்நியாசம் கொடுக்கிறேன். ஒவ்வொரு தனிநபரையும் நான் மதிக்கிறேன். ஏனெனில் ஒவ்வொரு தனிநபரும் என்னைப் பொறுத்தவரை கடவுளின் கடவுள்தன்மையின் பிரதிநிதியாய் இருக்கிறார். கடவுள் மிகவும் தாழ்வாக விழுந்து ஒரு சட்ட வல்லுநனாக ஆகியிருந்தாலும் கடவுள் கடவுள்தான்! உன் வீழ்ச்சியுற்ற நிலையிலும், திவாகர், நான் உன்னை மதிக்கிறேன். உனக்கு சந்நியாசம் கொடுப்பேன். இதில் முடிவு செய்ய வேண்டியது நீதான். ஏனெனில் இது ஆபத்தானது- உனக்கும் ஆபத்து; உன் தொழிலுக்கும் ஆபத்து.

இந்தியாவில் காலனி ஆட்சிக்காலத்தில் பிரிட்டிஷ் படைவீரனிடம் அவனுடைய கடமையைத் தவிர வேறு பெரிய வேலை எதுவும் எதிர்பார்க்கப்படவில்லை. துருப்புகள் வெளிப்படுத்தும் எந்த மனித பலவீனமும் சுதேசிகளின் பார்வையில் அவர்களின் மதிப்பைக் குறைப்பதாக கருதப்பட்டது.

எனவே, கோபமுற்ற இந்துக்களின் கும்பல் ஒன்று படைவீரர் குடியிருப்பை அணுகி, தம் கோயில் மக்களில் ஒன்றை காலாட் படை வீரன் ஒருவன் மானபங்கம் செய்துவிட்டான் என புகார் செய்ததும் புதுப் படைத்தலைவன் மிகவும் விசனமுற்றது இயல்பே. அவர்கள் உடனடியான நீதிவிசாரணைக்கு கட்டாயப்படுத்தினார்கள்.

அனுபவசாலியான சட்டநிபுணன் சொன்னான், "கவலைப் படாதீர் ஐயா. நமது ஆள் கண்டிப்பாக தப்பித்து விடுவான். ஏனெனில் இந்த பசு ஏற்கெனவே மிகவும் பெயர் கெட்டுப்போய் இருக்கிறது- ஏற்கெனவே இதே மாதிரி ஏழு வழக்குகளில் அது சம்பந்தப்பட்டிருக்கிறது."

விளங்கியதா?

இத்தகைய சட்டநிபுணத்துவத்தை நீ கைவிடவேண்டி இருக்கும். இத்தகைய சூழ்ச்சித்தன்மையான அணுகுமுறைகளை நீ கைவிட வேண்டி இருக்கும். அதிக மனிதத்தன்மையுடையவனாக நீ மாறவேண்டி இருக்கும். ஆனால் இவையெல்லாம் தியானத்தின் பயனாக வருவன. எதுவும் இங்கு சுமத்தப்படுவதில்லை.

அன்றுதான் ஒரு பிஷப் 'தி டைம்சில்' எனக்கு எதிராக எழுதியுள்ள ஒரு கட்டுரையைப் படித்துக்கொண்டிருந்தேன். "இந்த மனிதனைக் குறித்து எச்சரிக்கையாய் இருங்கள்" என்று அவர் கூறுகிறார். அவர் என்னை மேற்கோள் காட்டுகிறார். "இந்த ஆள் சொல்கிறான், பண்புடைமை என்பது மூடர்களின் கரிசனத்துக்கே உரியது. உண்மையிலேயே நுண்ணறிவுடைய மக்கள் உணர்வைக் குறித்தே கரிசனம் கொள்கிறார்கள்." இது ஒரு ஆபத்தான வாசகம் என்பதால் என்னைக் குறித்து மக்கள் எச்சரிக்கையாய் இருப்பதற்காக இதை அவர் மேற்கோள் காட்டுகிறார். அவர் கூறுகிறார், "இந்த ஆளைப்பற்றிய கட்டுரைகளை வெளியிடுவதை விட பண்புடைமையைப் போதிக்கும் கல்கத்தாவைச் சேர்ந்த அன்னை தெரசாவின் கட்டுரைகளை 'த டைம்ஸ்' அதிகமாக வெளியிட வேண்டும். பண்புடைமையே ஒரே. உண்மையான விஷயம்."

உண்மையான விஷயம் பண்புடைமையே அல்ல. ஆனால் நான் சொல்லியிருப்பதை பாவம் அந்த பிஷப்பால் புரிந்துகொள்ள முடியவில்லை. உணர்வின் விளைவுகளை அவர் புரிந்து கொள்ளவில்லை. பண்புடைமை/ நன்னடத்தை என்பது உணர்வின் பயனாகும். உங்கள் உணர்வில் இருந்து நன்னடத்தை வந்தால் அதற்கே உரிய அழகு இருக்கும். வெளியில் இருந்து திணிக்கப்பட்டால் அது அசிங்கமானது. ஆனால் உலக முழுவதிலும் இதைத்தான் கிறிஸ்தவர்கள் செய்துகொண்டிருக்கிறார்கள். இந்துக்கள் மற்றும் முஸ்லீம்களும் இதே நிலையில்தான் இருக்கிறார்கள்.

உணர்வு பெறுவதே என் முழு அக்கறைக்குரியதாகும். அதிக உணர்வாய் இருப்பது எப்படி என்பதையே நான் உங்களுக்கு போதிக்கிறேன். ஏனெனில் ஒன்று எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது.

அதாவது நீங்கள் அதிக உணர்வுள்ளவர்களாய் இருந்தால் உங்கள் நடத்தை அதற்கேற்ப மாறும். உணர்வுள்ள மனிதர் முற்றிலும் வேறுபட்ட ஒரு வழியில் வாழ்கிறார். அவர் அதிக கருணை உள்ளவராய் இருக்கிறார். கல்கத்தாவில் மதர் தெரசா கருணை உள்ளவராய் இல்லை. கருணை காட்டுகிறார் அவர். ஆனால் அவர் கருணை இல்லை. அவரது கருணை என்பது அவர் சொர்க்கம் அடைவதற்கான ஒரு உபாயமே தவிர வேறல்ல. கருணையை இவ்வாறு ஒரு உபாயமாகச் சுருக்குவது என்பது அசிங்கமானது. கருணையானது தானே தன் பயனாக இருக்கிறது.

ஒரு பழங்காலத்து தாவோயிய உவமைக்கதை சொல்கிறது:

ஒரு மனிதன் கிணற்றுக்குள் விழுந்துவிட்டான். "என்னைக் காப்பாற்றுங்கள்! நான் முழுகிக் கொண்டிருக்கிறேன்!" என்று அவன் சத்தம் போட்டு கத்தத் தொடங்கினான்.

ஒரு புத்த துறவி அவ்வழியே போனார். அவர் கிணற்றுக்குள் பார்த்துவிட்டு சொன்னார். "அமைதியாயிரு, பொறுமையாயிரு. கலவரப்படாதே. வாழ்க்கை இயக்கத்தில் இருக்கிறது. அது வருகிறது. போகிறது. கவுதம புத்தர் சொல்லி இருப்பதை நினைவில் கொள்: எல்லாம் கனவே என்ற அவர், நீ மூழ்கிக் கொண்டிருப்பது என்பது ஒரு கனவு. அதை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்பது ஒரு கனவு. கூச்சல் போடாதே. அப்படியே நீ காப்பாற்றப்பட்டாலும் அதனால் என்ன பயன்? எப்போதாவது நீ சாகவே போகிறாய். அப்படியானால் ஏன் இப்போதே சாகக்கூடாது? ஏன் தள்ளிப் போடுகிறாய்? அமைதியாக, சமாதானமாக சாகு. அப்போதுதான் மறுபடியும் பிறக்க மாட்டாய். பிறப்பு- இறப்புச் சக்கரத்திலிருந்து விடுபடு!"

அந்த மனிதன் திகைத்தான். அவன் சொன்னான், "என்ன உளறிக் கொண்டிருக்கிறீர்! உமது பிரசங்கத்தை பிற்பாடு வைத்துக் கொள்ளலாம். முதலில் என்னை வெளியே எடுத்து விடும்! மாபெரும் தத்துவத்தை போதிக்க இது தருணம் அல்ல!"

ஆனால் பவுத்தர் சொன்னார், "நடக்கிற நிகழ்ச்சிகளால் நான் கவனம் மாறிப் போகக்கூடாது. 'கவனம் பிறழாது நட' என்று புத்தரே சொல்லியிருக்கிறார். வருகிறேன்." பின் அவர் கவனம் பிறழாமல் நடக்கலானார்!

பின் ஒரு கன்பூசிய துறவி கிணற்றை எட்டிப் பார்த்தார். அந்த ஆள் சொன்னான், "தயவு செய்து என்னைக் காப்பாற்றுங்கள். நேரத்தைக் கடத்தாதீர்கள்!"

அதற்கு கன்பூசிய துறவி சொன்னார், "ஆசான் சொல்லி யிருப்பது என்ன என்பதை அறிவாயா நீ? ஒவ்வொரு கிணற்றுக்கும் தடுப்புச் சுவர் எழுப்பவேண்டும் என்று கன்பூசியஸ் சொல்லி இருக்கிறார். கவலைப்படாதே. நாடு முழுவதிலும் நான், எந்தக் கிணறும் இப்படி பாதுகாப்பில்லாமல் விடப்படாதபடிக்கு, மாபெரும் இயக்கத்தை உருவாக்கப் போகிறேன்."

"ஆனால் அது என்னைக் காப்பாற்றாதே!" என்றான் அந்த ஆள்.

கன்பூசியத் துறவி சொன்னார், "தனிநபர்கள் முக்கியம் அல்ல. எப்போதுமே சமுதாயமே முக்கியம், எதிர்காலமே முக்கியம் என ஆசான் அருளி இருக்கிறார். வருங்காலத்தையும் சமுதாயத்தையும் நினை. சுயநலவாதியாய் இருக்காதே!"

அவர் நேராக சந்தைத் திடலுக்கு போய் மக்களுக்கு போதிக்கத் தொடங்கினார்: "என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதை இந்த உதாரணத்திலிருந்து பார்த்தீர்களா? ஒவ்வொரு கிணற்றுக்கும் ஒரு பாதுகாப்புச் சுவர் வேண்டுமென்று எங்கள் ஆசான் ஏற்கெனவே சொல்லி இருக்கிறார். எப்போதும் அவர் கூறுவது சரியாக இருக்கிறது. ஆனால் ஆசான் கூறுவதை மக்கள் கவனிப்பதில்லை. எனவே அவர்கள் துன்புறுகிறார்கள்."

பின் ஒரு கிறிஸ்தவ மதபோதகர் கிணற்றுக்குள் பார்த்தார். அந்த மனிதன் சொன்னான், "இன்று எனக்கு சாவு நிச்சயம் என தோன்றுகிறது. இன்று பொதுமக்களில் யாரும் கிணற்றின் பக்கம் வருவதாகக் காணோம்! இப்போது நீர் உம் வேதத்தை போதியும்!"

ஆனால் கிறிஸ்தவர் சொன்னார், 'கவலைப்படாதே,' என தன் பைக்குள் இருந்து ஒரு கயிற்றை வெளியே உருவினார். கிணற்றுக்குள் அதை வீசினார். அந்தக் கயிற்றை இடுப்பில் கட்டிக்கொள்ளுமாறு அவனிடம் கூறினார். தான் அவனை வெளியே இழுத்து விடுவதாகக் கூறினார். அந்த மனிதன் அதிர்ச்சி அடைந்தான்: தத்துவம் இல்லை, மதப்பிரச்சாரம் இல்லை! அவன் வெளியில் எடுக்கப்பட்டான். மிகவும் நன்றி உடையவனானான். அவர் பாதங்களில் விழுந்து சொன்னான். "நீங்கள் தான் உண்மையான மதத்துக்காரர்! ஆனால் ஒரு ஆச்சரியம்- எப்படி உங்கள் பைக்குள் கயிறு வந்தது?"

அவர் சொன்னார், "நாங்கள் எப்போதும் எல்லாவிதமான சாதனங்களையும் எங்களிடம் வைத்துக் கொண்டிருக்கிறோம்- ஏனெனில் சேவை செய்வதே மதம். மக்களுக்கு சேவை செய்வதன் மூலமாகவே ஒருவர் சொர்க்கத்தை அடைய முடியும். உன்னைப்

பற்றி எனக்கு அக்கறை இல்லை. என் அக்கறை மோட்சத்தில் என் இடத்தைப் பற்றியதே. இப்போது நான் ஒரு மதிப்பெண் ஜெயித்து விட்டேன்! உண்மையில் நானே உனக்கு நன்றி உள்ளவனாகிறேன். தொடர்ந்து விழுந்து கொண்டிரு! உன்னைக் காப்பாற்ற, பாவப்பட்ட மிசனரிகளுக்கு உதவி செய். இதையே உன் குழந்தைகளுக்கு தொடர்ந்து போதி. ஒவ்வொரு கிணற்றுக்கும்சுற்றுச்சுவர் தேவை என்று இந்த கன்பூசியர்கள் சொல்வதை கவனிக்காதே. ஒவ்வொரு கிணற்றுக்கும் ஒரு சுவர் இருந்தால் யாரும் அதில் விழமாட்டார்கள். பின் நாங்கள் எப்படி மக்களுக்கு சேவை செய்ய முடியும்? மக்களுக்கு சேவை செய்யாவிட்டால் மோட்சத்துக்கு எப்படி போக முடியும்? எனவே தொடர்ந்து கிணற்றுக்குள் விழுந்து கொண்டிருங்கள், தொடர்ந்து சுற்றுச்சுவர் இல்லாமலே கிணறுகளை அமையுங்கள். 'அவற்றில் விழும்படி உங்கள் குழந்தைகளுக்கும் போதியுங்கள். உங்களுக்கு சேவை செய்யாவிட்டால் எங்களுக்கு கடவுளை அடைய வேறு வழி இல்லை!"

சிரிக்காதீர்கள்- இதுதான் நிசமான நிலவரம். சற்றே நினைத்துப் பாருங்கள்: இந்தியாவில் வறுமை, அனாதைகள், ஊனமுற்றோர், தொழுநோயாளிகள் முதலியன இல்லாவிட்டால் கல்கத்தாவின் மதர் தெரசா எங்கிருப்பார்? பின் நோபல் பரிசும் கிடைக்காது! ஒரு மதர் தெரசா உருவாக இந்த மக்கள் இருப்பது தேவையாகிறது. எல்லோரும் வளமும் நலமும் மகிழ்ச்சியும் ஆக இருக்கும் ஒரு உலகத்தை இந்த மத போதகர்கள் விரும்பமாட்டார்கள்.

உலகம் செல்வமிக்கதானால், "மக்கள் ஆரோக்கியமாக இருந்தால், நீண்டகாலம் வாழ்ந்தால், மக்களின் வாழ்க்கை ஆனந்தமாக அமைந்தால் பெரும்பகுதி மதம் மறைந்துவிடும்" என்று பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் கூறுவது வழக்கம். அவருடன் நான் முழுமையாக உடன்படுகிறேன். பெரும்பகுதி மதம் மறைந்துவிடும். ஏனென்றால் பெரும்பகுதி மதம் இவற்றை எல்லாம்தான் சார்ந்திருக்கிறது. குறிப்பாக கிறித்தவம் இவற்றையெல்லாம் சார்ந்தே இருக்கிறது.

இப்போது, லண்டன் பிஷப், மதர் தெரசா மாபெரும் பணி செய்வதாக கூறுகிறார்: ஆனால் ஏழைகளே இல்லாவிட்டால், குருடர்களே இல்லாவிட்டால், தொழுநோயாளிகளே இல்லா விட்டால் நீங்கள் எப்படி மாபெரும் பணி செய்வீர்கள்? அப்போது என்ன செய்யப் போகிறீர்கள்? மிசனரிகள் ஒன்றும் தோன்றாமல் முழிப்பார்கள்! இந்த உலகை இதே துன்பத்திலும் குழப்பத்திலுமே

தொடர்ந்து இருத்தவேண்டும்- பாவம் அந்த மிசனரிகளை நினைத்துப் பாருங்கள்- இல்லாவிட்டால் அவர்கள் இருக்கமாட்டார்கள்.

என் அக்கறை நிச்சயமாய் உணர்வு பற்றியதே; நடத்தை பற்றியதல்ல. என் அக்கறை, உங்களை அதிக விழிப்பும் அதிக உன்னிப்பும் உடையவர் ஆக்குவதே. அந்த விழிப்புணர்வில் இருந்து எது நிகழ்வதாயினும் அது நல்லதே. அந்த விழிப்பில் இருந்து சேவை நிகழ்ந்தால் நல்லதே. 'அன்பு நிகழ்ந்தால் நல்லதே, கருணை நிகழ்ந்தால்' நல்லதே. பகிர்தல் நிகழ்ந்தால் அதுவும் நல்லதே. ஏனெனில் அந்த விழிப்பில் இருந்து தீமை நிகழ்வது சாத்தியமில்லை.

திவாகர், உன்னை வரவேற்கிறேன். நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்பது பற்றி எனக்கு அக்கறையில்லை. என் அக்கறை முழுவதும் உன் ஜீவனைப் பற்றியதே, உன் செய்கையைப் பற்றியதல்ல.

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**இல்லை இல்லை! எனக்கு விளங்கவில்லை! கால்சராயா! கர்ச்சனையா? என்னது? நான் செவிடா அல்லது வேறெதாவதா?**

**பிரேம் கதீனா.**

**நீ** செவிடுமல்ல "வேறெதாவதும்" அல்ல. ஒன்று நீ பிரிட்டிஷ்காரி அல்லது உன் முன்பிறவியில் நீ பிரிட்டிஷ் ஆக இருந்திருக்க வேண்டும்!

75 வயதான பிரிட்டிஷ் படைத்தலைவர் (பீல்டு மார்ஷல்) தன் படைப்பிரிவை நேர்நிலைக்கு கொணரும்படி துணைத்தலைவரிடம் சொல்லிவிட்டு அறிவிக்கிறார்: "கனவான்களே, கிரீன்விச் சராசரி நேரப்படி 08.30 மணிக்கு என் மனைவி 7 1/2 பவுண்டு எடையுள்ள ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் என்பதை உங்களுக்குத் தெரிவிப்பதில் பெருமைப்படுகிறேன். கனவான்களே உங்களுக்கு என் நன்றி!"

கதீனா, விளங்கியதா?

இந்த மிகவும் சரியான ஆங்கிலேயன், ஒரு வளர்ப்புப் பிராணிக் கடைக்குள் நடக்கிறான். கதவை தன் பின்னால் சாத்தியதுமே அவனை ஒரு குரல் வரவேற்கக் கேட்கிறான். "உம்மைப் பற்றி எனக்கொன்று தெரியும்! உம்மைப் பற்றி எனக்கொன்று தெரியும்!".

தருமசங்கடத்துடன் சுற்றிலும் பார்த்து அது ஒரு கிளிதான் என காண்கிறான். அதனால் கவரப்பட்டு அதை வாங்க விலை கேட்கிறான்.

"மன்னிக்கவும்" என்கிறார் கடைக்காரர். "அதை என்னால் விற்க முடியாது. ஆனால் ஒரு ஜோடி முட்டைகளை உங்களுக்கு நான் விற்க முடியும். அவைகள் குஞ்சு பொரித்தால் அதே ஜாதி கிடைக்கும்."

ஆங்கிலேயன் அந்த முட்டைகளை வாங்குகிறான். வீட்டுக்கு எடுத்துச் செல்கிறான். குஞ்சு பொரிக்கும் இயந்திரத்தில் வைக்கிறான். பத்து நாட்கள் கழித்து இரு சிறு வாத்துக் குஞ்சுகள் முட்டை ஓடுகளில் இருந்து தவழ்ந்து வெளிவருகின்றன. வெகுண்டவனாய் முறையிட கடைக்குப் போகிறான். வாசலில் நுழைந்ததுமே அவன் காதில் விழுகிறது. "உம்மைப் பற்றி எனக்கொன்று தெரியும்! உம்மைப் பற்றி எனக்கொன்று தெரியும்!"



# 9

முதல் கேள்வி:

ஓஷோ,

நான் இங்கே ஏறக்குறைய 2½ ஆண்டுகளாக இருந்து வருகிறேன். ஆனால் என் வாழ்க்கையில் ஏதோ அடிப்படையிலேயே தவறாகப் போய்க் கொண்டிருப்பதாகவே இன்னும் உணர்கிறேன். சுருக்கமான தரிசனக் கீற்றுகளைத் தவிர எந்த நீடித்த அர்த்தத்தையும் அதில் நான் காண முடியவில்லை. பெரும்பாலான நேரங்களில் அடியற்ற, மிகவும் அச்சுறுத்தலான, அசவுகரியமான "அனாமத்தாக" தொங்கிக் கொண்டிருக்கிறேன். எங்கே தவறு நேர்ந்தது? தயவு செய்து விளக்கவும்.

பிரேம் கயன்,

**வா**ழ்க்கைக்கு ஒரு நிரந்தர அர்த்தத்தை அடையும் ஆசையில்தான் முழுப் பிரச்சனையின் வேரும் இருக்கிறது. வாழ்க்கை ஒரு பிரச்சனையே இல்லை. ஆனால் வாழ்வின் அடிப்படை விதிக்கு எதிராக விஷயங்கள் நடக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கிறோம். அதனால் தொல்லைப் படுகிறோம். வாழ்க்கை ஓயாமல் மாறிக்கொண்டு இருக்கிறது. அவ்வாறு அது ஓயாமல் மாறிக்கொண்டிருப்பது நல்லதுதான். அதுதான் அதன் அழகு, அதன் மகத்துவம். அது நிலையானதாக, மாறாததாக இருந்தால் அது வாழ்க்கை ஆகாது. மரணமாகவே இருக்கும்; முற்றிலும் சலிப்பானதாகவே இருக்கும்; தேங்கிக்கிடப்பதால் அது துர்நாற்றம் எடுக்கும். ஆனால் மனமோ ஓயாமல் நிரந்தரத்தையே கேட்கிறது. நிரந்தரத்துக்கான வேட்கையே மனம். ஆனால் வாழ்க்கையோ நிலையற்றது.

எனவே உண்மையாகவே நீ ஆனந்தமாயிருக்க விரும்பினால் நிலையற்ற வாழ்வை அவ்வாறே நீ வாழ வேண்டியதே; எந்த எதிர்பார்ப்பும் இன்றி உன்பங்குக்கு எந்த சுமத்தலும் இன்றி வாழ வேண்டியதே. வாழ்க்கையுடன் மிதந்தபடி செல். அது மாற்றுகிறது. அதனுடன் சேர்ந்து நீ மாறுகிறாய். நிரந்தர அர்த்தத்துக்காக ஏன் கவலைப்படுகிறாய்? நிரந்தர அர்த்தத்தை வைத்து என்ன செய்வாய்?

ஒன்று இன்னொன்றுக்கான சாதனமாக இயங்கும்போது மட்டுமே அர்த்தம் என்பது நிலவுகிறது. வாழ்வு வேறொன்றுக்கான சாதனம் அல்ல. தன்னிலேயே அது நிறைவுற்றது அதுவே அதன் முடிவு. எனவே உண்மையிலேயே அதற்கு எந்த அர்த்தமும் இருக்க முடியாது. இதன்பொருள். அது அர்த்தமற்றது என்பதல்ல. இதன்பொருள். அது அர்த்தம்- அனர்த்தம் இரண்டையும் கடந்தது என்பதே. அந்த சொற்களுக்கு தேவையில்லை.

ஒரு ரோசா மலருக்கு என்ன அர்த்தம்? ஒரு சூரிய மறைவுக்கு என்ன அர்த்தம்? அன்புக்கு என்ன அர்த்தம்? அழகுக்கு என்ன அர்த்தம்? அவற்றுக்கு எந்த அர்த்தமும் (Meaning) இல்லை. ஏனெனில் அவை வேறு எதற்கும் சாதனமாக (Means) இல்லை. ஒரு சூரிய அஸ்தமனம் தன்னளவிலேயே அழகாயிருக்கிறது. அவ்வளவுதான். அதற்கு எந்தப் பயன்பாடும் இல்லை. அதை நீங்கள் ஒரு சரக்காகப் பயன்படுத்த முடியாது. ஒரு காருக்கு பொருள் இருக்கிறது. ஒரு இயந்திரத்துக்கு பொருள் இருக்கிறது. ஒரு வீட்டுக்குப் பொருள் இருக்கிறது. ஆனால் ரோசா மலருக்கு என்ன பொருள் இருக்கிறது? அதில் எந்த அர்த்தமும் இல்லை. ஆனால் அதில் அர்த்தம் இல்லாததால் அது மகத்தான அழகுடையதாய் இருக்கிறது. ஒரு இயந்திரம் எவ்வளவுதான் அர்த்தமுடையதாய் இருந்தாலும் அது ஒருபோதும் அழகாய் இருப்பதில்லை. இருக்க முடியாது. ஏனெனில் அது ஒரு சரக்கு; பயன்பாட்டுக்குரியது. அது ஒரு கவிதை அல்ல.

வாழ்க்கை ஒரு கவிதை. ஒரு பாடல், ஒரு ஆடல்.

கயன், உன் அணுகுமுறையே தவறாக இருக்கிறது. எனவேதான் நீ தவறவிட்டுக்கொண்டே போகிறாய்.

சுருக்கமான தரிசனக் கீற்றுக்களைத் தவிர எந்த நீடித்த அர்த்தத்தையும் அதில் நான் காண முடியவில்லை என்கிறாய்.

அந்த சின்னச் சின்ன தரிசனக் கீற்றுகளின்மீது தியானம் செய்-போதும். நீ அர்த்தத்தைத் தேடியிராத போதே, நீ இளைப்பாறுதலாக இருந்தபோதே அர்த்தம் பற்றிய யாவற்றையும் நீ மறந்திருந்த போதே

அர்த்தத்தைப் பற்றியே நீ கவலைப்படாத போதே அந்த தரிசனக் கீற்றுகள் நிகழ்ந்திருக்க வேண்டும். அப்போது திடுமென அங்கே ஆனந்தம் இருக்கிறது, பரவசம் இருக்கிறது. அந்த அழகிய கீற்றுகளை. அந்தக் கணங்களை நீ பற்றத் தொடங்கிய- தொற்றத் தொடங்கிய கணத்திலேயே; "இதை நீ நிரந்தர மாக்கு, நான் எப்போதும் கேட்டுக்கொண்டிருந்தது இதைத்தான். இதை போகவிட்டு விடாதே" என உன் மனம் சொல்லும் அந்த கணத்திலேயே, நீ அதை அழித்துவிடுகிறாய்; அதைக் கொன்று விடுகிறாய். அந்த தரிசன ஒளிக்கீற்று மறைகிறது. அது ஒரு ஞாபகமாக மட்டுமே தங்கி இருக்கிறது. அது தொலைவில் மங்கிக்கொண்டே போகிறது. விரைவில், அது நிகழ்ந்தது என்பதைக் கூட உன்னால் நம்ப முடியாமல் போகிறது. அர்த்தத்துக்கான ஓயாத ஆசையை. நிரந்தரத்துக்கான ஓயாத ஆசையை, எல்லாம் உனக்கு ஏற்றவிதமாகவே இருக்க வேண்டும் என்னும் ஓயாத ஆசையை மறுபடியும் நீ மறைந்திருக்கிற போதே மறுபடியும் அது நிகழும்.

இல்லை கயன், ஒரு சந்நியாசியின் வழியல்ல இது. ஒரு சந்நியாசி இருத்தலிடமிருந்து எதையும் எதிர்பார்ப்பதில்லை. எந்த அடையுமின்றி இருத்தலுடன் சேர்ந்து ஒழுக மட்டுமே செய்கிறார் அவர். இருத்தல் தன் சொந்த வழியில் போக அனுமதிக்கிறார் சந்நியாசி. அது எங்கு இட்டுச் செல்வதாயினும் அதனுடன் சேர்ந்துபோக ஆயத்தமாயிருக்கிறார் சந்நியாசி. சந்நியாசிக்கு எந்த இலக்கோ, இலட்சியமோ கிடையாது. அப்போதுதான் இந்த தரிசன ஒளிக்கீற்றுகள் அதிகமதிகம் வந்து கொண்டிருக்கும்.

ஆனால் இந்த தரிசனங்களின்மீது நீங்கள் தியானிக்க வேண்டும்; அவை எப்போது நிகழ்கின்றன, எப்படி நிகழ்கின்றன. எதனால் நிகழ்கின்றன என்பதை தியானிக்க வேண்டும். அப்போது நீங்கள் சில அடிப்படையான விஷயங்களை கண்டு கொள்வீர்கள்: அவை நிகழ்கிற போது நீங்கள் இளைப்பாறுதலாக இருக்கிறீர்கள்; அவை நிகழ்கிறபோது நீங்கள் ஓய்வாக இருக்கிறீர்கள்; அவை நிகழ்கிறபோது நீங்கள் ஆசையில்லாமல் இருக்கிறீர்கள்; அவை நிகழ்கிறபோது நீங்கள் பொருள் பற்று இல்லாமல் இருக்கிறீர்கள்; அவை நிகழ்கிற போது நீங்கள் அர்த்தம். முக்கியத்துவம், மதிப்பு பற்றி எண்ணாமல் இருக்கிறீர்கள். அங்குதான் திறவுகோல் உள்ளது. இந்தத் தடைகளை எல்லாம் எப்போதைக்குமாக கைவிடுங்கள். வாழ்க்கை தன் சொந்த இசைவுடன் நிலவ விடுங்கள்; அதன் பகுதியாக மட்டும் இருங்கள். பெருங் கடலின் ஒரு அலையைப் போல் இருங்கள்.

சமுத்திரத்தை ஆதிக்கம் செய்ய முயலாதீர்கள். அந்த முயற்சியே அகங்காரத்தின் ஒரு போக்குத்தான்.

**மர்ஃபியின் பொன்மொழியை தியானியுங்கள்:**

**நீ இருக்கும் இடத்தைப் பற்றி கவலையில்லை என்றால் நீ தொலைந்து போவதில்லை.**

**இன்னொன்று:**

**அதிகமோசம் ஆகமுடியாத எதுவும் அவ்வளவு மோசம் அல்ல.**

களிகூறு! அனாமத்தைப்பற்றி ஏன் அச்சப்படுகிறாய்? எல்லா இடமும் அனாமத்தான இடம்தான். நீ எங்கிருந்தாலும் அது அனாமத்தான இடம்தான். இயற்கை எல்லையற்றது. எனவே எப்போதும் நீ அனாமத்தான இடத்தில்தான் இருப்பாய். அதை நீ ஏற்றுக்கொள்ளவே வேண்டும். புத்தர் அதை தடாதம்- அயத் தன்மை என்கிறார். அது அத்தகையதே: நீ எங்கிருந்தாலும் அது அனாமத்து போன்றதே, நீ யாராக இருந்தாலும் நீ ஒரு அனாமதேயமே.

இந்த உண்மைகளை நீ ஏற்றதுமே வாழ்க்கை முற்றிலும் வித்தியாசமான வழியில் நிகழத் தொடங்குகிறது. ஏனெனில் இதை ஏற்கும்போது அகங்காரம் சாகிறது. எதிர்ப்பு- மறுப்பு- போராட்டம் வழியாகவே அகங்காரம் நிலவ முடியும்.

அதைத்தான் நீ செய்து கொண்டிருக்கிறாய் கயன். ஆனால் உனக்கு மட்டுமே விசேசமானதல்ல. ஜெர்மானிய மனம் முழுவதுமே இப்படித்தான் இயங்கும்படி கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது.

கயன் ஒரு ஜெர்மனிக்காரி- நூறு சதவிகிதம் ஜெர்மன். ஒரு முறை நான் அவளை என் ஊடகங்களில் ஒருத்தியாக தேர்ந்தெடுக்க விரும்பினேன். ஆனால் குறைந்தது இப்போதைக்கு அத்திட்டத்தை நான் கைவிட வேண்டியதாயிற்று. இதற்கான ஒரே காரணம் ஜெர்மன் தலை அவளில் மிகவும் ஆழமாக வேர்விட்டு இருக்கிறது. என் ஆற்றலுடன் சேர்ந்து பாய அவளால் முடியவில்லை. அவளுக்கே அது தெரியவில்லை. அவள் ஒரு ஊடகமாக இருக்க விரும்பினாள். நான் அவளை அழைத்ததும் எவ்வளவோ மகிழ்ந்தாள். தான் தேர்ந்தெடுக்கப்படுவோம் என அவள் நம்பிக்கொண்டிருந்தாள். அவள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் ஆழமான உணர்வற்ற எதிர்ப்பு இருந்தது. உணர்வுப்பூர்வமாக அவள் முற்றிலும் என் கைகளில் இருந்தாள். ஆனால் என் ஆற்றலுக்கு ஒரு குறிப்பிட்ட

வடிவத்தை, ஒரு குறிப்பிட்ட பாணியை, ஒரு குறிப்பிட்ட போக்கைத் தர உணர்வற்று முயன்று கொண்டிருந்தாள். எனவே இன்னும் கொஞ்சம் பொறுப்பது நல்லது என நான் நினைத்தேன்.

கயன், நீ உன் ஜெர்மன் தளையை கைவிட வேண்டி இருக்கிறது. நீ ஒரு படைவீரன் ஆக விரும்பினால் அந்த தளை பொருத்தமானது. ஆனால் ஒரு சந்நியாசி ஆவதற்கு நீ விரும்பினால் அது நல்லதல்ல. அவை இரண்டும் இரண்டு துருவங்களாக இருக்கின்றன. ஒன்றுக்கொன்று நேர் எதிராக இருக்கின்றன. சந்நியாசியானவர் முழு ஓய்வில், இளைப்பாறுதலில், எதிர்ப்பின்மையில் இருக்கவேண்டி இருக்கிறது. ஒரு உள்ளீடற்ற மூங்கில் குழாயாக இருக்கவேண்டி இருக்கிறது- அப்போதுதான் அவர் தெய்வீகத்தின் உதடுகளில் புல்லாங்குழல் ஆகமுடியும்; ஒரு பாடல் அவரிலிருந்து எழ முடியும்.

அது நிகழும் கயன், அது நிகழவே போகிறது. அதன் சில கீற்றுகள் நிகழத் தொடங்கினாலும் பின் அதில் பிரச்சனை இல்லை. எப்போதாவது ஒரு முறை சில சன்னல்கள் திறந்தாலும் பின் கதவுகளும் திறக்கும்; அந்த சன்னல்களின் வழியாக நீ திறந்த வானத்துக்கு தப்பிக்க முடியும். ஆனால் செய்வன திருந்தச் செய்யும் எண்ணம் மிக அதிகமாக உன்னிடம் இருக்கிறது. அந்தக் கருத்தைக் கைவிடு. திருத்தமின்மை என்பது முற்றிலும் நல்லதே. சாத்தியம் இல்லாததைச் செய்ய முற்படாதே. சாமானியமாக இருப்பதே அசாதாரண அழகுள்ளதாகத்தான் இருக்கிறது.

ஆனால் அவளுடைய பிரச்சனைகளை நான் பார்க்க முடிகிறது. அவள் ஒரு ஜெர்மன்காரி என்பதே அடிப்படையான பிரச்சனை. இரண்டாவது பிரச்சனை நவீன விளம்பர மாதிரியாக அவள் வேலை செய்திருக்கிறாள். எனவே செம்மையான அழகுடன் இருப்பது எப்படி என்பதைப்பற்றிய கருத்து அவளிடம் இருக்கிறது. அந்த விஷயங்கள் அவளுக்குள் ஆழமாக இறங்கி உள்ளன. அவள் ஒரு திருத்தவாதி. எனவே இந்த 2 1/2 ஆண்டுகளில் அவள் இருந்த இடம் எல்லாம் பிறருடன் அவளுக்கு மோதலே ஏற்பட்டிருக்கிறது. ஏனெனில் இந்த இடம் திருத்தவாதிகளுக்குரியதல்ல, கிறுக்கர்களின் இடம் இது- இது முற்றிலும் ஜெர்மன்தன்மை அற்றது! இதில் பிரச்சினை என்னவென்றால் என்னிடம் நிறைய ஜெர்மன் சந்நியாசிகள் இருக்கிறார்கள்! எனவே ஜெர்மனி அரசாங்கம் ஏன் இவ்வளவு கவலைப்படுகிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஏனெனில் இளையவர்களை நான் நாசமாக்குகிறேன்- ஜெர்மானியர் என்னும் அவர்களின் தளையை நான் நாசமாக்கு

கிறேன். அவர்கள் சந்நியாசிகள் ஆகிவிட்டதுமே, சந்நியாசியாக இருக்கும் கலையை அவர்கள் புரிந்துகொண்டதுமே. எந்த அடால்ப் ஹிட்லரும் அவர்களை ஆதிக்கம் செய்ய முடியாது. அது அசாத்தியம்.

திருத்த வாதம் என்பது ஒருவித நரம்புக் கோளாறு. அது ஒருவித மூளைக் கோளாறுதான்- மூளைக் கோளாறுக்கு தரப்பட்டுள்ள அழகான பெயரே அது.

கயன், அந்தக் கருத்தைக் கைவிடு. சாதாரணமாக, எளிமையாக, அனாமதேயமாக இரு. அப்போது விஷயங்கள் வியக்கத்தக்க முறையில் விரைந்து நிகழத் தொடங்கும்.

சில நாட்களுக்கு அவளை ஜெர்மனிக்கு திருப்பி அனுப்பப் போகிறேன். அவளுக்கு நிகழ்ந்திருப்பது என்ன என்பதை அப்போதுதான் அவள் பார்க்கவும் ஒப்பிடவும் முடியும். ஜெர்மனியில் இருந்து பார்த்தால் மட்டுமே அவளால் புரிந்து கொள்ள முடியும். இந்த 2½ ஆண்டுகளில் நிறைய மாற்றம் ஏற்பட்டிருக்கவே செய்கிறது என்பதை அங்கு வைத்தே அவளால் காணமுடியும். அவள் பழைய ஆளாக இனியும் இல்லை. மேலும் அங்கு மக்கள் எப்படி நடந்துகொள்கிறார்கள், மூளைக்கோளாறு டையவர்களாக எப்படி பயிற்றப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அவளால் உணர்ந்துகொள்ள முடியும். பின் அவள் திரும்பும்போது மேலும் சிறந்த புரிதலுடன், அதிக இளைப்பாறு தலாக, அதிக ஓய்வு நிரம்பியவளாக வருவாள் என நம்புகிறேன்.

உன்மேல் மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கிறேன். கயன்-நிறைய சாத்தியங்கள் உள்ளன. நீ விளிம்பில்தான் நிற்கிறாய். விஷயங்கள் இருக்கிற நிலையை அப்படியே ஏற்கத் தொடங்கிதுமே, அவை இப்படித்தான் இருக்கவேண்டும்' என்னும் கருத்தை நீ கைவிட்ட துமே, இவை "செய்யக்கூடியவை" இவை "செய்யக் கூடாதவை" என்னும் கருத்தை நீ கைவிட்டதுமே பின் அதிக சிரமம் இருக்காது; வாழ்க்கை உனக்கு உதவ ஆரம்பிக்கிறது. உன்னைக் கவனித்துக் கொள்ள தொடங்குகிறது. வாழ்க்கை மிகவும் ஆதரவானது, மிகவும் அன்பானது. நாம் தான் அதற்கு ஒருபோதும் இடம் கொடுப்ப தில்லை. நாம் எப்போதும் அதை நம் வழியில் வலிந்து திருப்ப முயல்கிறோம். அதுவோ சாத்தியமில்லை. வாழ்க்கை நம் வழிக்கு வரமுடியாது. நாம்தான் வாழ்வின் வழியில் போகவேண்டும்.

விட்டுவிடும் தத்துவத்தை திரும்பத்திரும்ப நான் வலியுறுத்துவதன் பொருள் இதுதான். வாழ்வையும் இருத்தலையும் பொறுத்தவரை என் ஒரே அணுகுமுறை விட்டுவிடுவதே.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**இப்போதுதான் நான் சந்நியாசம் மேற்கொள்ளத் தீர்மானித்தேன். ஏனெனில் [நான் இங்கிருக்கும் 5 வாரங்களில்] எப்படியும் அதை செய்துவிட விரும்பினேன். இப்போது மறுபடியும் உள் போராட்டம் தொடங்குகிறது. நான் நெருக்கடிக்குள் இருப்பதாக உணர்கிறேன். இது சுதந்திரமான தீர்மானம் இல்லையோ என்றும் உண்மையில் என் இதயத்தில் இருந்து அது வரவில்லை என்றும் உணர்கிறேன்.**

**ஹெல்கா செலின்ஸ்கி,**

தயவுசெய்து சந்நியாசம் மேற்கொள்ளாதே, பொறு. இது சரியான சமயம் அல்ல. அது உண்மையில் உன் இதயத்தில் இருந்து வராவிட்டால் அதை உன்மேல் வலிந்து திணிக்காதே. அது வெளியில் இருந்து சுமத்தப்பட்டதாகவும் அசிங்கமாகவுமே இருக்கும். சுமத்தப்பட்டது எதுவும்- அது சந்நியாசமேயானதும்- அசிங்கமாகிறது. அது செயற்கையானதாயிருக்கும். நிஜமானதாக இருக்காது. உயிருள்ளதாக இருக்காது. அதற்கு அவசியமில்லை. எந்த நெருக்கடி உணர்வும் இல்லாமல் தன்னியல்பாக அது நிகழ்ந்தால் மட்டுமே நல்லது. மற்றபடி அது உனக்கு தொந்தரவையே உண்டாக்கும். உனக்கு அனாவசிய தொந்தரவை உண்டாக்க நான் இங்கே இல்லை. சந்நியாசி ஆனதும் உனக்குப் பலப்பல அவசிய தொந்தரவுகள் இருக்கும். எனவே அனாவசிய தொந்தரவுகளை கூடுமானவரை தவிர்த்துவிடு. ஏனென்றால் அவசியமானவையே நிறைய உள்ளன.

மேலும் தவறான காரணங்களுக்காக எதையும் ஒருபோதும் செய்யாதே, நிறையப் பேர் சந்நியாசம் மேற்கொள்கிறார்களே. உன் நண்பர்கள் எல்லாம் சந்நியாசம் ஏற்றுவிட்டார்களே, "அதில் ஏதோ ஒன்று இருக்கவேண்டும்- இல்லாவிட்டால் ஏன் இத்தனைபேர் அதனால் ஈர்க்கப்படுகிறார்கள்" -இவை எல்லாம் தவறான காரணங்கள்.

மர்ஃபி சொல்கிறார்: சரியான காரணங்களுக்காக எதுவும் ஒருபோதும் செய்யப்படுவதில்லை.

ஏறக்குறைய 99.9 சதவீத தேர்வுகளில் அவர் சொல்வது சரிதான். சரியான காரணங்களுக்காக எதுவும் ஒருபோதும் செய்யப்படுவதில்லை. தவறான காரணங்களுக்காகவே மக்கள் காரியங்களைச் செய்துகொண்டு போகிறார்கள். பின் தம் வாழ்க்கை பரிதாபமாக

உள்ளது என அவர்கள் முறையிடுகிறார்கள். அப்படித்தான் ஆகும், அவர்களே அதற்கு காரணம். வேறுயாரும் பொறுப்பாக முடியாது.

எப்போதும் சரியான காரணங்களுக்காகவே காரியங்களைச் செய்யுங்கள். சரியான காரணங்கள் உங்கள் இதயத்திலிருந்து வருகின்றன, தலையில் இருந்து அல்ல.

மர்ஃபி கூறுகிறார்: நீங்கள் எங்கே போனாலும் அங்கே நீங்கள் தான் இருக்கிறீர்கள்.

ஆயின் அது எப்படி உதவமுடியும்? ஹெல்கா. நீ ஒரு சந்நியாசி ஆகலாம். ஆரஞ்சு அங்கி அணியலாம். ஆனால் அந்த ஆரஞ்சு ஆடைகளின் உள்ளே, ஒரு புதுப்பெயரின் பின்னால் இருப்பது நீதானே. எல்லாமே பழசாயிருக்கும், விலாசம் மாத்திரம் மாறி இருக்கும். முகவரியை மாற்றுவதன்மூலம் ஒரு புரட்சியின் ஊடாக நீ போவதில்லை. மறுபடியும் நீ பிறப்பதில்லை. மறுபடியும் நீ பிறக்காவிட்டால் நீ ஒரு சந்நியாசி ஆக முடியாது.

பொறு. இது சரியான சமயம் அல்ல. இத்தகைய முக்கியமான விஷயங்களில் ஒருபோதும் அவசரப்படாதே. இது வாழ்வா சாவா என்னும் பிரச்சனை, உண்மையில் வாழ்வையும் சாவையும்விட அதிமுக்கியமான பிரச்சனை. ஏனென்றால் அது உன்னை வாழ்வு, சாவு இரண்டுக்கும் அப்பால் எடுத்துச்செல்ல முடியும். அதுதான் சந்நியாசத்தின் ரசவாதம். அது உங்களை வாழ்வுக்கும் சாவுக்கும் அப்பால் இட்டுச் செல்கிறது. வேறு எதையும் விட அது எவ்வளவோ முக்கியமானது. எனவே இதில் அவசரம் கூடாது, ஆத்திரம் கூடாது.

இந்த ஐந்து வாரங்களும் வெறுமனே இங்கு இரு. தியானி. சில குழு தியானங்களில் ஈடுபடு, சந்நியாசிகளை கவனி. பின் வீடுதிரும்பு. 'சந்நியாசம் பெறுவதா வேண்டாமா' என உன் மனதில் பதற்றத்தை உருவாக்கிக் கொள்ளாதே. இல்லாவிட்டால் உன் ஐந்து வாரங்களும் வீணாகிப்போகும். எதிலும் உன்னால் முழுமையாக பங்கேற்க முடியாது. ஏனென்றால், “எப்போது நான் சந்நியாசம் வாங்கப் போகிறேன்?” என நீ ஓயாது கவலைப்படுவாய். சந்நியாசி ஆகாவிட்டால் எதையோ பறிகொடுத்து விட்டதாக உணர்வாய். ஆகிவிட்டாலோ உன் இதயத்தில் இருந்து வராத ஒன்றைச் செய்துவிட்டதாக கருதுவாய். எந்த வழியிலும் நீ தோற்றவனாகவே ஆவாய்.

காரியங்கள் எளிதாக நிகழ, நீயாக அவற்றைச் செய்யத் தேவையில்லாதிருக்க, அவை தாமாக நிகழ ஒவ்வொன்றுக்கும் ஒரு

பருவம்- சரியான பருவம்- இருக்கிறது. அவை நிகழ்கின்றன என்னும் உண்மைக்கு நீங்கள் ஒரு சாட்சியாக மாத்திரம் இருக்கிறீர்கள். பாம்பானது ஒருநாள் தன் சட்டையை உரித்துவிட்டு புறப்படுவது போன்றது இது. அது முடிவுசெய்யவில்லை. அதற்கு நேரம் வந்துவிட்டது. ஒருநாள் குழந்தை கருப்பத்தில் இருந்து வெளியே வந்து பிறக்கிறது. 9 மாதங்கள் முடிந்துவிட்டன. "இனி நான் பிறந்தாக வேண்டும்" என குழந்தை முடிவு எடுப்பதில்லை. வசந்தம் வருகிறது. உடனே எங்கெங்கும் பூக்கள்... உலகம் முழுவதுமே களிப்பாக இருக்கிறது.

சந்நியாசமும் அப்படித்தான் சம்பவிக்கிறது. அப்போது அதில் அழகிருக்கிறது; அருள் இருக்கிறது. அப்போது மட்டுமே நீ சந்நியாசியாக இருக்கிறாய். இது ஆள்சேர்க்கும் விஷயமல்ல. உன்மேல் திணிக்கப்படும் ஒரு ஒழுங்குமுறை அல்ல. சார்பாகவோ எதிராகவோ பேசுவதற்கான வாதம் அல்ல இது. உன் இதயத்தில் இருந்து அது வருகிறபோது வேறுவழியே இல்லை. இதுவா- அதுவா என்னும் கேள்வியே இல்லை. அது தத்துவம் இல்லை.

சோரன் கீர்க்கேகார்டு ஒரு அழகான புத்தகம் எழுதி இருக்கிறார். அதன் பெயர் 'இதுவா அதுவா'. அந்தப் புத்தகத்தின் பெயர் மட்டுமல்ல அது. அவரது வாழ்க்கை முழுவதையுமே இதுவா- அதுவா எனும் அனுபவங்களின் தொகுப்பாக சொல்ல முடியும். தன் வாழ்க்கை முழுவதிலும் ஒருபோதும் அவர் தீர்மானமாய் இருந்ததில்லை- ஒன்றைச் செய்வதா செய்யாதிருப்பதாக என எப்போதும் அவர் எண்ணிக் கொண்டிருந்தார்.

பல ஆண்டுகளாக ஒரு பெண் அவருக்காகக் காத்திருந்தாள். ஆனால் அவளை மணப்பதா வேண்டாமா என்பதில் அவரால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அவர் யோசித்து யோசித்துப் பார்த்தார். பெரிய பெரிய அகராதிகளைப் புரட்டினார். திருமணம், காதல் பற்றிய மாபெரும் நூல்களைப் படித்தார். சார்பாகவும் எதிராகவும் பல குறிப்புகளை எடுத்தார். இப்படியும் அப்படியுமாக எடைபோட்டார். ஆனால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை. எல்லா வாதங்களும் ஏறக்குறைய சரிசமமாகவே வந்து நின்றன. ஆதரவாகவும் நிறையச் சொல்ல முடிந்தது. எதிராகவும் நிறையச் சொல்ல முடிந்தது. இரண்டும் சரிசமமாக வந்து நின்றது- அப்படியானால் எப்படி தீர்மானிப்பது? சலித்துப் போனவளாய், அவள் வேறொருவரை மணந்து கொண்டாள்.

அவர் வாழ்க்கை முழுவதுமே இப்படித்தான் இருந்தது: ஒவ்வொன்றைப் பற்றியும் அவர் மென்மேலும் சிந்தித்தவண்ணம் இருந்தார். அவரால் ஒருபோதும் எந்தக் காரியத்தையும் செய்ய முடியவில்லை. மரணமும் அவரால் முடிவு செய்யப்பட வேண்டிய ஒரு பிரச்சனையாக இருந்தால் அவர் இன்றுவரை செத்திருக்க மாட்டார். கோப்பனேகனில் இருந்துகொண்டு சாவைப்பற்றி யோசித்துக் கொண்டிருப்பார். பிறப்பு என்பது அவர் சிந்தித்து முடிவெடுக்க வேண்டிய காரியமாக இருந்திருந்தால் அவர் ஒருபோதும் பிறந்திருக்கவே மாட்டார். தாயின் கருப்பைக்குள் உட்கார்ந்துகொண்டு சிந்தித்துக் கொண்டே இருந்திருப்பார்- வெளிவருவதா வேண்டாமா? அவரின் அணுகுமுறை. வாழ்க்கையைப் பற்றிய இந்த மடத்தனமான அணுகுமுறை ஊரில் எல்லோருக்கும் தெரிந்து போயிருந்தது. அவர் தெருவில் நடந்துசெல்லும் போதெல்லாம்- மாதத்துக்கு ஒரு தடவைதான் வங்கிக்குப்போய் கொஞ்சம் பணம் எடுக்கப் போக வேண்டி இருந்தது... தன் மகனையும், எதையும் தீர்மானிக்க முடியாதிருக்கும் அவருடைய இயலாமையையும் கண்ட அவருடைய அப்பா, மகனின் பெயரில் வங்கியில் கொஞ்சம் பணத்தை இருப்பில் போட்டு வைத்தார். ஏனெனில் அவர் தன் வாழ்வில் எதையும் செய்ய முடியப் போவதில்லை என்பது தீர்மானகரமாக தெரிந்துபோயிற்று. ஒரு நல்ல வேலைக்கு- பேராசிரியர் வேலைக்கு- வாய்ப்பு வந்தது. அவர் நீண்ட காலம் சிந்தனையில் மூழ்கிவிட்டதால் பல்கலைக்கழகம் வேறொருவரை நியமிக்க முடிவு செய்துவிட்டது. எனவே அவர் மிகவும் ஏழ்மையான முறையிலேயே வாழ்ந்தார். ஏனெனில் வங்கியில் அளவான பணமே இருந்தது- அது மட்டுமே அவரிடமிருந்த மொத்தப் பணம். அதைக்கொண்டே தன் முழு வாழ்க்கையையும் அவர் நடத்த வேண்டி இருந்தது. மாதத்துக்கு ஒருமுறை, மாதத்தின் முதல்நாள் அவர் வங்கிக்கு போய் சிறுதொகையை எடுத்துக்கொண்டு வீடு திரும்புவார். வங்கிக்குப் போகும் போதும் இந்தப் பாதையில் போகலாமா அந்தப் பாதையில் போகலாமா என யோசிப்பார். பாதை பிரியும் இடத்தில் மணிக்கணக்காக நின்று கொண்டிருப்பார்- ஒரு தடவை அல்ல. ஒவ்வொரு மாதமும் நடக்கும் விஷயம் இது. ஒவ்வொரு மாதமும் மறுபடியும் மறுபடியும் அவர் இதைத் தீர்மானிக்க வேண்டி இருந்தது. அவரது அணுகுமுறை மிகவும் பிரசித்தமாகி இருந்தபடியால் அவரது வீட்டில் இருந்து வங்கி வரைக்கும் வங்கியில் இருந்து வீடு வரைக்கும் காலிப் பயல்கள் அவரை பின்தொடர்ந்து "இதுவா- அதுவா, இதுவா-

அதுவா, இதுவா- அதுவா!" என கூப்பிடுவது வழக்கமாக இருந்தது. கோப்பனேகன் அவரை சோரன் கீர்க்கேகார்டு என்னும் அவரின் பெயரால் அறிந்திருக்கவில்லை. இதுவா- அதுவா என்பதே அவரின் பெயராகிவிட்டது.

ஹெல்கா, பொறு. அடுத்ததடவை நீ வரும்வரை- அதுவரை நான் இங்கு இருந்தால்... அதுவரை பொறு. மேலும், ஒன்றை நீ ஒத்திவைக்க விரும்பினால் அதற்கு இந்த நேரத்தைவிட நல்லநேரம் இல்லை. மேலும் யார் அறிவார்? நாம் ஒருவருக்காக ஒருவர் படைக்கப்படாது போயிருக்கலாம். நி எனக்காக படைக்கப் படவில்லை என்று நான் சொல்லவில்லை. அதை நான் சொல்ல முடியாது. ஆனால் நான் உனக்காகப் படைக்கப்படாமல் போயிருக்கலாம். அந்தளவிலேயே நான் கூறமுடியும். நான் உனக்கு பொருத்தமற்றவனாக இருக்கலாம். எனவே இதை ஒதுக்கிவிடு. இந்தப் பிரச்சனையையே விலக்கிவிடு.

அவள் இன்னொரு கேள்வியையும் கேட்டிருந்தாள்: "பகவான், நீங்கள் சிரிப்புகளை சொல்லும்போது என்னால் சிரிக்க முடியவில்லை. சீரிய விஷயங்களை மட்டுமே என்னால் கவனிக்க முடிகிறது. "நாம் ஒருவருக்கொருவர் தகுதியானவராக இல்லை என்பதற்கு இதுவே போதிய அறிகுறியாய் இருக்கிறது. நிச்சயமாக நான் உனக்குத் தகுதியானவன் இல்லை- முழுப் பொறுப்பையும் நானே எடுத்துக் கொள்கிறேன். அப்படியானால் இந்த இடம் உனக்குப் பொருத்தமாக இருக்காது. மொத்தத்தையும் உனக்கேற்ப பொருத்தச் செய்வது எனக்கும் சிரமமான காரியம். சீரிய விஷயங்களை மட்டுமே உன்னால் கவனிக்க முடியுமானால்... கவனி! உலகம் முழுவதும் சீரிய விஷயங்களே நிறைந்துள்ளன.

இந்த இடம் சிரிப்புக்கும் அன்புக்கும் ஆன இடம். சீரிய செய்திகளில் எமக்கு நம்பிக்கை இல்லை. சிரத்தையற்று வாழ்வதையே நாங்கள் நம்புகிறோம்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**கவுதம புத்தரின் போதனையின் சுருக்கம் என்ன?**

**கவுதமி.**

**எ**ல்லாத் தரப்பிலும் எல்லாம் சமமாக இருந்தாலும் நீங்கள் இழக்கிறீர்கள். எல்லா விசயங்களும் உங்களுக்குச் சாதகமாகவே

இருந்தாலும் நீங்கள் இழக்கிறீர்கள். வென்றாலும் தோற்றாலும் நீங்கள் இழக்கிறீர்கள்.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் ஒரு முட்டாள். நான் என்ன செய்யவேண்டும்?**

**முக்தானந்தா.**

இதுவே அதிகம்! எதையும் செய்துவிடாதே. தயவுசெய்து நீ இருக்கிறபடியே இரு. முட்டாள்கள்தான் வேகமாக ஓடி. சிறந்த இருக்கைகளைப் பிடித்துக் கொள்கிறார்கள் என்பதை நினைவில்கொள்!

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**எல்லாப் பெண்களும் அடிப்படையில் துறவிகளாகவே இருக்கிறார்கள், ஆனால் ஆண்கள் யாரும் துறவிகள் கிடையாது என்று நீங்கள் இன்று சொன்னீர்கள். ஆனால் நான் பூனாவில் வாழ வந்ததில் இருந்து என் காம ஆற்றல் மறைந்துவிட்டதாக தோன்றுகிறது– இங்கிருக்கும் வீரிய மிக்க, உயிர்ப்பாற்றல் மிக்க பெண்களைக்கண்டு நான் திகிலடைந்திருக்கிறேன் என நினைக்கிறேன்.**

**சுவாமி ஆனந்த் நீரஜ்.**

நீ ஒரு பெண்துறவியாக மாறிக்கொண்டிருப்பதாக நான் நினைக்கிறேன்- அதிசயங்கள் நிகழவே செய்கின்றன! உன் பெயரை நான் மாற்றியாக வேண்டும். கொஞ்சம் காத்திரு. இது இடையில் வந்து போய்விடும் கட்டமல்ல. உண்மையாகவே நிகழ்ந்திருக்கிறது என்பதை நீ இறுதியாக முடிவுசெய்ததும், நீ மா ஆனந்த் நீரஜ் என அறியப்படுவாய்.

ஒரு கிழவர் தன் மருமகனுக்கு தொலைபேசினார்- அவன் அப்போது தான் அவரது மகளை மணம்புரிந்திருந்தான்- அவர் அவனிடம் கேட்டார், "எப்படிப் போகிறது எல்லாம்?"

மருமகன் சொன்னான், "சொல்லவே வருத்தமாயிருக்கிறது ஐயா. நான் ஒரு நன்'னை (nun. கன்னியாஸ்திரி) கட்டிக்கொண்டேன் போலிருக்கிறது."

"எப்படி- அப்படிச் சொலகிறாய் நீ" என்று கேட்டார் கிழவர்.

இளைஞன் சொன்னான். "இரவிலும் நன் (none ஒன்றும் கிடையாது), காலையிலும் நன்."

கிழவர் சிரித்துவிட்டுச் சொன்னார். "இப்போ புரிகிறது. அப்படியானால் என் வீட்டுக்கு இன்று இரவு விருந்துக்கு வா. வந்து 'மதர்சுப்பீரியரை' பார்."

நீரஜ். நீ ஒரு பெண்துறவியாக மாறி இருந்தால் மெதுமெதுவாக ஒரு மதர் சுப்பீரியராக வளர்ந்து விடுவாய்! கவலைப்படாதே. வளர்ச்சிதான் தேவையானது- இது ஒரு வளர்ச்சி மையம். வளர்ந்துகொண்டே போ. என்னவாக வளருகிறாய் என்பதைப்பற்றிக் கவலைப்படாதே. வளர்ச்சிதான் அடிப்படை விஷயம். நீ வளர்ந்துகொண்டிருந்தால், எல்லாம் சரிதான்.

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சில கேள்விகள்....**

டச்சுப் பெயர்கள் என்னை எப்போதும் குழப்பிவிடுகின்றன. எழுத்தைக் கூட்டினால் 'ஜோக்' என்று வருகிறது. ஆனால் டச்சர்கள் விசித்திரமானவர்கள். அவர்கள் அதை "யோக்கே" என உச்சரிக்கிறார்கள். -அதன் அழகையே நாசமாக்கி விடுகிறார்கள்! ஒக்கே. யோக்கே...

முதல் கேள்வி:

ஒரு மின்விளக்கைப் பொருத்த எத்தனை பெண்விடுதலைக் காரர்கள் தேவைப்படுவர்?

ஐவர்: பொருத்த ஒருவர். அதன் விளைவுகளை பரிசீலிக்க நான்குபேர்.

இரண்டாவது:

ஒரு மின்விளக்கைப் பொருத்த எத்தனை பவுத்தர்கள் தேவைப்படுவர்?

இருவர்: பொருத்த ஒருவர், பொருத்தாதிருக்க ஒருவர்.

மூன்றாவது: ஒரு மின் விளக்கைப் பொருத்த எத்தனை யூதத் தாய்மார்கள் தேவைப்படுவர்?

ஒருவருமில்லை: யூதத் தாய் சொல்லுவாள். "அதனாலென்ன? நான் இருட்டுக்குள்ளேயே உட்கார்ந்திருப்பேன்!"

நான்காவது: ஒரு மின்விளக்கை மாற்ற எத்தனை சந்நியாசிகள் தேவைப்படுவர்?

மின்விளக்கைப் பொருத்த ஒருத்தர் மட்டும். அந்த மாபெரும் வைபவத்தைக் கொண்டாட பத்தாயிரம் பேர்!

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**திறந்திருப்பது என்றால் என்ன?**

**தேவனா.**

திறந்திருப்பது என்றால் மனமற்றிருப்பது என்பதே பொருள். மனம் இருக்கும்போது நீ மூடி இருக்கிறாய். மனம் என்பது உன்னைச் சூழ்ந்திருக்கும் மதிலாக உள்ளது. அது ஊடுருவிப் பார்க்கத்தக்க ஒரு சுவர். எனவே அதன் வழியாக நீ பார்க்க முடிகிறது. எனவே நீ ஒரு சிறைச் சுவருக்குள் இருப்பது பற்றிய கவனமே வராமல் அதன் பின்னால் உன்னால் வாழ்ந்து கொண்டே போக முடிகிறது. சிறைகளை கண்ணாடிச் சுவர்களால் கட்ட வேண்டும். அப்போது சிறைக்குள் இருக்கும் பெரும்பாலோர் துன்புறமாட்டார்கள். சாலையில் மக்கள் நடந்து செல்வதையும், பேசிச் செல்வதையும் அவர்களால் பார்க்க முடியும். எல்லாவற்றையும் அவர்களால் பார்க்க முடியும். அப்போது தாமும் சுதந்திரமாக இருப்பதாக அவர்கள் நம்புவார்கள். வெளியே போய் கூட்டத்துடன் அவர்கள் கலந்து கொள்ளாதிருப்பது அவர்களின் சொந்த முடிவுதான்! கூட்டத்துடன் ஒட்ட அவர்களுக்கு விருப்பமில்லை. அவர்கள் மேட்டுக்குடிகள். சாமானிய மக்கள் அல்ல, "விசேஷ" மக்கள். மேலும் கண்ணுக்கு தெரியாத இந்தச் சுவர்கள். சுவர்களாகத் தோன்றாது - பாதுகாப்புக் கானதாக தோன்றும்.

அப்படித்தான் மனம் இருக்கிறது: மனம் என்பது ஒளிஊடுருவும் கண்ணாடிச் சுவரால் ஆனது. மிகவும் தெளிவாக மறுபுறம் தெரியக்கூடியது. இந்தியாவில் செய்யப்பட்டதல்ல, பெல்ஜியத்தில் செய்யப்பட்டது. ஏனென்றால் முழுமையாக ஒளி ஊடுருவும் கண்ணாடியை இந்தியாவில் செய்ய முடியாது. அதற்குச் சாத்தியம் இல்லை.

உங்களிடம் ஒரு மனம் இருந்தால் அரசியல் ரீதியாக அந்த மனம் ஒரு கம்யூனிஸ்டாக சோசலிஸ்டாக அல்லது பாசிஸ்டாக இருக்கப்போகிறது. மதரீதியாக கத்தோலிக்காக, புராட்டஸ்டன்டாக,

கிறிஸ்துவராக, இந்துவாக, முஸ்லீமாக இருக்கப் போகிறது; தத்துவரீதியாக ஏதாவது ஒரு தத்துவப் பள்ளியைச் சார்ந்ததாக இருக்கப் போகிறது. அது விடுபட்டிருக்க முடியாது. மனம் சுதந்திரம் பெற்றிருக்க முடியாது- அதன் இருப்பே அடிமைத்தனமானதுதான். மனம் உங்களை மூடுண்ட நிலையில் இருத்துகிறது. எப்போதும் ஒரு குறிப்பிட்ட நிலைத்த கோணத்தில் இருந்தே நீங்கள் பார்க்கிறீர்கள்; குறிப்பிட்ட நிலைத்த வெறிக் கருத்தினால் பீடிக்கப்பட்ட நிலையில் இருந்தே நீங்கள் பார்க்கிறீர்கள். பொருள்களை அவை உள்ளபடியே உங்களால் பார்க்க முடிவதில்லை. பொருள்கள் எப்படி இருக்கிறதோ அப்படியே பார்க்க மனத்தால் முடியவே முடியாது. தன் சொந்த காரணகாரிய முன் முடிவுகளுக்குத் தக அவற்றை அது உருத்திரிப்பதையும் தவிர்க்க முடியாது.

சமீபத்தில் ஒருநாள். இங்கு சந்நியாசியாக இருக்கும் தன் மகளுக்கு ஒரு ஐரிஷ் தாய் எழுதியுள்ள கடிதம் எனக்குக் கிடைத்ததைப் பற்றி உங்களிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். அவள் என் புத்தகங்களைப் படித்திருப்பதாகவும் என் படங்களைப் பார்த்திருப்பதாகவும் அந்த புத்தகங்கள் அருமையாக இருந்ததாக உணர்ந்ததாகவும் எழுதி இருக்கிறாள். அவள் கேட்க விரும்பும் ஒரே கேள்வி என்னவென்றால் அந்த ஆள் கத்தோலிக்கரா இல்லையா? அவர் கத்தோலிக்கர் என்றால் எல்லாம் சரியே. அவர் கத்தோலிக்கர் அல்ல என்றால் கூடிய சீக்கிரம் வீடு வந்து சேர்."

அயர்லாந்துக்காரியான முக்தாவுக்கும் அவளின் அம்மாவிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. முற்றிலும் மாறுபட்ட கடிதம்: ஆனால் ஒரு வகையில் அதேதான். முக்தாவின் தாயார் கூறுகிறாள், "நான் புரிந்துகொண்ட அளவில் உலகின் மிகச்சிறந்த இடங்களில் ஒன்றில் நீ இருக்கிறாய். என்னை தொந்தரவு செய்யும் ஒரே விஷயம் அது ஒரு மதச்சார்பான இடம் என்பதே. அது மதச்சார்பற்ற தாயின், நூற்றுக்கு நூறு அழகான இடம்தான் அது." ஆக ஒருவருக்கு "மதம்" என்ற சொல் தொந்தரவாயிருக்கிறது; இன்னொருவருக்கு அது கத்தோலிக்க மதமாக இல்லாவிட்டால் துன்பமாய் இருக்கிறது.

நான் யார்- இந்துவா, கிறித்தவனா, முகமதியனா என என்னிடம் மக்கள் விசாரித்தபடியே இருக்கிறார்கள். நானும், நான் இதுவுமல்ல அதுவுமல்ல என்கிறேன். வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்கும் ஒரு ஆனந்தமான மனிதனாக மட்டுமே நான் இருக்கிறேன். மேலும் அதைத்தான் நான் சமயம் என்கிறேன்- ஒரே உண்மையான சமயத் தன்மை என்கிறேன்.

தேவனா, மனத்தைக் கைவிடுவதே திறந்த தன்மையராக ஆவதாகும். சுவரை செங்கல் செங்கல்லாக பெயர்த்தெறியும் முயற்சியே தியானமாகும். நம் தலையை நாமே அறுத்தெறிந்து மனமற்றவர்களாய் வாழத் தொடங்குவதற்கான தீர்மானமே சந்நி யாசம் ஆகும். ஒன்றுமறியாத நிலையில் இருந்து நாம் செயல்படு வோம். ஏனெனில் அப்போது மட்டுமே நீங்கள் அப்பாவிகளாய் இருக்கிறீர்கள். அப்போது மட்டுமே நீங்கள் திறந்திருக்கிறீர்கள். மேலும் அதுவே உண்மையான அறிவியல் மனோபாவம்; வாழ்க்கை குறித்த விஞ்ஞானபூர்வமான அணுகுமுறை.

இறுதி சிகரத்தில் விஞ்ஞானமும் மெய்ஞானமும் சந்திக்கவே வேண்டும். இரண்டுமே உண்மையைத் தேடுவதாயின்- இரண்டும் உண்மையைத் தான் தேடுகின்றன- இறுதி சிகரத்தில் அவை சந்தித்தே தீர்கின்றன. அவை பின்பற்றும் பாதைகள் எவ்வளவு வேறுபட்ட தாயினும். அவற்றின் அடிப்படையான, சாரமான மையப்பகுதி மாறுபட்டதாய் இருக்க முடியாது. அறிவியல் அணுகுமுறையின் சாரமான மையம். எந்த முன் முடிவுடனும் எந்த விஷயத்தையும் நீங்கள் அணுகக்கூடாது என்பதே; ஒன்றுமறியாத நிலையில் இருந்தே எந்த விசயத்தையும் நீங்கள் அணுகவேண்டும் என்பதே அப்போதுதான் அது உள்ளவாறே அதை நீங்கள் எதிர்கொள்ள முடியும். உங்களிடம் ஒரு குறிப்பிட்ட கருத்து இருந்தால் பின் உங்களின் அக்கருத்து உங்களின் முடிவை பாதிக்கவே போகிறது. உங்கள் அவதானத்தில் நீங்கள் தற்சாய்வாகிவிட முடியும். தற்சாய்வுள்ள (அபிப்பிராயங்கள் நிறைந்த) மனம் ஒருபோதும் விஞ்ஞான ரீதியானதல்ல. உண்மையில் மனம் என்ற பெயரில் இருப்பது தற்சாய்வுடைய மனம் மட்டுமே. எனவேதான் மனம் ஒருபோதும் அறிவியல் தன்மையுடையதாக இருக்க முடியாது. மனம் ஒருபோதும் சமயத்தன்மை உடையதாக இருக்க முடியாது என்று நான் சொல்கிறேன்.

புறஉலகின் உண்மைகளை, எந்த வெறிக்கருத்து நிலைகளும் இல்லாமல் அறிவியலானது அணுகுகிறது; அகஉலகின் உண்மைகளை எந்த வெறிக்கருத்து நிலைகளும் இல்லாமல் சமயம் அணுகுகிறது. வெறியன் உண்மைகளை விட தன் சொந்த கட்டுக்கதையையே அதிகம் நம்புவான்; உண்மைகளின் மீது தன் பொய்களை அவன் ஏற்றுகிறான்.

டாக்டர் பானர்ஜி என்று ஒருவர் என்னிடம் வந்தார். அவர் என் உதவியை வேண்டினார். "நான் ஒரு விஞ்ஞானி" என்று அவர்

சொன்னார். ராஜஸ்தான் பல்கலைக்கழகத்தில் ஒரு துறைத் தலைவராக இருக்கிறார். கடந்த நிலை உளவியலில் ஏதோ ஆராய்ச்சி செய்துவருகிறார்.கடந்த நிலை உளவியல் துறையின் தலைவர் அவர். மறுபிறவிக் கொள்கையின் மீது தான் ஒரு விஞ்ஞான ஆய்வு மேற்கொண்டு வருவதால் என் உதவியை தான் விரும்புவதாக அவர் சொன்னார்: மனிதர்கள் பல தடவைகள் மீண்டும் மீண்டும் பிறக்கிறார்கள் என்பது அந்தக் கொள்கை.

நான் அவருடன் பேசினேன். "மறுபிறப்பு என்பதை நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கேட்டேன்.

"நிச்சயமாக" என்றார் அவர். "நான் ஒரு இந்து. அதை உண்மை என நான் நம்புகிறேன். இப்போது அதை விஞ்ஞான ரீதியில் நிறுவ நான் விரும்புகிறேன்."

"அப்படியானால் உம் ஆய்வின் தொடக்கமே விஞ்ஞானரீதி அற்றதாக இருக்கிறது. நீர் ஒரு இந்து என்பதால், ஆராய்ச்சி செய்யாமலேயே- ஆராய்ச்சி நிகழ்முறைக்குள் போகாமலேயே- ஆதாரங்களைச் சேகரிக்காமலேயே அதை நீர் நம்புவதாயின், ஏற்கெனவே உம்மிடம் அது குறித்த நம்பிக்கை இருந்தால், பின் உம் அந்த நம்பிக்கையை உம் ஆய்வின்மீது நீர் ஏற்றிவிடுவீர். உண்மை ஆதாரங்களை நீர் கவனிக்கமாட்டீர். உமது கொள்கைக்கும், உமது முன்கூட்டிய நம்பிக்கைக்கும் ஏற்றபடி உண்மைகளை நீர் திரிக்க முயல்வீர். ஆயின் நீர் ஒரு விஞ்ஞானியே அல்ல. நீர் ஒரு விஞ்ஞானி என்னும் எண்ணத்தையே மறந்துவிடும். யார் உமக்கு தத்துவ முனைவர் பட்டமளித்தது? உம் பாரா சைக்காலஜி துறையில் நீர் செய்துகொண்டிருக்கும் அபத்தம் எத்தகையது? அதை இந்து மதத்தை போதிக்கும் துறை என்று அழைப்பதுவே சரியானது. ஏன் அதைபுலன்கடந்த உளவியல் என்கிறீர்? பின் ஏதாவது கிறிஸ்தவன் வந்து பல பிறவிகள் என்பது இல்லை, இருப்பது ஒரே பிறவிதான் என விஞ்ஞானபூர்வமாக நிறுவ முயல்வான். இதை ஜனநாயக ரீதியாக நிரூபிப்பது என்றால் கிறித்தவர்களும் யூதர்களும் முகமதியர்களும் சேர்ந்து இந்துக்களைவிட பெரும்பான்மையாய் இருக்கிறார்கள். அந்நிலையில் ஜனநாயக முறைப்படி- வாக்கெடுப்பு மூலம் இதை முடிவு செய்வதாயின் அவர்களே வெல்வார்கள். ஏனெனில் இந்துக்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? மனித குலத்தில் ஏறக்குறைய பாதிப்பேர் கிறிஸ்தவர்களாயிருக்கிறார்கள். இரண்டாவது பெரிய மதம் இசுலாமாய் இருக்கிறது, அடுத்து யூதர்கள் வருகிறார்கள்- மூவரும் சேர்ந்து இந்துக்கள் என்னும் சிறு சமூகத்தை

எளிதாக தோற்கடித்துவிட முடியும். ஒவ்வொருவரும் தம் நம்பிக்கையிலிருந்து தொடங்கினால், அதை நிரூபிப்பதற்கான உண்மைகளை தேடினால் அதை அறிவியல் ரீதியானது எனக் கூற முடியாது."

அவர் சில நாட்கள் தங்குவதற்காக வந்திருந்தார். ஆனால் உடனடியாக தப்பி ஓடிவிட்டார். அதன்பிறகு அவரைப்பற்றி நான் கேள்விப்படவே இல்லை. தேடுவதில் அவருக்கு அக்கறை இல்லை. திறந்த மனம் அவருக்கு இல்லை. மாறாக தான் ஒரு இந்து என்றும் நானும் ஒரு இந்து என்றே நம்புவதாகவும் அவர் தெரிவித்தார். இதை ஒரு கிறித்தவரிடமோ முகமதியரிடமோ யூதரிடமோ அவர் சொல்லி இருக்க மாட்டார். இந்த காரியங்களை அவரிடம் நான் சொன்னபோது அவர் மிகவும் சங்கடப்பட்டார். கடைசியாக அவர் என்னிடம் கேட்ட கேள்வி. "நீர் இந்து இல்லையா?" என்பதுதான்.

நான் சொன்னேன், "நான் யாரும் இல்லை. நான் ஏன் இந்துவாக இருக்கவேண்டு? ரத்தத்தில் இந்து என்றோ முகமதியர் என்றோ கிறிஸ்தவர் என்றோ இல்லை. எலும்புகளில் இந்து, முகமதியர், கிறிஸ்தவர் என்று இல்லை. உணர்வில் மட்டும் எப்படி இந்து, முகமதியர், கிறிஸ்தவர் என்றிருக்க முடியும்? நான் என் உணர்வாக மட்டுமே இருக்கிறேன். நான் ஆனந்தமயமாக இருக்கிறேன். ஆனந்தத்தில் ஏது இந்து/முஸ்லீம்?"

தேவனா, திறந்திருப்பது என்றால் உன் மனத்தை அரசியல்- மத தத்துவ ரீதியில் கைவிட்டுவிடுதல், செங்கல் செங்கல்லாக அதை பேர்த்து எறிதல், அது ஒரு வேதனையான நிகழ்முறைதான். ஆனால் உண்மையை அறிய அது மட்டுமே வழி. எல்லாவிதமான மூடநம்பிக்கைகளில் இருந்தும், எல்லாவிதமான வெறித்தனமான நம்பிக்கைகளில் இருந்தும் விடுபட அது மட்டுமே வழி. வெறியனின் கருத்து என்னவென்றால் "என் கருத்தே உண்மை. யதார்த்தமான உண்மைகளால் நீங்கள் வழிதவறிப் போகாதீர்கள்!" உண்மைகளை அவன் விசுவசிப்பதில்லை. தன் கொள்கையையே அவன் நம்புகிறான். அது எவ்வளவு பழமையானதோ அவ்வளவுக்கு அதை அதிகமாய் நம்புகிறான். அவன் கருத்து என்னவென்றால், "இவ்வளவு நீண்ட நெடிய காலமாக மக்கள் ஒன்றை எவ்வாறு நம்பி வந்திருக்க முடியும்? எனவே அது நிஜமாகத்தான் இருக்கவேண்டும்."

ஆனால் யூதர்களும் இந்துக்களைப் போலவே புராதன மானவர்கள்தான். இருப்பது ஒரு வாழ்க்கைதான் என்றே யூதர்கள்

எப்போதும் நம்பி வந்திருக்கிறார்கள்; பல பிறவிகள் இருப்பதாக இந்துக்கள் எப்போதும் நம்பி வந்திருக்கிறார்கள். இந்து மதத்தில் இருந்து பிறந்த மதங்களான சமணமும் புத்தமும் பல பிறவிகள் உள்ளதாக நம்புகின்றன. யூதமதத்தில் இருந்து பிறந்த கிறித்தவமும் இசுலாமும் ஒரே பிறவி என்பதையே நம்புகின்றன. கால அளவு தீர்மானிக்க முடியாது. எண்ணிக்கை அளவும் தீர்மானிக்க முடியாது.

அறிவியல் அணுகுமுறை அல்லது அற, சமய அணுகுமுறை மட்டுமே... என்னைப் பொறுத்தவரை இரண்டும் ஒன்றுதான். உங்கள் தேடல் புறநோக்காக இருக்கிறபோது அதை நான் அறிவியல் என்கிறேன். உங்கள் தேடல் அகவயமாக அமைகிறபோது அதை நான் சமயம் என்கிறேன். ஆனால் இரண்டு தேடல்களுக்குமே திறந்த உணர்வுநிலை முற்றிலும் அவசியம். அதுதான் முதல், அடிப்படைத் தேவை; மனமற்ற உணர்வுநிலை- இது தியானத்தின் மூலம் மட்டுமே நிகழ முடியும். தியானம் மட்டுமே மனத்திலிருந்து உங்களை விடுவிக்க உதவுகிற உங்களிடமிருந்து நீங்கள் விடுபட உதவுகிற- உங்கள் கடந்தகாலம் மற்றும் அதன் பாரம் அனைத்திலிருந்தும் நீங்கள் விடுபட உதவுகிற ஒரே மாயாஜாலமாகும்.

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நம்பிக்கைவாதிக்கும் அவநம்பிக்கைவாதிக்கும் உள்ள வேறுபாடு என்ன?**

**சூரியோ,**

பெரிதாக ஒன்றுமில்லை. ஆகச் சிறந்த உலகத்தில் நாம் வாழுகிறோம் என நம்பிக்கையாளன் நம்புகிறான். அது உண்மைதானோ என அவநம்பிக்கையாளன் அஞ்சுகிறான்.

**ஒன்பதாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நீங்கள் என்னைக் கொல்வீர்கள் என உங்களை நம்ப முடியுமா?**

**பிரேம் கவிதா.**

நிச்சயமாக நம்பலாம். ஆனால் நீ இன்னும் தயாராகவில்லை. கொல்லுவதற்கு நான் தயார். ஆனால் சரியான சந்தர்ப்பத்தில்தான் நீ கொல்லப்பட முடியும். ஒரு நிமிடம் கூட அதற்கு முந்தி முடியாது.

நீயோ இன்னும் தயாராகவில்லை. உன் ஆசை சரிதான். ஆனால் அது இன்னும் ஆசைதான். அதற்கு நீ தகுதியாக வேண்டியிருக்கும்.

நேற்று இரவுதான் நான் மக்காவை கொன்றேன். இப்போது அவள் அழுது கொண்டிருக்கிறாள். என்ன நடந்தது என்றே அவளுக்கு விளங்கவில்லை. அவள் ஒரு ஊடகமாக இருந்தாள். திடீரென அவளை நான் விட்டுவிட்டேன். அது அகங்காரத்தை தகர்ப்பதாக இருக்கிறது. ஊடகங்களாக இருப்பவர்கள் தம்மை விசேஷமானவர் களாக உணரவே செய்வார்கள். அவர்களுக்குள் ஒருவித அகங்காரம் வளர ஆரம்பிக்க முடியும்- அவர்கள் தீவிரத்தன்மை உடையவர் களாகிவிட முடியும்.

கவிதா, உன் கேள்விகளை நான் பார்த்து வந்திருக்கிறேன். உன் கேள்விகள் எல்லாமே ஒருவிதமான வசைத்தன்மையையே காட்டுகின்றன. இதுதான் பதிலளிக்கத் தக்கதாக நான் தேர்ந்தெடுத்திருக்கிற உன் முதல் கேள்வி. இல்லாவிட்டால் அவற்றை அப்படியே குப்பைக் கூடைக்குள் எறிந்துவிடுகிறேன். அவை அன்பைக் காட்டுவதில்லை, நம்பிக்கையைக் காட்டுவதில்லை, சரணாகதியை காட்டுவதில்லை. உன்னில் அன்பில்லாத நிலையில் உன்னை நான் கொன்றால் அது படுகொலையாகும். உன் அன்புடன் உன்னை நான் கொன்றாலோ அது பரிபூரண மாற்றமாகும். உனக்குள் நீ ஆழமாக பார்க்கவேண்டி இருக்கும். எங்கோ ஓரிடத்தில் இன்னும் இணைப்பு ஏற்படவில்லை. நீ இங்கு இருக்கிறாய். ஆனால் நீ இன்னும் அறிவில் இருந்தே இயங்குகிறாய் என்பதை உன் கேள்விகள் காட்டுகின்றன.

கவிதா, இங்கு மூச்சுப்பயிற்சிச் சிகிச்சையாளராக இருக்கிறாள். அதுவே மொத்த சிக்கலுக்கும் காரணம் ஆகலாம். இங்கு நீங்கள் ரு சிகிச்சையாளராக இருந்தால் உங்களுக்குள் ஒருவித அகங்காரம் நுட்பமான முறையில் எழத் தொடங்குகிறது. சுத்தம் செய்பவர்களும் கழிவறைகளை கழுவுபவர்களும் இன்னும்மேன்மையான நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் எவ்வித அகங்காரத்தையும் கொண்டிருக்க முடியாது. சிகிச்சையாளர்களைவிட அவர்களே எனக்கு அதிக அருகில் வருகிறார்கள் என்பதே என் அனுபவமாய் இருக்கிறது. ஏனெனில் சிகிச்சையாளர் தனக்கு 'தெரியும்' என்னும் எண்ணத்துடன் வருகிறார். அவர் தன் ஆழத்தில் எங்கோ பின்வரும் கருத்தை கொண்டிருக்கிறார்: அதாவது பகவானின் வேலையில் நாம் உதவுகிறோம். நாமில்லாவிட்டால் அந்த இடம் காலியாக இருக்கும், நாம் தேவைப்படுகிறோம்' என்று நினைக்கிறார். தோட்டி அப்படிக்

கருதுவதில்லை. எனவே சிலசமயங்களில் தோட்டிகள் மலர்ச்சி அடைகிறார்கள்.

மூன்று நாட்களுக்கு முன்புதான் நந்தனை புது ஊடகமாக தேர்ந்தேன். அவள் ஒரு துப்புரவாளியாக இருந்தவள். அவளது சகஜத் தன்மை, அவளது முழுமையான சரண், அவளது முற்றான நம்பிக்கை இவை எனக்கு ஆச்சரியமூட்டின. மரங்களினூடாக காற்று கடந்து செல்வதுபோல் அவளினூடாக நான் பாய்ந்து செல்ல முடிந்தது- எந்த தடையோ தடங்கலோ இல்லை.

கவிதா, அதை உன்னில் இன்னும் நான் உணரவில்லை. கொல்ல நான் தயார்- இங்கு என் முழு வேலையும் அதுதான். ஒரு ஆசான் தேவைப்படுவதே உங்களால் உங்களின் அகங்காரத்தை கொல்ல முடியாததால்தான்; அது ஒரு கடினமான பணிதான். அதை செய்ய முடியும். ஆனால் அது மிகவும் கடினமான பணி. உன் செருப்பு வார்களைத் தூக்குவதன்மூலம் உன்னை நீயே மேலே தூக்க முயல்வது போன்றதாகும் அது. அது கடினமே. கொஞ்சம் உதவி தேவைப்படுகிறது. கொஞ்சம் உதவி தரப்பட முடியும்- ஆனால் அகங்காரம் இல்லாத போதுமட்டுமே அதை தர முடியும்.

கவிதா, இதன்மீது தியானி. நீ தயாராகும் நாளில்... என் வாள் எப்போதும் தயார்! நாள் முழுதும் என் அறையில் நான் என்ன செய்து கொண்டு இருக்கிறேன்?- என் வாளில் துரு சேராதபடி அதைத் தீட்டிக் கொண்டே இருக்கிறேன்!

**பத்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**இங்கு ஒரு ரஸ்யர் இருப்பதாக சொன்னீர்கள்– ரஸ்யர்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? மூன்றாம் உலகப் போர் மூளுமா?**

**ஆனந்த தேவேந்திரா.**

ருஸ்யர்கள் அருமையான மக்கள். ஆனால் மிகவும் மடத்தனமான ஒரு தத்துவத்துக்கு, மிகவும் மடத்தனமான ஒரு அரசியல் சித்தாந்தத்துக்கு அவர்கள் பலியாகி இருக்கிறார்கள். மக்கள் அழகானவர்கள். ஆனால் இதுவரை இல்லாத மிகவும் அசிங்கமான ஆட்சிமுறையால் அவர்கள் ஆதிக்கம் செய்யப்படுகிறார்கள்.

ருஸ்யாவில் இருக்கும் என் சந்நியாசிகளில் சிலர்- அவர்கள் தலைமறைவு சந்நியாசிகள்- எனக்கு சில சிரிப்புகளை அனுப்பி

இருக்கிறார்கள். அன்றுதான் எனக்கு அவை கிடைத்தன. சிரிப்புகளையும் செய்திக் கடிதங்களையும் 'சந்யாசை' யும் அவர்கள் மொழிபெயர்த்து தலைமறைவாக விநியோகிக்கிறார்கள். ஒரு நாடாவை கவனிக்கவோ, தியானிக்கவோ அவ்வப்போது கூடுகிறார்கள். ஒவ்வொருவரைப் பற்றியும் ஏராளமான சிரிப்புகளை அவர்கள் கேட்டிருந்ததால் அவர்கள்மீது நான் கவனம் செலுத்துவதில்லை என அவர்கள் உணர்ந்திருக்க வேண்டும். எனவே அவர்கள் இரண்டு அழகான சிரிப்புகளை அனுப்பி இருக்கிறார்கள்.

முதலாவது:

ஒரு மனிதன் மாஸ்கோவில் ஒரு உணவுக் கடைக்குள் சென்று 2 கிலோ மாமிசம் கேட்கிறான். வழக்கம்போல கடைப் பணிப்பெண் "இன்று கறி இல்லை, தோழரே" என்கிறாள்.

"கறி இல்லை!" அவன் கத்துகிறான். "கறி இல்லை! அவர்களிடம் கறியே இல்லை! தெருவில் இறங்கி இரண்டு கைகளையும் விரித்து உச்ச குரலில் கத்துகிறான். "கறி இல்லை! கறி இல்லை! அவர்களிடம் கறியே இல்லை!" பின் தெரு நெடுக ஒவ்வொருவரையும் பார்த்து கத்தியபடியே போகிறான், "கறியே அவர்களிடம் இல்லை! கறி இல்லை!"

அவன் போட்ட கூச்சலில் போலீசார் ஓடி வந்தனர். தலைதெறிக்க அவன் கத்திக் கொண்டிருந்ததை பார்த்து உடனடியாக கைது செய்து சிறைக்கு கூட்டிச் சென்றார்கள். அவனது அறையிலும் அவன் தொடர்ந்து கத்திக்கொண்டும் இரும்புக் கம்பிகளைப் பிடித்து உலுப்பிக்கொண்டும் இருந்தான். "கறி இல்லை! அவர்களிடம் கறியே இல்லை!"

"இந்தப் பயலுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும்" என்றான் சிறை அதிகாரி. "முற்றத்துக்கு கூட்டிச்சென்று அவனை சுடப் போவதாக நடியுங்கள். அப்போதுதான் வாயை மூடுவான்!"

எனவே இன்னும் கத்திக்கொண்டிருந்த அந்த மனிதனை காவலர்கள் முற்றத்துக்கு இட்டுச் சென்றார்கள். சுவரை ஒட்டி நிறுத்திவைத்தார்கள். துப்பாக்கிகளில் வெற்றுத் தோட்டாக்களை நிரப்பி, குறிபார்த்துச் சுட்டார்கள்.

ஒரு சில நொடிகளுக்கு அமைதி நிலவியது. பின் மறுபடியும் கூக்குரல் எழுந்தது. "குண்டு இல்லை! குண்டு இல்லை! அவர்களிடம் குண்டும் கூட இல்லை!"

இரண்டாவது:

ஒரு ஸ்வீடன், ஒரு போலந்தன், ஒரு ருஸ்யன் ஆகியோர் சந்தித்தனர். இயல்பாகவே அவர்களின் உரையாடல் காதல் உறவைப்பற்றி திரும்பியது.

"சுவிடனில் காதல் உறவு என்பது, ஒரு சிலர் ஒன்று சேர்ந்து ஒருவரின் அறையில் சல்லாப லீலைகளில் ஈடுபடுவதாகும்" என்றான் ஸ்வீடன்.

"போலந்தில் காதல் என்பது, சுவீடனில் ஒரு அறையில் சிலர் நடத்திய சல்லாப லீலைகளை ஒரு சிலர் சேர்ந்து தொலைக்காட்சி நிகழ்ச்சியாக கண்டு களிப்பதாகும்" என்றான் போலந்தன்.

"ருசியாவில் காதல் எப்படி?" இருவரும் சேர்ந்து மூன்றாமவனைக் கேட்டார்கள்.

சோகத்துடன் சொன்னான் அவன், "ருசியாவில் காதல் என்பது, சுவீடன்காரர்களின் கலவிக் கேளிக்கையைப்பற்றிய தொலைக்காட்சி நிகழ்ச்சியை பார்த்த போலந்தர்களில் ஒருவரை ஒரு குழுவினர் சந்தித்து பேசுவதாகும்..."

அவர்கள் அருமையான மக்கள். ஆனால் ஒரு அழுகிய ஆட்சிமுறையின் கீழ் இருக்கிறார்கள். அவர்கள் சுதந்திரம் பெறுவது தேவை- இந்த வன்முறையில் இருந்து, அவர்களின் சித்தத்துக்கு எதிராக அவர்கள்மீது திணிக்கப்பட்டுள்ள இந்த சர்வாதிகாரத் திலிருந்து அவர்கள் விடுபடுவது தேவை. ஆனால் அதை சுமத்தியவர்கள் இது அம்மக்களின் நன்மைக்கே என்கிறார்கள். தொடக்கத்தில் கம்யூனிஸ்டுகள் 'சர்வாதிகாரம் தற்காலிகமாகவே இருக்கும்' என்று சொல்வது வழக்கமாய் இருந்தது. விரைவில் அது மறைந்துவிடும் என்றார்கள். சோசலிசம் நிறுவப்பட்டதும் அரசே உதிர்ந்துவிடும்; ஆயின் சர்வாதிகாரம் எங்கே நிற்கும் என்றார்கள். ஆனால் இப்போது புரட்சி நடந்து 60 ஆண்டுகள் ஆகியுள்ளன; சொன்னதற்கு நேர்எதிரானதே நடந்துள்ளது. அரசு மென்மேலும் அதிக பலமுள்ளதாகி உள்ளது. அது என்றாவது உதிரும் என்பதற்கான அறிகுறியே தெரியவில்லை. ஒரு அரசு- அதற்கெதிராக எந்தப் புரட்சியும் சாத்தியமில்லாத அளவுக்கு- அதிக அதிகாரமுள்ளதாக ஆகியிருப்பது மனித குலத்தின் மொத்த வரலாற்றிலும் இதுவே முதல் தடவையாகும். வேறெந்த மக்களும் இந்த அளவுக்கு முடக்கப்படும் செயலற்றவர்களாக்கப் பட்டும் இல்லை. முன்பென்றால் ஆட்சிமுறைக்கு எதிராக கலகம் செய்யும்

சாத்தியமாவது குறைந்தபட்சம், எப்போதும் இருந்தது, ரொம்பவும் சகிக்க முடியாமல் போனால் எப்போதும் அதை நீங்கள் தூக்கி எறிய முடிந்தது. ஆனால் இப்போது முதல்முறையாக இப்படி நடந்துள்ளது. ருசிய அரசாங்கம் மிகுந்த ஆற்றலுடையதாக, அளவற்ற ஆற்றலுடையதாக ஆகியுள்ளது, தனிமனிதர் பூஜ்யமாகியிருக்கிறார்.

அவர்கள் ஒரு பாடத்தை கற்றுக்கொண்டிருக்கிறார்கள்: புரட்சியை வெகு ஆரம்பத்திலேயே, புரட்சியின் விதைகளையே, தடுப்பது எப்படி? இதற்கு கருத்துச் சுதந்திரத்தைக் கூட அனுமதிக்கக்கூடாது. உங்கள் மனைவியிடம் கூட நீங்கள் பேச பயப்படுவீர்கள். ஏனெனில் யாருக்குத் தெரியும்- அவள் ஒரு தகவல்கொடுப்பவளாக இருக்கலாம். யாருக்கும் யாரைப்பற்றியும் தெரியாது. உங்கள் சொந்தக் குழந்தைகளிடம் பேசக்கூட நீங்கள் பயப்படுகிறீர்கள். ஏனெனில் அவர்கள் இளம் கம்யூனிஸ்டுகளின் கழகத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள்; தம் பெற்றோர்களை அவர்கள் காட்டிக் கொடுக்கிறார்கள். ரசியாவில் மட்டுமே சுவர்களுக்கும் காதுகள் உண்டு- ரசியாவில் மட்டும். மற்ற எல்லா இடத்திலும் இது ஒரு பழமொழி மட்டும்தான். ருசியாவில் மட்டுமே இது ஒரு யதார்த்தமாக உள்ளது. உங்களால் சுதந்திரமாக சிந்திக்கக்கூட முடிவதில்லை. ஏனெனில் சுதந்திரமாக சிந்திக்க உங்களுக்கு சில விஷயங்கள் கிடைக்கும்படி செய்யப்படுவது தேவை. மார்க்ஸ் ருசியாவில் பிறந்திருந்தால் அவரால் 'மூலதனத்'தை எழுத முடிந்திருக்காது. ஏனெனில் பிரிட்டிஷ் மியூசியம் போன்ற நூலகம் இல்லை. அங்கு அவருக்கு வேண்டிய எல்லா விதமான நூல்களும் படிக்கக் கிடைத்தன.

என் நூல்கள் ருசியாவுக்குள் சட்டபூர்வமாக செல்ல முடியாது. சட்ட விரோதமாக செல்கின்றன. சட்டரீதியாக முடியாது. உள்ளே வரும் ஒவ்வொன்றையும் அரசாங்கம் கவனிக்கிறது. சுதந்திர சிந்தனை நிலவ அதற்கேற்ற சூழல் அவசியம். அந்த சூழல் அழிக்கப் பட்டிருக்கிறது. அரசு மதத்துக்கேற்ப ஒவ்வொரு குழந்தையும் தளைப்படுத்தப்பட்டுள்ளது- கம்யூனிசமே அரச மதமாக உள்ளது.

ரசிய மக்கள் அருமையான மக்கள்- எல்லா மக்களையும் போலவே உலக முழுவதன் அன்புக்கும் பரிவுக்கும் கருணைக்கும் உதவிக்கும் தகுதியானவர்கள் அவர்கள். ஏனெனில் ஒரே ஒரு வாய்ப்புதான் உள்ளது. சுதந்திர உலகம் வெளியிலிருந்து உதவினால் மட்டும்தான் அவர்கள் விடுபடமுடியும். இல்லாவிட்டால் இப்போது அறிவியல்- தொழில்நுட்ப ரீதியாக அசாத்திய பலம் பெற்றுள்ள

அரசாங்கத்தை தூக்கியெறிவது அசாத்தியமாகும். முற்றிலும் முடியாததாகும். தூக்கி எறிவதைப் பற்றி பேசினாலே போதும் நீங்கள் காணாமல் போவீர்கள். மறுபடியும் நீங்கள் கிடைக்க மாட்டீர்கள். நீங்கள் எங்கு போனீர்கள் என்று யாரும் கண்டுபிடிக்க முடியாது. அரசியல் ரீதியாக மறுப்புத் தெரிவிக்கும் எவரும் உடனடியாக மனநலம் அற்றவர் என அறிவிக்கப்படுகிறார். அவர்களின் வரையறைப்படி, அவர்களின் நம்பிக்கையின்படி, ஒரு பைத்தியம் மட்டுமே கம்யூனிசத்துடன் ஒத்துப் போகாதிருக்க முடியும். மனநலமுள்ள ஒருவன் எப்படி கம்யூனிசத்தை ஏற்காதிருக்க முடியும்? இதுதான் மதவெறி என்பது ஒருவர் நோபல் பரிசு வென்றவராகவே இருந்தாலும் கவலையில்லை எதைக் குறித்தாவது அவர் மறுப்புத் தெரிவித்தால் அவர் மனநோயாளி அரசியல் கைதியாக கூட அவரை மதித்து சிறையில் போடுவதில்லை. ஏனெனில், அதற்குக்கூட கொஞ்சம் மதிப்பு இருக்கிறது.

இயேசுவை சிலுவையில் அறைந்தார்கள். அது மதிப்புக்குரியது. குறைந்தபட்சம் அவர்கள் அவரை ஒரு ஆபத்தான மனிதராக ஏற்றுக்கொண்டார்கள். ஆனால் இயேசு ருசியாவில் பிறந்திருந்தால் அவர் சிலுவையில் அறையப்பட்டிருக்க மாட்டார் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவரை பைத்தியக்காரன் என அறிவித்திருப்பார்கள். அவருக்கு சிலுவை மரணத்தை தந்திருக்க மாட்டார்கள். மின் அதிர்ச்சிகளையே தந்திருப்பார்கள்; இன்சுலின் அதிர்ச்சிகளை தந்திருப்பார்கள்; அவரின் மூளையில் அவர்கள் அறுவை செய்திருப்பார்கள்; அவரது நரம்பு மண்டலம் முழுவதையுமே அவர்கள் நாசமாக்கி இருப்பார்கள். அவரை ஒரு நடைப்பிணம் ஆக்கியிருப்பார்கள். அவரை கொன்றிருக்க மாட்டார்கள். அது அவர்களை அதிக கருணை உள்ளவர்களாக காட்டிவிடும். அவர்கள் அவரை சிலுவையில் அறைய மாட்டார்கள். இப்போது சிலுவையில் அறைய தேவையில்லை. ஒரு மனநோய் மருத்துவமனையில் அவரை வைத்து மற்ற பைத்தியக்காரர்களோடு சேர்த்து அவருக்கும் சிகிச்சை தருவார்கள். இதுவே அதிக பயங்கரமானதாகும்.

சாக்ரடீசை ஒரு பைத்திய மனையில் வைத்து சிகிச்சை செய்வதென்பது மகா அவமரியாதையாகும். குறைந்தபட்சம் கிரேக்கர்கள் மரியாதை தெரிந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் அவருக்கு விஷம் கொடுத்தார்கள்- அது சரியே. அந்த மனிதருடன் உங்களுக்கு ஒப்புதல் இல்லை. அவரும் உங்களுடன் ஒத்துப்போகத்

தயார் இல்லை என்றால் அவரை கொல்லுங்கள்! அது முற்றிலும் சரியாகவே தோன்றுகிறது.ஆனால் அவரை ஒரு பைத்தியம் என ஆக்கி அவரை சித்திரவதை செய்து மெதுமெதுவாக அவரது முழு சிந்தனை இயக்கத்தையும் முடமாக்கி, அவரது நரம்புமண்டலம் முழுவதையும் நாசமாக்கி அவரது மூளையில் அறுவைசெய்து அதற்குச் சேதம் உண்டாக்குவதென்பது கொடுமை. அதுதான் ருசியாவில் நடந்து கொண்டிருக்கிறது.

தேவேந்திரர், ருசியர்கள் அருமையான மக்கள். ஆனால் மிக மோசமான ஒரு ஆட்சிமுறையின்கீழ் அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களைச் சூழ்ந்துள்ள இந்த பெரிய சிறையிலிருந்து இரும்புத்திரையில் இருந்து அவர்கள் விடுபட அவர்களுக்கு உதவுவது முழு மனித இனத்தினது கடமையாகும்.

மூன்றாம் உலகப் போர் மூளுமா? என்றும் நீ கேட்டிருக்கிறாய். சாத்தியமில்லை. மூன்றாவது உலகப் போர் சாத்தியமில்லை என்பதற்கான எளிய காரணம், நாம் ஒருவரை ஒருவர் அழிப்பதற்கு ஏராளமான தொழில் நுட்பத்தை அறிவியல் வழங்கி இருக்கிறது. எனவே மூன்றாம் உலகப்போர் என்றால் முழுமையான உலகப் போர் என்றே பொருள்படும். முழுமையான உலகப் போர். என்றால் யாருமே உயிருடன் மிஞ்ச மாட்டார்கள்- வெற்றி பெற்ற வரும் இருக்கமாட்டார்கள். தோற்றவர்களும் இருக்கமாட்டார்கள். முதல் முறையாக போர் என்பது அதன் பொருளை எல்லாம் இழந்து விட்டிருக்கிறது. புத்தராலோ இயேசுவாலோ அல்ல மூன்றாம் உலகப்போர் நிகழாதிருக்கப்போவது. அறிவியல் தொழில் நுட்பத்தால் தான்- அணு குண்டுகள். ஹைட்ரஜன் குண்டுகள், சூப்பர் ஹைட்ரஜன் குண்டுகள், சாவுக் கதிர்வீச்சுகள் முதலியவற்றால்தான்- அது நிகழாதிருக்கப் போகிறது. அவை அதனை அசாத்தியமாக்கி விட்டுள்ளன. பூண்டோடு தற்கொலை செய்துகொள்ள நாம் முடிவு செய்தாலன்றி மூன்றாம் உலகப் போருக்கு சாத்தியமில்லை.

சிறுசிறு மோதல்கள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்- ஏனெனில் அவை தேவை. பொருளாதாரத்துக்குத் தேவை. சிலசமயம் வியத்நாமில், சிலசமயம் கொரியாவில், சிலசமயம் இஸ்ரேலில், சிலசமயம் காஷ்மீரில், சிலசமயம் ஆப்கானிஸ்தானில் சிறு போர்கள் நடக்கும்; மூன்றாம் உலகப் போர் நடக்காது, சிறு போர்கள் நடக்கவே வேண்டும். இல்லாவிட்டால் இந்த வல்லரசுகள் எங்கே தம் ஆயுதங்களை விற்க முடியும்? அந்த ஆயுதங்கள் குவிந்து வருகின்றன. ஒவ்வொரு நாளும் புதிய வளர்ச்சிகள் ஏற்பட்டு

வருகின்றன. எனவே அவர்களின் பழைய ஆயுதங்கள் காலாவதியாகின்றன. அவற்றை யார் பயன்படுத்தப் போகிறார்? அவர்களால் அவற்றைப் பயன்படுத்த முடியாது. அவற்றை தாமே பயன்படுத்த அவர்களால் முடியாது. இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேசம், ஆப்கானிஸ்தான், ஈரான் முதலிய ஏழை நாடுகளுக்கு, பிற்பட்ட நாடுகளுக்கு, சின்ன நாடுகளுக்கு அந்த காலாவதியான ஆயுதங்களை விற்க முடியும். அதற்காக இந்த நாடுகள் தமக்கிடையில் தொடர்ச்சியாக சண்டைபோட வேண்டி இருக்கும்- சின்ன பூசல்கள், பெயரளவான சண்டைகள். அமெரிக்கா, ருசியா ஆகிய வல்லரசுகள் தம் ஆயுதங்களை விற்பதற்கு இந்த குட்டிச் சண்டைகள் நடப்பது தேவை. இல்லாவிட்டால் அவர்களின் ஆயுதக்குவியல் மலைபோலாகி அதன் பாரத்தில் அவர்களே நசுங்கி செத்துப்போவார்கள். எனவே இந்த சிறுபோர்கள் நடப்பது முற்றிலும் அவசியமாகும்.

மேலும் இந்த பிற்பட்ட நாடுகள் இந்த அம்சத்தைக் காணமுடியாத அளவுக்கு முட்டாளாயிருக்கின்றன. எனவே ஏதாவது ஒரு இடத்தில் ஒரு போர் வெடித்து விடுகிறது. ஒருநாடு அமெரிக்காவிடம் இருந்து ஆயுதங்கள் வாங்கத் தொடங்குகிறது. இன்னொரு நாடு ருசியாவிடம் இருந்து ஆயுதம் வாங்கத் தொடங்குகிறது. இரண்டும் ஒருவகையில் ஒரே வியாபாரத்தில்தான் உள்ளன. பார்க்கமுடிகிறவர்கள், அவை பங்காளிகள் என்பதை பார்க்க முடியும். ஏதாவது ஒரு இடத்தில் போர் நடந்தபடி இருப்பது அவை இரண்டுக்கும் தேவை. ஆனால் ஒரு மூன்றாவது உலகப்போரை அவை தூண்டிவிடக் கூடாது. ஏனெனில் மூன்றாம் உலகப்போர் என்றால் இரண்டு வல்லரசுகளும் நேருக்கு நேர் மோத நேரும்.

ருசியா அமெரிக்காவை தாக்கினால் அமெரிக்கா திருப்பித்தாக்க 10 நிமிடங்களே போதும். அல்லது அமெரிக்கா ருசியாவைத் தாக்கினால் ருசியா திருப்பித்தாக்க 10 நிமிடங்களே போதும். பத்துநிமிட இடைவெளி மட்டுமே இருக்கும். அதுதான் வெற்றி என நீங்கள் நினைத்தால் நினைத்துக் கொள்ளலாம். அந்த 10 நிமிடங்களுக்குப்பின் இரண்டும் இருக்காது. உண்மையில் இந்த வல்லரசுகள் மோதிக்கொண்டால், தென்னாப்பிரிக்கா, இமயமலை, திபெத் ஆகிய இடங்களின் காடுகளின் நடுவில் வாழும் மிகப் பழங்குடிகளான மக்கள் மட்டுமே தப்பிப் பிழைக்கவே எல்லா வாய்ப்பும் உள்ளது. அவர்கள் மட்டுமே அப்போரால் பயன்பெறும் ஒரே மக்களாக இருப்பார்கள். முதல்முறையாக அவர்களின் பிற்பட்ட நிலையால் பயன் ஏற்பட்டிருக்கும். முதல்முறையாக அவர்கள்

வெற்றியாளர்கள் ஆவார்கள். வெற்றி பெற்றவர்களோ இல்லாமல் போயிருப்பார்கள். ஆனால் இது மிக மிக தொலைதூர சாத்தியம்தான். ஏனெனில் மூன்றாம் உலகப் போர் மூட்டிவிடும் அளவுகடந்த தீ பூமியைச் சூழ்ந்து எவருமே மிஞ்சமுடியாத படி ஆகிவிடமுடியும். மனித உயிர்கள் மட்டுமல்ல- மரங்கள், பறவைகள், விலங்குகள் எல்லாமே மாண்டுவிடும்.

எனவேதான் என்னால் அழுத்தற் திருத்தமாக சொல்ல முடிகிறது- மூன்றாம் உலகப் போர் என்று ஒன்று வராது. இரண்டாம் உலகப் போருடனேயே உலகப்போர்கள் முடிந்தன. இனி சிறு சண்டைகள் மட்டுமே இருக்கும்- யுத்தங்கள் இருக்காது.

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**நான் இத்தாலிக்குக் கிளம்புகிறேன். இத்தாலியருக்கு நான் சொல்வதற்கு ஒரு சிரிப்பு தயவுசெய்து சொல்வீர்களா?**

**சர்ஜனோ.**

ஒருபோதும் ஒரு சிரிப்பை மட்டும் கேட்காதே. லட்சுமியைக் கேட்டுப்பார். எப்போதுமே நான் ஒரு பொருளைக் கேட்டால் அவள் இரண்டு பொருளைக் கேட்டாள். அவளுக்கு என்னைப்பற்றி தெரியும்! எனவே நீ ஒரு சிரிப்பை கேட்கும்போதெல்லாம் இரண்டு சிரிப்பை அனுபவிக்க வேண்டியதுதான்.

முதலாவது:

இரண்டு இத்தாலிய கன்னியர்கள் ஒரு மேசையின்பக்கம் அமர்ந்து தன் மடத்துத் தோட்டத்தில் இருக்கும் பூக்கள், காய்கள், பழங்களின் பெருமையைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஒரு கன்னி கூறுவாள், "காய்கறித் தோட்டத்தில் இருக்கும் அந்த பெரிய, சிவப்பான, சாறு நிரம்பிய தக்காளிகளை நீ பார்த்தாயா?"

இப்படி அவள் கூறுகையில் கன்னி தன் இரு கைகளையும் பயன்படுத்தி ஒரு வட்டமாகச் செய்து தக்காளிகளின் அளவைக் காட்டினாள்.

"ஆம்" என்றாள் அடுத்த கன்னி, "இந்த வருசம் வெள்ளரிக்காய் வளர்ந்துள்ள அளவைப் பார்த்தாயா நீ?"

அவற்றை விவரித்த அவள் நீளமான வெள்ளரிக்காய்கள் போல தன் கைகளை நீட்டிக் காட்டினாள்.

அதே அறையின் மூலையில் ஒரு வயதான கன்னி உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு காது ஏறக்குறைய செவிடு. ஆனால் கண் இன்னும் குருடாகவில்லை. அவள் ஆவலான குரலில் கேட்டாள், "எந்த ஃபாதரைப்பற்றி நீங்கள் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?"

இரண்டாவது:

ஒரு இத்தாலிய சலாமி* தொழிற்சாலையில் ஒரு தடவை ஒரு விபத்து நிகழ்ந்தது. அப்போது ஒரு சலாமி பறந்து தேவலோகத்துக்குப் போய்விட்டது. அந்த இடத்தில் பறந்து கொண்டிருந்த தேவதை சம்மனசு ஒன்று அந்த சலாமிமேல் போய் மோதி தன் இறக்கையால் அதைப் பற்றிக் கொள்கிறது. "இது வினோதமான பொருளாயிருக்கிறது" என்கிறது அது. "இது என்னவாயிருக்கும்?"

அது ஜோசப்பிடம் பறந்துபோய் அவரிடம் கேட்கிறது. "இப்படிப்பட்ட ஒன்றை எப்போதாவது பார்த்திருக்கிறீரா?" அவர் மூக்கின்பக்கம் சலாமியை ஆட்டுகிறது.

சலாமியை உற்றுப் பார்த்த ஜோசப் கூறுகிறார். "இல்லை, இதைப்போன்ற ஒன்றை நான் ஒருபோதும் பார்த்ததில்லை!"

தேவதை பறந்துபோய் மேரியை சந்திக்கிறது. "மேரி இது என்னவென்று உமக்குத் தெரியுமா?" சலாமியை அவள் முன் ஆட்டுகிறது.

"ஓ!" என வியக்கிறார் மேரி, "இதைச் சுற்றிலும் இந்த விசித்திரமான வலைபோன்ற ஒன்று இல்லாவிட்டாலாவது இதை பரிசுத்த ஆவி என்பேன்!".



---

★ இத்தாலிய மாமிச உணவுப்பண்டங்களில் ஒன்று. (மெர்-1)

# 10

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**தியானத்தின் இலக்கு என்ன?**

**பிரகீதா.**

"தியானத்தின் இலக்கு" என்று எதுவும் இல்லை. எல்லா இலக்குகளையும் கைவிடுவதே தியானம் ஆகும். எனவே அதற்கென்று ஒரு இலக்கு இருக்க முடியாது. அது அதன் சொந்தத் தன்மைக்கே எதிராக இருக்கும். இலக்குகள் என்பவை எதிர்காலத்தில் உள்ளன. தியானம் நிகழ்காலத்தில் இருப்பது நிகழ்காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் இடையில் எந்த சந்திப்புக்கும் இடமில்லை; எதிர்காலம் என்பது இல்லாத ஒன்று- இல்லாததும் இருப்பதும் எப்படிச் சந்திக்க முடியும்? அதற்கு வாய்ப்பே இல்லை. எதிர்காலம் என்பது நமது உருவாக்கம், நமது கற்பனைப் படைப்பு ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்கே அதை நாம் உருவாக்குகிறோம்; நிகழ்காலத்தைத் தவிர்ப்பதே அந்த நோக்கம். நிகழ்காலத்தில் இருப்பதை நாம் விரும்புவதில்லை. நிகழ்காலத்திலிருந்து தப்பிக்கவே விரும்புகிறோம். தப்பிக்க வாய்ப்பாக எதிர்காலம் உள்ளது. எதிர்காலத்தில் வாழ்வது என்பது தப்பித்துக் கொள்வதாகும்.

இலக்கு எதுவாயினும்- அந்த இலக்கு என்ன என்பது ஒரு பொருட்டில்லை- அது கடவுளை அடைவதாகலாம். நிர்வாணத்தை அடைவதாகலாம். அதுவும் ஒரு இலக்குத்தான்; எந்த இலக்கும் தியானத்துக்கு எதிரானதுதான். ஆனால் நம் மனம் முழுவதும் எதிர்காலத்திலேயே இருக்கிறது. நம் மனம் நிகழ்காலத்துக்கு எதிராக இருக்கிறது. நிகழ்காலத்தில் இறக்கிறது. நிகழ்காலத்தில் மனம்

எப்படி நிலை முடியும்? நீங்கள் முற்றிலும் இப்போது, முற்றிலும் இங்கே இருக்கையில் மனம் என்ற பிரச்னையே இருப்பதில்லை. நீங்கள் சிந்திக்க முடியாது. ஏனெனில் சிந்திக்க இடம்தேவை. நிகழ்காலத்தில் இடவெளி இருப்பதில்லை. அது ஊசிமுனை போன்றது. அதில் எதையும் உள்ளடக்க முடியாது. ஒற்றை எண்ணத்தையும் கூட அதில் இருத்தமுடியாது.

எனவே நீங்கள் மனதில் வாழ விரும்பினால் ஒன்று நீங்கள் இறந்தகாலத்தில் வாழவேண்டி இருக்கிறது. அல்லது எதிர்காலத்தில் வாழவேண்டும். அவை இரண்டும் தான் வழி. பழைய பாணி, வைதிக, மரபு வழியினர்- கிறிஸ்தவர்கள், முகமதியர்கள், இந்துக்கள்- கடந்த காலத்தில் வாழ்கிறார்கள். அவ்வாறே புரட்சிக்காரர்கள்- முற்போக்குகள்- முன்னோடிகள் எனப்படுபவர்கள் வருங்காலத்தில் வாழ்கிறார்கள். கம்யூனிஸ்டுகள், சோசலிஸ்டுகள், ஃபேபியர்கள், கற்பனாவாதிகள் மற்றும் எல்லாவிதமான கருத்து (முதல்) வாதிகளும் வருங்காலத்தில் வாழ்கிறார்கள். வெளித்தோற்றத்தில் அவர்கள் ஒருவருக்கொருவர் மிகவும் வேறுபட்டவர்களாகத் தெரிகிறார்கள்- கத்தோலிக்கனும் கம்யூனிஸ்டும் ஒருவருக்கொருவர் நேர் விரோதமாகத் தோன்றுகிறார்கள்- ஆனால் அடியாழத்தில் அவர்களிடையே எந்தப் பகைமையும் இல்லை. இருவரும் ஒரே வகையிலேயே சேர்கிறார்கள். இருவரும் ஒரே காரியத்தையே செய்கிறார்கள். இருவரும் நிகழ்காலத்திலிருந்து தப்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

போய்விட்ட பொற்காலத்தில் வாழுகிறான் இந்து. அவனது கிருதயுகம் இறந்த காலத்தில் மிகமிகத் தொலைவில் எங்கோ இருந்தது. அது ஒரு நினைவு மட்டுமே. அது ஒருபோதும் இருக்கவில்லை. அந்த கடந்த காலம் என்பது கற்பனைத் திறனுள்ள மனிதர்களின் உருவாக்கம் மட்டுமே. ஆனால் நிகழ்காலத்தில் இருந்து தப்பிக்க அது அவர்களுக்கு உதவுகிறது. இந்துக்கள் அதை ராமராஜ்ஜியம் கடவுளின் அரசு என்கிறார்கள். அது கடந்த காலத்தில் இருந்தது. அதன்பின் மனிதன் வீழ்ச்சியுற்றுக்கொண்டே வந்திருக் கிறான். சார்லஸ் டார்வினுடன் பரிணாமக் கொள்கையுடன்- இந்துக்கள் உடன்படுவதில்லை. இந்துக்கள் முற்றிலும் வித்தியாசமான ஒரு கருத்தை கொண்டிருக்கிறார்கள். அது உள்-ஒடுக்கம் என்னும் கருத்தாகும். மனிதன் வளர்ந்து வரவில்லை. சுருங்கிக்கொண்டு வருகிறான் ஒவ்வொரு நாளும் மனிதன் வீழ்ச்சியுற்று வருகிறான். பள்ளத்தில் போய்க்கொண்டிருக்கிறான்.

சிகரங்கள் கடந்தகாலத்தோடு போய்விட்டன- பொன்முடிகள் அவை, ஒளிபொருந்திய சிகரங்கள் அவை.

கம்யூனிஸ்டு வருங்காலத்தில் வாழ்கிறார். அவருடைய பொன்னுலகம் இனித்தான் வரஉள்ளது. ஒருநாள் அது வரும். அது வருங்காலத்தில் மிகத்தொலையான ஓரிடத்தில் உள்ளது. அப்போது அரசு உதிர்ந்துவிடும். சமுதாயம் வர்க்கப்பிரிவினை அற்றதாகிவிடும், சுரண்டல் இருக்காது எவ்விதமான அரசாங்கத்துக்கும் அவசியம் இருக்காது. மக்கள் சமத்துவமாக வாழ்வார்கள். அதுவே கடவுளின் அரசாக இருக்கும்- ஆனால் அது எதிர்காலத்தில் உள்ளது இதுவும் ஒருபோதும் நிஜமாகப் போவதில்லை.

கம்யூனிஸ்டும் இந்துவும் இருவரும் ஒரே காரியத்தையே செய்துகொண்டிருக்கிறார்கள். ஒரே வியாபாரத்தின் பங்குதாரர்களாகவே அவர்கள் இருக்கிறார்கள். நிகழ்காலத்தில் இருந்து தப்பிப்பது எவ்வாறு, நிகழ்காலத்தில் வாழாதிருப்பது எப்படி என்பதுவே அந்த வியாபாரம். எனவே ஒரு வினோத விஷயம் நிகழ்வதை நீங்கள் பார்ப்பீர்கள். இந்துக்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். முகமதியர்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள், கிறித்தவர்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். கம்யூனிஸ்டுகள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். ஒரு விஷயத்தில் அவர்கள் எல்லோரும் ஒத்துப் போகிறார்கள்- குறைந்தது ஒரு விஷயத்தில் அவர்கள் யாவரும் ஒத்துப் போகிறார்கள். அவர்கள் எல்லோரும் ஒத்துப்போகும் படியாக அவர்களுக்கு நான் ஒரு வாய்ப்பை எடுத்துக்கொடுத்ததில் குறைந்தபட்சம் நான் மகிழ்ச்சி அடைகிறேன்! ஆனால் உண்மையில், எதிர்காலத்துக்கு எதிராகவும் இறந்தகாலத் துக்கு எதிராகவும் நான் வலியுறுத்துவதால் தான், நிகழ்கணத்தில் இருப்பதற்கே நான் முக்கியத்துவம் கொடுப்பதால்தான் எனக்கெதிராக அவர்கள் ஒத்துப்போகிறார்கள். ஆக தியானமானது எவ்வித இலட்சிய ஆசைகளையும் அனுமதிக்க முடியாது.

உன் கேள்வியை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது, பிரகீதா. ஏனெனில் "ஏன் இதை நீ செய்து கொண்டிருக்கிறாய்?" என் மனம் எப்போதும் கேட்கிறது. எதையும் அது எளிதாக இயல்பாக எடுத்துச் செய்ய முடிவதில்லை- "ஏன்" "எதற்கு" என்னும் கேள்வியை எப்போதும் வைத்திருக்கிறது. தன்னியல்பான எச்செயலையும் உங்கள் வாழ்வில் நீங்கள் அறிந்திருக்கவில்லை. எந்த இயல்வினையையும் நீங்கள் அறியவில்லை. நீங்கள் செய்வதெல்லாம் வினை அல்ல, எதிர்வினையே. நீங்கள் அப்படி நடக்கக் காரணங்கள்,

பல உள்ளன; அதைச்செய்ய பல உள்நோக்கங்கள் உள்ளன. அதன் பின்னால் பல ஆசைகள் ஒளிந்துள்ளன. ஏதோ ஒன்று பின்னாலிருந்து தள்ளிக்கொண்டோ முன்னாலிருந்து இழுத்துக்கொண்டோ இருக்கிறது. நீங்கள் ஒருபோதும் சுதந்திரமாகச் செயல்படுவதில்லை. நீங்கள் ஒரு அடிமையாக இருக்கிறீர்கள். எனவேதான் நீங்கள் எப்போதும் "ஏன்?" என்று கேட்கிறீர்கள்.

ஒரு மனிதனை அவனது உளவியல் மருத்துவர் ஒரு மாறுதலுக்காக ஓய்வுக்காக இளைப்பற்ற இயற்கையை அனுபவிக்க மலைகளுக்கு அனுப்பினார். மறுநாள் அவனிடமிருந்து தந்தி வந்தது. "நான் மிகவும் மகிழ்ச்சியாக உணர்கிறேன் ஏன்?"

"ஏன்?" என்று கேட்காமல் நம்மால் எதையும் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. இப்போது மகிழ்ச்சியைப்பற்றிய ஒரு விசயத்தை புரிந்து கொள்ள வேண்டும். துன்பத்துக்கு காரணங்கள் இருக்கலாம். இன்பத்துக்கு எந்த காரணமும் இல்லை. அப்படி அதற்கு ஒரு காரணம் இருந்தால் அது இன்பம் எனும் மாறுவேடத்தில் வந்திருக்கும் துன்பமேயன்றி வேறில்லை. மகிழ்ச்சி உண்மையாக இருந்தால்- அதுவே ஆனந்தம் என்பதன் பொருள்- அதற்கு காரணம் எதுவும் இருப்பதில்லை. காரணம்- விளைவு என்ற நடப்புக்கு அப்பாற்பட்டது அது. காரணவிளைவுச் சங்கிலித்தொடருக்கு அப்பாற்பட்டது அது. அது ஏன் என்று நீங்கள் பதில்கூற முடியாது.

புத்தரிடம் பலசமங்களில் "நீங்கள் ஏன்- எப்படி இவ்வளவு ஆனந்தமாக- அமைதியாக இருக்கிறீர்கள்" என்று கேட்டார்கள். அப்போதெல்லாம் அவர் "அது விழிப்புணர்வின்- சுயத்தின்- தன்மை" என்றார்.

அவரது இந்த பதிலை ஆழ்ந்து சிந்திக்க வேண்டி உள்ளது. அவர் கூறுகிறார், "இதற்கு 'ஏன்' என்பதே இல்லை- அது அத்தகையதே. மரங்கள் பசுமையாக இருக்கின்றன. மலர்கள் செம்மையாக இருக்கின்றன. விழிப்புப் பெற்ற மனிதர் ஆனந்தமாக இருக்கிறார். இவற்றுக்கு 'ஏன்' என்பது இல்லை".

ஆனால் திரும்பத்திரும்பக் கேட்டுக் கொண்டிருந்த மக்கள்... இதே கேள்வியை வெவ்வேறு மக்கள் அவரிடம் ஆயிரக்கணக்கான தடவைகள் கேட்டிருக்க வேண்டும் என நினைக்கிறேன். வெளியில் இருந்து பார்க்கும்போது மக்கள் வெவ்வேறு விதமாக தெரிகிறார்கள். ஆனால் அடியாழத்தில் அவர்கள் எல்லோரும் உணர்வற்றவர் களாகவே இருக்கிறார்கள். எனவே அதே கேள்வியே அவர்களின்

உணர்வற்ற மனதில் இருந்து திரும்பத்திரும்ப எழுகிறது. "ஏன்? ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டும். ஏதாவது புதையலை நீங்கள் கண்டுபிடித்து விட்டீர்களா? ஏதாவது கோஹினூர் வைரத்தை நீங்கள் கண்டடைந்து விட்டீர்களா? மட்டமான உலோகத்தை தங்கமாக மாற்றும் ஏதாவது ரசவாத முறையை நீங்கள் கண்டுபிடித்து விட்டீர்களா? உங்களை சாகாவரம் பெற்றவராக்கும் ஏதாவது ரகசியத்தைக் கண்டுபிடித்திருக்கிறீர்களா? ஏன் இவ்வளவு பரவசமாக இருக்கிறீர்கள்?"

கேள்வி கேட்கிறவர்கள் தம்மைப்பற்றியே தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். புத்தர் ஏன் பரவசமாயிருக்கிறார் என்பதைப்பற்றி உண்மையில் அவர்கள் கேட்கவில்லை- புத்தரை அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. தம்மைப்பற்றியே அவர்களுக்கு தெரிந்திருக்கிறது. தாம் துன்பத்தில் இருப்பது அவர்களுக்கு தெரிகிறது. தம் துன்பத்துக்கு ஒரு காரணம் இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிகிறது. எப்போதாவது ஒருமுறை அவர்கள் மகிழ்ச்சியாக உணர்ந்தால் அந்த மகிழ்ச்சிக்கும் ஒரு காரணம் இருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிகிறது. உங்களுக்கு லாட்டரியில் பரிசுவிழுந்தால் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கமுடியும்? புத்தருக்கோ எந்தப் பரிசும் விழவில்லை. உண்மையில் தன் அரண்மனையையும் அரசையும் அனைத்துச் செல்வங்களையும் அவர் துறந்துவந்திருக்கிறார். மக்கள் தேடிக்கண்டு பிடிக்கவே முயல்வார்கள். "நிச்சயம் அவர் ஏதோ ஒன்றைக் கண்டடைந்துவிட்டு நம்மிடம் அதைச் சொல்லாமல் மறைக்கிறார். அது என்னது? பின் எப்படி நீங்கள் இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள்?"

பிரபு மாயா என்னிடம் ஒரு கேள்வி கேட்டிருக்கிறாள்- புத்தர்களிடம் எப்போதும் கேட்கப்பட்டு வந்திருக்கிற அதேகேள்விதான் இங்கேயும் திரும்பத்திரும்ப கேட்கப்படுகிறது. அவள் கேட்கிறாள். "பகவான், சிலசமயம் நான் அணிந்து கொள்கிற புன்னகையின் பின்னுள்ள போலித்தனத்தை சமீபகாலமாக நான் கண்டுபிடித்திருக்கிறேன். இப்போது உங்களைப் பார்த்தால் நான் அதிசயிக்கிறேன்- அதேமுகம்- ஒவ்வொரு காலையிலும், ஆண்டுமுழுதும் ஒரேவிதமான புன்னகை. அது நிஜம்தானா?"

அவளுடைய கேள்வியை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஏனெனில் தான் புன்னகைக்கும் போதெல்லாம் அது போலியானது என்பதை அவள். அறிந்திருக்கிறாள். ஆனால் நானோ எப்போதும் புன்னகையுடன் இருக்கிறேன். ஆண்டுமுழுதும் அப்படியே

இருக்கிறேன் என்றால் இயல்பாகவே அது போலியாகவே இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அதன்பின்னால் ஏதாவது காரணம்- உங்கள் கண்ணுக்குத் தெரியாமல்- மறைந்திருக்க வேண்டும். ஒன்று அது போலியானது. அல்லது நான் ஒன்றை கண்டடைந்திருக்கிறேன். உங்களிடம் அதைச் சொல்லாது மறைத்துக் கொண்டிருக்கிறேன்.

புத்தரின் மிக நெருங்கிய சீடரான ஆனந்தர்கூட ஒருநாள் அவர்கள் ஒரு காட்டின் வழியாக நடந்துகொண்டிருக்கும்போது புத்தரிடம் கேட்டார். அது இலைஉதிர்காலம். மரங்களில் இருந்து இலைகள் உதிர்ந்து கொண்டிருந்தன. காடு முழுவதும் சருகுகளால் நிறைந்திருந்தது. காற்று வீசிக் கொண்டிருந்தது. சருகுகள் அதில் எழும்பி இங்குமங்கும் அலைந்து கொண்டு பெருத்த சலசலப்பை உண்டு பண்ணிக் கொண்டிருந்தன. அவர்கள் அந்தக் காட்டின் வழியாக போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது ஆனந்தர் புத்தரிடம் கேட்டார். "பகவான், ஒரு கேள்வி எழுந்துகொண்டே இருக்கிறது அதை நான் அடக்கிக் கொண்டே வந்திருக்கிறேன். ஆனால் இனியும் அதை அடக்கிவைக்க முடியவில்லை. இன்று நாம் தனியாக இருக்கிறோம். மற்ற சீடர்கள் பின்தங்கி இருக்கிறார்கள். எனவே நான் இதைக் கேட்பதை யாரும் அறியமாட்டார்கள். மற்றவர்களின் முன்பாக இதைக் கேட்க நான் விரும்பவில்லை. என் கேள்வி நீங்கள் கண்டுபிடித்ததை முழுவதுமாக எங்களுக்கு நீங்கள் சொல்லிவிட்டீர்களா அல்லது இன்னும் எதையாவது சொல்லாமல் ஒளித்துக்கொண்டு இருக்கிறீர்களா?- ஏனெனில் நீங்கள் எங்களுக்கு சொல்லியிருப்பது எதுவும் உங்கள் ஆனந்தத்தை உங்கள் அமைதியை எங்களுக்கு விளக்கப்படுத்தவில்லை. நீங்கள் எதையோ மறைக்கிறீர்கள்போலத் தோன்றுகிறது."

புத்தர் சிரித்தார். கையை முஷ்டிபிடித்துக்காட்டி கேட்டார். "ஆனந்தா, இது என்ன என்பதை காண்கிறாயா?"

அவர் சொன்னார், "ஆம் இது முட்டி, உங்கள் கை மூடி இருக்கிறது என்பதை என்னால் பார்க்க முடிகிறது."

புத்தர் சொன்னார், "ஒரு புத்தர் ஒருபோதும் இந்த முட்டிக்கை போன்றவரல்ல." அவர் தம் கையை திறந்து சொன்னார். "புத்தர் திறந்த கை போன்றவர். அவர் எதையும் மறைப்பதில்லை. மறைப்பதற்கு எதுவும் இல்லை! நான் எல்லாவற்றையும் சொல்லியிருக்கிறேன். நான் முற்றிலும் திறந்திருக்கிறேன்."

அப்போதும் ஆனந்தர் விடவில்லை, "ஆனால் உம் ஓயாத ஆனந்தத்தை எங்களால் விளக்க முடியவில்லை- உம்மை இரவு பகலாக நான் கவனித்து வருகிறேன். பகலில் நீர் பரவசமாயிருக்கிறீர். இரவில் உறங்கச் செல்லும்போதும் பரவசமாயிருக்கிறீர். தூக்கத்திலும் உம் முகம் மிகவும் நிர்மலமாகத் தோன்றுகிறது. தூக்கத்திலும் நீர் மிக அமைதியாக, மிக மென்மையாக, மிக சாந்தமாக, மிக சமாதானமாக காணப்படுகிறீர். ஒரு கனவும் கூட உமக்குள் வராதது போல் இருக்கிறது. அலைவு ஏற்படாத அமைதியான தடாகம் போலவே எப்போதும் நீர் இருக்கிறீர். இது எப்படிச் சாத்தியம்? நானும் முயற்சி செய்திருக்கிறேன். ஆனால் கொஞ்சம் தான் முயற்சிக்க முடிகிறது, உடனே களைத்து விடுகிறேன்."

நீங்கள் முயற்சிசெய்தால் களைத்து விடுவீர்கள்.

பிரபுமாயா, ஒரு புன்னகையை பொருத்திக் கொள்ள நீ முயன்றால் நீ களைப்பாக உணர்வாய். ஏனென்றால் ஒரு புன்னகையை அணிந்து கொண்டிருப்பதற்கு மிகுந்த பிரயத்தனம் தேவை. அதை நீங்கள் ஜிம்மி கார்ட்டர் போல அப்பியசிக்க வேண்டும்.. ஆனால் அப்போது அது புன்னகையே அல்ல. உங்கள் வாய் வெறுமனே திறந்திருக்கிறது. உங்கள் பற்கள் வெறுமனே தெரிகின்றன. அவ்வளவுதான்.

ஒவ்வொரு இரவிலும் அவர் மனைவி அவர் வாயை மூட வேண்டி இருக்கிறது என கேள்விப்பட்டேன். ஏனென்றால் ஒருதடவை ஒரு பெருச்சாளி அவர் வாய்க்குள் போய்விட்டது. அவள் டாக்டருக்கு தொலைபேசினாள். டாக்டர் சொன்னார், "நான் வருகிறேன். ஆனால் அதற்கு நேரம் ஆகும். அதற்கிடையில் அவர் வாயருகே ஒரு பாலாடைக் கட்டியை காட்டிக் கொண்டிருங்கள்."

டாக்டர் வந்துபார்த்தபோது அவர் மிகவும் அதிர்ச்சி அடைந்தார். அவள் இன்னொரு பெருச்சாளியை காட்டிக்கொண்டிருந்தாள். அவர் சொன்னார், "என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? அவர் வாயருகே பாலாடக்கட்டியை காட்ட அல்லவா சொன்னேன்?!"

அவள் சொன்னாள், "அப்படித்தான் சொன்னீர்கள். ஆனால் பெருச்சாளியைத் துரத்திக்கொண்டு ஒரு பூனை உள்ளே போய்விட்டது. எனவே முதலில் பூனையை வெளியே கொண்டுவர வேண்டி இருக்கிறது!"

அதிலிருந்து ஒவ்வொரு இரவும் அவருடைய வாயை அவர் மனைவி வலுக்கட்டாயமாக மூட வேண்டி இருக்கிறது. அது

ஆபத்தானது! வெள்ளைமாளிகை என்பது ஒரு பழைய கட்டிடம்- அதில் பல பழைய பெருச்சாளிகள் உள்ளன. உண்மையில் வெள்ளை மாளிகையில் பெருச்சாளிகளைத் தவிர வேறு யார் வசிக்கிறார்கள்? வெள்ளை மாளிகையில் வசிப்பதில் யாருக்கு அக்கறை? ஆக பெருச்சாளிகள் அங்கே வசிப்பதால் பூனைகளும் அங்கே வசிக்கின்றன.

தியானத்துக்கு எந்த இலட்சியமும் இல்லை; எதையும் அடையும் ஆசை அதற்கு இல்லை. சாதிக்கும் மனதை கைவிடச் செய்வதே தியானத்தின் முழு வேலையும், ஆசையைப்பற்றிய புரிதலும், இலட்சியங்கள்- சாதனைகள் குறித்த ஓயாத பேராசையைப் பற்றிய புரிதலும், மகத்தான விழிப்புணர்வுக்கு உங்களை கொண்டு வருகின்றன. அப்போது, எல்லா இலட்சியங்களும் பொய்யானவை. நீங்கள் எங்கும் போக தேவை இல்லை; ஆனந்தமாயிருப்பதற்காக எதையும் நீங்கள் அடைய அவசியம் இல்லை; ஆனந்தம் உங்களின் இயல்புநிலைதான் என்பதை தெளிவாக நீங்கள் பார்க்க முடியும். நீங்கள் அலைபாய்வதால்தான் அதை நீங்கள் தவற விடுகிறீர்கள். அந்த ஓட்டசாட்டத்தில், அந்த ஆரவாரத்தில் உங்களை நீங்கள் மறந்தபடியே போகிறீர்கள்.

இங்குமங்கும் ஓடுவதை நிறுத்துங்கள். உங்களை கண்டு பிடியுங்கள். உங்களை நீங்கள் கண்டுகொள்வது ஒரு இலக்கல்ல. அது எப்படி ஒரு இலக்காக முடியும்? ஒரு இலக்கு என்றால் அதற்கும் உங்களுக்கும் ஒரு தூரம் தேவை. உங்களை நீங்கள் கண்டுகொள்வது ஒரு இலக்கல்ல. ஏனெனில் ஏற்கெனவே நீங்கள் அதுவாகத்தான் இருக்கிறீர்கள்! தேவையானதெல்லாம் இங்குமங்கும் ஓடுவதை நிறுத்தவேண்டும். அமைதியாக அமரவேண்டும், இளைப்பாற வேண்டும். ஓய்வுகொள்ள வேண்டும். மனம் சாந்தமும் சமாதானமும் ஆகட்டும். இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் நோக்கி மனம் ஓடாத நிலையில், மனம் என்ற ஒன்றே இல்லாது போகிற நிலையில், எதையும் செய்யாமல் நீங்கள் வெறுமனே அங்கு வெறும் இருப்பாக இருக்கிற போது, அதுவே தியானம். திடீரென நீங்கள் யார் என்பதை நீங்கள் அறிகிறீர்கள். திடீரென நீங்கள் பரவசத்தில் மூழ்கடிக்கப்படுகிறீர்கள். ஒளியால், நித்தியப்பொருளால் திக்குமுக்காடுகிறீர்கள். பின் உங்கள் வாழ்வு ஒரு இயற்கை நிகழ்வாகிறது. பின் நீங்கள் புன்னகைகளை அணியத் தேவையில்லை- இயல்பாகவே புன்னகை வருகிறது. பின் நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பதாக நடிக்கத் தேவையில்லை.

மகிழ்ச்சியற்ற மனிதரே மகிழ்ச்சியாக இருப்பதாக நடிக்கிறார். மகிழ்ச்சியான மனிதருக்கு தான் மகிழ்ச்சியாக இருப்பதான எண்ணம் கூட இருப்பதில்லை. அவர் மகிழ்ச்சியாக இருக்கிறார்- அவ்வளவே. அவர் மகிழ்ச்சியாக இருப்பதாக மற்றவர்கள் நினைக்கலாம்- அவருக்கு எந்த நினைப்பும் இல்லை. அவர் வெறுமனே தானாக இருக்கிறார்.

யோக்கா கூறுகிறார்:

புரிந்து கொண்டவர்கள் எப்போதும் இயல்பாக செயல்படு கிறார்கள்.

அவருடைய புரிதலில் இருந்து எழும் அவருடைய செயல்கள் எல்லாம் இயல்பாக இருக்கின்றன- அவரது சிரிப்பு இயல்பாக இருக்கிறது. அவரது புன்னகை இயல்பாக இருக்கிறது. அவரது வாழ்க்கை முழுவதும் இயல்பாக இருக்கிறது. உங்கள் வாழ்க்கை முழுவதும் செயற்கையாக, தாறுமாறாக இருக்கிறது. நீங்கள் எப்போதும் உண்மையில் இல்லாத ஒன்றையே செய்ய முயலுகிறீர்கள். நீங்கள் அன்புசெய்ய முயற்சி செய்கிறீர்கள். ஆனால் நேசிக்க முயலுவது என்னும் தொடக்கமே தவறான தொடக்கமாய் இருக்கிறது. மகிழ்ச்சியாயிருக்க நீங்கள் முயற்சி செய்கிறீர்கள். நீங்கள் எப்படி மகிழ்ச்சியாயிருக்க முடியும்? இது முயற்சிசெய்கிற விஷயம் அல்ல. நளினமாகத் தோற்றமளிக்க எல்லாவித முயற்சிகளையும் மேற்கொள்கிறீர்கள். நளினம் என்பது சிரமம் அல்ல. சிரமம் எடுத்தால் அது நளினம் அல்ல. நளினம் என்பது முயற்சியற்ற அழகு. உண்மையாகவே நளினமுடையவர் எந்தச் சிரமமும் அறிய மாட்டார்.

யோக்கா கூறுகிறார்:

> **புரிந்து கொண்டவர்கள் எப்போதும் இயல்பாக செயல்படு கிறார்கள். பெரும்பாலான மனிதர்கள் நிலையாமையில், நிஜமற்றதில் வாழ்கிறார்கள். ஆனால் ஸென் மனிதரோ மெய்மையில் வாழ்கிறார்.**

நீங்கள் பொய்மையில், போலியில் வாழ்கிறீர்கள். இந்நிலையில் ஒரு ஸென் மனிதரை நீங்கள் எதிர்கொள்ளும் போது- ஸென் மனிதர் என்றால் தியான மனிதர் என்பதை நினைவில் கொள்ளுங்கள்- உங்களுக்கு பிரச்சனையாகிறது. ஸென் மனிதரை ஒருபோதும் உங்கள் கருத்துகளுக்கேற்ப புரிந்துகொள்ள முயலாதீர்கள். அவை பொருத்தமற்றவை. தியானத்தின்மூலம் மட்டுமே ஸென் மனிதரை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

தியானம் எனும் கலையை, இங்கே- இப்போதே இருக்கும் கலையை கற்றுக்கொள்ளுங்கள்- அமைதிக்காக அல்ல, ஆனந்தத்துக்காக அல்ல. எதற்காகவும் அல்ல. நோக்கமற்ற இலக்கற்ற முயற்சி... அதுவே தியானம் என்பது. இலக்கற்ற முயற்சி.

இப்போது இலக்கு நோக்கிய முயற்சியை மட்டுமே நீங்கள் அறிவீர்கள். இல்லாவிட்டால் "இது தர்க்கமற்றது- இலக்கில்லாமல் முயலுவதா? அப்படியானால் நாம் ஏன் முயற்சிசெய்ய வேண்டும்?" என்று கேட்பீர்கள். இலட்சியங்களை நோக்கியே நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள்- அதில் நீங்கள் என்ன அடைந்திருக்கிறீர்கள்? இப்போது வேறொருமுறையை முயலுங்கள். பழையவழியில் முயன்றது போதும்.

யோக்கா கூறுகிறார்:

**இலக்கற்ற முயற்சி முற்றிலும் வேறுவிதமானது–**

இதுவரை நீங்கள் செய்துவந்துள்ள எல்லாவற்றிலிருந்தும் மிகவும் மாறுபட்டது.

**அது உண்மையின் கதவைத் திறக்கிறது. அவ்வழி ததாகதரின் தோப்புக்கு இட்டுச்செல்கிறது.**

சற்றுமுன் நான் பயன்படுத்திய ததாகதம் என்னும் சொல்லில் இருந்தே ததாகதர் என்ற சொல்லும் வருகிறது. "நான் சமாதானமாய் இருக்கிறேன், ஏனெனில் அதுவே என் சுயம், என் ததாகதம்" என்கிறார் புத்தர். அவரிடம் எதைக் கேட்டாலும் அவர் எப்போதும் கூறுவது, "அது என் இயல்பு, என் ததாகதம்" என்றுதான். ததாகதம் என்பது அவருடைய மிக முக்கியமான சொல். அவருடைய ஆதாரச் சொல் என்பதை மெல்ல மெல்ல அவருடைய சீடர்கள் அறிய வந்தார்கள். எனவே அவரை ததாகதர் என்று அழைத்தார்கள். அதாவது தன் தன்மையில்- சுயத்தில்- வாழ்கிறவர் (சுயம்பு), நிகழ்கணத்தில் வாழ்கிறவர்- அதைத்தவிர வேறெந்தக் காலத்தையும் அறியாதவர். இந்த இடத்தில் வாழ்கிறவர்- வேறு எந்தக் களத்தையும் அறியாதவர் என அவர் அழைக்கப்பட்டார்.

நீங்களும் இங்கே இப்போது இருந்தால்,

**அது உண்மையில் கதவைத் திறக்கிறது. அவ்வழி ததாகதரின் தோப்புக்கு இட்டுச்செல்கிறது. உண்மையான ஸென் மாணவர் கிளைகளையும் இலைகளையும் புறக்கணிக்கிறார், வேரை குறிவைக்கிறார்.**

உங்கள் அவலத்தின் வேர் எது? இந்த இலக்கு நோக்கிய மனம்தான். உங்கள் துயரத்தின் வேர் எது? இந்த ஓயாத (இலக்குகளுக்குள்) தப்பித்தல்கள்தான். உங்கள் துயரத்தின் வேர் எது? உங்கள் மனமே உங்கள் துன்பதுயரங்களின் வேர். ஆனால் நீங்கள் ஒருபோதும் வேரை வெட்டுவதில்லை. கிளைகளையும் இலைகளையுமே கத்தரித்துக் கொண்டு இருக்கிறீர்கள். இலைகளையும் கிளைகளையும் நீங்கள் தரித்துச் செல்லச்செல்ல அவை அதிகமாய் தழைக்கவே செய்யும்; மரம் இன்னும் வலுப்பெறும்.

ஒரு நூறாயிரம் சந்நியாசிகளுக்குமேல் நான் தீட்சை அளித்திருக்கிறேன். இருபது வருடங்களாக லட்சக்கணக்கான மக்களுக்கு நான் தியானத்தை கற்பித்திருக்கிறேன். ஆனால் ஒரே ஒரு ஆள்கூட வந்து ஒரு வேர்க்கேள்வியைக் கேட்டதில்லை. அவர்கள் எல்லோருமே "இந்தக் கிளையை முறிப்பது எப்படி?" "அந்த இலையை கிள்ளுவது எப்படி" என்றுதான் வருகிறார்கள். ஒருவர் சொல்கிறார்: "நான் கோபத்தால் துன்பப்படுகிறேன். அதற்கு நான் என்ன செய்யவேண்டும்?" இன்னொருவர் சொல்கிறார்: "நான் அதிக ஆசையால் துன்பப்படுகிறேன். அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? பேராசையைக் கைவிடுவது எப்படி?" இன்னொருவர் பொறாமையால் துன்பப்படுகிறார்: இன்னொருவர் இன்னொன்றால் துன்பப்படுகிறார்- இவையெல்லாம் இலையும் கிளையும்தான். யாரும் வந்து இப்படிச் சொன்னதில்லை "நான் என் மனதால் துன்பப்படுகிறேன். அதை விட்டொழிப்பது எவ்வாறு?" ஆனால் அதுதான் வேர்க் கேள்வி.

வேரை நீங்கள் கண்டதுமே, விஷயம் மிகச் சுலபமாகிறது. வேரை வெட்டுங்கள், மொத்தமும் தானே வாடி உதிர்ந்து போகிறது. கோபம், ஆசை, காமம், பொறாமை, உடைமை மனப்பான்மை- எல்லாம் மறைந்து போகிறது.

ஆனால் வேரை வெட்ட விரும்புவதில்லை நீங்கள். மிகவும் முன்னுக்குப்பின் முரணான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்: நீங்கள் தொடர்ந்தும் வேருக்கு நீர் பாய்ச்சுகிறீர்கள், உங்கள் மனதைப் பயிற்றுவிக்கவும் செம்மைப்படுத்தவும் செய்கிறீர்கள், உங்கள் மனதுக்கு அதிகத் தகவலை, அதிக போஷாக்கை அளித்துக்கொண்டே போகிறீர்கள், மறுபுறமோ, கோபம்- பேராசை பொருட்பற்று அகங்காரம் எல்லாம் குறைய வேண்டும் என்று ஆசைப்பட்டுக்கொண்டே இருக்கிறீர்கள். "பணிவுடன் இருப்பது எப்படி?" என்று கேட்கிறீர்கள். ஆனால் வேர்களுக்கு நீரும் உரமும்

கொடுத்துக்கொண்டே இலை தழைகளை சீவிஎறிந்துகொண்டே போகிறீர்கள். நீங்கள் ஒரு இலையைச் சீவினால் அதனிடத்தில் 3 இலைகள் வரும். மரம் உடனடியாக உங்கள் சவாலை ஏற்று ஒரு இலைக்கு 3 இலைகளை கொண்டு வருகிறது!

எனவே காமத்துக்கு எதிராயிருக்கிற ஒரு சமுதாயம் கோளாறானதாகிறது. காமவெறி பிடித்ததாகிறது. இது இந்தியாவில் நிகழ்ந்திருக்கிறது. இந்தளவுக்கு காம வெறிபிடித்த நாட்டை வேறெங்கும் நீங்கள் பார்க்க முடியாது. இதற்கான ஒரேகாரணம், அவர்கள் திரும்பத்திரும்ப இலைகளையே கத்தரித்துக் கொண்டு இருக்கிறதுதான். எப்போதும் அவர்கள் இலைகளையே கிள்ளியதால் மரம் அதிக இலைகளுடன் வளர்ந்து கொண்டே போகிறது. எனவே காமத்தன்மை எவ்வளவு நுட்பமாக வழிகளில் எல்லாம் ஊடுருவி இருக்கிறதென்றால், நீங்கள் மிகவும் விழிப்பாக இல்லாவிட்டால், அது ஊடுருவியிருக்கிற பல்வேறு வழிகளை எல்லாம் உங்களால் கண்டுகொள்ள முடியாது. வேறு யாரையும் விட இந்தியமனம் அதிகமதிக காமத்தன்மை கொண்டதாயிருப்பது எவ்வாறு என்பதை உங்களால் கண்டு கொள்ளமுடியாது.

உங்களுக்குத் தெரியுமா? காமவியல் ஆசனங்களைப் பற்றி (Postures) சிந்தித்த முதல் நாடு இந்தியாதான். முதல் காமவியல் சாத்திரமான காமசூத்திரம் எழுதப்பட்டது. இந்தியாவில்தான். அதற்குப்பிறகு 5000 ஆண்டுகள் கழித்துதான் சிக்மண்ட் பிராய்டு வருகிறார். மாஸ்டர்ஸ் அண்டு ஜான்சனும் பிற காமவியல் ஆய்வரும் இப்போதுதான் மேற்கில் தொடங்கியுள்ளார்கள். வாத்ஸ்யாயனரின், காமசூத்திரத்தின் நுட்பத்தை அவர்கள் இன்னும் எட்டவில்லை- பிரெஞ்சர்கள் கூட அவ்வளவு புலமை பெறவில்லை. காமத்தைப்பற்றிய ஏறக்குறைய எல்லாவற்றையும் வாத்ஸ்யாயனர் கண்டுபிடித்திருக்கிறார்; எதையுமே விடவில்லை- அவரது ஆய்வுநூல் ஏறக்குறைய முழுமை பெற்றிருக்கிறது. அது ஒரு செய்முறை விளக்கநூல். எல்லா உத்திகளையும் அது கற்றுத்தருகிறது.

இந்தியா ஏன் 'காமசூத்திரத்தை' கண்டுபிடித்தது? நூற்றாண்டுகளாக கற்பைக் கொண்டாடி வந்திருக்கிற இந்தநாடு, கற்பைப் போற்றியும் போதித்தும் வந்திருக்கிற இந்தநாடு, காம சூத்திரத்தையும் கண்டுபிடிக்கிறது. வாத்ஸ்யாயனரை இந்த நாடு உருவாக்கியது. பின் கோக பண்டிதர் வந்தார்- இவர் இன்னொரு வாத்ஸயாயனர். கோகருடன் ஒப்பிட்டால் இக்காலத்து விரச நூல்கள் முதலியவை (போர்னோகிராபி) மிகச் சாதாரணம். கோக பண்டிதர் ஒரு சரியான சிருங்கார விவரணை எழுத்தாளர்.

ஆனால் ஏன் இவர்கள் இந்தியாவில் அவதரித்தார்கள்? மேலும் ஆயிரக்கணக்கான கோயில்கள் சிவலிங்கத்துக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. அது ஒரு ஆண்குறிச் சின்னம். இந்தியாவைத் தவிர வேறெந்த நாடும் ஆண்குறிச் சின்னத்தை வழிபடுவதில்லை. அது ஆண்- பெண் இரண்டும் சேர்ந்த சின்னம். சிவன் கோயிலுக்கு போனால் நன்றாக பாருங்கள். அது பெண்ணின் இனப்பெருக்க உறுப்பை குறிக்கிறது. ஆணின் இனப்பெருக்க உறுப்பையும் குறிக்கிறது. அவை இரண்டின் சேர்க்கை நிலையை- கூடலை, சிற்றின்ப நிலையையும் குறிக்கிறது. இது வழிபடப்படுகிறது.

தாம் எதை வழிபட்டு வருகிறோம் என்பதை மக்கள் அறவே மறந்துவிட்டிருக்கிறார்கள். இந்திய சாத்திரங்களில் நீங்கள் நுழைந்து பார்த்தால் திகைத்துப்போவீர்கள். அவை காமத்தால் ஆட்கொள்ளப்பட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள்: ஒருபுறம் அவை தொடர்ந்து கண்டனம் செய்து கொண்டுள்ளன. மறுபுறம் நுணுக்கமான வழிகளில் தொடர்ச்சியாக அதை சித்தரித்தும் வந்துள்ளன. கஜுராகோ, கோனாரக், பூரி முதலிய கோயில்கள் வேறு நாடுகளில் இல்லை. ஏன்? இந்தியாவில் இவை ஏன் நிகழ்ந்தன? ஒரே எளிய காரணம், ஒரு இலையை நறுக்கினால் 3 இலைகள் புறப்படும் என்பதே. மூன்றை வெட்டினால் 9 கிளம்பும். ஒன்பதை தரித்தால் 27 வரும்' என்பதை நினைவில் கொள்ளுங்கள். 3 என்னும் மந்திர எண்ணை இயற்கை நம்புகிறது. அது திரித்துவத்தை நம்புகிறது.

மனிதரை உருமாற்றும் வழி இதுவல்ல. இது மனிதரை உருக்குலைக்கும் வழிதான்.

எனவே வெளிப்பார்வைக்கு இந்தியன் தனக்கு காமத்தில் ஆர்வமே இல்லாததுபோல் காட்ட முயலுகிறான். ஆனால் அடியாழத்தில் காம உணர்வால் அவன் கொதித்துக் கொண்டிருக் கிறான். ஓயாமல் காமத்துக்கான வாய்ப்பை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனது மனம் முழுவதுமே காம உணர்வால் நிரம்பி வழிகிறது. மனிதர்களின் தலைகளில் சன்னல்களைப் பொருத்த முடிந்தால் இந்தியத் தலைகளைப் பார்ப்பது உண்மையிலேயே கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்!

இது நிகழவே செய்யும். நீங்கள் எதை அடக்கிவைத்தாலும், எதை அறுத்துப் போட்டாலும் அது வேரை வெட்டவில்லை என்றால் அது வளரவே செய்யும்; நுணுக்கமான வழிகளில் வளர்ந்தே

தீரும். அதிக நோய்க்கூறான, வக்கிரமான வழிகளில் அது தன்னை நிலைநிறுத்தத் தொடங்கலாம்.

யோக்கா கூறுகிறார்:

**உண்மையான ஸென் மாணவர் கிளைகளையும் இலை களையும் புறக்கணிக்கிறார், வேருக்கே குறிவைக்கிறார்.**

**நிலவின் பிம்பம் மரகதக் கோப்பையில் பிரதிபலிப்பது போல சுதந்திரம் என்னும் மணியின் உண்மை அழகை நான் அறிகிறேன்.**

**எனக்காகவும் பிறருக்காகவும்.**

சுதந்திரம் ஒன்றே ஒன்றுதான்: எல்லா இலக்குகளில் இருந்தும் விடுதலை.

பிரகீதா, தியானத்தின் இலக்கு என்ன என கேட்காதே. ஏன் எப்போதும் இலக்குகள்மீது மிகுந்த நாட்டம் கொள்கிறாய் என்பதைப் புரிந்துகொள்ள முயல். அந்தப் புரிதலிலேயே உன்னுள் தியானம் உதிக்கும். உன்னுள் தியானம் மலரும்.

நீ நிலைநிறுத்த முடிகிற, நீ பயிற்சிசெய்ய முடிகிற ஒன்றல்ல தியானம். அது மிகவும் மர்மமான ஒன்று, மகத்தான விரிவுடைய ஒன்று. தற்சாய்வின்றியும், முன்கூட்டிய காரணகாரிய முடிவுகள் இன்றியும் ஒவ்வொன்றையும் புரிந்துகொள்ள உன் இதயம் தன் கதவுகளைத் திறக்கிற போது மட்டுமே அது வருகிறது.

என்னுடன் இங்கு இருக்கையில், இலக்குகள் இன்றி இருக்கப்படி. என் சந்நியாசிகள், நாம் எந்த இலக்குக்காகவும் நிற்கவில்லை என்பதை நன்றாக அறிந்துகொள்ள வேண்டும். நிகழ்கணத்தில் மிக முழுமையாக வாழ்வதே நம் முழு வேலையும்- அதில் இறந்தகாலம் எதிர்காலம் எல்லாம் முழுமையாக மறைந்து விட வேண்டும். ஏற்கெனவே போய்விட்டதைப் பற்றி யாருக்குக் கவலை? இன்னும் வராததைப் பற்றியும் யாருக்குக் கவலை? இந்த கணத்துக்கு இந்தகணமே போதும். நிகழ்கணத்தை அதன் முழுமையில், சந்தோசத்தில் வாழ்வதும், எதையும் மிச்சம்பிடிக் காமல் பின்னுக்கு எடுக்காமல் அதற்குள் ஆழமாக முக்குளிப்பதும் தான் ஆனந்தம். இவ்வுலக, அவ்வுலக இலக்குகள் அனைத்தையும், பொருளாயத, ஆன்மிக இலக்குகள் அனைத்தையும் விட்டொழித்ததும்- ஒருவர் தியானத்தின் சுவையை அறிகிறார்- அது முழுச் சுதந்திரத்தின் சுவையே.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**இங்குள்ள ஒவ்வொருவரும் ஏன் தத்தம் சொந்த வழியிலேயே உங்களைப் புரிந்துகொள்கிறார்?**

**லீலாதர்.**

இது இயற்கைதான் தடாகதம் தான். அதுவேறு எப்படி இருக்க முடியும்? ஒவ்வொருவரும் என்னை அவரவர் வழியிலேயே புரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் ஒவ்வொருவருக்கும் ஒரு மனம் இருக்கிறது- தற்சமயம் புரிதல் என்பது அந்த மனத்தின் மூலமாகவே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. மனம் மறைந்துவிட்டால் பின் ஒவ்வொருவரும் என் வழியில் புரிந்துகொள்வார்கள்தான். அப்போது எந்தப் பிரச்சனையும் இருக்காது, எந்தக் கேள்வியும் இருக்காது. அப்போது நான் எதையும் சொல்லவும் தேவை இருக் காது- நான் அமைதியாக உட்கார்ந்திருப்பேன். நீங்களும் அமைதியாக உட்கார்ந்திருப்பீர்கள். நாம் அமைதியை அனுபவிப்போம். அங்கே ஐக்கியம்- இதயத்துக்கு இதயமான ஐக்கியம் இருக்கும்.

ஆனால் தற்போது உங்களிடம் மனங்கள் உள்ளன. உங்களுடன் தொடர்புகொள்ள எனக்கு வேறு வழி இல்லை. ஆயின் இதை ஏற்றுக்கொள்ளவே வேண்டி இருக்கிறது: அதாவது மனங்களுடன் நீங்கள் தொடர்பு கொண்டிருந்தால் அவர்கள் வேறுவிதமாகத்தான் புரிந்து கொள்வார்கள். தம் சொந்த வழியிலேயே புரிந்து கொள்வார்கள் என்பதை நீங்கள் ஏற்கவே வேண்டி இருக்கிறது.

ஒவ்வொரு மனமும் வெவ்வேறு விதமாக இருக்கிறது. இங்கோ நம்மிடம் எல்லா விதமான மனங்களும் உள்ளன. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திலிருந்து மட்டும் வந்த மக்கள் சமூகம் அல்ல இது.

இந்துக்கள் மட்டுமே இங்கிருந்தால் அவர்கள் ஒரேவிதமாக சரியாகவோ தவறாகவோ புரிந்துகொள்வார்கள். ஆனால் இங்கே இந்துக்களும் முகமதியரும் சமணர்களும் பவுத்தரும் கிறித்தவரும் யூதரும் ஜராதுஷ்டிரியரும் இருக்கிறார்கள். இவர்கள் எல்லோருக்கும் அவரவர் சொந்த மதப் பின்னணிகளும் எல்லா விதமான அரசியல் சித்தாந்தப் பின்னணிகளும் உள்ளன. மேலும் நம்மிடம் உலகிலுள்ள எல்லா தேசத்தவரும் இருக்கிறார்கள். சுமார் 40 தேசங்களுக்குபக்கம் இங்கு பிரதிநிதித்துவம் உள்ளது. எப்படி நீங்கள் எதிர்பார்க்க முடியும்...? இது ஒரு கத்தோலிக்க ஆலயமோ இந்து கோயிலோ

அல்ல; இது ஒரு குட்டிப் பிரபஞ்சம்! இங்கு ஒருவித புரிதல் ஏற்பட்டிருப்பதும், ஒருவர் மற்றவரின் குரல் வளையை தெரிக்காமல் இருப்பதும், மக்கள் இங்கு மிகவும் நட்பாகவும் நேசமாகவும் இருப்பதுவுமே உண்மையில் ஒரு அற்புதம்தான்.

இந்த மக்கள்தான் நூற்றாண்டுகளாக ஒருவர் கழுத்தை ஒருவர் வெட்டிக்கொண்டிருந்தார்கள்: இந்துக்கள் முகமதியரைக் கொன்றார்கள்; முகமதியர் இந்துக்களைக் கொன்றார்கள். இங்கேயோ நீங்கள் அற்புதத்தைக் காண்பீர்கள்: கிருஷ்ண முகமது என்ற பெயரில் ஒருவரை நீங்கள் காண்பீர்கள். உலகில் வேறெங்கும் இதை நீங்கள் காண முடியாது. கிருஷ்ண முகமதா?

உண்மையில் எனக்கு மிகவும் கவலையாயிருக்கிறது. நான் இறந்ததும் மறுவுலகத்துக்கு சென்றதும், கிருஷ்ணர்- மோயீசன்- முகமது- மகாவீரர்- புத்தர் எல்லோரும் என்மேல் பாய்வார்கள். "என்ன செய்திருக்கிறாய் நீ? ஒரு மனிதனை கிருஷ்ண முகமது என்று அழைப்பதா?" என அவர்கள் கேட்பார்கள். ஏனெனில் சொர்க்கத்திலும் வகுப்புகள் இருப்பதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன்: இந்துக்கள் ஒரு பகுதியில், இந்து குடியிருப்பில் வாழ்கிறார்கள். முகமதியர்கள் இன்னொரு பகுதியில் வாழ்கிறார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் கண்கொண்டும் பார்ப்பதில்லை. உண்மையில் ஒவ்வொருவரும் தான் மட்டுமே சொர்க்கத்தில் இருப்பதாகவும் வேறு யாரும் சொர்க்கத்தில் இல்லை என்றுமே நம்புகிறார். அந்த போலி நம்பிக்கையை கடவுள் காப்பாற்ற வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் கடவுளுக்கு அவர்கள் தலைவலியை உண்டாக்குவார்கள். எனவே இந்த பிரிவுகளுக்கிடையில் பெரிய சுவர்கள் சூழ்ந்துள்ளன.

இனி கடவுளுக்கும் தலைவலியாகப் போகிறது. கிருஷ்ண முகமதை அவர் எங்கு வைப்பார்? இந்து பிரிவிலா முகமதியப் பிரிவிலா?- நம் மக்கள் எல்லா இடத்துக்கும் பறந்து கொண்டிருப்பார்கள்!

மக்கள் வெவ்வேறு விதமாகவே புரிந்துகொள்வது இயற்கைதான் லீலாதர். ஏனெனில் மக்கள் வெவ்வேறு மனங்களுடன் இருக்கிறார்கள்.

OOO

ஜூலியஸ்: "கட்டளைகள் எத்தனை?"

ஜூலியா: "பத்து".

ஜூலியஸ்: "அவற்றில் ஒன்றை நீ- வந்து- சரி, அவற்றில் ஒன்றை நீ உடைத்துவிட்டால் என்ன ஆகும்?"

ஜூலியஸ்: "மீதி 9 இருக்கும்!"

OOO

தாயார் தினத்தன்று அவள் கணவன் அவளுக்கு ஒரு அழகிய மென்மயிர்த்தோல் கோட்டைப் பரிசளித்தான்.

"இவ்வளவு துர்நாற்றம்பிடித்த மிருகத்திடம் இருந்து இவ்வளவு அழகான கோட்டு எப்படி வருகிறது என எனக்கு தெரியவில்லை" என்றாள் அம்மா.

"நான் நன்றியை எதிர்பார்க்கவில்லை, கண்ணே" என்றான் கணவன். "ஆனால் மரியாதையை கண்டிப்பாக எதிர்பார்க்கிறேன்."

OOO

ஒரு இத்தாலியன் அலிட்டாலியா அலுவலகத்துக்கு தொலை பேசுகிறான். பதில் சொன்னவன் சாதாரண ஊழியன்.

"தயவுசெய்து- அ, ஐயா, இது- அலிட்டாலியா அலுவலகம் தானே?"

"ஆம்" என்கிறான் ஊழியன்.

"ரோமாவிலிருந்து- அ பூனாவுக்கு எவ்வளவு நேரம்- அ ஆகும்?"

"ஒரு நிமிசம், ஐயா."

"நன்றி-அ!" என்று பதிலளித்து தொடர்பைத் துண்டிக்கிறான் இத்தாலியன்.

OOO

"எப்போதாவது படுத்தபடுக்கையாய் கிடந்திருக்கிறீர்களா?" என்று புதுமருத்துவர் திருமதி லோங்கோவை கேட்டார்.

"தாராளமா. அதுமட்டுமல்ல, வேறு-அ நிறைய வழியிலும் உறவுகொண்டிருக்கிறேன்" என்றாள் அப்பெண் பெருமையாக.

OOO

"உன் பிறந்த நாளுக்கு என்ன வேணும் மகனே?"

காமாந்தகனான இத்தாலிய அப்பா பையனைக் கேட்டான்.

"எனக்கு-அ வாச் வேணும்" என்றான் குழந்தை.

"உன் அம்மா சரி என்று சொன்னால் எனக்குச் சம்மதம்தான்!" என்று அலட்சியமாக சொன்னார் அப்பா.

OOO

ஒரு ஐரோப்பிய நாட்டில் ஒரு அரசு விழாவின்போது இங்கிலாந்து ராணியுடன் குதிரை வண்டியில் இருக்கிறார் பிரேசிலிய தூதுவர். அப்போது திடீரென குதிரை குசுவிடுகிறது.

தரும சங்கடத்துடன் ராணி மன்னிப்புக் கோருகிறாள், "மன்னிக்கவும், தூதரே".

"இதில் ஒன்றுமில்லை ராணியாரே. இது நடப்பதுதான். இருந்தாலும் நான் கூட அது குதிரைதான் என்று நினைத்தேன்!"

OOO

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**துணிவு என்பது என்ன?**

**பிரேம் லீலா,**

**து**ணிவு என்பது ஒன்றே ஒன்றுதான்: இறந்த காலத்துக்கு இறந்துகொண்டே போவதுதான். அதைச் சேமிக்காது இருப்பதுதான். அதை குவித்துக் கொண்டே போகாததுதான். அதை தொற்றி இருக்காததுதான் துணிவு. நாம் எல்லோரும் இறந்த காலத்தை தொற்றிக் கொண்டு இருக்கிறோம். இதனால் நிகழ்கணத்தில் நாம் இல்லாதவர்களாகி விடுகிறோம். இவ்வாறு இறந்த காலத்தைத் தொற்றிக் கொண்டிருப்பதற்கு மனதிடம் தக்க காரணங்கள் கைவசம் உள்ளன.

முதலாவது: மனமே இறந்தகாலத்தால் ஆனதுதான். உன் மனத்தையே அது என்னவென்று பார்: அது இறந்த காலமன்றி வேறல்ல: நீ படித்திருந்திருக்கிற, நீ கவனித்திருந்திருக்கிற, அனுபவித்திருந்திருக்கிற, அவதானித்திருந்திருக்கிற அனைத்தும், இருந்திருக்கிற அனைத்துமே அது. மனம் ஒருபோதும் இருக்கிறது அல்ல; அதில் இறந்த காலமே இருக்கிறது. எனவே மனம் இயல்பாகவே இறந்த காலத்தால் உரம் பெறுகிறது, இறந்த காலத்தையே தொற்றிக் கொள்கிறது; ஏனெனில் அதுவே அதற்கு

சக்தியும், பலமும், ஆற்றலும், உயிரும் தருகிறது. ஆனால் எந்த அளவுக்கு கடந்தகாலம் உங்களைச் சுற்றி அதிகமாக சேகரமாகிறதோ அந்த அளவுக்கு அதிக தூசு படிந்த கண்ணாடியாக நீங்கள் ஆகிறீர்கள். கடந்தகாலம் என்பது வசதிதான், சொகுசுதான். ஏனெனில் அதனுடன் உங்களுக்கு நல்ல பரிச்சயம் இருக்கிறது. அதை உங்களுக்கு நன்றாகத் தெரியும். எனவே அதை எப்படி கையாள்வது என நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அதில் உங்களுக்கு திறமை இருக்கிறது. அதில் நீங்கள் கை தேர்ந்தவராக இருக்கிறீர்கள். உங்கள் மொத்த அறிவுமே அதையே சார்ந்திருக்கிறது. அதைக் கைவிடுவது என்றால் திரும்பத்திரும்ப நீங்கள் கற்க வேண்டி இருக்கும்- அதுவோ வசதியானது அல்ல. அசவுகரியமானது.

கடந்தகாலத்தை கைவிடுவது என்பதன் பொருள். தினமும் நீங்கள் ஒரு குழந்தையாக வேண்டி இருக்கும் என்பதே. உங்கள் அகங்காரம் தான் ஒரு குழந்தையாக இருக்க விரும்புவதில்லை. பெரிய ஆளாக இருக்கவே விரும்புகிறது. கடந்தகாலத்தை அடுக்கி அதன்மேல் ஏறி உட்கார்ந்து மற்றவர்களைவிட தான் உயரம் என காட்டவே உங்கள் அகங்காரம் விரும்புகிறது. கடந்தகாலம் இல்லாவிட்டால் நீங்கள் அறிவு இல்லாத; ஆனால் ஆச்சரியம், வியப்பு நிரம்பிய ஒரு குழந்தையைப் போலவே எப்போதும் இருப்பீர்கள்.

அது ஒன்றே துணிவு: அறிந்ததைக் கைவிட்டு அறியாததற்குள் பிரவேசிப்பதே துணிவு. ஒரே ஒரு தடவை அதைச் செய்தால் போதாது. ஒவ்வொரு கணமும் அப்படி செய்ய வேண்டும். ஒரு தடவை செய்தால் எப்போதைக்குமாக செய்த தாகிற விஷயம் அல்ல இது. ஒவ்வொரு கணமும் ஒவ்வொருநாளும் உங்கள் வாழ்வின் கடைசிக் கணம்வரை படுக்கையில் கிடந்து நீங்கள் உயிர்விடும்வரை அதை நீங்கள் செய்ய வேண்டும். அந்த நிலையிலும் நீங்கள் கடந்த காலத்துக்கு இறந்து விடும் நிகழ்முறையை கடைப்பிடிக்கவே வேண்டும். அப்போதுதான் ஒவ்வொரு கணமும் பளிங்குத் தெளிவுடன் நீங்கள் வாழமுடியும். உங்கள் கண்ணாடியில் தூசு படியாது. நிகழ்கணத்தை உள்ளபடியே நீங்கள் பிரதிபலிக்க முடிகையில் கடவுளை, கடவுள்தன்மையை நீங்கள் அறிகிறீர்கள். இருக்கிறதின் இன்னொரு பெயரே கடவுள். உள்ளது எதுவோ அதுவே கடவுள்.

ஆனால் நீங்கள் கடவுளைப்பற்றியே தகவலைச் சேகரிக்கிறீர்கள். அது மாபெரும் தடைகளில் ஒன்றாக அமைகிறது. எனவேதான்

பாவிகள் கடவுளை அடைந்ததை நான் கேள்விப்பட்டிருக்கிறேன்; ஆனால் படித்தவர்கள் ஒருபோதும் கடவுளை அடைந்ததாக நான் கேள்விப்பட்டதில்லை. பண்டிதர்களே மிகவும் நம்பத்தகுதியற்ற மனிதர்கள் ஆவார்கள். எவ்வளவு அதிகமாய் அவர்கள் அறிகிறார்களோ அவ்வளவுக்கு கடவுளிடமிருந்து தூரமாய் அவர்கள் இருக்கிறார்கள். எனவே பல சாத்திரங்கள் அவர்களை விலக்கு கின்றன. அவர்கள் கடவுளை அடைய முடியாது. கடவுளும் அவர்களை அடைய முடியாது. அவர்கள் தம் அறிவால் முற்றிலும் மூடப்பட்டிருக்கிறார்கள்.

துணிவு என்றால் அறிவைக் கைவிடும் துணிவு. மறுபடியும் அப்பாவியாவதற்கு துணிவு. அறியாத நிலையில் இருந்து செயல்படாத துணிவு வேறெந்தத் துணிவையும் நான் அறியேன்.

"துணிவு" என்னும் சொல்லை நான் பயன்படுத்தும்போது படைவீரனின் துணிவைக் குறிப்பதில்லை. அது துணிவல்ல, சுத்த மடத்தனம். அது வெறும் மூர்க்கம்; துணிவல்ல. அது வெளியில் இருந்து திணிக்கப்பட்டதே. அவன் மந்தமாகுமாறு அவனை நீங்கள் பயிற்ற வேண்டி உள்ளது. அது புத்தியின்மை, புத்திஅல்ல. எனவேதான் படைவீரர்கள் மடையர்களாக இருக்கிறார்கள். அதிக பதக்கங்கள் பெறப்பெற அதிக மடையர்களாக அவர்கள் ஆகி இருக்கிறார்கள் என நீங்கள் உறுதியாக அறிய முடியும். அவர்களின் மார்பில் இருக்கும் விருதுகளை எண்ணியே அவர்கள் எத்தனை முட்டாள்கள் என நீங்கள் அறியலாம்.

படையின் மொத்த வேலையுமே புத்திசாலித்தனத்தை நாசமாக்குவதுதான். ஏனெனில் புத்தியுள்ள மனிதனால் கொல்லமுடியாது. காரணமே இல்லாமல் ஒருவரைக் கொல்ல வேண்டி வரும்போது, புத்திசாலி 1001 கேள்விகளைக் கேட்பான்.

ஒரு இந்தியன் ஒரு பாகிஸ்தானியைக் கொல்லுகிறான். அவனை அதற்குமுன் அவன் சந்தித்ததே இல்லை. அவனை அதற்கு முன் அவன் பார்த்ததே இல்லை. அவனுடன் அவனுக்கு எந்த பகைமையும் இல்லை. அவ்வாறே பாகிஸ்தானியும் இந்தியனைக் கொல்கிறான்- எந்தக் காரணமும் இல்லாமலேயே, அவனுக்கு எந்தத் தீங்கும் செய்யாதவனைப் போய் கொல்கிறான்...

கொஞ்சமாவது அறிவிருந்தால் அவர்களால் அதைச் செய்ய முடியுமா? தன் மனைவி தனக்காக வீட்டில் காத்துக்கொண்டிருப்பது போலவே அவன் மனைவி அவனுக்காக அவன் வீட்டில் காத்துக்

கொண்டிருப்பாள் என்பதையும், தன் குழந்தைகள் தன்னை எதிர்பார்த்திருப்பார்கள் என்பது போலவே அவன் குழந்தைகளும் அவனை எதிர்பார்த்திருப்பார்கள் என்பதையும், தன் வயதான தாய்தந்தையர் தன்னைச் சார்ந்திருப்பதுபோலவே அவனுடைய தாய்தந்தையர் அவனைச் சார்ந்திருக்கிறார்கள் என்பதையும் எண்ணிப்பார்த்தால் எந்த இந்தியனோ பாகிஸ்தானியோ அதைச் செய்ய முடியுமா? கொல்லவோ கொல்லப்படவோ செய்கிற இந்த மடமையை அவனால் செய்ய முடியுமா?

படைவீரர்கள் நுண்ணறிவுள்ளவர்களாயிருக்க அனுமதிக்கப் பட்டால் பூமியிலிருந்து போர்கள் மறைந்துவிடும். நுண்ணறிவு அனைத்தையும் இழந்துவிடும் வகையில் படைவீரர்கள் தயாரிக்கப் படுவதால், தளைப்படுத்தப்படுவதால் மட்டுமே போர்கள் நிலவ முடிகிறது. எனவேதான் புத்திகெட்ட பயிற்சியை பல்லாண்டுகளுக்கு அவர்கள்மீது திணிக்க வேண்டியிருக்கிறது. ஆண்டுக்கணக்கில் அவன் அர்த்தம் கெட்ட செயல்களைச் செய்துகொண்டே போகிறான்.

அதிகாலையில் அவன் எழுகிறான். வரிசையில் நிற்கவேண்டும். அணிவகுப்பு தொடங்குகிறது. பின் "இடதுபக்கம் திரும்பு", "வலது பக்கம் திரும்பு", "எதிர்த்திசையில் திரும்பு", "முன்னேபோ", "பின்னே வா"- எல்லாம் எதற்காக? இப்படி மணிக்கணக்கில் தொடர்கிறது.

இரண்டாம் உலகப்போரில் ஒரு தத்துவர் படையில் சேர்க்கப் பட்டார். படைத்தலைவன் "வலதுபக்கம் (திரும்பு)!" என்றான். எல்லோரும் வலதுபக்கமாக திரும்பினர். தத்துவரைத் தவிர, படைத்தலைவன் கேட்டார், "ஏன்? ஏன் நீ வலது பக்கமாகத் திரும்பவில்லை?"

அவர் சொன்னார், "ஏன் நான் திரும்பவேண்டும்? எனக்கு அந்தப் பக்கம் எந்த வேலையும் இல்லை. அதற்கு தேவை இருப்பதாக நான் பார்க்கவில்லை. இந்த மனிதர்கள் எல்லாம் முட்டாள்கள் என்றே நான் நினைக்கிறேன். நீர் "வலதுபக்கம்" என்று சொன்ன மாத்திரத்தில் அவர்கள் திரும்பிவிடுகிறார்கள். அதற்கு என்ன அவசியம் என்பதை எனக்கு நீர் நிரூபிக்க வேண்டும். ஏன் நான் வலது பக்கமாகத் திரும்ப வேண்டும்?"

அவர் ஒரு புகழ்பெற்ற தத்துவர் என்பதை தலைமை அதிகாரி அறிந்திருந்தான். அவன் சொன்னான், "இந்த ஆள் ராணுவத்துக்கு தகுதியானவன் அல்ல. இந்த வகை ஆள் இங்கு தேவையில்லை". மற்ற

படைவீரர்களும்கூட சிந்திக்கத் தொடங்கினார்கள். "அதுதானே? ஏன்? நாம் நிச்சயமாக மடையர்களே. இந்த ஆள் வெறுமனே "வலது (பக்கம்"! என்கிறான். அப்படி சொல்ல அவனிடம் எந்த காரணமும் இல்லை. நாமோ பேசாமல் வலதுபுறம் திரும்பிவிடுகிறோம்!"

தலைமை அதிகாரி நினைத்தான், "இந்த மனிதன் பிரச்சினையை உருவாக்கிவிடுவான். அவன் மட்டும் எனக்கொரு பிரச்சனையாக இருப்பது போதாதென்று மற்றவர்களும் அவனிடமிருந்து விவரம்பெற தொடங்கிவிடுவார்கள். "எனவே அவரை வெளியே அழைத்துச் சொன்னான், "உனக்கு இது சரியாகவராது. நீ சமையல்வேலைக்கு போ. உனக்கு நான் வேறுவேலை தருகிறேன். சுலபமான வேலை தருக்கிறேன். அது உன்னால் முடியும்". எனவே அவர் முன் ஒரு மூட்டை உருளைக்கிழங்கை கொட்டி சொன்னான், "இதை நீ வகைபிரி- பெரியவற்றை ஒரு புறமாகவும் சிறியவற்றை மறுபுறமாகவும் போடு."

ஒருமணிநேரம் கழித்து அவன் வந்த போது தத்துவர் பேசாமல் உட்கார்ந்திருந்தார். சாசெனில் இருந்தார்- எதையும் செய்யாமல் அமைதியாக அமர்ந்திருந்தார். ஒரு உருளைக்கிழங்கையும்கூட அவர் தொடவில்லை. தலைமை அதிகாரி சொன்னான், "இதைக்கூட உன்னால் செய்ய முடியாதா?"

அவர் சொன்னார், "முடியும். ஆனால் ஒரு பெரிய பிரச்சனை வந்திருக்கிறது. ஆம், சில கிழங்குகள் பெரிதாக உள்ளன. சில கிழங்குகள் சிறியதாக உள்ளன. சரி. ஆனால் சில கிழங்குகள் நடுத்தரமாக உள்ளனவே. அந்த நடுத்தர கிழங்குகளை என்ன செய்வது என்பதை முதலில் முடிவுசெய்தாக வேண்டும். எல்லாவற்றையுமே தெளிவு செய்யாதபடி நான் ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாது. நடுத்தரவர்க்க உருளைக் கிழங்குகளை என்ன செய்வது?"

அவரை விடுவித்துவிட வேண்டியதாயிற்று. இந்த மனிதர் படைக்கு சரியான ஆள் கிடையாது. உண்மையில் அறிவுள்ள எந்த மனிதனும் படைக்கு லாயக்கில்லை. தினமும் ஐந்தாறு மணிநேரத்துக்கு அணி வகுப்பு, வலதுபக்கம் திரும்புவது, இடதுபக்கம் திரும்புவது, மடத்தனமான காரியங்களை செய்யும்படி ஆணையிடப்படுவது, அவற்றுக்குக் கீழ்ப்படிவது... பின் ஒருநாள் படைத்தலைவர் கூறுகிறான், "சுடு!"- உடனே அவர்கள் யந்திரங்கள் போலவே செயல்படுகிறார்கள். இடதுபக்கமும் வலதுபக்கமும் சொன்னபடி திரும்பியதுபோலவே, சுடவும் செய்கிறார்கள்; தாம் இன்னது செய்கிறோம் என்பதை- உயிரை அழித்துக் கொண்

டிருக்கிறோம் என்பதை- பற்றிய துளி எண்ணமும் அவர்களிடம் இருப்பதில்லை.

சந்நியாசிக்கு வேறொரு விதமான வீரம் தேவை. மேலே சொன்னதோ வீரம் அல்ல, மந்தத்தனம், மடத்தனம் அவ்வளவே- மரமண்டைத்தனமே தவிர வேறல்ல. அவர்களின் நுண்ணறிவு முற்றிலும் நாசமாக்கப்பட்டுவிட்டது. இயந்திர மனிதர்கள் போல் அவர்கள் கட்டுப்படுத்தப்பட்டுள்ளார்கள். எனவேதான் ஆயுதப் போட்டிகள் மிகவும் அறிவுகெட்ட தனமானவையென நிரூபணமாகின்றன.

இந்தியாவில் பஞ்சாபிகள், குறிப்பாக சீக்கியர்கள், சர்தார்கள் மிகவும் போர்க்குணம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்களே மிகவும் புத்திமந்தம் உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். மிகவும் துணிச்சலானவர்கள்: புத்திசாலி இரண்டு தடவை யோசிக்கும் நிலவரத்துக்குள் இவர்கள் யோசிக்காமலே நுழைவார்கள்; பயப்பட மாட்டார்கள். ஆணையிட்டாலே போதும், சுட்டுத்தள்ளி விடுவார்கள். இவ்வகையான வீரம்தான் காலங்காலமாக மனித இனத்துக்கு கற்பிக்கப்பட்டு வந்திருக்கிறது. அது ஒரு தவறான வகையான வீரமாகும். 'வீரம்' என்னும் சொல்லை நான் பயன்படுத்தும்போது முற்றிலும் வேறுவிதமான பொருளில், தொனிப்பில் அதைப் பயன்படுத்துகிறேன்.

லீலா, என்னைப் பொறுத்தவரை துணிச்சல் என்றால் உன்னை சூழ்ந்திருக்கிற இந்த புத்திகெட்ட மக்களுக்கு எதிராக விவேகத்துடன் இருக்கும் வீரமே ஆகும். துணிவு என்றால் அச்சமின்மை தன் கருத்துகளுக்கேற்ப உன்னை கட்டாயப்படுத்த சமுதாயம் எல்லா வழியிலும் முயலும். அதனுடன் சமரசம் செய்வதைவிட துன்பப்படுவதே மேல். ஏனெனில் துன்பத்தின் மூலமே உன் ஆன்மா பிறக்கிறது.சமரசம் மூலம் நீ உன் தோலைக் காப்பாற்றிக் கொள்ளலாம்; ஆனால் உன் ஆன்மாவை நீ இழந்துவிடுவாய்.

துணிவு என்றால் ஒரு தனிநபராக இருப்பதாகும். மந்தையாக அல்ல, சிங்கமாக இருப்பதாகும். துணிவு என்றால் உங்களை நீங்கள் உறுதிப்படுத்தும் திறனாகும்: "நான் நானாயிருக்கிறேன்; என் வாழ்க்கை என் வாழ்க்கையே- என் வழியிலேயே அதை நான் வாழப்போகிறேன். மற்றவர்கள் சொல்கிறபடியெல்லாம் வாழ்வதற்காக நான் இங்கு இல்லை. மேலும் நான் எவ்வாறு வாழவேண்டும், நான் என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறித்து யாரும் எனக்கு சட்டம்போட அனுமதிக்கமாட்டேன். என்ன விலை

கொடுத்தேனும், என்ன விளைவு எனக்கு ஏற்பட்டாலும் என் சொந்த ஒளியின் பிரகாரமே வாழ்வேன்''. இன்னொருவரின் ஆணைப்படி நடந்து மோட்சம் போவதைவிட உங்கள் சொந்த முடிவின் படி நரகத்துக்குப் போவதே மேல். ஏனெனில் அந்த மோட்சம் வெறும் அடிமைத்தனமாகவே இருக்கும்.

துணிவு என்றால் சுதந்திரமாயிருக்கும் துணிவு. துணிவு என்றால் விடுதலை. அதை அதன் சாரமாகச் சுருக்கினால் உண்மையில் அது இறந்த காலத்துக்கு இறத்தலே ஆகும். இறந்தகாலத்துக்கு நீங்கள் இறந்தால், நீங்கள் பிறந்த மரபுக்கு நீங்கள் இறக்கிறீர்கள், நீங்கள் பிறந்த மதத்துக்கு நீங்கள் இறக்கிறீர்கள், நீங்கள் பிறந்த சமுதாயத்துக்கு நீங்கள் இறக்கிறீர்கள், இறந்தகாலம் முழுவதுக்குமே நீங்கள் இறக்கிறீர்கள். வரலாற்றுக்கும் காலத்துக்கும் நீங்கள் இறக்கிறீர்கள். புதிதாக நீங்கள் பிறக்கிறீர்கள்- ஒரு புதிய மனிதப் பிறவி ஆகிறீர்கள்; இந்தப் புதுப் பிறவிக்கு இனமில்லை. நாடில்லை, மதமில்லை. கடவுள் இல்லை. அவர் ஒரு சமய மனிதராயிருப்பார். ஆனால் கிறிஸ்தவராகவோ இந்துவாகவோ முகமதியராகவோ இருக்க மாட்டார்.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**உங்கள் ஆங்கிலம்— பிரிட்டிஷ் ஆங்கிலமா அமெரிக்க ஆங்கிலமா?**

**சஞ்சீவா.**

நிச்சயம் அது பிரிட்டிஷ் அல்ல. பிரிட்டிஷாக இருப்பது எளிதல்ல. குறைந்தது ஒருவர் ஏழு தடவையாவது பிரிட்டிஷ்காரராக பிறந்துவர வேண்டும். பிரிட்டிஷ்காரன் ஆவதற்கு மிக நீண்ட காலம் எடுக்கும். அமெரிக்க ஆங்கிலமும் அல்ல. ஏனென்றால் நான் சுற்றுப்பயணி கிடையாது. என் அறையைக்கூட நான் விட்டு வெளிவருவதில்லை என்பது உனக்கு தெரியும்- அப்படியானால் நான் என்ன விதமான அமெரிக்கனாயிருக்க முடியும்?

மேலும் என் ஆங்கிலம்ஏன் பிரிட்டிஷாகவோ அமெரிக்க னாகவோ இருக்கவேண்டும்? என் ஆங்கிலம் என் ஆங்கிலம்தான்- அது ரஜனீஷ் இங்கிலீஷ்! மேலும் இது ஒரு ஜனநாயக நாடு. பேச்சுரிமை, அடிப்படை உரிமைகளில் ஒன்று என அரசியல்சட்டம் கூறுகிறது. நான் என் சொந்த மொழியைப் பேசுகிறேன். நான் ஏன் அமெரிக்க மொழியையோ பிரிட்டிஷ் மொழியையோ

பேசவேண்டும்? உண்மையில் ஆங்கிலம் மிகவும் கெடுபிடியானது, மிகவும் இறுக்கமானது. அமெரிக்க ஆங்கிலமோ மிகவும் கடைத்தரமாயிருக்கிறது- பிரிட்டிஷுக்கு நேர் எதிராக இருக்கிறது. அது ஒரு எதிர்வினை.

"அமெரிக்காவில் பிறந்த என் மகள் என்னிடம் சொல்லுகிறாள்: "Yeath, Popsi- wopsi, I gotcha, but you 'll hafta lay some heavy bread on me so's I kin strut new threads? at the establishment bust out, ya dig?"

"பள்ளிக் கலை நிகழ்ச்சியில் கலந்துகொள்ள அவளுக்கு புது உடை வாங்க பணம் கேட்கிறாள் என்பது, சுமார் அரைமணிநேரம் டிக்'கிய (குடைந்த) பிறகுதான் எனக்கு புரியவருகிறது... இந்த லட்சணத்தில் அவள் என் (mine) பேச்சுமொழியை விமர்சிக்கிறாள்!" அவள் அப்பா என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

இப்போது எனக்கும் இதைப் புரிந்துகொள்ள வெகு சிரமமாய்த்தான் இருக்கிறது....

"யா போப்சி- வோப்சி, ஐ கோட்ச்சா, bபட் யு'ல் ஹஃப்டா லே சம் ஹெவி bப்ரட் ஆன் மி சோ' ஸ் ஐ கின் ஸ்ட்ரட் ந்யூ த்ரெஇஸ் அட் த எஸ்டர் bளிஷ்மென்ட் gபஸ்ட்- அவுட், யா dடிக்?"

நான் இதை தோண்டவே முடியாது! மேலும் ஏன் நான் தோண்ட வேண்டும்? என் வாழ்நாள் முழுவதுமே ஒருபோதும் அப்படிப்பட்ட வேலையை நான் செய்ததில்லை.

எனவே எனக்கு எந்த முறை- இயல்பாக- வருகிறதோ அந்த முறையிலேயே பேசுகிறேன். என்னை நீங்கள் கொஞ்சம் சகித்துக்கொள்ள வேண்டியிருக்கும்- அவ்வளவே.

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**பாவப்பட்ட ஆஸ்திரேலியர்களாகிய எங்களை முழுக்கவும் மறந்துவிட்டீர்களா?**

**சகிதா,**

**நா**ன் மறக்கவில்லை. ஆஸ்திரேலியர்களைப் பற்றிய சிரிப்புகளை நான்- தேடிக்கொண்டிருக்கிறேன். ஆஸ்திரேலியர் களைப் பற்றிய சிரிப்புகளை எனக்கு அனுப்புமாறு யாவரும் வரவேற்கப்படுகிறார்கள். என்னிடம் இப்போது உள்ளது ஒன்றுதான்.

ஒரு மனிதன் ஒரு லண்டன் மதுக்கடைக்குள் நுழைந்தான். 12 பின்ட் (1பின்ட்=1/2லி.) 6 பிட்டர் (=கசப்பு பீர்வகை) வாங்கினான். ஒரு தட்டில் அவற்றை வைத்து வெளியே ஒரு காருக்குக் கொண்டு போனான். சன்னல் வழியாக உள்ளே நீட்டினான். பின் காலி தம்ளர்களுடன் திரும்பி இன்னொரு சுற்று வாங்கி காருக்குள் கொண்டு போய் கொடுத்துத் திரும்பினான்.

அடுத்த சுற்று போகையில் கடைக்காரன் ஆர்வத்தால் வெளியே வந்து காருக்குள் எட்டிப்பார்த்தான். 12 குள்ளர்கள் மிகுந்த போதையில் பீர் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

"யார் அவர்கள்?" என்று கேட்டான்.

"அவர்களா" என்றான் அந்த ஆள், "ஆஸ்திரேலியர்கள்தான், பிய்த்து உதறிவிட்டார்கள்!"

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**எப்போதும் நீங்கள் ஆசான்களை குருமார்களைப் பற்றி பேசுகிறீர்கள்; அவர்கள் எல்லோருமே ஆண்களாயிருக் கிறார்கள். ஒரு பெண்ணால் ஆசானாக முடியாது என்பது இதன் அர்த்தமா?**

**ஆனந்த மைதி.**

பெண்ணால் ஆசானாக முடியாது என்பதல்ல அதன் அர்த்தம் பல பெண்கள் ஆசான்களாகி இருக்கிறார்கள். ஆனால் அப்போது ஒரு பிரச்சனை வருகிறது. அது: ஒரு ஆண் ஆசானாக ஆகாதவரை அவனை அவன் மனைவி பேச அனுமதிப்பதில்லை, அவனோ ஆயிரக்கணக்கான பிறவிகளாக ஆசானாக இருந்ததில்லை. எனவே அவன் ஆசான் ஆனதுமே பேச ஆரம்பித்து விடுகிறான். பெண் ஒரு ஆசானானதும் அவள் அமைதியாகி விடுகிறாள்- களைத்துப் போய்விடுகிறாள். ஆயிரக்கணக்கான பிறவிகளாக அவள் பேசிக் கொண்டே பேசிக்கொண்டே பேசிக்கொண்டே இருந்திருக்கிறாள். அவள் போதுமான அளவுக்கு பேசிவிட்டாள். எனவே அவள் அமைதியாகிறாள்.

இங்குதான் பெரும் பிரச்சனை எழுகிறது. அமைதியான ஆசான்களைக் கண்டுபிடிப்பது எப்படி என்னும் பிரச்சனை.நீங்கள் பேசாதவரை யாரும் உங்களைப் பற்றி அறியமாட்டார்கள். புத்தர் பேசி இருக்கவில்லை என்றால், தம்மபதம் உருவாகி இருக்கவில்லை

என்றால், அவருடைய சூத்திரங்களைக் குறித்து நான் பேசியிருக்கவும் மாட்டேன்.

ஆசான் ஆனதும் ஆண் பழிதீர்த்துக் கொள்கிறான். நீங்களே இதைப் பார்க்கவில்லையா? ஒரு ஆசான் உருவானதும் ஆண்களைவிட அதிகமாய் பெண்களே அவரை சூழ்ந்து திரள்கிறார்கள். உண்மையில் அந்த விகிதம் நான்கு பேரில் மூவர் பெண்கள். ஒருவரே ஆண். புத்தரின் சீடர்களின் விகிதமும் இவ்வாறே இருந்தது. மகாவீரரின் சீடர்களின் விகிதமும் இவ்வாறே இருந்தது. எனவே அவன் உண்மையாகவே பசி தீர்க்கிறான்- பெண்களே ஏராளம் திரள்கிறார்கள்! அந்த மனைவிகளை எல்லாம் அவன் நினைவுகூர்கிறான். அவர்களில் பலர் முற்பிறவிகளில் அவனுடைய மனைவிகளாய் இருந்திருக்கலாம். மனைவிகளாய், தாய்மார்களாய், மகள்களாய், சகோதரிகளாய்- அவர்கள் யாவரும் அவனை சித்திரவதை செய்திருக்கிறார்கள். இப்போது அவன் தனக்குள் சொல்லிக் கொடுக்கிறான். "இப்போது என் முறை! யாரும் இப்போது என்னைத் தடுக்கமுடியாது!"

ஆனால் பெண்கள், ஆசான்களானதும், எரிபொருள் தீர்ந்து போகிறார்கள்.

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் புறப்படும்முன் தயவுசெய்து எனக்கு வார்த்தைகள் இல்லாமல் ஏதாவது சொல்லுங்கள்.**

**பிரேம் பதிபாதா.**

சொல்லுகிறேன்....

தோண்டினாயா? கிடைத்ததா?

இதில் எனக்கு சிக்கல் ஒன்றுமில்லை. உனக்குத்தான் சிக்கல்கள். ஆனால் கொஞ்சம் அதிகம்...

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ரஷ்யாவில் எப்படி புலிகளைப் பிடிக்கிறார்கள்?**

**பிரேம் அமீர்.**

இவ்வளவு கஷ்டமான கேள்விகளை தயவுசெய்து கேட்காதே!

அவர்கள் ஒரு பூனையை கைது செய்து, அது தன்னை ஒரு புலி என்று ஒத்துக்கொள்கிறவரை அதை சித்திரவதை செய்கிறார்கள்.

**ஒன்பதாவது கேள்வி:**

**ஓஷோ,**

**வெற்றியின் ரகசியம் என்ன?**

என்னிடம் போய் கேட்கிறாய்- நானே முழுமையாகி தோற்றுப் போனவன்.

வெற்றியின் ரகசியம் நேர்மை. அப்படி உன்னால் நடிக்க முடிந்ததும் உனக்கு வெற்றி நிச்சயம்.

**பத்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**உலகில் மக்கள்தொகைப் பெருக்கத்தை தடுக்க சரியான கத்தோலிக்க கிறிஸ்தவ வழி என்ன?**

**பிரக்யான்,**

வத்திக்கானுக்குப் போய் போலந்துக்காரரிடம்தான் நீ கேட்க வேண்டும். நான் கத்தோலிக்கனும் அல்ல. போப்பும் அல்ல. எனக்கு நீ சிக்கலை உருவாக்குகிறாய். இருந்தாலும் நான் யோசனை கூற முடியும்... இது ஒரு சிறு அறிவுரை மட்டுமே.

சனிக்கிழமை இரவு உங்கள் காட்டுத் தினையை விதையுங்கள். பயிர் பொய்த்துப் போக ஞாயிற்றுக்கிழமை பிரார்த்தனை செய்யுங்கள்!

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**வாய்— மைதுனம் (blow job) என்றால் என்ன?**

**முக்தானந்தா.**

முட்டாளே! உன்னிடமிருந்து வருவதற்கு சரியான கேள்விதான் இது. உண்மையிலேயே பிரமாதமான ஒன்றைப் பற்றித் தான் நீ கேட்பாய் என எப்போதுமே எனக்குத் தெரியும். உன்னை நான் பார்த்த அக்கணமே இதோ ஒரு மாபெரும் முட்டாள் என உடனடியாக உணர்ந்தேன். எனவேதான் முக்தானந்தா என்று பெயரிட்டேன்- ஆனால் அப்போது இதை உனக்கு நான்

விளக்கவில்லை. நாகரிகம் கருதி அழகான விளக்கங்களை அப்போது கொடுத்தேன். உண்மையை பிந்தித்தான்- நீ தயாரானதும்தான்- கூற முடியும்.

உதாரணமாக நமது மாபெரும் காவல்காரர் சான்த்- ஐ உனக்குத் தெரியும். ஒருவர் என்னிடம் கேட்டார், "பகவான், ஏன் அவருக்கு சாந்த் என்று பெயரிட்டிருக்கிறீர்கள்?" இந்தியில் சாந்த் என்றால் புனிதன். ஆங்கிலச் சொல்லாகிய 'செயின்ட்' என்பது சாந்த்- இலிருந்தே வந்தது. ஆனால் இந்தியில் இன்னொரு அழகான சொற்றொடர் உண்டு: அந்த் சாந்த் என்பது அது. அதன் அர்த்தம் 'அபத்தம்' என்பதாகும். எனவே சாந்தை முதல்முறையாக நான் பார்த்ததும் "இதோ அந்த் சாந்த் வருகிறார்!" என்றேன். ஆனால் தொடக்கத்தில் அதிகப்படியாய் தெரியக்கூடாது என்பதற்காக 'அந்த்'தை நான் விட்டுவிட வேண்டியதாயிற்று. எனவே அவரை சாந்த் என அழைத்தேன். ஆனால் இனி முழுசாக கூப்பிட முடியும். அதில் பிரச்சனை இராது.

முக்தானந்தா, உன்னில் இருக்கும் முட்டாளை உடனடியாக நான் கண்டேன். ஆனால் நீ இவ்வளவு வடிகட்டிய முட்டாளாய் இருப்பாய் என எனக்குக்கூட நிச்சயமாக தெரிந்திருக்கவில்லை. இல்லாவிட்டால் உன்னை பரமஹம்ச முக்தானந்தா என அழைத்திருப்பேன். பரமஹம்ச என்றால் பூரண எனப் பொருள். இப்போது நீ பரமஹம்ச முக்தானந்தா என்று அழைக்கப்படத் தகுதியாகி விட்டாய்.

சரி, என்ன கேள்வி இது?

"நிர்வாகத்தின் செலவில் மதுபானங்கள்" மதுக்கடைக் காரனிடம் சொன்னான் இத்தாலியன். "இப்போதுதான் என் முதல் வாய்- வேலையை முடித்ததில் மிகவும் நன்றாக உணர்கிறேன்."

"அது எப்படி இருந்தது?" கடைக்காரன் கேட்டான்.

"இருங்கள், யோசிக்கிறேன்" என்றவன் சொன்னான். "ஆனால் அது வினோத ருசியாகவே இருந்தது."

ஒரு வீர அயர்லாந்துப் புரட்சி இளைஞன் லண்டனுக்கு வருகிறான். ஒரு பஸ்ஸை வெடித்து தகர்த்து (blow up) அதன் புகைக்குழாயில் தன் வாயைச் சுட்டுக்கொள்கிறான்.

ஒரு இத்தாலிய குள்ளன் அவனுடைய குறியின் அளவைக் குறித்து தன் நண்பர்களின் மத்தியில் மிகவும் பெயர் பெற்றிருந்தான்.

காமப் பசியுடன் இருந்த அமெரிக்க பெண் பயணி அவனைப் பற்றி கேள்விப்பட்டாள். அவன் வீட்டுக்கு விஜயம் செய்து அவனது மாபெரும் மணியை காட்டினால் 20 டாலர் தருவதாக முன் வந்தாள்.

லூய்கினோ ஒத்துக்கொண்டான். தன் ஸிப்பை கீழே இழுத்து தன் பெருமைக்கும் இன்பத்துக்கும் உரியதை எடுத்துக் காட்டினான்.

அமெரிக்கப் பெண் அதைப் பார்த்ததுமே வாயைப் பிளந்தாள். தயக்கத்துடன் கேட்டாள், "நான் அதை முத்தமிடலாமா?"

"தயவுசெய்து, மிஸ்ஸஸ்", குள்ளன் சொன்னான். "வாய் சமாச்சாரமே வேண்டாம்! பத்து வருசங்களுக்கு முன் நான் ஏழடி உயரமும் எலிக்குஞ்சு மணியும் கொண்டவனாக இருந்தேன். இந்த வாய்வேலைகள் எல்லாம் சேர்ந்து என்னை எந்த நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டன என்பதை நீங்களே பாருங்கள்!"

முக்தானந்தா. இப்படிப்பட்ட பயங்கரமான கேள்விகளை இனி ஒருபோதும் கேட்காதே. நீ ஆன்மிக கேள்விகளை- மறைபொருளான கேள்விகளை- மனம் கடந்த கேள்விகளை கேட்க வேண்டுமென்றே எதிர்பார்ப்பார்கள்- நீயோ இதற்கு முன் எந்த புத்தரும் பதில் சொல்லி இராத விதமான கேள்விகளைக் கேட்கிறாய். வருங்காலத்திலும் எவரும் இவற்றுக்கு பதில் சொல்ல வேண்டி இருக்காது என்றே நான் நினைக்கிறேன். ஏனென்றால் அவை எல்லாவற்றுக்கும் நானே பதில் சொல்லி முடித்து விடுவேன்!



# 11

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**இருத்தலில்—வாழ்க்கையின் அர்த்தம் என்ன?**

**பிரவிணோ.**

**அ**ர்த்தம் என்பது மனித கண்டுபிடிப்பு. இருத்தலில் எந்த அர்த்தமும் இல்லை. அது அர்த்தத்துக்கு அப்பால்பட்டது. அதேபோது அது அர்த்தமற்றதும் அல்ல. ஏனெனில் ஒரு பொருளுக்கு அர்த்தம் இருக்க சாத்தியம் இருந்தால் மட்டுமே அது அர்த்தமற்றதாகவும் இருக்க முடியும். அர்த்தமும் அனர்த்தமும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களே. இருத்தலைப் பொருத்தவரை அர்த்தம் என்பது முற்றிலும் பொருத்தமற்றது; அனர்த்தமும் அப்படியே.

நூற்றாண்டுகளாக மனிதர் பிரபஞ்சத்தின்மேல் அர்த்தத்தை ஏற்றி வந்திருக்கிறார். ஏனெனில் அர்த்தமின்றியே ஆனந்தமாக வாழ்வதற்கு பெரும் துணிவு தேவைப்படுகிறது. எந்த அர்த்தமும் இல்லாமலே பரவசத்தில் வாழ மெய்யான விவேகம் தேவைப்படுகிறது. கும்பல்களிடம் அந்தளவு நுண்ணறிவு இருப்பதில்லை. அவற்றுக்கு ஏதாவது சாக்குப் போக்கு தேவைப்படுகிறது. அந்த காரணம் எவ்வளவு போலியாக இருந்தாலும் பரவாயில்லை. ஒரு பொய்யான விளக்கம்கூட அவர்கள் பிழைப்பதற்கு தாராளமாக போதுமான தாயிருக்கிறது. ஆனால் எப்படியும் ஒரு அர்த்தம் அவர்களுக்கு முற்றிலுமாக தேவைப்படுகிறது. மனிதரின் தேவைதான் இருத்தலின் மீது அர்த்தத்தைச் சுமத்துகிறது. ஒரு மனிதர் எந்த அளவுக்கு முதிர்ச்சியற்றவராக இருக்கிறாரோ அந்த அளவுக்கு அர்த்தத்துக்கான அவருக்கு அதிக தேவை இருக்கிறது. அவர் அதிகம் முதிர்ச்சியுள்ள வராக ஆக ஆக அந்தத் தேவை குறைந்து போகிறது.

மனிதர் உண்மையாகவே வயதுக்கு வந்ததும் அர்த்தத்துக்கு எவ்வித அவசியமுமே இல்லை. ஒருவர் வெறுமனே வாழ்கிறார். எந்தக் காரணமும் இல்லாமல் வாழ்கிறார். வாழ்வதற்காக வாழுகிறார். பின் இருத்தல் என்பது வேறொன்றுக்கான சாதனமாக இருப்பதில்லை. தன்னளவிலேயே அது அழகானதாயிருக்கிறது. எந்த நோக்கத்தையும் நிறைவேற்றுவதற்காக அது இல்லை. உண்மையில் அதற்கு எந்த நோக்கமும் இல்லாதிருப்பதால்தான் அது அழகாகவே இருக்கிறது. முழு அழகுடன் இருக்கிறது. அதற்கு பயன்பாடு கிடையாது. அது சரக்குகள் நிரம்பியதல்ல. கவிதையால் நிரம்பியது. கவிதைக்கு என்ன அர்த்தம், நோக்கம் இருக்கிறது? ரோஜாவுக்கு என்ன அர்த்தம், நோக்கம் இருக்கிறது? விண்மீன்கள் நிறைந்த இரவுக்கு என்ன அர்த்தம்? அன்புக்கு என்ன அர்த்தம்? உங்களை சூழ்ந்திருக்கும் அனைத்துக்கும் என்ன அர்த்தம்? அதற்கு எந்த அர்த்தமும் இல்லை. உங்களுக்கு அர்த்தத்தின் தேவை இருந்தால், நீங்கள் அதைப் படைத்துக்கொள்கிறீர்கள். பின் இருத்தல் முழுவதும் ஒரு திரையாகிறது. அதன்மேல் உங்கள் அர்த்தத்தை நீங்கள் திரையிடுகிறீர்கள்.

நூற்றாண்டுகளாக மனிதகுலம் அதைத்தான் செய்திருக்கிறது. அதனால்தான் நாம் அளவுகடந்து துன்புறுகிறோம். இப்போது மனிதர் கூடுதல் முதிர்ச்சி அடைந்திருக்கிறார். முன்பிருந்த அளவுக்கு சிறுபிள்ளைத்தனமாக இப்போது அவர் இல்லை. அந்த திரைக் காட்சிகள் எல்லாம் வெறும் திரைக்காட்சிகளே என அவரால் பார்க்க முடிகிறது. எல்லா அர்த்தங்களும் குலைந்து வீழ்கின்றன. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நாம் நம்பி வந்திருக்கிற அர்த்தங்களின் வீழ்ச்சியால் பெருங்குழப்பம் உண்டாக்கப்படுகிறது. உலகமுழுவதும் ஒரு மாபெரும் அர்த்தமின்மை உணரப்படுகிறது.

சோரன் கீர்க்கேகார்டில் இருந்து மார்ட்டின் ஹைடெக்கர்வரை நவீன சிந்தனையாளர்கள் அனைவரும் ஒரே ஒரு பிரச்சனையிலேயே அக்கறை செலுத்தினார்கள். அந்தப் பிரச்சனை அர்த்தம் பற்றிய பிரச்சனையாகும். அவர்கள் எல்லோருமே வாழ்க்கைக்குப் பொருள் இல்லை என்ற முடிவுக்கு வந்தார்கள். பின் ஏன் வாழ்வது? இயல்பாகவே, தவிர்க்க முடியாமல் இரண்டாவது கேள்வி எழுகிறது; அர்த்தமில்லாமல் ஏன் வாழ்வது? ஆயின் ஏன் தற்கொலை செய்து கொள்ளக் கூடாது?

ஒரே முக்கியமான தத்துவப் பிரச்சனை தற்கொலை தான் என்று மார்சல் கூறுவது வழக்கம். அர்த்தம் இல்லாதபோது தொடர்ந்து ஏன்

உயிர்வாழ வேண்டும்? அர்த்தமில்லாதபோது உயிர்வாழ்வது சுத்த கோழைத்தனம். மனித சிந்தனை, தத்துவம், மதம் ஆகியவற்றின் மொத்த வரலாற்று உள்ளடக்கத்தை வைத்துப் பார்க்கும்போது மார்சல் கூறுவதில் ஒரு பொருத்தப்பாடு இருக்கவே செய்கிறது. எல்லா மதிப்பீடுகளும் மறைந்து கொண்டிருக்கின்றன. தொற்றிக் கொள்ள எது கிடைத்தாலும் போதுமான ஆசிக்கிறான் மனிதன். பழைய கடவுளர்கள் தோற்றுப்போனதால் புதிய கடவுளரை கண்டுபிடிக்கிறான்.

1) தந்தை கடவுள் 2) மகன் கிறிஸ்து 3) புனித ஆவி என்ற கிறித்தவ திரித்துவத்தை- மும்மூர்த்திகளை- நம்புவது இப்போது கடினமாக இருக்கிறது. சமகால மனிதர் எவருக்கும் இந்த அபத்தத்தை நம்புவது ஏறக்குறைய அசாத்தியமானதாகவே இருக்கிறது. ஆனால் இந்த நம்பிக்கையும் போய்விட்டால் ஒரு சூனியமே உணரப்படுகிறது. எதையோ இழந்துவிட்டதாய் நீங்கள் உணர ஆரம்பிக்கிறீர்கள். பழைய நம்பிக்கையை நீங்கள் தொடர முடியாது. அதன் பின்னால் விடப்படும் வெற்றிடத்தை உங்களால் சகித்துக் கொள்ள முடியாது. அப்போது எதையாவது அதனிடத்தில் பிரதியிட வேண்டி இருக்கிறது- எது கிடைத்தாலும் சரி. பதிலிகளோ பல உள்ளன.

கம்யூனிஸ்டுகள் தம் சொந்த புனிதமற்ற மும்மூர்த்திகளை வழங்கி இருக்கிறார்கள். காரல் மார்க்ஸ்- பிரெட்ரிக் எங்கெல்ஸ்- லெனின். இதில் உள்ள விசேஷத்தை கவனித்தீர்களா? கிறித்தவ மும்மூர்த்திகள் மூவரும் ஆண்கள்; கம்யூனிஸ்ட் மும்மூர்த்திகளும் மூவரும் ஆண்களே. கிறித்தவ மும்மூர்த்திகளில் ஒரு பெண்கூட இல்லை. கம்யூனிஸ்ட் மும்மூர்த்திகளிலும் ஒரு பெண்கூட இல்லை- அது ஒரு நகலச்சு, ஏறக்குறைய பழசேதான். கிறிஸ்துவின் தாய் மரியாளை கொல்லைப்புற வழியாக உள்ளே கொண்டுவர பல இறையியலாளர்கள் முயன்றிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எல்லோரும் தோற்றிருக்கிறார்கள். நூற்றாண்டுகளாக, திரும்ப திரும்ப முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் அது வெற்றி பெறவில்லை. கம்யூனிஸ்ட் திரித்துவத்திலும் இதேதான் நடந்துள்ளது. ஸ்டாலின் தானும் ஒரு மூர்த்தியாக முயன்றார். ஆனால் மூன்று என்னும் மந்திர எண்ணைக் குலைக்க முடியவில்லை. எனவே அவர் உயிரோடிருந்தபோது தன்னை அவர் ஏற்றிவிட்டார்; தானும் ஒருவரானார். தரித்துவம் தரித்துவமாயில்லை- நால்வர் கும்பலாகியது. அவர் இறந்த உடனேயே நாலாமவர் கழற்றி

விடப்பட்டார். அவரது கல்லறையைக் கூட லெனினின் கல்லறைக்கு அருகாமையில் இருந்து அகற்றிவிட்டார்கள். அவ்விடத்தில் அவரது சவத்தைக்கூட அவர்களால் சகிக்க முடியவில்லை.

மா சே துங் சீனாவில் மும்மூர்த்திகளில் நுழையப் பார்த்தார். அவர் இறந்த அன்றே அவர் நீக்கப்பட்டார்.

பழைய கடவுளர்கள் பொய்த்துப் போகும்போது ஒரு மாபெரும் வெற்றிடம் உணரப்படுகிறது. இந்த நூற்றாண்டில்தான் அடால்ஸப் ஹிட்லர், ஜோசப் ஸ்டாலின், மாசேதுங் போன்றவர்கள் மிகவும் சக்தி படைத்தவர்கள் ஆனார்கள் என்பது தற்செயலானதல்ல. இந்த ஆற்றல் அவர்களுடையதல்ல. பழைய மதிப்பீடுகள் மறைந்து வந்ததால் மனித இதயத்தில் ஏற்பட்ட மாபெரும் வெற்றிடத்திலேயே அவர்களின் ஆற்றல் நிலவியது. மனிதரும் நீண்டநெடும் காலமாக வாழ்க்கை குறித்த குறிப்பிட்ட அர்த்தத்துடனேயே வாழ்ந்து விட்டதால் அர்த்தமில்லாமல் வாழ்வது அவரால் இயலாத ஒன்றாக ஆகியுள்ளது. ஒன்று தற்கொலை செய்வது அல்லது ஒரு புதிய அர்த்தத்தைப் படைப்பது.

என் அணுகுமுறையோ முற்றிலும் வேறானது. தற்கொலை செய்யத் தேவையில்லை. அது சுத்த மடத்தனம். எந்தப் புதிய அர்த்தத்தையும் கண்டுபிடிக்கவும் தேவையில்லை. அது பின்னோக்கி சரிவதாகும், பிற்போக்காகும், மறுபடியும் முதிர்ச்சியற்றவர் ஆவதாகும். ஒரு மாபெரும் வாய்ப்பு உங்கள் கதவுகளைத் தட்டிக் கொண்டிருக்கிறது. மனிதகுலம் முழுவதுமே ஒரு குறிப்பிட்ட வளர்ச்சி மட்டத்துக்கு வந்திருக்கிறது; அங்கிருந்து மாபெரும் முன்னோக்கிய பாய்ச்சல் சாத்தியம். மனிதர் எந்த அர்த்தமும் இல்லாமல்- இருந்தாலும் அழகாக, மகத்தான ஆனந்தத்துடன்- வாழத் தொடங்கமுடியும்.

இதுவே கவுதம புத்தரின் மாபெரும் பங்களிப்புகளில் ஒன்றாகும். இதுவரை அவரை யாரும் புரிந்து கொள்ளவில்லை. ஆனால் இப்போது அவருடைய நேரம் வந்து விட்டது. அவர் கொஞ்சம் முந்தி வந்துவிட்டார்- தன் காலத்துக்கு 25 நூற்றாண்டுகள் முன்னதாக வந்துவிட்டார்- ஆனால் சமகாலத்தவர் போலவே பேசுகிறார். இயேசு பேசுவது பழைய பாஷை. அவரது மொழியை குழந்தைகள்கூட புரிந்துகொள்ள முடியும். மோசஸ் முகமது முதலிய பலரின் கதையும் அதுதான். ஆனால் புத்தர் முதிர்ச்சியடைந்த மொழியில் பேசுகிறார். வாழ்க்கைக்கு பொருள் இல்லை. எந்தப் பொருளும் தேவையுமில்லை என்கிறார் அவர். ஏக்கத்தை

கைவிடுங்கள்- இந்த சூனியத்தை இட்டு நிரப்ப முயலாதீர்கள். இந்த வெற்றிடம் இருப்பது நல்லதே, ஆரோக்கியமானதே. இந்த வெறுமையில் தங்கி இருங்கள். இந்த வெறமையில் களிகூறுங்கள்! அனாவசிய பொருள்களால் அதை நிரப்பிக்கொண்டு போகாதீர்கள். அதில் ஒரு தூய்மை இருக்கிறது முன்பு எப்போதும் உணரப் பட்டதைவிடவும் கூடுதலான மக்களால் அது இப்போது உணரப்படுகிறது. எப்போதாவது ஒரே ஒரு தடவைதான் புத்தரைப் போன்ற ஒருவர். எல்லா இலட்சியங்களும் போலியானவை, கற்பனைக் கண்டுபிடிப்புகள் என உணர்ந்திருக்கிறார்- அவையெல்லாம் விளையாட்டுப் பொம்மைகள், குழந்தைகள் குறும்பு செய்யாதபடி அவர்களுக்கு போக்கு காட்டுவதற்காக உள்ளவை என உணர்ந்திருக்கிறார்.

கோயில்கள், சர்ச்சுகள், மசூதிகள், குருத்வாராக்கள்- இவைதான் குழந்தைகள் எந்தத் தொந்தரவும் செய்யாதபடி, எந்தக் குறும்பிலும் ஈடுபடாதபடி அவற்றுக்கு விளையாட்டுக் காட்டும் இடங்கள். இவைதான் நீங்கள் தொடர்ந்து தூங்கியபடியே இருப்பதற்கான மயக்கமருந்துகள். இவைதான் நீங்கள் வன்முறையில், அழிவில் ஈடுபடாதிருக்க, அமைதியாக தூங்க உங்களுக்கு உதவும் தூக்க மாத்திரைகள். இல்லாவிட்டால் அபாயம்தான். உங்களை நம்பமுடியாது. உங்களுக்கு சுதந்திரத்தை அனுமதிக்க முடியாது.

இவை உங்களுக்கு தளைகளாக உள்ளன. இந்தச் சிறைகளை நீங்கள் கோயில்கள் என எண்ணுகிறீர்கள். அவை கோயில்கள் அல்ல. நீங்கள் கும்பிடும் சாமிகள் சாமிகளும் அல்ல. அவை உங்களை அமர்த்தி வைக்க, உங்களை அச்சுறுத்திவைக்க, உங்களை வெருட்டி வைக்க, உங்களுக்கு ஆசை காட்ட பயன்படுத்தும் விளையாட்டுச் சாதனங்களே. அவை உங்களை உருமாற்றுவதில்லை. இருக்கிற அமைப்புக்கு சேவை செய்வதே அவற்றின் முழு வேலையும்; சமுதாயத்தில் உள்ள ஆதிக்க சுயநல சக்திகளுக்கு சேவை செய்வதே அவற்றின் முழு வேலையும்.

உள் வெறுமை மிக அழகானது, அதைக் குப்பைகளால் இட்டு நிரப்பாதீர்கள். அதை அப்படியே விட்டுவிடுங்கள் என்கிறார் புத்தர். இதுவேதான் தியானம் என்பதுமாகும். இதுவேதான் ஸென் என்பதுமாகும். இதன்பொருள்: வெறுமையில் வாழ்வது, வாழ்விடம் இருந்து எதையும் கேட்பதில்லை. எந்தக் காரணமுமின்றி கணத்துக்கு கணம் வாழ்வது. உயிருடன் இருப்பதையே மகிழ்வுடன் கொண்டாடுவது என்பதாகும். நீங்கள் கேட்க முடிவதைவிடவும்

கூடுதலானது இது! இதற்கும் அதிகமாய் என்ன அர்த்தத்தை நீங்கள் தேவை என்கிறீர்கள்? மூச்சுவிடுவதே போதாதா? பறவைகளின் இந்த கலகலப்பு ஒலிகள் போதாதா? மரங்களின் பசுமையும் சிவப்பும் பொன்னிறமும் போதாதா? அனைத்து மாட்சிமையும் கூடிய இந்த பரந்த பிரபஞ்சம் போதாதா? ஏதாவது அர்த்தம்தான் உங்களுக்கு வேண்டுமா?

யோக்கா கூறுகிறார்:

**ஆற்றின் மேலே நிலா உதிக்கிறது. கரையில் காற்று மரங்களுடன் மென்மையாய் விளையாடுகிறது.**

**நீண்ட இரவுமுழுதும் தூய்மையும் அமைதியுமாக உள்ளது.**

**அந்தத் தூய அமைதிக்கு என்ன பொருள்?**

**இயற்கை பற்றிய புத்தரின் வசனங்களைக் காணுங்கள்.**

**குளிர்கால, இலையுதிர்கால மூடுபனிகளும்**

**பனித்துளி, மேகங்கள் மற்றும் வசந்தகால மூடுபனிகளுமே நம் உடலை மறைக்கும் உண்மையான அங்கி.**

**அந்தத் தூய அமைதிக்கு என்ன பொருள்?**

எந்தப் பொருளுமே இல்லை. ஆனால் மறுபடியும் நினைவுபடுத்துகிறேன்: வாழ்க்கைக்குப் பொருளில்லை என நான் கூறவில்லை. எந்த அளவுக்குப் பொருளைக் குறித்து நீங்கள் பெருவிருப்பம் கொண்டிருக்கிறீர்கள் என்றால் பொருள் இல்லை என்று நான் சொல்லும் அக்கணமே, உடனடியாகவே நீங்கள் நேரெதிராக முடிவுகட்டி விடுகிறீர்கள். உடனடியாகவே உங்களுக்குள் ஒன்று சொல்கிறது. "ஆகவே வாழ்க்கைக்கு எந்தப் பொருளும் இல்லை; இதன்பொருள் வாழ்க்கை பொருளற்றது?" வாழ்க்கை பொருளற்றது என நான் சொல்லவில்லை. பொருள் என்பது முற்றிலும் பொருத்தமற்றது என்று மட்டுமே கூறுகிறேன். பொருளைவிட எவ்வளவோ மேலானது வாழ்க்கை. இயந்திரங்களுக்கு பொருளுண்டு, பூக்களுக்குப் பொருளில்லை. பொருள் என்றால் பயன்பாடு என்று பொருள். காருக்கு பொருளுண்டு. ஏனெனில் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்கு அது சேவைசெய்கிறது. ரயிலுக்கு பொருள் இருக்கிறது. விமானத்துக்கு பொருள் இருக்கிறது. இவை பயன் பொருள்கள். ஆனால் அழகான சூரிய அஸ்தமனத்துக்கு என்ன பொருள்? வானவில்லின் எல்லா நிறங்களையும் மேகங்கள் பிரதிபலிப்பதற்கு என்ன பொருள்? அதற்கு என்ன அர்த்தம்? வானவில்லுக்கு என்ன அர்த்தம்?

பொருள்களை அவை இருக்கிறபடியே உங்களால் பார்க்க முடியாதா? எந்த அர்த்தத்தையும் மேலேற்றிக் காட்டாத ஒரு கண்ணாடியாக மட்டும் உங்களால் இருக்க முடியாதா? வெறும் கண்ணாடியாகவே உங்களால் இருக்க முடிந்தால் அர்த்தமும் இராது அனர்த்தமும் இராது. இரண்டையும் தாண்டி நீங்கள் எழுகிறீர்கள். இருமையை நீங்கள் கடந்து விடுகிறீர்கள். அப்போது மாபெரும் சாந்தம் நிலவுகிறது.

> **ஆற்றின் மேலே நிலா உதிக்கிறது. கரையில்**
>
> **காற்று மரங்களுடன் மென்மையாய் விளையாடுகிறது.**
>
> **நீண்ட இரவுமுழுதும் தூய்மையும் அமைதியுமாக உள்ளது.**
>
> **அந்தத் தூய அமைதிக்கு என்ன பொருள்?**

இதை இக்கணமே உணருங்கள்! இதைப்பற்றி நினைக்காதீர்கள்! நினைத்தாலே நீங்கள் வழிதவறி விடுகிறீர்கள். ஒரேஒரு எண்ணம் ஏற்பட்டாலும் உண்மையிடமிருந்து எவ்வளவோ தொலை தூரத்துக்கு விலகி இருக்கிறீர்கள். வெறுமனே பாருங்கள்! நான் உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட கருத்தியலைப் போதிக்கவில்லை. எந்த தகவலையும் வழங்கவில்லை. எந்த மதத்தைப் பற்றியும் எனக்கு கவலையில்லை. என் பார்வையை உங்களுடன் பகிர்ந்து கொள்ள மட்டுமே செய்கிறேன். ஒரு கணமாகிலும் என் கண்கள்மூலம் காணுங்கள். ஒரு கணமாகிலும் என் இதயம் மூலம் உணருங்கள். உங்கள் இதயத்துடிப்புகள் என் இதயத்துடிப்புகளுடன் இசையட்டும். அதுதான் சத்சங்கம். அதுதான் ஆசானுடன் ஒன்றிருத்தல். ஒருகணம் என்னுடன் சேர்ந்து சுவாசியுங்கள். ஒருகணம் மறைந்துவிடுங்கள். ஒரு கணத்துக்கு எதையும் எண்ணாதீர்கள். ஒருகணம் உங்களையே மறந்துவிடுங்கள். அப்போதுதான் உங்களால் புரிந்துகொள்ள முடியும். பார்த்தலே புரிதல் என்னும் பிரச்சனைக்கே இங்கு இடமில்லை.

அர்த்தம் மற்றும் அர்த்தமின்மை என்பதிலிருந்து விடுபட்டதுமே இந்து, முகமதியம், கிறிஸ்துவம், சமணம் முதலிய- எல்லா நம்பிக்கைகள், கருத்தியல்கள், சாத்திரங்கள் ஆகிய சிறைகளில் இருந்தும் நீங்கள் விடுபடுகிறீர்கள். திடீரென நீங்கள் எல்லா சிறைகளுக்கும் வெளியில் இருக்கிறீர்கள். வாழ்க்கையிலேயே முதல்முறையாக திறந்தவானத்தின் கீழ் இருக்கிறீர்கள். நீங்கள் முற்றிலும் வெறுமையாக இருக்கையில், உங்களுக்கு வெளியில்

இருக்கும் வானத்தைப்போலவே எல்லையற்று இருக்கையில், உங்களுக்குள்ளும் எல்லையற்ற ஒரு வானம் இருக்கிறது. நீங்கள் எந்த அர்த்தத்தையும் கேட்காதபோது இந்த இரண்டு வானங்களும் சந்தித்து ஒருமையாக இணைகின்றன. அந்த அனுபவமே கடவுள். கடவுள் என்பது ஒரு ஆள் அல்ல. கடவுள் என்பது ஒரு அனுபவம்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஆஸிகளைப் பற்றிய* சிரிப்புகளை கண்டுபிடிப்பது அசாத்திய மானது: அவர்கள் எதிலும் முனைப்பற்ற வர்களாக, சலிப்பான வர்களாக, பழக இனியவர்களாக, ஒரு போதும் யாரையும் புண்படுத்தாதவர்களாக இருக்கிறார்கள். அவர்களிடம் எள்ளி நகையாட எந்த குணாம்சமும் எடுப்பாக இல்லை. இதை கவனித்தீர்களா?**

**பிரபு மாயா.**

ஒரு வகையில் நீ சொல்வது சரிதான்: அவர்கள் முனைப்பற்ற வர்களாகவும் பழக இனியவர்களாகவும்தான் இருக்கிறார்கள். மேலும் முனைப்பற்ற மக்கள் சலிப்புநிரம்பியவர்களாகவே இருக்கிறார்கள். ஆர்வத்துடன் இருக்க குறிப்பிட்ட அளவு முனைப்புத்தன்மை தேவை. மென்மையான மக்கள் சலிப்பூட்டுபவர் களாகவே இருக்கிறார்கள். மென்மையானவர்களுடன் கொஞ்ச நேரத்துக்கு இருக்க முடியும். நீண்ட காலத்துக்கு அவர்களுடன் சேர்ந்து வாழ முடியாது: சலிப்பூட்டியே உங்களை அவர்கள் கொன்று விடுவார்கள். அவர்களில் எந்த மசாலாவும் இருக்காது. அவர்களிடம் எந்த கார சாரமும் இருக்காது. அவர்களிடம் எந்த ருசியும் இருக்காது. அவர்கள் உப்புச்சப்பற்றவர்கள். அந்த வகையில் நீ சொல்வது சரிதான். ஆனால் அதைவைத்தே நிறைய சிரிப்புகளை உற்பத்தி செய்யலாமே. உண்மையில் அதுவே முற்றிலும் அழகான உந்து பலகையாய் இருக்கிறது. பிரபு மாயா!

ஒரு ஆங்கிலேயன் ஒரு அயர்லாந்துக்காரனாக மாற முடிவு செய்தான். நிறைய ஆராய்ச்சிக்குப் பிறகு உண்மையான ஐரிஷ் ஆவதற்கு ஒரே வழி, தன் மூளையில் பாதியை அகற்றி விடுவதுதான் என்று கண்டுபிடித்தான். அறுவை செய்யக்கூடிய மருத்துவர் ஒருவரை தேர்ந்துகொண்டான். ஆனால் அறுவையின் போது மருத்துவர் மிகமோசமான தவறு ஒன்றை செய்துவிட்டார். அவனுடைய மூளை முழுவதையும் அகற்றிவிட்டார்.

---

★ ஆஸி=ஆஸ்திரேலியர் என்பதன் சுருக்கம் (மொ-ர்)

அவன் விழித்தெழுந்ததும் மருத்துவர் சொன்னார், "மிகவும் வருந்துகிறேன்- மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். ஒரு தவறு செய்து விட்டேன். உன் பாதி மூளையை எடுப்பதற்குப் பதிலாக முழு மூளையையும் எடுத்துவிட்டேன்!"

அதற்கு அறுவைக்குள்ளானவன் சொன்னான், "நோ வொரீஸ். கோபர்!"★

அவன் ஒரு ஆஸ்திரேலியன் ஆகி இருந்தான்!

ஒரு ஆஸ்திரேலிய இளைஞன் திருமணம் செய்தான்.

அவன் அப்பா சொன்னார், "பார் மகனே, இன்று இரவு உன் மனைவியுடன் தனியாக இருக்கும்போது அவளுடைய ஆடைகளை அவிழ். உன் ஆடைகளையும் அவிழ். பின் உன் கையை அவள் வயிற்றின்மேல் வைத்து அன்பே, உன்னை காதலிக்கிறேன்!" என்று சொல்."

"சரிப்பா" என்றான் இளைஞன்.

மணவிருந்து முடிந்ததும் ஆவலாயிருந்த மணமகளை அறைக்கு கூட்டிச் சென்றான். விளக்குகளை அணைத்தான். அவள் ஆடைகள் முழுவதையும் கழற்றினான். அவளருகில் ஆடையின்றி அமர்ந்து, தன் கைளை அவள் வயிற்றில் வைத்து "அன்பே, உன்னைக் காதலிக்கிறேன்!" என்றான்.

"ஆ இன்னும் தாழ!" என அப்பெண் அவனது கையைத் தள்ளியபடி முனகினாள்.

"உம்" என்றான். ஆஸி தாழ்ந்த குரலில், "நான் உன்னைக் காதலிக்கிறேன். நான் உன்னைக் காதலிக்கிறேன்!"

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சரணாகதியையும் கீழ்ப்படிதலையும் பற்றி தயவு செய்து கூறுங்கள்.**

**மகாசத்துவா.**

வெளிப் பார்வைக்கு அவை ஒன்றுபோலவே தோன்றுகின்றன. ஆனால் அவை இரண்டும் இரண்டு துருவங்களாக உள்ளன. சரணாகதி அடைந்தவர் கீழ்ப்படியத் தேவை இல்லை. சரணடையாத போதே கீழ்ப்படிதல் தேவை. உங்களுக்கு கொஞ்சம்

★ 'Cobber' என்றார் ஆஸ்திரேலியாவில் 'நண்பன்' (மொ-ர்).

திகைப்பு ஏற்படலாம். ஏனெனில் கீழ்ப்படிவதும் சரணடைவதும் ஒன்றே என்றே உங்களுக்கு சொல்லப்பட்டுள்ளது. கற்பிக்கப் பட்டுள்ளது, பழக்கப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் கீழ்ப்படிதல் என்றால் நீங்கள் சரணடைவதில்லை. கீழ்ப்படியும்படி கட்டாயப்படுத்தப்படுகிறீர்கள். உங்களுக்குள் அகங்காரம் உள்ளது. அதை நீங்கள் ஒடுக்கிக் கொண்டிருக்கிறீர்கள். எனவே கீழ்ப்படிவது தேவையாகிறது. படையில் கீழ்ப்படிதல் தேவை. கீழ்ப்படிதலை அங்கு வலிந்து நடைமுறைப்படுத்த வேண்டி உள்ளது. கீழ்ப்படிந்தவர்களுக்கு பரிவும் கீழ்ப்படியாதவர்களுக்கு தண்டனையும் தர வேண்டி உள்ளது. மெதுமெதுவாக ஒவ்வொருவரும் கீழ்ப்படிதல் உள்ளவராகிறார்.

இது ஒரு கட்டுப்படுத்தப்பட்ட எதிர்வினைதான். இதைத்தான் உளவியல் பரிசோதனைச் சாலைகளில் எலிகளுக்கு செய்கிறார்கள். இப்படித்தான் எலிகளுக்கு அவர்கள் பயிற்சி அளிக்கிறார்கள். எலிகளுக்கும் மனிதருக்கும் ஏதும் வேறுபாடு இருக்கிறதாக உளவியலாளர்கள் நினைப்பதில்லை. ஆயின் சுமார் 99.9% மக்களைப் பொறுத்த வரை அவர்களின் கருத்து சரியாகவே இருக்கிறது. பெரிய வேறுபாடு இல்லை.

எப்போதாவது ஒரு தடவைதான் ஒரு சாக்ரடீஸ், ஒரு ஜராதுஷ்டிரர், ஒரு லாவோக, அல்லது ஒரு புத்தர் அவர்களின் கருத்துக்குப் பொருத்தமின்றி போகலாம். ஆனால் அத்தகையவர் களை அவர்கள் ஒருபோதும் கண்டதில்லை. அப்படியே ஒரு புத்தரை அவர்கள் தம் வழியில் கண்டாலும் அவர்மீது பரிசோதனை செய்யும்படியாக அவரைத் தம் சோதனைச் சாலைக்கு வரும்படிச் செய்ய அவர்களால் முடியாது. அவர்களால் எலிகளைப் பிடிக்க முடியும். அவர்களால் குரங்குகளைப் பிடிக்க முடியும். சாதாரண மனிதப் பிறவிகளையும் அவர்களால் விலைக்கு வாங்க முடியும். நல்ல காசு கொடுத்தால் சோதனைக்கு உட்பட தயாராயிருக்கிற வர்கள் இருக்கிறார்கள். எதையும் உங்களுக்குள் ஏற்றிவிட கற்பித்துவிட முடியும்.

உதாரணமாக ஸ்கின்னரும் அவரது குழுவினரும் ஒரு கருத்தை முன் வைக்கிறார்கள். அதாவது புகைபிடிப்பது கெடுதல். உடல்நலத்துக்கு தீங்கானது என மக்களிடம் சொல்லிக் கொண்டிருக்கத் தேவையில்லை. அது ஒரு பாவம். ஒழுக்கக் கேடானது என்று அவர்களிடம் பரப்பிக் கொண்டிருக்கத் தேவையில்லை. அவர்களுக்குத் தேவையானதெல்லாம் சில மின்

அதிர்ச்சிகள் கொடுப்பதுதான். புகைபிடிக்கும் உந்தல் அவர்களில் எழும் போதெல்லாம், பையிலிருந்து ஒரு சிகரட்டை அவர்கள் வெளியெடுக்கும் கணமே, அவர்களுக்கு ஒரு மின் அதிர்ச்சி கொடுங்கள், அவர்களின் முதுகுத்தண்டில் ஒரு நடுக்கம் பரவட்டும். விரைவிலேயே சிகரெட் பிடிக்கும் எண்ணம் வந்தாலே போதும்- அவர்களுக்கு மின் அதிர்ச்சி தராமலேயே- அவர்களுக்கு அதிர்ச்சி ஏற்படும். அவர்கள் விரல்களில் இருந்து சிகரெட் நழுவி விழும். மெதுமெதுவாக அந்த உந்தலும் மறைந்துவிடும்.

அவர்கள் சொல்லுகிறார்கள்; "நீங்கள் விரும்புவது மாதிரியெல்லாம் ஒருவரை நீங்கள் கட்டுப்படுத்த முடியும். மிக நீண்ட, பழைய, துருப்பிடித்த நீதி போதனைகளை எடுத்துரைக்க தேவையில்லை; இன்றுவரை அவற்றால் பலன் விளையவும் இல்லை. அவற்றுக்கு யாரும் பயப்படவில்லை. "இப்போதெல்லாம் நரகத்துக்கு யார் பயப்படுகிறார்கள்? தொடக்கத்தில் அது மின் அதிர்ச்சிபோல் வேலை செய்திருக்கலாம். ஆனால் இப்போது மக்கள் அதற்கு பழகிப்போய்விட்டார்கள். அந்த அதிர்ச்சிக்கு அவர்கள் தகவமைந்துப் போய்விட்டார்கள். இப்போது நரகம் என்றால் அதிர்ச்சியாகவே இல்லை. யாராவது உங்களிடம் "புகை பிடிக்காதே- பிடித்தால் நரகத்துக்குத்தான் போவாய்" என்றால் அது உங்களுக்கு அதிர்ச்சி அளிப்பதில்லை. ஆனால் 5000 ஆண்டுகளுக்கு முன் உங்களுக்கு அதிர்ச்சிதர அதுவே போதுமானதாயிருந்தது. நோக்கம் ஒன்றே; மக்களை பயப்படுத்துவதே நோக்கம்.

நவீன தொழில்நுட்பம் இதை அதிக எளிதாக்கி உள்ளது. அவர்கள் குறுக்கு வழிகளை கண்டுபிடித்திருக்கிறார்கள். மேலும் எலிகளுக்கும் மனிதருக்கும் இடையில் எந்த வேறுபாடும் இல்லை என அவர்கள் எண்ணுகிறார்கள். ஏனெனில் இந்த வழியில்தான் எலிகள் கற்றுக் கொள்கின்றன. தண்டித்தால் அவை ஒரு காரியத்தை செய்யாது விடுகின்றன. பரிசளித்தால் அவை ஒன்றையே திரும்பத்திரும்ப செய்யத் தொடங்குகின்றன. அதுதான் கீழ்ப்படிதலை உருவாக்கும் வழி. அப்படித்தான் படையில் அது உருவாக்கப் படுகிறது. அப்படித்தான் சாரணர்களில் அது உருவாக்கப்படுகிறது. அப்படித்தான் போலீஸில் அது உருவாக்கப்படுகிறது. அப்படித்தான் மொத்த சமூகத்திலும் அது திணிக்கப்பட்டிருக்கிறது.

சரணாகதி என்பது முற்றிலும் வேறுபட்ட நிகழ்வு. சரணாகதி என்றால் உங்களுக்குள் ஆழமான அன்புடன் இருக்கிறீர்கள் என்று பொருள். மாபெரும் விசுவாசம் உங்களுக்குள் எழுந்திருக்கிறது என்று

பொருள் அந்நிலையில் உங்களை நீங்களே ஒடுக்குவது என்னும் கேள்விக்கே இடமில்லை.

நீங்கள் இங்கு சந்நியாசிகளாக இருக்கிறீர்கள். உங்களுக்கு வெகுமதியாய்த் தர என்னிடம் ஒன்றுமில்லை. உண்மையில் இங்கு நீங்கள் எல்லா விதமான சிரமங்களுக்கும் உள்ளாக வேண்டி இருக்கிறது. அதிகமேலான எவ்வளவோ அதிகமாய் முன்னேறிய- நாடுகளில் இருந்து நீங்கள் வருகிறீர்கள். உங்களுக்கு அங்கு அழகான வீடுகள் உள்ளன. அதிக வசதியாக, எல்லா சொகுசுகளோடும் விஞ்ஞானம் வழங்கியுள்ள எல்லா ஆடம்பரங்களோடும், நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள். பூனாவில் இந்த நரகத்தை- இந்த வெப்பத்தை, கொசுக்களை, எலிகளை, கரப்பான் பூச்சிகளை- அனுபவிக்க வேண்டி இருக்கும் என ஒருபோதும் நீங்கள் நினைத்திருக்கவும் மாட்டீர்கள். இவற்றில் பலவும் மேற்கிலிருந்து மறைந்துவிட்டன; இங்கே மிகவும் பழங்கால நிலைமைகளில் நீங்கள் வாழவேண்டி இருக்கிறது. ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்கு முந்திய நிலைமையில் நீங்கள் வாழவேண்டி இருக்கிறது.

நான் உங்களுக்கு எந்தச் சன்மானத்தையும் வழங்குவதில்லை. எந்த பரலோகத்தையும் வாக்களிக்கவும் இல்லை. மாறாக வருங்காலம் பற்றிய எண்ணத்தையே கைவிடுங்கள், நிகழ்கணத்தில் வாழுங்கள் என்கிறேன் நான். ஆயின் நிகழ்கணத்தில் அதுவும் பூனாவில் வாழ்வதென்றால்... அது கடுமையானதுதான், கொடுமையானதுதான்.

அப்படியானால் நீங்கள் ஏன் இங்கு இருக்கிறீர்கள்? உங்களுக்கு எதையும் வழங்கப்போவதாக நான் வாக்குறுதி தரவில்லையே. நீங்கள் தூய அன்பினால் மட்டுமே இங்கு இருக்கிறீர்கள். நீங்கள் என்னிடம் மையல் கொண்டு விட்டீர்கள். இதில் கீழ்ப்படிவது என்னும் கேள்விக்கே இடமில்லை, கீழ்ப்படியும் படியாக உங்களை நான் பயிற்றுவிப்பதில்லை. கீழ்ப்படியச் செய்ய எவ்வகையிலும் நீங்கள் கட்டுப்படுத்தப்படுவதில்லை.

அன்று ஒருநாள் பிரேம் ஸரீன் ஒரு கேள்வி கேட்டாள்: "பகவான், 'நான் என் சந்நியாசிகளுக்கு சுதந்திரத்தைக் கொடுக்கிறேன்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். இது சந்நியாசத்துக்கும் பொருந்துமா?"

அவள் கேட்டதன் பொருள், சந்நியாசத்தை கைவிடவும் அவளுக்கு சுதந்திரம் உள்ளதா? என்பது. ஆம், ஸரீன். நான் உனக்கு

முழு சுதந்திரத்தைக் கொடுக்கிறேன். முழுமை என்றால் முழுமைதான்; மிச்சமிதியே கிடையாது.

அன்பினால் நீங்கள் சந்நியாசம் எடுத்திருந்தால் பின் அதை கைவிடும் பிரச்சனையே இல்லை. சந்நியாசம் உண்மையாகவே நிகழ்ந்திருந்தால் பின் அதை நீங்கள் எப்படி கைவிட முடியும்? அது உங்கள்மேல் நீங்கள் மாட்டிக்கொள்ளும் ஒன்று அல்ல. உங்களுக்குள் வளர்ந்து இருக்கிற ஒன்று அது. உங்கள் இதயத்தை நீங்கள் விட்டுவிட முடியாது என்றால் உங்கள் சந்நியாசத்தை எப்படி விட முடியும்? அது உங்களின் இதயமாக இருந்தால் உங்களால் அதைவிட முடியாது. என் தரப்பில் இருந்து நான் முழுமையாக ஆமோதிக்கிறேன். நான் உங்களுக்கு முழு சுதந்திரம் தருகிறேன் அதில் எந்த பிரச்சனையும் இல்லை- சந்நியாசத்தைக் கைவிட உங்களுக்கு சுதந்திரம் இருக்கிறது. சந்நியாசியாக இருப்பது உங்களின் சுதந்திரம். சந்நியாசியாக இல்லாதிருப்பதும் உங்களின் சுதந்திரம். ஆனால் மொத்த பிரச்சனையும் இன்னும் ஆழமான ஒன்றை சார்ந்திருக்கிறது. அன்பின் விளைவாய் சந்நியாசம் நிகழ்ந்திருந்தால் சுதந்திரம் கிடைத்தாலும் அதை (சந்நியாசத்தை) கைவிடுவது அசாத்தியமாகும். ஆனால் வேறு ஏதாவது உள்நோக்கங்களுடன் நீங்கள் சந்நியாசம் மேற் கொண்டிருந்தால் பின் அது கைவிடப்பட முடியக்கூடியதே. அந்நிலையில் அதை கைவிடுவதே உசிதம். ஏனெனில் முதற்கண் அது நிகழ்வே இல்லையே. அனாவசியமான பாரத்தை ஏன் சுமப்பது?

சுருக்கமாகச் சொன்னால், சந்நியாசம் சம்பவித்திருந்தால் அதை உங்களால் விடமுடியாது. அதை உங்களால் கைவிட முடிந்தால் முதலில் அது நிகழ்ந்திருக்கவே இல்லை என்றாகும்- அப்போது அதை நீங்கள் கைவிட்டே ஆகவேண்டும். அதை நீங்கள் கைவிட உங்களுக்கு நான் சுதந்திரம் கொடுப்பது மட்டுமல்ல. அதை கைவிட உங்களுக்கு நான் உதவவும் செய்வேன். ஏனெனில் உங்களுக்கு உள்ளிருந்து வளராத எதனாலும் நீங்கள் சுமையேறிப் போகாதிருப்பதையே நான் ஆதரிக்கிறேன்.

நீ ஏற்கெனவே மிகவும் பாரம்சுமந்து போயிருக்கிறாய், ஸரீன். ஆயிரத்தோரு காரியங்கள் உன்மேல் ஏற்றப்பட்டுள்ளன. உன் வாழ்வை மேலும் பாரமாக்குவதற்கு நான் காரணமாக இருக்கமாட்டேன்.

சந்நியாசம் என்பது ஏற்பாட்டுத் திருமணம் போன்றது அல்ல. அது ஒரு காதல் மணம், காதலில் விவாகரத்து என்ற பிரச்சனைக்கு இடமில்லை. ஏனெனில் முதலில் நாம் விவாகம் முடிப்பதே

இல்லையே. எனவே விவாகரத்து என்னும் கேள்வியே எழுவதில்லை. மேலும் அன்பு நிஜமானதாயின், காதல் அங்கு உண்மையாகவே இருந்தால், அது எப்போதும் இருக்கும். அதற்கு முடிவில்லை. அது தொடங்குகிறது. ஆனால் முடிவதில்லை. எனவேதான் என்னால் உங்களுக்கு முழு சுதந்திரம் தரமுடிகிறது. ஏனெனில் எந்தக் கீழ்ப்படிதலையும் உங்கள் மேல் நான் திணிக்கவில்லை. கீழ்ப்படிதல் திணிக்கப்பட்டால் சுதந்திரம் தரப்பட முடியாது. ஏனெனில் சுதந்திரம் அளித்துவிட்டால் கீழ்ப்படிதல் மறைந்துவிடும்.

இங்கு விசுவாசம் நிகழ்ந்துள்ளது. சரணாகதி நிகழ்ந்துள்ளது. அன்பு நிகழ்ந்துள்ளது. உங்கள் தரப்பில் இருந்து, விசுவாசம், சரணாகதி. என் தரப்பில் இருந்து, சுதந்திரம். சீடரின் தரப்பில் இருந்து, சரணாகதி. குருவின் தரப்பில் இருந்து, சுதந்திரம். இந்த சுதந்திரமும் சரணாகதியும் சந்திக்கிற இடத்தில் ஐக்கியம் நிகழ்கிறது. சத்சங்கம் நிகழ்கிறது. இது கீழ்ப்படிதல் என்னும் விஷயம் அல்ல.

உங்களுக்கு நான் ஒன்றைச் சொல்லி நீங்கள் அதைச் செய்யும்போது, உங்கள் அன்பிலிருந்து அதை செய்கிறீர்கள்; அது ஒரு ஆணை என்பதால் செய்வதில்லை. அதை நீங்கள் செய்தாக வேண்டும் என்பதால் செய்வதில்லை. அதை செய்யுமாறு உங்களை நீங்கள் நிர்பந்திக்கும் பிரச்சனையே இங்கு இல்லை. கீழ்ப்படிதலில் நீங்கள் உங்களுக்கு எதிராகவே. விருப்பமில்லாமலிருந்தும் ஒன்றை செய்கிறீர்கள். சரணாகதியில் மல்லுக்கட்ட அகங்காரம் இருப்பதில்லை. அது அற்றுப்போயுள்ளது.

நான் என் கையை அசைக்கும்போது என்ன நடக்கிறது? என் கை எனக்கு கீழ்ப்படிகிறதா அல்லது கையானது முற்றிலும் என்னை சரணடைந்துள்ளதா? கையானது முற்றிலும் என்னை சரணடைந்துள்ளது. எனக்கு கீழ்ப்படிவது என்கிற பிரச்சனையே இல்லை. தான் ஒரு தனி உருப்படியாக கை இருப்பதில்லை.

ஸரீன், சந்நியாசத்தில் சீடர் மறைந்துவிடுகிறார். குருவின் பகுதியாகி விடுகிறார்; அவருடைய கைகளாக, கண்களாக மாறி இருக்கிறார்.

ராமகிருஷ்ணர் இறந்து கொண்டிருந்தார். அவருக்கு தொண்டையில் புற்று ஏற்பட்டிருந்தது. அவருடைய கடைசி நாட்களில் அவரால் தண்ணீர் குடிக்க கூட முற்றிலும் இயலாமல் போனது.

விவேகானந்தர் அவரிடம் சொன்னார், "பகவான், சிறிது கருணை காட்டும்படி கடவுளை நீங்கள் கேட்க முடியாதா? குறைந்தபட்சம் உண்ணவும் குடிக்கவுமாவது உங்களை அனுமதிக்குமாறு. கடவுளை நீங்கள் கேட்டாலே போதும். கண்டிப்பாக நடக்கும். இது உங்கள் உடம்புக்கு பெரும் வேதனையாக ஆகிக்கொண்டிருக்கிறது- உங்கள் உடம்புக்கு மட்டுமல்ல, எங்கள் எல்லோருக்குமே பெரிய வேதனையாக உள்ளது. நீங்கள் சாப்பிட முடியவில்லை என்பதை அறிகிறபோது எங்களால் சாப்பிட முடியவில்லை. உங்களால குடிக்க முடியவில்லை என்பதை அறிகிறபோது எங்களுக்கும் குடிக்க முடிவதில்லை. எப்படி நாங்கள் குடிக்க முடியும்? எனவே உங்களைப்பற்றி நீங்கள் அக்கறைப்படாவிட்டாலும், எங்களை நினைத்துப் பாருங்கள்- நாங்களும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக் கிறோம். எங்களுக்காகவாவது கண்களை மூடி கடவுளிடம் 'இந்தச் சிறு உபகாரத்தைச் செய்யும்' என்று கேளுங்கள்."

ராமகிருஷ்ணர் தன் கண்களை மூடினார்- திறந்தார். சிரிக்கத் தொடங்கினார். அவர் சொன்னார், "முட்டாளே! நான் உன் யோசனைப்படி செய்தால் கடவுள் என்னைப் பார்த்து சிரிப்பார். நான் அவரைக் கேட்டேன். "இது அவருடைய பாணி. அவர் கேட்கவில்லை- கேட்பதற்கு அங்கு யாருமில்லை- அவருடைய பாணி அது. விவேகானந்தரை நோகடிக்க அவர் விரும்பவில்லை. அவர் கண்களை மூடினார். தான் கடவுளிடம் வேண்டுவதாக விவேகானந்தருக்குக் காட்டுவதற்காக தன் உதடுகளை அவர் அசைத்தும் இருக்கலாம். பின் கண்களைத் திறந்து சொன்னார். "கடவுள் என்னைப் பார்த்து சிரித்தார். அவர் சொன்னார். 'ராமகிருஷ்ணா, நீ இந்த முட்டாள்களின் பேச்சையா கேட்கிறாய்? அவர்களின் அறிவுரையையா நீ பின்பற்றுகிறாய்? அவர்கள் உன் சீடர்களா, நீ அவர்களின் சீடனா? யார் யாருக்குச் சீடன்? இந்த தொண்டையைக் கொண்டு இத்தனை ஆண்களாக நீ உண்டு வந்தாய். இப்போது உன் சீடர்களின் தொண்டைகளின் மூலமாக நீ உண்ணவும் குடிக்கவும் கூடாதா?" மேலும் ராமகிருஷ்ணர் சொன்னார். "விவேகானந்தர். அவரின் வாதம் எனக்கு சரியெனவே படுகிறது. எனவே உன்னை நீயே சித்திரவதை செய்வதையும் துன்பப்படு வதையும் நிறுத்து. ஏனெனில் இப்போது நான் என் தொண்டையை இழந்துவிட்டேன். இனி உங்கள் தொண்டைகளையே நான் சார்ந்திருக்க வேண்டி இருக்கிறது.எவ்வளவு முடியுமோ அவ்வளவு சாப்பிடுங்கள்- வழக்கத்தைவிட கொஞ்சம் அதிகமாகவே

சாப்பிடுங்கள். ஏனெனில் அதில் ஒரு பாகம் எனக்கு வரவேண்டி உள்ளது. வழக்கத்தைவிட அதிகமாகவே குடியுங்கள். ஏனெனில் அதில் என் பங்கும் உண்டு. எனவே உண்ணுங்கள், குடியுங்கள், களி கூறுங்கள். ஏனெனில் கடவுள் சொன்னார். 'ராமகிருஷ்ணா, நீ உன் சீடர்களின் உடம்புகளின் மூலமாக உண்ண முடியும். ஏன் இந்த உடலையே சார்ந்திருக்கிறாய்? இது இத்துப்போய்விட்டது!''

ஆசானுக்கும் சீடனுக்கும் ஒருவித கண்ணுக்குத் தெரியாத ஒற்றுமை. அங்க ஒற்றுமை இருக்கிறது.

ஸரீன். என்னுடன் ஒருவர் முற்றிலும் சுதந்திரமாக இருக்கலாம். சந்நியாசத்தை அவர் கைவிட விரும்பினால் இரண்டு தடவை யோசிக்கவெல்லாம் வேண்டாம்; அப்படியே கைவிட்டு எல்லாவற் றையும் மறந்துவிடலாம். அது கைவிடப்பட முடியுமானால் அதை கைவிட வேண்டியதே. அதை கைவிட முடியவில்லை என்றால் மட்டுமே அது மதிப்புக்குரியதாகும். நான் உனக்கு முழுச் சுதந்திரத்தை அளிக்கிறேன். ஆனால் சரணாகதி இருந்தால் எந்த பிரச்சனையும் இருக்காது. உண்மையில் முழுச் சுதந்திரமானது உன் சரணாகதியை அதிக சுலபமாக்கும். உங்கள் மேல் ஒன்றை திணிக்க ஒருவர் இருக்கிற போதுதான் இயல்பாகவே எதிர்ப்பு- தடை- எழுகிறது. அது மிகவும் இயல்பே. உங்கள்மேல் ஒன்றைச் சுமத்தவும் உங்களை கீழ்ப்படிதலுள்ளவர் ஆக்கவுமே நான் இங்கு இருந்தால், நீங்கள் எதிர்ப்புக்காட்டவே செய்வீர்கள். அது முற்றிலும் மனிதத் தன்மையானதே. ஆனால் நான் எதையும் சுமத்துவதில்லை.

அதுதான் இந்த கம்யூனின் அழகே. இது பிரத்தியேகமான ஒன்று இவ்விதம் உலகில் வேறெங்கும் நிகழ்ந்து கொண்டிருக்கவில்லை. ஒவ்வொரு இடத்திலும் கீழ்ப்படிதலானது நேரடியான மறைமுகமான நுணுக்கமான வழிகளில் சுமத்தப்பட்டுக் கொண்டிருக்கிறது; அல்லது அவ்வளவு நுணுக்கமாகக் கூட அல்ல, வெளிப்படையாகவே தெரிகிறது. "இதைச்செய். அதைச் செய்யாதே" என்கிறார்கள். மக்கள் எந்த மரியாதையும் தரப்படாமல் அடிமைகள் போல நடத்தப்படுகிறார்கள்.

நான் உங்களை மதிக்கிறேன். நீங்கள் என்னை எப்போதும் நேசிக்க முடிவதைவிட எவ்வளவோ மேலாக நான் உங்களை நேசிக்கிறேன். நீங்கள் என்னை எப்போதும் மதிக்க முடிவதைவிட எவ்வளவோ மேலாக நான் உங்களை மதிக்கிறேன். ஏனெனில் நீங்கள் செய்ய முடிவதெல்லாம் வரம்புக்குட்பட்டதாயிருக்கும்; நான் செய்ய முடிவதெல்லாம் வரம்புக்குட்படாததாயிருக்கும்.

உங்கள் குருக்கள் எனப்படுகிறவர்களும் போலி ஆசான்களும் உங்கள் கீழ்படிதலையே சார்ந்திருக்கிறார்கள்; அவர்கள் அதை உங்கள்மீது வலிந்து திணிக்கிறார்கள். அதை நீங்களும் ஏற்றுக் கொள்கிறீர்கள். காரணம், யாராவது ஒருவர் எதையாவது ஒன்றை உங்கள்மீது திணிக்கிறபோது அவர் உங்களுக்கு தந்தை போல் ஆகிறார். அவர் பொறுப்பு ஏற்றுக் கொள்கிறார்- நீங்கள் பொறுப்பாக இருக்கத் தேவையில்லை. நீங்கள் ஒருவரை சார்ந்திருப்பது அவசியம் ஆகிறது. அதற்குரிய கட்டணத்தை செலுத்த வேண்டி இருக்கிறது. பின் அவர்கள் உங்களுக்கு ஒவ்வொன்றைப் பற்றியும் ஆணையிட்டுக்கொண்டே இருப்பார்கள்- நீங்கள் என்னமோ சின்னக் குழந்தைகள்போல்.

ஒரு சிறுவன் முதன்முதலாகப் பள்ளிக்குப் போனான். "உன் பெயர் என்ன?" என்று ஆசிரியர் கேட்டார்.

"ஜானி செய்யாதே" என்றான் அவன்.

"இப்படி ஒரு பெயரை நான் இதற்குமுன் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லையே- 'ஜானி செய்யாதே யா?" என்றார் ஆசிரியர்.

அவன் சொன்னான், "அதுதான் என் பெயர். நான் என்ன செய்தாலும் என் அம்மா 'ஜானி, செய்யாதே!'ன்னு கத்துவாள். 'ஜானி, செய்யாதே!' என்று என் அப்பாவும் கத்துகிறார். நான் எங்கு போனாலும் யாராவது ஒருவர் உடனடியாக, 'ஜானி, செய்யாதே!' என்கிறார்கள். எனவே அதுதான் என் பெயர் என நான் நினைக்கிறேன். அதுதான் என் பெயராக இருக்க வேண்டும்"

ஆக மிகவும் தொடக்கத்தில் இருந்தே உங்கள் அப்பா, அம்மா, பெற்றோர்கள், ஆசிரியர்கள், மதகுருக்கள் எல்லோரும் "இதை செய், அதை செய்யாதே" என போதித்திருப்பதால், அவர்கள் யாவரும் உங்களுக்குள் ஒருவித கீழ்ப்படிதலை உருவாக்கி இருக்கிறார்கள். கீழ்ப்படிதலுக்கு நீங்கள் அடிமையாகி இருக்கிறீர்கள். அது ஒரு போதைப் பொருளாக இருக்கிறது.

எனவே என்னிடம் நீங்கள் வரும்போது நீங்கள் விரும்புவீர்கள்... மக்கள் என்னிடம் கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள்- நான் அவர்களின் கேள்விகளுக்கு ஒருபோதும் பதிலளிப்பதில்லை- அவர்கள் என்னிடம் கேட்டுக் கொண்டே போகிறார்கள், "நாங்கள் என்ன செய்யவேண்டும். என்ன செய்யக்கூடாது என்பது பற்றிய விரிவான உத்தரவுகளை தாருங்கள்.

உங்களிடம் இருந்து தெள்ளத்தெளிவான உத்தரவுகளை நாங்கள் விரும்புகிறோம்.'' உங்களுக்கு நான் தெளிவைக் கொடுக்கிறேன். ஆனால் உத்தவுகளை வழங்க முடியாது. ஏனெனில் என் உத்தரவுகள் இன்றைக்கு சரியாக இருக்கலாம்; நாளைக்கு சரியில்லாது போகலாம். நாளை உங்கள் வளர்ச்சிக்கு என் உத்தரவுகள் தடையாக ஆகலாம். ஏனெனில் நாளையைப்பற்றி யாருக்கும் தெரியாது. அது முன்கூட்டி கணிக்க முடியாது. எனவே நான் உங்களுக்கு தெளிவை அளிக்கிறேன். அதன் மூலம் இன்றும் நாளையும் அதன்பிறகும் கூட உங்கள் சொந்த வழியை நீங்களே கண்டுகொள்ள முடியும். நீங்கள் எங்கிருந்தாலும், உங்களிடம் தெளிவிருந்தால், உங்களால் பாதையை கண்டுகொள்ள முடியும்.

நான் உங்களுக்கு முழுச் சுதந்திரத்தை அளிக்கிறேன். நான் என் வெளிச்சத்தை உங்களுடன் பகிர்ந்துகொள்கிறேன். என் சந்தோசத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். எவ்வகையிலும் நான் உங்களுக்கு ஒரு தந்தைபோல் விளங்க விரும்பவில்லை. எப்போதும் என்னை ஒரு நண்பனாக மட்டுமே நினைத்துக்கொள்ளுங்கள்.

தயவு செய்து, சரணாகதியையும் கீழ்ப்படிதலையும் பற்றி கூறுங்கள் என்று கேட்டுள்ளாய், மகாசத்வா.

சரணாகதியானது அன்பு- விசுவாசம்- அகங்காரமின்மை மூலம் நிகழ்கிறது. சரணடைதல் என்பது அகங்காரத்தை சரணடைதல் என்று பொருள்படும். கீழ்ப்படிதல் என்பது அகங்காரத்தைப் பண்படுத்த லாகும். அகங்காரத்தை அங்கும் இங்கும் வெட்டிவிடுவதாகும். அதை ஒரு குறிப்பிட்ட உருவத்துக்கு கொண்டு வருவதாகும்- அது சமுதாயத்துடன் ஒத்து நிலவமுடியும் படியான, ஏற்கெனவே நிறுவப்பட்டுள்ள வரிசைச் சிரமத்துடன் சமாதான சகவாழ்வு நடத்த முடியும்படியான. ஒரு வடிவத்துக்கு அதை கொண்டு வருவதாகும். கீழ்ப்படிதல் என்பது இறந்த காலத்துக்கு சேவை செய்வதாகும். சரணாகதி என்பது யாருக்கும் சேவை செய்வதல்ல.

சரணாகதி என்றால் உங்கள் அகங்காரத்திலிருந்து விடுபடுதல் என்பது மட்டுமே பொருள். ஆயின் உங்களின் அகங்காரத்திலிருந்து விடுபடும் கணமே உங்கள் வாழ்வுக்கு சிறகுகள் முளைக்கத் தொடங்குகிறது. அகங்காரம் கனமானது. அது உங்கள் தோளின்மீது அழுந்தும் பாறை போன்றது. அது உங்களை எப்போதும் மண்ணுடனேயே கட்டிப்போட்டு வைக்கிறது; அது பூமியை நோக்கியே இழுக்கிறது. அகங்காரத்தை கைவிட்டதுமே நீங்கள் திடீரென மேல்நோக்கி எழ ஆரம்பிக்கிறீர்கள்; உங்கள்

வாழ்க்கையானது ஒரு மகத்தான மேல்நோக்கிய இயக்கமாக ஆகிறது. நீங்கள் உயர்த்தப்படுகிறீர்கள். சரணாகதியானது உங்களை எடையற்றவராக லேசாக ஆக்குகிறது. அது புவிஈர்ப்புக்கு எதிராக நீங்கள் செல்ல இடம் தருகிறது. வாழ்வின் வேறொரு விதியானது செயல்பட தொடங்குகிறது; அது அருளின் விதி.

இரண்டு விதிகள் உள்ளன. அறிவியல் ஒரு விதியை அறிந்திருக்கிறது: அது புவி ஈர்ப்பு விதி. அதன்படி ஒவ்வொன்றும் கீழ்நோக்கி விழுகிறது. சமயம் இன்னொரு விதியை அறிந்திருக்கிறது: அதன்படி நீங்கள் உங்களின் அகங்காரத்தை கைவிட தயாராக இருந்தால் எல்லாமே மேல்நோக்கி எழுகிறது.

ஹசிதிய மறைஞானி ஸஸ்யாவைப்பற்றிச் சொல்லப்படுகிறது- இவர் ஒரு ஸென் ஆசானாய் இருந்திருக்க முடியும். ஒரு சூஃபியாக இருந்திருக்க முடியும்... உண்மையில் விழிப்புணர்வு பெற்ற மக்கள் எந்த மரபுக்கும் சொந்தமானவர்கள் அல்லர். அவர்கள் ஓரிடத்தில் பிறக்கிறார்கள்- எல்லோருமே ஏதாவது ஓரிடத்தில் தான் பிறக்க வேண்டி இருக்கிறது, நீங்கள் எல்லா இடத்திலும் பிறந்துவர முடியாது... எனவே ஹசிதிய மரபில் ஒரு யூதராக அவர் பிறந்தது ஒரு தற்செயலானதுதான். ஆனால் அவர் ஒரு வினோத ஹசீது. ஹசீதுகளே வினோதமானவர்கள்தான். ஆனால் இவர் மிகவும் விசித்திரமான வராக இருந்தார். அவர் என்ன செய்வார் என்பதை ஒருபோதும் முன்கூட்டி கணிக்க முடியாதிருந்தது.

நானாவது இங்கு வந்து நீங்கள் சிரிக்க முடிவதற்காக ஒரு சிரிப்பைக் கூறுகிறேன். அவரோ அதிவினோதர். அவராயிருந்தால் இங்கு வந்ததும் எடுத்தஎடுப்பில் சிரிக்கத் தொடங்கி இருப்பார்! சிரிப்புத்துணுக்கு உதிர்க்காமலேயே! ஹசீதுகள் அழகான சிரிப்புகளையும் கதைகளையும் விரும்புபவர்கள்.

எனவே ஒருதடவை அவரிடம் கேட்டார்கள். "ஸஸ்யா, என்ன ஹசீது நீங்கள்? குறைந்தது சில சிரிப்புகளையாவது சில கதைகளையாவது சொல்லுங்கள். வந்தவுடனேயே சிரிக்கத் தொடங்கிவிட்டால் எப்படி!"

அவர் சொன்னார், "நான் என் சிரிப்புகளை எல்லாம் கடவுளுக்காக சேமித்து வைத்திருக்கிறேன். ஏனென்றால் என்னிடம் வேறெதுவும் இல்லை. எனக்கு எப்படி செபிப்பதென்று தெரியாது. எந்த சாஸ்திரங்களும் எனக்குத் தெரியாது. நான் அவருக்காக சில அழகான சிரிப்புகளை சேகரித்து வைத்திருக்கிறேன். ஸஸ்யா சாகும்போது நீங்கள் பார்ப்பீர்கள்!"

அப்படியே நடந்தது. அவர் இறந்ததும் பேரிடி முழங்கியது. "அவர் சேர்ந்துவிட்டார். கடவுள் சிரிக்கிறார்!" என்று மக்கள் சொன்னார்கள்.

ஸஸ்யா ஒரு வீட்டில்- ஒரு சீடரின் வீட்டில்- தங்கி இருந்தார். அந்த குடும்பம் இந்த மனிதரைக் குறித்து கொஞ்சம் கவலைப்பட்டது. ஏனெனில் அவரது வழிகள் விநோதமாக இருந்தன அவர் எதை வேண்டுமானாலும் செய்து விடலாம். நடு ராத்திரியில் அவர் சிரிக்கத் தொடங்கிவிடலாம். அண்டை வீட்டாரை எழுப்பிவிடலாம். அமளியை உண்டுபண்ணி விடலாம். எனவே அவரை நிலவறையில் வைத்து இரவுப்பொழுதுக்கு கதவைப் பூட்டுபோட்டு பூட்டிவிட்டார்கள். அப்போதாவது அவர்கள் ஓய்வெடுக்க முடியும். அண்டை வீட்டாரும் ஓய்வெடுக்க முடியும் என்று நினைத்தார்கள்.

நடு இரவில் திடீரென வீட்டுக்கூரையில் சிரிப்புச் சத்தம் கேட்டது. அவர்களால் நம்ப முடியவில்லை! வெளியே ஓடி வந்தார் கள். ஸஸ்யா கூரைமேல் உருண்டு புரண்டு சிரித்துக் கொண்டிருந்தார்! அவர்கள் சொன்னார்கள், "ஸஸ்யா, என்ன விஷயம்?"

அவர் சொன்னார், "அதனால்தான் நானும் சிரித்துக் கொண்டிருக்கிறேன்! நிலவறையில் நான் தூங்கிக்கொண்டிருந்தேன். திடீரென நான் மேலெழத் தொடங்கிவிட்டேன்!"

ஆனால் பூட்டில் நம்பிக்கை இல்லாத- கீழ்நோக்கி விழுவதில் நம்பிக்கை கொள்ளாத வேறொரு விதியையே அவர் தெளிவுபடுத்திக் கொண்டிருந்தார். உள்ளபடியே அவர் சொன்ன வார்த்தைகள், "திடீரென நான் மேல்நோக்கி எழக் கண்டேன்" என்பதாகும்.

அதுதான் அருளின் விதி; சரணடையுங்கள்; திடீரென்று முற்றிலும் வேறுபட்ட ஒரு விதியினுள் நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் பார்வைக் கோணம் மாறுகிறது. நீங்கள் மேல்நோக்கி எழத் தொடங்குகிறீர்கள். அப்போது உங்களில் பெரும் சிரிப்பு- மகிழ்ச்சி இருக்கிறது; முழுப் பிரபஞ்சமும் உங்களுடன் சிரிக்கிறது- மகிழ்கிறது.

கீழ்ப்படிதல் என்னும் பிரச்சனைக்கே இங்கு இடமில்லை. 'கீழ்ப்படிதல்' என்பது ஒரு அசிங்கமான வார்த்தை.

**நாலாவது கேள்வி:**

**ஓஷோ,**

**எங்களைப் போன்றவர்கள் எங்களைப் பார்த்து சிரிக்கக் கற்பதற்காக இந்த பிரிட்டிஷ் சீமாட்டிக்கு ஒரு பிரிட்டிஷ் சீமாட்டி பற்றிய சிரிப்பு— தயவு செய்து— சொல்லுங்கள்.**

**டயானே ராம்சே.**

தன் உலக கப்பல் பயணத்தின் பாதிவழியில் ஒரு ஆங்கில சீமாட்டி கப்பலில் நடந்த குழு நடனத்தில் கலந்து கொண்டாள். உயர் ரக மது அருந்தி லேசாக போதை கொண்டாள். கடைசியில் பார்வைக்கு அழகான- இத்தாலியனான- கப்பல் பணியாளுடன் உறங்கினாள். ஆனால் மறுநாளே பணியாளன் அவளை மேல்தளத்தின் பின்பகுதியில் அணுகிய போது ஆங்கில மாது அவனைக் கண்டும் காணாதது போல் இருந்தாள்.

"ஹே, கண்டெசா மியா" என்றான் பணியாள், "நேற்று இரவு நாம் கழித்த இனிய பொழுது உனக்கு நினைவு வரவில்லையா?"

ஆங்கில சீமாட்டி தன் சீட்டாட்டத்திலிருந்து சுருக்கமாக ஏறிட்டு விருட்டென்று சொன்னாள், "நான் புழங்கும் வட்டாரங்களில்- இளைஞனே- ஒருவனுடன் படுப்பதென்பது அறிமுகத்தில் சேர்த்தியில்லை!"

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மற்றவர்கள் என்னைப்பற்றி என்ன நினைக்கிறார்களோ என்பதைப் பற்றி எப்போதும் கவலைப்படுகிறேன். நான் என்ன செய்வது?**

**காயத்ரி.**

எதையும் செய்யத் தேவையில்லை. ஏனெனில் அந்த மற்றவர்களை நான் அறிவேன்- அவர்கள் நீ அவர்களைப் பற்றி என்ன நினைக்கிறாயோ என்பதைப்பற்றி ஓயாமல் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சாந்தகுணமுள்ளோர் பூமியை சுதந்தரித்துக் கொள்வார்கள் என்பது உண்மையா?–**

**ருத்ரேஷ்.**

உண்மைதான். ஏனெனில் மீதமிருக்கும் நாங்கள் எல்லோரும் நட்சத்திரங்களுக்கு தப்பித்து சென்றிருப்போம்!

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**காதல் செய்கையில் மிகுந்த சத்தம் செய்வோர் யார்?**

**அமீர்.**

தகரக் கூரையின் மேலிருக்கும் இரு எலும்புக்கூடுகள்!

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**குருட்ஜீப் அழகான ஹூக்கா வைத்திருந்தார். சிகரெட்டு களையும் அவர் வெறுக்கவில்லை. தன் வாழ்நாள் எல்லாம் பால் ஏஷம் தன் வாயில் ஒரு மண் குழாயை வைத்திருந்தார். உண்மையாகவே புகைபிடிப்பதை விட்டுவிடுதல் தேவையா? ஆம் எனில், ஆசிரமத்தில் இருக்கும் ஒரே கோயில் புகைக்கும் கோயிலாக இருப்பது எப்படி?**

**ஆனந்தோ.**

லௌகீகத்தை புனிதமானதாக உருமாற்றுவதே இங்கு எனது முழு வேலையுமாக இருக்கிறது. இது ஒரு ரசவாத பள்ளி; மட்ட உலோகங்களை நாம் பொன்னாக மாற்றுகிறோம். எனவேதான் புகைபிடிக்கும் இடம் கோயில் எனப்படுகிறது. அதுவே நம்மிடமுள்ள ஒரே கோயிலும் ஆகும்.

புகை பிடித்தலுக்கு நான் எதிரானவன் அல்ல. நான் ஏன் புகைபிடிப்பதில்லை என்றால் காற்றிலேயே நிறைய புகை உள்ளது. எனவே மண் குழாயையோ ஹூக்காவையோ கையில் பிடித்துக் கொண்டிருக்க வேண்டிய வருத்தமே இல்லை. சாதாரண காற்றே போதுமான அளவுக்கு புகையால் மாசுபட்டிருக்கிறது.

உண்மையில் மனிதன் இன்னும் எப்படி உயிரோடிருக்கிறான் என்பது வியப்பே என்று சூழலியல்காரர்கள் சொல்லுகிறார்கள். ஏனெனில், இன்று நியூயார்க்கில், பம்பாயில், கல்கத்தாவில், லண்டனில் களங்கப்பட்டுள்ள அளவுக்கு காற்று மாசுபட்டால் மனிதர்கள் செத்து விடுவார்கள் என்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்புதான் விஞ்ஞானிகள் நினைத்து வந்தார்கள். ஆனால் எப்படிப்பட்ட சூழலுக்கும் அனுசரிக்கும் அசாத்திய திறன் மனிதனுக்கு இருக்கிறது. ஏராளமான கார்களும் ரயில்களும் விமானங்களும் போய்வருகிற இடத்தில், நிறைய தொழிற் சாலைகளும், நிறைய புகையும் இருக்கும் இடத்தில் தனியொரு புகைக்குழாயை இனியும் சுமந்து திரிய அவசியமில்லை. வெளிக் காற்றை சுவாசித்தாலே நீ புகைபிடிப்பதாகத்தான் ஆகும்!

நான் ஒரு சோம்பேறி. குருட்ஜீப் சோம்பேறி அல்ல. எனவேதான் அவர் தன் அழகிய ஹூக்காவை தூக்கிக் கொண்டிருப்பது வழக்கமாயிருந்தது. மேலும் பால் ஷெமின்

காலத்தில் காற்று அவ்வளவு களங்கப்பட்டிருக்கவில்லை. எனவே உன் நுரையீரலுக்குள் கொஞ்சம் புகை போக வேண்டும் என்று நீ விரும்பினால் அதற்கென தனி ஏற்பாடுகள் செய்ய வேண்டி இருந்தது! இப்போதோ புகை உலகப் பொதுவாகிவிட்டது.

மேலும் நான் அதற்கு எதிரானவன் இல்லை. ஏனெனில் அதிகபட்சம் அது சற்று முன்னதாக கொன்று விடமுடியும். அதனால் என்ன? நீ 80 வருசம் வாழாமல் 78 வருசம் மட்டும் வாழ்ந்தால், அது ஒரு பிரச்சனையா? உண்மையில் உலகில் மக்கள் நெருக்கம் அதிகரித்திருப்பதால் நீ போய்விட்டால் எல்லோருக்கும் மகிழ்ச்சிதான் ஏற்படும். யாராவது போகிறபோது எவ்வளவு அதிகமாய் நாங்கள் கொண்டாடுகிறோம் என்பதை நீ அறிவாயா? வேறெதையும் அந்த மாதிரி நாங்கள் கொண்டாடுவதில்லை! கொஞ்ச இடம் உருவாக்கப்பட்டுவிட்டது.

எனவே, ஆனந்தோ, நீ எவ்வளவு அதிகமாய் புகைபிடிக்க விரும்புகிறாயோ அவ்வளவுக்கும் புகைக்க முடியும். "ஆரோக்கியம் என்றால் ஒருவர் சாக முடிகிற மிகவும் மெதுவேக வீதமே."

நீ கொஞ்சம் சீக்கிரமாக போக முடியும். மேலும் இந்த விரைவேக நாட்களில், எல்லாமே வேகவேகமாக போய்க் கொண் டிருக்கும்போது ஆரோக்கியமான முறையில் செத்துக்கொண்டு போவது, தயங்கித் தயங்கி போவது சுத்த பழைய பஞ்சாங்கமாய் இருக்கிறது. ஆரோக்கியம் என்பது நீண்டநெடிய பாதை! ஆனால் கடைசியாக நீ சவக்குழியில் சேரத்தான் வேண்டும். குறுக்குவழிகள் இருக்கும்போது ஞானமிக்கவர்கள் எப்போதும் குறுக்கு வழியையே தேர்ந்தெடுக்கிறார்கள். எனவே கவலைப்படாதே.

புதிய கம்யூனில் நாம் பல கோயில்களைப் கட்டப் போகிறோம். உண்மையாகவே அவற்றை அழகான கோயில்களாக ஆக்கப் போகிறோம். ஏனெனில் ஒருவர் இவ்வளவு அவசரப் படும்போது நம்மால் முடிகிற எல்லா ஏற்பாட்டையும் நாம் செய்து வைக்க வேண்டும். நம்மால் முடிந்த எல்லா உதவியையும் அவருக்கு நாம் தரவேண்டும். அழகான கோயில்களை, நன்கு அலங்கரித்த, வசதியான, ஆடம்பரமான கோயில்களை கட்டுவோம். அதில் நீ தங்கி உன் ஆசை தீர புகைவிட முடியும்.

உணர்வில்லாத முறையில் நீ வாழ்ந்து கொண்டிருந்தால் நீ 70, 80, 90 அல்லது 100 வயதுவரை வாழ்ந்தாலும் அதில் எந்த வேறுபாடும்- சிறப்பும் இல்லை. அது ஒரு பொருட்டில்லை. உணர்வுடன் ஒரே ஒரு கணம் வாழ்ந்தாலும் போதும்.

இங்கு என் முழுவேலையும் உணர்வுள்ளவராக ஆவதற்கு உங்களுக்கு உதவுவதாகும். உங்கள் வாழ்க்கை முழுவதிலும் வைத்து ஒரே ஒரு கணமாகிலும் நீங்கள் முழு உணர்வுள்ளவராக ஆனால் நீங்கள் திரும்பி வருவதில்லை. நன்றாகப் போய் இருக்கிறீர்கள். அப்போது பிரபஞ்ச மூலத்துக்குள் உண்மையாகவே போய் இருக்கிறீர்கள்.

புத்தரின் பெயர்களில் சுகாதர் என்பதும் ஒன்று. சுகாதர் என்றால் நன்றாகப் போனவர் உண்மையாகவே போயிருக்கிறவர். இனி திரும்பி வராதவர் என்று பொருள்.

நீ உணர்வுள்ளவனாயின் கொஞ்சம் அதிகநாள் வாழ விரும்புவாயா கொஞ்சம் குறைந்த காலமே வாழ விரும்புவாயா என்பதை முடிவு செய்து கொள்வது உன்னைச் சேர்ந்தது உனக்காக வேறுயாரும் தீர்மானிக்கக் கூடாது. மேலும் வேறு எவரும் எப்படி முடிவு செய்ய முடியும்?

மொரார்ஜி தேசாயின் அரசாங்கம் நாடு முழுவதன் மீதும் மதுவிலக்கை திணிக்க முயன்று வந்தது- ஆனால் அவரது மந்திரிசபையில் 80% பேர் குடிகாரர்கள்! மேலும் அவரே அவர்கள் எல்லாரையும் விட மோசமாக இருந்தார்- அவர்தான் சொந்த மூத்திரத்தையே குடித்து வந்தார்! அதைவிட நான் திராட்சை மது குடிப்பேன். ஒயினா யூரினா என தேர்ந்தெடுக்க வேண்டி இருந்தால் ஒயினே அதிக அழகியலானது. மேலும் அது சைவமும் ஆகும்! சிறுநீர் அசைவ உணவாகவே படுகிறது. அது வரும் நெடு வழியையும் அது போகும் நீண்ட பயணத்தையும் நினைத்துப் பாருங்கள்... இதற்கு அடுத்த நடவடிக்கை மிக தூரத்தில் இருக்க முடியாது!

இந்திரா பிரதமர் ஆனதும் ஏன் அவர் பிரதமர் இல்லத்துக்கு குடிபெயரவில்லை என நான் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன். அவர் அங்கு குடிபுக 2 மாதங்கள் எடுத்தது. "என்ன விஷயமா யிருக்கும்?" என நான் கேட்டுக்கொண்டேன். குளியலறையில் இருந்த எல்லா ஓடுகளையும் அவர் மாற்றிக் கொண்டிருந்ததாக எனக்கு செய்தி கிடைத்தது. ஏனெனில்... குளியலறைக்குள் அவர் (மொரார்ஜி) என்ன செய்து கொண்டிருந்தார் என்பது யாருக்கு தெரியும்? மேலும் வீடு முழுவதும் ஏறக்குறைய புதுக்கி அமைக்கப்பட்டது. ஒவ்வொன்றையும் சுத்தப்படுத்த வேண்டி இருந்தது. எல்லாப் பாத்திரங்களையும் அகற்ற வேண்டி இருந்தது. அவர் என்ன செய்தார் என்பதை யார் அறிவார்? அவரது குளியலறைகளில் இருந்ததெல்லாம் பலவிதமான எனிமா

சாதனங்கள்தான். வீட்டையும் மாற்ற 2 மாதங்கள் பிடித்தது- அது நாறிக் கொண்டிருந்திருக்க வேண்டும்!

புகை பிடித்தலுக்கு நான் எதிரி அல்ல. மது அருந்துவதற்கும் கூட நான் எதிரி அல்ல. எப்போதாவது ஒருதடவை குடிப்பது உண்மையிலேயே அழகான விஷயமே. ரொம்பவும் புனிதனாக இருக்கத் தேவையில்லை- மனிதனாக இரு!

எனவேதான் மகாவீரரை விட, புத்தரைவிட இயேசுவின் மேல் எனக்கு பிரியம் அதிகம். புத்தரும் மகாவீரரும் ரொம்பவும் அருவமானவர்கள். ஏறக்குறைய அமானுடர்கள். இயேசுவோ மிகவும் மனிதத்தன்மை உள்ளவர். அவர் குடிக்கிறார், உண்ணுகிறார், விருந்தாடுவதை விரும்புகிறார். இரவு நெடுநேரம் வரை அவர்கள் உண்ணவும் குடிக்கவும் கும்மாளம் அடிக்கவும் செய்கிறார்கள்.

புதிய கம்யூன் முனிவர்களின் கம்யூனாக இருக்கப் போவதில்லை. முனிவர்கள்- துறவிகள் என்போர் நோய்பிடித்த மக்கள். என் சந்நியாசிகள் துறவிகள் அல்லர். என் சந்நியாசிகள் வாழ்வை காதலிக்கிறார்கள். உணர்வுடன் நீ வாழும்போது தீர்மானிக்க வேண்டியது நீதான். எப்போதாவது ஒருதடவை கொஞ்சம் பீர் அருந்த நீ விரும்பினால் அதில் எந்த தவறும் இல்லை. ஆனால் அந்த முடிவு உன் சொந்த விழிப்பில் இருந்து வருகிறது. நீ குடிக்க விரும்பவில்லை என்றால் தேவை இல்லை.

உண்மையில் நான் ஏன் குடிப்பதில்லை என்பதற்கான எளிய காரணம், சோடாவை குடித்தாலே எனக்கு போதை ஏறி விடுவதுதான். எனவே அதை விஸ்கியுடன் கலக்கத் தேவை இருப்பதில்லை. விஸ்கியை ஏன் வீணாக்க வேண்டும்? அதை நான் மற்றவர்களுக்காக பத்திரம் செய்கிறேன். பரிட்டோஷ் தன் பிறந்தநாளைக் கொண்டாடுகிற போதெல்லாம் அவனுக்கு ஒரு பாட்டில் விஸ்கியையோ பிராந்தியையோ அனுப்புகிறேன். எப்போதாவது யாராவது பிராந்தி கொண்டு வந்தால் அதை நான் வைத்திருக்கிறேன். ஏனெனில் விரைவிலேயே பரிட்டோசுக்கு அது தேவைப்படும்: அவனுக்கு பிறந்தநாள் வந்துவிடும்! எனக்கோ சோடாவே போதும்.

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**தயவுசெய்து, வாய் வேலை சமாச்சாரத்தைப் பற்றி இன்னும் ஒரே ஒரு சிரிப்பு.**

முக்தானந்தா... இல்லை இல்லை, பரமஹம்ச முக்தானந்தா... அதாவது கடைக் கெட்ட கழிசடையே! உனக்கு பைத்தியமா அல்லது வேறெதாவதா? ஏன் இந்த மாபெரும் சமாச்சாரத்தால் பீடிக்கப்பட்டு இருக்கிறாய்? ஆனால் நீ விரும்பினால், நான் தயார்!

ஜார்ஜ் ஸ்டியர்மன் அதிசயிக்கத்தக்க வணிகன். அமெரிக்காவில் மாபெரும் வெற்றி அடைந்தான். ஐபிஎம் தட்டச்சுப் பொறிகளை விற்பவனாக தொடங்கினான். பத்தே ஆண்டுகளில் அவனது விற்பனையும் நிர்வாகத் திறமையும் தலைமை நிலையில் வளர்ந்துவிட்டதால், டெக்சாசில் இருந்து கலிபோர்னியாவரையான 9 மாநிலம் அடங்கிய பகுதிக்கு, அனைத்து அலுவலகப் பொருள்கள் மற்றும் சிறு கணினிகளின் விற்பனை இயக்குநர் ஆனான். ஜெராக்ஸ் குழுமம் கணினிக்குள் விரிவாகிய போது, நியூயார்க்குக்கு வெளியில் இருந்த அவர்களின் கூட்டுக்குழும (கார்ப்பரேட்) தலைமையகத்தால் ஈர்க்கப்பட்டான். மாபெரும் சாதனை என்று சொல்லத்தக்க விதத்தில் பத்தாண்டுகளுக்குள் ஜெராக்சின் தேசிய விற்பனை இயக்குநராக ஆனான். நிர்வாகக் குழுவில் இருந்த அவன், தலைவர் ஆவதற்கு அவனுக்கிருந்த ஒரே தகுதிக் குறைவு. இயக்குநர்களின் குழுவில் அவனுக்கு ஒரு இடமில்லை என்பதே.

அவனுக்கு ஒரு அழகிய மனைவி இருந்தாள். 3 குழந்தைகள் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார்கள். கனெக்டிகட்டில் உள்ள டேரியனில் ஒரு வீடு இருந்தது. அது மவுன்ட் வெர்னோன் போல இருந்தது. பின் கிறிஸ்துமஸுக்கு முந்தின நாள் மற்ற தலைமை நிர்வாகிகள் எல்லோரும் மஹாமாவுக்கோ ப்ளோரிடாவுக்கோ ஆஸ்பெனுக்கோ விடுமுறைக்காக போனபோது, ஜார்ஜ் அலுவலகத்துக்கு போனான். ஆண்டு முடிவு சம்பள காசோலையை, எதிர்பார்த்த பெருந்தொகையான போனசுடன் சேர்த்துப் பெற போனான். சம்பளக் காசோலையை திறந்ததும் அதில் பெரிய போனசுக்கு பதில் வேலைநீக்க சம்பளம் இருந்தது. அவன் வேலையை விட்டு நீக்கப்பட்டிருந்தான்.

ஜார்ஜ் முற்றிலும் உடைந்து போனான். இருந்தாலும் கொஞ்சம் மார்டினி அருந்திய பிறகு வீட்டுக்கு விரைந்தான். கதவை திறந்ததும் கிறிஸ்துமஸ் மரத்தில் ஒரு குறிப்பு இருந்தது. அதில்: "ஜார்ஜ், இனி உன்னுடன் காலம்தள்ள முடியாது. எனக்கு மணவிலக்கு வேண்டும். குழந்தைகளும் நானும் போகிறோம்!"

கண்ணை மூடிக்கொண்டு மீண்டும் நகருக்கு போனான். மூக்குமுட்ட குடித்தான். எம்பயர் ஸ்டேட் கட்டிடத்தின் உச்சிக்கு

மின் ஏணி (எலிவேட்டர்) மூலம் போனான். அங்கிருந்து குதிக்கப் போகையில் அவனது கால்சட்டையை எதுவோ பிடித்திருப்பது போல் உணர்ந்தான். திரும்பிப் பார்த்தான்- கிறிஸ்துமஸ் தாத்தா சான்டா கிளாஸ் நின்று கொண்டிருந்தார்.

ஜார்ஜ் சொன்னான், "சான்டா, தொலைந்து போம்! இங்கிருந்து ஓடிவிடும்! எல்லாமே போய்விட்டது! என் வேலை போச்சு, என் மனைவி மக்களும் என்னை விட்டு போய் விட்டார்கள்!"

சான்டா சொன்னார், "பொறு ஜார்ஜ், நீ எனக்கு ஒரு உதவி செய்தால் நான் உனக்கு 2 உதவி செய்வேன்."

"சரி" என்றான் ஜார்ஜ். "எனக்கு என் மனைவி மக்கள் வேண்டும்."

"பிரச்சனையே இல்லை" என்றார் சான்டா. "இரண்டு நாளில் அவர்கள் திரும்பிவிடுவார்கள்."

"ஆகா!" என மகிழ்ச்சியுடன் கூவினான். "அடுத்தது என் வேலை."

"அது வந்து" என்றார் சான்டா, "அதிகாரத்துக்கு போட்டி நடந்து வருகிறது. புத்தாண்டு வரை மட்டும் பொறு. அதன்பின் நீதான் ஜெராக்சின் இயக்குநர்."

"அடேங்கப்பா!" என்றான் ஜார்ஜ், "அபாரமான விஷயம்! சரி, நான் உமக்கு என்ன செய்ய முடியும்?"

"அதாவது" என்று சொல்லியபடி தன் கால்சராயின் ஜிப்பை திறந்தார் சான்டா. "நீ என்னை வாய்மைதுனம் செய்ய வேண்டும் என்பதே என் ஆசை."

"என்ன!" அலறினான் ஜார்ஜ். "எனக்கும் 45 வயதாகிறது. இதுவரை அப்படிப்பட்ட காரியத்தை நான் செய்ததில்லை!"

"இருக்கலாம்" என்றார் சான்டா. "ஆனால் பேரம் பேசியது பேசியதுதான்!"

அந்த வேலையை ஜார்ஜ் முடித்ததும், சான்டா ஜிப்பை மூடிக்கொண்டார். அவரைப் பார்த்த ஜார்ஜ், அவர் கண்களில் கண்ணீர் வழிந்தோடக் கண்டான். "என்னாச்சுது?" என்று கேட்டான்.

சான்டா இளக்காரமாக ஜார்ஜைப் பார்த்து சொன்னார், "45 வயதாகியும் ஒருவன் சான்டா கிளாசை எல்லாம் நம்புகிறான் என்றால் அவனைப் பார்க்கவே பரிதாபமான இருக்கிறது!"

OOO

# 12

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**"நீ பார்க்க விரும்பினால், அப்போதே பார். அதனுள் மனம் நுழைய இடம் கொடுக்காதே" என்றார் புத்தர். "பார்ப்பதைப்" பற்றி இன்னும் அதிகமாய் நீங்கள் சொல்ல முடியுமா?**

**ஆனந்த் தீபேஷ்.**

பார்த்தல் என்பது மனமற்ற ஒரு நிலை. எண்ணமற்ற ஒரு நிலை. தூய விழிப்பு நிலை. அப்போது புறத்தில் இருக்கிறதை எந்தக் குறுக்கீடோ, எந்த தீர்ப்போ, எந்த விருப்பு வெறுப்போ இல்லாமல் வெறுமனே நீ பிரதிபலிக்கிறாய். அப்போது அதைக் குறித்து நீ ஒன்றும் சொல்வதில்லை. சும்மா கண்ணாடி போல் செயல் படுகிறாய்.

எனவேதான் "நீ பார்க்க விரும்பினால் அப்போதே பார்" என்கிறார் புத்தர். ஏனெனில் நீ எண்ணத் தொடங்கிவிட்டால் ஏற்கெனவே இழந்துவிடுகிறாய். 'அப்போதே பார்த்தல்' என்பதன் பொருள், இடையில் மனத்தை கொண்டு வராதே என்பதாகும். மனம் காலத்தை கொண்டுவருகிறது; வருங்காலத்தைக் கொண்டு வருகிறது, இறந்த காலத்தைக் கொண்டு வருகிறது. சரியா தவறா என மனம் ஒப்பிட ஆரம்பிக்கிறது. பழைய முன் முடிவுகளுடன்- கீதையுடன் குரானுடன் பைபிளுடன், மற்றும் உன் தளைகள் அனைத்துடனும்- ஒப்பிடுகிறது. அல்லது அதை வருங்காலத்தின்மேல், ஆசைகளின் உலகத்தில் செலுத்தத் தொடங்குகிறது: "இதை நான் நம்பினால் எனக்கு என்ன கிடைக்கும்? என்ன சாதிக்க முடியும்?" மனம் உள்ளே வந்ததுமே கடந்தகால, எதிர்கால உலகம்

முழுவதையும் தன்னுடன் கொண்டு வருகிறது. திடீரென நீங்கள் இடர்ப்பாட்டில் சிக்குகிறீர்கள். ஞாபகங்கள் இருக்கின்றன, ஆசைகள் இருக்கின்றன. ஆனால் அதனால், சொல்லப்பட்ட விஷயம் உங்களின் குழப்பத்தில்- சந்தடியில்- காணாமல் போய்விடுகிறது.

புத்தர் கூறுகிறார்: இப்போதே பார்! ஒரே ஒரு கணநேர சிந்தனைகூட கிடையாது.

சிந்தித்தல் என்றால் சிந்திவிடுதல்- தவறவிடுதல்.

எனவே புத்தர் எப்போதும் பின்வரும் பழக்கத்தையே வைத்திருந்தார்: கேள்விகளைக் கேட்டுக் கொண்டோ சத்தியத்தையும் கடவுளையும் மறுவாழ்வையும் பற்றி விசாரித்தபடியோ ஒரு புது சாதகர் அவரிடம் வந்தபோதெல்லாம் அவர் இப்படிக் கூறுவார், "பொறு. அவசரப்படாதே. எதையும் கேட்காமல் குறைந்தது 2 ஆண்டுகள் என் அருகில் உட்கார். உண்மையாகவே உனக்கு பதில் கிடைக்க விரும்பினால் 2 ஆண்டுகளுக்கு உன் கேள்விகள் அனைத்தையும் மறந்துவிடு. உண்மையான பதிலை நீ விரும்பவில்லையானால் இப்போதே உனக்கு விடையளிக்க நான் தயார். ஆனால் கவனிக்க நீ தயாராயில்லை. உன் கேள்வியே உன் உள் பித்தநிலையில் இருந்து வெளிவருகிறது. கேட்பதற்கு உள்ளே 1001 கேள்விகள் உள்ளன. உன் கேள்விக்கு நான் பதிலளித்துக் கொண்டிருக்கும்போதே ஒரு புதுக்கேள்வியை நீ ஆயத்தப்படுத்திக் கொண்டிருப்பாய்; என்னை நீ கவனித்துக் கொண்டிருக்க மாட்டாய். எனவே உண்மையாகவே நீ பதிலை விரும்பினால் 2 வருடங்கள் காத்திரு; பேசாமல் என் அருகில் அமைதியாக அமர்; இங்கு நிகழ்கிறதை வெறுமனே கவனித்தபடி இரு.

"இந்த 2 ஆண்டுகளில் எவ்வளவோ தெரியவரும். பல மனிதர்கள் மலர்வதை நீ பார்ப்பாய். எல்லாவிதமான மனிதர்களும் என்னிடம் வருவதை நீ பார்ப்பாய்; அறிவார்வம் கொண்டவர்கள் வெறும் கையராய் வந்து வெறும் கையராய் திரும்புவதைப் பார்ப்பாய்; உண்மையான சாதகர்கள் வெறும் கையராய் வந்தாலும் ஒருபோதும் வெறுங்கையராய் திரும்புவதில்லை என்பதை பார்ப்பாய்- அவர்கள் தங்குகிறார்கள். தாம் நிறைவு பெறும் வரை என்னுடன் தங்கி இருக்கிறார்கள். மந்தமானவர்கள் மிக நீண்ட காலம் எடுப்பதையும் படிப்படியாக முன்னேறுவதையும், விரைவானவர்கள்- அதிக நுண்ணறிவுள்ளவர்கள் உடனடியாக புரிந்துகொள்வதையும் பார்ப்பாய். வெறுமனே கவனி. என்னுடன் கிராமம் கிராமமாக நட.

என்னுடன் ஒவ்வொரு மரத்தடியிலும் இரு. என் உணர்வை உள்வாங்கு, என் அமைதியை உணர். என் கண்களுக்குள் பார், நான் நடக்கிற விதத்தை கவனி, நான் இருக்கிற விதத்தைக் கவனி. இரண்டு ஆண்டுகளுக்கு சும்மா கவனி; உன் கேள்விகளை எல்லாம் மறந்து விடு. எந்த கேள்விகளையும் உருவாக்காதே. 2 வருடங்களுக்குப் பின், அதுவரை இந்த நிபந்தனையை நீ நிறைவேற்ற முடிந்தால், நீ கேள்வி கேட்கலாம், நான் பதில் சொல்வேன். மேலும் அது எந்தவிதமான கேள்வியானாலும் அது தீர்க்கப்படும். உன் தாகம் எந்தவிதமான தாகமானாலும் அது தணிக்கப்படும் என உனக்கு நான் உறுதி கூறுகிறேன்."

மவுலிங்க பட்டர் என்னும் மாபெரும் தத்துவர் வந்திருந்தார். அவர் மாபெரும் தத்துவ கேள்விகளையே கேட்டுக் கொண்டிருந்தார். புத்தர் கவனித்துக் கொண்டிருந்தார்- மவுலிங்கர் மிகப் பிரபலமானவர். நாடு முழுவதிலும் நன்கு அறியப்பட்டவர். அவர் தனியாக வரவில்லை. தனக்கே உரிய 500 சீடர்களுடன் வந்திருந்தார். அவர்கள் அவர் அருகில் உட்கார்ந்திருந்தார்கள். புத்தர் பொறுமை யாக கவனித்தார். ஒருமணி நேரமாக அவர் கண்ட கண்ட கேள்விகளையும் கேட்டுக் கொண்டிருந்தார்- அவை மிகவும் சிக்கலான கேள்விகளாக, சிரமமான கேள்விகளாக, நுட்பமான கேள்விகளாக இருந்தன. பின் அவர் சொன்னார், "இத்தனை கேள்விகளை நான் கேட்டிருக்கிறேன். ஆனால் நீர் எதற்கும் பதில் அளிக்கவில்லை."

புத்தர் சொன்னார், "நான் பதில் கூறும் விதம் இதுதான்: நீர் என்னுடனேயே 2 ஆண்டுகள் காத்திருக்க வேண்டி இருக்கும். இந்தக் கேள்விகள் ஏற்கெனவே நீர் பலரிடமும் கேட்ட கேள்விகள்தான். என்னிடம் கேட்பதற்குமுன் அவர்களிடம் நீர் கேட்டீரா இல்லையா?"

மவுலிங்க பட்டர் சொன்னார், "உண்மைதான். மகாவீரரை நான் கேட்டேன். அவர் உடனே பதிலளித்தார். சஞ்சய் விலேதி பட்டரை கேட்டேன்" -அவர் அக்காலத்தில் புகழ்பெற்ற இன்னொரு போதகர்- "அவரும் உடனே பதிலளித்தார். அஜித் கேச கம்பளியைக் கேட்டேன்" -இவரும் ஒரு பெரிய ஐயவாத தத்துவர்- "அவர் என் கேள்விகளில் மிகுந்த ஆர்வம் காட்டினார். இன்னும் பலரையும் நான் கேட்டிருக்கிறேன். நாங்கள் நாடு முழுவதும் சுற்றி பயணம் செய்து வருகிறோம்."

புத்தர் சொன்னார், "நீர் அனேகரிடம் கேட்டிருக்கிறீர். அவர்கள் யாவரும் பதிலளித்திருக்கிறார்கள். ஆனால் உமக்கு பதில்கள்

கிடைத்ததா? பதில்கள் கிடைத்ததென்றால் ஏன் என் நேரத்தை வீணாக்குகிறீர்?"

மவுலிங்கபட்டர் சொன்னார், "அவர்கள் பதிலளித்தார்கள்தான். ஆனால் எனக்குத்தான் இன்னும் விடைகள் கிடைக்கவில்லை. என் கேள்விகள் அப்படியே தொடப்படாமல் உள்ளன. அவர்களின் பதில்கள் எனக்கு திருப்தி தரவில்லை."

அதற்கு புத்தர் சொன்னார், "அவர்கள் பதிலளித்தது போலவே நானும் இப்போதே பதிலளிக்க முடியும்- ஆனால் இதுவும் உமக்கு திருப்தி அளிக்காது. இப்போது முடிவெடுக்க வேண்டியது நீர்தான். உண்மையாகவே உமக்கு அக்கறை உண்டென்றால் இரண்டு ஆண்டுகளாய் பலாயம் வையும், என் அருகில் அமைதியாக இரும்."

மவுலிங்கர் 2 ஆண்டுகள் காத்திருந்தார். ஆனால் "சரி, நான் காத்திருக்க தயார்" என அவர் கூறும் முன்பாகவே, புத்தரின் மாபெரும் சீடர்களில் ஒருவரான மஞ்சுஸ்ரீ சிரிக்கத் தொடங்கினார். மவுலிங்கர் சொன்னார். "ஏன் இந்த ஆள் பைத்தியக்காரன் போல் சிரிக்கிறான்?"

புத்தர் சொன்னார், "அவர் பைத்தியக்காரர் அல்ல. என் முதல் ஞானம் பெற்ற சீடர் அவர். அவர் சிரிப்பது ஏன் என நான் அறிவேன். நீரே அவரை கேட்டுக் கொள்ளலாம்."

மவுலிங்க பட்டர் மஞ்சுஸ்ரீயைக் கேட்டார். "ஏன் நீர் சிரித்துக் கொண்டிருக்கிறீர்?"

அவர் சொன்னார். "நான் சிரிப்பதன் காரணம், இந்த கவுதம புத்தர் தந்திரமான ஆள்! இதே மாதிரிதான் என்னையும் அவர் மடக்கிவிட்டார். உம்மிடம் அவர் சொல்லிக் கொண்டிருந்ததை கவனித்தபோது அவரிடம் நான் வந்து சேர்ந்த கதை நினைவுக்கு வந்தது. 20 ஆண்டுகள் கடந்துவிட்டன. திடீரென எனக்கு நினைவு வருகிறது- முற்றிலுமாக அதை நான் மறந்திருந்தேன்- என் கேள்விகளும் இவையாகவே இருந்தன. வரலாறு மறுபடியும் திரும்ப நடப்பது போல் இது இருக்கிறது. இப்போது நீர் வந்திருக்கிறது. போலவே நானும் என் 500 சீடர்களுடன் வந்தேன் என்பதும் ஆச்சரியமான விஷயம்தான். நான் புத்தரைக் கேட்டதற்கு இதே பதில்தான் எனக்கும் தரப்பட்டது: '2 ஆண்டுகள் பொறு'. இரண்டு ஆண்டுகள் காத்திருந்தேன். இப்போது சிரித்துக் கொண்டிருக்கிறேன்! உமக்கு இதை ஒரு எச்சரிக்கை போல சொல்ல விரும்புகிறேன். இவரிடம் கேள்வி கேட்கப் பதில் பெறுவதாயின் இப்போதே

கேளும். ஏனெனில் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு நீரும் கேட்க மாட்டீர். இவரும் பதில் சொல்ல மாட்டார்."

புத்தர் சொன்னார், "பதில் கூற நான் தயார். ஆனால் நீரே கேட்க மறுத்தால் நான் என்ன செய்வது? என் வாக்குறுதி அப்படியே இருக்கிறது- நான் என் வாக்குறுதியை காப்பாற்றுபவன்."

மஞ்சுஸ்ரீ முன்னறிவித்தபடியே தான் கதை நடந்தது. இரண்டு ஆண்டுகள் கழிந்தன. மவுலிங்க பட்டர் சுத்தமாக மறந்து விட்டிருந்தார். ஏனெனில் புத்தரைப்போல் ஒரு மனிதருடன் இருக்கையில் காலக்கணக்கு யாருக்கு நினைவில் இருக்கும்?

நீங்கள் அவலத்தில் இருக்கிறபோது மட்டுமே உங்களுக்கு காலம் நினைவுக்கு வரும். நீங்கள் ஆனந்தத்தில் இருக்கிறபோது காலம் மறந்துவிடும். காலம் என்பது சார்ந்திருக்கிறது... மிகவும் துன்பத்தில் நீங்கள் இருந்தால் ஒருமணி நேரம் கழிவது பல நாட்கள் கழிவதுபோல் தோன்றுகிறது. நீங்கள் பரவசமாக இருந்தால் பல நாட்கள் கழித்து சில கணங்கள் கழிந்தது போல் தோன்றுகிறது. முழுமையான பரவசத்தில் நீங்கள் இருக்கையில் காலம் நின்றுவிடுகிறது. காலம் மறைந்துவிடுகிறது. ஆவியாகிப் போகிறது. அதன் பின் காலநேரம் என்பதே இருப்பதில்லை. அதன் பின் நீங்கள் காலம் கடந்து வாழ்கிறீர்கள்.

இரண்டு ஆண்டுகள் கடந்தன. மவுலிங்கபட்டர் மறந்து விட்டிருந்தார். ஆனால் புத்தர் அவருக்கு நினைவுபடுத்தினார். திடீரென ஒருநாள் அவர் சொன்னார், "மவுலிங்கபட்டா. 2 ஆண்டுகள் கடந்துவிட்டன. உன் கேள்விகளை நீ கேட்கவேண்டிய நேரம் இதுதான். நான் பதிலளிக்க தயார்."

அதற்கு மவுலிங்கபட்டர் சிரித்தார். புத்தர் சொன்னார், "பைத்தியம் போல சிரிக்கிறாயே, என்ன நடந்தது? அன்றைக்கு மஞ்சுஸ்ரீ சிரித்த சிரிப்பு உனக்கு நினைவிருக்கிறதா?"

மவுலிங்கபட்டர் சொன்னார், "என் கேள்விகள் விழுந்து விட்டன. கேட்க என்னிடம் எதுவுமில்லை. நான் முற்றிலும் அமைதியாகி இருக்கிறேன். நீங்கள் பதிலளிக்கவில்லை இருந்தும் நீங்கள் பதிலளித்திருக்கிறீர்கள்."

இதுதான் உண்மையான பதில். நிசமான ஆசான் உங்கள் கேள்விகளை நீங்களே அறியமுடியாத நுணுக்கமான வழியில் சொல்கிறார். எந்த ரத்தம் சிந்தலும் இல்லாமல் உங்கள் கேள்விகளை அவர் அழித்துக் கொண்டே போகிறார். மெதுமெதுவாக,

பையப்பைய உங்கள் கேள்விகள் அனைத்தின் அபத்தத்தன்மையையும் நீங்கள் உணர்ந்து கொள்பவர் ஆகிறீர்கள். மெதுமெதுவாக வாழ்வின் முற்றிலுமான மருமத்தன்மையை நீங்கள் அறிந்துகொள்கிறீர்கள். வாழ்க்கை ஒரு பிரச்சனை அல்ல. அதை கேள்விகளாக சுருக்க முடியாது. அதற்கு பதில் ஏதும் இல்லை. அது ஒரு புதிர், பதிலளிக்க முடியாதது, தீர்வு காண முடியாதது. அதை நீங்கள் வாழவேண்டி இருக்கிறது. அதை நீங்கள் ருசிபார்க்க வேண்டி இருக்கிறது. அதை நீங்கள் அனுபவிக்க வேண்டி இருக்கிறது. அமைதியிலேயே அது அனுபவமாகிறது.

ஆக தியானத்தின் எல்லா பதில்களும் அடங்கியுள்ளன. ஏனெனில் தியானமே மனதைக் கடந்து செல்லும் கலையாகும். மனம் தன் சலசலப்பு எல்லாவற்றோடும் ஒழிந்துபோனதுமே உங்களால் பார்க்க முடிகிறது; பார்த்தால் நிகழ்கிறது. மேலும் பார்த்தலே பண்பு மாற்றமாகும். இருக்கிறதை உங்களால் பார்க்க முடியும்போது உங்கள் முழு வாழ்க்கையும் அடிப்படை மாற்றம் பெறுகிறது. இனி இருத்தலுக்கு எதிராக உங்களால் வாழமுடியாது. அதற்கு சாத்தியமே இல்லை. இருத்தலுடன் ஒத்திசைந்து நீங்கள் வாழத் தொடங்குகிறீர்கள்.

அறிந்தே, பார்த்துக் கொண்டே நீங்கள் வாழ்வின் அறுதி விதிக்கு எதிராக எப்படி போக முடியும்? யாரும் அந்த அளவுக்கு மூடராக இல்லை. அறியாமையினாலேயே அதற்கு நீங்கள் எதிராக போகிறீர்கள். அதை நீங்கள் அறிகையில் நிங்கள் அதன் இசைவான பகுதியாகவே ஆகி இருக்கிறீர்கள். இருத்தலின் அங்க ஒருமைக்குள் இசைகிறீர்கள். ஒரு அகங்காரம் என்னும் முறையில் நீங்கள் மறைகிறீர்கள்- பனித்துளி பெருங்கடலில் மறைகிறது. பெருங்கடலே ஆகிறது. அதுவே நிறைவு. அதுவே நிறைவேற்றம். அதுவே அறுதி ஆனந்தம், நிர்வாணம்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**என்னிடம் நான்கு சிறப்புக் குணங்கள் உள்ளன; உங்கள் பேருரையில் நான் மிக ஆழமாக தூங்கிவிடுகிறேன், நிறைய சாக்கலேட்டும் ஐஸ்கிரீமும் சாப்பிடுகிறேன். நான் ஒரு ஜெர்மானிய பெண். ஒரு இந்திய சுவாமியுடன் சேர்ந்து சுற்றுவதில் காலத்தை செலவிட்டுக் கொண்டிருக்கிறேன். நான் ஞானமடைய முடியுமா?**

**பிரேம் கயானோ.**

**தூ**க்கம் மிகவும் பயனுள்ளது. ஞானநிலைபேறு தூக்கத்துக்கு மிகவும் அருகில் உள்ளது. சமாதியை தூக்கமென்றே பதஞ்சலி வரையறுத்திருக்கிறார்- ஒரே ஒரு வேறுபாட்டுடன்: அதாவது அது உணர்வுடன் கூடிய தூக்கம். உடல் தூங்குகிறது; மனம் தூங்குகிறது, ஆனால் உனக்குள் அடியாழத்தில் இருக்கும் ஒன்று விழித்தபடியே இருக்கிறது- உன் ஜீவனின் நடுமையத்தில் விழிப்புணர்வின் கனல் ஒன்று இருக்கிறது. எனவே ஆழமான தூக்கம் குறித்து விசனப்பட ஒன்றுமில்லை. அது மிகவும் நல்லதுதான். இந்தப் பேருரைகளும் அதற்கானதுதான்! அடியாழத்தில் கொஞ்சம் உன்னிப்பாக மட்டும் இரு. என் பேருரையை நீ கவனிக்கா விட்டால் அதைப்பற்றி விசனப்பட ஒன்றுமில்லை. உள்ளுக்குள் மட்டும் கொஞ்சம் உன்னிப்பாக இரு. மேலும் என் பேரை. ஒரு ஆழ்துயிலில் நீ வீழ உதவ முடிகிறது என்றால் குறைந்தது ஏதோ ஒன்று நடந்து கொண்டிருக்கிறது. நீ சரியான தடத்தில்தான் இருக்கிறாய். கொஞ்சம் ஆழமான...

ஏராளமான சாக்லேட்டும் ஐஸ்கிரீமும் நீ சாப்பிடுவதும் முற்றிலும் நல்லதே. ஏனெனில் நீ திரும்பி வர முடியாமல் போகலாம். எனவே நின்று தீர்த்துவிடு. நீ விரும்புமளவுக்கு சாக்லேட்டும் ஐஸ்கிரீமும் சாப்பிடு. ஏனெனில் அக்கரையில் ஐஸ்கிரீமும் இல்லை. சாக்லேட்டும் இல்லை- என் அனுபவத்திலிருந்து இதை சொல்கிறேன்! நான் எவ்வளவு சோகமாக உணர்கிறேன் தெரியுமா? இப்போது நான் வருந்துகிறேன்- ஏன் நான் சாக்லேட்டும் ஐஸ்கிரீமும் அதுபோன்ற எல்லாமும் தின்னவில்லை? என்று. ஆனால் உன்னைப் போல் நானும் தூங்கிக் கொண்டிருந்தபோது சுற்றிலும் எங்கும் தீட்சா தென்படவில்லை!

நீ ஜெர்மன் பெண் என்பதற்காகவும் விசனப்படத் தேவையில்லை. நீ கலிபோர்னியப் பெண்ணாக இருந்திருந்தால்தான் பிரச்சனை இருந்திருக்கும். ஜெர்மானியர்கள் ஒரே முனைப்பு உள்ள மக்கள். அவர்கள் அம்புகள்போல் விஷயத்திற்கு நேராகப் போகிறார்கள்; வளைந்து வளைந்து போவதில்லை. அவர்களின் வழி அது அல்ல. அவர்கள் ஒன்றை முடிவு செய்துவிட்டால்- என்ன நேர்ந்தாலும்- கடைசிவரை போய் பார்த்து விடுகிறார்கள்; இங்கு மங்கும் திரும்பிப் பார்ப்பதில்லை. பின்னோக்கிப் பார்ப்பதில்லை. எனவேதான் ஜெர்மானிய மக்களுக்கு நான் அதிக இடம் கொடுக்கிறேன். அது முற்றிலும் சரியே. கலிபோர்னியர்கள்தான் சிக்கலில் இருக்கிறார்கள்.

ஒரு கலிபோர்னிய கார் ஸ்டிக்கர் (ஒட்டி) எச்சரிக்கை; நான் பிரமைகளில் சஞ்சரிக்கிறவன்.

விழிப்புணர்வு பெறுவதைப் பொறுத்தவரை பிரமைகளைப் பற்றி மட்டுமே நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டி இருக்கிறது. ஏனெனில், தான் விழிப்புணர்வு/ஞானம் அடைந்துவிட்டதாக ஒருவர் பிரமை கொள்ள முடியும். கலிபோர்னியர்கள் பலரும் பிரமையில் இருக்கிறவர்களே. உலகின் வேறெந்த பகுதியிலும் இருந்திருக்கிறதை விடவும் இன்றைக்கு கலிபோர்னியாவில்தான் ஞானநிலைபேறு பெற்றவர்கள். அதிகமாக இருக்கிறார்கள். கலிபோர்னியாவில் எல்லா இடத்திலும் நீங்கள் காணமுடிகிற அளவு ஏராளமான ஞானம் பெற்றவர்கள். மனித குலத்தின் வரலாற்றில் வேறெங்கும் இருந்ததில்லை. ஏறக்குறைய ஒவ்வொரு வீட்டிலும் விழிப்புணர்வு பெற்ற மனிதர்களை நீ காணலாம்! எவர் வேண்டுமானாலும் பிரமை கொள்ள முடியும். எனவே நீ ஒரு ஜெர்மானிய பெண் என்பதில் நான் மெத்த மகிழ்ச்சி கொள்கிறேன்.

ஒரே பிரச்சனை. ஒரு இந்திய சுவாமியுடன் நீ சுற்றிப்பொழுது போக்குவதுதான். உன்னிடம் 2 கேள்விகள், கயானோ, எவ்விதமாக வேனும் இந்த இந்திய சுவாமி பரமஹம்ச முக்தானந்தா என அழைக்கப்படுகிறானா? அப்படியானால் அந்த நபரை தவிர்த்துவிடு! மேலும் அவன் தன் பெயரை மறைக்கவும் முயலலாம் என்பதை நினைவில் கொள். மற்றவர்களிடம் அவன் தன் பெயரைச் சொல்வதில்லை. இப்போது எல்லோரும் "யார் இந்த பரமஹம்ச முக்தானந்தா?" என்று அவனைப் பற்றி விசாரித்துக் கொண்டிருக் கிறார்கள். பொழுதுபோக்காக சுற்றித்திரிவது சரிதான். ஆனால் இந்த குறிப்பிட்ட நபரைத் தவிர. ஏனெனில் அவனுடன் இருந்தால் விழிப்படைய சாத்தியமே இல்லை. ஞானமடைந்து பின் இவனுடன் இருந்ததாலேயே மறுபடியும் அஞ்ஞானம் அடைந்த பலரை நான் அறிவேன்!

அவனை எப்படி அடையாளம் கண்டுகொள்வது? அவன் ஜிம்மி கார்ட்டரைப் போல சிரித்துக்கொண்டே இருப்பான்! எனவே அதை நீ கவனிக்கவேண்டும். இப்போது இதை நான் சொல்லிவிட்டதால் அவன் இதையும் மறைக்க முயலலாம். எனவே இரவில் அவன் தூங்கும்போது நீ அவனை கவனிக்கமுடியும். ஏனெனில் இயல்பாகவே அப்போது அவன் முற்றிலும் மறந்துவிடுகிறான். அவன் முகம் ஜிம்மி கார்ட்டருடையதைப் போன்ற அதே காரியவா முகம், அதே முட்டாள்முகம்.

திருமதி கார்ட்டர் பல் வைத்தியரிடம் சோதனை செய்து கொள்ள போனாள்.

"வாய் எப்படி இருக்கிறது?" என்றார் பல்மருத்துவர்.

"அவரா, வார இறுதியில் கோல்ஃப் விளையாட வெளியே சென்றுள்ளார்" என்றாள்.

மற்றபடி எல்லாமே சரியாகத்தான் போய்க் கொண்டுள்ளது. கயானோ. இந்த பரமஹம்ச முக்தானந்தாவைப் பற்றி மட்டும் நீ விழிப்பாய் இருக்க முடிந்தால் மற்ற எல்லாம் உன்னிடம் முற்றிலும் சரியே. உனக்கு ஞானநிலைபேறை நான் உத்திரவாதிக்க முடியும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் தவறான காரணங்களுக்காகவே சந்யாசம் மேற் கொண்டேன். இதயத்திலிருந்து அது வரவில்லை. "எப்படியும் நான் குட்டிச்சுவராகத்தான் போகிறேன் என்பதால் சந்நியாசத்தையும் முயன்று பார்த்துவிடலாமே." ஆனால் முதல் நாளிலேயே தரிசனத்துக்கு பிறகு எல்லாமே மாறியது. இப்போது நான் என் இதயத்தில் உங்களை மென்மேலும் வலிமையாக உணர்கிறேன். மாலை போட்டுக் கொண்டது தியாகமாக இல்லை, மதிப்பாகவும் மகிழ்ச்சியாகவுமே இருக் கிறது. சில பழைய பிரச்சனைகளும் சேர்ந்தே காணாமல் போய்விட்டன. தவறான தருணம் எப்படி சரியானதாக முடிந்தது?**

**யுவி.**

உன் இதயத்தை நீயே உணர்ந்திருக்கவில்லை. அவ்வளவுதான். அது உன் இதயத்திலிருந்து வரவில்லை- வேறொருவர் இதயத்திலிருந்து வந்ததாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தாய். இல்லாவிட்டால் இப்போது சம்பவித்திருப்பது சாத்தியமாகி இருக்காது. பலருக்கும் தம் சொந்த இதய நிலை தெரிந்திருப்பதில்லை. இதற்கான எளிய காரணம். நம் முழு சமுதாயமும் பண்பாடும் கல்வியும் இதயத்தைத் தொடாமல் தாண்டிச் செல்வதற்கே நம்மை பழக்கப்படுத்தி- கட்டுப்படுத்தி உள்ளன; கூடிய சீக்கிரத்தில் தலையை அடையும்படிக்கே நம்மை அவை கோருகின்றன. குறுக்கு வழியை கண்டுபிடிக்க அவை முயலுகின்றன. இதில் இதயம் கண்டுகொள்ளாமல் விடப்படுகிறது. உங்களுக்குள் ஒரு இதயம் எப்போதும் துடித்துக் கொண்டிருக்கிறது

என்னும் உண்மையை உங்கள் ஆற்றல்கள் முற்றிலும் மறந்து-புறக்கணித்து விட்டன. ஆயின் உங்கள் இதயமும் உங்கள் உடலியலின் பகுதியே என்றே உடலியல் அறிவர்கள் சொல்லிக்கொண்டே போகிறார்கள். ஆம். அவர்கள் கூறுவது சரியே. இதயத்துக்கு 2 அம்சங்கள் உள்ளன: வெளி அம்சம் உடலின் பகுதியாகும். உள் அம்சம் உங்கள் ஆன்மிகத்தின் பகுதியாகும். வெளி அம்சத்தை மட்டுமே உடலியல் அறிவர்கள் கவனிக்கிறார்கள். ஆனால் உள் அம்சமும் வேலை செய்துகொண்டுதான் உள்ளது. அதை நீங்கள் உணர்ந்திராத போதும் அது உங்களுக்குள் தொடர்ந்து வேலை செய்கிறது. உங்களின் வாழ்வை பலவழிகளிலும் அது பாதித்துக் கொண்டுதான் இருக்கிறது.

எனவேதான் பல சமயங்களிலும் நீங்கள் ஒருபோதும் விரும்பியிராத ஒன்று நிகழ்ந்திருப்பதை நீங்கள் உணர்கிறீர்கள். ஒரு பெண்ணிடம் நீங்கள் காதல் வயப்படுகிறீர்கள். உங்கள் மனம் கூறுகிறது. "இது சுத்த பைத்தியக்காரத்தனம். நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன்?" அது பகுத்தறிவற்றதாக தோன்றுகிறது-உங்கள் மனத்துக்கும் பகுத்தறிவுக்கும் அது ஒவ்வாததாக இருக்கிறது. இருந்தும் மனத்தைவிட ஆழமான ஒன்று உங்களை இழுக்கிறது. அதை உங்களால் எதிர்க்க முடியவில்லை. உங்கள் பகுத்தறிவு, உங்கள் மனம், உங்கள் விஞ்ஞான பயிற்சி, உங்கள் சிந்தனை எல்லாம் இருந்தும் நீங்கள் காதல் வயப்படுகிறீர்கள். "என்ன மடத்தனத்தை செய்துகொண்டிருக்கிறாய்? இது சரியல்ல. இப்படி நீ நடந்து கொள்ளக்கூடாது" என மனம் சொல்லிக்கொண்டே இருக்கிறது. அதற்கு எதிராக 1001 சாக்குப்போக்குகளை அது கண்டுபிடிக்க முடிகிறது. ஆனால் அதனினும் ஆற்றல் மிக்க ஒன்று. அதனினும் உள்ளார்ந்த ஒன்று. அதனினும் ஆழமான ஒன்று வேலை செய்கிறது; அதன் முன் மனம் முற்றிலும் வலிமையற்றதாக உணர்கிறது. பின் மனம் மிக புத்திசாலித்தனமாக- தந்திரமாக கூறுகிறது: "சரி, முயன்று பார்ப்போம்" -ஒருபோதும் அது தோல்வியை ஒத்துக் கொள்வதில்லை.

இதுதான் உனக்கும் நிகழ்ந்திருக்கிறது.உன் மனம் உன்னிடம் கூறுகிறது. "எப்படியும் நான் குட்டிச் சுவராகத்தான் போகிறேன் என்பதால் சந்நியாசத்தையும் முயன்று பார்த்துவிடலாமே." ஆழத்தில் ஏதோ ஒன்று கலக்கி உள்ளது. ஆனால் மனம் அதை ஒப்புக் கொள்வதில்லை. ஏனெனில் தன்னைவிட ஆழமான எதுவும் இருக்கிறதா ஏற்க அது விரும்புவதில்லை. தன் தோல்வியை அது ஒத்துக் கொள்ளாது.

முல்லா நசுருதீனைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் தன் கழுதையில் மிக வேகமாக போய்க் கொண்டிருந்தார். கழுதை ஓட்ட ஓட்டமாக ஓடிக் கொண்டிருந்தது. மக்கள் கேட்டார்கள், "நசுருதீன், எங்கே போகிறீர்?" அவர் சந்தைக் கடையின் வழியாக போய்க்கொண்டிருந்தார்.

அவர் சொன்னார், "என்னைக் கேட்காதீர்கள், கழுதையை கேளுங்கள்!"

"இது விசித்திரமாயிருக்கிறதே!" என்றார்கள் அவர்கள்.

நசுருதீன் சொன்னார், "இதில் விசித்திரம் ஏதுமில்லை. இந்த கழுதை வீம்பு பிடித்த கழுதை. எனவே நான் அதை ஓட்ட முற்படும் போதெல்லாம் என்னுடன் அது முரண்டு பிடிக்கும்- நான் சொல்லும் பாதையில் போகாது. எனவே, நான் சாலையில் தனியாக இருக்கும்போது இதை அடித்து உதைத்து நான் விரும்பும் இடத்துக்கு ஓட்டிச் செல்கிறேன். ஆனால் சந்தைப் பகுதியில் மக்கள் கூடி விடுகிறார்கள். கூட்டம் என்னை பார்த்து சிரிக்கத் தொடங்குகிறது. "உன் சொந்த கழுதையையே உன்னால் அடக்க முடியவில்லை!" என்கிறது. அதிக கூட்டத்தை கண்டதும் கழுதையும் அதிக பிடிவாதம் பிடிக்கிறது. இதிலிருந்து ஒரு பாடத்தை நான் கற்றுக் கொண்டிருக்கிறேன். சந்தைக்கடை வழியாக போகும்போது அது போகும் இடத்துக்கே நானும் போகிறேன். நகரைத் தாண்டியதும் அந்த முட்டாளை நான் கவனித்துக்கொள்கிறேன். ஆனால் சந்தையில் என்னை அது ஓட்டிச் செல்ல அனுமதித்துவிடுகிறேன். குறைந்தது நானே எஜமானாயிருக்கிறேன் என்ற போலித் தோற்றத்தையாவது முழு நகருக்கும் அது ஏற்படுத்துகிறதே!"

இதுதான் மனிதன் வழி.

முல்லா நசுருதீன் தன் மகனிடம் சொல்லிக்கொண்டிருந்தார். "அமைதியாக உட்கார். சத்தம் போடாதே!"

ஆனால் மகன் கவனிக்கவில்லை. அமைதியாக இருக்குமாறு அவர் சொல்லச் சொல்ல, சத்தம் போடாதே- உன் அப்பா சொல்வதைக் கேள் என அவர் சொல்லச் சொல்ல, பையன் அதிக ரகளை செய்தான்.

கடைசியில் நசுருதீன் சொன்னார், "சரி, இப்போது நான் சொல்வதைக் கேட்காதே: இந்த ஆணையை உன்னால் எப்படி மீற முடிகிறது என்று பார்க்கிறேன்! நான் சொல்வதைக் கேட்காதே- இது என் ஆணை! இப்போது எப்படி நீ என் பேச்சைக் கேட்காமல் போவாய் என்று பார்க்கிறேன்."

இதுதான் மனத்தின் தந்திரம். மனத்துக்கு தெரியும். முதலில் அது இதயத்தை மேற்கொள்ள முயலுகிறது. அதனால் முடியாவிட்டால் பின் அது தனக்குத்தானே சொல்லுகிறது. "முயன்றுபார்ப்போம்- அதில் என்ன தவறு? எத்தனையோ விஷயங்களை நாம் முயன்றிருக்கிறோம்."

ஆனால் யுலி, உனக்கு தெளிவாக தெரியாமலே உன் அடியாழத்துக்குள் இருக்கும் ஏதோ ஒன்று உன்னை சந்நியாசத்துக்கு இழுக்கிறது. அது ஒரு காந்த சக்தி, உன்னிடம் மனம் இருந்தாலும், இதயம் இல்லாதிருந்தும் நிச்சயமாக நீ அதற்குள்ளேயே இருக்கிறாய். இல்லாவிட்டால் இப்போது சம்பவித்திருப்பது ஒருபோதும் சம்பவித்திருக்காது.

ஆனால் முதல் நாளிலேயே தரிசனத்துக்குப் பிறகு எல்லாமே மாறியது என்கிறாய் நீ.

இதயம் மலர்ந்துள்ளது, பூத்துள்ளது என்பதையே இது காட்டுகிறது. முதல்முறையாக இதயத்தைப்பற்றிய ஒரு செய்தியை கேள்விப்படுகிறாய். முதல்முறையாக அதற்கொரு வாய்ப்பை தந்திருக்கிறாய். முதல் முறையாக தர்க்கத்துக்குப் பதில் அன்பை நீ கவனித்திருக்கிறாய். முதல் முறையாக வெறும் சிந்தனாவாதியாக இருப்பதைவிட கொஞ்சம் கூடுதல் கவிதைத்தன்மை உடையவளாக இருந்திருக்கிறாய். முதல்முறையாக நீ உன் கணக்கை எல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டு மர்மமானதாய் கணிக்க முடியாததாய் இருக்கும் ஒன்றுக்குள் பிரவேசித்திருக்கிறாய். முதல் முறையாக நீ கூட்டிக் கழித்து ஆராயாமல் இருந்திருக்கிறாய்.

நீ சொல்லுகிறாய்: இப்போது நான் என் இதயத்தில் உங்களை மென்மேலும் வலிமையாக உணர்கிறேன்.

விதை அங்கு இருந்திருக்க வேண்டும். ஆனால் அந்த விதையை உன்னால் பார்க்க முடியவில்லை. அது முளைவிடும்போதே உன்னால் பார்க்க முடிகிறது. மண்ணிலிருந்து இலைகள் வெளிவர தொடங்கும் போதே அது கண்ணுக்கு தெரிகிறது. ஆனால் விதை இல்லாமல் இலைகள் வர முடியாது. இப்போது நீ இலைகளைக் காண்கிறாய். பின்னோக்கிப் பார்த்தால் ஒரு விதை இருந்திருக்க வேண்டும் என்பதற்கு அவையே சான்றாய் உள்ளன. நீ அதனை உணராது இருந்திருக்கிறாய். இப்போது அந்த இலைகள் அவற்றை நீ அறியுமாறு செய்துள்ளன.

மாலை போட்டுக் கொண்டது தியாகமாக இல்லை. மதிப்பாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது.

இலைகள் மட்டுமில்லை, மொட்டுகளும் சிறு பூக்களும் கூட அரும்பிக் கொண்டுள்ளன.

சில பழைய பிரச்சனைகளும் சேர்ந்தே காணாமல் போய்விட்டன.

அதுதான் இதயத்தின் அற்புதம். மனத்தால் தீர்க்க முடியாத சில பிரச்சனைகளை இதயம் எளிதாக அகற்றிவிடுகிறது. மனம் எப்போதும் வட்டமாகவே போய்க்கொண்டிருக்கிறது. இதயம் இந்த வட்டங்களை ஒரே தாண்டில் தாண்டி விடுகிறது- எப்போதும் உங்களை துன்புறுத்தி வந்த பிரச்சனைகளையும் திடீரென கடந்துவிடுகிறது. திடீரென அவை பொருத்தமற்றதாகி விட்டதை நீங்கள் பார்க்கிறீர்கள். அவற்றைத் தீர்க்கத் தேவையில்லை. அவற்றைப்பற்றி கவலைப்படக் கூடத் தேவையில்லை. அவை உங்களுக்கு முக்கியமில்லை. அவை உங்களுக்கு சொந்தமானதில்லை என்பதை திடீரென நீங்கள் பார்க்கிறீர்கள்- இது. ஒருவர் தூக்கத்தில் இருந்து விழித்ததுமே கனவில் அவர் எதிர்கொண்டிருந்த துன்பங்கள் மாயமாய் மறைந்து விட்டதைப் போல், திடீரென அர்த்தமிழந்து விட்டதைப் போல் இருக்கிறது. அதுதான் நடந்திருக்கிறது யுலி.

இப்போது நீ சொல்கிறாய்: சில பழைய பிரச்சனைகளும் சேர்ந்தே மாயமாய் மறைந்துவிட்டன. தவறான தருணம் எப்படி சரியானதாக முடிந்தது?

அது தவறான தருணமல்ல என்பதையே இது நிரூபிக்கிறது. அது சரியான தருணமாகவே இருந்தது. ஆனால் நீதான் அதை உணர்ந்திருக்கவில்லை. இப்போது அதை நீ அறிகிறாய். இனி அதற்குள் உணர்வுடன் ஆழமாகச் செல். உணர்வின்றியே இவ்வளவு அதிகமாய் சம்பவித்ததென்றால், இருட்டுக்குள் துழாவியதிலேயே இவ்வளவு கிடைத்துள்ளது என்றால், உணர்வுடன் நீ இயங்கத் தொடங்கினால் உன் வளர்ச்சிக்கு அபரிமித வாய்ப்பு இருக்கிறது. நம்பிக்கைக்கு மிகுந்த இடமிருக்கிறது. மாபெரும் பூக்கள் காத்திருக்கின்றன. வசந்தம் வந்துள்ளது. முதல் பூக்களை நீ பார்த்திருக்கிறாய். இனி விரைவிலேயே எல்லா மரங்களும் பூத்துக் குலுங்கும் உன் முழு ஜீவனும் வாசம் வீசும்.

ஆனால் ஒரு தவறான முடிவிலிருந்து வெளியேறி இருக்கிறாய் என்னும் கருத்தை கைவிடு. அது தவறானதல்ல. அது தவறானது என உன் மனம்தான் நினைத்துக் கொண்டிருந்தது. ஆனால் உன் இதயத்துக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. மனதைவிட நன்றாக இதயமே எப்போதும் அறிந்திருக்கிறது.

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான்கு வெவ்வேறு மொழிகளில் [பாரசீகம், ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன்] நதி சிந்தித்துக்கொண்டிருக்கும் மனதுக்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?**

**சிராதேஸ்.**

**நீ** ஒரு மொழியில் பேசினாலும் ஒரு டஜன் மொழிகளில் பேசினாலும் எந்த வேறுபாடும் இல்லை. மனம் அதேதான். அந்த மொழிகள் எல்லாம் ஒரே மனதில் இருந்தே பேசப்படுகின்றன- ஒரே மனதையே பேசுகின்றன. ஒரு பித்தன் பாரசீகத்தில் பேசினால் அவன் ஆங்கிலத்திலோ பிரெஞ்சிலோ. ஜெர்மனிலோ பேசுவதை விடவும் அது மாறுபட்டிருக்கும் என்று நினைக்கிறாயா? பித்தன் பித்தன்தான். எந்த மொழியில் பேசினாலும் அவன் பித்தனே.

விழிப்புணர்வடைந்தவர் விழிப்புணர்வடைந்தவரே. எந்த மொழியிலும் அவர் விழிப்படைந்தவராகவே இருப்பார். அவர் பேசினாலும் பேசாவிடினும் அவர் ஒரேமாதிரியாகவே இருக்கிறார். நான்கு மொழிகள் என்பது சற்று அதிக சிக்கலானதுதான். ஆனால் அடிப்படை பிரச்சனை அதேதான். உங்கள் மனம் ஒன்று. அதன் நோய் ஒன்று. அந்த நோயை நீங்கள் 4 பாஷைகளில் வெளிப்படுத்த முடிகிறது. அவ்வளவுதான். ஆனால் வெளிப்பாடு மட்டுமே வேறு; வேர் வேறாயிருக்க முடியாது.

ஒருநாள் ஜானி ஃபக்ஃபாஸ்டர் பள்ளிக்கூடத்துக்கு போனான். அரிச்சுவடியில் மீள்பார்வை நடத்த விரும்பினாள் ஆசிரியை. அவள் மாணவர்களிடம் கூறினாள், "அரிச்சுவடியில் இருந்து ஒரு எழுத்தை சொல்வேன்; அந்த எழுத்தில் தொடங்கும் ஒரு வார்த்தையை நீங்கள் சொல்ல வேண்டும். A யில் இருந்து தொடங்குவோம்."

ஜானி ஃபக்ஃபாஸ்டர் தன் கையை உயர்த்தி கத்தினான், "எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்!"

ஜானியில் மனம் அசிங்கமானது என்பது ஆசிரியைக்கு தெரியும். அவள் தனக்குள் நினைத்தாள், "இவன் Asshole (குண்டி) என்று சொல்லி வகுப்பையே தர்மசங்கடத்தில் ஆழ்த்துவான்". எனவே அவள் வேறொரு பையனைக் கேட்டாள். அவன் "Apple" என்றான். ஆசிரியை "B" என்றாள். மறுபடியும் ஜானி ஆவேசமாக கையை தூக்கி ஓலமிட்டான். "தயவுசெய்து டீச்சர். என்னை கேளுங்க டீச்சர், எனக்குத் தெரியும்!" ஆசிரியை அவன் "Bastartd" (வேசிமகன்) என்று

சொல்லுவான் என கற்பனை செய்துகொண்டாள். எனவே இன்னொரு பையனிடம் கேட்டாள். அவன் "Boy" என்றான். இப்படியே ஆசிரியை "R" வரை வந்துவிட்டாள். இந்த சமயத்தில் ஜானி தன் இருக்கையில் மேலும் கீழும் எம்பிக் குதித்துக் கொண்டிருந்தான். அவனுடைய ஆர்ப்பாட்டம் பெரிதாக இருந்தது. எனவே இனியும் அவனை தவிர்க்க முடியவில்லை. மேலும் "R" என்ற எழுத்தில் தொடங்கும் அசிங்கமான வார்த்தை என்ன இருக்கமுடியும்? "என்று நினைத்தாள். எதுவும் அவள் மனதுக்கு தோன்றவில்லை. எனவே அவள் ஜானியை அழைத்தாள்.

"Rat...." எலி என்றான் அவன். அப்பாடா என்று பெருமூச்சு விட்டாள் ஆசிரியை, பின் புன்முறுவலுடன் சொன்னாள், "வெரிகுட். ஜானி!"

அப்போது ஜானி தொடர்ந்து சொன்னான், "......அதற்கு ஒரு fucking வால் இருந்து, தரையில் அது பீ பேண்டது!"

உன் மனதை உன்னால் தவிர்கக முடியாது. அது எப்படியும் தலைகாட்டும். எந்த மொழியானாலும் சரியே- நான்கு மொழியானாலும் 40 மொழியானாலும் சரியே. ஆம், இதில் சிரமம் கொஞ்சம் அதிகம்தான். சிராதெஸ். ஆனால் மனதால் முடியும். அதன் உள்ளாற்றலை எண்ணினால் தலையே சுற்றும்.

புரிந்துகொண்டவர்கள் மனதின் உள்ளியக்கத்தை ஆராய்ந்த வர்கள் சொல்லுகிறார்கள். ஒரே ஒரு மனிதமனம் உலகிலுள்ள அனைத்து நூலகங்களின் சரக்கையும் தனக்குள் அடக்க முடியும். அதன் திறன் ஏறக்குறைய எல்லையற்றது. ஆனால் நீ ஒரு முட்டாளா யிருந்தால், எழுத்தில் உள்ள எல்லாவற்றையும் நீ அறிந்திருந்தாலும், நடமாடும் பல்கலைக்கழகமாகவே பிரிட்டானிக்கா கலைக் களஞ்சியமாகவே நீ ஆகியிருந்தாலும் அதனால் பெரிய மாறுபாடு ஒன்றும் இருக்காது; நீ தொடர்ந்தும் ஒரு முட்டாளாகவே இருப்பாய். இப்போது உன் மடத்தனம் கொஞ்சம் கூடுதலாக அலங்கரிக்கப்பட்ட மடத்தனமாகவே இருக்கும். படிப்பாளிகள் அப்படித்தான் இருக்கிறார்கள். பெரிய பட்டங்கள், சான்றிதழ்கள், விருதுகளால் அலங்கரிக்கப்பட்ட முட்டாள்கள் அவர்கள். தமக்குத் தெரியும் என அவர்கள் நடிக்கமுடியும். மற்ற எவரையும் விட அதிக தர்க்கநியாயபூர்வமாகவே அவர்கள் நடிக்க முடியும். ஏனென்றால் அவர்களுக்கு அதிக தகவல்கள் தெரிந்தே இருக்கிறது- ஆனால் அடியாழத்தில் அதே இருட்டுதான்; அதே உணர்வின்மைதான் உள்ளது.

நான்கு வெவ்வேறு மொழிகளில் சிந்தித்துக் கொண்டிருக்கும் மனத்துக்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்று கேட்கிறாய்.

எல்லாம் ஒன்றுதான்- சிந்தனை ஒன்றேதான். நோய் அதேதான். எனவே மருந்தும் வெவ்வேறல்ல: ஒரு மொழியில் இருந்து விடுபட தியானம் உனக்கு உதவ முடியும். 4 மொழிகளில் இருந்து அல்லது 400 மொழிகளில் இருந்து விடுபடவும் தியானம் உனக்கு உதவ முடியும். தியானம் உன்னை எடுத்துச்செல்லும் வெளியில், மனம் அதன் அறிவோடு சேர்ந்து பின்னால் விடப்படுகிறது. திடீரென ஒரு அறிந்திராத நிலையில் இருந்து அப்பாவி நிலையில் இருந்து- நீ இயங்கத் தொடங்குகிறாய். அந்த அப்பாவித்தனம் அழகானது, அந்த அப்பாவித்தனம் நறுமணமுள்ளது. அந்த நிர்மலமே சமயத்தின் சாரம் ஆகும்.

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் ஏன் சாவுக்கு மிகவும் பயப்படுகிறேன்?**

**சின்மயோ.**

**வா**ழ்வு இன்னதென அறியாதிருப்பதால்தான் சாவுக்கு நாம் பயப்படுகிறோம். வாழ்வை நீ அறிந்தால் சாவு பயம் தன்னால் அகன்று விடும். பிரச்சனை சாவைப் பற்றியதே அல்ல. வாழ்வே பிரச்சனை. வாழ்க்கையை நமக்குத் தெரியாததால்தான் அது ஒருநாள் முடியப்போகிறது என அஞ்சுகிறோம். நாம் இன்னும் வாழவே தொடங்கவில்லை. வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியாமலேயே அதை நீ வாழ்வது எப்படி முடியும்? நீ வாழ்வது இல்லை, அன்பு செய்வதும் இல்லை. வெறுமனே உடம்பில் உயிரை வைத்தபடி இழுத்துக்கொண்டே கிடக்கிறாய், ஒன்றைமட்டும் உறுதியாக நீ அறிந்திருக்கிறாய்: சாவு ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. எனவே பயம் வருகிறது. பயம் வருவது இயல்பானதே. ஏனெனில் சாவானது கதவை என்றென்றைக்குமாக சாத்திவிடுகிறது. வாழ்க்கை என்னவாக இருந்தது என்பதை ஒருபோதும் அறியாமலேயே நீ எடுத்துக் கொள்ளப்பட்டு விடுகிறாய். உனக்கு ஒரு சந்தர்ப்பம்- மாபெரும் சந்தர்ப்பம் தரப்பட்டது. அதை நீ தவறவிட்டுவிட்டாய்.

எப்போதும் நாளைக்கு நாளைக்கு என்று தள்ளி வைத்தபடியே போகிறாய். "நாளையில் இருந்து நான் வாழப் போகிறேன்" என்கிறாய். ஆனால் அதேபோது கூடவே,பயமும் இருக்கிறது:

"நாளையைப் பற்றி யார் அறிவார்? நாளையே சாவு வரலாம்: அப்புறம்?" இதையும் நீ அறிகிறாய். ஆக வாழ்வதை நாளைக்கு ஒத்தி வைக்கிறாய். ஆனால் நாளை என்பது ஒருபோதும் இல்லை- அப்படியானால்? உடனே பயம் எழுகிறது. ஆனால் இந்தக் கணத்தில் சரியாக வாழுவது எப்படி என்பதை மட்டும் நீ அறியவில்லை. இந்தக் கணத்தில் எப்படி வாழ்வது என்பதைப் பற்றி ஒருவரும் உனக்குச் சொல்வதில்லை.

மதவாதிகள், அரசியல்வாதிகள், பெற்றோர்கள் யாவரும் உங்களுக்கு நாளைகளைப் பற்றியே சொல்லித் தருகிறார்கள். நீங்கள் குழந்தையாக இருக்கும்போது அவர்கள் சொல்கிறார்கள். "நீ வளர்ந்து வாலிபனானதும் வாழ்க்கை இன்னதென அறிந்து கொள்வாய்." நீங்கள் இளைஞராக இருக்கும்போது அவர்கள் கூறுகிறார்கள், "இளைஞர்களுக்கு மூளை கிடையாது- இளமை என்பதே மடத்தனமானது. வயதில் முதிர்ந்ததும் நீ புரிந்துகொள்வாய்." உங்களுக்கு கிழவயதானாலும் அவர்கள் கூறுகிறார்கள். "நீ முடிந்தாய். இனி மிச்சம் ஒன்றுமில்லை. பயன்படுத்திய காலித் தோட்டாவாக நீ இருக்கிறாய்" இது ஒரு விசித்திரமான உலகம்!

என் குழந்தைப் பருவத்தில் ஒவ்வொரு குழந்தையின் வாழ்விலும் ஏற்படுகிற மாதிரியே- மூத்தோர் யாவரிடமும் நான் ஆயிரக்கணக்கான கேள்விகளை கேட்பது வழக்கம். அது அவர்களுக்கு ஒரு பெரிய சித்திரவதையாகவே இருந்தது. ஏனென்றால் என் கேள்விகள் அவர்களுக்கு தர்மசங்கடத்தை அளித்தன. எனவே மிகவும் சுலபமான வழி: "நீ ரொம்பவும் சிறுவனாக இருக்கிறாய். பொறு."

என் அப்பாவின் நண்பர்களில் ஒருவர் நகரம் முழுவதிலும் ஒரு மகான் என அறியப்பட்டிருந்தார். என் அப்பாவுடன் நான் அவரிடம் போவது வழக்கம். அவரை நான் அதிக அளவில் நச்சரிப்பேன். அவரும் எப்போதும் கூறுவார். "பொறு. நீ ரொம்பவும் சின்னப் பையன். உன் கேள்விகளோ அதிக சிக்கலானவை. நீ கொஞ்சம் வளர்ந்தவுடன் உன்னால் புரிந்துகொள்ள முடியும்."

நான் அவரிடம் சொன்னேன். "நீங்கள் தயைசெய்து, எந்த ஆண்டில் நான் பெரியவன் ஆவேன் என்பதை எழுத்தில் கொடுங்கள். அப்போது வந்து இந்த கேள்விகளை நான் கேட்கிறேன். ஏனெனில் இது ஒரு சூழ்ச்சியான முறையாக உள்ளது: நான் கேட்கிற போதெல்லாம்- குறைந்தது 5 ஆண்டுகளாக நானும் கேட்டுக் கொண்டே இருக்கிறேன்- நீங்கள் ஒரே மாதிரி நீ வளர்ந்ததும்..." என்றே சொல்கிறீர்கள். இதையே என்னிடம் நீங்கள் மீண்டும்

மீண்டும் சொல்லிக் கொண்டிருக்க முடியும்! எனவே அதை ஒரு தாளில் எழுதி கையெழுத்துப் போட்டுக் கொடுங்கள்."

அவர் கை நடுங்குவதை நான் பார்த்தேன். நான் சொன்னேன். "ஏன் உங்கள் கை நடுங்குகிறது? ஏன் நீங்கள் பயப்படுகிறீர்கள்? எந்த வயதில் ஒரு மனிதனால் புரிந்துகொள்ள முடியும் என்பது உங்களுக்கு தெரியுமானால் அதை எழுதிக் கொடுங்கள். உதாரணமாக '20 வயதில்' என்பீர்களானால் 21 வயதில் நான் வந்து கேட்பேன். நான் உங்களுக்கு ஒரு வருடம் கூடுதலாகத் தருகிறேன்!"

உடனே அவர், "21 வயது" என எழுதினார்.

உடனே நான் சொன்னேன். "அப்படியானால் சரி. எனக்கு 22 வயதான பின்பே நான் வருவேன்."

அவர் நினைத்திருக்க வேண்டும், "குறைந்தது இப்போதைக்கு பிரச்சனை தீர்ந்தது. யாருக்குத் தெரியும்? இவனுக்கு 22 வயதான பின்...?" அப்போது எனக்கு ஏறக்குறைய 14 வயதாக இருக்க வேண்டும்.

எனக்கு சரியாக 22 ஆனதுமே நான் அவரிடம் போனேன். ஒரு கூட்டத்துடன் போனேன்- பலரையும் என்னுடன் அழைத்துக் கொண்டு போயிருந்தேன். "வாரும் என்னுடன்" என்றேன். அவர் கையெழுத்திட்ட கடிதம் என்னிடம் இருந்தது. "இது உமது கடிதம்தான். இப்போது விடைகூறும்" என்றேன்.

அவர் சொன்னார், "நீ ஒரு பெரிய தொல்லையாக இருக்கிறாய்! ஏன் இவர்கள் எல்லாரையும் சேர்த்துக் கொண்டு வந்திருக்கிறாய்?"

நான் சொன்னேன், "நீர் என்னை ஏமாற்றிக்கொண்டே வந்திருக்கிறீர் என்பதற்கு சாட்சிகள் இவர்கள். மேலும் நீர் மட்டும் என்னை ஏமாற்றி வரவில்லை. உலகம் முழுவதிலும் இதுதான் நடந்துகொண்டே இருக்கிறது. வயதில் மூத்த ஒவ்வொருவரும் வயதில் இளையவர்களை ஏமாற்றிக் கொண்டே இருக்கிறார். "நாளை" என்று அவர்களிடம் சொல்கிறார்- நாளையோ ஒருபோதும் வருவதில்லை. இப்போது எனக்கு 22 நடக்கிறது. நீர் 21 என்று எழுதியிருக்கிறீர். ஒரு வருடம் உமக்கு ஏன் சேர்த்து தந்தேன் என்றால் ஒருவேளை எனக்கு புத்தி குறைவாக இருந்து அதுவரை கொஞ்சம் கூடுதல் காலம் எடுத்துவிட்டால் என்ன செய்வது என்பதற்காகத்தான். ஆனால் இப்போது நான் நகரப் போவதில்லை. இங்கேயே இருப்பேன். உன் கேள்விகள் எல்லாவற்றுக்கும் விடை வேண்டும்."

அவர் சொன்னார், "உண்மையைச் சொன்னால், எனக்கு எதுவுமே தெரியாது. தயவுசெய்து மறுபடியும் என்னிடம் கேட்காதே.

என்னை மன்னித்துவிடு. நீ சொல்வது சரிதான்- நான் உன்னிளிடம் பொய்தான் சொல்லிக் கொண்டிருந்தேன்."

"ஒரு குழந்தையிடம் ஏன் நீங்கள் பொய் சொன்னீர்கள்?" என்று அவரைக் கேட்டேன். "அப்பாவியாக உங்களை முற்றிலும் நம்பி கேள்வி கேட்கும் ஒரு குழந்தையிடம் பொய் சொல்ல உங்களால் எப்படி முடிந்தது? அவனை நீங்கள் ஏமாற்றி விட்டீர்கள்! கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது உங்களுக்கே தெரியவில்லை. ஆனால் நீங்கள் என்னிடம், கடவுள் இருக்கிறார் என்றும் பின்னர்தான் அதை என்னால் புரிந்துகொள்ள முடியும் என்றும் சொன்னீர்கள். ஆனால் உங்களுக்கே விளங்கவில்லை என்பது எனக்கு அப்போதே தெரிந்திருந்தது. கடவுளைப் பற்றி உங்களுக்கு எதுவும் தெரியவில்லை. ஒரு கிளிப்பிள்ளை போலவே வெறுமனே ஒப்பித்துக் கொண்டிருக்கிறீர்கள்."

ஆனால் இதுதான் நிலைமையாக இருக்கிறது. ஆசிரியர்களுக்குத் தெரிவதில்லை. பேராசிரியர்களுக்கு தெரிவதில்லை. புரோகிதர்களுக்கும் தெரிவதில்லை. தெரியாமலேயே அவர்கள் தமக்குத் தெரியும் என்று நடித்துக்கொண்டே போகிறார்கள். மொத்த தந்திரமும் ஒரே ஒரு சூழ்ச்சியையே கொண்டிருக்கிறது- அதாவது தள்ளிவைத்துக்கொண்டே போவது. "காலம் கனிந்ததும் நீயும் அறிவாய்." உண்மையில் அது ஒருபோதும் கனிவதில்லை. நீங்கள் ஒருபோதும் வளர்வதுமில்லை. மேலும், ஓரளவுக்கு உங்களுக்கும் வயதானதும். உங்கள் சொந்த முகத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, அதே விஷயங்களையே உங்கள் குழந்தைகளிடமும் நீங்கள் சொல்லத் தொடங்குகிறீர்கள்.

உங்கள் குழந்தைகளை நீங்கள் நேசித்தால், உங்கள் தம்பி தங்கையரை நீங்கள் நேசித்தால், ஒருபோதும் அவர்களிடம் பொய்களைச் சொல்லாதீர்கள். ஆயின் உங்கள் மதம் முழுவதுமே பொய்களால் தான் நிரம்பியுள்ளது. நேர்மையாக இருங்கள். "எனக்குத் தெரியாது. நானும் தேடிக் கொண்டிருக்கிறேன்" என்று அவர்களிடம் சொல்லுங்கள். இதை நாளைக்கென ஒத்தி வைக்காதீர்கள்.

நமது வாழ்வு முழுவதுமே ஒரு ஒத்திவைப்பாகவே இருக்கிறது. எனவேதான் சாவைக் குறித்து பயம் வருகிறது: இன்னும் நான் தெரிந்து கொள்ளவில்லை. அதற்குள் சாவு நெருங்குகிறதே."

சாவுக்கு பயப்படுவது, நீ மட்டுமல்ல சின்மயோ.

"நான் ஏன் சாவுக்கு மிகவும் பயப்படுகிறேன்" என்கிறாய்.

எல்லோருமே சாவுக்கு பயப்படுகிறார்கள்தான். அதற்கான ஒரே காரணம் வாழ்வை இன்னும் நாம் ருசிபார்க்கவில்லை. வாழ்வு இன்னதென அனுபவித்தறிகிறவன் ஒருபோதும் சாவுக்கு அஞ்சுவதில்லை. அவன் சாவை வரவேற்கிறான். சாவு வரும்போது அதை அவன் அணைத்துக் கொள்கிறான். சாவைத் தழுவிக் கொள்கிறான் அவன், சாவை அவன் வரவேற்கிறான், சாவை ஒரு விருந்தாளியைப் போல் எதிர்கொள்கிறான். வாழ்வை அறிந்திராதவனுக்கு சாவு ஒரு எதிரிதான். வாழ்வை அறிந்தவனுக்கு வாழ்வின் இறுதி உச்சமே சாவு ஆக இருக்கிறது.

ஆனால் ஒவ்வொருவரும் சாவுக்கு பயப்படுகிறார்கள். இதுவும் ஒரு பரம்பரை தொற்று வியாதியாகி உள்ளது. உங்கள் பெற்றோர்கள் சாவைக் கண்டு பயப்படுகிறார்கள். உங்கள் அண்டை வீட்டார் சாவைக் கண்டு பயப்படுகிறார்கள். தம்மைச் சுற்றிலும் இருக்கும் இந்த ஓயாத பயத்தால் சிறு குழந்தைகளும் பீடிக்கப்படத் தொடங்குகிறார்கள். எல்லோருமே சாக பயப்படுகிறார்கள். சாவைப் பற்றி பேசுவதைக்கூட மக்கள் விரும்புவதில்லை.

உலகில் 2 விஷயங்கள் மட்டுமே விலக்கப்பட்டவையாக இருந்து வந்துள்ளன: காமம், மரணம். ஏன் காமத்தையும் மரணத்தையும் பற்றி பேசக் கூடாது- தவிர்க்க வேண்டும்-ஏன் விலக்கிவைக்க வேண்டும் என்பது மிக வினோதமானதே. அவை இரண்டும் ஆழமாக தொடர்புடையவையாக உள்ளன. காமம் வாழ்வைப் பிரதிநிதித்துவப் படுத்துகிறது. ஏனெனில் எல்லா உயிர்வாழ்வும் காமத்திலிருந்தே உண்டாகின்றன. சாவு முடிவை பிரதிநிதித்துவப்படுத்துகிறது. இரண்டுமே தடை செய்யப்பட்டவை யாக உள்ளன- காமத்தைப்பற்றி பேசக்கூடாது, சாவைப் பற்றிப் பேசக்கூடாது.

மேலும் உலகில் இரண்டுவித கலாச்சாரங்கள் மட்டுமே இருந்து வந்துள்ளன. ஒருவகையானது காமத்தை விலக்கமானதாக கொள்ளும் கலாச்சாரங்களை கொண்டது. அவர்கள் சாவைப்பற்றிப் பேசமுடியும். உண்மையில் அவர்கள்தான் சாவைப்பற்றி அதிகமாக பேசுகிறார்கள். உதாரணமாக இந்தியாவில் மகாத்மாக்கள் ஞானிகள் பேசுவதைக் கவனித்தால் இதை கண்டு கொள்வீர்கள். யாருமே காமத்தைக் குறித்து பேசுவதில்லை. எல்லோருமே சாவைப் பற்றியே பேசுகிறார்கள்- அதன் மூலம் உங்களை அச்சுறுத்துகிறார்கள்; உங்களில் பயத்தை உருவாக்குகிறார்கள். ஏனெனில்

பயத்தைக்கொண்டு உங்களை அடிமைப்படுத்த முடியும். பயத்தினால் நீங்கள் மதத்தன்மை உள்ளவர்களாக நடக்கும்படி உங்களை தூண்ட முடியும். பயத்தின்மூலம் கடவுள் என்னும் ஒரு மூடக் கருத்தின் முன்னால், கடவுள் என்னும் ஒரு மூடச் சிலையின் முன்னால் உங்களை மண்டியிடுமாறு கட்டாயப்படுத்த முடியும். மக்கள் எதையும் கும்பிட தயாராகிவிட்டார்கள்.

உங்கள் வீட்டின் முன் ஒரு கல்லை நிறுத்தி அதன்மீது சிவப்பு வண்ணமடித்து விட்டு, சற்றுத் தள்ளிநின்று கவனியுங்கள். ஒருமணி நேரத்துக்குள்ளாகவே அந்த வழியாகப் போகும் எவராவது ஒருவர் அதன் முன் தொழுதுவிட்டு போவார். அவர் அதை பிள்ளையார் என்று நினைத்துக் கொள்வார். இன்னொருவர் வருவார். அதன் தலையில் இரண்டு பூவை வைத்துவிட்டுப் போவார். இன்னுமொருவர் வந்து ஒரு தேங்காயை உடைப்பார். இதோ ஒரு கோயில் தொடங்கியாகி விட்டது! விரைவிலேயே அங்கு ஒரு கோயில் எழுப்பப்பட்டிருப்பதை காண்பீர்கள்.

மக்கள் அந்த அளவுக்கு பயந்துகிடக்கிறார்கள். எந்த அபத்தத்துக்கும் எந்த மடத்தனத்துக்கு முன்னும் மண்டியிட அவர்கள் தயாராக இருக்கிறார்கள்.

மதவாதிகளை "கடவுளுக்கு பயந்து நடப்பவர்கள்" என்கிறோம். உண்மையில் சமயமனிதர் ஒருபோதும் கடவுளுக்கு அஞ்சுபவர் அல்ல. நிச்சயமாக கடவுளை நேசிப்பவர் தான் அவர்; ஆனால் ஒருபோதும் கடவுளுக்கு அஞ்சுபவர் அல்ல. சமய மனிதரின் வாழ்வில் பயத்துக்கு இடமே இல்லை- அன்புக்கே. அன்புக்கு மட்டுமே இடம். மேலும் அன்பு இருக்கையில் அச்சம் மறைகிறது. அச்சம் இருக்கிற இடத்தில் அன்பு வளரச் சாத்தியம் இல்லை.

இந்தியா மாதிரியான நாட்டில் சாவு விலக்கப்பட்டதாயில்லை. இந்திய மதநூல்கள் மரணம் பற்றிய மிக விரிவான விவரணைகளால் நிறைந்துள்ளன. சாவு எவ்வளவு அவலமானது என்பதை ஆர்வச் சுவை ததும்ப அவர்கள் விவரிக்கிறார்கள். உங்கள் உடம்பை எவ்வளவு அசிங்கமான- அருவெருப்பான வழிகளில் அவர்கள் வருணிக்கிறார்கள் என்பதை பார்த்தால் இவர்களைக் குறித்து நீங்கள் அதிர்ச்சியே அடைவீர்கள். அருவெருப்பான, குமட்டலெடுக்க வைக்கிற அனைத்தின்மீதும் இவர்கள் ஏன் இந்த அளவுக்கு மோகமும் வெறிபிடித்த ஈடுபாடும் கொண்டவர்களாக இருக்கிறார்கள்? இதற்கான ஒரே எளிய காரணம். வாழ்வைக் குறித்து நீங்கள் பயம்கொள்ள வேண்டும். வாழ்விடம் நீங்கள் பகைகொள்ள

வேண்டும். வாழ்வுக்கு நீங்கள் எதிராக வேண்டும் என்று அவர்கள் விரும்புவதுதான்... சாவைப்பற்றியே பேசுவதன்மூலமும், சாவை எவ்வளவு முடியுமோ அவ்வளவு பூதாகாரமாக- இருண்டதாக காட்டுவதன் மூலமும், சாவை அதன் அசிங்கமான எல்லா வடிவங்களிலும் சித்தரிப்பதன் மூலமும், வாழ்வின் மீது நீங்கள் கொண்டிருக்கும் காதலையும், வாழ்வுக்கு நீங்கள் வழங்கும் அங்கீகாரத்தையும் அவர்கள் அழிக்கிறார்கள்.

அடுத்து இன்னொருவிதமான சமுதாயங்கள் உள்ளன... உதாரணமாக கிறித்தவமானது பல நூற்றாண்டுகளாக காமத்துக்கு எதிரான சமுதாயமாக, பண்பாடாக இருந்து வந்துள்ளது. "காமத்தைப்பற்றி பேசாதே". எனவேதான் இயேசு ஒரு கன்னித்தாயிடம் பிறந்தார் என்னும் கருத்து- சுத்த அபத்தக் கருத்து உருவானது. அவர்கள் இந்த கட்டுக் கதையை உருவாக்கக் காரணம், தூய்மையே வடிவான இயேசு எப்படி காமத்தினால் பிறந்திருக்க முடியும்? அப்பேர்ப்பட்ட பரிசுத்தர் எப்படி அசுத்தத்திலிருந்து விளைந்திருக்க முடியும்? அசாத்தியம், அதர்க்கம்! சேற்றிலிருந்து தாமரை வருவதா? முடியவே முடியாது! ஆனால் உண்மையில் எல்லாத் தாமரைகளும் சேற்றிலிருந்தே வருகின்றன.

நீங்கள் பிறந்த அதே தன்மையிலேயே இயேசுவும் பிறந்தார்- அவர் ஒரு தான்தோன்றி அல்ல! அவர் அசாதாரணர் அல்ல. மேலும் தூய ஆவி கன்னி மேரியை கர்ப்பமாக்கிய கதை, அபத்தக் களஞ்சியம்... ஆக ஆவிகள் கூட காதல் செய்கின்றன!

அமீது என் அறையின் அருகே காவலிருக்கிறான். திரைக்கு வெளியே ஒருபெரும் தடியுடன் அவன் நிற்கிறான். ஒருநாள் நான் கேட்டேன், "அமீது, புனித ஆவியை நீ பார்த்திருக்கிறாயா இல்லையா?"

"புனித ஆவியா?" என்றான் அவன்.

"ஆம்". என்றேன் நான், "ஒருநாள் அவர் வருவார். எனவே உன்னிப்பாயிரு. ஏனெனில் புனித ஆவி என்னை வந்து சந்திக்காவிட்டால் வேறு யாரைச் சந்திப்பார்?"

ஒருநாள் அங்கு ராஜென் நின்று கொண்டிருந்தான். அவனிடம் நான் சொன்னேன், "தடியை உன் கையில் வைத்திரு, இல்லா விட்டால் புனித ஆவி தடியை உனக்கெதிராகவே பயன்படுத்தி விடுவார்! இந்த தடி ஒரு பாதுகாப்பாக இருப்பதற்கு பதில் உன் தடியைக் கொண்டே அவர் உன் மண்டையை தாக்கிவிடப் போகிறார்!"

அதிலிருந்து அவன் தன் தடியை எங்கேயோ வைத்துவிட்டான். அதன்பின் அவனுடைய தடியை நான் பார்க்கவில்லை. பயந்திருக் கலாம்... சில நேரங்களில் நீங்கள் அவ்வளவு உணர்ச்சியுடன் இருப்பதில்லை. எப்போதும் உங்கள் தடியை உங்கள் கையிலேயே பிடித்திருப்பது என்றால்... சிலசமயங்களில் ஓய்வெடுக்கவும் வேண்டி இருக்கிறது. காவல் செய்வோரும் தூங்க வேண்டி இருக்கிறது! அந்த நேரத்தில் புனித ஆவி வருகிறார். தடியைப் பார்க்கிறார். அவன் தலைமேல் தாக்குகிறார். புனித ஆவியால் ஒரு பெண்ணை கர்ப்பமாக்க முடியும் என்றால், அவரால் செய்ய முடியாதது என்ன இருக்கிறது. அவரால் எதை வேண்டுமானாலும் செய்ய முடியும். ஒரு ஆண்பிள்ளையைக் கூட அவரால் கர்ப்பமாக்க முடியும்! எதுவும் சாத்தியமே. பரிசுத்த ஆவியால் ஆகாதது ஒன்றுமில்லை.

கிறித்துவத்துக்கு காமம் விலக்காக இருக்கிறது: "காமத்தைப் பற்றி பேசாதே!" என்கிறது.

சிக்மண்ட் பிராய்டுக்குப்பின் முதல் தடை உடைக்கப்பட்டது. காமம் ஒரு தடை இல்லை என்றானது. வேறொரு தடைக்கு நாம் மடைமாறியுள்ளோம். இப்போது மரணம் ஒரு விலக்காக இருக்கிறது. இப்போது 'சாவைப்பற்றிப் பேசாதே'. மனிதனுக்கு ஏதாவது ஒரு விலக்கு தேவைபோல் தெரிகிறது. விக்டோரியா கால சமுதாயம் காம விலக்கில் வேர்கொண்டிருந்தது. நவீனகால சமுதாயம்- மேலைச் சமுதாயம்- மரண விலக்கில் வேர்கொண் டிருக்கிறது. சாவைப்பற்றியே பேசாதே. சாவை முற்றிலும் மறந்துவிடு- அது நிகழாததுபோல் இரு. குறைந்தது உனக்கு அது நிகழாது என்று இரு. குறைந்தது இதுவரை அது உனக்கு நிகழவில்லை என்று இரு. அப்படியானால் ஏன் அதைக்குறித்து அலட்டிக் கொள்கிறாய்? அதையெல்லாம் மறந்துவிடு.

மேற்கில் இப்போது ஒருவன் இறந்தால் அவனை அலங்கரிக்க நிபுணர்கள் வந்துவிட்டார்கள். சாவுக்குப்பின் அவன் தோற்றமளிப்பதைப் போல் அவ்வளவு அழகாக ஒருபோதும் அவன் காட்சியளித்திருக்க மாட்டான். அவனுக்கு வண்ணம் தீட்டுகிறார்கள். அவன் கன்னங்கள் அத்திச்சிவப்பாக உள்ளன. ப்ளோரிடாவில் 3 மாத விடுப்பில் வந்திருப்பவனைப் போலவே காட்சியளிக்கிறான். அவ்வளவு ஆரோக்கியமாக காட்சியளிக்கிறான். இப்போதுதான் ஆசனங்களை எல்லாம் முடித்துவிட்டு சவாசனம் செய்பவனைப் போல், உண்மையில் சவமில்லைபோல் காட்சியளிக்கிறான். அவன்

சாகவில்லை என்ற தோற்றத்தை உருவாக்க வேண்டியுள்ளது கல்லறை வாசகம் கூட பின்வருமாறு பொறிக்கப்படுகிறது. "அவர் இறக்கவில்லை. உறங்கவே செய்கிறார்."

எல்லா மொழிகளிலும் நாம் சொல்கிறோம்... யாராவது இறக்கும் போதெல்லாம் அவர் செத்துவிட்டார் என யாரும் கூறுவதில்லை. "இறைவன் அடி சேர்ந்துவிட்டார்" என்கிறோம். கடவுளின் அன்பராகிவிட்டார். கடவுள் அவரைத் தேர்ந்தெடுத்து அழைத்துக் கொண்டுவிட்டார். வானுலகம் ஏகி விட்டார். அமரர் ஆகிவிட்டார்."

"என் மனைவி ஒரு தெய்வம்" என்றான் ஒருவன், தன் நண்பனிடம்.

அதற்கு மற்றவன் சொன்னான், "என் மனைவி இன்னும் உயிரோடிருக்கிறாள்!"

மனிதர்கள் இறந்ததும் அவர்களின் தெய்வீகம், இத்தியாதி பற்றி எல்லாம் பேசுகிறீர்கள்.

வால்டேருக்கும் ரூசோவுக்கும் இடையில் பெரும் தகராறு இருந்தது. தம் வாழ்நாள் முழுதும் அவர்கள் ஒருவருடன் ஒருவர் பூசலிட்டுக் கொண்டே இருந்தார்கள். வால்டேர் இறந்தார். வால்டேர் இறந்துவிட்டார் என்பதை யாரோ ரூசோவிடம் தெரிவித்தார்கள். ரூசோ சொன்னார், "உண்மையாகவா? உண்மையாகவே அவர் ஒரு பெரிய மனிதரய்யா- உண்மையாகவே அவர் இறந்திருந்தால்!" அவர் இறக்கவில்லை என்றால் அந்த வார்த்தைகளை அவர் திரும்பப் பெற்றிருப்பார். அவர் உயிரோடிருந்தால் அவர்கள் எதிரிகள். இறந்தால் "அவர் ஒரு மாமனிதராக இருந்தார்". எனவே அவர் ஒரு நிபந்தனையை சேர்க்கிறார்: உண்மையாகவே அவர் இறந்திருந்தால், அவர் பெரிய மனிதர்தான்.

ஒரு மனிதர் இறந்ததும் யாரும் அவருக்கு எதிராக பேசுவதில்லை. யாரும் அவரைப்பற்றி குறைவாக ஒன்றும் சொல்வதில்லை. திடீரென அவர் ஒரு புனிதராகிறார், திடீர் உத்தமர் ஆகிறார். அவருடைய இடத்தை இனியாராலும் நிரப்பமுடியாது. அந்த இடம் இனி எப்போதும் காலியாகவே இருக்கும். உலகம் எப்போதைக்குமாக அவரை இழந்து விட்டது- நஷ்டப்பட்டு விட்டது. அவர் அவ்வளவு முக்கியமானவர். ஆனால் அவர் உயிரோடிருக்கும்போது யாரும் அவரை சீந்தியிருக்கவும் மாட்டார்கள். இவையெல்லாம் சூழ்ச்சிகள்- சாவை தள்ளிவைக்கும்

உத்திகள், கதவுகளை அடைக்கும் உத்திகள், சாவை முற்றிலும் மறந்து விடுவதற்கான சூழ்ச்சிகள்.

ஒரு நிஜமான மானுடத்தில் எவ்விதமான விலக்குகளும் இருக்காது: காமமும் அவர்களுக்கு தடையல்ல, மரணமும் தடையல்ல. வாழ்வு அதன் முழுமையில் வாழப்பட வேண்டும், சாவும் அதன் பகுதிதான். முழுமையாக வாழவேண்டும், முழுமையாக சாக வேண்டும்.

இதுதான் என் சந்நியாசிகளுக்கு நான் விடுக்கும். சேதி, சின்மயோ.

*நீ கேட்கிறாய்: நான் ஏன் சாவுக்கு மிகவும் பயப்படுகிறேன்?*

ஏனெனில் நீ இன்னும் முழுமையாக வாழவில்லை. முழுமையாக வாழு, அப்போது சாவுபயம் மறைந்துவிடும். மேலும் இதில் நீ தனியாகவும் இல்லை- எல்லோரும் ஒரே நிலைமையில் தான் இருக்கிறார்கள்.

அது மாதிரியான ஒரு பிரிட்டிஷ் ஆடவர் கழகம்: காற்றில் குழாய்ப்புகை மிதந்து கொண்டிருந்தது. கனத்த தோலாலான நாற்காலிகள், ஓக்மரத்தில் செதுக்கிய முகப்புகள்.

ஓய்வுபெற்ற வயதான கர்னல் ஆப்பிரிக்காவில் தான் நடத்திய வீரதீர பராக்கிரமங்களை நினைவு கூர்ந்து கொண்டிருந்தார். "ஒருதடவை ஒரு கருப்புப் பிடரிகொண்ட சிங்கத்திடம் என் உயிரே போக இருந்தது!"

"ஓ, உண்மையாகவா ஐயா?" ஆர்வமாக கேட்பதைப்போல் பாசாங்கு செய்தான் இளம் அதிகாரி, "அவசியம் அதை தாங்கள் சொல்ல வேண்டும்."

"நல்லது, கவனி தம்பி: காங்கோ வனத்தின் மிக அடர்ந்த பகுதியில் என் விசுவாச துப்பாக்கி தூக்கி உம்பாகோவுடன் நான் எட்டி நடைபோட்டு முன்னேறிக் கொண்டிருந்தேனா. அங்கே ஒரு சிறு வெளியில் தான் அந்த பெரிய சிங்கத்தை பார்த்தேன். அவ்வளவு பெரிய சிங்கத்தை நீ பார்த்திருக்கவே முடியாது. நிலைகுலையாத நிதானத்துடன் உம்பாகோவிடமிருந்து என் நம்பகமான சுழல் துப்பாக்கியை எடுத்தேன். குறிபார்த்தேன். விசையை இழுத்தேன். டுமீல் நாசமாய் போனது ஒரு ஆகாவழியாக இருந்தது. மனம் தளராமல் ஆகாவழியை கொடுத்துவிட்டு அடுத்த துப்பாக்கியை வாங்கினேன். டுமீல் இதுவும் பயனற்றதாயிருந்தது. இதற்குள் உம்பாகோ பறந்துவிட்டிருந்தான். நானும் ஓடிவிடுவதே உத்தமம்

என நினைத்தேன். என்னால் முடிந்த அளவுக்கு வேகமாக ஓடினேன். ஆனால் கண்ணிமைக்கும் நேரத்துக்குள் மிருகம் என பின் எட்டிவிட்டது. என் புடனியில் அதன் மூச்சை என்னால் உணர முடிந்தது. அது பாய்ந்து குதற தயாரானதை அறிந்தேன். ஆனால் பாயப்போகையில் அது கால் வழுக்கி தவறியது. இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொண்டு என்னால் முடிந்த மட்டும் வேகமாக ஓடினேன். ஆனால் மறுபடியும் அது என்னைத் தொட்டு விட்டது- என் கழுத்தின் பின் அதன் மூச்சு பட்டது. பாயத் தொடங்கியது. மறுபடியும் வழுக்கி விழுந்தது. இப்படி 3 தடவைகள் நடந்தன. மூன்றாவது தடவை எப்படியோ சமாளித்து உல்லாசமான பழைய லேண்ட் ரோவரில் ஏறி தப்பினேன்.

"எவ்வளவு வியப்புக்குரிய சம்பவம், ஐயா" என்றான் இளம் அதிகாரி. "அது மட்டும நானாயிருந்தால் உடுப்பிலேயே பேண்டு உழப்பி இருப்பேன் என்பது உறுதி."

"பேண்டு உழப்பியிருப்பாயா?!" எக்காளமிட்டார் கிழ கர்னல், "சிங்கம் வேறு எதில் கால்வைத்து வழுக்கியது என நினைக்கிறாய்?"

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**உடல்பயிற்சிக்கு என்ன செய்கிறீர்கள்?**

**ஆனந்த் பிராச்சி.**

உண்மையாகவே சிரிக்கத்தக்க சில சிரிப்புகளை எனக்கு நானே கூறி சத்தம்போட்டு சிரித்தபடி தரையில் உருளுகிறேன். இதைவிட சிறந்த எந்த உடற்பயிற்சியும் எனக்கு தெரியாது! விவேக்கையே நீ கேட்கலாம்- அவ்வப்போது நான் தரையில் புரளும் நிலையில் என்னை அவள் பார்த்திருக்கிறாள்!

அன்றைக்கு எனக்கு நானே சொல்லிக்கொண்ட சிரிப்புகள்.

ரிச்சர்ட் நிக்சன் தன்னை சூழ்ந்திருக்கும் அரசியல்வாதிகள் சிலர்மேல் சந்தேகப்பட்டார். தனக்கெதிராக ஒரு சதியாலோசனை வளர்ந்து வருகிறது என நினைத்தார்.

எனவே தன் மிக நெருங்கிய சகாக்களை அவர் திரட்டினார். ஆல்ப்சில் எங்கோ ஒரு சிறுகிராமத்துக்கு, இந்தப் பிரச்சனையை துப்புதுலக்க, அவர்கள் போனார்கள்.

இரண்டாம் நாள் காலையில் நிக்சன் தன் படுக்கையறை சன்னல் திரையை திறந்தார். அவரது படுக்கையில் யாரோ "நிக்சன்

பொக்சன்'' என்று சிறுநீர் அடித்திருந்தார்கள். இதனால் அமைதி குலைந்த நிக்சன் தன் மிகுந்த செயல்திறம் வாய்ந்த தடயவியல் விஞ்ஞானிகளை அமர்த்தி குற்றவாளியை கண்டுபிடிக்க சொன்னார்.

48 மணிநேரத்துக்குப்பின் அவர்கள் அவருக்கு அறிக்கை தந்தார்கள். ''மோசமான செய்தி கொண்டு வந்திருக்கிறோம்'' என்றார்கள்.

''சிறுநீரை பரிசீலித்ததில் அது ஹென்றி கிசிங்கருடையது என தெரிய வந்துள்ளது.''

''ஐயோ அப்படியா!'' என்றார் நிக்சன்.

''ஆனால் இனிவருவதுதான் இதைவிட மோசமான செய்தி, சார். அந்த எழுத்துப்பாணி திருமதி நிக்சனுடையது என்பதும் தெரிய வந்துள்ளது!''

ரிச்சர்ட் நிக்சன், ஹென்றி கிசிங்கர், ஒரு கத்தோலிக்க பாதிரி, ஒரு ஹிப்பி ஆகியோர் ஒரு சிறு விமானத்தில் பறந்து கொண்டிருந் தார்கள். அப்போது தரையிறங்குவதற்கான சாதனம் பழுதுபட்டுப் போனது.

பீதியடைந்து விமானி நடுப்பகுதிக்கு விரைந்தார். ''வருந்து கிறேன். பிள்ளைகளே, இந்த விமானம் போய் சேரப் போவதில்லை. 4 பாராசூட்டுகள் மட்டுமே உள்ளன. விமானி என்ற முறையில் ஒன்றை நான் எடுத்துக்கொள்கிறேன்.''

அவர் ஒரு பாராசூட்டை உருவி குதித்துவிட்டார்.

ரிச்சர்ட் நிக்சன் எழுந்து நின்று சொன்னார், ''நான் இந்த நாட்டின் அதிபர். நாட்டுக்கு நான் தேவை- மன்னிக்கவும் கனவான்களே...'' அவர் ஒரு பாராசூட்டை கைப்பற்றி குதித்தார்.

ஹென்றி கிசிங்கர் குதித்தெழுந்து கத்தினார். ''நான்தான் உலகிலேயே ஒரே புத்திசாலி! நானில்லாத இழப்பை உலகத்தால் தாங்க முடியாது!'' அவர் ஒரு பாராசூட்டை எடுத்துக் கொண்டு குதித்தார்.

பாதிரி அடுத்து சொன்னார், ''என் மகனே, நீ இளைஞன். கடைசி ஒன்றை நீ எடுத்துக்கொள்!''

''கவலைப்படாதீர்கள்: பாதர்'' என்றான் ஹிப்பி. ''நம் இருவருக்கும் ஆளுக்கொரு பாராசூட் உள்ளது. 'உலகிலேயே ஒரே புத்திசாலி' என்று தோள்பையை எடுத்துக்கொண்டு குதித்துவிட்டார்!''

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**தற்செயல் இணை நிகழ்ச்சிகள் என்று ஏதேனும் உண்மையி லேயே இருக்கின்றனவா?**

**பிரேம் டவுக்.**

மனிதர், உணர்வின்றி இருக்கும் வரை, தற்செயல் இணை நிகழ்ச்சிகளிலேயே வாழ்கிறார். அவரது வாழ்க்கை தற்செயல் இணை நிகழ்ச்சிகளால் மட்டுமே ஆனதைத்தவிர வேறில்லை. உணர்வற்ற வாழ்க்கை என்பது தற்செயல் வாழ்க்கையே. உணர்வுள்ள மனிதர் மட்டுமே தற்செயல் வாழ்க்கையைத் தாண்டி தன்னியல்பான வாழ்க்கையில் பிரவேசிக்கிறார். தற்செயல் இணை நிகழ்ச்சிகளை உணர்வுள்ள மனிதர் கடந்துவிடுகிறார். முழு உணர்வுள் எவராக நீங்கள் இல்லாதவரை உங்களை சூழ்ந்திருக்கும் எல்லாவித முன்பின் தெரியாத சக்திகளுக்கும் நீங்கள் கைப்பாவையாகவே இருக்கிறீர்கள். ஏன் இவை உங்களுக்கு நேர்கின்றன. ஏன் ஒன்றை செய்கிறீர்கள்- இன்னொன்றை செய்வதில்லை. ஏன் ஒன்றை தேர்ந்தெடுத்தீர்கள்- மற்றதை தேர்ந்தெடுக்கவில்லை என்பது எதுவும் உங்களுக்கே தெரிவதில்லை.

நான் மெட்ரிகுலேசன் முடித்து பல்கலைக்கழகத்தில் சேரப் போனேன். என் விண்ணப்பத்தை பூர்த்திசெய்ய வேண்டும்; ஆனால் என்னிடம் பேனா இருக்கவில்லை. எனவே தன் விண்ணப்பத்தை பூர்த்தி செய்து கொண்டிருந்த பக்கத்திலிருந்த மாணவனிடம், "தயவு செய்து உன் பேனாவை கொஞ்சம் தருகிறாயா? விண்ணப்பத்தை பூர்த்திசெய்ய வேண்டும்."

அவன் மிகவும் மகிழ்ச்சியுடன் சம்மதித்தான். "முதலில் நீங்கள் நிரப்புங்கள்" என்றான்.

நான் என் விண்ணப்பத்தை நிரப்பினேன். "முதலில் நான் நிரப்பும்படி ஏன் விரும்பி கேட்டுக்கொண்டாய்?" என்றேன்.

அவன் சொன்னான், "ஏனெனில் என்ன பாடங்கள் எடுப்பது என என்னால் முடிவு செய்ய முடியவில்லை." அவன் என் விண்ணப்பத்தை பார்த்து அதில் நான் என்னென்ன பாடங்களை எல்லாம் எடுத்திருந்தேனோ அவற்றையே தன் விண்ணப்பத்திலும் எழுதிக் கொண்டான்.

"உனக்கென்ன பைத்தியமா?" என்றேன்.

அவன் சொன்னான். "அதைப்பற்றி பரவாயில்லை. எல்லாம் எனக்கு ஒன்றுதான். நான் தத்துவம் படித்தாலும் அரசியல்

படித்தாலும் பொருளாதாரம் படித்தாலும் எல்லாம் எனக்கு ஒன்றுதான். யாராவது ஒருவரின் விண்ணப்பத்தை காப்பியடித்த தாகவே அது இருக்கும். உங்களுக்கும் மற்றவர்களுக்கும் எந்த வேறுபாடுமில்லை. மேலும் அவன் சொன்னான், "உண்மையில் என் எல்லா தேர்வுகளிலும், மற்றவர்களின் பதிலை பார்த்து எழுதியே தேர்ச்சி பெற்றிருக்கிறேன். மெட்ரிகுலேசனை எப்படி நான் படித்து முடித்தேனோ எனக்கே தெரியவில்லை."

இன்று அவர் தத்துவப் பேராசிரியராக இருக்கிறார். இதை என்ன என்பீர்கள் நீங்கள்? தற்செயல் பொருத்தம்தான். அன்று நான் சில நிமிடங்கள் தாமதமாக வந்திருந்தால் இவர் ஒருபோதும் தத்துவப் பேராசிரியர் ஆகியிருக்க மாட்டார். என்னிடமே பேனா இருந் திருந்தால் அவர் தத்துவப் பேராசிரியர் ஆகாமல் போயிருக்கலாம். வேறு ஒருவரை பார்த்து எழுதி இருப்பார். அப்படியானால் அரசியல் பேராசிரியராகவோ பொருளாதார பேராசிரியராகவோ எதுவாகவோ ஆகியிருப்பார்.

ஒரு யூத நாவலாசிரியர் எழுதுகிறார்: "என் அப்பா ஒரு ரயிலில் பயணம் செய்துகொண்டிருந்தார். ரயில் பிந்திப் புறப்பட்டது. நள்ளிரவில் ரஷ்யாவில் ஏதோ ஒரு இடத்தை அடைந்தது." அவர் பசியாகவும்குளிரில் நடுங்கிக் கொண்டும் இருந்தார். அது ருசியக் குளிர். இரவுவேறு. பனி கொட்டிக் கொண்டு இருந்தது. குடிப்பதற்கு சூடாக கொஞ்சம் காபியோ வேறு ஏதாவதோ கிடைக்குமா என்று பார்க்க விரைந்தார்.

உணவகத்தை நடத்திவந்த பெண்மணி கடையை மூடிக் கொண்டிருந்தாள். அவர் கெஞ்சினார், "ஐந்து நிமிடம்தான் ஆகும்- 2 கோப்பை காப்பி கொடுங்கள். நான் பசித்து களைத்து இருக் கிறேன். சாப்பிட ஏதாவது தர முடியுமானாலும் நன்றியுள்ள வனாவேன்."

பெண் மறுபடியும் கடையை திறந்தாள்- பூட்டப் போனவள். காப்பி ஊற்றிக் கொடுத்தாள். சாப்பிடவும் ஏதோ தந்தாள். அப்படியே பேச தொடங்கினார்கள். அவர் எங்கிருந்து வருகிறார் என அப்பெண் கேட்டாள்- ஒரு அறிமுகமில்லாதவருடன் வழக்கமாக நடக்கும் உரையாடலாகவே அது இருந்தது. "எங்கே தங்கப் போகிறீர்கள்?" மேலும் அந்தப் பெண் சொன்னாள், "நல்லநேரத்தில் வந்து சேர்ந்தீர்கள்- இப்போது வாடகைக்கார்கள் எதுவும் கிடைக்காது. ரயில் பிந்தி வந்திருக்கிறது. நாங்களும் இந்த ரயிலை நம்புவதில்லை- இதிலிருந்து இந்நேரத்தில் ஒருவரும் ஒருபோதும்

வந்திறங்குவதில்லை. எனவே, வேண்டுமானால் என் காரில் ஏறுங்கள். நீங்கள் எங்கே போக வேண்டுமோ அங்கே கொண்டு போய் விடுகிறேன்."

அவர் சொன்னார், "எங்கே போவதென எனக்கே தெரியாது. ஒரு நல்ல சத்திரத்தை நீங்களே சொல்லுங்கள்."

அந்த பெண் சொன்னாள், "சத்திரங்கள் உள்ளனதான். ஆனால் அவை தரமாக இருக்காது. மேலும் அவையெல்லாம் பூட்டியிருப் பார்கள். என்னுடன் நீங்கள் வந்து என் வீட்டில் தங்குவதே மேல். காலையில் எழுந்ததும் நீங்கள் சத்திரத்தை தேடலாம்."

அந்த மனிதரும் மிகுந்த நன்றி உணர்வுடன் அதை ஏற்றுக் கொண்டார். இப்படித்தான் கதை தொடங்கியது. அவர்கள் காதல் கொண்டார்கள்... மீதிக் கதையே நீங்களே நீட்டிச் செல்ல முடியும்.

அந்த யூத நாவலாசிரியர் எழுதுகிறார். "ரயில் தாமதம் ஆகியிருக்காவிட்டால் நான் பிறந்திருக்க மாட்டேன் எனலாம். இன்னும் அதிக தாமதமாக வந்திருந்தாலும் நான் பிறப்பது தவறிப் போயிருக்கலாம். அந்த பெண் கொஞ்சம் கடினமானதாயிருந்து மறுபடியும் கடையை திறக்க மறுத்திருந்தாலும் நான் பிறக்காமலேயே போயிருப்பேன் எனலாம். அந்தப் பெண் என் அப்பாவை ஏதாவது சத்திரத்தில் போய் விட்டிருந்தாலும் கதை அதோடு முடிந்திருக்கும். ஆனால் அவர் அப்பெண்ணுடன் தங்கினார். அப்பெண் ஒரு விதவையாயிருந்தாள். காலையில் அவள் அவரை சாப்பிட அழைத்தாள். ஒன்று, மற்றதற்கு இட்டுச் சென்றுவிட்டது.

சாதாரண வாழ்க்கை இப்படித்தான் இருக்கிறது.

பிரேம் டவுக், உணர்வற்ற மனிதர் தற்செயல்களிலேயே வாழ்கிறார். அவர் தற்செயலானவர்.

விதானா எனக்கு எழுதி இருக்கிறான். "பகவான், சிலசமயங்களில் தியானம் என்பது மிகவும் ஆபத்தாக இருக்க முடியும் என்பதை உங்களுக்கு தெரிவிக்க விரும்புகிறேன். மனக்காட்சி உத்தி ஒன்றை நான் செய்து கொண்டிருந்தேன்- நான் ஒரு மரம் என கற்பனை செய்து கொண்டேன். என்ன விதமான வேர்கள் எனக்கு இருந்தன. என்ன நிறத்திலும் அமைப்பிலும் நான் இருந்தேன். என்ன விதமான இலைகளைப் பெற்றிருந்தேன், என்பவற்றை மனக்கண்ணில் காட்சியாக்கிக் கொண்டிருந்தேன். தென்றலில் அசைந்தாடிக் கொண்டிருந்தேன்... அப்போது திடீரென ஒரு நாய் தவ்வி தவ்வி வந்து என் காலில் சிறுநீர் கழித்து விட்டது."

இங்கு விதானா, தான் மனக்காட்சியில் இருப்பதையும் தன்னை ஒரு மரமாக அவன் கற்பனை செய்கிறதையும் நாய் அறிந்திருக்கிறது என நினைக்கிறான். நாயும் உன்னைப்போலவே முட்டாள்தான். இல்லாவிட்டால் நாய்களை அவ்வளவு லேசில் ஏமாற்றிவிட முடியாது- நாய்களை ஏமாற்றுவது மிகவும் கடினம்!

மூன்று மாதங்களுக்குப்பின் கொலம்பஸ், சமுத்திரத்தில் பச்சை இலைகள் மிதந்து வருவதைக் கண்டதும் அளவுகடந்த மகிழ்ச்சி அடைந்தார் என்று சொல்லப்படுகிறது. ஆனால் அவரைவிட அவர் நாய் அடைந்த மகிழ்ச்சிதான் அதிகமென சொல்ல வேண்டும் என்கிறார்கள். அவரது வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள்! அது தாவித்தாவி குதித்தது! மூன்று மாதங்களாக... அந்த பரிதாபத்துக்குரிய நாயை நினைத்துப்பாருங்கள்- மரமே இல்லாமல் தவித்திருக்கிறது. அதுதான் கற்பு! அந்த நாய் ஒரு இந்தியனாயிருந்தால் அது ஒரு மகாத்மாவாகி இருக்கும்!

ஒரு கருப்பினத்தவன், ஒரு அராபியன், ஒரு யூதன் ஆகியோர் சேர்ந்து ஒரு பாலைவனத்தில் நடந்து கொண்டிருக்கிறார்கள். திடீரென, ஒரு பயங்கர சூனியக்காரி. ஒரு வேதாளத்தின்மீது சவாரி செய்தபடி, அவர்கள்முன் தோன்றினாள். அவர்கள் தம் உயிருக்காக கெஞ்சியதும் சூனியக்காரி மனதிரங்கினாள்.

"உங்கள் மூவரின் குறிகளும் சேர்ந்து சரியாக ஒரு மீட்டர் நீளமிருந்தால் உங்கள் உயிர்களை நான் எடுக்காது விடுவேன்" என்கிறாள்.

கருப்பினத்தவன் தன் மணியை வெளியில் எடுக்கிறான் அது 75 செ.மீ நீளமிருக்கிறது. அராபியன் தன் தண்டை அளக்கிறான்- அது 24½ செ.மீ. இருக்கிறது. நடுங்கும் கைகளுடன் யூதன் தன்னதை கால்சராயிலிருந்து வெளியே எடுக்கிறான். என்ன ஒரு ஆறுதல்- அது சரியாக அரைசென்டி மீட்டரே இருக்கிறது. அவர்கள் சூனியக்காரியிடமிருந்து மகிழ்ச்சியாக விடுபட்டு வரும்போது கருப்பன் பெருமை பேசுகிறான். "ஹா! உங்களுடன் ஒரு கருப்பன் 75 செ.மீ. நீளத்துடன் இருந்தது நீங்கள் செய்த அதிருஷ்டம்!"

"அபத்தம்" என்கிறான் அராபியன். "அல்லாவின் வரமாகிய எனது ஆண்குறியே நம்மையெல்லாம் காப்பாற்றியது.

"இப்படியெல்லாம் நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!" என்கிறான் யூதன். "அவள் என்னுடையதில் மட்டும் அக்கறை கொள்ளாவிட்டால் என்ன ஆகி இருக்கும்?"

OOO

# 13

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**நானே எனக்கொரு ஒளியாக ஆவது எவ்வாறு?**

**சிரத்தோ யன்னிஸ்.**

கவுதம புத்தரின் கடைசி வார்த்தைகள், தன் சீடர்களுக்கு அவர் அளித்த பிரியாவிடை சேதி, இதுதான். "உனக்கு நீயே ஒளியாக இரு". ஆனால் "நீயே உனக்கொரு ஒளியாக இரு" என்று அவர் சொல்கிற போது, நீயே உனக்கொரு ஒளியாக ஆகு என்று அவர் கூறவில்லை. இருத்தலுக்கும் ஆகுதலுக்கும் ஒரு பெரிய வேறுபாடு உள்ளது.

ஆகுதல் என்பது ஒரு நிகழ்முறை. இருத்தல் என்பது ஒரு கண்டுபிடிப்பு- விதை மரமாக ஆகுவதுபோல் தோன்றுகிறது. அது ஒரு தோற்றமே உண்மையில், விதையானது ஏற்கெனவே தனக்குள் மரத்தை வைத்திருக்கிறது. அதுவே அதன் இருப்பு- அதன் இருப்பே அதுதான். விதை பூக்களாக ஆவதில்லை. பூக்கள் விதைக்குள் புலப்படா நிலையில் இருந்தன; இப்போது புலப்படுவதாக இருக்கின்றன. இது ஆகுதல் எனும் பிரச்சினை அல்ல, இல்லாவிட்டால் ஒரு சிறுகல்லும் பூவாக ஆகிவிட முடியும்; ஆனால் அப்படி நிகழ்வதில்லை. ஒரு பாறையால் ஒரு ரோசாவாக ஆக முடியாது; அது நிகழ்வதில்லை. ஏனெனில் ரோசாவாக ஆவதற்கான உள்ளாற்றல் தன்மை பாறையிடம் இல்லை. விதையானது மண்ணில் மடிவதன் வழியாக தன்னைத்தானே கண்டுபிடிக்கவே செய்கிறது. தன் வெளி உறையை கைவிட்டதும் அதன் உள் யதார்த்தம், வெளிப்படுவது ஆகிறது.

மனிதர் என்பவர் விதைநிலையில் இருக்கும் ஒளியாக இருக்கிறார். இப்போதும் நீங்கள் புத்தர்களாகத்தான் இருக்கிறீர்கள். நீங்கள் புத்தராக ஆக வேண்டும் என்பதில்லை. கற்றுக்கொள்ளும், சாதித்துக்கொள்ளும் பிரச்சனை அல்ல இது. கண்டுகொள்ளும் விஷயம் மட்டுமே இது- தனக்குள் போய் அங்கிருப்பது யார் என பார்க்கும் பிரச்சனையே இது இது தன்னைத் தான் அறிவதே ஆகும்.

யன்னிஸ், உனக்கு நீயே ஒளியாக ஆக வேண்டியதில்லை. ஏனெனில் ஏற்கெனவே அப்படித்தான் இருக்கிறாய். ஆனால் நீ உள்ளே போவதில்லை. உனது பயணம் முழுவதும் வெளியே நோக்கியதாக உள்ளது. நாம் வளர்க்கப்பட்டிருக்கிற விதத்தில் நாமெல்லாம் வெளிப் போக்கர்களாகவே ஆகி இருக்கிறோம். நமது கண்கள் வெளியிலேயே நிலைகுத்தியதாக ஆகி உள்ளன. "அங்கே" தூரத்தில் ஏதோ இலட்சியம் இருப்பதாகவே எப்போதும் நாம் தேடிக்கொண்டும் துழாவிக்கொண்டும் இருக்கிறோம். இலக்கு எவ்வளவுக்கு அதிக தொலைவில் உள்ளதோ அவ்வளவுக்கு அது அதிக சவால் மிக்கதாக அகங்காரத்துக்கு தெரிகிறது. எவ்வளவு அதிக கடினமானதோ அவ்வளவு அதிக கவர்ச்சியானதாக அது தோன்றுகிறது. சவால்களிலேயே அகங்காரம் உயிர்பிழைக்கிறது. தன்னை நிரூபிக்க அது விரும்புகிறது. எளிதானதில் அதற்கு அக்கறையில்லை. சாதாரணத்தில் அதற்கு ஆர்வமில்லை. இயல்பானதில் அதற்கு கரிசனமில்லை. இயற்கையானதல்லாத, எளிமையானதல்லாத, சாமானியமானதல்லாத ஒன்றையே அது நாடுகிறது. அசாதாரணத்தையே அது ஆசிக்கிறது. ஆனால் இருத்தாலோ மிகவும் சாமானியமானதாக, மிகவும் எளிமை யானதாக இருக்கிறது.

யதார்த்தம் அங்கே இல்லை, இங்கேயே இருக்கிறது. அப்போது இல்லை, இப்போதே இருக்கிறது. வெளிப்புறத்தில் இல்லை, உங்கள் உயிரின் உள்மையத்தில் இருக்கிறது. உங்கள் கண்களை மூடி உள்ளே பார்க்க வேண்டியதுதான்.

தொடக்கத்தில் அது கடினமாக இருக்கிறது. வெளியில் பார்க்கும் விதத்தை மட்டுமே கண்கள் அறிந்துள்ளன. வெளியே பார்ப்பதற்கே மிகவும் பழகிப்போயுள்ளன அவை. எனவே நீங்கள் கண்களை மூடிய பின்னும் அவை தொடர்ந்து வெளியேதான் பார்த்துக்கொண்டிருக்கின்றன- அவை கனவுகள் காணவும் பிரமைகளில் சஞ்சரிக்கவும் தொடங்குகின்றன. அந்த கனவுகள் என்பதை வெளிப்புறத்தின் பிரதிபலிப்புகளே தவிர வேறில்லை.

எனவே வெளிப்பார்வைக்கு மட்டுமே நீ கண்களைமூடி இருப்பதாக தெரிகிறது. ஆனால் வெளி உலகுக்கு உன் கண்கள் இன்னும் திறந்தபடியே உள்ளன. நீங்கள் உள்ளே இல்லை. உண்மையில் ஒவ்வொரு தியானியும் பின்வரும் வினோத நிகழ்வை சந்திக்கிறது: நீங்கள் உங்கள் கண்களை மூடுகிற போதெல்லாம் உங்கள் மனம் அதிக பரபரப்பாக ஆகிறது.உங்கள் மனம் அதிக பைத்தியமாக ஆகிறது. கிறுக்கு போல் சளசளக்க ஆரம்பிக்கிறது: பொருத்தமான, பொருத்தமற்ற எண்ணங்கள் உங்களின் மனதில் குறுக்கும் நெடுக்குமாக ஓடுகின்றன. நீங்கள் வெளியே பார்க்கிறபோது இப்படி நிகழ்வதில்லை. இந்நிலையில் நீங்கள் களைத்து விடுவது இயல்பே. ஏதாவது ஒன்றில், ஒரு வேலையில் ஈடுபட்டிருப்பது, கண்களைமூடி அமைதியாக உட்கார்ந்திருப்பதை விட மேல் என நீங்கள் நினைக்க நேர்வது இயல்பே. ஏனெனில் சங்கிலித்தொடரான எண்ணங்கள், ஆசைகள், நினைவுகளின் ஊர்வலத்தை தவிர வேறெதுவும் நிகழ்வதாக தெரியவில்லை. அவையோ முடிவே இன்றி வந்துகொண்டே இருக்கின்றன.

ஆனால் ஆரம்பத்தில் மட்டுமே இப்படி இருக்கிறது. கொஞ்சம் கூடுதல் பொறுமை, கொஞ்சம் கூடுதலான காத்திருப்பு... நீங்கள் பார்த்துக் கொண்டே போனால்; இந்த எண்ணங்களை அமைதியாக- எந்த தீர்ப்பும் இடாமல்- எந்த எதிர்ப்பும் இல்லாமல்- அவற்றை நிறுத்தும் ஆசை கூட இல்லாமல் கவனித்தபடியே, பார்த்துக் கொண்டே போனால்- அவற்றுக்கும் உங்களுக்கும் எந்த தொடர்பும் இல்லை என்பது போல், கவலையற்றிருந்தால்... சாலையில் போகும் வாகனங்களையோ. அல்லது வானத்தில் போகும் மேகங்களையோ அல்லது ஓடிக்கொண்டிருக்கும் ஆற்றையோ கவனிப்பதுபோல் நீங்கள் உங்களின் எண்ணங்களை சும்மா கவனிக்கிறீர்கள். நீங்கள் அந்த எண்ணங்கள் அல்ல. அவற்றை கவனிப்பவரே நீங்கள். "நான் கவனிப்பவன்ள், கவனிக்கப்படுவதல்ல" என்பதை நினைவில் கொண்டிருக்கிறீர்கள். கவனிக்கப்படுவனவாக நீங்கள் இருக்க முடியாது. உங்கள் சொந்த அகத்தன்மைக்கு புறப்பொருளாக நீங்களே இருக்க முடியாது. ஏனெனில் நீங்கள் என்பது உங்களின் அகத்தன்மையே. நீங்கள் என்பது சாட்சி. நீங்கள் என்பது உணர்வுநிலை. இதை நினைவில் இருத்தும்போது... இதற்கு கொஞ்சம் காலம் எடுக்கிறது: மெதுமெதுவாக பழைய பழக்கம் இறக்கிறது. அது இறப்பது கடினமே. ஆனால் நிச்சயமாக இறக்கவே செய்கிறது. அவ்வாறு போக்குவரத்து நிற்கிற நாளில் திடீரென நீங்கள் ஒளிமயமாய் இருக்கிறீர்கள். எப்போதுமே நீங்கள் ஒளிமயமாகவே

இருந்து வந்திருக்கிறீர்கள். அப்படித்தான் நீங்கள் இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் பார்க்க விடாதபடி அந்த எண்ணங்கள்தான் உங்களை தடுத்து வந்தன.

எல்லா பொருள்களும் மறைந்ததும், பார்க்க ஏதும் அற்றுப் போனதும், உங்களை முதல்முறையாக நீங்கள் கண்டு கொள்கிறீர்கள். உங்களையே நீங்கள் முதன்முறையாக உணர்கிறீர்கள்- அடையப் பெறுகிறீர்கள்.

இது ஆகுதல் அல்ல, இருத்தலைக் கண்டு கொள்ளுதல். மனிதன் எண்ணங்களாகிய வெளிஓடு கைவிடப்படுகிறது. நீங்கள் உங்கள் பூக்களை கண்டு கொண்டிருக்கிறீர்கள், உங்கள் வாசத்தை கண்டு கொண்டிருக்கிறீர்கள். சுதந்திரமே அந்த வாசம்.

எனவே யன்னிஸ், "நானே எனக்கொரு ஒளியாக ஆகுவது எவ்வாறு?" என கேட்காதே. நீ ஏற்கெனவே உனக்கொரு ஒளியாகவே இருக்கிறாய். அதை நீ அறியமட்டுமே இல்லை. அதை நீ மறந்துவிட்டிருக்கிறாய். அதை நீ கண்டுபிடிக்க வேண்டி இருக்கிறது. கண்டுபிடிக்கும் விதமோ எளிது, மிக எளிது; உன் எண்ணங்களை கவனித்தபடி இருக்கும் எளிய முறையே அது.

இந்த நிகழ்முறைக்கு உதவியாக மற்ற பொருள்களையும் நீங்கள் கவனிக்க தொடங்க முடியும். ஏனெனில் கவனிக்கும் நிகழ்முறை ஒன்றுதான். நீங்கள் எதை கவனிக்கிறீர்கள் என்பது முக்கியமில்லை. எதை கவனித்தாலும் கவனிப்புத்தன்மையை நீங்கள் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள். பறவைகளை கவனியுங்கள். எல்லாம் ஒன்றுதான். ஒருநாள் உங்கள் சொந்த எண்ணங்களையும் உங்களால் கவனிக்க முடிபவர் ஆவீர்கள். பறவைகள் சற்று தூரத்தில் உள்ளன. உங்கள் எண்ணங்கள் சற்று அருகில் உள்ளன. இலையுதிர் காலத்தில் சருகுகள் மரங்களில் இருந்து வீழ்வதை கவனியுங்கள். நீங்கள் கவனிப்பு மிக்கவராக இருக்க உதவும் எதுவும் சரியே. நடக்கும்போது உங்கள் சொந்த நடையை கவனியுங்கள்.

ஒவ்வொரு அடியையும் கவனமாக எடுத்து வையுங்கள் என்று புத்தர் தன் சீடர்களுக்கு சொல்வது வழக்கம். உங்கள் சுவாசத்தை கவனியுங்கள் என்று அவர் சொல்வது வழக்கம். இது கவனிப்பதற்கான மிகவும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளில் ஒன்றாகும். ஏனெனில் நீங்கள் எங்கிருந்தாலும் ஒருநாளைக்கு 24 மணி நேரமும் தொடர்ச்சியாகக் கிடைக்கக்கூடியது சுவாசம். பறவைகள் ஒருநாள் பாடலாம், இன்னொரு நாள் பாடாது விடலாம். ஆனால் மூச்சோ எப்போதும் நம்மிடமே இருக்கிறது. உட்கார்ந்திருக்கும் போதும்

நடக்கும்போதும் படுத்திருக்கும் போதும் எப்போதும் அது இருக்கிறது. சுவாசம் உள்ளே வருவதையும் வெளியே போவதையும் கவனித்துக் கொண்டே இருங்கள்.

சுவாசத்தை கவனிப்பதல்ல முக்கிய விஷயம். கவனிப்பது எப்படி என்பதை கற்பதே முக்கிய விஷயம். ஆற்றுக்குப் போய் ஆற்றைக் கவனியுங்கள். சந்தையில் உட்கார்ந்து மக்கள் நடமாட்டத்தை கவனியுங்கள். எதை வேண்டுமானாலும் கவனியுங்கள். நீங்கள் ஒரு கவனிக்கிறவர் என்பதை மட்டும் நினைவில் வையுங்கள். தீர்ப்பிடுபவராக ஆகாதீர்கள். நியாயாதிபதி ஆகாதீர்கள். தீர்ப்பிட தொடங்கினாலே நீங்கள் ஒரு கவனிப்பவர் என்பதை மறந்துவிட்டிருக்கிறீர்கள். நீங்கள் தொடர்புடையவர் ஆகிவிடுகிறீர்கள். தரப்பு சேர்ந்து விட்டீர்கள். தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். "இந்த எண்ணத்தை நான் ஆதரிக்கிறேன். அந்த எண்ணத்தை நான் எதிர்க்கிறேன்." நீங்கள் தேர்ந்தெடுக்க ஆரம்பித்ததுமே நீங்கள் அதனுடன் உங்களை அடையாளப்படுத்துகிறீர்கள். ஆனால் கவனிப்பு என்பது எல்லா அடையாளத்தையும் நாசமாக்கும் முறை ஆகும்.

எனவே குருட்ஜீப் தன் நிகழ்முறையை 'அடையாளப்படுத்தாத நிகழ்முறை' என்று அழைத்தார். எல்லாம் ஒன்றுதான். அவரின் வார்த்தை தான் வேறு.

எதனோடும் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். மெது மெதுவாக கவனிப்பு என்னும் அறுதிக் கலையை ஒருவர் கற்கிறார். அதுதான் தியானம் முழுவதும், தியானத்தின்மூலம் ஒருவர் தன் சொந்த ஒளியை கண்டு கொள்கிறார். அந்த ஒளியை நீங்கள் உங்கள் ஆன்மா என அழைக்க முடியும். உங்கள் சுயம், உங்கள் கடவுள்- என நீங்கள் தேர்ந்தெடுக்கிற எந்தப் பெயரிலும் அழைக்க முடியும். அல்லது அதற்கு பெயர் கிடையாததால் நீங்கள் வெறுமனே அமைதி காக்கவும் முடியும். அது பெயரற்ற ஒரு அனுபவம். மகத்தான அழகுடையது, பரவசமானது, முழு மோனமானது. ஆனால் அது சாசுவதத்தின்- காலமின்மையின்- மரணத்துக்கு அப்பாற்பட்ட ஒன்றின் சுவையை உங்களுக்கு தெரிவிக்கிறது.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**உங்களுக்காக நான் சாகத்தயாரானால் மட்டுமே சரணாகதி நிகழுமா?**

**வீத் மார்க்,**

**எ**னக்காக நீ சாகு என நான் சொல்லவில்லை. அதற்கு நேர் எதிரானதையே சொல்லுகிறேன்: எனக்காக வாழச் சொல்லுகிறேன். எனக்காக நீ வாழ தொடங்கும்போது மட்டுமே சரணாகதி நிகழும். நான் சாவை ஆராதிப்பவன் அல்ல. நான் வாழ்வை ஆராதிப்பவன். உங்களுக்கு ஒருவித தியாகிப்பதவியை போதிப்பதற்காக நான் இங்கு இல்லை. அதெல்லாம் போதும்! ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அயோக்கியர்களுக்காக முட்டாள்கள் தியாகம் செய்து வந்திருக்கிறார்கள். சிலர் கிறிஸ்தவத்துக்காக செத்திருக்கிறார்கள். சிலர் - முகமதியத்துக்காக செத்திருக்கிறார்கள். சிலர் இந்து - இயத்துக்காக செத்திருக்கிறார்கள். எல்லோருமே செத்திருக்கிறார்கள்- ஏதோ சாவதுதான் லட்சியம் போல!- எவ்வாறு வாழுவது என்பதை யாருமே கற்பிக்கவில்லை.

கடவுளுக்காக வாழுங்கள். ஏனெனில் வாழ்வே கடவுள். கடவுள் சாவும்தான். ஆனால் நிறைவான வாழ்விலிருந்து வரும்போது மட்டுமே சாவு அழகானது; வாழ்வின் இறுதி மலர்ச்சியாக வரும்போது மட்டுமே சாவு அழகானது. சாவு ஒரு தியாகமாக வரும்போது அது அழகானது அல்ல. ஏனெனில் அப்போது நீங்கள் ஏதோ காரணத்துக்காக, ஏதோ நோக்கத்துக்காக, ஏதோ லாபத்துக்காகச் சாகிறீர்கள். அப்போது ஏதாவது சூழ்ச்சிக்கார அரசியல்வாதி, ஏதாவது சூழ்ச்சிக்கார புரோகிதன் தன் சுயநல நோக்கங்களுக்காக உங்களை ஒரு கருவியாக பயன்படுத்துகிறான். அவன் உங்களுக்கு வாக்குறுதிகளை வழங்குகிறான்தான். இல்லாவிட்டால் எவ்வாறு உங்கள் வாழ்வை அவனுக்காக பலியிட முன்வருவீர்கள்? உங்களுக்கு எல்லாவற்றையுமே அவன் வாக்களிக்கிறான்- மரணத்துக்குப் பின் என்ன நிகழுமென யாருக்கும் தெரியாது. எனவே மரணத்துக்குப் பிறகு கிடைக்குமென வாக்களிப்பது வெகு எளிதானது.

நான் உங்களுக்கு எல்லாவற்றையும் மரணத்துக்கு முன்பு கிடைப்பதாக வாக்களிக்கிறேன். மரணத்துக்கு பின்பு அல்ல. அது சூழ்ச்சிக்காரர்களின் வழி- அவர்கள்தான் செத்தபிறகு சிவலோகத்தை வாக்களிக்கிறார்கள். இப்போது நீங்கள் தியாகம் செய்யுங்கள். நீங்கள் செத்தபிறகு உங்களுக்கு பரிசுகள் தரப்படும்! ஆயின் சாவுக்குப்பின் என்ன ஆகும் என யாருக்குமே தெரியாது. நீ ஒரு ஜிஹாத்தில்- அதாவது புனிதப்போரில்- மடிந்தால் நீ பாவியாக இருந்தாலும் நேரடியாக சொர்க்கத்துக்குப் போவாய், ஏனெனில் நீ இறந்தது மார்க்கத்துக்காக என்கிறார்கள் முகமதியர்கள், கிறித்தவர்களின்

நிலைப்பாடும் இதுதான், எல்லா மதங்களின் நிலைப்பாடும் இதுதான்.

மேலும் சொர்க்கத்துக்கு போக யார்தான் விரும்ப மாட்டார்? சொர்க்க இன்பங்கள் எல்லாம்... நிரந்தரமானவை. இந்த வாழ்க்கையோ கணப்பொழுதே இருப்பது. கூடிய விரைவில் இந்த வாழ்க்கை முடியவே போகிறது. மேலும் கவலைப்பட்டுக் கொள்வதற்கு இந்தப் பிழைப்பில் என்ன இருக்கிறது? இது அசிங்கமானது, வேதனையானது, துன்பமயமானது, அவலமானது. இதே மனிதர்கள் தான் இந்த வாழ்க்கையை மிகவும் அவலம் நிறைந்ததாக ஆக்கியிருக்கிறார்கள்- எவரும் சாகவே விரும்பும் வண்ணம் அதை ஆக்கி வைத்திருக்கிறார்கள்.

ஒரு கதை கேள்விப்பட்டேன்:

இரண்டாம் உலகப்போர் தொடங்குவதற்கு சற்றே முன்பாக ஒரு பிரிட்டிஷ் அரசியல்வாதி அடால்ப் ஹிட்லரிடம் பேசிக்கொண்டிருந்தார். இந்த மடத்தனமான போரில் இறங்க வேண்டாம் என அவனை இணங்கச் செய்ய அவர் போயிருந்தார்: "இது யாருக்கும் உதவப்போவதில்லை. உலகம் முழுவதற்கும் இது அழிவு பயப்பதாகவே இருக்கும்."

ஆனால் அடால்ப் ஹிட்லர் பிடிவாதமாக இருந்தான். உண்மையில் இந்த ராஜதந்திரியின் வருகை ஆங்கிலேயரின் பலவீனத்தையே காட்டுகிறது என நினைத்தான். "நாங்கள் போரிடவே போகிறோம். எனவே நீங்கள் விரைவாக சரண டைந்தால் உங்களுக்கு தான் நல்லது. அனுகூலமானது. இல்லா விட்டால் நீங்கள் அனாவசியமாக படுகொலை செய்யப்படுவீர்கள், கொல்லப்படுவீர்கள், அழிக்கப்படுவீர்கள்" என்பதை இந்த ராஜதந்திரிக்கு நிரூபிக்க இதை ஒரு வாய்ப்பாக பயன்படுத்த நினைத்தான்.

தாம் சாதித்திருந்த விஞ்ஞான முன்னேற்றங்கள் அனைத்தையும் அவன் அவருக்கு காட்டினான். அவை போரில் பயன்படுத்தப்படப் போகின்றன என்பதை தெரிவித்தான். உண்மையாகவே அக்காலத்தில் அவையே மிகவும் முன்னேறிய வலிமை கொண்டதாக இருந்தன. மிகவும் வளர்ச்சிபெற்ற தொழில் நுட்பத்தை- குறிப்பாக போர்த் தொழில் நுட்பத்தை- அவர்கள் பெற்றிருந்தார்கள். பின், கடைசியாக "உங்களிடம் இருக்கும் இயந்திரங்களைவிட எங்கள் இயந்திரங்கள் பெரியளவிலும் சிறந்தவையும் ஆகும் என்பது

மட்டுமல்ல; எம் மனிதர்களும் சாகவும் துணிந்த மனிதர்கள்" என்பதையும் நிரூபிக்க விரும்பினான். விஷயத்தை முற்றிலும் தெளிவாக்கிவிட விரும்பியவனாய், ராஜதந்திரியுடன் தன் அறையைவிட்டு வெளியே வந்தான்.

அவர்கள் ஒரு கட்டடத்தின் நான்காவது மாடியில் நின்று கொண்டிருந்தார்கள். அங்கு மூன்று காவலர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

முதல் காவலனை சன்னல் வழியாக வெளியே குதிக்கும்படி ஆணையிட்டான். அவன் உடனே குதித்துவிட்டான்! ராஜதந்திரி திகைத்து நின்றார். அவரால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. ஒருதடவை கூட அவன் யோசிக்கவில்லை! ஹிட்லர் "குதி!" என்றதும் அவன் குதித்து விட்டான். ஏன், எதற்கு என்று கேட்கக்கூட இல்லை. அவரால் தன் கண்களை நம்ப முடியவில்லை.

பின் அவன் இரண்டாவது ஆளிடம் "குதி!" என்றதும் இரண்டாமவனும் குதித்தான். இச்சமயத்தில் ஆங்கில தூதர் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை உணரவந்தார்- இரண்டு உயிர்கள் பலியாகிவிட்டன. அவர் சன்னலில் இருந்து எட்டிப் பார்த்தார். கீழே அவர்களின் உடம்புகள் துண்டுதுண்டாக சிதறி சின்னபின்னமாகி சாலை முழுவதும் பரவிக்கிடந்தன.

அவர் பாதிக்கப்பட்டுவிட்டார். பயங்கரமாக பாதிக்கப்பட்டு விட்டார் என்பதை அடால்ப் ஹிட்லர் கண்டான். உண்மையாகவே அவர் அந்த அளவுக்கு அதிர்ந்துதான் போயிருந்தார். அத்தகைய மனிதத் தன்மையற்ற செயலை அவரால் நம்பமுடியவில்லை. காற்றடிக்கும் போதே தூற்றிக் கொள்ள நினைத்து அவன் மூன்றாவது ஆளையும் குதிக்கச் சொன்னான்.

இந்த தடவை ராஜதந்திரி உஷாராகி விட்டார். அவர் உடனே பாய்ந்து மூன்றாவது ஆளின் கையைப் பிடித்து சொன்னார், "நீ என்ன பைத்தியமா? ஏன் குதிக்கிறாய்? ஏன் சாவதற்கு இப்படி பறக்கிறாய்? உனக்கு வாழ விருப்பமில்லையா?"

அந்த மனிதன் அவரை கோபத்துடன் பார்த்து சொன்னான். "இதை ஒரு வாழ்க்கை என்கிறீரா? இதுதான் வாழ்க்கையா? இது வாழத் தகுதியானதா? சாவே எவ்வளவோ மேல்! வாழ்க்கை அவ்வளவு அவலம் நிறைந்ததாய் உள்ளது. சாவு அதிலிருந்து ஒரு விடுதலையாக உள்ளது. என் கையை விடு. நான் குதிக்கவேண்டும்."

வாழ்க்கை மிகுந்த அவலமாயிருப்பதால்- அடால்ப் ஹிட்லரே அதை அவலமாக்கி வைத்திருக்கிறான்- எல்லோருமே சாவதற்கு தயாராயிருக்கிறார்கள். முதலில் மக்களின் வாழ்வை நரகமாக்கி விடு. அவர்கள் வாழ்வை ரசித்து அனுபவிக்க விடாதே. இன்பத்தின் வேர்கள் அனைத்தையும் அழித்துவிடு. அவர்களுக்கு எல்லாவிதமான மனத் தடைகளையும் கற்பி; காமம் பாவம்; அன்பு செய்வது குற்றம், உண்பதும் குடிப்பதும் களிப்பதும் கீழ்த்தரமான உலகாயதரின் செய்கை என போதி. தன்னைத்தானே அழித்துக்கொள்வது எப்படி என்பதை அவர்களுக்கு சொல்லிக் கொடு. தன்னைத் தானே வருத்திக் கொள்ளும் வாழ்க்கைப் பாணிக்கு அவர்களைத் தயாராக்கு. அவர்கள் சுயசித்திர வதையில் கைதேர்ந்தவர்களாகிறார்கள். பின் இந்த பிழைப்பில் இருந்து கூடிய சீக்கிரம் விடுபடுவதை இயல்பாகவே விரும்ப ஆரம்பிப்பார்கள்.பின் அவர்களை அதற்கு தூண்டுவது மிக எளிதாக இருக்கும். உண்மையில் அவர்களை அதற்கு தூண்ட வேண்டிய தேவையே இல்லை. அவர்கள் ஏற்கெனவே தயாராக இருக்கிறார்கள். சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி காத்துக்கொண்டு இருக்கிறார்கள். ஒரு மதப்போரில்- சிலுவைப்போரில் சாக பெரிய வாய்ப்பு எழுகிற போதெல்லாம், யார் அதை தவறவிட விரும்புவார்? எல்லோருமே சாவதற்கே பிரியப்படுகிறார்கள்!

மார்க், சமயத்தைப்பற்றிய என் கருத்து அதுவல்ல.

உங்களுக்கு தெரியுமா? மார்க் என்றால் சிப்பாய், போர்வீரன் என்று பொருள். புராணரீதியில் அதன் பொருள் போர்க்கடவுள் என்பதாகும். நான் அவன் பெயரை மாற்றி இருக்கிறேன். ஆனால் அவன் பெயரை மாற்றியதன்மூலம் அவனை மாற்றுவது எளிதல்ல. அவனுக்கு வீத் மார்க் என பெயர் கொடுத்திருக்கிறேன். வீத் மார்க் என்றால் போரைக் கடந்துபோதல், சண்டையைக் கடந்து போதல், சண்டை என்னும் கருத்தையே கடந்துபோதல்.

ஆனால் அவன் கேட்கிறான்: உங்களுக்காக நான் சாகத் தயாரானால் மட்டுமே சரணாகதி நிகழுமா?

வீத் மார்க் யாரும் எனக்காக சாவதை நான் விரும்பவில்லை மற்றவரின் துன்பத்தில் இன்பம் காண்பவன் அல்ல நான். எனக்காக நீ வாழவே விரும்புகிறேன். எனக்காக நீ பூத்துக் குலுங்க விரும்புகிறேன். எனக்காக நீ கொண்டாட விரும்புகிறேன். உன் வாழ்வை முழுமையாக, சாத்தியமான முழுமையுடன், நீ வாழவேண்டும் என்றே விரும்புகிறேன். ஆம்- சாவு வரும்தான், ஆனால் ஒரு பூரண வாழ்விலிருந்து அது வரும்போது அதற்கே உரிய

அழகு இருக்கிறது. அப்போது அது சாவல்ல சாவே அல்ல. தெய்வீகத்தின் வாயில். ஆனால் நீ சாகத்தேவையில்லை. உன் பணி வாழ்வதே. அதுவே உன் சாதனா.

இதுவே என் போதனா முழுமையும். வாழு, ஏனெனில் கடவுளுக்கு உன் நன்றியறிதலை வெளிப்படுத்த அதுமட்டுமே வழி. அவர் உங்களுக்கு வாழ்வை தந்திருக்கிறார். நீங்களோ சாக விரும்புகிறீர்கள். எப்பேர்ப்பட்ட காரணமும் சாவதற்கு நியாயமான காரணமல்ல. வாழ்வதற்கே ஒவ்வொரு சாக்கையும் கண்டுபிடி. அதிக பட்சமாய் வாழ்ந்துவிடுங்கள். உங்களை முழுவதுமாக வாழ்ந்துவிடுங்கள். குறைந்த பட்சமாய் வாழாதீர்கள்.

அப்படித்தான் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். தம் வாழ்வின் மிக சிறு வீதத்தையே. தம் உள்ளாற்றலின் ஒரு சிறு வீதத்தை மட்டுமே மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்- அது 7% க்குமேல் இல்லை. உங்கள் மகா மகா ஞானிகளும்கூட தம் உள்ளாற்றலில் 15% க்குமேல் வாழவில்லை. ஆனால் உங்களால் 100% வாழ முடியும். எப்போதாவது ஒரு தடவைதான் ஒரு புத்தர். ஒரு கிருஷ்ணர். ஒரு இயேசு 100% வாழ்கிறார்.

உங்களால் 100% வாழ முடியுமானால், உங்கள் வாழ்வை மும்முரமாக அனுபவித்துத் தீர்க்க முடியுமானால், அப்போதே எனக்கு நீங்கள் சரண் அடைந்திருக்கிறீர்கள். வாழ்க்கைக்கு சரணடைவதே எனக்கு சரணடைவதாகும். வாழ்வுக்கு எதிராக நான் நிற்கவில்லை. வாழ்வின், அன்பின், சிரிப்பின் குறியீடாகவே நான் இருக்கிறேன்.

இது அதிக கடினம் என்பது உண்மைதான். அதை நான் அறிவேன். சாவது எளிது, மிகவும் எளிது, வாழ்வது கடினம், மிகவும் கடினம். சாவதற்கு அதிக நுண்ணறிவு தேவையில்லை. எந்த முட்டாளும் படைவீரனாக முடியும்- உண்மையில் முட்டாள்கள் மட்டுமே படைவீரர்களாக முடியும். தற்கொலை செய்து கொள்ளவும்எவராலும் முடியும். அதற்கு என்ன நுண்ணறிவு தேவை இருக்கிறது? எந்த மடையனும் அதை செய்ய முடியும். ஏதாவது மலையிலிருந்து, ஆற்றுக்குள், கடலுக்குள் குதித்தால் தீர்ந்தது. அல்லது அதைவிட சிறந்த, சுலபமான வழிமுறைகள் வந்துவிட்டன. சில தூக்கமாத்திரைகளை விழுங்கி அமைதியாக சாகலாம். ரொம்பவும் அலட்டிக்கொள்ள தேவையில்லை. ஏனெனில் மலை உச்சியில் இருந்து குதிப்பதற்கும் நீ தயங்கலாம். அதற்குக்கூட கொஞ்சம் மனோதிடம் வேண்டி இருக்கிறது. சில மாத்திரைகளை

முழுங்கி வைப்து அவ்வளவு பெரிய பிரச்சனை அல்ல, எளிதாக அதை நீ செய்ய முடியும். விஷ ஊசி போட்டுக்கொள்ளலாம்.

சாவதில் எந்த பெரிய மதிப்பும் இல்லை. வாழ்வதே உண்மையில் பெரிய சவாலை ஏற்பதாகும்- கணத்துக்கு கணம். ஆயிரத்தொரு பிரச்சனைகளோடு வாழ வேண்டி இருக்கிறது. ஆயிரத்தொரு பிரச்சனைகளின் ஊடாக வாழ வேண்டி இருக்கிறது. இருந்தும் நிதானத்தை தக்கவைத்துக்கொள்ள வேண்டி உள்ளது.

அதுதான் ஒரு சந்நியாசியின் வழி. சந்நியாசி ஒரு போர்வீரன் அல்ல. எனவே நீங்கள் தியாகிகளாகும்படி எதிர்பார்க்கப் படுவதில்லை. வாழ்வின் அன்பர்கள் ஆக இருக்கும் படியே எதிர்பார்க்கப்படுகிறீர்கள். அவ்வாறு வாழ்வை நேசிக்கும் அளவுக்கு நீங்கள் கடவுளின் அருகாமையில் இருக்கிறீர்கள். ஏனெனில் வாழ்வு என்பது அவரது பரிசுதான். அவரது பரிசை அழிப்பது என்பது அசிங்கமானது. சமயத்தன்மையற்றது, பாவம்.

வீத் மார்க், எனக்காக வாழக் கற்றுக்கொள். உனக்கு ஒரு பெரிய பணியை வழங்குகிறேன் என்பதை அறிவேன். மேலும் இது ஒரு வாழ்நாள் பணி சாவு என்பது ஒரே கணத்தில் நடந்துவிட முடியும். உண்மையிலேயே நீ துரதிருஷ்டசாலியாக இல்லாதவரை சாவு என்பது ஒரு கண நிகழ்வே.

முல்லா நசுருதீன் தற்கொலை செய்துகொள்ள விரும்பினார். மிகவும் திட்டமிட்டு செயல்புரியும் இயல்புடையவர் ஆதலால் சாத்தியமான எல்லா ஏற்பாடுகளையும் செய்தார்- ஒரு ஏற்பாடு தோல்வியற்றாலும் இன்னொன்றால் இறந்துவிடலாம் அல்லவா? அவர் ஒரு குன்றின் உச்சிக்கு கயிறு, மண்ணெண்ணெய், தீப்பெட்டி, துப்பாக்கி ஆகியவற்றை எடுத்துச் சென்றார். ஒரு அழகான இடத்தை கண்டுபிடித்தார். மலை உச்சியிலிருந்து கீழே இருந்த ஆற்றுக்கு நேராக சாய்ந்துநின்ற மரக்கிளையை தேர்ந்தெடுத்தார். அம்மரத்தில் தூக்குப் போட்டுக்கொள்ள ஏற்பாடுகளை செய்தார். கயிறேபோதும். அவர் செத்துவிடுவார் என்பதற்கு எல்லா வாய்ப்பும் இருந்தும் ஏதாவது பிசகு நேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்பதால் வேறு ஏற்பாடுகளையும் செய்தார்.

எனவே அவர் தன்னை தூக்கில் மாட்டுகிறார். தொங்குவதற்கு முன்பாக தன் உடலில் மண்ணெண்னையை ஊற்றுகிறார். ஆடையில் தீப்பற்ற வைக்கிறார். ஆனால் யாருக்கு தெரியும்? எனவே இறுதி எச்சரிக்கையாக தன்னை சுட்டுக்கொள்ளவும் செய்கிறார். பின் தொங்குகிறார். குண்டு கயிறை துண்டிக்கிறது. ஆற்றுக்குள்

விழுகிறார். ஆறு நெருப்பை அணைத்துவிடுகிறது. மறுநாள் நான் அவரை சந்தைத்தெருவில் சந்தித்தேன். "நசுருதீன் என்னாச்சு?" என்றேன்.

"அதிருஷ்டம்தான்!" என்றார். முழுக்கதையையும் சொன்னார். "உண்மையிலேயே ஆச்சரியமான விஷயம்தான்! எவ்வளவோ ஏற்பாடுகளை செய்திருந்தீர்களே?" என்றேன்.

அவர் சொன்னார், "ஆம், எவ்வளவோ ஏற்பாடுகளைச் செய்திருந்தேன். ஆனால் எனக்கு நீச்சல் தெரியாமல் இருந்தால் இறந்திருப்பேன்!" அவருக்கு நீச்சல் தெரிந்திருந்தால் தான் உயிரோடிருக்கிறாராம்!

இப்படி ஏதாவது நடந்தால் ஒழிய- இது மிகவும் அபூர்வம்- இருத்தல் முழுவதுமே உங்களுக்கு எதிராக சதி செய்தால் ஒழிய, உங்களால் மிக எளிதாக தற்கொலை செய்துகொள்ள முடியும். ஆனால் வாழ்வது என்பதோ நீண்ட நிகழ்முறை. அதற்கு துணிவு தேவை. நுண்ணறிவு தேவை. மடமை பயன்படாது.

உங்களுக்கு எந்த அளவுக்கு அதிக நுண்ணறிவு இருக்கிறதோ அந்த அளவுக்கு உங்கள் வாழ்க்கை தரமானதாக இருக்கும். உங்கள் வாழ்வில் மதிப்பு உயர்ந்ததாக இருக்கும். எந்த அளவுக்கு நீங்கள் தியானத்தன்மை கொண்டவராய் இருக்கிறீர்களோ அந்த அளவுக்கு வாழ்க்கை என்றால் என்ன என்பதை உண்மையாகவே நீங்கள் அறிந்துகொள்ள முடியும். அது கண்ணுக்குத் தெரிகிற கடவுள் வடிவமே அன்றி வேறல்ல. எப்பேர்ப்பட்ட காரணத்துக்காகவும் இதை அழிப்பது தவறு, பாவம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

எனக்காக சாவதற்காக நீ இங்கு இல்லை. வாழ்வது எவ்வாறு என்பதை கற்றுக்கொள்ளவே நீ இங்கு இருக்கிறாய். வாழ்வின் இறுதி நன்கொடையாக சாவு வரட்டும். மேலும் நீ சரியாக வாழ்ந்திருந்தால் சாவினூடாகவும் உன்னால் வாழ இயலும், சாவையும் நீ வாழ இயலும். அதுதான் மிகவும் அழகிய அனுபவம். ஏனெனில் மரணத்தில் வாழ்வதன் மூலமே நாம் மரணத்தைக் கடக்கவும் நித்தியத்துடன் ஒன்றவும் முடியும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**என்னால் இன்னும் என்னை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஏன் முடியவில்லை?**

**ஆனந்த லீனா.**

ஏனென்றால் நீங்கள் பூரணத்துவ வாதிகளாகும்படி கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள். பூரணத்துவம் என்னும் இலட்சியம் ஒருவராலும் அடையமுடியாத ஒரு லட்சியமாகும். பின், கண்டனம்- சுயகண்டனம் எழுகிறது. இவை உங்கள் மேல் ஆடப்பட்டுவரும் தந்திரங்கள்- இந்த சூழ்ச்சிகளைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். செம்மை இன்மையே வாழ்வின் வழி என்பதை அறிந்து கொள்ளுமளவுக்கு மனிதர் முதிர்ச்சியுள்ளவராயிருப்பதற்கான காலம் வந்துவிட்டது. எல்லமே பூரணமற்றே இருக்கிறது. பொருள்கள்/ விஷயங்கள் முழுமை பெறாதிருப்பது அழகாகவே இருக்கிறது. ஒவ்வொன்றும் செம்மையாயிருந்தால், ஒவ்வொருவரும் செம்மையாயிருந்தால், வாழ்க்கை மிகவும் மந்தமும் சலிப்புமாக இருக்கும். ஒரு கணத்துக்குக்கூட அதை சகித்துக்கொள்ள முடியாது.

பெர்ட்ண்ட் ரஸ்சலுடன் நான் முழுமையாக உடன்படுகிறேன்: தான் பரலோகம் செல்ல விரும்பியதில்லை என அவர் கூறுவது வழக்கம்- நகைச்சுவையாகவே இதை கூறினார். ஏனெனில் சொர்க்கத்தையும் நரகத்தையும் ஒருபோதும் நம்பியவரல்ல அவர். ஆனாலும் அவர் இப்படி சொல்வது வழக்கம்: "சொர்க்கம் இருப்ப தாகவே இருந்தாலும் நான் நரகத்துக்கு செல்லவே விரும்புவேன். ஏனெனில் நரகத்தில் உங்களுக்கு பொழுது நன்றாக போகும்."

மோட்சத்தில் உங்களுக்கு முற்றிலும் சலிப்பு ஏற்பட்டே தீரும். புனிதர்கள் மத்தியில் நீடுழிகாலத்துக்கும் வாழநேர்வதை கொஞ்சம் நினைத்துப் பாருங்கள்! மகாத்மாகாந்தி ஒருபக்கம் உட்கார்ந் திருப்பார். ஏராளமான சமண- இந்து- முகமதிய- கிறிஸ்தவ- புத்த புனிதர்கள் இருப்பார்கள்- அவர்களுடன் மட்டுமே வாழ வேண்டும்! அவர்களுக்கு காசுவைத்து சீட்டாடக்கூட தெரியாது! அவர்களுக்கு பீர்குடிக்கக்கூட தெரியாது! பீரா? கொக்க- கோலா குடிக்கக்கூட அவர்கள் தயாராக இருக்க மாட்டார்கள்! ஏனெனில் அதில் கொக்கெயின் இருக்கிறது. சொர்க்கத்தில் சிகரெட்டும் பிடிக்கமுடியாது. ஏனெனில் சிகரெட்டில் நிகோடின் உள்ளது. உண்மையில் இந்த புனிதர்களுடன் சேர்ந்து உயிர்வாழ்வதே அசாத்தியம். மேலும் அவர்கள் ஒருபோதும் சிரிக்கவும் மாட்டார்கள்- அரைகுறைகளான மனிதப்பிறவிகளுக்கே சிரிப்பு உரியது!

இயேசு ஒருபோதும் சிரித்ததில்லை என்று கிறித்தவர்கள் கூறுகிறார்கள். கிறித்தவர்கள் கூறுவது சரி என்றால், இயேசு முற்றிலும் தவறானவராகவே இருக்க வேண்டும். ஆனால் அவர்கள் கூறுவது சரியல்ல என்பதை நான் அறிவேன். இயேசு கண்டிப்பாக

சிரித்திருக்கவேண்டும்- அவரின் முழு வாழ்க்கையே அப்படிக் கூறுகிறது. வாழ்வின் சின்னச் சின்ன விஷயங்களையும் அவர் ரசித்தார். மதுவையும் அவர் ரசித்துப் பருகினார். உங்கள் புனிதர்கள் அவரை மோட்சத்துக்குள் அனுமதிப்பார்கள் என நான் எண்ணவில்லை. அவர்கள் அவரை குடிகாரன் என்று கூறி வெளியே வீசி விடுவார்கள். அவர் குடிகாரர்களுடனும், சூதாடிகளுடனும் வேசியருடனுமே வாழ்ந்தார். உங்கள் புனிதர்கள் மிகவும் கோபம் கொள்வார்கள். இயேசுவை சிலுவையில் அறைந்த ராபிகள் சொர்க்கத்தில் அனுமதிக்கப்படலாம். ஆனால் இயேசுவை உள்ளே விடமாட்டார்கள். அவர் மிகவும் மனிதத்தனமாக, மிகவும் உயிர்ப்புடன், மிகவும் செம்மையற்றவராக இருக்கிறார்.

சொர்க்கத்தில் நல்ல தோழமை காணக் கிடைக்காது என பெர்ட்ரண்ட் ரசல் கூறுவது சரிதான். அங்கு நீங்கள் சோகமான முகங்களை, உம்மணா மூஞ்சிகளைத்தான் பார்ப்பீர்கள். எல்லோருமே ஏறக்குறைய செத்தவர் போல் இருப்பார். மேலும் அவர்கள் அங்கே என்ன செய்து கொண்டிருப்பார்கள்? வம்பளந்துகொண்டிருக்க மாட்டார்கள். போதிக்ககூட மாட்டார்கள்- ஏனெனில் யாரிடம் போய் போதிப்பார்கள்? அவர்கள் எல்லோருமே போதகர்களாச்சே! சொர்க்கத்தில் சீடர்களையே நீங்கள் பார்க்க முடியாது- எல்லோரும் குருமார்களாகவே இருப்பார்கள்! மேலும் பெண்கள் சொர்க்கத்துக்கு போக முடியாது என சமணர்கள் கூறுகிறார்கள். இப்போது அதன் முழு சலிப்பான தன்மையும் உங்களுக்கு தெரிகிறதா? இந்த அசிங்கமான, அரைப்பட்டினிச் சாமியார்களே இருப்பார்கள். ஒரே ஒரு பெண்கூட இருக்கமாட்டாள்! அது ஒரு பாலைவனம் போல்- ஒரு சோலைவனம்கூட இல்லாத பாலைவனம்போல் இருக்கும்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஒரு அறையில் ஒரு டஜன் ஆண்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். அங்கு ஒருவிதமான துடிப்பு நிரம்பி இருக்கிறது. அப்போது ஒரு அழகிய பெண் நுழைகிறாள். உடனே அந்த துடிப்பு மாறுகிறது. பாலைவனம் இப்போது பாலைவனமாக இல்லை. ஒரு சோலை வந்துவிட்டது. அவர்கள் எல்லாம் உயிர்ப்புள்ளவர்கள் ஆகிறார்கள். அவர்களின் குண்டலினிகள் உயரத் தொடங்குகின்றன! தூங்கி விழுந்தவர்கள் நிமிர்ந்து உட்கார்கிறார்கள். "விழி-எழு!" என புத்தர்கள் சொல்லிக் கொண்டேதான் இருக்கிறார்கள், ஆனால் மக்கள் கவனிப்பதில்லை. ஆனால் சோபியாலாரெனை மட்டும் உள்ளே விடுங்கள்.

உடனடியாக எல்லாப் புனிதர்களும் விழித்தெழுகிறார்கள். முழுமையாக விழிப்பு பெறுகிறார்கள்!

ஆனால் ஒரு பெண்ணாகிலும் சொர்க்கத்தில் பிரவேசிக்க முடியாது என்கிறார்கள் சமணர்கள். ஒரு பெண் மதத்தன்மையாக- ஆன்மிகத் தன்மையாக இருந்தால் அடுத்தப்பிறவியில் அவள் ஒரு ஆணாக பிறப்பாள். பின்பே அவளால் வானகம் செல்ல முடியும் என்கிறார்கள். ஆனால் ஆண் உடம்போடுதான் போகமுடியும். பெண்ணின் உடம்போடு ஒருபோதும் நுழைய முடியாது- ஏதோ ஆன்மாக்களில் ஆண்- பெண் உண்டு என்பது போல! என்ன மடத்தனம் இது? ஆனால் பயம்தான்... பெண் ஒரு குழப்பத்தை உண்டு பண்ணிவிடமுடியும், மேலும் பலநூற்றாண்டுகளாக ஒரு பெண் கூட சொர்க்கத்தில் நுழையாதிருந்து, திடீரென ஒருத்தி பிரவேசித்தால் இயல்பாகவே அங்கு மாபெரும் களேபரமே நடக்கும்! மிகப்பெரும் குழப்பம். அமளி மற்றும் ஒரு பெரிய சண்டையே வெடிக்கும். எல்லா புனிதர்களும் ஒருவர் குரல்வலையை ஒருவர் நெரிப்பார்கள்- ஒரு ஜிகாத்= புனிதப்போர் ஒரு பெண்ணுக்காக அங்கே மூளும்! எல்லோருமே அதற்காக சாகத் தயாராக இருப்பார்கள்!

பூரணத்துவம் உடையவர்களாக விளங்கும்படி உனக்குச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. எனவேதான், லீனா, இந்த பிரச்சனை எழுகிறது. இது உன் பிரச்னை மட்டுமல்ல. எல்லோருக்கும் இது பிரச்சனைதான்.

ஆனால் சில விஷயங்களை நினைவில்கொள். முதலாவது: தீமை/பாவம் அனைத்தும் உள்ளார்ந்த வீரியமுடையவையே- இவற்றை நிலைமாற்றுவதே போதும்.

தீமையைக்கூட ஏற்றுக்கொள்ளலாம். ஏனெனில் தீமை என்பது நிலைமாற்றம் பெறத் தேவையாயிருக்கும் உள்ளார்ந்த வீரிய ஆற்றல்தான். கோபம் என்பது உள்ளாற்றல் உடையது- அதை ஏற்றுக்கொள். நீ கோபத்துடனேயே இருக்க வேண்டும் என்று நான் கூறவில்லை. ஏற்பின்மூலம் கோபத்தை நீ கருணையாக நிலைமாற்ற முடியும். அதே ஆற்றல்தான் கருணையாக ஆகிறது. உன் வாழ்வு முழுக்க காமத் தன்மையோடேயே இரு என்று சொல்லவில்லை. மாறாக காம ஆற்றலே அன்பாக ஆகிறது. அன்பின் ஆற்றலே பிரார்த்தனையாக ஆகிறது. அதை நிலைமாற்றிக் கொண்டே செல். ஆனால் தொடக்கத்திலேயே அதை நீ நிராகரித்து விட்டால் அதை

எப்படி நிலைமாற்ற போகிறாய்? அதை நீ சபித்தால் உனக்கும் உன் சொந்த ஆற்றலுக்கும் இடையே ஒரு தடையை எழுப்புகிறாய். அப்போது நிலை மாற்றம் சாத்தியமில்லாமல் போகிறது. நீ எதிராக ஆகிறாய், பிளவுபட்டவளாக ஆகிறாய். நீ பிரிக்கப்படுகிறாய். உன்னுடனேயே ஓயாதுமோதலில் இருக்கிறாய்; உன் வாழ்க்கை முழுவதும் விரயமாகிப் போகிறது.

நீங்கள் பல தவறுகளை செய்கிறீர்கள் என்பதை அறிவேன். ஆனால் தவறுவது மனித குணம். அதைப்பற்றி விசனப்படுவதற்கு ஒன்றுமில்லை. அதைக்குறித்து அலட்டிக்கொள்வதற்கு ஒன்று மில்லை. அப்படித்தான் நாம் கற்றுக் கொள்கிறோம். அப்படித்தான் பையப்பைய நாம் முதிர்ச்சி அடைகிறோம். ஒருபோதும் ஒருதவறும் செய்யாத மனிதன் ஒருபோதும் வளர்வதும் இல்லை. வழிதவறுவதன்மூலமே ஒருவர் கற்றுக்கொள்கிறார்.

எனவே லீனா, மறுபடியும் மறுபடியும் உன்னை நீ மன்னிக்கக் கற்றுக்கொள். ஏனெனில் வாழ்க்கை என்பது ஓயாத வளர்ச்சி. உன்னையே நீ ஆயிரக்கணக்கான தடவைகள் மன்னித்துவிட வேண்டி இருக்கும். மேலும் நீயே உன்னை மன்னிக்க முடியாவிட்டால் வேறு யாரால் உன்னை மன்னிக்க முடியும்? ஆனால் தவறான மதிப்பீடு களை- தவறான லட்சியங்களை உனக்கு படிப்பித்திருக்கிறார்கள். அவை உன் தலையில் பாரமாக அழுத்திக் கொண்டுள்ளன. சின்னச் சின்ன விஷயங்களைப்பற்றி கவலைப்படாதே- அவற்றை அனுபவி. ஒவ்வொரு வரும் பொய் சொல்கிறார்; ஏமாற்றுகிறார், பாசாங்கு செய்கிறார்- ஆம். நீயும்தான், மிக நிச்சயமாக நானும்தான்.

புத்தர்களும்கூட போலி உத்திகளை உருவாக்க வேண்டி இருக்கிறது. உங்களை நான் சிலவற்றில் ஈடுபடுத்த சூழ்ச்சிகள் செய்ய வேண்டி உள்ளது. இல்லாவிட்டால் அவற்றில் நீங்கள் ஒருபோதும் ஈடுபட மாட்டீர்கள். நான் சில உத்திகளை உருவாக்க வேண்டி உள்ளது. எல்லா உத்திகளும் போலியானவையே. அவை போலியாக இருக்கக் காரணம் உங்கள் நோய்களும் பொய்யானவையே என்பதுதான்.

எடுத்துக்காட்டாக, நீங்கள் உங்களின் அகங்காரத்தினால் அவதிப்படுகிறீர்கள். "சரணடை" என்கிறேன் நான். முதல் விஷயம், அகங்காரம் என்பதே ஒரு போலி உருப்படிதான். அகங்காரம் என்று ஒன்று இல்லை. நீங்கள் கனவுதான் கண்டுக்கொண்டு இருக்கிறீர்கள். அதை நீங்கள் ஜோடித்து வைத்திருக்கிறீர்கள். ஆனால் வேறு என்ன

செய்வது? நீங்கள் அதை ஒரு பெரிய விஷயமாக ஆக்கிவைத்திருப்பதால் "தயவுசெய்து, அதை என்னிடம் சரணடைந்துவிடுங்கள்" என்கிறேன். அது நிலவ வில்லை என சொல்வதற்கு பதிலாக- அப்படிச் சொன்னால் அதை உங்களால் இப்போது புரிந்துகொள்ள முடியாது- "அதை என்னிடம் கொடுத்துவிடு, சரணடை" என்று சொல்வது சிறந்ததாக இருக்கிறது. உங்களுக்கும், உங்களின் அகங்காரத்தை வைத்து குறைந்தபட்சம் ஏதோ ஒன்றைச் செய்ய முடிகிறதே- அதை சரணடைக்க முடிகிறதே- என்று ஆறுதலாக இருக்கிறது. உங்களின் தர்க்கத்துக்கு அது ஒத்துச்செல்வதாக இருக்கிறது.

இது ஓமியோபதியைப் போன்றது நோய் பொய்யானது. மருந்தும் பொய்யானது- வெறும் சர்க்கரைக் குளிகைதான். பயப்பட ஒன்றுமில்லை. பொய்யான நோய்களால் நீங்கள் துன்புறும் போதெல்லாம்- பெரும்பாலும் நூற்றுக்கு 75 சதவீத நோய்கள் பொய்யானவையே என்பதை நினைவில் கொண்டால்- மருத்துவ மையத்திலிருக்கும் என் டாக்டர்களை வாதிப்பதைவிட நேராக நரேந்திர போதி சத்துவனிடம் போங்கள். அவன் ஒரு ஓமியோபதியன்- ஆனால் தன் சொந்த தலைவலியைக்கூட அவனால் குணப்படுத்த முடியவில்லை! வாழ்நாள் முழுதும் தலைவலியால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறான். மேலும் அவனால் தன்னை குணப்படுத்தவும் முடியாது- அதுதான் சிக்கலே- ஏனெனில் அந்த மாத்திரை உருண்டைகள் எல்லாம் வெறும் சர்க்கரை உருண்டைகளே என்பதை அவன் அறிந்திருக்கிறான். ஆனால் மற்றவர்களுக்கு அவன் உதவுகிறான். பலருக்கும் அவன் உதவி இருக்கிறான். பலபேரின் தலைவலிகளை அவன் குணப்படுத்தி இருக்கிறான். அவனே ஆச்சரியப்படுகிறான், "என்ன இது? என் தலைவலியை மட்டும் ஏன் என்னால் குணப்படுத்த முடியவில்லை?"

பொய்யான மருந்துகளில் உள்ள சிக்கலே இதுதான். அவற்றைப் பற்றி தெரிந்துகொண்டால் அவை பயனற்றவையாகின்றன. ஆனால் அடுத்தவர்களை நீங்கள் எளிதாக குணப்படுத்தலாம். எனவேதான் பலவித 'பதிகள்' உள்ளன. அலோ பதியைதவிர பிற பதிகள் எல்லாமே ஏறக்குறைய உளவியல் சிகிச்சையே. ஆனால் அவற்றுக்கு பெரிய ஆதரவு/பலன் இருப்பதற்கான எளிய காரணம். நீங்கள் அலோபதியரிடம் போய், உங்கள் நோய் பொய்யாக இருந்தால், அவர் சொல்லுவார், "எல்லாம் உங்கள் மனதில்தான் இருக்கிறது" அது உங்களுக்கு ருசிப்பதில்லை: "நோய் என் மனதிலா இருக்கிறது?"

அந்த கருத்தை நீங்கள் சுத்தமாக விரும்புவதில்லை. உடனடியாக யாராவது ஆயுர்வேத வைத்தியரை தேட தொடங்குகிறீர்கள். அவர்கள் புத்திசாலிகள்- அவர்கள் மிகவும் புத்திசாலிகளாகவே இருக்க வேண்டி இருக்கிறது. ஏதாவது ஓமியோபதியரை, இயற்கை மருத்துவரை தேட தொடங்குகிறீர்கள்- நூற்றுக்கணக்கான மருத்துவமுறைகள் கிடைக்கின்றன. எல்லா 'பதி'களும் வேலை செய்கின்றன. அவை எல்லாமே உதவுகின்றன உதவி என்னும் முறையில் அவை பயனுள்ளவையாகவே உள்ளன.

ஆயுர்வேத வைத்தியரிடம் நீங்கள் போனால், அவர் ஒருபோதும் 'எல்லாம் உங்கள் மனதில்தான்' என்று சொல்வதில்லை. அவர் உங்கள் நோயைப்பற்றி விரிவாக பேசுவார். உங்கள் நோயை, பரிசீலிப்பார். உங்கள் கடந்த பிறவிகளைப் பற்றிக்கூட ஆராயலாம். உங்கள் கையை பாாக்கலாம். ரேகைகளை கவனிக்கலாம். உங்கள் ஜாதகத்தைக்கூட எடுத்து வரும்படி கேட்கலாம். இப்போது இந்த மனிதர் தான் செய்வது இன்னது என்பதை அறிந்திருப்பதாக தோன்றுகிறது. அந்த முட்டாள் அலோபதி டாக்டரோ வெறுமனே "உன் தலையில்தான் பிரச்சனை" என்றான்! இவரோ உன் அகங்காரத்தை வீங்க வைக்கிறார்: நோய் உண்மையாகவே மிகவும் அபாயகரமானது. அதற்கு நீண்ட சிகிச்சை அவசியம். மிக கவனமான சிகிச்சை அவசியம். இதைகவனிக்க உண்மையாகவே ஒரு மருத்துவ மேதையால்தான் முடியும். அப்படிப்பட்ட சரியான வைத்தியரிடமே இப்போது நீங்கள் வந்து சேர்ந்திருக்கிறீர்கள் என அவர் உங்களிடம் கூறுகிறார். மேலும் அவரால் உங்களுக்கு உதவவும் முடிகிறது. உண்மையில் எந்த மதிப்புமற்ற- எந்த மருத்துவப்பயனுமற்ற- எல்லா விதமான சரக்குகளையும் அவர் உங்களுக்கு கொடுப்பார். ஆனால் அவரை நீங்கள் நம்ப ஆரம்பித்ததுமே... ஓமியோபதியரிடம் போனாலோ அவர் உங்களின் முழு வாழ்க்கை வரலாற்றையும் கேட்பார்- உங்களுக்காக 3 மணிநேரம் ஒதுக்குவார்.

போலி நோய்களால் துன்பப்படுவார்கள். தம் நோய்களைப் பற்றி பேசும் நோயாலும் துன்பப்படுகிறார்கள். தம் நோய்களைக் குறித்துப் பேச அவர்கள் பெரிதும் விரும்புகிறார்கள். அவர்கள் தம் நோய்களை பெரிதுபடுத்துகிறார்கள். பூதாகாரப்படுத்திக் காட்டுகிறார்கள். பெருமையாக பேசுவதற்கு அவர்களிடம் வேறு ஒன்றும் இல்லை. ஆனால் பெரியபெரிய நோய்கள் இருக்கிறது. இந்நிலையில் ஓமியோபதியர் உங்களின் அகங்காரத்தை தாங்குகிறார்.

எனக்குத் தெரிந்த ஒரு பிரபல ஓமியோபதி டாக்டர் இருந்தார். அவர் பெயர் ஏதோ முகர்ஜி. இந்திய அளவில் அவர் பெயர் பெற்றவராக இருந்தார். உங்கள் கடந்த கால நோய்களைப்பற்றி, விட்டால் 3 நாட்களுக்கு அவர் பேசிக்கொண்டே இருப்பார்- உங்கள் குழந்தைப் பருவத்தில், உங்களுக்கு 3 வயதாகி இருந்தபோது இருந்து தொடங்குவார். உங்களால் எவ்வளவு பழைய கதைவரை போய் நினைவுபடுத்தி சொல்லமுடியுமோ அதிலிருந்து எல்லாவற்றையும் குறித்துக்கொள்வார். நீங்களோ ஒரு தலைவலிக்காக மட்டுமே அவரிடம் வந்திருப்பீர்கள்! ஆனால் அவர் 3 வயதுக்கு போவார்- அங்கிருந்துதான் இதன் வரலாறே ஆரம்பிக்கிறது என்பார். "எந்த நோயும் ஒரு தனித்த நிகழ்வல்ல, எல்லாம் ஒன்றுக்கொன்று உறவுள்ளது". அது பொருத்தமாகவே தோன்றகிறது" ஒவ்வொன்றும் ஒவ்வொன்றுடனும் தொடர்புடையது எதுவுமே தொடர்பற்று இல்லை. எல்லாமே எல்லாவற்றுடனும் இணைந்துள்ளது. எனவே மூலகாரணத்துக்கு நாம் போகாதவரை... அவர் கூறுவார், "நான் இலைகளை தொடுவதில்லை, வேர்களுக்கே போய்விடுகிறேன்."

ஒருமுறை நான் என் தகப்பனாரை அவரிடம் கூட்டிச் சென்றேன். என் அப்பாவுக்கு ஓமியோபதியில் ஆர்வம் அதிகமாக இருந்தது. எந்த அளவுக் கென்றால் அவர் தன் குழந்தைப்பருவம் பற்றிப் பேச தொடங்கி அப்படியே தன் தாத்தாவின் குழந்தைப்பருவம் பற்றிப் பேச தொடங்கி விடுவார். எப்போதுமே அவர் அங்கிருந்தே தொடங்கினார்.

டாக்டர் முகர்ஜி கொஞ்சம் கலவரம் அடைந்தவராக தோன்றினார். நான் சிரித்தேன். நான் சொன்னேன். "இப்போது உமக்கு சரியான நோயாளி கிடைத்துவிட்டார்! இப்போது 3 நாட்கள் போதாது என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள்!"

என் அப்பா எப்போதுமே தன் தாத்தாவின் நோய்களில் இருந்தே தொடங்குவத வழக்கம். பின் தன் தந்தையின் நோய்களைப்பற்றி சொல்வார். பின் தன் நோய்களைப்பற்றி சொல்வார். இதற்கு ஏறக்குறைய 10 நாட்கள் பிடித்தது!

டாக்டர் முகர்ஜி ஒருநாள் என்னை தோட்டத்தில் சந்தித்தார். அவர் சொன்னார், "நான் களைத்துவிட்டேன்! தயவுசெய்து உம் அப்பாவை வேறு ஏதாவது மருத்துவரிடம் கூட்டிப்போம்! அவர் ஒரு அபாயகரமான ஆசாமியாய் இருக்கிறார்! இப்படி ஒரு மனிதரை ஒருபோதும் நான் பார்த்ததில்லை. ஆனால் நான் அவரிடம் ஒன்றும் சொல்ல முடியவில்லை- ஏனென்றால் அவர்தான் ஓமியோபதி

தத்துவத்தை துல்லியமாக பின்பற்றுகிறார். ஏனெனில் ஒருமனிதனின் வாழ்க்கையில் வரும் நோய்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை என்றால் மகனின் நோய்கள் அப்பாவின் நோய்களுடனும் அப்பாவின் நோய்கள் தாத்தாவின் நோய்களுடனும் தொடர்புடையவை என்பதும் நிச்சயமானதே."

நான் சொன்னேன், "அவருடைய மற்ற முன்னோரைப்பற்றி அவருக்கு ஒன்றும் தெரியவில்லை. தன் தாத்தா வரைமட்டுமே தெரிந்திருக்கிறார் என்பதற்காக நீங்கள் மகிழ்ச்சி அடைய வேண்டும்! இல்லாவிட்டால் அவர் தன் நோய்பற்றி சொல்லத்தொடங்குவதற்கே ஆண்டுக்கணக்கில் ஆகிவிடும்!" இத்தனைக்கும் அவருடைய நோய் தான் என்ன? 2,3 நாளாக அவருக்கு வயிறு கொஞ்சம் சரியில்லை. அதற்கு காரணமும் எனக்கு தெரியும். அவர் வெள்ளரிக்காய் சாப்பிடும் போதெல்லாம் அவர் வயிறு கெட்டுவிடும். அதுதான் ஒரே காரணம்- வெள்ளரிக்காயை தவிர வேறெதுவுமில்லை! அப்பாவுக்கும் தாத்தாவுக்கும் போகத் தேவையே இல்லை.

நான் முகர்ஜியிடம் சொன்னேன், "உங்களால் ஓமியோபதி தத்துவம் எவ்வளவு ஆபத்தானது என இப்போது தெரிகிறதா? நீங்கள் ஓமியோபதி டாக்டர் என்றால் அவர் ஓமியோபதி பேஷண்ட் எனவே be patient I அவரை பொறுமையாக கவனியுங்கள். எனவே தான் அவரை உங்களிடம் கொண்டுவந்தேன். அவர் உங்களை குணப்படுத்தி விடுவார்! அவரது பிரச்சனை மிக எளியது. அதற்கும் எந்த நோய்க்கும் சம்பந்தமில்லை. அவர் வெள்ளரிக்காய் தின்றுவிட்டார். அது எப்போதும் அவருக்கு வயிற்று உபாதையை உண்டு பண்ணுகிறது- அவ்வளவேதான்!"

ஓமியோபதி உங்களுக்கு உதவுவது எப்படியென்றால் உங்கள் நோய்களை அது சிரத்தையுடன் ஏற்றுக்கொள்கிறது. நீங்கள் உண்மையில் விரும்புவதும் அதைத்தான். உங்கள் ஆசையும் அதுவே தான்; உங்களுக்கு கவனிப்புத் தேவை. நீங்கள் சொல்வதையெல்லாம் ஒரு மருத்துவர் அமைதியாக கவனித்துக் கொண்டிருந்தால்...

உளப்பகுப்பாய்வின் மொத்த ரகசியமும் இதுதான். குறிப்பாக பிராய்டிய முறையின் ரகசியம்: எதையும் செய்யாமலே நோயாளிக்கு அது உதவுகிறது. உளசிகிச்சை நிபுணர் கவனித்தபடி மட்டும் இருக்கிறார். நோயாளி மாதக்கணக்கில் வருஷக்கணக்கில்கூட- பேசிக் கொண்டிருப்பார். மருத்துவர் மிகவும் பொறுமையாக, பேசாமல் கவனித்துக் கொண்டு இருக்கவேண்டும். அவர் கவனித்தாலோ கவனிக்காவிட்டாலோ, அதுகூட முக்கியமில்லை,

குறைந்தது, மிகவும் கவனிப்பதாக பாசாங்கு செய்தாலும் போதும், அதுவே உதவிவிடுகிறது.

புத்தர்கள் பல பொய்யான முறைகளை வகுத்திருக்கிறார்கள். உண்மையில் எல்லாமுறைகளும் பொய்யாகவே இருந்துதீரும். ஏனெனில் உங்கள் ஆன்மிக நோய்கள் அனைத்தும் பொய்யான வையே. ஏனெனில் உங்கள் ஆன்மிக சுயத்துக்கு ஒருபோதும் வியாதி உண்டாக முடியாது. நோய் உண்டாவது என்பது உங்களின் நம்பிக்கை மட்டுமே. உங்களின் அந்த நம்பிக்கையை இப்போது நீங்கள் இருக்கும் மனதுக்கு ஏற்புடையது ஆகமுடிகிற இன்னொன்றைக் கொண்டு அழிக்க வேண்டி இருக்கிறது.

லீனா, கவலைப்படாதே.

என்னால் இன்னும் என்னை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்கிறாய்.

ஏன்? அப்படி நீ என்ன செய்துவிட்டாய்? இங்குமங்குமாய் சில தவறுகள். யாரிடமாவது ஒருதடவை நீ ஒரு பொய்யை சொல்லி இருக்கலாம் அல்லது யாரையாவது ஏமாற்றி இருக்கலாம். அதனால் என்ன? வாழ்க்கை முழுவதும் ஒரு நாடகம்- அதில் நாமெல்லாரும் நடிகர்கள். அதில் சிறிது ஏமாற்றும் இருந்தால் முற்றிலும் சரிதான்- அது வாழ்வை கொஞ்சம் கூடுதல் சாரமுள்ளதாக ஆக்குகிறது. இல்லாவிட்டால் ஒவ்வொருவரும் வெறும் உண்மையை மட்டுமே சொல்லிக் கொண்டிருப்பார்...

எதிர்கொள்ளுதலிலும் (என்கவுண்ட்டர்) முழுமை அனுபவத்திலும் (ஜெஷ்ட்டால்ட் Gestalt) பங்கெடுக்கும் சில முட்டாள்களுக்கு இப்படி நேர்கிறது. அவர்கள் உண்மையை எல்லோரிடமும் சொல்லத் தொடங்குகிறார்கள்! முட்டாள்கள் முட்டாள்களாகவே இருக்கிறார்கள்- அவர்கள் எதையும் புரிந்து கொள்வதில்லை.

அவர்கள் எனக்கு எழுதுகிறார்கள்- "பகவான், இப்போது நான் சிக்கலில் மாட்டி இருக்கிறேன். என்கவுண்ட்டரில் நான் பங்கெடுத்தேன். ஒருவர் நிஜமானவராகவும் உண்மையானவராகவும் இருக்கவேண்டும் என அறிந்துகொண்டேன். எனவே, பல தடவைகளிலும் இன்னொரு பெண்ணுடன் போகும் விருப்பம் எனக்கு எழுவதை என் மனைவியிடம் சொன்னேன். இப்போது அது பெரிய சிக்கலாகிவிட்டது- என் மனைவி சிம்ம சொப்பனமாக ஆகி இருக்கிறாள். நாங்கள் ஓயாமல் சண்டை போட்டுக் கொண்டிருக்

கிறோம். இந்த என்கவுண்ட்டருக்கு முன் எல்லாம் அமைதியாக போய்க்கொண்டிருந்தது. இப்போது என்கவுண்ட்டர் முடிந்து விட்டது. தீர்த்தா போய்விட்டான். ஆனால் என் மனைவியுடன் என்கவுண்ட்டர் (நேருக்கு நேர் சண்டை) தொடர்கிறது! மேலும் இப்போது இதற்கு எந்த முடிவும் இராதென தோன்றகிறது. இப்போது நான் என்ன செய்வது?"

இவ்வளவு முட்டாளாக நீ இருக்கக்கூடாது. என்கவுண்ட்டர் குழுவில் நிஜத்தன்மையோடு இரு- பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்! நிஜத்தன்மையுடன் இருக்க முடியவில்லை என்றால் அப்படி இருப்பதாக நடி. நிஜமாக இருப்பதை உணர். மாறாக இந்த அபத்தத்தை போகும்பக்கமெல்லாம் எடுத்துச்சென்று உனக்கு நீயே சிக்கலை உருவாக்காதே.

நினைத்துப்பார்: 24 மணி நேரத்துக்கு மட்டும் பூமியில் உள்ள ஒவ்வொருவரும் கலப்பற்ற உண்மையையே பேசுவது என முடிவுசெய்தால், உலகமே இருக்காது- முடிந்துவிடும்! உன் மனத்துக்குள்ளேயே கருதிப் பார். 24 மணி நேரத்துக்கு... ஒவ்வொருவரும் வெறும் உண்மையை மட்டுமே பேசினால்... யாரும் உனக்கு நண்பராக இருக்கமாட்டார். உலகமுழுவதிலும் உனக்கு 2 நண்பர்கள் கூட தேறமாட்டார்கள். எல்லா ஜோடியும் பிரிந்துவிடும். குழந்தைகள் பெற்றோர்களிடமிருந்து போய்விடு வார்கள். பெற்றோர்கள் தம் பிள்ளைகளிடமிருந்து போய்விடு வார்கள். எல்லாம் முடிந்துவிடும்! எந்த வாடிக்கையாளரும், எந்தக் கடைக்கும் வரமாட்டார்கள். உலகம் முழுதும் உடனடியாக நின்றுவிடும்- ஒரே அடியில் முழு உலகமும் நிர்வாணம் அடைந்துவிடும்!

இந்த உலகத்துக்கு சில பொய்களும் தேவையாக உள்ளன. அதுவாழ்வை மென்மையாக ஆக்குகிறது. அது உதவுகிறது. பொய்கள் மசகு எண்ணையை போன்றவை.

லீனா, உன்னை நீ இருக்கிற நிலையிலேயே ஏற்கத்தொடங்கு. கவனமாயிரு, உன்னிப்பாயிரு. 90% நிலைமாற்றம் அடைந்துவிடும்- மற்ற 10% இன்னும் திறமைமிக்கதாகிவிடும்!

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**இங்கு எத்தனை பிரிட்டிஷ் நங்கைகள் இருக்கிறார்கள்?**

**யாத்ரா.**

நல்வசமாக. அதிகம்பேர் இல்லை மூவர் மட்டுமே இருக்கிறார்கள் ஒருத்தி, பிரேம் லிசா. ஆனால் இவள் புதியவள்- மிகப் புதியவள். இவள் உருகிவிடுவாள் என்றே நம்புகிறேன். அவள் மிக எளிதாக மனம் புண்படுகிறாள். அன்பினால்- பிரிட்டிஷ்காரர் களுக்கு எதிராக நான் எதுசொன்னாலும் அவள் புண்படுகிறாள்.

அன்று ஒருநாள் அவள் எனக்கு எழுதினாள், "பகவான், ஆஸ்திரேலியர்கள் மிகவும் நல்லவர்கள் அவர்கள் மிகச்சிறந்த பிரிட்டிஷ் நீதிபதிகள் சிலரால் ஆதியில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் ஆவார்கள்!"

நீதிபதிகள் ஒருபோதும் அவ்வளவு நல்லவர்கள் அல்ல. மிகநல்ல கிரேக்க நீதிபதிகள்தான். சாக்ரடீசுக்கு மரணதண்டனை தீர்ப்பு விதித்தார்கள். மிகவும் அருமையான நீதிபதிகள்- உயர்மட்ட ராபிகளும் மாபெரும் ரோம சட்டவல்லுநர்களும் ஆளுநரும்- தான் இயேசுவுக்கு மரண தண்டனை விதித்தார்கள். அவர்கள் உயர்கலாச்சாரமும் உயர்படிப்பும் பெற்றவர்கள். இயேசுவோ மேல்கலாச்சாரம், மேல்படிப்பு அற்றவர். சாதாரண தச்சனின் மகன். பாட்டாளிவர்க்கத்தை சேர்ந்தவர். போந்தியுஸ் பிலாத்து நிச்சயமாக சமுதாயத்தின் உச்ச வகுப்பைச் சேர்ந்தவன்தான். ஆனால் பிலாத்து சமுதாயத்தின் உயர்மட்ட அடுக்கைச் சேர்ந்தவன் என்பதாலேயே. மிகச்சிறந்த ரோம ஆளுநர்களில் ஒருவன் என்பதாலேயே, அவன் நல்லவன், இயேசு கெட்டவர் என நீ நினைக்கிறாயா? சாக்ரடீஸ் கெட்டவர். அந்நாட்களில் ஏதென்சில் இருந்த நீதிபதிகளில் நிச்சயமாக மிகச்சிறந்த நீதிபதிகள்... ஏதென்ஸ் கண்டதைப்போல் அத்தகைய கலாச்சாரத்தை, அத்தகைய உயர் நாகரிகத்தை, எந்த நகரமும் ஒருபோதும் கண்டதில்லை. ஆனால் உண்மை யார் பக்கம்?

என் சார்பை நீ கேட்டால் எப்போதும் நான் பாவப்பட்ட குற்றவாளிகள் மற்றும் பாவிகளின் பக்கமே இருக்கிறேன். புனிதர்களின் பக்கமும் நீதிபதிகளின் பக்கமும் அல்ல.

ஆம். ஆஸ்திரேலியாவை முதலில் அடைந்தவர்கள் குற்றவாளிகள்தான். அமெரிக்காவின் கதையும் அதுவே. அமெரிக்காவை முதலில் அடைந்தவர்கள் குற்றவாளிகளும் பாவிகளும்தான். ஏனெனில் பாவிகளும் குற்றவாளிகளும்தான் அதிக வீரம். அதிக சாகசம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் பூர்சுவாக்கள் அல்ல. பூர்சுவா வர்க்கமோ ஒருபோதும் துணிச்சல் கொண்டதாய் இல்லை. நீதிபதிகளோ எப்போதும் அதிகார நலன்களுக்கே சேவைசெய்து வந்திருக்கிறார்கள்.

மேலும் எது சரி, எதுதவறு என உண்மையில் யாருக்குத் தெரியும்?

ஒரு தடவை லாவோ சு நீதிபதியாக ஆக்கப்பட்டார். நாட்டின் மிகச்சிறந்த ஞானிகளில் அவர் ஒருவர் என அறிந்த சீன சக்கரவர்த்தி அவரையும் ஒரு நீதிபதியாக நியமித்தான். அவர் தப்பிவிட விரும்பினார். அவர் மறைந்து போக விரும்பினார். ஆனால் சக்கரவர்த்தி மிகவும் வற்புறுத்தினான். அவர் சொன்னார், "இல்லை, நீர் ஒரு மிகச்சிறந்த ஞானி. நீரே என் பிரதம நீதிபதியாக இருக்க வேண்டும்."

"சரி" என்றார் அவர். மன்றத்துக்கு முதல் வழக்கு வந்தது: ஒரு திருடனை கையும்களவுமாக பிடித்திருந்தார்கள். லாவோசு அவனுக்கு 6 மாத சிறைத்தண்டனை வழங்கினார். திருட்டுக் கொடுத்த பணக்காரனுக்கும் 6 மாத சிறைத்தண்டனை விதித்தார்.

பணக்காரன் கேட்டான், "உமக்கு என்ன பைத்தியமா? எனக்கும் ஆறுமாதம் சிறையா? எதற்காக?"

லாவோ சு சொன்னார், "உண்மையில் உன்னிடம் நான் மிகவும் தாட்சணியமாகவே நடந்திருக்கிறேன். உனக்கு ஓராண்டு சிறைத் தண்டனை தரவேண்டும். நகரத்தின் மொத்த செல்வத்தையும் நீ சுருட்டிக் கொண்டிருக்கிறாய்- நீயே மூலமுதல் குற்றவாளி. இந்த மனிதன் இரண்டாவதாக மட்டுமே வருகிறான். அனைத்து செல்வத்தையும் நீ குவித்திரா விட்டால் இவன் திருடுவதற்கு தேவையே இருந்திருக்காது. திருடும் அவசியத்தை உருவாக்கியவனே நீதான். உண்மையில் நீதான் குற்றவாளி!"

பணக்காரன் சக்ரவர்த்தியிடம் போனான்: அவன் சொன்னான், "என்ன அக்கிரமம் இது! இப்படி இதற்குமுன் தாங்கள் கேள்விப் பட்டதுண்டா? இதற்கு ஏதாவது முன்னுதாரணம் இருக்கிறதா?"

அரசனும் கவலைப்பட்டான். இந்த சாதாரண பணக்காரனே ஒரு குற்றவாளி என்றால் பின் சக்கரவர்த்தி எப்பேர்ப்பட்டவன்? அவன் உடனடியாக லாவோ சு வை அவரது பொறுப்பிலிருந்து அகற்றினான். அவன் சொன்னான், "நீர் பெரிய ஞானியாக இருக்கலாம். ஆனால் நீர் தேவை இல்லை. உம்மால் ஒரு நீதிபதியாக இருக்க முடியாது. நீதிபதி என்றால் சட்டதிட்டங்களைப் பின்பற்ற வேண்டும்."

லாவோ சு சொன்னார், "நான் உலகப்பொதுச் சட்டத்தை பின்பற்றுகிறேன்."

அரசன் சொன்னான், "உலகப்பொது சட்டத்தைப்பற்றி கவலை இல்லை. நான் தீர்மானித்த சட்டத்தையே பின்பற்ற வேண்டும்."

லாவோசு சொன்னார், "உன் சட்டம் முற்றிலும் அபத்தம். நான் தாவோவை பின்பற்றுகிறேன். நீயும் குற்றவாளிகளில் ஒருவன்தான்."

அந்த நீதிபதிகள் யார்? யாருக்கு அவர்கள் சேவகம் செய்தார்கள்? யாரை அவர்கள் பிரதிநிதித்துவப்படுத்தினார்கள்? அவர்கள் அதிகார வர்க்க சுயநலக் கும்பல்களையே பிரதிநிதித்துவப் படுத்தினார்கள்.

ஆனால் லிசாவுக்கு கோபம் வந்தது. இங்கிருக்கும் பிரிட்டிஷ் நங்கை அவள். பேருரையின்போது கூட அவள் கருப்புக்கண்ணாடி அணிந்தே உட்கார்கிறாள். அவளது முகபாவனையை, அவளது கண்களைக்கூட என்னால் பார்க்க முடியவில்லை- சாத்தியமே இல்லை. இதுவே மிகவும் பிரிட்டிஷ்தனமானதுதான்! கருப்புக் கண்ணாடிகளுக்கு இங்கு என்ன தேவை? ஏற்கெனவே இங்கு அதிக இருட்டாயிருக்கிறது. சாதாரணமாக பார்ப்பதே கனமாயிருக்கிறது. மக்கள் எனக்கு எழுதுகிறார்கள்: "பகவான், எங்களால் உங்களை பார்க்க முடியவில்லை. நாங்கள் கண்ணாடி போட தொடங்க வேண்டுமா?" ஆனால் லிசாவோ கருப்புக்கண்ணாடி அணிந்திருக் கிறாள்- அவள் கண்களைப் பார்ப்பதே அசாத்தியமாய் இருக்கிறது. இது மிகவும் ராஜதந்திரமானது, மிகவும் பிரிட்டிஷ்தனமானது ஆனாலும் அவள் உருகுவாள்" அவள் என் வலையில் விழுந்துவிட்டாள். இனி வெளியேற வழி இல்லை. இதற்கு காலம் பிடிக்கும். ஒரு பிரிட்டிஷ் நங்கை உருகி சந்நியாசி ஆவதென்றால் கஷ்டமான காரியம்தான். அது அத்தகைய மாற்றமாய், அத்தகைய நிலை மாற்றமாய் இருக்கிறது.

இரண்டாவது பிரிட்டிஷ் நங்கை சோமேந்திரா! இந்த இரண்டாவது பிரிட்டிஷ் நங்கை பெண் வடிவில் இருப்பதில்லை. ஆனால் நான் உருவத்தை கவனிப்பதில்லை. உருவமற்றதையே கவனிக்கிறேன். இப்போதுதான் அவன் முதல் தடவையாக சிரிக்கிறான். இல்லாவிட்டால், நான் சிரிப்புகளை சொல்லிக் கொண்டே இருப்பேன். அவன் குனிந்து தரையை பார்த்துக் கொண்டே இருப்பான்!

மூன்றாவது பிரிட்டிஷ் மங்கை இன்னும் சந்நியாசி ஆகவில்லை எனவே அவள்- பெயரை நான் உங்களுக்கு சொல்ல முடியாது. ஆனால் அவள் இங்கு 7 மாதங்களாக இருந்து வருகிறாள். சந்நியாசம்

மேற்கொள்வதா வேண்டாமா இருப்பதா இல்லாதிருப்பதா என்று சிந்தித்துக்கொண்டே இருக்கிறாள். அதிகம் சேக்ஸ்பியரை படித்தவள் போலிருக்கிறது! ஏழு மாதங்கள்... மேலும் 7 வருடங்கள்கூட போதுமென்று நான் நினைக்கவில்லை! அவள் பெயரை நான் சொல்ல முடியாது ஏனெனில் ஒருவர் சந்நியாசி ஆகாதவரை நான் அவரிடம் மிகவும் கண்ணியமாக மிகவும் கவுரவமாக மிகவும் பிரிட்டிஷ்தனமாகவே நடந்து கொள்கிறேன். வானிலை முதலியவை பற்றி மட்டுமே பேசுகிறேன். உண்மையான பிரச்சினைகளை பேசுவதில்லை. நீங்கள் சந்நியாசி ஆனதும் என் உண்மையான சுயரூபத்தை காட்டத் தொடங்குகிறேன். எனவே நான் காத்திருக் கிறேன். ஆனாலும் அவளும் அதிக அவகாசம் எடுத்துக் கொண்டிருக் கிறாள். எனக்கே பொறுமை போய்க்கொண்டிருக்கிறது... இன்னும் நான் காத்திருக்க முடியுமா என நானும் சந்தேகப்பட தொடங்கி விட்டேன். அந்த யோசனையையே நான் விட்டுவிட வேண்டுமோ?

யானைகளுக்கும் பூச்சிக்களுக்கும் இடையே நடந்த கால்பந்து ஆட்டத்தை கண்டுகளிக்க பல்லாயிரக்கணக்கில் கால்பந்து விசிறிகள் வந்து குவிந்துவிட்டார்கள். முதல் பாதியில் பூச்சிக்குழு 10 ஆட்டக்காரர்களுடன் களத்துக்கு வந்தது ஆட்டகளம் ரணகளமாயிற்று அரை இறுதியில் ஊதல் ஒலித்த போது யானைகள் 10க்கு பூச்சியம் என்ற கணக்கில் ஜெயித்திருந்தார்கள்.

ஆட்டத்தின் இரண்டாம் பாதி தொடங்கியதும் பூச்சிக் குழுவின் 11வது ஆட்டக்காரராக பூரான் (நூறுகால் பூச்சி) களத்தில் பிரவேசித்தது. உடனே முழு ஆட்டமும் தலைகீழாக மாறிவிட்டது. பூரான் யானைக் குழுவின் முகப்புக்குள் பலமுறை புகுந்து புறப்பட்டு வந்தது. கடைசி ஊதல் ஒலித்தபோது பூச்சிகள் 399க்கு 10 என்ற கணக்கில் வென்றிருந்தார்கள். விளையாட்டு வீரர்கள் களத்தை விட்டு புறப்பட்டபோது, யானைத் தலைவன் பூச்சித் தலைவனிடம் சாவகாசமாக வந்தான்.

“உங்கள் முன்னணி ஆட்டக்காரரை ஏன் முதல் பாதியில் நீங்கள் இறக்கவில்லை?” என்று கேட்டான்.

“அதுவா?” என்ற பூச்சித்தலைவன் விளக்கினான். “அவர் தன் காலணிகளை அணிந்துகொள்ள அவ்வளவு நேரமாகிறது!”

நானும் காத்திருக்கிறேன். இந்த பெண்மணி ஒரு பூரானாக பிரிட்டிஷ் பூரானாக- இருக்கவேண்டும்! அவள் தயாராகிறாள், தயாராகிறாள். தயாராகிக் கொண்டுதான் இருக்கிறாள்... அவள்

எனக்கு எழுதிக் கொண்டே இருக்கிறாள், "என்ன செய்ய? நான் சந்நியாசம் பெறுவதா வேண்டாமா?" "பெறு" என அவளிடம் நான் சொல்ல முடியாது. ஏனெனில் இது இத்தகைய ஆபத்தான விஷயம். அதற்கான பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. ஒரு பிரிட்டிஷ்காரர் தானாக முன்வந்தால் அது நல்லது. ஏனெனில் இது எளிதான காரியம் அல்ல- சந்நியாசத்துக்குப் பின்னும் கடினமான விஷயமாகவே இருக்கப் போகிறது. சந்நியாசம் வாங்குவதா வேண்டாமா என்பதை யோசிக்கவே ஏழு மாதங்கள் எடுத்தால்; உண்மையாகவே என்னுடன் ஒன்ற, இசைய இங்கு கோலோச்சும் நகைச்சுவையை, சிரிப்பை, மகிழ்ச்சியை, பரவசத்தை, இசையை, கவிதையை புரிந்துகொள்ள எத்தனை ஆண்டுகள் எடுக்கும்?

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**பேருரை ஆற்றும்போது உங்கள் மனதை நீங்கள் உபயோகப் படுத்துகிறீர்களா?**

**பிரசாந்த்.**

என்ன பேருரை? இதை நீ பேருரை என்கிறாயா? என்ன மனம்? நான் உச்சரிப்பதெல்லாம் முற்றிலும் மனமற்றது என்பதை எவரும் எளிதில் காணமுடியும். நான் ஒரு பைத்தியக்காரன். என்ன மனம்?

ஒரு பைத்தியக்காரன் இன்னொரு பைத்தியக்காரனின் வீட்டுக்கு வந்து கதவை தட்டினான். சன்னலை மேலிருந்து திறந்தவன் "நான் வீட்டில் இல்லை!" என கத்தினான்.

கீழே நின்ற பைத்தியம் நிமிர்ந்து பார்த்து சொன்னான், "நல்லது, அப்படியானால் நானும் இங்கு வரவில்லை என்பதில் மகிழ்கிறேன்!"

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**போர்த்துகீசியர்களைப் பற்றி தயவு செய்து சில சிரிப்புகள் சொல்வீர்களா? பரிதாபத்துக்குரிய போர்த்துகீசிய சந்நியாசிகள் உங்களால் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டதாக உணர்கிறோம்.**

**தியானோ.**

இன்றிலிருந்து அப்படி இருக்காது.

ஒரு பின்னிரவில் மானுவல் குடிபோதையால் தள்ளாடியபடி வீட்டுக்கு வரும் வழியில் ஒரு கல்லறையை கடந்து வந்தான். அதன்மேல் தடுக்கி விழுந்தான்.

அவன் முகத்தின் முன் ஒரு கை கல்லறைக்கு வெளியே நீட்டியது. ஒரு குரல் அலறியது. "உதவுங்கள், உதவுங்கள். என்னை வெளியே எடுங்கள். நான் உயிரோடு தான் இருக்கிறேன்!"

போர்த்துகீசியன் நடுக்கத்துடன் அந்தக் கையை மண்ணால் மூடியபடி பதில் சொன்னான். "இல்லை, நீ உயிரோடில்லை உன்னை புதைத்ததுதான் சரியில்லை!"

போர்த்துகீசிய முரடர் கும்பல் ஒன்று ஒரு வங்கிக்குள் புகுகிறது.

"கையைத் தூக்குங்கள் எல்லோரும்!" தலைவன் ஜோச்சிம் கத்துகிறான். "இப்போது இங்கு கொள்ளை அடிக்கப் போகிறோம்! மானுவல், எல்லாரையும் கழிப்பறையில் வைத்து பூட்டு அண்டோனியோ, மேலாளரை இங்கு கொண்டு வா!"

மேலாளர் ஜோச்சிமிடம் கொண்டு வரப்படுகிறார். நடுங்கிக் கொண்டிருக்கிறார். பணப்பெட்டியின் சாவியை அவரிடம் கேட்கிறான் ஜோச்சிம்.

"உனக்கு புண்ணியமாய் போகட்டும். தயவு செய்து என்னைக் கொன்று விடாதே! சாவியை வீட்டில் வைத்துவிட்டேன்!" மேலாளர் அழுகிறார்.

"கவலைப்படாதேயப்பா" என்கிறான் ஜோச்சிம். "இப்போது நடந்தது ஒத்திகை மட்டுமே- நாளைக்குத்தான் நிஜமான கொள்ளை!"



# 14

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**உண்மையை ஆசிப்பதும், அதற்காய் ஏங்குவதும், அதை தேடுவதும், உண்மையற்றதைத் தவிர்ப்பதும் தேவையில் லையா? உண்மையைத் தேடுவதும், பொய்மையை துறப்பதும் அவசியமில்லையா?**

**திவ்யானந்தா,**

உண்மையைத் தேட வழியில்லை. ஏனெனில் உண்மை தொலைவில் இல்லை உண்மை "அங்கே" எங்கோ இல்லை- எனவே அதனிடம் நீங்கள் போக வேண்டியதில்லை. அதை நீங்கள் அடைய வேண்டியதில்லை. உண்மையை நீங்கள் தேட வேண்டியதில்லை. ஏனெனில் தேடுபவரின் சொந்த ஜீவனே அது. தேடுபவரை எப்படி நீங்கள் தேடமுடியும்? அறிகிறவரை எப்படி நீங்கள் அறிய முடியும்? அது சாத்தியமில்லை. உங்களை நீங்களே சந்திக்க முடியாது. நீங்களே உண்மையாக இருக்கிறீர்கள்.

எனவே எல்லா தேடலும் வீண். ஆனால் இதையும் தேடலின் மூலமாக மட்டுமே கற்றுக்கொள்கிறோம். எல்லா தேடலும் பயனற்றது என்னும் மகத்தான முக்கியமுள்ள உண்மையைகூட. தேடுவதன் மூலமாக மட்டுமே நாம் கற்கிறோம். இதை கற்க வேறு வழியும் இல்லை. தேடி தோற்கிறீர்கள். மறுபடியும் தேடித் தோற்கிறீர்கள். தேடுவதுதான் கண்டடையாததன் காரணம் என்பது மெதுமெதுவாக உங்களுக்கே தெளிவாகிறது. பின் தேடல் தானே கழண்டுவிடுகிறது. அப்படி தேடல் நின்றதும், ஏக்கம், ஆசை போனதும், நீங்கள் முழு அமைதியாய் ஆனதும், தேடுபவரின் மனம் என்பதே மறைந்ததும்; நீங்கள் இதுவரை தேடிக் கொண்டிருந்தது

எப்போதும் உங்களுடனேயே இருந்து வந்துள்ளது என்பதை கண்டு ஆச்சரியப்படுகிறீர்கள்.

யோக்கா கூறுகிறார்:

உண்மையைத் தேடவோ மாயையை விலக்கவோ அவசியமில்லை.

ஏன்?- ஏனென்றால் அதற்காக பார்ப்பதே தவறான திசையில் தொடங்குவதாகும். அவ்வாறே மாயையை விலக்குவதும் மதியீனமாகும். ஏனெனில் மாயை என்றாலே இல்லாத ஒன்று என்றே பொருள். இல்லாததை எவ்வாறு தவிர்கக முடியும்? இருக்கிறதை எவ்வாறு தேட முடியும்? உள்ளது உள்ளது. இல்லது இல்லை.

மேலும் யோக்கா கூறுகிறார்:

> **இரண்டுமே வெறுமையில் அடங்கியுள்ளன. இரண்டுக்கும் உருவுமில்லை வரம்புமில்லை என்பதை அறிகிறோம். அருவம் என்பது வெறுமையுமல்ல, வெறுமையின்மை யுமல்ல, புத்தரின் நிஜ யதார்த்தமே அது.**

நாம் முற்றிலும் சூனியமாகவே ஆக வேண்டி இருக்கிறது. 'முற்றிலும் சூனியம்' என நான் கூறும்போது வெறுமையாவதைப் பற்றி மட்டும் நான் கூறவில்லை. 'முற்றிலும் சூனியமாதல்' என்றால் வெறுமையும் வெறுமையாதல். இல்லாவிட்டால் தந்திரக்கார மனம் வெறுமை என்னும் புதிய கருத்தை இப்போது தொற்றிக் கொள்ள முடியும்.

யோக்காவின் சீடர் ஒருவர் திரும்பத்திரும்ப அவரிடம் வந்து கொண்டிருந்தார். தன் ஆழ்நிலை தியானத்தில் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை வந்துவந்து சொல்லி யோக்காவிடம் அடிவாங்கிக் கொண்டிருந்தார். அவர் எதைச் சொன்னாலும் அடி விழும். அவர் என்ன சொல்கிறார் என்பதுபற்றி கவலையில்லை. அவர் அழகழகான அனுபவங்களை கொண்டுவந்தார். குண்டலினி எழுகிறது. மாபெரும் ஒளி தெரிகிறது. உள்ளே நறுமணம் வீசுகிறது. ஒரு கை ஓசை கேட்கிறது என தியானத்தின் மூலம் மற்றவர்கள் அடைந்ததாக அவர் கேள்விப்பட்டதை எல்லாம் கொண்டுவந்து கொண்டிருந்தார். ஆனால் மறுபடி மறுபடி அடிவாங்கினார்.

ஒருநாள் அவர் முழுமையான நம்பிக்கையுடன் வந்தார். "இன்று ஆசான் என் அனுபவத்தை ஏற்றுக்கொள்ள- அங்கீகரிக்க போகிறார்-

நேரம் வந்துவிட்டது. "ஏனெனில் அன்று அவர், "நான் வெறுமையை அடைந்துவிட்டேன்" என்பதை சொல்வதற்கு வந்திருந்தார். இதுதான் இறுதியானது. இதற்கு மேல் என்ன இருக்க முடியும்? வெறுமைக்கு அப்பால் என்ன இருக்க முடியும்? இன்று முதல்முறையாக தனக்கு அடிவிழாது என அவர் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தார்- ஆனால் அவர் பேசத் தொடங்கும் முன்பே ஆசான் அவரை அடித்தார்.

"இது ஆனாலும் அதிகம்! நான் இன்னும் சொல்லவே தொடங்கவில்லையே!" என்றார் அவர்.

யோக்கா சொன்னார், "நீ என்ன சொல்கிறாய் என்பதைப் பற்றி பிரச்சனையில்லை. நீ அதை சொன்னாயா சொல்லவில்லையா என்பதும் பொருட்டில்லை- நான் அறிவேன். நீ இந்த அறைக்குள் வந்ததுமே மறுபடியும் ஏதாவது மடக் கருத்துடன்தான் வந்திருக்கிறாய் என்பதை நான் அறிந்திருக்கிறேன்."

அவர் சொன்னார், "ஆனால் ஐயனே, நீங்கள் கவனிக்க வேண்டும். இது ஒரு மடக் கருத்து அல்ல, இது எல்லா புத்தர்களது அனுபவம்!"

யோக்கா சொன்னார், "அப்படி என்று நீ சொல்கிறாய். இன்னொரு அடி வாங்க ஆசைப்படுகிறாய் போலும்!"

அதற்கு சீடர் சொன்னார், "ஐயா, நான் வெறுமையை அனுபவித்திருக்கிறேன்!"

யோக்கா சிரித்தார். அவரை அடித்துவிட்டுச் சொன்னார். "அதையும் வீசியெறி! எல்லாம் குப்பை!"

சீடர் சொன்னார். "வெறுமையை எப்படி வீசமுடியும்? மற்ற எல்லாவற்றையும் என்னால் எறிந்துவிட முடியும்!" இப்போதுதான் முதல்முறையாக ஆசானுடன் அவர் வாதிட்டார். அவரது வாதம் தர்க்கபூர்வமாக சரியாகவே தோன்றியது. ஒளி அனுபவத்தை நீங்கள் வீசிவிடமுடியும். ஏனெனில் அதை அனுபவிப்பவர் நீங்களே. சக்தி அனுபவத்தை நீங்கள் வீசிவிட முடியும். ஏனெனில் அதை அனுபவிப்பவர் நீங்களே. எந்த அனுபவத்தையும் எறிந்துவிட முடியும். ஆனால் வெறுமை அனுபவத்தை எவ்வாறு நீங்கள் வீசி எறிய முடியும்? வீசியெறியத்தான் ஒன்றுமில்லையே!

சீடர் சொன்னார், "வெறுமையை வீசியெறிவது எவ்வாறு?"

அப்போது ஆசான் அவரை கடுமையாக தாக்கி சொன்னார், "அப்படியானால் அதை செய்துமுடி- ஏதாவது செய். ஒன்று வீசி ஏறி அல்லது செய்துமுடி."

அதற்கு சீடர் சொன்னார், "நீங்கள் என்னை என்ன செய்ய சொல்லிக் கேட்கிறீர்கள்? அதுவே பொறுமை. அதை என்னால் செய்து முடிக்க முடியாது. வீசிஎறியவும் முடியாது."

ஆசான் சொன்னார், "இப்போது நீ வெறுமை என்னும் கருத்தைத் தொற்றி இருக்கிறாய். அது உண்மையான வெறுமையல்ல சூனியம் அல்ல. இப்போது உன்னுள் வெறுமை எனும் கருத்து நிரம்பி இருக்கிறது. ஒருமுறை அது ஒளி என்பதாக இருந்தது. ஒருமுறை சக்தி என்பதாக இருந்தது. ஒருமுறை வாசமாக இருந்தது. இப்போது வெறுமை ஆக இருக்கிறது. இது முகவரி மாற்றமே தவிர வேறல்ல. இதையும் நீ வீசிஎறியாதவரை நீ உண்மையாகவே சூனியமாவதில்லை. சூனியமான மனிதர் வெறுமையாயும் இருப்பதில்லை. வெறுமை இன்றியும் இருப்பதில்லை. அந்த மோன நிலையில் அனுபவத்துக்கான எந்தப் பொருளோ உள்ளடக்கமோ இல்லாதபோது உணர்வு மட்டுமே இருக்கிறபோது, அவதானிக்க ஒன்றுமின்றி அவதானர் மட்டுமே இருக்கிறபோது, பார்ப்பதற்கு ஒன்றுமின்றி பார்ப்பவர் மட்டுமே இருக்கிறபோது- ஒருவர் சத்தியத்தை அடைகிறார்."

யோக்கா கூறுகிறார்:

> **நம் உணர்வு தெளிவான கண்ணாடி போன்றது பிரபஞ்சத்தை அது இசைவாக பிரதிபலிக்கிறது நம் உணர்வும் பிரபஞ்சமும் ஒன்றாகவே உள்ளன.**

முற்றிலும் சூன்யமாக ஆனதும் நீங்கள் ஒரு கண்ணாடியாக இருக்கிறீர்கள். உங்கள் அக உண்மையை மட்டுமல்ல. முழு பிரபஞ்சத்தின் உண்மையையும் நீங்கள் அறிந்தவராக இருக்கிறீர்கள். அவை இரண்டும் இரண்டல்ல. ஒரே நிகழ்வின் இரண்டு அம்சங்களே. ஒரே நாணயத்தின் இரு பக்கங்களே- உள், வெளி.

> **வெறுமையை அடைவதற்காக இருத்தலை உதறித்தள்ளும் போதே எல்லாவிதமான தொந்தரவுகளும் எழுகின்றன. அதுவும் நோய்க் கூறானதுதான்.**

யோக்காவின் இந்த மகத்தான முக்கியத்துவமுடைய வார்த்தைகளை கவனியுங்கள். யோக்கா மாபெரும் ஸென் ஆசான்களில் ஒருவர் அவர் கூறுகிறார்:

> **வெறுமையை அடைவதற்காக இருத்தலை உதறித்தள்ளும் போதே எல்லாவிதமான தொந்தரவுகளும் எழுகின்றன. அதுவும் நோய்க் கூறானதுதான்.**

**இது நீரில் மூழ்குவதிலிருந்து தப்பிப்பதற்காக நெருப்பில் பாய்வதைப் போன்றது.**

இருத்தலை உதறித்தள்ளாதீர்கள். மாயையான ஏதோ ஒரு உண்மைக்காக, கடவுள் மீதான மாயையான ஏதோ ஏக்கத்தால் சாதாரண உயிர்வாழ்க்கையை உதறித் தள்ளாதீர்கள். அந்த வேலையை மூடர்களுக்கு விட்டுவிடுங்கள். விவேகியான மனிதர் வெறுமனே கணத்துக்கு கணம் வாழ்கிறார்- எதையும் தேடும் ஆசையோ எதையும் கண்டுபிடிக்கும் எதிர்பார்ப்போ இல்லாமல் வாழ்கிறார். அந்தந்த கணத்தில் ஆனந்தமாக வாழ்கிறார் அவர். அவரது வாழ்வு மிகவும் சாமானியமானது. அசாதாரணமாக விளங்கும் ஆசை அவருக்கில்லை. புத்தராகும் ஆசை அவருக்கில்லை, அதனாலேயே அவர் ஒரு புத்தராக இருக்கிறார். அசாதாரணமாக இருக்கும் ஆசை அவருக்கில்லை. அதனாலேயே அவர் அசாதாரணமாக இருக்கிறார். ஏனெனில் ஒவ்வொரு சாதாரண மனிதருக்கும் அசாதாரணமாக ஆகும் ஆசை இருக்கிறது. அசாதாரண மனிதர்களுக்கு மட்டுமே அந்த ஆசை இருக்காது.

**உண்மையை கிரகிக்க நாம் முயன்றாலோ அல்லது பிழையிலிருந்தும், பிரமைகளில் இருந்தும் தப்பிக்க நாம் விழைந்தாலோ, நாம் பாகுபாடு செய்கிறோம்; செயற்கையான தவறான நிலைப்பாட்டை மேற்கொள்கிறோம்.**

"இது உண்மை, அது உண்மையல்ல" என்று நீங்கள் சொன்னதுமே நீங்கள் பாகுபாடு செய்ய ஆரம்பித்துவிட்டீர்கள்- பாகுபடுத்துவதோ மனதின் நோய். அது மனதின் செயல்பாடு. "இது சரி, அது தவறு. இது மெய், அது பொய். இது உலகியல்; அது ஆன்மிகம். இது உலகாயதம். அது சமயம்" என பாகுபாடு செய்வது மனம். பாகுபடுத்த தொடங்கினதுமே அதற்கு முடிவிராது. மனதின் இறுகிய பிடியில் நீங்கள் இருக்கிறீர்கள். பாகுபாடு செய்வதை கைவிடுங்கள். மனதின் கிடுக்கிப்பிடியிலிருந்து வெளியே இருப்பீர்கள். மனதின் பிடியிலிருந்து விடுபடுவதே விடுதலையாகும், அதுவே சுதந்திரம் என்பதை அறிவதாகும்.

**உணர்வுச் செல்வத்தைப் பெரும்பாலோர் மறக்கிறார்கள்.**

**அவர்கள் இருமைச் சிந்தனையின் துணையையே நாட வேண்டி இருக்கிறது. உணர்வின் நிச இயல்பை உதறித்தள்ள வேண்டி இருக்கிறது.**

**ஸென்னுக்கு ஏற்படும் தடையை சாசென்னின் துணையுடன் கடக்க; பகுத்தறிவு, அறிவு, பிரமை ஆகியவற்றுக்கு தலை முழுக வேண்டும்.**

**அப்போதே நாம் உன்னத ஞானத்தை அடைவோம்; நிர்வாண மாளிகைக்குள் நுழைவோம்.**

நிர்வாணம் என்பது எங்கோ இருப்பதல்ல. அது உங்கள் உள்வெளிதான். மனதின் பிடிப்புகளில் இருந்து வெளியேறினாலே போதும். உங்கள் மனம் ஒரு ஆக்டோபசை போல இருக்கிறது. எப்படியாவது அதன் ஒரு கையில் இருந்து நீங்கள் விடுபட்டால் மற்ற கைகள் இருக்கின்றன. பருண்மையான கைகளும் உள்ளன. நுணுக்கமான கைகளும் உள்ளன. மற்ற கைகளில் இருந்து நீங்கள் விடுபட தொடங்கும்போது வேறு கைகளில் சிக்கிக் கொண்டிருக்கிறீர்கள். இது இப்படியே மாறிமாறி போகிறது.

உலகிலிருந்து தப்பிக்கிறவன் என்ன சொல்கிறான்? கிழக்கில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்கள் உலகைத் துறந்துகொண்டே வந்திருக்கிறார்கள். ஏனெனில் அது மாயை என்கிறார்கள். அது மாயை என்பதை நீ உண்மையாகவே புரிந்திருந்தால் பின் துறவுகொள்ள என்ன இருக்கிறது?

இந்த மூடர்கள் என்னிடமும் வந்து கேட்கிறார்கள், "நீர் மக்களுக்கு என்ன விதமான சந்நியாசத்தை போதித்துக் கொண்டிருக்கிறீர்? சந்நியாசம் என்றால் துறவு. அவர்கள் உலகைவிட்டு நீங்க வேண்டும். ஆனால் இவர்கள் உலகிலேயே வாழ்கிறார்கள். உலகில் வாழ்வது மட்டுமல்ல. மற்ற உலகியலான மக்களை விடவும் அதிக ஆழமாக முழுமையாக உலகில் அவர்கள் வாழ்கிறார்கள்! என்ன இழவு சந்நியாசம் இது?" நான் ஒரு தவறான சந்நியாசத்தை போதிக்கிறேன் என அவர்கள் நினைக்கிறார்கள்.

நான் இறுதியான சந்நியாசத்தை கற்பிக்கிறேன். தவறான சந்நியாசத்தை அல்ல, முதன்முதலாக சரியான சந்நியாசத்தைக் கற்பிக்கிறேன். தவறான வகை நீண்டகாலமாக- நூற்றாண்டுகளாக- நிலவி வந்துள்ளது. மொத்தத்தின் அபத்தத்தையும் பாருங்கள்: ஒன்றை மாயை என்கிறீர்கள். ஆனாலும் அதிலிருந்து தப்பிக்கிறீர்கள். அது மாயை என்றால் தப்பிக்க தேவையே இல்லையே. அவ்வளவு எளியது இது! அது நிஜமானது என்றால் பின் ஏன் தப்பிக்கிறீர்கள்? அது நிஜமானது என்றால் பின் எப்படித் தப்பிக்க முடியும்?

கனவுகளை யாரும் துறப்பதில்லை. அல்லது ஒவ்வொருநாள் காலையிலும் விழித்தெழுந்ததும் அவற்றை நீங்கள் துறக்கிறீர்களா? "நான் என் கனவுகளை எல்லாம் துறக்கிறேன். என் கனவில் கண்ட சொத்துகளை எல்லாம் துறக்கிறேன். என் கனவில் அடைந்த ராஜ்ஜியத்தைத் துறக்கிறேன்" என்பீர்களா? அவற்றை நீங்கள்

துறப்பதில்லை. அப்படிச்சொன்னால் மக்கள் உங்களைப்பார்த்து சிரிப்பார்கள்- உங்களுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது என்பார்கள்! கனவுகள் கனவுகள்தான்.

இந்த ஆன்மிகவாதிகள் எனப்படுவோர் எல்லாம் உலகம் ஒரு கனவு- அதைத் துறந்துவிடு என சொல்லிக் கொண்டே வந்து இருக்கிறார்கள். ஒன்றை கனவு என்று சொல்லிவிட்டு அதே மூச்சில் "அதைத் துற" என்றும் சொல்வதற்கு என்ன நெஞ்சழுத்தம் இருக்க வேண்டும்! ஒன்று அது கனவல்ல; அல்லது அது கனவு- முதலில் இரண்டில் ஒன்றை முடிவு செய். ஆயின் எந்த முடிவானாலும் அதை நீ துறக்கமுடியாது. அது கனவு என்றால் அதை துறப்பதற்கு பொருளில்லை தேவையில்லை. அது நிஜம் யதார்த்தம் என்றால் அதை நீ எப்படி துறக்க முடியும்? ஏனெனில் யதார்த்தமும், கடவுளும் ஒரே பொருளின் இரு பெயர்களே.

எனவேதான் நான் கூறுகிறேன். களிகூறுங்கள்! எதையும் துறக்கத் தேவையில்லை- துறப்பதற்கு எதுவும் இல்லை. களிகூறுங்கள், மிக முழுமையாக ஆனந்தியுங்கள்! பல பரிமாணங்களிலும் களிகூறுங்கள். ஆடுங்கள், பாடுங்கள், பரவசமாயிருங்கள். சிரிப்பே உங்கள் வாழ்வாகட்டும். அன்பே உங்கள் வாழ்வாகட்டும். உள்ளதை அறிவதற்கு உள்ள ஒரே உண்மையான வழி அதுதான்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**என் கத்தோலிக்க மனதின் பெரும்பகுதி, அதிகாரத்துக்கான போராட்டத்தால், அங்கீகாரத்துக்கான போராட்டத்தால், காதலால், காமத்தால் இறுக்கமாயிருக்கிறது. தியானமும், நிராசையையே கிளப்பி விடுகிறது**

**"சும்மா பார்ப்பது" என்றால் என்ன?**

**பிரேம் நிசாங்.**

மனம். அது எவ்வித மனமாயினும்- கத்தோலிக்க மனமோ கம்யூனிச மனமோ, யூதமனமோ சமண மனமோ- ஒரே விதமாகவே இருக்கிறது. மனம் ஒரு நோய். ஒவ்வொரு வித மனமும் உன்னைச் சுற்றி ஒரு சிறையை உருவாக்குகிறது. பலவிதமான சிறைகள் உள்ளன. அவற்றின் கட்டுமானம் வெவ்வேறாயுள்ளன. அவற்றைக் கட்ட பயன்படுத்திய பொருள்கள் வெவ்வேறாக உள்ளன. சில

கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. சில செங்கற்களால் ஆனவை. சில மரத்தால் ஆனவை. இப்படியே- ஆனால் அதுவல்ல பிரச்சனை- எதனால் கட்டப்பட்டது என்பது முக்கியமில்லை- நீங்கள் சிறைப்பட்டிருக்கிறீர்கள் என்பதே முக்கியம். கத்தோலிக்க மனத்தின் கருத்தாக்கங்கள் வேறாயிருக்கிறது. இந்து மனம் இன்னொரு கருத்தியலில் வேர்கொண்டிருக்கிறது. ஆனால் ஒவ்வொரு மனத்துக்கும் ஒரு கருத்தியல் தேவைப்படுகிறது. ஒரு நாத்திகர் கூட, அவர் கடவுளை நம்பாவிட்டாலும், சிறைக்குள்தான் வாழ்கிறார். தான் ஒரு நம்பிக்கையற்றவர் என அவர் நினைக்கிறார்- அப்படி இல்லை. அவரது நம்பிக்கையின்மையே அவரது நம்பிக்கை நம்பிக்கையாளர்கள் கண்மூடித்தனமாக நம்புவதைப் போலவே அவரும் கண்மூடித்தனமாக தன் கருத்தை நம்புகிறார். சொல்லப்போனால் இன்னும் அதிக வெறித்தனமாக நம்புகிறார். ஏனெனில் கடவுளை நம்புகிறவர்கள் கூட அவரை ஏதோ ஒரு தடவைதான் நினைக்கிறார்கள். ஒருவேளை ஞாயிறுகளில் மட்டும் நினைக்கலாம்- அதுதான் ஞாயிற்றுக்கிழமை மதம் என்பது- ஆனால் நாத்திகரோ தொடர்ந்து கடவுளுக்கு எதிராக வாதிடுகிறார்: அவர்தான் தொடர்ந்து கடவுளை நினைக்கிறார்.

இந்திய சாத்திரங்களில் மிக அழகான ஒரு கதை உள்ளது.

மிகப்பெரும்பக்தரான நாரதர் இறந்து கொண்டிருக்கும்போது கடவுள் அவர்முன் தோன்றினார். கடந்தகாலத்தில் இத்தகைய சம்பவங்கள் நடப்பது வழக்கம். இப்போதெல்லாம் அவை நிகழ்வதில்லை. அவருக்கு என்ன வேண்டும் என கடவுள் அவரை கேட்டார். அடுத்த பிறவியில் அவருக்கு ஏதாவது நிறைவேற வேண்டும் என்னும் ஆசை இருக்கிறதா என்றார்.

"ஆம், நான் ஒரு நாத்திகனாகப் பிறக்க விரும்புகிறேன்" என்றார் நாரதர்.

கடவுளே மலைத்துப் போனார். இத்தகைய சம்பவங்கள் கடந்த காலத்தில் மட்டுமே நடந்தன என்பதை நினைவில் கொள்ளுங்கள். இப்போதெல்லாம் அவை நடப்பதில்லை. கடவுள் சொன்னார், "என்ன? நீ நாத்திகனாக விரும்புகிறாயா? எப்பேர்ப்பட்ட பக்தன். ஆத்திகன், மதவாதி நீ! எப்போதும் என் நாமத்தை பாடிப்பாடி பரவியவன் நீ! நீ- நாத்திகனாக விரும்புகிறாயா?"

நாரதர் சொன்னார், "ஆமாம் பிரபுவே, ஏனெனில் நான் ஒரு பக்தனாயினும் அடிக்கடி உம்மை மறந்து போய்க் கொண்டிருந்தேன்.

ஆனால் நாத்திகர்கள் உம்மை ஒருபோதும் மறப்பதில்லை என்பதை கண்டிருக்கிறேன். எனவேதான் அடுத்த தடவை நான் நாத்திகனாக விரும்புகிறேன்: அப்போதுதான் உம்மை நான் இடைவிடாது நினைத்துக் கொண்டிருக்க முடியும். ஒரு கணமாகிலும் உம்மை மறக்க நான் விரும்பவில்லை. இந்த பிறவியில் என் மனதின் பல பண்டங்களில் நீரும் ஒரு பண்டமாக மட்டுமே இருந்தீர். ஆனால் நாத்திகன் இதயத்திலோ நீர் முழுமையாக நிரம்பி இருப்பதாக தோன்றுகிறது- அவன் உம்மை மறுத்த போதிலும் உம்மையே நினைத்துக் கொண்டிருக்கிறான். எனவே எனக்கு ஒரே ஒரு வரம் மட்டும் தாரும்: நான் ஒரு நாத்திகனாய் பிறக்க வேண்டும். உம்மைப்பற்றியே ஓயாமல் பேசவேண்டும்."

அருமையான கதை. நாத்திகர் ஆத்திகர் இருவருமே ஒரே நிலவரத்தில்தான் இருக்கிறார்கள் என்பதை மிகவும் குறிப்பாக அது உணர்த்துகிறது.

கடவுளுக்கு எதிராக வாதிட்டுக் கொண்டே போகிறான் கம்யூனிஸ்ட் அவனுக்கும் கடவுளுக்கும் இடையில் எந்த வேலையும் இல்லை. எந்தத் தொடர்பும் இல்லை. காரல்மார்க்சுக்கு கடவுளிடம் என்ன வேலை இருந்தது? பொருளாதாரத்தை பொறுத்த வரைக்கும் அதற்குள் கடவுள் வருவதில்லை. அவர் ஒரு பொருளாதார கோட்பாடு அல்ல. ஆனால் மார்க்ஸ் தொடர்ச்சியாக ஆட்கொள்ளப் பட்டிருந்தார். மறுபடியும் மறுபடியும் கடவுளை மறுக்க வருகிறார், என்னவோ கடவுள் அவரையே சுற்றிச் சுற்றி வருவதுபோல.

ஆத்திகர்கள்- நாத்திகர்கள் யாவருமே நம்பிக்கை வெறியர்களே. இந்துக்கள், முஸ்லிம்கள், கிறித்தவர்கள் யாவரும் வெறியர்களே. வெறியன் ஒருபோதும் உண்மை விவரங்களை காண்பதில்லை. எனவேதான் அவன் ஒரு வெறியனாயிருக்கிறான். வெறியனின் மதக் கோட்பாடு என்னவென்றால்: "நாமே சரியானவர்கள். எனவே உண்மை விவரங்களால் நம் பாதை தவறிவிடக்கூடாது. உண்மை விவரங்கள் என்ன தெரிவித்தாலும் அவை பொய்களே." வெறியனின் மதம் என்னவென்றால்: "எது நிசம் என்பதை ஏற்கெனவே நாம் முடிவுசெய்து விட்டோம். இனி உண்மை விவரங்கள்தான் நம் முடிவுக்குப் பொருத்தமாக இருக்க வேண்டும். நாம் உண்மை விவரங்களுக்கு பொருத்தமாக மாறிக் கொள்ள முடியாது."

இந்த கருத்தியல்கள் எனப்படுபவை அனைத்தும் மனிதர்களை மிகவும் முடக்கிப்போட்டுள்ளன. நிசாங். கத்தோலிக்க மனமும்

உலகின் மிகவும் முடக்கப்பட்ட, ஊனமாக்கப்பட்ட மனங்களில் ஒன்றாகவேயிருக்கிறது. ஏனெனில் அது ஒடுக்குகிறது- அப்படி எதையாவது நீங்கள் ஒடுக்கும் போதெல்லாம் நீங்கள் அசிங்கமாகிறீர்கள். ஒடுக்கப்பட்டதெல்லாம் உள்ளே அப்படியே உள்ளது. அது அப்படியே இருப்பதோடு மட்டுமல்ல, ஒவ்வொரு நாளும் அதிகமதிக வலுமிக்கதாகி வருகிறது. ஆற்றலை அது திரட்டிக் கொள்கிறது. வெளிப்படுத்த இடம் கொடுத்தால் கொதித்து ஆவியாகிறது.

உதாரணமாக ஒருவன் சாதாரணமாக கோபம் கொண்டால், ஒவ்வொருவருக்கும் ஏற்படுவது போலவே- நீங்கள் அவனை கேவலப்படுத்தியதால் அவனுக்கு கோபம் ஏற்பட்டால், அவன் அபாயகரமான ஆள் அல்ல. ஏனெனில் அபாயகரமாக ஆகும் அளவுக்கு அதிக கோபத்தை அவன் சேர்த்திருப்பதில்லை. ஆனால் தன் கோபத்தையெல்லாம் அடக்கிக் கொண்டே இருப்பவன் எரிமலைமீது உட்கார்ந்திருக்கிறான். எரிமலை குமுறும் நாளில் அவன் தற்கொலை செய்யவேண்டும் அல்லது மற்றவரை கொலை செய்ய வேண்டும். அதற்கு குறைந்த எதனாலும் அடங்காது.

ஒடுக்குமுறையான மதங்களால்தான் உலகில் இந்த அளவுக்கு விரசக்கலைகள் நிலவுகிறது. 'பிளேபாய்'களால் அல்ல, பாதிரிகளால்தான் விரசக்கலை (போர்னோகிராபி) நிலவுகிறது. உண்மையில் பாதிரிகளின் பக்க விளைவுகளே பிளேபாய்கள். மிகுந்த அளவில் காமமானது ஒடுக்கப்பட்டதால்தான் விரசக்கலைகள் மலிந்துவிட்டன. அதற்கு ஏதாவது வாயில், வடிகால் தேவைப்படுகிறது. காமத்தை நீங்கள் ஒடுக்கினால் அது வக்கிர வழிகளை கண்டுபிடிக்க தொடங்குகிறது. அது ஒரு அரசியல் உலாவாக முடியும். ஆனால் அது காமத்தன்மையே, ஒடுக்கப்பட்ட காமமே அது. வேறொன்றுமில்லை.

எனவேதான் உலகின் எல்லா ராணுவங்களிலும் காமம் ஒடுக்கப்படுகிறது. அதிலும் அமெரிக்க வீரர்கள் தொடர்ச்சியாக சிரமத்தில் இருந்து கொண்டிருக்கிறார்கள்- ஒரே காரணம். அங்குதான் முதல்முறையாக காமத்துக்கு கொஞ்சம் வடிகால் அனுமதிக்கப் பட்டிருக்கிறது. அமெரிக்க வீரர்கள் வெல்ல முடியாது. அவர்கள் தோற்பது உறுதி. அவர்கள் என்னதான் செய்தாலும், எங்கெங்கே போனாலும் அவர்கள் தோற்கடிக்கவே படுவார்கள். இதற்கான ஒரே காரணம் அமெரிக்க வீரர்கள் உலகில் ஒரு புது நிகழ்வு- அவர்களின் காமம் ஒடுக்கப்படவில்லை. அவர்களால் ருசியர்களை வெல்ல

முடியாது- வியத்நாமியர்களைக்கூட அவர்களால் வெல்லமுடியாது. மனிதவரலாறு முழுவதிலும் நிலவியவற்றிலேயே மிகப் பெரிய உலக வல்லரசுகளில் ஒன்றை எளிய வியத்நாமியர்கள் தோற்கடித்தனர். இதற்கான எளிய காரணம், காமம் ஒடுக்கப்பட்டால் மனிதன் மிக ஆபத்தானவனாக உண்மையிலேயே அபாயகரமான வனாக ஆகிறான்- உள்ளுக்குள் அவன் கொதித்துக் கொண்டு இருக்கிறான். கடுமையாக தாக்க விரும்புகிறான், வன்முறையை விரும்புகிறான்.

காமத்தில் நிறைவுற்றவன் உண்மையில் கொல்லுவதில் ஆர்வமற்றவன் ஆகிறான்.உண்மையில் அமெரிக்கப் படைகளைப் பற்றிய புள்ளிவிவரங்கள் முழுவதும், குறைந்தது 30% வீரர்கள் போர்களில் தம் ஆயுதங்களைப் பயன்படுத்தவில்லை என்பதை காட்டுகின்றன. 30% என்பது பெரிய சதவீதம் தான் இப்படி 30% வீரர்கள் தம் ஆயுதங்களை பயன்படுத்துவதே இல்லை என்றால், தினமும் களத்துக்கு போய் யாரையும் கொல்லாமல் சும்மா திரும்பிக் கொண்டிருந்தால், அவர்கள் எப்படி வெல்லப் போகிறார்கள்?- கொல்லுவதில் அவர்களுக்கு ஆர்வமில்லை. கொல்லும் ஆசை அவர்களிடம் இல்லை.

காமம் மிகவும் ஒடுக்கப்படும்போது மட்டுமே கொலைவெறி எழுகிறது. ஒரு சமுதாயம் வளமாக, வசதியாக, காதல் சுதந்திரம் உள்ளதாக ஆகி- இருந்தால், வறிய- பிற்பட்ட- ஒடுக்குமுறைகூடிய சமுதாயங்களால் அது அழிக்கப்படுகிறது என்பது ஒரு வினோத உண்மையாகும். அதுதான் கிரேக்க நாகரிகத்தின் தலைவிதியானது. அதுதான் ரோம நாகரிகத்தின் தலைவிதியானது. அதுதான் இந்து நாகரிகத்தின் தலைவிதியானது. அதுதான் அமெரிக்க நாகரிகத்தின் தலைவிதியாகவும் ஆகப்போகிறது. எந்த அளவுக்கு ஒரு சமுதாயம் அதிக வளர்ச்சி பெற்றதாயிருக்கிறதோ அந்த அளவுக்கு எளிதாக, ஒரு குறைந்த வளர்ச்சி பெற்ற சமுதாயத்தால் அது நாசமாக்கப்படக் கூடியதாயிருப்பது மிகவும் வினோதமே. ஏனெனில் குறைவளர்ச்சி பெற்றவர்கள் அதிக ஒடுக்குமுறையாளர்களாக இருக்கிறார்கள். அதிக மூடர்களாக, அதிக மடையர்களாக இருக்கிறார்கள். அவர்கள் புரோகிதர்களின் பேச்சுகளையே இன்னும் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

வளர்ச்சிபெற்ற, பண்பாடுள்ள ஒரு சமுதாயத்தில் அயத்துல்லா கொமேனி போன்ற மனிதர்கள் எவ்வித செல்வாக்கும் பெற முடியாது. ஆனால் இரானில் அவர்கள் அளவுகடந்த அதிகாரத்தை

பெற்றிருக்கிறார்கள். இரானின் முல்லாக்கள் அங்கு மிகுந்த ஆற்றல் வாய்ந்த ஆட்களாய் இருக்கிறார்கள். மேலும் அயத்துல்லா வெறும் பையத்தியக்காரன். ஆனால் அந்த பைத்தியத்தின் கையில் மிகுந்த அதிகாரம் இருக்கிறது. இப்போது அவன் எல்லாவிதமான காரியங்களையும் செய்துகொண்டிருக்கிறான். மக்கள் கொல்லப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இசுலாமிய நீதியின் பெயரால் மக்கள் தொடர்ச்சியாக கொல்லப்பட்டு, கசாப்பு பண்ணப்பட்டு வருகிறார்கள்- நீதியில் இசுலாமிய நீதி, கிறிஸ்தவ நீதி, இந்து நீதி என்றெல்லாம் இருக்கிறதா?

சில நாட்களுக்கு முன்புதான் பாகிஸ்தான் ஒரு முடிவு செய்துள்ளது: எந்த விளையாட்டிலும் இனி பெண்கள் ஆண்களுடன் பங்கெடுக்க முடியாது, ஏனெனில் அது இசுலாமுக்கு எதிரானது. பெண் முழுமையாக போர்த்திக் கொண்டிருக்கவேண்டும். முற்றிலுமாக கருப்பு அங்கியால் போர்த்திக் கொண்டு கண்களுக்கு மட்டும் பார்ப்பதற்கு துவாரங்கள் விட்டுவிட்டால் ஹாக்கி விளையாட முடியுமா? முடியாது. இதற்காக ஒரு விசித்திரமான புதுவித ஹாக்கியை உருவாக்க வேண்டும்? அப்படியும் அவர்கள் ஓடுவார்கள், ஓடும்போது அவர்கள் உடம்புகள் ஆடும், மார்புகள் குலுங்கும்- அது இசுலாமுக்கு எதிரானது! எனவே பாகிஸ்தானில் அவர்கள் ஆண்களுடன் விளையாட முடியாது- இது 20ஆம் நூற்றாண்டாம்!- அவர்கள் பெண் ஆட்டக்காரர்களுடன் மட்டுமே ஆடமுடியும், பார்வையாளர்களும் பெண்களாக மட்டுமே இருக்கமுடியும். அப்பவும் அவர்கள் தம் உடம்புகளை முழுக்க மூடி இருக்கவேண்டும். பஞ்சாபி உடைகளை- சல்வாகுர்த்தாக்களையே பயன்படுத்த வேண்டும். அப்போதுதான் அவர்களின் முழு உடலும் மூடி இருக்கும். அவர்கள் அரை டவுசர் அணிந்து டென்னிஸ் ஆடமுடியாது. ஏனெனில் அவர்களின் கால்கள் தெரியும். அதுவே இசுலாமுக்கு எதிரானது.

இவர்கள் முட்டாள்கள். ஆனால் (இந்த) முட்டாள்கள் ஆபத்தானவர்கள். இவர்கள் யாரையும் தோற்கடித்துவிட முடியும். ஏனெனில் அவர்கள் காமத்தை மிகவும் ஒடுக்குவார்கள். மிகுந்த ஆற்றல் அமுக்கி வைக்கப்படும். அது வெடிக்க தயாராக இருக்கும். எந்த அற்ப காரணமும் போதும். உலகில் நடக்கும் கற்பழிப்புகள் அனைத்துக்கும் இவர்கள்தான் பொறுப்பு.

இந்தியாவில் இருக்கும் என் பெண் சந்நியாசிகள் அனுபவமும் இதுவே. அவர்கள் என்னை மிகவும் நேசிக்கிறார்கள்- எனவேதான்

அவ்வளவையும் சகித்துக்கொண்டு இங்கு இருக்கிறார்கள். இங்கு இருப்பது உண்மையிலேயே ஒரு தியாகம்தான். ஏனென்றால் அவர்கள் எங்கே போனாலும், பண்பாடுள்ளவர்கள்- ஆன்மிகத்தில் ஊறியவர்கள் எனப்படும் இந்துக்கள், அள்ளி விழுங்கும் பார்வையால் அவர்களை உற்றுப் பார்க்கிறார்கள். அவர்களைப் பிய்த்தெறியவே அங்கு இருப்பதுபோல் காணப்படுகிறார்கள். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் இடிக்கிறார்கள். தள்ளிவிடுகிறார்கள். தம்மால் முடிந்த எல்லா அசிங்கத்தையும் செய்கிறார்கள். பெண்கள் தொல்லைக்குள்ளாகி இருக்கிறார்கள். கற்பழிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள்தான் மாபெரும் இந்துக்கள். மிகுந்த பக்திமான்கள், உலகிலேயே மதத்தன்மையில் தலைசிறந்தவர்கள்! ஆனால் இது இயல்பானதே. இதில் எந்த முரண்பாட்டையும் நான் பார்க்கவில்லை. இது ஒடுக்குமுறையின் விளைவே- லேசான வாய்ப்பு கிடைத்தாலும் அது தலைநீட்டுகிறது.

இரண்டு கன்னியர்கள் தம் கன்னியர் மடத்திலிருந்து கடை சாமான்கள் வாங்குவதற்காக நகரை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள். நேரத்தை மிச்சப்படுத்துவதற்காக, வெளிச்சம் குறைந்த, ஆளரவமற்ற காட்டுவழியில்- குறுக்குப் பாதையில் போக தீர்மானித்தார்கள். நடுக்காட்டில் வைத்து இருவரும் கற்பழிக்கப் பட்டார்கள்.

"அச்சச்சோ! நாம் 2 தடவை கற்பழிக்கப்பட்டோம் என்பதை தாயாரிடம் எப்படி விளக்கப் போகிறோம்?"

"ஒரு நிமிசம்" என்று தடுத்தாள் மற்ற கன்னி; "நாம் ஒரு தடவைதானே கற்பழிக்கப்பட்டோம்?"

"அது தெரிகிறது, ஆனால் மறுபடியும் அதே வழியில்தானே நாம் திரும்பிவருவோம்?"

கற்பழிக்கிறவர்கள் மட்டுமல்ல, அவர்களுக்காக காத்துக் கொண்டிருக்கும் பெண்களும் இருக்கிறார்கள்.

நிசாங், நீ கூறுகிறாய்: என் கத்தோலிக்க மனதின் பெரும் பகுதி... இறுக்கமாயிருக்கிறது...

வேறுவிதமாக இருக்க முடியாது. அதை நீ அடியோடு கைவிட வேண்டும். அதில் எதையும் நீ மிச்சம் வைக்க முடியாது. அதில் எதையும் பத்திரப்படுத்த முயலாதே. ஏனெனில் அது முழுவதும் களங்கப்பட்டுள்ளது.

அதிகாரத்துக்கான போராட்டத்தால்... இறுக்கமாயிருக்கிறது என்கிறாய்.

அப்படித்தான் இருக்கும். காமம் ஒடுக்கப்பட்டால் அது வேறு பரிமாணங்களுக்குள் இயங்க தொடங்குகிறது. அது அதிகாரத்தின் மீதான பெரு வேட்கையாக ஆகிறது. காமம் ஒடுக்கப்பட்டால் நீ அங்கீகாரத்தை கேட்க ஆரம்பிக்கிறாய். அன்பின், உண்மையான பாராட்டின் பதில் அது. இப்போது நீ இங்கிருப்பதால் அன்புக்கு மிகுந்த தேவை இருப்பதை உணர்ந்து கொண்டிருக்கிறாய். ஆனால் பயப்படுகிறாய்- உன் கத்தோலிக்க மனம் காதலுக்கு எதிராக இருக்கிறது. "கடவுளை மட்டுமே நேசி" என்கிறது கத்தோலிக்க மனம். ஆயின் கடவுளை எப்படி உன்னால் நேசிக்க முடியும்? அது சுத்த அபத்தம். மனித உயிர்களைத்தான் நீ நேசிக்க முடியும். கடவுளை நேசிப்பதற்கான ஒரே வழி அதுதான். கட்டற்று நேசியுங்கள். எவ்விதமான நிபந்தனைகளுமின்றி காதலியுங்கள். ஆனால் உங்களை சுற்றியிருக்கும் மனிதர்களைத்தான் நீங்கள் நேசிக்க வேண்டி உள்ளது- அவர்களே நம் கண்ணுக்கெட்டிய கடவுளின் உருவங்கள். உருவமற்றதை உங்களால் காதலிக்க முடியாது. "கடவுளை அன்பு செய்" என்கிறவர்கள் "மனிதரை தவிர்" என்கிறார்கள். கன்னியாஸ்திரீகளிடம் "இயேசுவை நேசி" என்கிறார்கள். கன்னியரை "கிறிஸ்துவின் மணவாட்டிகள்" என்கிறார்கள். என்ன பேத்தல்! அந்த மனுசன் பாவம் திருமணமே செய்யாமல் வாழ்ந்தான்.இப்போது என்னடாவென்றால் அவருக்கு ஏராளமான கன்னியர்கள் மனைவிகளாகி இருக்கிறார்கள்! கிறிஸ்துவின் மணப்பெண்களாம்! பின் அவர்கள் மனம் கற்பனை செய்ய, படம் காட்ட ஆரம்பிக்கும். பின் அவர்களின் மனம் அவர்களிடம் கண்ணாமூச்சி ஆட்டங்கள் ஆட தொடங்குகிறது.

மத்திய காலங்களில் இருந்த துறவியர் மடம் மற்றும் கன்னியர் மடங்களின் வரலாற்றை நீங்கள் பார்த்தால் நீங்கள் ஆச்சரியப்படு வீர்கள். சாத்தானாலும் அவனுடைய சீடகேடிகளாலும்கன்னியர்கள் கற்பழிக்கப்பட்ட கதைகள் ஆயிரக்கணக்கில் உள்ளன. அது மட்டுமல்ல. கன்னியர்கள் போலியாக கர்ப்பம் தரித்தக் கதைகளும் உண்டு. என்ன கற்பனைவளம்! பெண் ஒருத்தி கற்பனை செய்தால் எங்கெல்லாமோ அவள் போய்விட முடியும். ஆண்களுக்கு அந்த அளவுக்கு கற்பனைத் திறன் கிடையாது. ஆனால் பெண்களோ உண்மையாகவே நடந்ததுபோல் கற்பனை செய்யமுடியும். பெண்கள் நீதிமன்றங்களில் சாட்சியளித்திருக்கிறார்கள். அந்த மன்றங்கள் என்ன

செய்தன? அந்த சபைகளில் பிஷப்புகள், தலைமை பிஷப்புகள், போப்புகள் தான் இருந்தார்கள்.அவர்கள் விவரமாக கூறும்படி கேட்டார்கள். உண்மையில் கன்னியரிடம் சாத்தான் காதல் செய்த கதையின் விவரணைகளை எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு ரசித்தார்கள் அவர்கள். அந்த விவரங்களை நீங்கள் பார்வையிட்டால் அவை முழுக்க விரசமாக, இதுவரை எழுதப்பட்டவற்றிலேயே அதிக ஆபாசமாக இருப்பதைக் காண்பீர்கள்.அவர்கள் குற்றங்களை ஒப்புக்கொள்ளவே வேண்டி இருந்தது. அவர்கள் வினோதமான காரியங்களையெல்லாம் ஒப்புக்கொண்டார்கள். சாத்தான் இரவில் வந்தது. அவர்களுடன் உறவுகொண்டது. அவர்களால் முற்றிலுமாக ஒன்றுமே செய்ய முடியவில்லை... வேறெதையும் செய்ய முடியவில்லை. சாத்தான் வந்து அவர்களை உடைமை கொண்டுவிட்டால் அவர்களும்தான் என்ன செய்ய முடியும்?

மடங்களில் இருந்தே எல்லாவிதமான காம விகாரங்களும் எழுந்தன. துறவி மடங்களும், கன்னியர் மடங்களும் இருந்திருக்கா விட்டால் காமம் இந்த அளவுக்கு வக்கிரப்பட்டிருக்காது. மேலும், உலகம் முழுவதுமே ஏதாவது ஒருவித ஒடுக்குமுறையால் ஆதிக்கம் செய்யப்பட்டே வந்திருக்கிறது.

நிசாங், இந்த மனம் முழுவதையும் நீ கைவிட வேண்டியுள்ளது.

தியானமும், நிராசையையே கிளப்பி விடுகிறது- என்கிறாய்.

நிராசை கிளம்பும். ஆனால் அதற்கும் தியானத்துக்கும் தொடர்பில்லை. உன் யதார்த்தத்தையே உனக்கு காட்டுகிறது தியானம். அந்த எதிர்கொள்ளுதலில் நிராசை ஏற்படும்தான். உன் சொந்த மனதின் அசிங்கத்தை பார்த்து நீ மனம் உடைவாய். ஆனால் கவலைப்படாதே. உனக்குள் ஒடுக்கப்பட்டிருந்த எல்லாவற்றையும் தியானம் மேலே கொண்டு வருகிறது. அதனூடாக நீ கடந்து வரவே வேண்டியிருக்கும். என்ன இருக்கிறது என்பதை நீ அறிந்தால் அதைக் கைவிட முடியும். உனக்கே தெரியாவிட்டால் அதை நீ எப்படி கைவிட முடியும்? ஒன்றை நீ கைவிட முடிவதற்கு, முதலில் அது என்ன என்பதை அறியவேண்டும். நன்கு புரிந்துகொள்ள வேண்டும். உண்மையைச் சொன்னால் அதை நன்கு புரிந்துகொள்வதேதான் அதை கைவிடுவதற்கான ஒரே வழி.

உன் மனதை மொத்தமாக நீ கைவிடும் நாளில் புரோகிதர்களிடம்/பாதிரிகளிடம் இருந்து நீ விடுபடுகிறாய். உலகிலேயே மிகவும் சூழ்ச்சி நிறைந்தவர்களும், மிகவும் மூளை

இல்லாதவர்களும் பாதிரிகள்தான். ஏனெனில் முட்டாள்களே சூழ்ச்சிக்காரர்களாய் இருக்கிறார்கள். நுண்ணறிவுள்ளவர்கள் ஒருபோதும் சூழ்ச்சிக்காரர்களாக இருப்பதில்லை. சூழ்ச்சிக்காரர் களாயிருக்கத் தேவையில்லை- புத்தியே போதுமாயிருக்கிறது. புத்தி இல்லாதபோதுதான் அதன் பதிலியாக சூழ்ச்சி நிரம்பியவராக இருக்கவேண்டி இருக்கிறது. சூழ்ச்சியின் வழிகளை நீ கற்றுக்கொள்ள வேண்டி இருக்கிறது.

ஆனால் நினைவில் கொள்ளுங்கள்; கத்தோலிக்கர்/ புராட்டஸ் டண்டுகள், இந்து/ முஸ்லீம்கள் ஆகிய எந்த மத புரோகிதராயினும் எல்லோரும், இந்த அயத்துல்லாக்கள் எல்லோரும் இந்த முல்லாக்கள் எல்லோரும் இந்த பண்டிதர்கள் எல்லோரும் முட்டாள்களே. ஆனால் இவர்கள்தான் மனிதகுலத்தை ஆதிக்கம் செய்திருக்கிறார்கள். மனிதகுலம் முழுவதையும் ஒரே பெரிய மூடமந்தையாக தரம்தாழ்த்தி விட்டிருக்கிறார்கள். அதிலிருந்து வெளியேறு!

நூற்றாண்டுகளாக உனக்கு செய்யப்பட்டு வந்திருக்கிற எல்லாவற்றையும் தியானம் கிளப்பி விடவே செய்கிறது. ஆனால் அதை தவிர்க்க முடியாது. அதை நீ தவிர்க்க விரும்பினால் பழைய ஆளாகவேதான் இருப்பாய். உனக்குள் இருக்கும் இந்த அசிங்கங்கள் அனைத்தையும் பார்ப்பதன் வேதனையை நீ அனுபவிக்கவே வேண்டி இருக்கும். ஆனால் அதை பார்த்து அதனூடாக கடந்து உன் உள்ளார்ந்த மையத்தை அடைவதே மேல். அப்போதுதான் நீ உன் சொந்த உள்ளார்ந்த விவேகத்தை கண்டடைய முடியும். நீ இழந்துவிட்ட உணர்வு நிலையை கண்டடைய முடியும்.

புரோகிதர்களிடம்/பாதிரிகளிடம் இருந்து நீங்கள் விடுபட்டால், மடமையிலிருந்து விடுபட்டவராகிறீர்கள். அதன்பின் நீங்கள் கத்தோலிக்கரோ கிறித்தவரோ இந்துவோ முகமதியரோ அல்ல. சாதாரண மனிதர் மட்டுமே. அப்போது உங்களுக்குள் மாபெரும் அழகு உதிக்கிறது.

ஒரு கத்தோலிக்க சாமியார் ஒரு கிளியை வாங்குவதற்காக வளர்ப்புப் பிராணிகள் விற்கும் கடைக்கு போனார். ஒரு தனிச்சிறப்புடைய கிளியை அவருக்கு காட்டினார்கள். அவருக்கு அதன் தோற்றம் பிடித்து விட்டது. ஆனால் அதன் இரு கால்களில் இரண்டு கயிறுகள் கட்டப்பட்டிருந்ததை பார்த்து குழம்பினார்.

"அவை எதற்காக?" என கடை நிர்வாகியை கேட்டார்.

"அது வந்து ஃபாதர்" நிர்வாகி சொன்னார், "அதுதான் இந்த குறிப்பிட்ட கிளியின் சிறப்பு அம்சமே. இது ஒரு பழக்குவிக்கப்பட்ட கிளி. ஃபாதர் சர்க்கசில் இருந்த கிளி. அதன் இடதுகால் கயிறை இழுத்தீர்களானால் அது 'ஹலோ!' என்கிறது. வலதுகால் கயிறை இழுத்தீர்களானால் 'குட்பை' சொல்கிறது."

"ஒரே நேரத்தில் இரண்டு கால் கயிறுகளையும் பிடித்து இழுத்தால் என்ன செய்யும்?" என்றார் பாதிரியார்.

"கொம்பிலிருந்து விழுந்துவிடுவேன்டா, முட்டாளே!" என கிறீச்சிட்டது கிளி.

உங்கள் சாமியார்களைவிடவும், உங்கள் அரசியல்வாதிகளை விடவும், உங்களை ஆதிக்கம் செய்துவரும் எவரையும் விடவும் கிளிகள் அதிக நுண்ணறிவு உடையவை.

நிசாங், அவற்றை கழித்துக்கட்டு.

இறந்த காலம் முழுவதையும், நோய்கள் அனைத்தையும், உங்கள்மேல் கோர்த்திருக்கும் அத்துணை சீழையும் கழித்துக் கட்டுவதற்கான நிகழ்முறையே தியானம். அது வேதனையானதே. ஆனால் அது சுத்திகரிக்கிறது. உங்களை துப்புரவாக்க அதைத்தவிர வேறு வழி இல்லை.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஒரு பிரிட்டிஷ் மாதை உங்கள் கணக்கில் சேர்க்காமல் விட்டுவிட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஏன்?**

**விவேக்.**

**ஆ**ம். கணக்கில் ஒரு ஆளைச் சேர்க்காமல் விட்டுவிட்டேன் என்பதை நானும் அறிவேன். இங்குள்ள ஒவ்வொருவரும் அறிவார் என்றே நினைக்கிறேன். அந்த ஆள் சாகர் ஒரு "சரியான" ("Proper") ஆள். ஆனால் அவனை நான் விட்டுவிடவே வேண்டியதாயிற்று- ஏனெனில் அவன் ரொம்பவுமே சரியானவன்! அவன் தன்னளவிலேயே ஒரு தனிப் பிரகிருதி. அவனை மற்றவர்களுடன் சேர்த்து வகைப்படுத்த முடியாது. மேலும் அவன் உண்மையாகவே ஒரு கனவான்.

சோமேந்திராவை நான் நங்கையர் பட்டியலில் சேர்க்க முடியும்- அவன் ஒரு ஆற்றல் நிகழ்வு. புனித ஆவி வகையறா! புனித ஆவி

ஆணா பெண்ணா என யாருக்காவது தெரியுமா? அவரை நீங்கள் எந்த பட்டியலிலும் இருத்த முடியும். அப்படியே சோமேந்திராவை எதிலும் சேர்க்க முடியும். ஆனால் சாகர் ஒரு பிரிட்டிஷ் கனவானைவிட அதிக சரியானவன் (too proper). எனவேதான் அவனை விட்டுவிட்டேன். மேலும் அவன் பெயரைச் சொல்ல தேவையில்லை- எப்படியும் எல்லோருக்கும்தான் தெரியுமே என்றும் நினைத்தேன். இரண்டாவது விஷயம். அப்படியே அவன் பெயரைச் சேர்த்திருந்தாலும் அந்த நகைச்சுவையை அவன் புரிந்திருக்க மாட்டான்!

முல்லா நசுருதீன் நீதிமன்றத்துக்கு கொண்டு வரப்பட்டார். அவர் தன் மனைவியிடம் ஒரு சிரிப்பை சொன்னதற்காக குற்றம் சாட்டப்பட்டார். அந்த சிரிப்பை அவள் கேட்டதும், அவள் பயங்கரமாக சிரித்தாள். பலமாக சிரித்ததால் இறந்துவிட்டாள் என்று போலீஸ் அறிக்கை கூறியது.

"இதை நான் நம்பமாட்டேன்" என்றார் நீதிபதி. அவர் ஒரு சரியான (proper) ஆங்கிலேயர். "அந்த சிரிப்பை கூறு!" என்றார்.

முல்லா சொல்ல மறுத்தார். ஆங்கிலேயரோ வற்புறுத்தினார். "சிரிப்பை கூறு! இது என் ஆணை!"

எனவே அவர் சிரிப்பை சொன்னார். எல்லோரும் பயங்கரமாக சிரித்தார்கள். ஒவ்வொருவராக எல்லோரும் சிரித்து மடிந்தார்கள்- ஆங்கிலேயரைத் தவிர அவர் ஒரு வாரம் கழித்து இறந்தார்!

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**இதுவரை வாழ்ந்த மாபெரும் மனிதர்களில் நீங்கள் ஒருவர் என நான் நம்புகிறேன். நான் சொல்வது சரியா?**

**கீதானந்தா.**

**நீ** சொல்வது முற்றிலும் தவறு. யாரும் பெரிய மனிதர்கள் இல்லை. உனக்கொரு கதாநாயகன் இருந்தால் திரும்பிப்பார்: ஏதோ ஒரு வகையில் உன்னை நீயே சிறுமைப்படுத்திக் கொண்டிருப்பாய்.

இதுவே உண்மை! இதுவேதான்! இதற்கு ஏதும் மறைவான அர்த்தங்கள் கிடையாது.

நான் ஒரு சாதாரண மனிதன்தான்- உன்னைப்போல, ஒவ்வொருவரையும்போல. நான் பெரியவன், நீ பெரியவனல்ல

என்பதில் இல்லை வேறுபாடு. நான் விழித்திருக்கிறேன், நீயோ தூங்கிக் கொண்டிருக்கிறாய் என்பதில்தான் வேறுபாடு. ஆனால் அதனாலும் நீ சிறியவன் ஆகிவிடுவதில்லை. நான்- பெரியவன் ஆகிவிடுவதில்லை. யாருமே பெரியவர் அல்லர். இந்த அபத்தம் முழுவதையும் கைவிட வேண்டும்.

என்னை ஒரு நாயகனாக பார்க்கத் தொடங்கிவிடாதே. நான் இன்னும் உயிரோடுதான் இருக்கிறேன்! நான் இறந்ததும் நீங்கள் விரும்புகிறபடி யெல்லாம் நீங்கள் செய்யமுடியும். ஏனெனில் அப்போது உங்களை என்னால் தடுக்க முடியாது. ஆனால் இப்போதைக்கு அத்தகைய காரியங்களை நான் அனுமதிக்க மாட்டேன்.

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நீங்கள் ஒருநாள் இந்த பூமியில் இருப்பீர்கள் என்பதைக் குறித்து கவுதம புத்தருக்கோ இயேசு கிறிஸ்துவுக்கோ ஏதாவது தெரிந்திருந்ததா?**

**யோகேஷ்.**

தெரிந்திருக்கும் என்றே யூகிக்கிறேன்! 25 நூற்றாண்டுகளுக்கு முன் மைத்ரேயன் என்னும் பெயருடன் ஒரு விழிப்புணர்வு பெற்றவர் தோன்றுவார் என கௌதம புத்தர் கூறுவது வழக்கம்; மைத்ரேயன் என்றால் நண்பன் என்று பொருள். 25 நூற்றாண்டுகளாக, அதுவே அந்த ஞானியின் பெயராக இருக்கும் என எண்ணப்பட்டு வந்தது. ஆனால் என் சொந்த விளக்கம் என்னவென்றால் புத்தர் பெயரைப்பற்றி பேசவில்லை. அந்த நபரின் தன்மையைப் பற்றியே பேசி இருக்கிறார்: "அவர்தான் ஒரு நண்பனாக இருக்கப்போகும் முதல் ஆசான், அவர், தான் ஒரு ஆசான் என பாசாங்கெல்லாம் செய்யமாட்டார். 'நான் உங்கள் நண்பன்' என்று மட்டுமே அவர் கூறுவார்" என்று புத்தர் சொல்கிறார்.

நானும் உங்களிடம் அப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்: நான் உங்கள் நண்பன் என்கிறேன். எனவே தான் அவருக்கு தெரிந்திருக்கலாம் என யூகிக்கிறேன் என்கிறேன்.

ஆனால் இயேசுவுக்கு என்னைப்பற்றி நிச்சயமாக தெள்ளத் தெளிவாக தெரிந்திருந்தது. ஏனெனில் பழமையான கதை ஒன்று உள்ளது... நீங்கள் அதை கேள்விப்படாதிருக்கலாம். ஏனெனில் அது குருவிடமிருந்து சீடருக்கு மிகவும் அந்தரங்கமாக காதில் ஓதப்பட்டு

('கர்ண பரம்பரையாக') வந்திருக்கிறது. இதுவரை அது ரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தது. முதல்முறையாக அதை நான் உங்களுக்குச் சொல்கிறேன்!

கடைசி இரவுணவின்போது இயேசு தன் சீடர்களிடம் பேசிக் கொண்டிருந்தார்: "பீட்டர், நீ என் திருச்சபையை (சர்ச்) ஸ்தாபிப்பாயாக. ஆண்ட்ரூ, நீ பூமியின் நான்கு மூலைகளிலும் என் நற்செய்தியை போதிப்பாயாக. ஜான், நீ போய் நோயாளிகளை குணமாக்கி ஏழைகளை போஷிப்பாயாக. தோமா, நீ, இன்றிலிருந்து சுமார் 2000 ஆண்டுகள் கழித்து பகவன் ஸ்ரீரஜனீஷ் என்பவர் வந்து விரித்துரைப்பதற்காக, ஒரு சுவிசேஷத்தை எழுதுவாயாக. யூதாஸ், நாம் சாப்பிட்டதற்கு கட்டணத்தை நீ செலுத்துவாயாக- ஏனெனில் இங்கு வேறு யாரிடமும் காசு இல்லை!"

**ஆறாவது கேள்வி:**

**அன்பு – அ ஓஷோ – அ,**

**நான் – அ நிறையவே தோண்டிவிட்டேன் – அ.**

**அது – அ தொலைவிலேயே இருந்தது – அ.**

**எங்கள் மேல் – அ இன்னும் – அ கொஞ்சம் – அ தாக்குதல் நடத்த முடியுமா?**

**நீங்கள் – அ தொலைநோக்கு – அ கொண்டவர் – அ!**

**உங்களுக்கு – அ நிறைய நன்றி – அ சொல்லத் தோணுகிறது – அ!**

**பி.கு. – அ: நான் வந்து – அ, அமெரிக்க – இத்தாலிக்காரி – அ – ஒரு அ சரியான குழப்பம் – அ!**

**பிரேம் பதிபாதா.**

எனக்குத் தெரியும். ஏனெனில் அன்றுதான் யாரோ உன்னைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஒரு சுவாமி இன்னொரு சுவாமியிடம் சொல்லிக் கொண்டிருந்தார்: "தம்பி, அவள் ஒரு கடுமையான விளைவுகளுடன் வெடிக்கக்கூடிய (ஹை-எக்ஸ்ப்ளோசிவ்) பெண்!"

"ஹை-எக்ஸ்ப்ளோசிவ் பெண்ணா?"

"ஆம், கைவிட்டால் ஆபத்தானவள்! (டேஞ்சரஸ் வென் டிராப்டு!)"

இத்தாலி குணமும், அமெரிக்க குணமும் சேர்வது- மிக ஆபத்தான சேர்மானம்தான்.

அதிக காம உணர்ச்சி கொண்ட பெண்ணின் அப்பா குண்டுகள் நிரப்பிய துப்பாக்கியுடன் கூடத்துக்கு வந்ததும் இத்தாலியன் சொன்னான். "அலறல் சத்தம் போட்டது உங்கள் மகள் அல்ல, நான்தான்!"

விளங்கியதா? திரும்பவும் சொல்கிறேன்: அதிக காம உணர்ச்சி கொண்ட பெண்ணின் அப்பா குண்டுகள் நிரப்பிய துப்பாக்கியுடன் கூடத்துக்கு வந்ததும் இத்தாலியன் சொன்னான், "அலறல் சத்தம் போட்டது உங்கள் மகள் அல்ல, நான்தான்!"

ஒரு குடிப்பகத்தில் அழகான, பொன்னிறக் கூந்தல் கொண்ட இத்தாலியப் பெண்ணின் பக்கத்தில் ஒரு ஆங்கிலேயன் அமர்கிறான். சில மடக்குகளுக்குப் பின் அவள் ஆங்கிலேயனிடம் "அமோர், ஐ லவ் யூ" என்கிறாள்.

தயக்கத்துடனும் சற்று கூச்சத்துடனும் "ஐ லவ் யூ டூ (too) என்கிறான்.

"ஐ லவ் யூ த்ரீ" என்கிறாள் இத்தாலியப் பெண்.

திருமணத்துக்கு ஒருவாரம் இருக்கையில் இத்தாலிய இளம் பெண் கண்ணீருடன் தன் தாயிடம் வந்தாள். "கலியாணம் செஞ்சிக்க எனக்கு ரொம்ப பயமா இருக்கு" என்றாள். "என் கண்ணாளனை திருப்திப்படுத்த முடியாதோன்னு பயமா இருக்கு."

பெண்ணின் சோதனை முயற்சிகளை எளிதாக்க விரும்பிய தாய் தாம்பத்திய ரகசியங்களை அவளுக்கு விளக்க முன்வந்தாள். அவள் செய்ய வேண்டியதென்ன என்பதை அவளுக்கு சற்று தயக்கத்துடன் விளக்கத் தொடங்கினாள்.

"ஓ, அதைப் பற்றி எனக்கு குழப்பமில்லைம்மா" என்றாள் மகள், "அதெல்லாம் நன்றாகச் செய்யத் தெரியும். சமைக்கத்தான் தெரியாது!"

ராபர்ட்டோவும் அவனது பப்ளிமாஸ் மனைவியும் கால்பந்து ஆட்டம் தொடங்கட்டும் என்று பார்வையாளர் மேடையில் உட்கார்ந்து காத்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நண்பன் அவர்களைத் தாண்டிப் போனான். "ஹலோ ராபர்ட்டோ" என்றவன் அவன் மனைவியின் மார்பகங்களை லேசாக நசுக்கிவிட்டு நடந்தான்.

சில நிமிடங்கள் கழித்து இன்னொரு பேர்வழி தாண்டிப் போனான். "ஹலோ ராபர்ட்டோ" என்றான். மனைவியின் மார்பகங்களை வருடினான், பின் நடந்தான். கொஞ்ச நேரத்துக்கு இந்த விநோத சம்பவம் தொடர்ந்தது.

கடைசியில் ராபர்ட்டோவுக்கு பக்கத்தில் உட்கார்ந்திருந்த மனிதன் வாயைத் திறந்தான்: "நண்பா, எனக்கு இதில் பிரச்சனை இல்லை. இருந்தாலும் இது கொஞ்சம் ஒருமாதிரி இல்லையா? குறைந்தது 12 பேர் வந்தார்கள். உன்னிடம் அலோ சொன்னார்கள். பின் உன் மனைவியின் மார்பகங்களை அமுக்கினார்கள். ஏன் இப்படி?"

ராபர்ட்டோ அவனைப் பார்த்து புலம்பினான், "நான்- அ என்ன செய்ய? அவளை - அ நான் - அ வீட்டில் - அ விட்டுவந்தால் - அ, எல்லோருடனும் - அ அவள் - அ படுத்துவிடுவாள் - அ!"

தெருப்பொறுக்கி: (செஞ்சி பார்க்க) ஆசையா, கண்ணு?"

இத்தாலியப் பெண்: "ஒரு அந்நியப் பெண்ணிடம் இப்படிப் பேச என்ன துணிச்சல் உனக்கு! அதுவும் 22 மல்பெரி வீதி, தொலைபேசி: அல் 9 தோன்க்வின் 55857 என்கிற விலாசத்தில் குடியிருக்கும் ஒரு அந்நியப் பெண்ணிடம்."

பதிபாதா, இது போதுமா அல்லது இன்னும் கொஞ்சம் - அ வேண்டுமா?

நல்லதுதான் - இத்தாலி, அமெரிக்க என்ற 2 உலகங்களையும் நீ அனுபவிப்பதில் நான் மகிழ்கிறேன். நீ இரண்டுமடங்காக ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறாய்.

பதிபாதா உண்மையிலேயே ஒரு அழகான பெயர். மிகவும் துணிச்சலானவள். அவள் அபாயகரமாக வாழ விரும்புகிறாள். எப்படி அப்படி வாழ்வதென்றும் அறிவாள். மேலும் அபாயகரமாக வாழ விரும்புபவர்களும், அதற்கு ஆயத்தமாக இருக்கிறவர்களும் எப்போதும் எனக்கு பிடித்தமானவர்களாக இருக்கிறார்கள். பதிபாதா ஏறக்குறைய ஒரு கிறுக்குப் பெண். ஆனால் ஒரு பெண் நிசமான பெண்ணாயின் அவள் கொஞ்சம் கிறுக்கியாகத்தான் இருப்பாள்! கொஞ்சம் கிறுக்காக இல்லாவிட்டால் அவள் ஆர்வமற்றவளாக, அரைப்பிணமாக இருப்பாள்.

எனவேதான் ஆங்கில சீமாட்டிகளைப் பற்றி நான் மிக அதிகமாக கிண்டல் அடிக்கிறேன்- அவர்கள் பாதி செத்தவர்களாக

இருக்கிறார்கள். இத்தாலிய பெண்களோ மிகவும் உயிர்ப்புள்ளவர்களாக இருக்கிறார்கள்! நூற்றாண்டுகளாகவே இத்தாலி ஒருவகையில் அதிருஷ்டசாலியாகவே இருந்திருக்கிறது. ரோமப் பேரரசின் நாட்களில் இருந்தே ஒருபோதும் மிகவும் ஒடுக்கப்படாத ஒரே நாடாக இத்தாலியே இருந்தது. ரோமானியர்கள் ஒருபோதும் போலித்தனமான மதவாதிகளாக இருந்ததில்லை. ஒருபோதும் எந்த ஒரு காலகட்டத்திலும் அவர்கள் புனிதர்கள் எனப்படுவோராக ஆகவில்லை. அவர்கள் மிகவும் லௌகிகமாகவே இருந்தார்கள். அந்த குணம் இத்தாலிய ரத்தத்தில் இப்போதும் ஊறி இருக்கிறது. கத்தோலிக்க திருச்சபையால்கூட அவர்களை வெகுவாய் கெடுக்க முடியவில்லை. இத்தனைக்கும் அவர்கள் மத்தியில்தான் வாடிகன் உள்ளது. ஆனால் இத்தாலியர்களை கெடுக்க முடியாது- போப்பை அவர்கள் கெடுத்துவிடுவார்கள்!

அந்த மனசார்ந்த தன்மை எனக்கு பிடித்திருக்கிறது. அந்த மண்ணின் மணம் மக்களை உயிர்ப்புடன் இருக்கச் செய்கிறது.

இத்தாலியர்களில் சிலரை என் தொடர்பாளர்களாக (மீடியங்களாக) நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன். பல அசிங்கமான பெண்கள், தட்டை மார்புடைய பெண்கள், எனக்கு கடிதங்கள் எழுதியபடியே இருக்கிறார்கள். அது இப்போது பெருவாரியான அளவில் பரவிவிட்டிருக்கிறது. "பகவான், நாங்கள் உங்களின் தொடர்பாளர்களாக ஒருபோதும் ஆக முடியாதென தெரிகிறது- நாங்கள் அசிங்கமும் தட்டையான மார்புடையவர்களுமாக இருப்பதால்தானே!"

கவலைப்படாதீர்கள். உங்களுக்கு மறுஉலகில் சன்மானம் கிட்டும். இரண்டு உலகங்களையும் உங்களால் ஒருசேர பெற முடியாது. (என்) தொடர்பாளராக இருக்க ஒரு பெண் குறைந்தபட்சம் ஒரு பெண்ணைப் போல தோற்றமளிக்கவாவது வேண்டும்! தட்டை மார்புடைய பெண்களை நான் தேர்ந்தெடுக்க தொடங்குவதானால், பின் ஏன் ஆண்களையே தேர்ந்தெடுக்க கூடாது? அவர்களிடம் என்ன குறை? ஒரு சிறு வேறுபாடுதானே- கொஞ்சம் முலைகளும் பிறவும்தானே? (little tits & bits[]) எனவே எனக்கு இத்தகைய கடிதங்கள் எழுதுவதை நிறுத்துங்கள். நான் விழிப்புணர்வு பெற்றிருக்கலாம்- ஆனால் நீங்கள் நினைக்கிற அளவுக்கு விழிப்புணர்வு பெறவில்லை: எனக்கு இன்னும் கொஞ்சம் அழகியல் உணர்வு இருக்கிறது! நான் ஒரு பெண்ணை தேர்ந்தெடுக்கையில் ஒரு பெண்ணையே நான் தேர்ந்தெடுக்கிறேன்!

குறைந்தபட்சம் அவள் ஒரு பெண்ணாக தோன்றவாவது வேண்டும்! மேலும் அந்த தொடர்பாளர்களை தினமும் நான் பார்க்க வேண்டி இருக்கிறது... மேலும் நான் என் கர்மங்கள் யாவற்றையும் தொலைத்துவிட்டேன். எனவே இனியும் நான் துன்புற தயாரில்லை- போதும் போதும்! என் கடந்த பிறவிகளில் நான் ரொம்பவே துன்புற்றிருக்கிறேன்- பல தட்டை மார்புப் பெண்களை பார்த்துவிட்டேன்.

ஆனால் மறுபடியும் நீங்கள் பிறந்து மற்றவர்களை வாதிக்காதபடிக்கு இந்த பிறவியிலேயே நீங்கள் ஞானநிலை பெற சாத்தியமான எல்லா வழியிலும் முயல்வேன் என்பதில் நீங்கள் மகிழ்ச்சி அடையவேண்டும்! உங்களை அக்கரைக்கு அனுப்புவேன்- புனிதர்கள் அனுபவிக்கட்டும்! எனவே அவ்வகையில் நீங்கள் அதிர்ஷ்டசாலிகள். என் தொடர்பாளர்கள் கூட திரும்பி வரலாம்- வேறு ஒரு ஞானமடைந்த மனிதருக்கு அவர்கள் தேவைப்படலாம். ஆனால் உங்களுக்கோ- சந்தேகமேயின்றி- இதுவே உங்களின் கடைசி பிறவி. உங்களை எல்லாம் நான் முடித்துக்கட்டப் போகிறேன்! எனவே அந்த மட்டில் நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள். மறுஉலகில் உங்களுக்கு அமோகமாக பரிசு கிட்டும்.

எனவேதான் இயேசு சொல்கிறார்... அவரது மணிமொழி களைப் பாருங்கள். அவர் ஒருபோதும் "பணக்காரர்கள் பேறு பெற்றோர்" என்று சொல்லவில்லை. "ஏழைகள் பேறுபெற்றோர்" என்றே சொன்னார். ஏன்? ஏனெனில் ஏழைகளுக்கே ஆறுதல் தேவை. "வெற்றி பெற்றோர் பாக்கியவான்கள்" என அவர் ஒருபோதும் கூறவில்லை. "தாழ்ச்சி உடையோர் பாக்கியவான்கள்" என்றார். அந்த தாழ்ந்த மக்களுக்கு, ஏழை மக்களுக்கு கொஞ்சம் தேற்றரவு தேவை- அவர்கள் கடவுளின் ராஜ்ஜியத்தை சுவீகரிப்பார்கள்.

மேலும் நான் உங்களுக்கு கூறுகிறேன். தட்டை மார்புடையோர் பேறு பெற்றோர். ஏனெனில் கடவுளின் அரசு அவர்களுக்கே... ஆனால் தயவுசெய்து பூமியை மட்டும் விட்டுவிடுங்கள்!

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மறுபிறவி என்றால் என்ன?**

**சங்கீத்.**

உனக்கொரு சிறுகதை சொல்கிறேன். அது மறுபிறவிக் கோட்பாடு பற்றிய என் நிலைப்பாட்டை உனக்கு விளக்கும்.

*மறுபிறவித் தத்துவத்தை ராபிக்கு பின்வருமாறு விளக்குகிறார் சுரமல்லோ: அருளாளரே, நாளைக்கு நீங்கள் சாகிறீர்கள் என்போம். சில நாட்கள் கழித்து உங்கள் கல்லறையில் ஒரு பூ பூக்கிறது. ஒரு பசு வந்து அந்தப் பூவை தின்கிறது. மறுநாள் காலை பசு நிறைய சாணி போடுகிறது. நான் நடந்துபோகிறேன். அந்த சாணியை பார்த்து சொல்கிறேன். "ஆ அருளாளரே, நீங்கள் சிறிதுகூட மாறவில்லையே!"*

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**சில நல்ல யூத சிரிப்புகளை சொன்னால் என்ன? என்னைப் பார்த்து நானே சிரிக்க விரும்புகிறேன்!**

**ஆனந்த சுதர்க்கா.**

இரண்டு யூத வணிகர்கள் ஒரு நாள் மதியம் ஹார்லெமில் இளைப்பாறிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவன் மற்றவனிடம் சொன்னான். "நாம் பணப்பெட்டியை பூட்ட மறந்து விட்டோம்."

பங்காளி சொன்னான். "அதனாலென்ன? இருவருமே இங்குதானே இருக்கிறோம்?"

யூத நண்பர்களின் குழு ஒன்று, பிறவாதிருந்தால் நன்றாய் இருந்திருக்குமா என்பதைப் பற்றி விவாதிக்கிறது.

"நன்றாய்த்தான் இருந்திருக்கும்" என்கிறான் அவர்களில் ஒருவன். "ஆனால் நம்மில் எத்தனை பேருக்கு அத்தகைய அதிர்ஷ்டம் இருக்கிறது?"

கொஞ்சம் நுட்பமானதே. உனக்கு புரிய 7 நாட்கள் ஆகும்.

ஒரு சித்திரவதை முகாமில் இரண்டு யூதர்கள் நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் கேட்டான். "ஏய் மோசே, இப்போது நேரம் எவ்வளவு என்று உனக்குத் தெரியுமா?"

"ஏன், எங்காவது போக வேண்டியிருக்கிறதா?" என்றான் இரண்டாமவன்.

லண்டனில் ஒரு ஆடம்பர உணவகத்துக்கு ஒரு ஸ்காட்டியன். ஒரு ஆங்கிலேயன். ஒரு யூதன் ஆகியோர் போனார்கள்.

விருந்தின் முடிவில் ஸ்காட்டியன், "நல்லது நண்பர்களே. இன்று இரவுச் செலவை நான் ஏற்றுக்கொள்கிறேன்" என்று சொல்வது கேட்டது.

மறுநாள் காலையில் செய்தித்தாள் தலைப்புச் செய்தி: "யூதனான பல குரல் மன்னன் (வெண்ட்ரிலோக்விஸ்ட்) உணவகத்தின் வெளியே செத்துக் கிடந்தான்."

கடைசியாக: ஒரு ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்த ஒரு மனிதன் நாவல் படித்துக் கொண்டிருக்கிறான். அவனருகில் ஒரு இளம்பெண் உட்கார்ந்திருக்கிறாள்.

"ஏ, யூதா!" என்கிறாள் அப்பெண், "மணி என்ன?"

அவன் அதிர்ச்சி அடைகிறான். ஆனால் நிதானத்தை கடைப்பிடிக்கிறான், பதில் கூறுவதில்லை.

ஒரு நிமிடம் கழித்து அவள் மறுபடியும் கேட்கிறாள், "ஏ யூதா! மணி என்ன?"

பதில் இல்லை. எனவே மேலும் 5 தடவைகள் கேட்கிறாள்.

இறுதியில் அவனுக்கு கோபம் வந்து கூறுகிறான், "என் மணி என் பைக்குள் உள்ளது. நீயே பார்த்து நேரத்தைத் தெரிந்துகொள்."

"உன் பைக்குள் நான் எப்படி பார்க்கமுடியும்?" என்று கேட்கிறாள்.

அவன் பதிலளிக்கிறான், "நான் யூதன் என்பதை மட்டும் எப்படி கண்டுபிடித்தாய்?"

**ஒன்பதாவது கேள்வி:**

**ஓஷோ,**

**கிழக்கில் கடந்த 8 வருடங்களாக நான் இருந்து வருகிறேன். வரவர அதிக சோம்பேறியாகிக் கொண்டு வருகிறேன். ஏன்?**

**ஆனந்த பிரேம்தா.**

கவலைப்பட ஒன்றுமில்லை- உன்னைப் பிடித்திருப்பது உள்ளூர் வியாதிதான்!

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**என் நிசமான கேள்விகளை கேட்க நான் ஏன் பயப்படுகிறேன்?**

**அவிநாஷ்.**

நிஜமான கேள்விகளைக் கேட்க ஒவ்வொருவரும் பயப்படுகிறார்கள். எனவேதான் மக்கள் மதம் சார்ந்த கேள்விகளை. தத்துவ கேள்விகளை- கடவுள், உலகத்தோற்றம், மறு உலகம், மறுபிறவி பற்றிய கேள்விகளை கேட்கிறார்கள். ஏனெனில் இந்த கேள்விகள் எந்த வகையிலும் உங்களுடன் தொடர்புடையது அல்ல. நீங்கள் வெளியிலேயே இருக்கிறீர்கள்.

நிசமான கேள்வியை கேட்பது ஆபத்தானது. ஏனெனில் நிசமான கேள்வியை கேட்கும்போது என்னை நீங்கள் நேரடியாக எதிர்கொள்ள வேண்டி உள்ளது. அதன் விளைவுகளைச் சந்திக்க வேண்டி உள்ளது. என்னைப் பற்றி முன்கூட்டி கணிக்கமுடியாத ஆள் நான். நான் என்ன சொல்லப் போகிறேன் என்பது யாருக்கும் தெரியாது. உங்களை நான் தட்டிக் கொடுப்பேனா தட்டி எறிவேனா என்பது ஒருவருக்கும் ஒருபோதும் தெரிவதில்லை. ஒருபோதும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. மேலும் நிஜமான கேள்வியை கேட்பதற்கு துணிவு தேவைப்படுகிறது- உங்கள் இதயத்தை திறக்கவும் உங்கள் காயங்களை காட்டவும் அது வலிக்கிற இடத்தைக் காட்டவும் துணிவு தேவைப்படுகிறது. யாருமே தம் காயங்களை காட்ட விரும்புவதில்லை. யாருமே தன் கண்ணீரை வெளிப்படுத்த விரும்புவதில்லை- ஆனால் ஒவ்வொருவரும் கண்ணீர் நிரம்பியவராய் காயங்கள் நிரம்பியவராய் இருக்கிறார்கள். அதேபோது ஒவ்வொருவரும் தான் மகிழ்ச்சியாக இருப்பதாக நடித்துக் கொண்டிருக்கிறார்.

யாரையும் "எப்படி இருக்கீங்க?" என்று கேளுங்கள். "நல்லா இருக்கேன்! நலம்- நலமறிய ஆவல்!" என்பார். ஆனால் யாருமே நல்லாவும் இல்லை, நலமாகவும் இல்லை. ஆனால் மக்கள் அப்படி வெளிக்குக் காட்ட வேண்டி இருக்கிறது.

இங்கே 3000 பேருக்கு முன் உங்கள் கேள்வியை கேட்பது உங்களை நீங்களே வெளிப்படுத்துவதாக இருக்கிறது. அம்மணமாக- ஆன்மிக ரீதியில் அம்மணமாக- எல்லோருக்கும் முன் அது நிற்கிறது. உடல்ரீதியாக அம்மணமாக நிற்பது எளிது- அது பெரிய விசயமில்லை. ஒருவர் தன் ஆடைகளை மிக எளிதாக களைந்துவிட முடியும்- ஆனால் ஆன்மிக ரீதியாக அம்மணமாக நிற்க பிரமாண்டமான துணிவு தேவைப்படுகிறது. அதற்கு முரட்டுத் துணிச்சல் தேவை. ஏனெனில் அது உங்கள் உடையை உரிப்பதல்ல. தோலையே உரித்துக் காட்டுவது, உங்கள் எலும்புக்கூட்டை காட்டுவது, உங்கள் அசிங்கம் எல்லாவற்றையும் வெளிக்காட்டுவது. ஆனால் அம்பலப்படுவதற்கு யாரும் விரும்புவதில்லை.

நாம் எல்லோருமே நம் முகங்களை முகமூடிகளால் மறைத்துக் கொண்டிருக்கிறோம்- அழகான முகமூடிகள் அவை. நிச முகத்தை ஒருபோதும் எவருக்கும் காட்டுவதில்லை. உங்கள் நிசமுகம் எப்படி இருக்கிறது என்பதை நீங்களே மறந்துவிட்டிருக்கிறீர்கள். உண்மையில், நிசமான கேள்விகளை நீங்கள் தேடும்போது முதலில் நிசமற்ற கேள்விகளே-1001 பொய்யான கேள்விகளே- உங்கள் முன் வருகின்றன. நீங்கள் மிகவும் விடாப்பிடியாக இருந்தால் ஒழிய, தொடர்ந்து தோண்டி எறிந்துகொண்டே இருந்தால் ஒழிய பொய்க் கேள்விகள்... "உலகத்தைப் படைத்தது யார் என்று கேள்" என்று மனம் சொல்லிக் கொடுக்கிறபோது, நீங்கள் ஒரு உண்மையான சாதகர் என்றால் நீங்கள் சொல்வீர்கள், "என்ன அபத்தம்- இது! அதனால் என்ன இப்போது? யார் படைத்தால் என்ன? உலகம் இருக்கிறது என்பதே உண்மை. அதை X படைத்தாள் என்ன Y படைத்தால் என்ன. ™ படைத்தால் என்ன? மேலும் யாரும் அதைப் படைத்தார்களா, படைக்கவில்லையா என்பதும் முக்கியமில்லை. கேள்வியே அர்த்தமற்றது. அது என்வாழ்க்கையை பாதிக்கப் போவதில்லை. கடவுள் அதைப் படைத்தால் என்ன? அல்லது பவுத்தரும் சமணரும் கூறுவதுபோல யாரும் அதைப் படைக்காவிட்டாலும் தான் என்ன? இந்துக்களும் முஸ்லிம்களும் கிறித்தவர்களும் வாழும் அதே மடத்தனமான முறையிலேயே சமணர்களும் பவுத்தர்களும் வாழ்கிறார்கள். அதனால் அவர்கள் வாழ்வில் எந்த மாறுதலும் ஏற்படவில்லை."

உங்கள் வாழ்வில் எந்த மாறுதலையும் ஏற்படுத்தாத ஒவ்வொரு கேள்வியும் நிசம் அற்றதே. ஆனால் அப்படிப்பட்ட கேள்விகளை கேட்பதுதான் எளிதாயிருக்கிறது. முதலாவதாக, அது உங்களின் அறிவைப் பறைசாற்றுகிறது; உங்களுக்கு தத்துவம், சித்தாந்தம். ஆன்மிகம் எல்லாவற்றின் மேலும் கரிசனம் இருக்கிறது என காட்டுகிறது. உங்களுக்கும் சாஸ்திரம் தெரியும் என காட்டுகிறது.

மக்கள் எனக்கு பின்வருமாறு அடிக்கடி எழுதுகிறார்கள், "கண்ணன் கீதையில் இதை சொல்லி இருக்கிறாரே- அதற்கு என்ன பொருள்?" அவர் கூறியதன் பொருள் எதுவாயினும் அது உங்கள் வாழ்வை பாதிக்க போவதில்லை. மேலும் அதற்கு 1000 உரைகள் ஏற்கெனவே கிடைக்கின்றன. அவை எந்த மாற்றத்தையும் செய்யவில்லை என்றால்- 1000 உரைகளும் பயனற்றவையே- என் உரையும் அப்படித்தான் ஆகப் போகிறது- அது உங்கள் வாழ்வை பாதிக்கப்போவதில்லை.

ஒருதடவை நான் மகாவீரரைப்பற்றி ஒரு உரை ஆற்றிக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு சமண தீர்த்தங்கரர், சமணபண்டிதர், மிகப் பிரபலமான அறிவாளி- அவரது நூல்களை நானே படித்திருக்கிறேன். அவரது புலமையை அடிக்கடி வியந்தும் இருக்கிறேன்- எழுந்தார். அவர் கேட்டார். "ஒரே ஒரு கேள்வி. புத்தரும் மகாவீரரும் சமகாலர்கள் (சமகாலத்தவர்கள்). இவர்களில் யார் வயதில் பெரியவர்! ஏன் கேட்கிறேன் என்றால் நானும் ஏறக்குறைய 50 ஆண்டுகளாக இதை ஆராய்ந்து வருகிறேன். ஆனால் எந்த தீர்மானகரமான முடிவுக்கும் இன்னும் வரமுடியவில்லை. புத்தரே அதிக வயதானவர் என்று ஊகிக்கவும் போதிய காரணங்கள் உள்ளன. மகாவீரரே அதிக வயதானவர் என்று ஊகிக்கவும் போதிய காரணங்கள் உள்ளன."

நான் அந்த மனிதரை சில கணங்கள் நோக்கினேன். பூரண நிசப்தம் நிலவியது. படிப்பாளி சிறிது அசவுகரியமாக உணரத் தொடங்கினார்- ஏன் அவரை நான் இந்த முறையில் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன்? அவர் மறுபடியும் கேட்டார், "நான் ஏதாவது தவறாக கேட்டுவிட்டேனா? ஏன் என்னை ஒருமாதிரியாக பார்க்கிறீர்கள்? ஏதாவது தவறாக கேட்டுவிட்டேனா?"

நான் சொன்னேன், "தவறு மட்டுமல்ல. உம் வாழ்க்கை முழுவதையுமே நீர் வீணாக்கி விட்டீர்! 50 ஆண்டுகள்! அதனால் என்ன பயன்? புத்தருக்கு வயது அதிகமாக இருந்தால் என்ன, மகாவீரருக்கு வயது அதிகமாக இருந்தால் என்ன? அது அவர்களின் தத்துவத்தை பாதிப்பதில்லை. அது வாழ்க்கைபற்றி அவர்கள் கொண்டிருந்த அணுகுமுறையை பாதிப்பதில்லை. உம்மையும் அது எவ்வகையிலும் பாதிக்கப் போவதில்லை. ஏன் உம் 50 ஆண்டுகளை நீர் வீணாக்கினீர்? சுத்த விவஸ்தைகெட்ட முட்டாளாக இருக்கிறீர்!"

தலைமை தாங்கிக் கொண்டிருந்த மனிதர் என்னை இடித்துச் சொன்னார், "அவர் யார் எனத் தெரியுமா உங்களுக்கு? மிகவும் புகழ்பெற்ற சமணப் புலவர் அவர்!" அவரின் பெயரையும் சொன்னார்.

நான் சொன்னேன். "அப்படியானால் நான் அவரை இன்னும் அதிகமாகவே தாக்குவேன். ஏனென்றால் எப்போதும் அவருடைய நூல்களை போற்றி வந்திருக்கிறேன். ஆனால் இந்த மனிதர் முட்டாளாய் இருக்கிறார்! அத்தகைய நல்ல நூல்களை எப்படித்தான் இவர் எழுதினாரோ! ஒரு மனித இயந்திரமாகத்தான் அவர்

செயல்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் இவரை நேரில் பார்க்கிற போது, இவருடைய கேள்வியை கவனிக்கிறபோது... ஐம்பது ஆண்டுகளாக என்கிறார். அவ்வளவு காலத்தை இப்பேர்ப்பட்ட மாபெரும் கேள்விக்காக அர்ப்பணித்தேன் என்று பெருமைவேறு பேசுகிறார்.'' அவர் தன் அறிவாளித் தனத்தையே காட்டிக் கொண்டிருந்தார்.

மதசார்பான, தத்துவமான கேள்விகளைக் கேட்பது எளிது. அது உங்களின் அறிவை காட்டுகிறது. அது உங்களின் அகங்காரத்தை காட்டுகிறது. அது உங்களின் தற்பெருமையைக் காட்டுகிறது. ஆனால் ஒரு நிசமான கேள்வியை நீங்கள் கேட்கிறபோது அது உங்களை காயப்படுத்த முடியும். உங்களை அம்பலப்படுத்த முடியும். உங்களின் அறியாமையை வெளிப்படுத்த முடியும். உங்களின் அறியாமையை மட்டுமல்ல. உங்களின் பித்தநிலையையும் அது காட்டவே செய்யும். உங்களின் பிளவுபட்ட ஆளுமையையும் அது காட்டவே செய்யும். உங்களின் மூளைக் கோளாறையும் அது காட்டவே செய்யும்.

அதனால்தான், அவிநாஷ் மேலும் நீ ஒரு இந்தியன். இந்தியர்களே தற்பெருமையில் தலைசிறந்தவர்கள். அவர்களுக்கு பீற்றிக்கொள்ள வேறு ஒன்றுமில்லை. பணம் அவர்களிடம் இல்லை. அதிகாரம் அவர்களிடம் இல்லை. தொழில்நுட்பம் அவர்களிடம் இல்லை. விஞ்ஞானம் அவர்களிடம் இல்லை. எதுவுமே அவர்களிடம் இல்லை. ஒன்றே ஒன்றுதான் அவர்களிடம் இருக்கிறது: 'உன்னைவிட நான் உசத்தி' என்ற அகங்கார மனோநிலை மட்டுமே அவர்களிடம் இருக்கிறது. எனவே உண்மையான கேள்விகளை கேட்பதற்கு இந்தியர்கள் பயந்து சாகிறார்கள். நிஜமான கேள்விகளை அவர்கள் ஒருபோதும் கேட்பதில்லை. நிசமான கேள்விகளை கேட்ட இந்தியர்களை இதுவரை நான் பார்த்ததில்லை. அவர்கள் ஒருபோதும் தம்மை அம்பலப்படுத்திக் கொள்வதில்லை. பைத்தியம் பிடித்து அலைந்தாலும் கூட அதை ஏதாவது அலங்காரத்தால் பூசி மெழுகவே முயல்கிறார்கள்.

அன்று ஒருநாள் எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதன் விவரம்; ஒரு பெண் கொஞ்சம் மூர்க்கமாக நடந்துகொள்கிறாள். ஆனால் அதை எழுதியிருந்தவர்கள் அவளுக்கு புத்திபேதலித்து விட்டது என்றோ, அவள் வெறித்தனமாக நடந்துகொள்கிறாள் என்றோ எழுதவில்லை. அவர்கள் எழுதினார்கள்: "அவள் ராமகிருஷ்ணர்போல, மீராவைப் போல நடந்து கொள்கிறாள். எனவே பகவான், நீங்கள் மட்டுமே உதவ முடியும்.''

சிலநாட்களுக்கு முன் அவர்கள் தொலைபேசினார்கள். அவர்களுக்கு செய்தி கொடுக்கப்பட்டிருந்தது: "அவளை உளவியல் மருத்துவரிடம் கொண்டுபோங்கள்". அதற்கு மிக கோபமான பதில் இப்போது வந்துள்ளது. "நீங்கள் இருக்கும்போது ஏன் அவளை உளவியல் மருத்துவரிடம் கொண்டுபோக வேண்டும்? அவளுக்கு பைத்தியமில்ல. அவள் மிகவும் உயர்ந்த நிலையில் இருக்கிறாள்! மருத்துவரிடம் கொண்டுபோனால் ஆபத்தாக முடியும். ஏனென்றால் அவர் அவளுக்கு அதிர்ச்சி சிகிச்சையும் தூக்கமாத்திரையும் தான் கொடுப்பார். அவளை மறுபடியும் தரைக்கு- சாதாரண நிலைக்கு கொண்டு வந்து விடுவார். ஆனால் அவளோ அசாதாரண நிலையில் இருக்கிறாள் நீங்கள் மட்டுமே இதை புரிந்துகொள்ள முடியும்."

அந்தப் பெண்ணுக்கோ பைத்தியம்தான்- அவளை எனக்கு தெரியும். சில நாட்களுக்கு முன்தான் அவள் இங்கு இருந்தாள். இங்கு இருந்தபோது என் பாதங்களை தொட வந்திருந்தாள். இந்தப் பெண்ணுக்கு எந்த நேரத்திலும் சித்த சுவாதீனம் இல்லாமல் போக முடியும் என்பதை என்னால் காண முடிந்தது. ஆனால் இந்தியாவில் உங்களுக்கு பைத்தியம் பிடித்தால் நீங்கள் பித்தர் அல்ல, சித்தர். மேற்கிலோ தலைகீழ் நிலை. அங்கு நீங்கள் ஒரு சித்தரானால் உடனடியாக உங்களை மனநோயாளிகள் காப்பகத்தில் அடைத்து விடுவார்கள்! அவளுக்கு பித்துப் பிடித்துள்ளது என்ற கருத்தை இந்தியர்கள் விரும்பவில்லை.

தன் நிசமான பிரச்சனைகளை கொண்டுவர யாருமே, விரும்புவதில்லை. தான் காம விவகாரங்களை- பிரம்மைகளைப் பற்றிப் பேச எந்த இந்தியரும் முன் வருவதில்லை. அவர் வந்தால் "பிரம்மச்சரியத்தை அடைவது எவ்வாறு?" என்று கேட்கிறார். உண்மையில் இப்போது அவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பது காமத்தன்மையால்; ஆனால் அதைப்பற்றி பேசமாட்டார். மற்றவர்கள் சிரிப்பார்களே என பயப்படுகிறார்கள். மேலும் சராசரி உலகில் அதுதானே நடக்கிறது.

இது சராசரி இடமல்ல. அவிநாஷ் இங்கு யாரும் உன்னை பார்த்து சிரிக்க மாட்டார்கள். உன் பிரச்சனை நிசமானதாயின் உன்மேல் கருணை கூட கொள்வார்கள். இங்குள்ள மக்கள். உண்மையில் உன் பிரச்சனை நிசமானதாக இருந்தால் இவர்கள் உன்னிடம் அதிக பரிவுள்ளவர்களாக இருப்பார்கள். ஆனால் மக்கள் தம் நிசமான பிரச்சனைகளை மறைத்துக் கொள்கிறார்கள். வெளி உலகத்தை பொறுத்தவரை இது சரிதான். உங்கள் நிசமான

பிரச்சனைகளை வெளி உலகத்திடம் சொன்னால் மக்கள் உங்களைப் பார்த்து, ஏளனம் செய்வார்கள். அவர்கள் உங்கள்மேல் கருணை கொள்ள மாட்டார்கள். உங்களை பரிகாசப்பொருள் ஆக்கி விடுவார்கள். ஆனால் இங்கு அப்படியில்லை. இங்கு நாங்கள் சிரிப்பதற்கு வேறு எத்தனையோ இருக்கின்றன. சிரிப்பதற்கு பலவித வாய்ப்புகளை நான் கொடுக்கிறேன்; எனவே உன் நிசமான பிரச்சனைகளைப் பார்த்து சிரிப்பதற்கு யாரிடமும் சிரிப்பு மீதி இருக்காது. எனவேதான் நான் ஏராளமான சிரிப்புகளை சொல்லிக் கொண்டே போகிறேன். எதற்கென்றால் நிசமான பிரச்சனைகள் எழுகிறபோது மக்கள் உன்மேல் கருணை கொள்ள முடிவதற்காக, வெளி உலகில் அப்படித்தான் நடக்கிறது- ஆனால் இது விசேஷமான ஒரு இடம்.



# 15

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**இந்த புத்த களத்தில் நான்— என் சொந்த வீட்டில் இருப்பது போல— இயல்பாக முற்றிலும் என்னை இழந்திருப்பது, எப்படி ஏற்படுகிறது?**

**தேவ கம்மா.**

இதில் எந்த முரண்பாடும் இல்லை. இருக்கவேண்டிய முறையில் தான் இருக்கிறது, இழந்திருப்பதே. முற்றிலுமாக இழந்திருப்பதே சொந்த வீட்டிலிருப்பதாகும். சாதாரணமாக மனிதர் ஒரு அகங்காரமாகவே வாழ்கிறார்; முழுமையிலிருந்து பிரிந்த தீவாகவே வாழ்கிறார்; தனி பெயர், உருவம் தாங்கிய திட்டவட்டமான அடையாளத்தோடேயே வாழ்கிறார். அவர் தனக்கென ஏதாவது ஒரு தகுதியுடன் இருக்கிறார். மேலும் நம் வாழ்க்கை முழுவதும், நாம் யார் என்று நம்மை நாமே வரையறை செய்து கொள்ள தொடர்ந்து ஒவ்வொரு முயற்சியாக செய்துகொண்டே போகிறோம். இதற்கான எளிய காரணம் நாம் யார் என்பது நமக்குத் தெரிவதில்லை. எனவே செயற்கையான, எதேச்சையான ஒரு அடையாளத்தை உருவாக்குகிறோம். அதுதான் அகங்காரம் என்பது.

ஒரு ஆசானுடன் நீ காதல் உறவில் ஈடுபடும்போது- அதுவே புத்தகளத்தில் பிரவேசித்தல் என்பதும்- நீ உன் பழைய அடையாளத்தை இழக்கத் தொடங்குகிறாய். உன் வரையறை மழுங்கு மங்கல் ஆகத் தொடங்குகிறது. அது எப்படியும் எதேச்சையாக வந்ததே அது கரைய தொடங்குகிறது. உன் வரம்புகள்,

வரம்பற்றதுடன் கலக்கத் தொடங்குகிறது. இப்போது நீ ஒரு குறிப்பிட்ட தனித்தகுதியுடன் இருப்பதில்லை. ஒரு அநாமதேயமாக, ஒரு சூனியமாக ஆகத் தொடங்குகிறாய்.

எனவேதான் இழந்த உணர்வு ஏற்படுகிறது. ஏனெனில் உன் பழைய ஆட்டங்களை, போக்குவரத்துகளை நீ இழந்துவிடுகிறாய். உன் பழைய அவலங்களை, உன் பழைய சந்தோசங்கள் எனப்பட்டவற்றை நீ இழந்து வருகிறாய். உன் ஜீவனின் பகுதியென முன்பு நீ அறிந்திருந்தவற்றை யெல்லாம் நீ இழந்துவருகிறாய். ஒரு புதிய ஜீவன் பிறவி உருவாகிறது. இது முழுமையில் இருந்து தனிமைப்பட்டிராத ஜீவன் தனக்குள் அடைத்துக்கொண்டிராதது. முழுமையுடன் ஒன்றியது- கடலின் பகுதியாக இருக்கும் அலை போன்றது. இப்பவும் அது ஒரு அலைதான். ஆனால் இப்போது அதற்கு ஒரு ஆழமான புரிதல் நிகழ்ந்து கொண்டுள்ளது. அதாவது "நான் தனியானவன் அல்ல", "என்னைப்பற்றி நான் கவலைப்பட தேவையில்லை", "நான் பிறக்கும்முன்னும் நான் இருந்திருக்கிறேன். நான் போன பிறகும் நான் இருப்பேன்" என்னும் புரிதல்: "ஒரு அலையாக இருப்பது ஒரு கட்டமே. ஒரு கணநிகழ்வே. வடிவம் பற்றிய பிரச்சனை மட்டுமே அடியாழத்தில் நான் வடிவமற்ற சமுத்திரத்துடன் ஒன்றானவன்; நான் சமுத்திரமயமானவன்."

இதுதான் உனக்கு ஏற்பட்டுக் கொண்டிருக்கும் அனுபவம், தேவ கம்மா. எனவேதான் இழந்திருப்பதாக உணர்கிறாய்- உன் பழைய அடையாளத்துடன் ஒப்பிடும்போது அப்படி தெரிகிறது. மேலும் ஒப்பீடு எழுதுவதும் இயல்பே- ஏனெனில் பழசு நன்றாக அறிமுகம் ஆனது. பல பிறவிகளாகக் கூட அதை நீ அலங்கரித்து பேணி வளர்த்து உரமூட்டி வந்திருக்கலாம். இது ஒரு மிக நீண்டகால பழக்கம். ஏறக்குறைய காலங்காலமாக இருப்பது. எப்போது அது தொடங்கியது என்பதே உனக்கு மறந்துவிட்டுள்ளது. படைப்பு தொடங்கிய ஆதிகாலப் பழசு அது. அது மிகவும் ஆழமாக போய் விட்டிருக்கிறது- அதன் வேர்கள் மிக ஆழமாகப் போயுள்ளன. இப்போது அதுவெல்லாம் மாறிக் கொண்டிருக்கிறது. பழையது செத்துக் கொண்டிருக்கிறது; நீயோ பழையதுடன் மட்டுமே பரிச்சயப்பட்டிருக்கிறாய். எனவேதான் ஒரு சாவே நிகழ்வதுபோல் உணர்கிறாய்.

ஆனால் புதியதை நீ பார்த்தால், அது மிகவும் புத்தம்புதிதாக இளம், தென்றலைப் போல், பனித்துளியைப் போல், புதிதாக மொட்டவிழும் ஒரு ரோசா போல், மிகவும் புதிதாக... இன்னும்

அதை நீ முழுமையாக உணரவில்லை. அந்த அளவுக்கு அது புதியது- அதற்கு அறிமுகமாக பழக உனக்கு இன்னும் கொஞ்சம் காலம் தேவைப்படும். ஆனாலும் அது நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது; ஏனெனில் இந்த 2 நிகழ்முறைகளும் ஏககாலத்தில் நிகழ்வனவே ஆகும். பழசின் இறப்பும் புதுசின் பிறப்பும் ஒரே நாணயத்தின் இருபக்கங்களே.

புதியதை நீ பார்க்கத் தொடங்கும்போது சொந்த வீட்டில் இருப்பதுபோல் இயல்பாக உணர்வாய். அதுவும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது; மிக மிக தெளிவற்ற முறையிலேனும் நீயும் அதை உணர்ந்து கொண்டுதான் வருகிறாய். மெதுமெதுவாக புதியது நிலைநிற்பதாகும். பழசு வெறும் நினைவாக- மங்கிவரும் நினைவாக, தூக்கத்தில் நீ கண்ட கனவாக, உனக்கு நிகழ்ந்திராத ஒன்றாக, ஒருவேளை ஒரு திரைப்படத்தில் நீ பார்த்ததாகவோ ஒரு புதினத்தில் நீ படித்ததாகவோ ஆகி இருக்கும். அது வேறொருவரின் கதைபோல இருக்கும். மெதுமெதுவாக உன்னிடமிருந்து அது இன்னும் தொலைவுக்கு போகும்- அப்போது அதை நினைவுக்கு கொண்டுவருவதுகூட கடினமாக ஆகும். அப்போதே தொடர்ச்சியின்மை முழுமையாக நிகழ்ந்திருக்கிறது. உங்கள் தொப்புள் கொடி அறுக்கப்பட்டு விட்டது. இறந்தகாலத்தின் கர்ப்பத்திலிருந்து உண்மையாகவே நீங்கள் வெளியே வந்து விட்டீர்கள். நீங்களே சுயமாக, புதியமுறையில், ஒரு அனாமதேயமாக சுவாசிக்க ஆரம்பிக்கிறீர்கள்.

தனியாள் தன்மை இல்லாதிருப்பது வினோதமாக தோன்றுகிறது. ஆனால் பொதுமனிதராயிருப்பதே பிரபஞ்ச மனிதராக இருப்பதற்கான ஒரே வழியாகும். இல்லாது இருப்பதே இருப்புக்கான ஒரே வழியாகும். "இருப்பதா சாவதா.." என்னும் ஷேக்ஸ்பியரின் குழப்பத்தை தத்துவத்தால் தீர்க்க முடியாது; தியானத்தால் மட்டுமே தீர்க்க முடியும். ஏனெனில் தியானத்தில், 'இல்லாதிருப்பது' நீங்கள் 'இருப்பதற்கான' வழியை ஆயத்தமாக்குகிறது. இதில் தேர்ந்தெடுக்கும் சிக்கலே இல்லை இரண்டில் ஒன்றை தேர்ந்தெடுக்க தேவையில்லை. இதுவா அதுவா என்ற கேள்வி இங்கு இல்லை- இல்லாதிருப்பதேதான் நீங்கள் இருப்பதற்கான வழி. இல்லாதிருப்பதை நீங்கள் தேர்ந்தால் மற்றதையும் நீங்கள் தேர்ந்து விட்டீர்கள்; இருப்பை நீங்கள் தேர்ந்தால் இன்மை எனும் நிகழ்முறையின் ஊடாகவும் நீங்கள் செல்லவேண்டி இருக்கிறது.

தியானம் என்பது ஒரு சாதல்முறை. இன்மையின் வழி; நீங்களாகவே ஒன்றுமின்மை ஆகிற- முழுமையில் மறைகிற- முழுமையின் இசைவுடன் இசைகிற வழிமுறை. ஆனால் அது ஒரு அற்புதமே, வாழ்வின் மாபெரும் புதிரான அனுபவமே. அதில் முரண்பாடு இல்லை. ஆனால் புதிர் இருக்கிறது. அறிவு ஜீவியின் நிலைப்பாட்டில் இருந்து பார்த்தால் அது ஒரு புதிர்தான்.

நீ கேட்கிறாய்; இந்த புத்த களத்தில் நான்- என் சொந்த வீட்டில் இருப்பதுபோல இயல்பாக முற்றிலும் என்னை இழந்திருப்பது எப்படி ஏற்படுகிறது?

அப்படித்தான் அது ஏற்படுகிறது. அந்த வழியில்தான் அது நிகழுகிறது. அதுவே உலகப்பொது நியதியின் வழி- ஏஸ் தம்மோ சனாதனோ. புத்தரிடம் கேட்டால் அவர் அதை தடாதம், சுயத்தன்மை என்றிருப்பார். பிரபஞ்ச நியதி இப்படித்தான் செயல்படுகிறது. நீ மறைகிறாய், அதே சமயம் முதல்முறையாக தோன்றவும் செய்கிறாய். ஆனால் முற்றிலும் புதிய வழியில் தோன்றுகிறாய்- தனிநபராக அல்ல தனிப் பெயராக- உருவாக அல்ல, தனித்த அடையாளமாக அல்ல, மாறாக முழுமையுடன் முழுமையாய் ஐக்கியமானவராக, முழுமையுடன் ஒன்றுபட்டவராகவே தோன்றுகிறாய்.

அதுதான் இங்கு நிகழ்ந்து கொண்டிருக்கிறது. மெதுமெதுவாக சந்நியாசிகளின் ஆற்றல்கள் கரைந்து கலந்து ஒன்றாகிக் கொண்டிருக்கின்றன. ஆயிரக்கணக்கான என் சந்நியாசிகள் ஒரு ஆழ்ந்த கூட்டிசையின் தன்மையில் இயங்குகிறார்கள். அவர்கள் இனியும் ஒற்றையில் வசிப்பவர்கள் அல்ல. இந்த புத்தகளத்தில் அவர்கள் தம்மைத்தாமே மூழ்கடித்திருக்கிறார்கள்.

இதற்கு துணிச்சல், தைரியம், விவேகம், விழிப்பு தேவை. அறிந்ததில் இருந்து அறியாததற்குள் பிரவேசிக்க, வழிகாணாத கடலில் பயணம் செய்ய இவை தேவை.

தேவகம்மா, நீ இக்கரையில் இருந்து புறப்பட்டுவிட்டாய். உன் சிறு படகு அறியாததை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது. ஒருபோதும் திரும்பிப் பார்க்காதே. பழைய கரை உன்னை திரும்ப அழைக்கும். அது உன்னை மயக்க முயலும், பல வாக்குறுதிகளை வழங்கும். ஆனால் ஒருபோதும் எந்த வாக்குறுதியையும் அது நிறைவேற்றாது என்பதை நினைவில் வை. மேலும் இக்கரையில் நீ நீண்டகாலமாக வாழ்ந்திருக்கிறாய். எனவே பல்லாண்டுகளாக

தொடர்ந்து அது உனக்கு தந்து வந்த துன்பத்தை, வலியை, வேதனையை, நரகத்தை மறந்துவிடாதே. இனி, போய்க் கொண்டே இரு. பின்னால் பார்க்கதே. முன்னால் பார். எப்போதும் உன் முன்னோக்கிய பார்வையில் படும் புதியதையே, இளமையானதையே பார். அதை கண்டுகொள்ள உனக்கு உன்னிப்புத் தேவை.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் சந்நியாசியாகி 3 நாட்கள் மட்டுமே, ஆகின்றன. அதற்குள் சந்நியாசி அல்லாதவர்களை கண்டால் நான் வெறுக்கத் தொடங்கி உள்ளேன். என்ன நடந்துகொண்டு இருக்கிறது?**

**தியானானந்தா.**

இப்படித்தான் மதவெறி பிறக்கிறது. இப்படித்தான் கிறித்தவர்கள், முகமதியர்கள், இந்துக்கள் போன்றோர் நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்துள்ளார்கள். இப்படித்தான் மூட மனம் செயல்படுகிறது. இதைக் குறித்து எச்சரிக்கையாயிரு. சந்நியாசியாயிருப்பதால் சந்நியாசி அல்லாதவர்களை வெறுத்தாக வேண்டும் என்று பொருளில்லை. யாரையும் சந்நியாசி அல்லாதவர் என ஒருபோதும் பார்க்காதே, எப்போதும் அவர்களை சந்நியாசியாகும் உள்ளாற்றல் உள்ளவர்களாக பார். அவர்கள் யாவரும் சந்நியாசி ஆகக் கூடியவர்களாக இருக்கிறார்கள். *3 நாட்களுக்கு முந்திதான் நீயும் ஒரு அ- சந்நியாசியாய் இருந்தாய்!* அவர்களை அதிகமாய் நேசி. ஏனெனில் உன் அன்பால் அவர்களின் உள்ளாற்றல் கைகூட உன்னால் உதவமுடியும். அவர்களை நீ வெறுத்தால் அவர்கள் சந்நியாசி ஆவதை தடுக்கும் ஒரு காரணியாக நீயே ஆகிவிடுவாய். அவர்களுக்கு உதவு.

இதுவல்ல வழி. ஆனால் மனமே இப்படித்தான் இயங்குகிறது. என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. மனம் மிகவும் கீழ்த்தரமானது- அது உடனடியாக அகங்காரத்துக்கான புதிய உலாக்களை உருவாக்கத் தொடங்குகிறது. சந்நியாசம் கூட ஒரு அகங்கார உலா ஆக ஆகமுடியும். "இப்போது நான் ஒரு சந்நியாசி. நான் சிறப்பானவன். அ-சந்நியாசிகளோ? அவர்கள் மூடர்கள்!" ஆனால் மூன்றே நாட்களுக்கு முந்தித்தான். நீயும் ஒரு அ- சந்நியாசியாக இருந்தாய். *வெறும் 3 நாட்களுக்கு முன்! ஆனால் 3 நாட்களா 3 ஆண்டுகளா* என்பது பொருட்டல்ல- இரண்டும் ஒன்றுதான். மூன்றே

நிமிடங்களுக்கு பிறகுகூட மனமானது நூல் சுற்றவும் நெய்யவும் தொடங்கிவிடுகிறது. அது வேறுவிதமாக நடைபோடத் தொடங்குகிறது. மற்றவர்களை கண்டனத் தொனியுடன் பார்க்கிறது. 'எல்லோரிலும் நானே புனிதன்' என்னும் பழங்காலத்தில் இருந்து வந்துகொண்டிருக்கும், புனிதர் பார்வையில் பார்க்கிறது.

ரஸ்டஸ் கருப்பனாயிருந்து சலித்துவிட்டான். ஒருநாள் உள்ளூர் செய்தித்தாளில் ஒரு விளம்பரத்தை பார்த்தான். அது சொன்னது: "சூப்பர் ஓமோ விசேஷ சருமம்- வெளுப்பாகும் களிம்பு- உங்கள் சருமத்தை வெள்ளை வெளேர் ஆக்குகிறது!"

மிகவும் உற்சாகத்துடன் ஒரு பொட்டலத்தை வாங்கி வீட்டுக்குப் போனான். குளியல் போட்டான். அந்த தயாரிப்பை தன் மேல் பூசிக் குளித்தான். முடித்ததும் கண்ணாடியில் பார்த்தான். வெள்ளைக்காரனின் தோல் போல் அவன் தோல் காணப்பட்டது.

பரவசம் அடைந்தவனாய் ஓடிப்போய் தன் மனைவிக்குக் காட்டினான். அவளும் தாமதிக்காமல் தேய்த்துக் குளித்தாள். வெள்ளைக்காரி போல் மாறியதும் அவளும் மிகவும் மகிழ்ந்தாள்.

அவர்கள் தம் மகனை- சிறுவனை- அழைத்துச் சொன்னார்கள். "டேய் பையா, நீ வெள்ளைக்காரப் பையனாவதற்கு இது நல்ல சந்தர்ப்பம்!"

பையன் கூவினான், "வெள்ளைக்காரப் பையனாவதற்கு எனக்கு பிடிக்கவில்லை. நான் இருக்கிற நிலையே எனக்கு மகிழ்ச்சியா யிருக்கிறது. கருப்பாயிருப்பதே எனக்குப் பிடிக்கும்!"

ரஸ்டஸ் தன் மனைவியைப் பார்த்து சொன்னான், "நான் வெள்ளையாகி ஒரு மணி நேரம் கூட ஆகவில்லை. அதற்குள் இந்த கருப்பர்கள் எகிறுவதைப் பார்த்தாயா?!"

இந்த மனம் குறித்து எச்சரிக்கையாயிரு. இவைகளே மனதின் வழிகளாய் இருக்கின்றன. சந்நியாசியானவர் மனதை கைவிட வேண்டி இருக்கிறது. உங்களை அகங்காரம் கைப்பற்றும் வழிகளைக் குறித்து நீங்கள் உன்னிப்பாக இருக்கவேண்டி இருக்கிறது. மற்றவர்களைவிட நீங்கள் புனிதராக ஆகவேண்டியதில்லை. மாறாக, சந்நியாசம் என்றால் சாதாரணமாக இருப்பதில் தீட்சை பெறுவது என்றே பொருள்.

போப்பை புனித ஆண்டவர் என்கிறார்கள் சங்கராச்சாரியை தெய்வத்திரு- ஜகத்குரு என்கிறார்கள். ஹரேகிருஷ்ணா இயக்கத்தின்

நிறுவனரை தவத்திரு அருள்மிகு என்கிறார்கள். உங்களையோ நான் புனித சாமானியர் என்றே அழைப்பேன் என்பதை நினைவில் கொள்ளுங்கள்! சாமானியராக இருப்பதைவிட அதிக அழகானது எதுவுமே இல்லை. சாமானியராக இருக்க நீங்கள் தயாராகிற அக்கணமே நீங்கள் தெய்வீகமாக இருக்கிறீர்கள். தெய்வீகமாவதற்கு இதுதான் ஒரேவழி.

கடவுள் மிகவும் சாமானியர். அவர் சாமானியராக இல்லாவிட்டால் அவர் பாறைகளாகி இருக்கமாட்டார்; மரங்களாகி இருக்கமாட்டார். மிருகங்களாகி இருக்கமாட்டார். மனித பிறவிகளாகி இருக்க மாட்டார். இத்தகைய கீழ் நிலைகளுக்கு அவர் இறங்கி இருக்க மாட்டார். ஆனால் அவர் எந்த அளவுக்கு சாமானியர் என்றால்... ஒரு மீனாகவோ அல்லது ஒரு கரப்பானாகவோ அல்லது ஒரு விட்டிலாகவோ கூட மகிழ்ச்சியுடன் இருக்கிறார்.

நான் கேள்விப்பட்டேன்.

ஜார்ஜ் ஹாரிசன் தோட்டத்தில் நடந்து கொண்டிருந்தார். அப்போது ஒரு விட்டிலை (beatle) சந்தித்து சொன்னார், "ஏ விட்டிலே, நீ அறிவாயா? எம் குழுவுக்கு விட்டில்கள் (Beatles) என்றே பெயரிட்டிருக்கிறோம் என்பதில் நீ மகிழ்ச்சி அடைய வேண்டும்- எம் குழுவையே உன் பெயரால்தான் அழைக்கிறோம்!"

விட்டில் ஹாரிசனைப் பார்த்து சொன்னது, "உன் குழுவை நீ எரிக் என அழைப்பாயா? என் பெயர் வெறும் விட்டில் இல்லை, எரிக்தான் என் பெயர்".

ஒரு புத்தர், ஒரு இயேசு, ஒரு ஜராதுஷ்டிரர் முதலிய மிகச் சிலரை தவிர யாருமே சாமானியராக இல்லை. இவர்கள் சாதாரணமான வர்கள். சாதாரணமாக இருக்கும் துணிவு இவர்களுக்கு இருக்கிறது. அந்த துணிவிலேயே அவர்கள் ஜீவனின்- இருத்தலின் அறுதி ஆழத்தை அடைகிறார்கள்.

அனாமதேயங்களாக இருக்கும் துணிவை என சந்நியாசிகள் சேகரித்துக்கொள்ள வேண்டும். அதைத்தான் சாமானியமாக இருத்தல் என்கிறேன். லௌகிகமானதை புனிதமானதாக நிலைமாற்றுவதே இங்கு நம் முழு முயற்சியுமாக இருக்கிறது. லௌகிகத்துக்கும் புனிதத்துக்கும் இடையில் ஒரு பிளவை ஏற்படுத்த நாம் விரும்பவில்லை. பிளவுபடுத்துவதே நூற்றாண்டுகளாக கைக்கொள்ளப்பட்ட வழியாக இருந்திருக்கிறது. அந்த விரிசலானது ஆளுமைப்பிரிவுள்ள மனித குலத்தையே படைத்திருக்கிறது.

மக்கள் ஓயாமல் மனநெருக்கடியான நிலவரங்களுக்குள்ளேயே இருக்கிறார்கள். இக வாழ்க்கை அவர்களை ஒருபக்கம் இழுக்கிறது. பரவாழ்க்கை நேர் எதிர்ப்பக்கம் இழுக்கிறது. உலகியல் வாழ்வுடன் போனால் அவர்கள் குற்றஉணர்வு கொள்கிறார்கள். நீங்கள் உண்டு குடித்து களித்தால் குற்றமாக உணர்கிறீர்கள்- ஏதோ தவறு செய்துவிட்டதாக நினைக்கிறீர்கள். உண்பதையும் குடிப்பதையும் களிப்பதையும் நிறுத்திவிட்டு தவசியானாலோ மிகவும் பதற்றமாக மிகவும் கலக்கமாக உணரத் தொடங்குகிறீர்கள்- ஏனெனில் இயற்கைக்கு எதிராக போகிறீர்கள். "எனக்கு நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்? அது சரியா?" என கருத ஆரம்பிக்கிறீர்கள். பின் நீங்கள் ஓயாமல் ஒடுக்க வேண்டி இருக்கிறது. உலகைத் தவிர்க்க வேண்டி இருக்கிறது. மடத்துக்கோ இமயமலைக்கோ தப்பி ஓடவேண்டி இருக்கிறது. மேலும் ஒவ்வொரு சின்னசின்ன விஷயமும் கூட உனக்கு ஒரு பிரச்சனையாக ஆகிறது. உங்கள் பிரச்சனைகளை தீர்ப்பதற்குப் பதிலாக ஆயிரத்தொரு புதுப் பிரச்சனைகளை நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள்.

உங்கள் புனிதர்கள் என்போர் பிரச்சனைகளில் மட்டுமே வாழ்கிறார்கள். ஒவ்வொன்றும் ஒரு பிரச்சனையாக இருக்கிறது. சாப்பிடுவதிலேயே அவ்வளவு பிரச்சனை. அதைக்குறித்து அவர்கள் ரொம்பவும் அலட்டிக் கொள்கிறார்கள். இதைத் தின்பார்கள். அதைத் தின்ன மாட்டார்கள். சமணத் துறவிகள் அப்பிராணிகளான உருளைக்கிழங்குகளை சாப்பிட மாட்டார்கள். ஏன்? உருளைக்கிழங்கில் என்ன தோஷம்? அவை மிகவும் அப்பாவியாக தெரிகின்றன. அவற்றைப் பற்றிய எந்த குறையையும் இதுவரை நாம் கேள்விப்பட்டதில்லை. யாருக்கும் ஒருபோதும் அவை எந்த தீங்கும் செய்ததில்லை. ஆனால் சமண துறவி அவற்றை உண்ண மாட்டார். அவை பூமிக்கடியில் வளர்வதால் அவருடைய சாத்திரங்களில் அது விலக்கப்பட்டிருக்கிறது. அவை சூரிய வெளிச்சத்தில் வளர்வதில்லை. எனவே அவற்றில் ஏதாவது கோளாறு இருக்க வேண்டும். அவை இருட்டில் வளர்கின்றன. அவற்றை உண்டால் உங்களுக்குள் அவை இருள் ஏற்படுத்திவிடும். தெரியுமா? ஆனால் உங்களுக்கு நீங்களே ஒளியாக அல்லவா இருக்கவேண்டும் எனவே மண்ணுக்கடியில் வளரும் எதுவும் விலக்கப்பட்டுள்ளது- காரட் முதலிய, நிலத்துக்கடியில் வளரும் எதுவும், நிலத்தடி பண்டங்களில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை.

நிலத்தடி தலைமறைவு (அண்டர் கிரவுண்ட்) காரியங்களை நான் உறுதியாக நம்புகிறேன். ஏனெனில் அவை தீவிரப் புரட்சிகர

மானவை! அவற்றை சாப்பிட்டால் நீங்கள் தலைமறைவாவதற்கு அவை உதவும். கடைசியில் எல்லோருமே தலைமறைவாகவே மண்ணுக்கடியில் போகவே வேண்டியிருக்கிறது. அதற்கு ஏன் தயாராகக்கூடாது?

ஒருமுறை ஒரு இந்துத் துறவியுடன் பயணம் செய்து கொண்டிருந்தேன். அவர் எருமைப் பால் குடிக்க மாட்டார். ஏன்? ஏனென்றால் எருமைப் பால் மந்தத்தை ஏற்படுத்துகிறது என இந்து சாத்திரங்கள் கூறுகின்றன- என்னவோ இந்தியர்களை இப்போது இருப்பதைவிட அதிக சோம்பேறிகளை ஆக்கிவிட முடிவதுபோல்! மேலும் அந்த இந்து சாமியார் எதையும் செய்வதும் இல்லை. எனவே நான் சொன்னேன், "இதில் என்ன பிரச்சனை எழும் என்றே எனக்கு தெரியவில்லை- நீர்தான் எதையுமே செய்வதில்லையே. எருமைப் பால் உம்மை பாதிக்க முடியாது. ஏற்கெனவே நீர் மந்தமாகத்தான் இருக்கிறீர். பின் அதைப்பற்றி கவலைப்படுவானேன்?"

அதுமட்டுமல்ல, வெள்ளைப்பசுவின் பாலையே அவர் குடிப்பது வழக்கம். நான் சொன்னேன், "கருப்புப் பசுக்களுக்கு என்ன?"

"கருப்பு ஒரு தீமையான நிறம்."

நான் அந்தச் சாமியாரிடம் சொன்னேன், "அப்படியானால் நாம் பிரிய வேண்டியதே நாமிருவரும் சேர்ந்து பயணம் செய்ய முடியாது. ஒரு கணம் கூட தாமதிக்க முடியாது. நான் சந்தித்தவர்களிலேயே மிகவும் மடையன் நீர்தான். ஏனெனில் கருப்பு பசுவிடமிருந்து வரும் பால் வெள்ளையாகத் தானே இருக்கும்? கருப்பாகி விடாதே? பால் கருப்பாக இருந்தால் வேண்டுமானால் உம் கருத்தில் ஏதாவது பொருள் இருக்கலாம்."

ஆனால் அவர் அதை காதில் வாங்கவில்லை.

மேலும் கறந்த பாலை உடனடியாக வெதுவெதுப்பாக மட்டுமே குடிப்பாராம். அதை அடுப்பிலோ நெருப்பிலோ சூடாக்க கூடாது. அவர் கண்பார்வையில் வைத்து பசுவை கறக்க வேண்டுமாம். நேரடியாக வெதுவெதுப்போடேயே அவர் அதை குடிக்க வேண்டுமாம். நான் சொன்னேன், "ஏன், கைக் குழந்தைகள் செய்கிறபடியே நீரும் செய்யக் கூடாது? காம்புகளில் இருந்து நேராக குடித்துவிடுவதுதானே?! அது இன்னும் வெதுவெதுப்பாக இருக்குமே. கறந்து பின் உம்மிடம் கொண்டு வருவதால் கூட... மேலும் அது கொதிக்காது. உண்மையாகவே வெதுவெதுப்பாகவே இருக்கும். பசுவின் மடியிலிருந்து நேரடியாகவே குடித்துவிடும்."

"என்ன சொல்கிறீர்கள்?" என்றார்.

"ஆம், அப்படிச் செய்வது உம்மை இன்னும் மிகப்பெரிய புனிதராக ஆக்கும்!"

ஆனால் இந்த மூடர்களைத்தான் மக்கள் வழிபடுகிறார்கள்.

ஒரு கன்னிப்பெண் சமைத்த உணவை மட்டுமே அவர் சாப்பிடுவாராம். இல்லாவிட்டால் சாப்பிடவே மாட்டாராம். இது உணவை எப்படி பாதிக்கும்? கன்னி கழியாத பெண் சமைத்தாலோ கழிந்த பெண் சமைத்தாலோ உணவில் என்ன மாறுதல் ஏற்பட்டுவிடும்? "நுணுக்கமான அதிர்வு வேறுபாடுகள் உள்ளன" என்றார்.

நான் சொன்னேன், "எப்போது மட்டுமே உம்மை நான் நம்பமுடியும் என்றால்... உம்மிடம் 2, 3 தட்டுகளில் உணவு கொண்டு வருவேன். ஒன்று கன்னிப்பெண்ணாலும் ஒன்று திருமணமாகி குழந்தைகள் பெற்ற பெண்ணாலும் மூன்றாவது ஒரு விலைமகளாலும் தயாரிக்கப்பட்டிருக்கும். எது யாரால் சமைக்கப்பட்டது என்பதை அவற்றின் அதிர்வுகளில் (வைப்) இருந்தே நீர் காட்ட வேண்டும். அப்படி தீர்மானிக்க உம்மால் முடியாவிட்டால், இப்படி உளறுவதை நிறுத்தும். அபத்தமாக உளறாதிரும். என்ன அதிர்வுகளைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறீர்?"

இப்பிகள்தான் அதிர்வுகளைப்பற்றி (Vibes) பேசுகிறார்கள் என்ற கருத்தை கைவிடுங்கள். இந்தியப் புனிதர்கள் குறைந்தது 5000 ஆண்டுகளாக இவற்றை பேசிக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

இப்போது அவர் தடுமாறினார். அவரால் பிரித்துக் கூற முடியவில்லை. எனவே நான் சொன்னேன், "அப்படியானால் இதை விட்டுவிடும்- அது என்ன அதிர்வுகள் என்று உமக்கே தெரியவில்லை. வெறும் மடத்தனமான பிதற்றலைத்தான் ஒப்பித்துக் கொண் டிருக்கிறீர். முட்டாள்களுக்கு வேண்டுமானால் அது பிரமிப்பாக இருக்கலாம். ஆனால் என்ன அதிர்வுகளைப் பற்றி நீர் பேசிக் கொண்டிருக்கிறீர்?"

ஒரு பெண் அமர்ந்து அப்போதுதான் எழுந்து சென்ற இடத்தில் இந்து சாமியார்கள், சமண சாமியார்கள், பவுத்த துறவிகள் அமர ஒத்துக்கொள்வதில்லை. குறிப்பிட்ட நேரம் கழிய வேண்டும். அதன் பிறகே அவர்கள் அமரமுடியும். ஏனெனில் அந்த இடம் அந்த பெண்ணின் பாலியல் அதிர்வுகளை கதிர்வீசிக் கொண்டிருக்கிறதாம். இந்த மனிதர்கள் சுத்தமூடர்களாகவே இருக்கிறார்கள்!

ஆனால் இவையெல்லாம் அகங்காரத்தின் வழிகள்; தாங்கள் விசேஷமானவர்கள். ஆன்மிகர்கள் என்று பிரித்துக்காட்டவே அவை கையாளப்படுகின்றன. அவர்கள் சாமானியர் அல்ல, உலகியலார் அல்ல, மண்ணுலகம் சார்ந்தவர் அல்ல- என்று பிரித்துக்காட்டவே அவை கையாளப்படுகின்றன. இல்லாவிட்டால் எப்படி பாகுபாடு செய்வது? எப்படி சாமானியரை கண்டனம் செய்வது? நீ எதையாவது உண்டாக்க வேண்டியிருக்கிறது. எதையாவது.

சமணத் துறவிகள் தம் மயிரை பிடுங்குகிறார்கள். அவர்கள் சவரம் செய்ய கூடாது. கத்திரிக்கோலை பயன்படுத்த கூடாது. ஏதோ கத்திரி என்பது மாபெரும் தொழில்நுட்பம்போல! தொழில் நுட்பத்தை- செயற்கையை அவர்கள் தவிர்க்கிறார்கள்- பிளேடு ஒரு மாபெரும் தொழில்நுட்பம் போல! அவர்கள் தம் மயிரை பிடுங்கி எடுக்கிறார்கள். இது முற்றிலும் அபத்தம்! ஆனால் அவர்கள் தம் மயிரை பிடுங்குவதை பார்க்க ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுகிறார்கள். ஏனெனில் அவர்கள் பெரிய தவம் இயற்றுகிறார்களாம். முட்டாள் தனமாக அதே சமயம் இயல்பற்றதாக எதை வேண்டுமானாலும் செய்யுங்கள்? -மக்கள் உங்களை வழிபட ஆரம்பித்து விடுவார்கள்.

கிறித்தவ துறவிகள் ஒவ்வொரு காலையிலும் தம்மை அறைந்து கொள்வது வழக்கம். ஒவ்வொரு காலையிலும் தம்மை சாட்டையால் விளாசிக்கொள்ளும் கிறித்தவ துறவியர் பிரிவுகள் இருந்தன. அவர்களின் உடம்புகளில் இருந்து தொடர்ச்சியாக ரத்தம் ஒழுகிக்கொண்டிருக்கும். தலைமுதல் கால்வரை அவர்களின் உடம்பு முழுவதும் காயங்களாக இருக்கும். அதிகமாக தன்னை விளாசிக்கொள்பவன் மாபெரும் புனிதன் என எண்ணப்பட்டான். அதை கவனிக்க மக்கள் கூடுவர். தனக்கு அதிகமாக கசையடி கொடுத்துக்கொள்பவன்,அதிகமாக ரத்தம் ஒழுக்குபவன் யார் என்பதை கணக்கிட்டு கொண்டிருப்பார்கள். இதில் தமக்கு தாமே சவுக்கடி தருவோர் தம்மை வருத்தி இன்பம் காண்போராகவும், அவர்களை பார்க்க கூடி இருப்போர் பிறரது துன்பத்தில் இன்பம் காண்போராகவும் இருந்தார்கள். இருதரப்பினரும் நோய்க் கூறானவர்களே. ஆனால் இந்த நோய்தான் இன்றுவரை நிலைநிற்கிறது.

இந்த இக பர பிரிவினையை கைவிடச் செய்வதே இங்கு என் வேலையுமாக இருக்கிறது. மிக சாமானிய வாழ்வை நீங்கள் வாழ்வதையே நான் விரும்புகிறேன்- அப்போதுதான் எந்த அகங்கார உலாக்களையும் நீங்கள் மேற்கொள்ள வேண்டியிராது.

நினைவில்கொள் தியானானந்தா, மூன்று நாட்களோ 3 ஆண்டுகளோ அல்லது 30 ஆண்டுகளோ எல்லாம் ஒன்றே. காலத்தினால் பெரிய வேறுபாடும் ஏற்படுவது இல்லை. அகங்காரம் மிகவும் தந்திரமானது என்பதையும், உன்னை பெருக்கிக் காட்டவே அது வழிகளை காண முயலும் என்பதையும் அறிந்திரு. அ-சந்நியாசிகளை வெறுப்பது. மிக எளிய வழிதான்: உடனடியாக விசேஷமானவன் ஆகிறாய், அவர்கள் சாமானியராக இருக்கிறார்கள். அவர்கள் புரியாதிருக்கிறார்கள். நீ புரிந்திருக்கிறாய்.

அவர்கள் யாவரும் உள்ளாற்றலுள்ள மக்களே. அவர்களை நேசி, மதி, அவர்களுக்கு உதவு. சந்நியாசியாக இருப்பதோ இல்லாதிருப்பதோ அவர்களின் விருப்பம். அது அவர்கள் சுதந்திரம், இது உன் சுதந்திரம். சுதந்திரத்துக்கே மதிப்பளிக்கப்பட வேண்டும்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**தியானிக்க ஒரு புது ஸென் விடுகதை (Koan) தரமுடியுமா? ஏனெனில் பழையவை யாவற்றுக்கும் ஸென் ஏடுகளிலேயே விடை காண முடிகிறது.**

**நர்த்தன்.**

**த**ருகிறேன். அன்று ஒருநாள் ஒரு இளம் ஜெர்மானியன் சந்நியாசம் ஏற்றான். அவன் ஆழமான உணர்ச்சிகள் கொண்டவனாக, இதயத்தின் தன்மை மேலோங்கியவனாக இருந்தான். அவன் ஆனந்தத்தால் தேம்பினான். நான் கேட்டேன், "இங்கு எவ்வளவு காலம் தங்கப் போகிறாய்?"

அவன் சொன்னான், "பகவான், எப்போதைக்குமாக."

நான் அவனிடம் சொன்னேன், "அடுத்த தடவை நீ வரும்போது இன்னும் கொஞ்சம் அதிக காலம் தங்கு."

நர்த்தன், இதை தியானி, இது ஒரு ஸென் விடுகதை. இதற்கு எந்த ஏட்டிலும் உன்னால் விடை காண முடியாது. எனக்கே விடை தெரியாது!

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஏன் கொங்கைகளைப் பற்றி அதிகம் பேசுகிறீர்கள்?**

**பிரேம் சின்மயா.**

இது கவனமாகக் கையாள வேண்டிய ஒரு விஷயம் என்பதை நான் அறிவேன். ஆனால் என்னை நீ அறிவாய்- அதுவே எல்லாவற்றையும் விளக்கிவிடுகிறது.

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நீங்கள் எப்போதும் சொல்கிற அளவுக்கு- குழந்தைகள் உண்மையிலேயே மிகுந்த புத்திசாலிகள்தானா?**

**பிரியா.**

நான் சொல்கிற அளவைவிட அவர்கள் அதிக புத்திசாலி களாகவே இருக்கிறார்கள். ஒவ்வொரு குழந்தையும் முற்றிலும் புத்திசாலியாகவே பிறக்கிறது. ஏனெனில் அதன் நுண்ணறிவை கலைக்க எதுவுமில்லை. அவனை நுண்ணறிவற்றவன் ஆக்கக்கூடிய எந்த முன் முடிவுகளும் அவனிடம் இல்லை. அவனை நுண்ணறிவற்றவன் ஆக்கக்கூடிய எந்தத் தகவல்களும் அவனிடம் இல்லை- அவனுக்கு இன்னும் அறிவு வரவில்லை. அவன் விரும்பினாலும்கூட அறிவார்ந்த முறையில் அவனால் இயங்க முடியாது. அவன் எப்படி மூடனாக இருக்க முடியும்?

முட்டாளாயிருக்க சில தகுதிகள் வேண்டும். பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம்- ஆகியவற்றுக்கு நீங்கள் போயிருக்க வேண்டும். முட்டாளாயிருக்க சில பட்டங்கள் வேண்டும்: எம்.ஏ.கள், எம்.எஸ்சி.கள், பி.எச்.டி.கள், டி.லிட்.கள் தேவை. முட்டாள்தனம் அறிவுடைமையை சார்ந்திருக்கிறது. அறிவு அதிகமாக ஆக குறைந்த புத்தியே உள்ளவராகிறீர்கள். ஏனெனில் அறிவானது புத்தியின் பதிலியாக செயல்படத் தொடங்குகிறது. கவலை ஏன்?- நினைவைப் புரட்டிப் பார்த்தாலே போதும், அதில் விடை இருக்கும்.

ஆனால் குழந்தைக்கு நினைவு கிடையாது. தயாரான விடை கிடையாது. பிரச்சனை ஏற்படும் போதெல்லாம் அவன் அதை எதிர்கொள்ள வேண்டி இருக்கிறது. அவன் ஒத்து செயல்பட வேண்டியுள்ளது. அவனால் எதிர்வினை புரிய முடியாது. ஒத்து செயல்படுவதே நுண்ணறிவாகும். ஒன்றும் அறிந்திராத ஒரு நிலையில் இருந்து அவன் செயல்படுகிறான். எனவேதான் ஒவ்வொரு குழந்தையும் விவேகியாகவே பிறக்கிறது என நான் கூறுகிறேன்.

ஆனால் ஏறக்குறைய எல்லோரும் சாகும்போது முட்டா ளாகவே சாகிறார்கள். ஏனெனில் இந்த வாழ்க்கை முழுவதுமே

கட்டமைக்கப்பட்டிருக்கிற விதத்தில்- நுண்ணறிவுள்ளவர்களாகவே தொடர்ந்து நீடிப்பது அசாத்தியம்- ஏறக்குறைய அசாத்தியம். பொறி எத்தகையதாய் இருக்கிறது என்றால் மிகச் சிலர் மட்டுமே அதிலிருந்து தப்பி வெளியேற முடிந்திருக்கிறது. பொறிக்குள் உங்களுக்கு எல்லாவிதமான வசதிகள். சொகுசுகளும் உள்ளன. அதை அரசாங்கமும் மதமும் சமுதாயமும் அங்கீகரித்துள்ளன. எல்லா ஆதரவுகளும் அதற்கு உள்ளன.

ஒரு பல்கலைக்கழகத்திலிருந்து என் பேராசிரியர் பதவியிலிருந்து நான் விலகிய நாளில் என் சான்றிதழ்கள் யாவற்றையும் நான் எரித்துவிட்டேன். என்னுடன் ஒரு நண்பர் சேர்ந்து வசித்து வந்தார். அவர் சொன்னார்: "என்ன செய்கிறாய் நீ? நீ பதவி விலகினால்... நீ செய்தது சரியான காரியம் என என்னால் ஏற்கமுடியவில்லை. அதிலும் உன் சான்றிதழ்களை எரித்தது முற்றிலும் அவசியமற்றது. இன்னொரு நாள் அவை உனக்கு தேவைப்படலாம். அவற்றை வைத்திரு. வைத்திருப்பதில் என்ன தவறு? உன்னிடம் பெரிய நூலகமே இருக்கிறது. இவற்றுக்கோ அதிக இடம் பிடிக்காது. ஒரு சிறு கோப்பே போதும். அல்லது அவற்றை உன்னால் வைத்திருக்க முடியாவிட்டால் நான் அவற்றை வைத்திருக்கிறேன். அவற்றை என்னிடம் கொடுத்துவிடு, போதும். ஒருநாள் உனக்கு அவை தேவைப்படலாம்."

நான் சொன்னேன், "இந்த மடமை முழுவதற்கும் நான் கும்பிடு போட்டு விட்டேன். எல்லா பாலங்களையும் நான் தகர்த்து எரித்துவிட விரும்புகிறேன். மேலும் அவை எனக்கு ஒருபோதும் தேவைப்படாது. ஏனெனில் ஒருபோதும் நான் திரும்பிப் பார்ப்பதில்லை. ஒருபோதும் பின்னோக்கி போவதில்லை. அதற்கு தலை முழுகி விட்டேன். அது முழுக்க அபத்தம், அதில் போதும் போதுமான அளவுக்கு இருந்து விட்டேன்."

ஆனால் எந்தச் சுயநல அதிகார சக்தியுடனும் நான் சமரசம் செய்துகொள்ளவில்லை. எனவேதான் பதவி விலக வேண்டியதாயிற்று. ஏனெனில் நான் கற்பிக்க வேண்டியதென சொல்லப்பட்டவற்றை நான் கற்பிக்கவில்லை. உண்மையில் நேர் எதிரானதையே செய்தேன். என்னைப் பற்றி ஏராளமான புகார்கள் துணைவேந்தருக்கு சென்றன. இறுதியாக அவர் என்னை கூப்பிட்டனுப்பத் துணிவு சேர்த்துக் கொண்டார். அவர் வழக்கமாக ஒருபோதும் என்னை கூப்பிட்டனுப்பியதில்லை. ஏனெனில் என்னை அழைப்பது என்பது ஒரு சோதனையை எதிர்கொள்வது ஆகும்!

இறுதியாக அவர் என்னை கூப்பிட்டுச் சொன்னார். "இதோ பாருங்கள், இவ்வளவு புகார்கள் வந்துள்ளன."

"புகார்களைப் பற்றி கவலைப்படத் தேவையில்லை. இதோ என் விலகல் கடிதம்" என்றேன்.

அவர் சொன்னார், "என்ன சொல்கிறீர்கள்? நீங்கள் விலகவேண்டும் என நான் சொல்லவில்லையே!"

நான் சொன்னேன். "நீங்கள் அதைச் சொல்லவில்லை. ஆனால் நான் விலகுகிறேன். ஏனெனில் நான் செய்ய விரும்பும் காரியங்களை மட்டுமே என்னால் செய்யமுடியும். என் மேல் எந்தத் திணிப்பு இருந்தாலும் எவ்வித நெருக்கடி என்மேல் பிரயோகிக்கப் பட்டாலும், இங்கே நான் ஒரு கணம் கூட இருக்கப்போவதில்லை. இது என் விலகல் கடிதம். இனி ஒருபோதும் இந்த கட்டடத்துக்குள் திரும்பவும் நான் நுழையமாட்டேன்."

அவரால் நம்பவே முடியவில்லை! அவரின் அலுவலகத்தை விட்டு வெளியேறினேன். அவர் என் பின்னாலேயே ஓடிவந்தார். என் காரில் ஏறப்போகும்போது சொன்னார், "பொறுங்கள், என்ன அவசரம்? நன்றாக யோசியுங்கள்?"

நான் சொன்னேன், "நான் எதையும் ஒருபோதும் யோசித்துக் கொண்டிருப்பதில்லை. சரியானதை நான் செய்துகொண்டே போகிறேன். புகார்கள் வந்துள்ளன என்றால்- புகார்கள் வருகின்றன என்பதை நானும் அறிவேன்- அவை வரத்தான் செய்யும். ஏனெனில் உங்கள் மடத்தனமான பாடத்திட்டம் என்னைக் கற்பிக்க கட்டுப்படுத்துகிறவற்றை நான் கற்பிக்கவில்லை. வேறொன்றையே நான் கற்பித்துக் கொண்டிருக்கிறேன். நான் தத்துவத்தைப் பற்றி பேசவில்லை. தத்துவத்துக்கு எதிராகவே பேசி இருக்கிறேன். ஏனெனில் என்னைப் பொறுத்தவரை தத்துவம் என்னும் துறை முழுவதுமே சுத்த மடத்தனமான வீண் முயற்சியேயாகும். மனிதகுலத்துக்கு அது ஒரே ஒரு தீர்வைக்கூட வழங்கியதில்லை. அது ஒரு மிக நீண்ட அனாவசியப் பயணம், முற்றிலும் வீண். எனவே இந்த பாடத்தையே நாம் முழுக்க கைவிடும் வேளை வந்துவிட்டது. ஒன்று ஒரு மனிதர், விஞ்ஞானியாக இருக்கவேண்டும், அல்லது அவர் மெய்ஞானியாக இருக்கவேண்டும். வேறு வழி இல்லை. விஞ்ஞானி புறப்பொருள்களில் பரிசோதனை செய்கிறான். மெய்ஞானி தன் அகத்தன்மையில் பரிசோதனைகள் செய்கிறான். ஒரு வகையில் இருவரும் விஞ்ஞானிகளே. ஒன்று புற விஞ்ஞானம், மற்றது அக

விஞ்ஞானம். இதில் தத்துவனுக்கு எங்கும் இடமில்லை. அவன் ஒரு ரெண்டுங்கெட்டான் இடத்தில் இருக்கிறான். அவன் ஆணுமல்ல பெண்ணுமல்ல. அவன் இங்குமில்லை அங்குமில்லை. அவன் மலடானவன். எனவே தான் அவனால் எதையும் பங்களிக்க முடிவதில்லை. எனவே என்னால் தத்துவத்தை கற்பிக்க முடியாது- அதை கவிழ்த்துக் கொண்டுதான் போவேன். நீங்கள் எப்போது கூப்பிட்டனுப்பினாலும் உடனடியாக விலகிவிடுவதென நானும் காத்துக்கொண்டுதான் இருந்தேன்."

அதிலிருந்து வெளியேறுவது மிகவும் கடினமாகவே இருந்தது. ஏனெனில் என் நண்பர்கள் எல்லோரும் வந்து என் கருத்தை மாற்றப் பார்த்தார்கள். பேராசிரியர்கள் வந்து என்னிடம் பேசிப் பார்த்தார்கள். என் உறவினர்கள் யாவரும் என்னை இணங்கச் செய்ய முயன்றார்கள்: "என்ன இப்படிச் செய்கிறாய்?" என்றார்கள். கல்வி அமைச்சர் கூட எனக்கு தொலைபேசினார்: "இத்தகைய ஒரு காரியத்தை செய்யாதீர். உமது வழிகள் சற்று வினோதமானவை என அறிகிறேன். இருந்தாலும் சகித்துக் கொள்வோம். நீர் தொடர்ந்திரும். புகார்கள் பற்றி மனதில் கொள்ள வேண்டாம். எனக்கும் புகார்கள் வந்தன. ஆனால் அவற்றை நான் கண்டுகொள்ளவில்லை. உம்மை இழக்க நாங்கள் விரும்பவில்லை."

நான் சொன்னேன், "அது பிரச்சனை அல்ல. ஒன்றுடன் நான் கணக்குத் தீர்த்துவிட்டால் அதோடு தீர்ந்தது. இனி எந்த நெருக்குதலும் என்னைத் திருப்பி கொண்டுவர முடியாது."

பள்ளியில் இருப்பதும் எனக்கு மிகவும் கடினமாகவே இருந்தது. ஏனெனில் ஆசிரியர்களின் மடமையை என்னால் பார்க்க முடிந்தது. வழக்கமாக அவர்களுக்கு கோபம் வரும். நான் குறும்பு செய்யவே முயல்கிறேன் என அவர்கள் நினைப்பது வழக்கம். நான் குறும்புகள் செய்ய முயலவில்லை. அவர்கள் போதிக்கிற அனைத்தும் அபத்தம் என்பதை அவர்களுக்கு காட்டவே நான் முயன்று கொண்டிருந்தேன்! அவர்களின் போதனையில் வாழ்க்கை குறித்த கரிசனம் இருக்கவில்லை.

என் புவியியல் ஆசிரியர் பல இடங்களையும் பற்றி கூறுவது வழக்கம். நான் அவரிடம் சொன்னேன். "இந்த இடங்களை நான் ஒருபோதும் போய் பார்க்க போவதில்லை, எனவே ஏன் அவற்றை நான் நினைவில்கொள்ள வேண்டும்? கான்ஸ்டான்டிநோபிளையும் திம்புக்துவையும் பற்றி எனக்கென்ன அக்கறை ஏற்பட முடியும்?

அவை இருந்தாலும் இல்லாவிட்டாலும் எனக்கு அவை அவசியமில்லை! நான் இப்போது எங்கே இருக்கிறேன் என்பதை மட்டுமே நான் அறிய விரும்புகிறேன்- அதை சொல்லிக் கொடுங்கள்!"

அவர் வாயடைத்துப் போனார். அவர் சொன்னார், "நீ இப்போது எந்த இடத்தில் இருக்கிறாய்...? எந்த மாணவனும் இதுவரை என்னிடம் இப்படி கேட்டதில்லை. என் வாழ்நாள் முழுதும் நான் புவியியல்தான் கற்பித்து வந்திருக்கிறேன்!"

நான் சொன்னேன், "அப்படியானால் உங்களுக்கு ஒரே ஒரு மாணவர்கூட ஒருபோதும் இருந்ததில்லை. நான் இப்போது எங்கு இருக்கிறேன் என்பதையே நான் அறிய விரும்புகிறேன். என் முழு அக்கறையும் இங்கே, இப்போதே என்பதைப் பற்றியதுதான்."

என் வரலாற்று ஆசிரியர் எனக்கு முட்டாள் மன்னர்களைப் பற்றியும், அவர்களின் பெயர்களையும் கற்பிப்பது வழக்கம். நான் சொன்னேன். "என்னால் அவற்றை மனப்பாடம் செய்ய முடியாது. ஏன் செய்ய வேண்டும்? அவர்கள் எனக்கு என்ன செய்திருக் கிறார்கள்? என் பெயர்கூட அவர்களுக்கு தெரியாது, ஆயின் நான் ஏன் அவர்கள் பெயர்களை நினைவில் வைக்கவேண்டும்? எதுவும் பரஸ்பர கொடுக்கல்- வாங்கலாக இருக்கவேண்டும். இந்த நாதிர்ஷாவும் தாம்பர்லேனும், ஜெங்கிஸ்கானும் என்ன செய்திருக்கிறார்கள்?"

ஆனால் இப்படித்தான் நாம் மடத்தனமான, அனாவசியமான தகவல்களை சுமத்திக்கொண்டே போகிறோம். சுமை கனத்துக் கொண்டே போகிறது. மிகப் பெரிய சுமை சுமப்பவனுக்கு மிகப்பெரிய பரிசுகள் தருகிறார்கள். இயல்பாகவே மடத்தனத்துக்கு சன்மானம் கிடைக்கிறபோது அதிலேயே நீங்கள் ஊறிவிடுகிறீர்கள். விவேகமோ தண்டிக்கப்படுகிறது.

நான் நிறைய தண்டிக்கப்பட்டேன்- எந்த அளவுக்கு தண்டிக்கப்பட்டேன் என்பதை உங்களால் கற்பனை செய்யவும் முடியாது. என் ஆரம்பப்பள்ளியில் இருந்து பல்கலைக்கழகம் வரை நான் தொடர்ச்சியாக தண்டிக்கப்பட்டேன். அவர்கள் ஏன் என்னை தண்டித்தார்கள் என்பதை யாரும் ஒருபோதும் எனக்குச் சொல்ல முடியவில்லை. வகுப்புக்கு வெளியில் நான் நின்று கொண்டிருப்பது பெரும்பாலும் எப்போதுமே காணக்கூடிய நிகழ்ச்சியாக இருந்தது. வகுப்பறைக்குள் நான் அமர முடிந்தது மிக அபூர்வம். ஆனால் அந்தப் பயிற்சி எனக்கு உதவியது. நான் மிகுந்த உடற்பயிற்சி செய்தேன்-

வகுப்புக்கு வெளியில் நடந்து கொண்டிருந்தேன். இதனால் இப்போது நான் எதையும் செய்ய தேவையில்லாதிருக்கிறது. போதிய பயிற்சியை ஏற்கெனவே செய்து விட்டிருக்கிறேன்!

என் தலைமை ஆசிரியர் சுற்றிப் பார்க்க வரும்போதெல்லாம் எப்போதும் தாழ்வாரத்தில் நடந்துகொண்டிருக்கும் ஒரே ஆள் நானாகத்தான் இருந்தேன். என்னை வெளியே பார்க்காத போதெல்லாம் அவர் என் வகுப்புக்குள் வந்து "என்னாச்சு? உள்ளே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்பார்.

நான் சொன்னேன், "எனக்குத் தெரியாது. எனக்கே புரியவில்லை. ஒரே ஒரு கேள்வி கேட்டதுமே ஆசிரியர் சொல்வார், 'வெளியே போ! கேள்வி கேட்பதாயிருந்தால் உள்ளே வராதே." எனக்கும் வெளியில் காற்றோட்டமாக இருக்க நல்ல சாக்குப் போக்காயிற்று. வெளியே பறவைகளுடனும் மரங்களுடனும் இருப்பது மிகவும் அழகானது. எனவே நான் வெளியேற விரும்பும் போதெல்லாம் ஒரு கேள்வி கேட்பேன். எந்தக் கேள்வியானாலும் போதும்- பதில் சொல்ல முடியாத எந்தக் கேள்வியானாலும் சரிதான்!

ஒரு கல்லூரியில் இருந்து நான் வெளியேற்றப்பட்டேன். ஒவ்வொரு பல்கலைக்கழகத்தில் இருந்தும் வெளியேற்றப்பட்டேன். ஒரு பல்கலைக்கழகம் என்னை ஏற்றுக்கொண்டது. ஆனால் ஒரு நிபந்தனையுடன் ஏற்றது- அதாவது நான் எந்தக் கேள்வியும் கேட்கக்கூடாது.

நான் சொன்னேன், "அதை நான் ஏற்க முடியும். ஆனால் நீங்கள் ஒன்று செய்ய வேண்டும். அதாவது நான் வகுப்புகளுக்கு போக வேண்டி இருக்கக்கூடாது. ஏனெனில் வகுப்பில் இருந்தால், பேராசிரியர் மடத்தனமாக எதையாவது சொன்னால் என்னால் என்னை கட்டுப்படுத்தி இருக்கமுடியாது- மனப்போராட்டம் மிகப் பலமாகவே இருக்கும்- வாக்கு வாதம் நடக்கும். கேள்வி கேட்கமாட்டேன் என்று கொடுத்த வாக்குறுதியை முற்றிலுமாக மறந்துவிடுவேன். எனவே நான் வகுப்புகளுக்கு வரத் தேவையில்லை என்பதற்கு நீங்கள் அனுமதிக்க வேண்டி இருக்கிறது. குறைந்தது 75% நாட்கள் வகுப்பில் இருப்பது முற்றிலும் அத்தியாவசிய தேவை என்னும் நிபந்தனையை நிறைவேற்றாமலேயே தேர்வில் கலந்துகொள்ளவும் எனக்கு அனுமதி தரவேண்டும்."

"அனுமதி அளிக்கிறேன்" என்றார் அவர்.

நானும் மிகவும் மகிழ்ந்தேன்! 2 ஆண்டுகளாக கல்லூரிப் பக்கமே எட்டிப் பார்க்கவில்லை. தேர்வு நடக்கும்போது மட்டுமே வந்தேன்.

முதல்வர் சொன்னார், "நீ ஒரு விசித்திரமான ஆள்! எப்போதாவது ஒரு தடவை நீ வராது போகலாம் என நான் நினைத்திருந்தேன். ஆனால் 2 ஆண்டுகளாக உன்னை நான் பார்க்கவே இல்லையே!"

கட்டணத்தைக்கூட அஞ்சலிலேயே அனுப்பி இருந்தேன். ஏனெனில், நான் சொன்னேன், "தலைமை எழுத்தருடனும், கட்டணத்தை செலுத்தும்போதோ முகமன், சொல்லும்போதோ ஏதாவது நடந்து விடலாம்! 'எப்படி இருக்கிறாய்?' என அவர் கேட்கலாம். அதுவே போதும். உங்களுக்கு என்னைத் தெரியும். நீங்கள் சும்மா 'எப்படி இருக்கிறாய்?' என்று கேட்கிறீர்கள். அதற்கு நான் 90 நிமிடங்களுக்கு பேசிக்கொண்டு போவேன். அதுவே என் வழக்கமான நடைமுறையாக இருந்து வந்துள்ளது."

எனவே என் வாக்குறுதியை காப்பாற்றுவதற்காகவே எல்லா தொடர்புகளையும் நான் தவிர்த்தேன். ஆனால் அது ஒரு வரமாக, ஆசீர்வாதமாக ஆகிவிட்டது.

குழந்தைகள் நிச்சயமாய் நுண்ணறிவுள்ளவர்களாகவே இருக்கிறார்கள். பிரியா, மிகவும் நுண்ணறிவோடு இருக்கிறார்கள்.

ஒரு சிறுவன் இன்னொருவனிடம் சொல்லிக்கொண்டிருந்தான். "பெற்றோர்கள் இவ்வளவு தொல்லையானவர்கள் என்பதை நான் தெரிந்துகொள்ள முடிந்திருந்தால், ஒருபோதும் அவர்களைப் பெற்றிருந்திருக்க மாட்டேன்!"

"புதுப் போதகர் எப்படி மகனே, உனக்குப் பிடித்தாரா?" என்று கேட்டாள் அம்மா.

"பெரிதாகப் பிடிக்கவில்லை. அவர் ரொம்ப நேரம் போதிப்பதால் என்னால் விழித்திருக்கவும் முடியவில்லை. பெருங்குரலில் அவர் இரைவதால் என்னால் தூங்கவும் முடியவில்லை!"

ஒரு பெரிய பல்பொருள் அங்காடியில் ஒரு சிறுவன் அம்மாவை தவறவிடுகிறான். அங்கு பணிபுரிந்து கொண்டிருந்த இளைஞன். சிறுவன் அழுவதைப் பார்த்து அவனைக் கேட்கிறான். "என்ன விஷயம்?"

"அம்மாவைக் காணவில்லை" அழுதபடியே கூறுகிறான்.

"அவர்கள் எப்படி இருப்பார்கள்?" அந்த ஆள் கேட்கிறான்.

"நானில்லாமல் இருப்பாள்."

ஒரு ஆறு வயது பையனை அவனது ஞாயிறு பள்ளி ஆசிரியர் கடிந்து கொண்டார். "உன்னோடு ஒரே சள்ளையாய் போயிற்று-சுத்தமா உருப்படாத பயல் நீ!"

சிறுவன் தன் மூணடி முழு உயரத்துக்குமாக நிமிர்ந்து நின்று சொன்னான். "அது உண்மை கிடையாது. நான் ரொம்ப நல்ல பையன். கடவுள்தான் என்னை படைத்தார்- அவர் உருப்படாத குப்பைகளை படைப்பதில்லை!"

"நேத்து ராத்திரி தமாசான கனவு கண்டேன்'மா"

"அப்படியா?"

"நான் முழிச்சிகிட்டிருந்த மாதிரி கனவு கண்டேன். ஆனா நான் முழிச்சிப் பாத்த பிறகுதான் நான் தூங்கிக்கிட்டிருந்தேன்னு தெரிஞ்சது!"

இரண்டு சிறுவர்கள் ஒரு வாசல் கதவில் சேர்ந்து ஊசஞ்சலாடிக் கொண்டு பொழுதுபோக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களின் உரையாடலின் இடையில் ஒருவன் மற்றவனை கேட்டான். "உனக்கு என்ன வயசு?"

"தெரியலை" என்றான் மற்றவன்.

"உனக்கு என்ன வயசுன்னு தெரியலைன்னா சொல்றே?"

"ஆமா"

"பொண்ணுக உன்னைப் பாதிக்கிறாங்களா?"

"இல்லை."

"அப்படீன்னா உனக்கு வயசு நாலு" என மதிப்பிட்டான். அவனுடைய சகா.

ஒரு சிறுவன் ஒருநாள் பள்ளியிலிருந்து கூறுகிறான், "யம்மா, நான் ஒரு தட்டையான பூனையைப் பார்த்தேன்!"

"உம்?" என்கிறாள் அம்மா. "அது தட்டைன்னு எப்படி தெரிஞ்சது உனக்கு?"

"ஏன்னா இன்னொரு பூனை அதுமேல உட்கார்ந்து காத்தடிச்சிக்கிட்டு இருந்தது."

"அப்பா" என்றான் ஜானிக்குட்டி, "உலகத்துக்கு குட்ப்பாப்பாக்கள் எப்படி வருகின்றன?"

"கொக்கு கொண்டு வருதுப்பா."

"அப்பா, சுமமா சொல்லாதே, அப்ப கொக்குகூட தான் அத செஞ்சியா?"

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நீங்கள் இங்கு வந்துசேர 700 ஆண்டுகள் ஆகி உள்ளது. என்ன நடந்தது?**

**தேவபிரேம்.**

இந்திய ரயில்களைப் பற்றி உனக்கு தெரியாதா?

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் உண்மையைச் சொல்லப் போகிறேன். நான் ஒரு பிரிட்டிஷ் நங்கை: என் தாத்தாவின் அப்பா தில்லியின் ஆளுநராயிருந்தார். என் மாமாவின் அப்பா காஷ்மீரின் பிரதமராயிருந்தார். எனக்கு மிகக்குறைந்த வாய்ப்பே உள்ளது என்பது எனக்கு தெரியும். ஆனால் இந்த துரதிருஷ்டவசமான பாரம்பரியம் இருந்தாலும், இயற்கையின் விதிகளை மீறி உங்களுடன் இசைவது முடியுமா?**

**ஆனந்த அனுப்பம்.**

கவலைப்படாதே- உண்மை விடுவிக்கிறது! பாவத்தை நீ ஒப்புக்கொண்டு விட்டாய். பாவங்களை ஒப்புக்கொள்வதன் அழகே அதுதான். இனிக் கவலையில்லை.

ஹென்ரிச் ஹெயின் செத்துக் கொண்டிருந்தார். அவரது கடைசி வார்த்தைகள்: "கடவுள் என்னை மன்னிப்பார்- அவரின் சுபாவமே அதுதான்."

எனவே கவலைப்படாதே. நீ பிரிட்டிஷ்காரியானாலும் கடவுள் உன்னை மன்னிப்பார். தேவை எல்லாம் உன் தரப்பில் பாவ அறிக்கைதான். மேலும் என் கிண்டல்களை சீரியதாக எடுத்துக் கொள்ளாதே. பிரிட்டிஷ்காரர்கள் அழகான மக்கள்- அவர்களை நான் நேசிக்கிறேன்.

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**யாரும் என்னை அவமதித்தால் என்னால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடிவதில்லை. நான் என்ன செய்யவேண்டும்?**

**தீரேஷ்.**

பழிக்குப்பழி- நீ ஞானநிலைபேறு பெறும் வரை தொடரும். எனவே விரைந்து பழி வாங்கு, ஏனெனில் விழிப்புணர்வு பெற்றதும் எதை செய்வதும் மிக கடினமாகி விடும். யாராவது உன்னை அவமதித்தால், யாராவது உன்னை அவமதிக்கிறார்- அதை நீ சும்மா ஏற்றுக்கொள்ள வேண்டியதே. ஏஸ்தம்மோ சனாதனோ. எனவே நீ செய்ய விரும்புவதை எல்லாம் இப்பவே செய்துவிடு. செய்து தீர்த்துவிடு. ஏனெனில் இங்கே விரைவில் நீ ஞானம் பெற்று விடுவாய். அது அதிக தூரத்தில் இல்லை.

மேலும் யாராவது உன்னை அவமதித்தால் உன்னால் உன்னை கட்டுப்படுத்த முடியாமல் போவது இயல்பே. உன்னை நீயே கட்டுப்படுத்திக்கொள் என்று ஒருபோதும் நான் சொன்னதில்லை. ஏனெனில் கட்டுப்பாடு உதவமுடியாது. கட்டுப்படுத்தினால் நீ ஒடுக்கிறாய். ஒடுக்குதலின் இன்னொரு பெயரே கட்டுப்படுத்தல். கவனிக்க முடிந்தால், கவனி. இல்லாவிட்டால், ஈடுபடுவதையே தேர்ந்தெடு. ஏனெனில் ஈடுபாட்டில் உனக்கொரு பாடம் கிடைக்கும். ஒடுக்குமுறை உனக்கு எதையும் கற்பிக்காது. மேலும் நீ ஒரு இயந்திரம் அல்ல. மனிதன்.

கி.பி.2000 ஆண்டில் ஒரு எச்சரிக்கை. இயந்திர மனிதர் பற்றாக் குறையால் எம் குடிப்பக ஊழியர்களில் சிலர் மனிதர் (யந்திரங்)களாய் இருக்கிறார்கள். அவர்களுக்கு அவமானம் ஏற்பட்டால் எதிர்பாராவிதமாக திருப்பித் தாக்கி விடுவார்கள்.

நீ யந்திரம் அல்ல. எனவே இது இயல்பானதே. நிசமான முறையில் எதிர்வினை புரிவது நல்லதுதான். ஆனால் ஒன்றை நினைவில் கொள். எதைச் செய்யவும் உனக்கு சுதந்திரம் உண்டு. அதன் விளைவுகளை மட்டும் நீ சந்திக்கவேண்டி இருக்கும். ஏனெனில் உன்னை யாரும் திருப்பித் தாக்க மாட்டார்கள் என்று நான் சொல்லவில்லை. ஏனெனில் முதலில் எதிராளி யார் என்பதை பார். சற்று கவனமாக இரு. மேலும் இப்போது நீ உயிரோடு இருக்கிறாய், இன்னும் சாகவில்லை. நீ ஞானம் பெற்றதும் ஏறக்குறைய செத்தவன்

ஆகிறாய்- இக்கரைக்கு செத்தவன் ஆகிறாய். அக்கரைக்கு உயிர்த்தவன் ஆகிறாய். எனவே அந்த பேரிடர் சம்பவிக்கும் முன்பாக உன்னால் செய்ய முடிவதை எல்லாம் செய்து அனுபவித்துக்கொள்.

முல்லா நசுருதீன் மின்சாரத்தைப் பற்றி படித்துக் கொண்டிருந்தார். அதன் நடைமுறைப் பயன்களை வகுப்புக்குக் காட்ட, ஒவ்வொரு மாணவரும் ஏதாவது ஒரு மின்சாதனத்தை மறுநாள் வகுப்புக்கு கொண்டு வரவேண்டும் என ஆசிரியை கண்டிப்புடன் கூறினாள்.

மறுநாள் காலை வகுப்பே ஒரு சிறிய கண்காட்சியாக இருந்தது. மின் பல்புகள், இஸ்திரிப் பெட்டிகள், கூந்தல் உலர்த்தும் கருவி, மின் அடுப்பு...

முல்லா வரும்போது, ஒருபெரிய செயற்கை நுரையீரல் சாதனத்தை தன் முதுகில் சுமந்துகொண்டு வேர்த்துக் கொட்டியபடி வந்தார்.

ஆசிரியை கேட்டாள், "முல்லா, மின்சாரத்தால் இயங்கும் இந்த செயற்கை நுரையீரல் உனக்கு எங்கிருந்து கிடைத்தது?"

"என் தாத்தாவிடம் இருந்து எடுத்தேன், டீச்சர்."

"அவர் ஒன்றும் சொல்லவில்லையா?" ஆசிரியை அலறினாள்.

"ஒன்றும் சொல்லவில்லை என்றே நினைக்கிறேன், டீச்சர். சும்மா 'கிர்ர்ர்...' என்று மட்டுமே சத்தம் கொடுத்தார்."

எனவே அது நிகழுமுன் கட்டுப்படுத்த முயலாதே, எதையும் செய்- கவலைப்பட ஒன்றுமில்லை. உன் மனிதத்தன்மையை ஏற்றுக்கொள். அது உன் பகுதிதான். யாராவது உன்னை அவமானப்படுத்தினால் அவன் உன்னை சண்டைக்கு இழுக்கிறான். எனவே செமத்தியாக அவனுக்கு திருப்பிக் கொடு! அவன் அதிக பலசாலி என்று கண்டால் தியானம் செய்- வேறு என்ன செய்ய?

**ஒன்பதாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் ஒரு கணித வல்லுநன். நானும் சந்நியாசியாக முடியுமா?**

**தர்மவீர்.**

**எ**ந்த சிரமமும் இருப்பதாக நான் பார்க்கவில்லை- நீ சந்நியாசி ஆக முடியும். என்ன, கணக்கை விடவும் கூடுதலான ஒன்றை நீ கற்றுக்கொள்ள வேண்டி இருக்கும். கொஞ்சம் கவிதை, கொஞ்சம்

இசை, கொஞ்சம் நாட்டியம்- இவற்றை நீ கற்க வேண்டி இருக்கும். கணக்குப் போடும் மனத்தை நீ கடந்துபோக வேண்டி இருக்கும். அதர்க்கத்துக்குள், விசித்திரத்துக்குள் நீ சற்றே குதிக்கவேண்டி இருக்கும். ஆயின் பழக்கங்கள் மறைவது எளிதல்ல. எனவே உன் பிரச்சனையை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது.

கணக்கு என்பது வெறும் தர்க்கம்; தர்க்கம் தவிர வேறில்லை. சந்நியாசமோ மிகவும் அதர்க்கமானது- அல்லது உனக்கு பெரிய வார்த்தைகள்தான் பிடிக்கும் என்றால், அது தர்க்கங்களையெல்லாம் தாண்டியது. ஆனால் இது ஒரு வார்த்தை மட்டுமே. உண்மையில் அது அதர்க்கமானது. எனவே தர்க்கத்தின் வேலிகளுக்கு அப்பால் சிறிது போக நீ தயார் என்றால் உனக்கு நல்வரவு. அது கொஞ்சம் சிரமம்தான். ஆனால் அசாத்தியம் அல்ல.

தம் வாழ்க்கை முழுவதையும் ஏதோ தர்க்க முறையியலுக்கு அர்ப்பணித்திருந்த கணிதர்கள், விஞ்ஞானிகள் இங்கு இருக்கிறார்கள். இப்போது அவர்கள் அதிலிருந்து நகர்ந்துவிட்டார்கள்- அதை தாண்டி சென்றுவிட்டார்கள். கணிதமே எல்லாமா. அல்லது அதைவிடவும் மேலாக ஏதோ ஒன்று இருக்கிறதா என்பதை அறியும் பெருவிருப்பம் அவர்களுக்கு இருந்தால் மட்டுமே இவ்வாறு அவர்கள் இயங்க முடியும். நீ உண்மையாகவே ஒரு ஆய்வாளன் என்றால், உன் வாழ்வில் ஏதாவது சாகசத்தை விரும்புகிறாய் என்றால், பின் வேறு பிரச்சனை இல்லை.

உன் கேள்வி எனக்கு புரிகிறது. நீ உன் கணக்குக்கு ரொம்பவுமே அடிமையாகி இருக்கலாம். அப்படியானால் சிக்கல்தான். எல்லா போதை அடிமைத்தனங்களும் சிக்கல்களையே உருவாக்குகின்றன. மேலும் இவை ஆழமான போதைகளாய் உள்ளன. ஏதாவது போதை மருந்துக்கு நீ அடிமையாகி இருந்தால் அதில் அதிக பிரச்சனை இல்லை. ஆறு வாரங்களுக்குள் உனக்கு மருத்துவ சிகிச்சை அளித்து அதிலிருந்து வெளியேற்றிவிட முடியும். ஆனால் தர்க்கத்துக்கு நீ அடிமையாகி இருந்தால் அதற்கு அதிக காலம் எடுக்கலாம். மேலும் அதிலிருந்து வெளியேற உன் முழு ஜீவனுடன் நீ முடிவெடுக்காத வரை, உன்னை வேறு யாரும் அதிலிருந்து வெளிக்கொண்டு வர சாத்தியம் இராது.

ஒரு கணிதன் ஒரு விபச்சார விடுதிக்கு போகிறான். மிகவும் கிளர்ச்சியடைந்தவனாய், இருப்பதிலேயே பேரழகியை தேர்ந்தெடுக்கிறான். அவளுடன் ஒரு அறைக்குள் நுழைகிறான்.

"தலைநகரில் இருந்து வந்திருக்கும் உன்னைப் போன்ற பெண்கள் படுக்கையில் மிகவும் நம்பமுடியாத காரியங்களை எல்லாம் செய்வதாக பேசிக்கொள்கிறார்களே, அப்படியா?"

"உண்மைதான், நிச்சயமாக அதையெல்லாம் செய்கிறோம்!" என்கிறாள்.

"அப்படியானால் உன் வித்தைகளில் ஒன்றை எனக்குக் காட்டு!"

"உங்களுக்கு மிகவும் பிடித்துவிடும் ஒன்றை கைவசம் வைத்திருக்கிறேன். வாருங்கள். அறுபத்தொன்பதைச் செய்வோம்!"

இது கணக்கறிவனுக்கு பொத்தமாக தெரிகிறது-69. உடனடியாக அந்த மொழியை- "69" -அவன் புரிந்துகொள்கிறான்: அது அவனின் உலகத்துக்குள் வருகிறது. எனவே அவர்கள் படுக்கை மேல் பாய்கின்றனர். பெண் மிக நன்றாகவே செய்கிறாள்- அவனுக்கும் பிடித்துப் போகிறது!

அவள் முடித்ததும், அவன் தன் வசத்தில் சாய்கிறான். பெருமூச்சுவிட்டபடி கூறுகிறான், "அடேங்கப்பா- அபாரம்! மற்ற 68-ஐயும் இனி ஏறெடுத்தும் பார்க்கமாட்டேன் என நினைக்கிறேன்!"

ஆனால் கணக்கன் கணக்கன்தான்- இப்போதும் அவன் கணக்குதான் போடுகிறான்.

கணக்கு போட்டபடியே நீ இருந்தால்... நீ சந்நியாசி ஆகமுடியும். ஆனால் அப்போதும் நீ கணக்கு போட்டபடிதான் இருப்பாய்: "என்ன நிகழ்கிறது? என்ன நிகழவில்லை? எத்தனை நாட்களாக நான் தியானித்து வருகிறேன்? எத்தனை மணி நேரமாக தியானித்து வருகிறேன்? என்ன பலன்? விளைவு என்ன? அதன் மதிப்பு எவ்வளவு?" -இதை எல்லாம் கைவிட வேண்டி இருக்கும்.

தியானம் என்பது அன்பர்களின் உலகம். கணக்கின் உலகமல்ல. காதலின் உலகம். என்மேல் நீ காதல் வயப்பட்டிருந்தால் நீ தாராளமாக வரலாம்.

நான் ஒரு கணித வல்லுநன். நானும் சந்நியாசி ஆக முடியுமா? என்கிறாய்.

முடியும், தர்மவீர். ஆனால் வேறு ஒரு இடத்திலிருந்து பிரச்சினை வரும் என்றே எனக்குத் தோன்றுகிறது- அதாவது நீயும் ஒரு இந்தியனாய் இருக்கிறாய். ஒரு இந்தியனாகவும் இருந்து என் சீடனாகவும் இருப்பது என்பது. ஒரு கணிதனாகவும் இருந்துகொண்டு என் சீடனாகவும் இருப்பதைவிட எவ்வளவோ அதிக

கடினமானதாகும். சந்நியாசம் பற்றிய ஒரு கருத்துடன் குறைந்தது 10,000 ஆண்டுகளாவது வாழ்ந்து வந்திருக்கிறான் இந்தியன். நானோ எல்லாவற்றையும் முற்றிலும் குழப்பிக் கொண்டிருக்கிறேன். எல்லாவற்றையும் தலைகீழாக்கிக் கொண்டிருக்கிறேன்.

எனது சந்நியாசம் நீங்கள் எப்போதும் புரிந்து வந்திருக்கிற விதத்தில் சந்நியாசம் அல்ல. இது முற்றிலும் வேறு. உங்களை குழப்ப மட்டுமே இதை நான் சந்நியாசம் என்கிறேன்! இதற்கு ஒரு புதுப்பெயரை நான் சூட்டி இருக்கமுடியும். ஆனால் அது என் பாணி அல்ல. உங்கள் குழப்பத்தில், உங்கள் தாறுமாறில் நான் மேலோங்குகிறேன்! எல்லா நிர்ணய பாணிகளையும், நிர்ணயமான எல்லா சிந்தனா முறைகளையும் கிழறுப்பதே என் முழு வேலையுமாகும். எனவேதான் காவி (ஆரஞ்சு) நிறத்தை தேர்ந்தெடுத்தேன்- வேறு வண்ணத்தை என்னால் தேர்ந்தெடுத்திருக்க முடியும். உண்மையில் சந்நியாசம் பற்றிய என் கருத்துக்குப் பொருந்தும் மிகச்சரியான நிறம் வானவில் நிறம்தான்- ஏழு வண்ண ஆடைதான். ஏனெனில் என் சந்நியாசம் என்பது ஒரு வானவில் சம்பவம்- பன்முக பரிமாணம் கொண்ட நிகழ்வு. அதுதான் சந்நியாசம் பற்றிய என் கருத்துக்கு முற்றிலும் இசைந்ததாக இருக்கும். ஆனால் அதை நான் தியாகம் செய்துவிட்டேன். சந்நியாசம் பற்றிய இந்தக் கருத்தை நான் நிர்மூலம் ஆக்கியாக வேண்டும். நிறைய ஆரஞ்சு மக்களை நான் உருவாக்கியாக வேண்டும். அந்த பெருங்கூட்டத்தில் பழைய புனிதர்களும் சாமியார்களும் தொலைந்து காணாமல் போகவேண்டும்- யார் எப்படி என்று யாருக்கும் தெளிவாகக் கூடாது!

நீ ஒரு இந்தியன் என்பது சிறிது தொந்தரவை விளைவிக்கலாம். கணிதத்தை நீ கற்றுக்கொண்டது இந்த பிறவியில் மட்டுமே. ஆனால் இந்தியனாய் இருப்பது உன் சமூகமரபின் பகுதியாக இருக்கலாம். உன் கூட்டு பிரக்ஞை- இன்மையின் பகுதியாய் இருக்கலாம். எனவே இந்தியர்கள் சந்நியாசிகளாக ஆகும்போது அவர்கள் முன்கூட்டிய அனுமானங்களுடன், முடிவுகளுடன், எதிர்பார்ப்புகளுடன் வருகிறார்கள். அந்த எதிர்பார்ப்புகளின்படி இங்கே இல்லாதிருக்கக் காண்கையில் மிகவும் இடறல் அடைகிறார்கள்.

இது சந்நியாசம் பற்றிய முற்றிலும் ஒரு புதிய தரிசனம் என்பதில் ஆதியிலிருந்தே நீ உன்னிப்பாக இருக்கவேண்டும் என விரும்புகிறேன். பழைய சந்நியாசம் துறவு. எனது சந்நியாசம் உறவு- களிப்பு. பழைய சந்நியாசம் மறுஉலகு சார்ந்தது. எனது சந்நியாசம்

இரு உலகும் கொண்டது. இது ஒற்றைப் பரிமாணம் உடையதல்ல. இவ்வுலகை இது சபிப்பதில்லை. இவ்வுலகையே மறுஉலகின் அடித்தளமாக ஆக்குகிறது. பழைய சந்நியாசம் ஆன்மிகமானது. எனது சந்நியாசம் லௌகிக ஆன்மிகம் ஆக இருக்கிறது. என் சந்நியாசம் அறிவியலுக்கு எதிரானதல்ல அதில் அறிவியலும் அடங்குகிறது- அதையும் அடக்கும் அளவு அது பரந்து விரிந்தது. அதற்கு அப்பாலும் போகிறது. ஆனால் அதற்கு எதிராகப் போவதில்லை.

ஒரு அரேபியன் தன் ஒட்டகத்துடன் சேர்ந்து பாலைவனத்தில் வழியை தொலைத்துவிட்டான். அவனுக்கு திடீரென மிகுந்த காமக் கிளர்ச்சி ஏற்பட்டது. இறுதியில் அவன் ஒட்டகத்தைப் பிடித்துக்கொண்டு அதனுடன் உடலுறவு கொள்ள முயன்றான். ஆனால் ஒவ்வொரு தடவை அவன் முயலும்போதும் ஒட்டகம் நகர்ந்து விடவே, அரேபியனுக்கு குறி தவறிக் கொண்டிருந்தது.

இப்படியாக ஒருமாதம் பாலைவனத்தில் அலைந்து கொண்டிருந்த அவன்; ஒருநாள் ஒரு சாலையை எதிர்ப்பட்டான். அது பாலைவனத்தின் விளிம்பில் இருந்த ஒரு பட்டணத்துக்கு போகும் பாதை. அங்கே, தன் உடைந்து போன தேரின் அருகில் உட்கார்ந்து அழுது விசும்பிக் கொண்டிருந்தாள்; மிகவும் கவர்ச்சியான ஒரு இளம் பெண்.

அந்த இளம்பெண் அவனைப் பார்த்ததும் தன் தேரை பொருத்தித் தருமாறு கெஞ்சினாள். அவளுக்கு உதவியதற்காக அவன் பின் மனம் வருந்த நேராது என உறுதி தந்தாள்.

அதை அவன் முடித்ததும் அவள் சொன்னாள், "என்னைக் காப்பாற்றிய இனியவரே, என்னுடன் வாரும். உமக்கு ஒரு பரிசளிக்கிறேன்!"

"நன்றி, பெண்ணே" என்ற அரேபியன், "எனக்காக ஒரு நிமிசம் இந்த ஒட்டகத்தை ஆடாமல் பிடித்துக் கொள்வாயா?"

**பத்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**'மெய்யான திருமணம்' என்று ஒன்று உண்டா?**

**சுகாதா.**

மெய்யான திருமணமா? அப்படி ஒன்றை ஒருபோதும் நான் கேள்விப்பட்டதில்லை! மெய்யான பொய்த்தோற்றங்கள் (மிரேஜ்) உள்ளன. ஆனால் மெய்யான திருமணம் (மேரேஜ்) இல்லை! அது

மெய்யானது என்றால் திருமணம் செய்யவே தேவையில்லையே. பயம் இருப்பதால்தான் திருமணம் என்னும் தேவையே எழுகிறது. ஒருவரை நீங்கள் காதலித்தால் அவருடன் நீங்கள் காதலாக இருக்கிறீர்கள். அவருடன் நீங்கள் சேர்ந்திருக்க முடியும். ஆனால் அவர் உங்களை விட்டுப் போய்விடலாம் என்ற பயம் உங்களுக்கு இடைவிடாமல் இருக்கிறது. மற்றவரும், நீங்கள் அவரை/ அவளை விட்டு போய்விடலாம் என பயப்படுகிறார். எனவே வருங்காலத்தை நிச்சயப்படுத்திக் கொள்ள, நீங்கள் போக முடியாதபடி செய்ய, அடுத்தவரும் நகர முடியாதபடி செய்ய- அதாவது குறைந்தபட்சம் அவ்வளவு எளிதாக ஓடிவிட முடியாமல் செய்ய- திருமணம் கண்டுபிடிக்கப்பட்டது.

அன்பு இல்லாதிருப்பதால் மட்டுமே திருமணம் கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அன்பே இல்லாதபோது திருமணம் மட்டும் எப்படி மெய்யானதாக முடியும்? திருமணத்துக்கு தேவையே இல்லை. அன்பு இருந்தால் திருமணம் ஒரு அனாவசிய சடங்கு/ கட்டு. ஒரு சிறந்த உலகில். மக்கள் அதிக முதிர்ச்சியுடன் இருக்கும் உலகில். அன்பினால் அவர்கள் சேர்ந்திருப்பார்கள், ஒருவருக் கொருவர் சுதந்திரத்துக்கு இடம் கொடுப்பார்கள், ஏனெனில் அன்பு எப்போது மறைந்து விடுமோ, யாருக்குத் தெரியும்?

அன்பும் மெய்யானதில்லை- எனவேதான் அது மறைந்து விட்டது என்பது அல்ல இதன் பொருள். இதுவும் நூற்றாண்டுகளாக நிலவிவரும் ஒரு மிகவும் தவறான கருத்துதான். தவறான கருத்துகளால் நாம் பீடிக்கப்பட்டிருக்கிறோம். அவை நம் வாழ்வில் ஏகப்பட்ட பிரச்சனைகளை உருவாக்குகின்றன. இருந்தாலும் அவற்றின் தவறான தன்மையை நாம் காண முடிவதில்லை. ஏனெனில் அவை மிகவும் நீண்டகாலத்தவை. அவற்றால் நாம் அந்த அளவுக்கு கட்டப்பட்டு விட்டிருக்கிறோம். அன்பு மறைகையில் அது மெய்யானதல்ல என எண்ணத் தொடங்குகிறோம்.

உண்மையில், மெய்யான பூ மாலையில் மறைந்தே தீரும். பிளாஸ்டிக் ரோஜாவோ மறைவதில்லை. மெய்யான ரோஜா பூக்கிறது. விரிகிறது. காற்றில்- மழையில்- வெயிலில் ஆடுகிறது. மாலையில் போய்விடுகிறது. இதன் பொருள், அது பொய்யானது என்பதல்ல. உண்மையில் அதுதான் மெய்யானது- எனவேதான் அது தோன்றியது. பின் மறைந்தது. செயற்கைப் பூவோ பொய்யானது- அது தோன்றுவதுமில்லை. மறைவதுமில்லை. அப்படியே இருக்கிறது. அதிக நிரந்தரமுடையது அது.

திருமணம் ஒரு காகிதப்பூவை போன்றது. அன்போ மெய்யான ரோஜா பூவை போன்றது. ஆனால் மக்கள் மிகவும் கோழைகளாக இருக்கிறார்கள். மெய்யான ரோஜாக்களுடன் வாழ அவர்கள் விரும்புவதில்லை. பாதுகாப்பு, நிச்சயத்தன்மை, நிரந்தரம் இவற்றின் பின் தான் அவர்கள் ஏங்கி அலைகிறார்கள்- இதனால் மெய்யான ரோஜாக்களை பெறுவதில் உள்ள ஆபத்துக்கு அவர்கள் தயாரில்லை; எனவே பிளாஸ்டிக் பூக்களை விலை கொடுத்து வாங்குகிறார்கள். பிளாஸ்டிக் பூக்கள் உங்களை திருப்திப்படுத்த முடியாதுதான்- எனவே தொடர்ந்தும் அவலத்திலேயே இருப்பீர்கள் நீங்கள்.

ஒரு மாதத்துக்கு முன்புதான் சாகர்பிரியா எனக்கு எழுதி இருந்தாள்: "பகவான், என்ன நிகழ்ந்திருக்கிறது எனக்கு? இங்கு நான் 2½ ஆண்டுகளாக இருந்து வருகிறேன்- ஏதோ கோளாறு நேர்ந்திருக்க வேண்டும்- இல்லாவிட்டால் பிந்துவும் நானும் இன்னும் சேர்ந்திருப்பது எப்படி?" அவளின் கேள்விக்கு நான் பதில் தரவில்லை. ஏனெனில் அதற்கு பதில் தந்துவிட்டால் உடனடி யாகவே ஏதாவது நேர்ந்துவிடலாம் என அஞ்சினேன். எனவே பேசாதிருந்தேன். இப்போது அது நிகழ்ந்திருக்கிறது. இப்போது நான் பதில்தர முடியும். ஏனெனில் இனி என்னை அதற்கு யாரும் பொறுப்பாளியாக நினைக்க முடியாது. இப்போது பிந்து தப்பிக்க விரும்புகிறான். ஆனால் சாகர்பிரியாவோ அவனை அவ்வளவு லேசில் விடுவதாக இல்லை. சாகர்பிரியாவிடமிருந்து தப்பிப்பதற் காகவே அவன் சில வாரங்கள் அமெரிக்காவுக்கு போக விரும்புகிறான். இப்போது சாகர்பிரியாவும் அவனை தொடர்கிறாள். தானும் அவனுடன் போக விரும்புகிறாள்.

நாம் ஒருவர் ஒருவருக்கு சுதந்திரத்தை அனுமதிப்பதில்லை. கடைசிவரை தொத்திக் கொண்டிருக்கவே செய்கிறோம். அதற்கு சாத்தியமான எல்லா முயற்சியும் செய்கிறோம். எல்லாமே மறைந்து- முடிந்துபோன பிற்பாடும் அதை தொற்றிக்கொண்டே நம்பிக்கை எல்லாம் இழந்தநிலையிலும் நம்பிக்கொண்டே போகிறோம். ஆயின் எந்த அளவுக்கு ஒட்டிக்கொண்டு இருக்கிறோமோ அந்த அளவுக்கு, மீண்டும் காதல் தன்னை புதுப்பித்துக்கொள்ளும் வாய்ப்பினையும் அழித்து விடுகிறோம்.

இனி, பிந்து அங்கே போய் சில வாரங்கள் தனியே இருக்க சாகர் பிரியாவால் இடமளிக்க முடிந்தா... அவனுக்கென்று கொஞ்சம் இடம் தேவை. அவ்வப்போது ஒவ்வொருவருக்கும் தேவையானதே இது. ஏனெனில் அன்பு மட்டுமே போதுமானதல்ல. அன்பு

அழகானதே; ஆனால் தியானம் அதைவிட முக்யமானது. தியானத்துக்கோ ஆழமான தனிமை- ஏகாந்தம்- தேவை. யாரும் குறுக்கிடாத நிலை தேவை. மேலும் காதலர்கள் மட்டுமே தியானத்தில் குறுக்கிட முடியும். ஏனெனில் அவர்கள் மட்டுமே மிக நெருக்கமாக இருக்கிறார்கள். சந்தைக்கடை குறுக்கிடாது. சம்பந்தமில்லாத மக்கள் குறுக்கிடமாட்டார்கள். ஆனால் மிக நெருக்கமான, மிக அந்நியோன்னியமான, மக்கள் மெய்யாலும் தொல்லையாக ஆக முடியும். அவர்கள் உங்களுக்கு இடமே தரமாட்டார்கள். நீங்கள் தனிமையை விரும்பினால், தாம் புறக்கணிக்கப்படுகிறோம் என்னும் உணர்வே உடனடியாக அவர்களில் மேலெழ தொடங்குகிறது. நீங்கள் விரும்புவதெல்லாம், உங்களின் சொந்த வெட்டவெளியை மட்டுமே மேலும் ஒவ்வொருவருக்கும் தம் சொந்த வெளியில் தனித்திருக்கும் மாபெரும் தேவை இருக்கிறது.

ஆனால் இப்போது சாகர்பிரியா அவனை தொடர்வாள். இருக்கிற கொஞ்சநஞ்ச சாத்தியத்தையும் அவள் கெடுப்பாள்.அவனை போக விடுவதே, இனிய- அழகான- மனிதத்தன்மையான முறையில் அவனுக்கு பிரியாவிடை கூறுவதோ எந்த நச்சரிப்புமின்றி- எந்த புகாரும் இன்றி- எந்த பூசலும் இன்றி அவனை வழியனுப்பி வைப்பதே மிகச்சிறந்த வழியாகும். ரொம்பவும் நீ சண்டை போட்டால், ரொம்பவும் தகராறு செய்தால், மற்றவர்கள் உன்னிடம் சமரசமாகத் தொடங்குவார்கள்தான். ஆனால் அந்த சமரசம் உனக்கு நிறைவுதராது.

இன்னும் ஒன்றை நினைவில் கொள்: வெளி உலகில், அலுவலகத்தில், தொழிற்சாலையில், கடையில், எங்கும் ஆண்கள் சித்திரவதைப் படுகிறார்கள். குறைந்தபட்சம் வீட்டிலாவது அவர்கள் அமைதியை விரும்புகிறார்கள். அந்த சமாதானத்துக்காக அவர்கள் சமரசம் செய்து கொள்கிறார்கள். எனவேதான் ஏறக்குறைய எல்லா கணவர்களும் பெண்டாட்டிதாசர்களாக இருக்கிறார்கள். ஆனாலோ, பெண்டாட்டிதாசனாக இருக்கிற கணவனை எந்த மனைவியாலும் நேசிக்க முடியாது என்பதே பிரச்சனை. அதேசமயம் ஒவ்வொரு மனைவியும் தன் கணவனை ஒரு பெண்டாட்டி தாசனாக ஆக்கவே முயல்கிறாள்! இப்படித்தான் நாம் துன்பங்களை உருவாக்கிக் கொள்கிறோம்.

முதல்விஷயம், திருமணமே தவறானது? திருமணம் என்றால் ஒட்டிக்கொண்டிருத்தல், சட்டரீதியாக சார்ந்து இருத்தல் என்பதாகும்.

உங்களுக்கு சட்டத்தின் ஆதரவு தேவைப்படுகிறது. உங்கள் பங்காளியை நீங்கள் கோர்ட்டுக்கு இழுக்கமுடியும். அவருக்கு மிகுந்த பொருளாதார சீரழிவை, ஏற்படுத்த முடியும்- இதனால் அவர் நினைப்பார். "இருக்கிறதை சகித்துக் கொண்டு போவதே மேல். மேலும் எப்படிப் போனாலும், அதற்கு நான் ஏற்கெனவே பழகியும் போய்விட்டுள்ளேன். எனவே சகித்துக்கொள்ள முடியும். "இரவில் சிலமணி நேரங்கள் மட்டுமே பிரச்சனை; காலையானால் அவன் தப்பிவிடுகிறான். வேலை செய்யும் இடத்தில் கூடுதல் வேலை, எங்கோ ஓரிடத்தில் விருந்து, அல்லது வேறு ஏதோ ஒன்று என 1001 சாக்குகளை கண்டுபிடிக்கிறான். ரோட்டரியில் உறுப்பினராகிறான். லயன்ஸ் கிளப் உறுப்பினராகிறான். தவிர்ப்பதற்கான சகல உபாயங்களையும் கண்டுபிடிக்கிறான். குடிக்க ஆரம்பிக்கிறான். குடித்துவிட்டு வீட்டுக்கு வந்தால் மனைவி சொல்வது அவன் காதில் விழமுடியாது. தனக்கு என்ன செய்யப்படுகிறது என்பது அவனுக்கு தெரியாமல் போகிறது. ஆனால் அப்படிப்பட்ட நபரை எப்படி உங்களால் நேசிக்க முடியும்? அந்த நபரை நீங்கள் வெறுக்கிறீர்கள். ஆனால் அவரை இப்படி ஆக்கியதே நீங்கள்தான்.

ஆணும் தொற்றிக்கொண்டுதான் இருக்கிறான். இது மிகவும் வினோதமான ஒரு விஷயமே. ஒவ்வொரு ஜோடியிலும் ஒருவர் எப்போதும் தொற்றியாகவே இருக்கிறார்: ஆயிரக்கணக்கான தம்பதிகளை பார்த்து எனக்கு கிடைத்த அனுபவம் இது. இருவரில் ஒருவர் தொற்றியாகத்தான் இருக்கவேண்டும் போல் தெரிகிறது- யாராவது ஒருவர் மனைவியோ கணவனோ- இருவரில் ஒருவர் தாசராக இருக்கவேண்டி இருக்கிறது. அப்படி சார்ந்திருப்பவர் பரிதாபநிலையில் இருக்கிறார். மற்றவரும் பரிதாப நிலையிலேயே இருக்கிறார். ஏனெனில் இவர் தன் சுதந்திரத்தை இழக்கிறார்- ஆயின் தன் சுதந்திரத்தை இழந்திருக்கிற ஒருவருடன் நீங்கள் சந்தோசமாக இருக்க முடியாது.

இரண்டு சுதந்திர மனிதரிடையிலான சந்திப்பே காதல். அது திருமணமல்ல, அன்புக்கு திருமணம் தேவையில்லை. அன்பு மறைந்ததால்- அது தங்கியிருக்கும் வாய்ப்பைவிட மறைந்துவிடும் வாய்ப்பே அதிகம்- அதன்பொருள் அது பொய்யானது என்பதில்லை. எந்த அளவுக்கு அது அதிக மெய்யானதோ, அந்த அளவுக்கு அது வேகமாக மறைந்துவிடும். எந்த அளவுக்கு அது அதிக தீவிரம் உள்ளதோ அந்த அளவுக்கு அது துரிதமாக மறைந்துவிடும். ஏனெனில் அது உங்களுக்கு போதிய பரவசத்தை கொடுத்துவிடுகிறது; அந்த

உச்சங்களையே ஒவ்வொரு நாளும் அடைந்துகொண்டிருப்பது இயலாது; அது மறைந்தே தீரும்.

ஆனால் மனிதன் ஆனந்த சிகரங்களை விரும்புவதில்லை. மாறாக மென்மையான, வசதியான, சொகுசான நடுத்தரமான (பூர்சுவா) வாழ்க்கையையே விரும்புகிறான். இதுவோ வாழ்க்கையே வாழுகிறார்கள்- முட்டைக்கோசும் காலிபிளவரும் ஒன்றுசேர்ந்து இழுத்துக் கொண்டு கிடக்கின்றன!

மெய்யான திருமணம் என்று ஒன்று இல்லை, சுகாதா. மெய்யான அன்பு/ காதல் மட்டுமே உள்ளது. எல்லா திருமணங்களும் பொய்யானவை தான். ஆனால் மெய்யான அன்பில் வாழ மெய்யான துணிச்சல் கொண்ட இதயம் தேவை. அதில் நீ கணத்துக்கு கணம் வாழவேண்டும். நாளையைப் பொறுத்து திறந்த தன்மையோடேயே இருக்க வேண்டும்- எவ்வித அதிர்ச்சிகளை அது கொண்டுவந்தாலும் வரட்டும் என்று அவற்றை நீ ஏற்றுக்கொள்ள வேண்டும். உன் காதலர்! காதலி பிரிந்தாலும் அவருக்கு அழகான பிரியாவிடை கொடுக்கும் அளவுக்கு துணிவுடன் இருக்க வேண்டும். வரவேற்பு கொடுத்த அதே அழகுடனேயே பிரியாவிடையும் கொடுக்க வேண்டும். ஏனெனில் அவள் எவ்வளவோ ஆனந்த கணங்களை உனக்கு தந்திருக்கிறார். எனவே நீ அவரிடம் நன்றியுடன் இருக்க வேண்டும்.

**பதினொன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மணவிலக்கு பற்றி என்ன சொல்கிறீர்கள்?**

**மகேஷ்.**

ஒரு மாபெரும் தத்துவர் மணவிலக்கைப்பற்றி சொல்லி உள்ளார். அவர் பெயர் எனக்கு மறந்துவிட்டது. உண்மையில் அவர் சொன்னதுவும் எனக்கு மறந்துவிட்டது. ஆனால் நான் சொல்கிறேன்- மணவிலக்கு பயனற்றது. விவேகக் குறைவால் திருமணம் செய்கிறாய்: நிதானக் குறைவால் மணவிலக்கு செய்கிறாய்; பின் ஞாபகக் குறைவால் மறுமணம் செய்கிறாய்.

உண்மையில் திருமணமே தவறானது. திருமணம் உலகிலிருந்து மறைகிற அன்றே மணவிலக்கும் தன்னைப்போல் மறைந்துவிடும்! நான் மணவிலக்குக்கு எதிரானவன்- உலகிலிருந்து அது முற்றிலும்

மறைந்து போக வேண்டும் என்று விரும்புகிறேன்; ஆனால் அதற்கு ஒரே வழி, திருமணத்தையே முற்றிலும் ஒழித்துக்கட்டுவதுதான்.

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**இன்று காலையில் சிரிப்பது மிகவும் இன்பகரமாயிருக்கிறது. விளையாட்டுகாட்டி கிச்சுகிச்சு மூட்டப்படும் குழந்தையின் நிலையில் என்னை நான் உணர்கிறேன். தயவுசெய்து இன்னும் கொஞ்சம் கிச்சுகிச்சு மூட்டுங்களேன்.**

**தேவ ஈவா.**

**ஊ**ர்ஊராக போய் விற்கும் ஒரு விற்பனையாளனின் கார். இரவு கவிழத் தொடங்கும் வேளையில் ஒரு கிராமப்புற சாலையில் பழுதாகி நின்றுவிட்டது. அதை அப்போதே பழுதுபார்க்க முடியாததால் விற்பனையாளன் அருகிலிருந்த பண்ணைவீட்டுக்கு அதை எப்படியோ இட்டுச்சென்று, இரவுக்கு தங்க இடம்கொடுக்கு மாறு வேண்டினான்.

சம்மதித்தார் விவசாயி. ஆனால் ஒரே ஒரு படுக்கைதான் இருந்ததால், விற்பனையாளன் விவசாயியுடனும் அவருடைய அழகிய இளம் மனைவியுடனும் படுக்கையை பகிர்ந்துகொள்ள வேண்டியதாய் இருந்தது.

நள்ளிரவில் விற்பனையாளனுக்கு காமஉணர்ச்சி மிகுதியாகி மனைவியுடன் உறவுகொள்ள தொடங்கினான். அவள் சொன்னாள், "சரி, ஆனா என் புருசன் தூங்கிக் கொண்டுதான் இருக்கிறாரான்னு சோதித்துக்கொள்ள அவர் நெஞ்சில் இருந்து ஒரு மயிரை பிடுங்கிப்பார்."

விற்பனையாளன் அப்படியே செய்தான். விவசாயி தூங்கிக் கொண்டிருந்தார்.

கொஞ்சம் பொறுத்து மறுபடியும் உணர்ச்சி மிகுதியாகி அதுவே நடந்தது. இன்னொரு மயிர். இன்னொரு கூடல், பின் மூன்றாவது தடவை.

இந்த தடவை விவசாயி வெடித்துவிட்டார்.

அவர் சத்தம்போட்டார், "இதோபார், என் மனைவியுடன் எத்தனை தடவை வேணும்னாலும் படுத்துக்கோ. ஆனா அந்தக் கணக்கை என் நெஞ்சில் பார்ப்பதை மட்டும் செய்யாதே!"

ஒரு இத்தாலியன் ஒரு பண்ணைத்தோட்டத்தில் வேலை கிடைத்து முதல்முறையாக ஆஸ்திரேலியாவுக்கு வருகிறான். முதல்நாள் புது தொழிலாளி முற்றத்தில் இருந்த கோழிக்குஞ்சுகளை துரத்திக்கொண்டே போனதாக விவசாயியின் மனைவி புகார் சொல்கிறாள். அவன் புதியவன் என்பதால் அவனுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்துப் பார்ப்போம் என்கிறார் விவசாயி.

ஆனால் பின் அவன் தன் சொந்த மூத்திரத்தையே குடிப்பதை அவள் பார்த்ததும் அதிகமாய் ஆத்திரப்படுகிறாள். ஆனால் அவன் நல்ல உழைப்பாளி, மேலும் இத்தாலியின் இது இயல்பான தாயிருக்கலாம் என கூறி அவளை சமாதானப்படுத்த முயல்கிறார் விவசாயி.

ஆனால் பிறகு, அவரது ஜல்லிக்கட்டு காளை சாணிபோடும் போது அதன் ஆசனவாயின் அருகில் இத்தாலியன் தன் தலையை ஒட்டி வைத்துக் கொண்டிருந்ததை அவரே பார்க்கிறார். இதற்கு மேல் விவசாயியால் பொறுக்க முடியவில்லை. இத்தாலியன் அருகில் ஒரே ஓட்டமாய் சென்று கத்துகிறார். "என்ன கருமத்தை பண்ணிக் கொண்டிருக்கிறாய்? முதலில் என் கோழிக் குஞ்சுகளை விரட்டினாய். பின் உன் சொந்த மூத்திரத்தையே குடித்தாய். இப்போது என் எருதிடம் என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

இத்தாலியன் கூறுகிறான், "நான்- அ ஆஸ்திரேலியாவுக்கு போனால்- அ அங்கு நான்- அ குஞ்சுகளை விரட்டவும்- அ (to chase rechicks) நிறைய மூத்திரத்தைக் குடிக்கவும்- அ (to drink plenty of piss) சாணத்தை எல்லாம்- அ கவனிக்கவும்- அ (to listen all the bullshit) வேண்டியிருக்கும்னு என் நண்பர்கள்தான்- அ என்கிட்டே சொன்னார்கள் அ!" -(Chick= இளம்பெண் Piss= மழைநீர், bullshit =உளறல் என்னும் பொருள் உண்டு. ஆஸ்திரேலியாவில் நீ இளம்பெண்களில் பின்னால் சுற்றவும், மழைநீரை பருகவும் (ஆஸ்திரேலியாவில் மழையளவு அதிகம்) (அவர்கள் பேச்சு பெரிதும் உளறலாக இருப்பதால்) அவற்றை கவனிக்கவும் அதிக வாய்ப் பிருக்கிறது என்று நண்பர்கள் சொல்லியிருக்கிறார்கள் மொ-ர்)



# 16

**முதல் கேள்வி:**

**ஓஷோ,**

**ஸென் தத்துவத்தை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை. அதைப் புரிந்துகொள்ள நான் என்ன செய்ய வேண்டும்?**

பவ்லா.

**ஸென்** ஒரு தத்துவமே அல்ல. ஸென்னை ஒரு தத்துவமாக அணுகுவது ஆதியிலிருந்தே அதை ஒரு தவறான முறையில் அணுகுவதாகும். தத்துவம் என்பது மனம் தொடர்பானது. ஸென்னோ முற்றிலும் மனங்கடந்தது. மனதுக்கு மேலே போகும் நிகழ்முறையே ஸென். மனதிலிருந்து விலகிச்செல்லும் நிகழ்முறையே ஸென். மனதை கடந்து செல்லும்- தாண்டும்- நிகழ்முறையே ஸென். மனதால் அதை நீங்கள் புரிந்துகொள்ள முடியாது. அதில் மனதுக்கு எந்த வேலையும் இல்லை.

ஸென் என்பது ஒரு அ- மன நிலை. இதை நினைவில் கொள்ள வேண்டும். அது வேதாந்தம் அல்ல. வேதாந்தம் ஒரு தத்துவம். அதை உன்னால் நன்றாகவே புரிந்துகொள்ள முடிகிறது. ஸென் என்பது புத்தமதம்கூட அல்ல. புத்தமதமும் ஒரு தத்துவமே.

ஸென் மிக அபூர்வமான ஒரு மலர்ச்சி. உணர்வின் வரலாற்றில் நிகழ்ந்திருக்கிற அதிசய சம்பவங்களில் ஒன்று. புத்தரின் அனுபவமும் லாவோ சுவின் அனுபவமும் சந்தித்ததின் பயன் அது. புத்தர் எப்படியும் இந்திய மரபின் பகுதியாகவே இருந்தார். அவர் தத்துவ மொழியில் பேசினார். அவர் தெள்ளத் தெளிவாக இருக்கிறார். அவரை உங்களால் புரிந்துகொள்ள முடியும். உண்மையில்

மதம்சார்ந்த- உலகியல் கடந்த எல்லா கேள்விகளையும் அவர் தவிர்த்தார். அவர் மிக எளிமையாக, தெளிவாக, தர்க்கரீதியாக இருந்தார். ஆனால் அவரது அனுபவம் மனதின் உடையதாய் இல்லை. ஒரு எதிர்மறைத் தத்துவத்தை உங்களுக்கு தருவதன்மூலம் உங்கள் தத்துவத்தை அவர் அழிக்க முயன்றுவந்தார். உங்கள் காலில் குத்தியிருக்கும் ஒரு முள்ளை இன்னொரு முள்ளால் நீங்கள் எடுக்கமுடிவது போல், ஒரு தத்துவத்தின் துணையுடன் உங்கள் மனதில் இருக்கும் தத்துவத்தை வெளியேற்றுவதாக புத்தரின் முயற்சி இருந்தது. முதல் முள்ளை வெளியேற்றியதும், இரண்டு முட்களையும் எறிந்துவிடமுடியும். அப்போது நீங்கள் மனதை கடந்துவிடுவீர்கள்.

ஆனால் புத்தரின் போதனைகள் சீனாவை அடைந்ததும் ஒரு மகத்தான அழகுள்ள விஷயம் நிகழ்ந்தது: ஒரு இனக்கலப்பு நிகழ்ந்தது. சீனாவில் லாவோசு தன் தாவோ அனுபவத்தை முற்றிலும் தத்துவமற்ற முறையில் தந்திருந்தார். மிகவும் அனர்த்த முறையில், மிகவும் அதர்க்கமான முறையில் தந்திருந்தார். ஆனால் புத்த தியானிகள், புத்த மறைஞானிகள் தாவோ ஞானிகளை சந்தித்ததும் உடனடியாக ஒருவரை ஒருவர் இதயபூர்வமாக- மனப்பூர்வமாக அல்ல- புரிந்துகொள்ள முடிந்தது. ஒரே வித துடிப்பு அதிர்வலைகளை உணரமுடிந்தது. ஒரேவித அகஉலகே திறந்திருப்பதை அவர்கள் பார்க்கமுடிந்தது, ஒரே சுகந்தத்தை அவர்கள் முகரமுடிந்தது. அவர்கள் நெருங்கிவந்தார்கள். அவர்களின் பரஸ்பர நெருக்கத்தில் அவர்களின் பரஸ்பர சந்திப்புகளில், ஒன்றிப்புகளில் புதிய ஒன்று வளரத்தொடங்கியது. அதுதான் ஸென். அது புத்தரின் அழகு. லாவோ சுவின் அழகு இரண்டையும் கொண்டிருந்தது. இருவருக்கும் பிறந்த குழந்தை அது. அத்தகைய ஒரு சந்திப்பு அதற்கு முன்பு/ அதுவரை ஒருபோதும் நடந்ததில்லை.

ஸென், தாவோயிசமும் அல்ல புத்தமும் அல்ல. அது இரண்டும் சேர்ந்தது, அல்லது இரண்டுமில்லை. எனவே மரபு பவுத்தர்கள் ஸென்னை மறுக்கிறார்கள். மரபு தாவோவியரும் ஸென்னை மறுக்கிறார்கள். மரபு பவுத்தருக்கு அது அபத்தம். மரபு தாவோகாரருக்கு அது கூடுதலான தத்துவம். ஆனால் தியானத்தின்மீது நிசமாகவே அக்கறை கொண்டோருக்கு ஸென் ஒரு அனுபவம். அது அபத்தமும் அல்ல, தத்துவமும் அல்ல, ஏனெனில் இவை இரண்டும் மனதின் பதங்கள். அது கடந்த ஒன்று.

"ஸென்" என்பது "தியான்" என்பதிலிருந்து வருகிறது. புத்தர் ஒரு குறிப்பிட்ட மொழியில்- அவர்கால வட்டார மொழியில்

பேசினார். அது பாலிமொழி. பாலியில் "தியான்", "ஜ்ஜான்" என உச்சரிக்கப்படுகிறது. "ஜ்ஜானில்" இருந்து "ஸென்" வந்திருக்கிறது. இது ஜ்ஜானில் இருந்து வருகிறது. ஜ்ஜான், சமஸ்கிருத தியானில் இருந்து வருகிது.

ஸென்னை புரிந்து கொள்ள நீங்கள் தத்துவ வித்தகம் செய்ய தேவை இல்லை. மேலும் தியானம் என்பதுதான் என்ன? தியானம் என்பது மனதில் இருந்து அ- மனதுக்கு, எண்ணங்களில் இருந்து எண்ணமற்ற நிலைக்கு குதிப்பதாகும். மனம் என்றால் எண்ணுதல். அ- மனம் என்றால் தூய விழிப்புணர்வு, விழிப்புணர்வாகவே இருத்தல், அப்போது மட்டுமே. பவ்லா. நீ ஸென்னை புரிந்து கொள்ள முடியும். அறிவின் முயற்சியால் அல்ல, அனுபவத்தாலேயே அதை அறிய முடியும்.

யோக்கா கூறுகிறார்:

> **இயற்கை அனைத்திலும் சீராகவும், ஊடுருவியும் இருப்பது ஒரே இயற்கை.**
>
> **எல்லா யதார்த்தங்களையும் தன்னில் கொண்டிருப்பது ஒரே யதார்த்தம்.**
>
> **நீர் இருக்கும் நிலையில் எல்லாம் பிரதிபலிக்கப்படுவது ஒரே நிலவு.**
>
> **நீரில் இருக்கும் எல்லா நிலவுகளும் அந்த ஒரு நிலவில் அடக்கம்.**

மனதை நீங்கள் கடக்கும் அக்கணமே திடீரென நீங்கள் பன்மையில் இருந்து ஒருமைக்கு போயிருக்கிறீர்கள். மனங்கள் பல, உணர்வோ ஒன்று. வெளிப்பக்கத்தில் நாம் வெவ்வேறானவர்கள். மையத்தில் நாம் ஒன்று. அந்த ஒன்றை பிரம்மம் எனமுடியும், கடவுள் என முடியும். முழுமை என முடியும், உண்மை எனமுடியும், நிர்வாணம் என முடியும்.

ஸென் அதை அ-மனம் என்பது, ஒரு குறிப்பிட்ட காரணத்துக்காகவே. நீங்கள் அதை கடவுள் என்றால், மக்கள் அதை ஒரு ஆள் என்று நினைக்க தொடங்குகிறார்கள். ஒரு ஆளை- மிகப்பெரிய ஆளைத்தான்- கற்பனை செய்ய தொடங்குகிறார்கள். ஆனால் அந்த ஆளுமை பற்றிய அவர்களின் கருத்தை மனித ஆளுமையில் இருந்தே எடுக்கிறார்கள். அது ஒரு கருத்தின் புறவடிவம், உண்மை அல்ல.

கடவுள் மனிதனை தன் சொந்த சாயலில் படைத்தார் என விவிலியம் கூறுகிறது. அது மெய் அல்ல. மனிதன்தான் கடவுளை தன் சொந்த சாயலில் படைத்திருக்கிறான். இதுதான் அதைவிட மெய்யானது. நாம் படைத்த கடவுள் என்பது நம் கருத்து. அது மனித கருத்தை மையமாக கொண்டது. குதிரைகள் தத்துவவாதிகளாக இருந்தால் கடவுள் மனிதனாய் இருக்கமுடியாது. மிக உன்னத குதிரையாகவே இருக்கும். கழுதைகள் தத்துவவாதிகளாய் இருந்தால்-யாருக்கும் தெரியும்?- அப்படியும் இருக்கலாம். அவை மிகவும் தீவிரமாகத் தோன்றுகின்றன, எப்போதும் யோசித்துக் கொண்டிருப்பதுபோல், ஆழ்ந்த பரிசீலனையில் இருப்பதுபோல், மாபெரும் விஷயங்களை சிந்தித்துக் கொண்டிருப்பது போலவே தோன்றுகின்றன... ஒரு கழுதையை கவனியுங்கள். அப்போது கழுதைகள் மாபெரும் சிந்தனையாளர்கள் என்னும் எளிய விவரத்தை நிச்சயமாக தெரிந்து கொள்வீர்கள். நிச்சயமாக அவை எப்போதும் எங்கேயோ தொலைதூரத்தில் நினைப்பை வைத்துக்கொண்டுள்ளன. மாபெரும் மறை பொருட்களுடன் தொடர்புகொண்டுள்ளன. எனவேதான் அவற்றை மடக்கழுதைகள் என மக்கள் நினைக்கிறார்கள். ஆனால் அவை முட்டாள்கள் அல்ல, தத்துவர்கள். ஆயின் கழுதைகள் நினைத்தால், அவை இறையியல் கழுதைகளாக, தியாசபிக் கழுதை களாக, தத்துவக் கழுதைகளாக இருந்தால், பின் கடவுள் ஒரு உன்னத கழுதையாகவே இருக்கும். கடவுள் ஒரு மனிதனாக இருக்க முடியாது. அது அசாத்தியம். கடவுளை ஒரு மனிதனாக அவை கற்பனை செய்ய முடியாது.

எனவே மனித- மையப் பதப்பிரயோகங்கள் எதையும் ஸென் தவிர்க்கிறது. நம் சூழலுடன் தொடர்புடையதாக ஆக முடிகிற எல்லா சொற்களையும் தவிர்க்கிறது. கடவுளை அதுபிரம்மம் என்பதில்லை. ஏனெனில் அது ஒரு தத்துவ பதம். மிகச்சிறந்த தத்துவ பதமாக இருக்கலாம். ஆனால் மிகச்சிறந்த தத்துவச் சொல்லும் தத்துவமாகவே இருக்கிறது. எந்த தத்துவமும் மனதினுடையதாகவே இருக்கிறது- நீங்கள் பிரம்மனை நினைக்க முடியும்.

இந்தியாவில் நாங்கள் நூற்றாண்டுகளாக பிரம்மத்தைப்பற்றி சிந்தித்து வந்திருக்கிறோம். எனவே எத்தனை தத்துவர்கள் இருந்திருக்கிறார்களோ அத்தனை உரைகள்/வியாக்கியானங்கள் பிரம்மத்தைப்பற்றி உள்ளன. சங்கரர் அதை ஒருவழியில் பெயர்த்துரைக்கிறார். நிம்பார்க்கர் இன்னொரு வழியில், ராமானுசர் இன்னும் வேறுபட்ட ஒரு வழியில். இப்படியே எல்லோரும்

பெயர்த்து உரைக்கிறார்கள். எந்த 2 தத்துவர்களுக்கு இடையிலும் உடன்பாடு ஏற்படவில்லை. இன்றும் வாதம் தொடர்கிறது. தத்துவர்கள் சர்ச்சையிட்டுக் கொண்டே போகிறார்கள். அவர்கள் ஒருபோதும் எவ்வித முடிவுகளையும் அடைவதில்லை. அவர்களால் முடியாது. ஏனெனில் ஏகத்தைப் பற்றி முடிவுசெய்யும் திறன் மனதுக்கு இல்லை.

மாபெரும் அத்வைதியான (ஒருமைவாதியான) சங்கரரும் அடியாழத்தில் ஒரு துவைதியாகவே (இருமை வாதியாகவே) எஞ்சுகிறார். பிரம்மம், ஏகம் என்று பேசுகிறார். ஆனால் ஏகத்தை பற்றிப்பேச மாயையைக் கொண்டு வர வேண்டி இருக்கிறது. இப்போது ஒன்று இரண்டாகிறது. மெய்யைப் பற்றி நீங்கள் பேச விரும்பினால் மெய்யற்றதைப்பற்றி பேச வேண்டி உள்ளது. அது ஒரு தேவை. முற்றிலுமான தேவை. மெய்யற்றதைப்பற்றி பேசாமல் மெய்யைப்பற்றி பேச முடியாது; மெய்யற்றது இல்லாவிட்டால் (சங்கரரின்) மெய்மை எல்லாபொருளையும் இழக்கிறது. மனித மொழிகள் இருமையானவையே. எனவே சங்கரர் சிக்கலில், மாபெரும் சிக்கலில் சிக்குகிறார். அதை சிக்கறுக்க முயன்றார். ஆனால் முடியவில்லை. ஓராயிரம் ஆண்டுகளாக சங்கரரின் சீடர்கள் ஒரு வழிகாண முயன்றுவந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களால் இயலவில்லை. மாயை என்றால் பொய்த்தோற்றம்/பிரமை, மாயை என்பது இல்லாது இருக்கிற ஒன்று என்று நீங்கள் சொல்வதாயினும் அதைப்பற்றி நீங்கள் பேசவேண்டி இருக்கிறது. பிரம்மத்தை வரையறுக்க மாயையை ஒரு துணையாக பயன்படுத்த வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் அதை வரையறுப்பது யார்? எப்படி நீங்கள் அதை வரையறுப்பீர்கள்? ஏகம் வரையறையற்றது. அதை வரையறுக்க அதற்கு வேறொன்று தேவைப்படுகிறது. எனவே சங்கரரின் தத்துவம் இருமையற்றது என எண்ணப்பட்டாலும், அப்படி இல்லை. எந்த தத்துவமும் இருமையற்றதாக இருக்கமுடியாது.

ஸென் இருமைவாதமும் அல்ல, இருமையற்ற வாதமும் அல்ல. அது ஒரு வாதமே அல்ல, தத்துவமே அல்ல. அது "மனதில் இருந்து அ-மனத்துக்கு போய் பார்" என்று மட்டுமே சொல்கிறது. பாரப்பதையே அது நம்புகிறது.

யோக்கா சொல்கிறார்:

> **ஆன்மா இயல்பாகவே புலன் உறுப்புகள் மூலமே இயங்குகிறது.**
>
> **இவ்வாறு புறஉலகு அறியப்படுகிறது.**

**இந்த இருமை, கண்ணாடிமேல் பகைபடிவதுபோல படிகிறது.**

**ஆனால் மூட்டத்தை அகற்றிவிட்டால் ஒளி பிரகாசிக்கிறது.**

இவ்வாறு, ஒவ்வொரு தனி ஆன்மகனும் புறஉலகும் மறக்கப்பட்டு, வெறுமையாக்கப் படும்போது, சுயமானது சத்தியத்தை நிலைநாட்டுகிறது.

எல்லாச் சொற்களும் போயினபின், உங்கள் கண்ணாடியில் மேலும் எந்த தூசும் படலமும் இருப்பதில்லை. பொருள்களை நீங்கள் பார்க்கிறபோது உங்களில் பதிவுகள் சேர்கின்றன. அதுவே தூசு- அதையே சிந்தனை என்கிறீர்கள் நீங்கள். ஒரு ரோசாமலரை பார்க்கும் போது அந்தமலர் உங்களுக்கு வெளியே இருக்கிறது. ஆனால் உங்களுக்கு உள்ளே அது பிரதிபலிக்கிறது. மாலையில் ரோசாப்பூ வாடிவிடும். இதழ்கள் உதிர்ந்து மறைந்துவிடும். ஆனால் உள்ளே பிரதிபலித்த ரோசாப்பூ உங்கள் நினைவில் பதிவாகிவிட்ட ரோசாப்பூ, தொடரும். அது எப்போதும் உங்களிடம் நீடித்திருக்கும். எப்போதும் அதை நீங்கள் நினைவுகூற முடிகிறது. மேலும் நீங்கள் ஒரு கூருணர்ச்சி உள்ள, அழகுணர்ச்சி உள்ள. கலை உணர்ச்சி உள்ள ஆள் என்றால், அதை மறுபடியும் மறுபடியும் நீங்கள் காட்சிப்படுத்த முடிகிறது. அது இருந்தது போலவே அதை கற்பனைசெய்ய முடிகிறது. உண்மையில் இதை நீங்கள் முயன்று பார்த்தால் நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். அந்த ரோஜாவின் மனத்தைக்கூட மீண்டும் உங்களால் அனுபவிக்க முடியும். உங்களின் கற்பனையில் முழு சூழலையும் நீங்கள் உருவாக்கினால்; அதைத் தோட்டம், பசும்புல், புல்லின்மீது இருந்த பனித்துளி, புல்மேல் வெறும்காலுடன் நீங்கள் நடந்தது... மண்ணின் இனிய வாசம், குளுமையான காற்று, பறவைகள் பாடிக்கொண்டிருந்தது. முழு சூழலையுமே நீங்கள் உருவாக்கமட்டும் செய்கிறீர்கள்... திடீரென ஒரு அழகிய ரோசாப்பூவை புதரின் மறைவில் கண்டுகொள்கிறீர்கள்... அதன் மணத்தையும்! அப்போது திடீரென நீங்கள் பார்ப்பீர்கள்: வாசம் உங்களிடம் திரும்பவும் வருகிறது. பதிவு அங்கே இருக்கிறது. வெளிரோசா போய்விட்டது. ஆனால் உள்ரோசா உயிருடன் இருக்கிறது.

இப்போது அறிவியலார், குறிப்பாக மூளை இயலார் ஒன்றை கண்டுபிடித்திருக்கிறார்கள். அதாவது மூளையின் சில புள்ளிகளை மின் முனைகளால் தொட்டால் சில நினைவுகள் உடனடியாக செயலூக்கம் பெறுகின்றன. அந்த நினைவுகள் அங்கே ஆழ்ந்து

உறைந்து இருக்கின்றன. ரோசாவின் நினைவானது உறங்கும் மூளையின் புள்ளியை மின் முனையால தொட்டால் திடீரென நீங்கள் நிகழை மறப்பீர்கள். மறுபடியும் அதே தோட்டத்தில் இருப்பீர்கள். இருபது ஆண்டுகள் கடந்திருக்கலாம். ஆனால் மறுபடியும் நிஜமாகவே அந்த தோட்டத்தில் இருப்பதுபோலவே இருக்கும்: அதே மணம். அதே காற்று, அதே குளுமை, அதே பூ மின்முனையை எடுத்துவிட்டால் நினைவு மறைகிறது. மறுபடியும் அதே புள்ளியில் மின்முனையால் தொட்டால் மறுபடியும் அந்த நினைவு தன்னை வெளிப்படுத்தத் தொடங்குகிறது.

இன்றுமொரு விஷயமும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதை நீங்கள் ஆயிரக்கணக்கான தடவைகள் செய்ய முடியும். மறுபடியும் மறுபடியும் அதே நினைவு வருகிறது. மறுபடியும் மறுபடியும் அந்த நினைவு முதலில் இருந்தே திரும்ப ஓடுகிறது. மின் முனையை நீங்கள் அகற்றிய அக்கணமே தானாகவே பதிவு பழையநிலைக்கு திரும்பச் சுற்றி வந்து நிற்பது போல் தோன்றுகிறது. நினைவு சுருள்கள் முதலில் இருந்த நிலைக்கு மறுபடியும் சுருள்வதுபோல் உள்ளது. மறுபடியும் அதை மின்முனையால் தொட்டால் மின்சாரம் பாயத் தொடங்குகிறது. நினைவு மீண்டும் முதலில் இருந்து தொடங்குகிறது. மறுபடியும் அந்தத் தோட்டத்தில் நீங்கள் பிரவேசிக்கிறீர்கள்... அதே சம்பவ வரிசைக்கிரமம். இப்படி ஆயிரக்கணக்கான தடவைகள் செய்யமுடியும். உண்மையில் இதற்கு எந்த வரம்பும் இல்லை என்கிறார்கள் அறிவியலார். கோடிக்கணக்கான தடவைகள் இதை செய்ய முடியும்.

வெளி யதார்த்தம் மாறிக் கொண்டே போகிறது. ஆனால் மனமோ தூசை சேர்த்துக்கொண்டே இருக்கிறது. உங்கள் உணர்வு ஒரு கண்ணாடியாக உள்ளது. இந்தப் பிறவியில் இருந்தும் வேறு பிறவிகளில் இருந்தும் உங்கள்மேல் ஏகப்பட்ட தூசு சேர்த்துக் கொண்டிருக்கிறீர்கள்- கனத்த தூசு அடுக்கே உள்ளது! எனவேதான் ஸென்னை உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை: ஏனெனில் உங்களையே உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை: வாழ்வை உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை; இருத்தலை உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஸென் ஒரு தத்துவமல்ல அது இருத்தலானது; தத்துவமானது அல்ல.

யோக்கா கூறுகிறார்,

**....மூட்டத்தை அகற்றிவிட்டால் ஒளி பிரகாசிக்கிறது.**

**இவ்வாறு ஒவ்வொரு தனி ஆன்மனும் புற உலகும் மறக்கப்பட்டு வெறுமையாக்கப்படும்போது, சுயமானது சத்தியத்தை நிலைநாட்டுகிறது.**

எல்லாமே வெறுமையாக்கப்படும்போது- எல்லா நினைவுகளையும் நீங்கள் மறந்திருக்கிறீர்கள்; உங்கள் தனிமனித உங்கள் தனியான வாழ்வை கூட இருப்பைக்கூட நீங்கள் மறந்திருக்கிறீர்கள்; இனியும் ஒரு தீவாக இருப்பதில்லை நீங்கள். முழுமைக்குள் உருகிவிட்டிருக்கிறீர்கள். நீரில் மிதந்து கொண்டி ருக்கும் பனிக்கட்டியாக நீங்கள் இல்லை. நீராகவே ஆகியிருக் கிறீர்கள்- இதுவே ஸென். இந்நிலையில் திடீரென உண்மை வெளிப்படுத்தப்படுகிறது.

பார்வை தெளிவாக இருக்கிறது என்கிறார் யோக்கா.

இந்த 4 வரிகளும் மகத்தான முக்கியத்துவம் உடையவை.

**பார்வை தெளிவாக இருக்கிறது.**

**ஆனால் பார்க்க பொருள்கள் இல்லை.**

**ஆள் இல்லை.**

**புத்தர் இல்லை.**

இதுதான் ஸென்னின் அறுதிப்பிரகடனம் சிங்க நாதம்!

பார்வை தெளிவாக இருக்கிறது.

இது ஒரு வினோத நிகழ்வு. பார்க்க பொருள்கள் இருக்கும் போது உங்கள் பார்வை தெளிவாக இருப்பதில்லை. ஏனெனில் அந்த பொருள்கள் உங்கள்மேல் பதிவுகளை உண்டுபண்ணுகின்றன. உங்கள் பார்வை தெளிவாயிருக்க முடிவதில்லை. அது பனிமூட்ட மாக உள்ளது. பார்வை தெளிவாக இருக்கையில் பொருள்களே இருப்பதில்லை. தெளிவே இருக்கிறது. உள்ளடக்கமற்ற தூய பிரக்ஞை நிலையே இருக்கிறது. பார்க்க எதுவுமற்ற பார்வையே இருக்கிறது. கவனிக்க ஏதுமற்ற கவனிப்பே இருக்கிறது. தூய அவதானநிலையே, சாட்சியாயிருக்க எதுவுமற்ற தூய சாட்சிநிலையே இருக்கிறது.

ஆள் இல்லை.

சாட்சியாயிருக்க ஏதுமிராத போது, பார்க்க எதுவுமற்ற நிலையில், நீங்கள் தனி ஒரு உருப்படியாக நிலவ முடியாது. "நீ" இருந்தால்மட்டுமே "நான்" இருக்கமுடியும்; "நீ" மறைகையில் "நான்" மறைகிறது. அவை ஒன்று மற்றதின் பகுதிகள். ஒரு

நாணயத்தின் இரு பக்கங்கள்போல் எப்போதும் அவை சேர்ந்தே உள்ளன. இதை "ஒன்று" என்று சொல்ல முடியாது. இதைத்தான் பல முட்டாள் மதவாதிகள் செய்துகொண்டே போகிறார்கள். அவர்கள் கடவுளிடம் "நான் இல்லை. நீரே உள்ளீர்" என சொல்லிக்கொண்டு போகிறார்கள். இது சுத்த மடத்தனம். இப்படி சொல்லுவதிலேயே நீ இருக்கிறாயே. மற்றபடி "நீரே உள்ளீர்" என்று சொல்கிறது யார்?

ஜலாலுதீன் ரூமியின் ஒரு புகழ்பெற்ற கவிதை உள்ளது. குறிப்பிட்ட தூரம்வரை அவருடன் நான் உடன்படுகிறேன். பின் என் மாறுபாடு தொடங்குகிறது. நிசமாகவே இருத்தலியலான ஒரு கட்டத்தில் அவரை நான் ஒத்துக்கொள்ள முடியாது. அவர் விழிப்புணர்வு பெறும்முன் அந்த கவிதையை எழுதியிருக்க வேண்டும் என்பதே நான் உணர்வதாகும். அவர் விழிப்புணர்வு பெற்ற மனிதராகவே இருந்தார். ஆனால் கவிதையைப் பொறுத்த வரை. அவர் விழிப்புணர்வு பெறும்முன் அது எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது உறுதி. கவிதை அழகானது. ஏனெனில் சிலசமயங்களில் கவிகள் ஏறக்குறைய ஞானிகள் போல விஷயங்களை சொல்கிறார்கள். அதில் சில குற்றம் குறை இருக்கவே செய்யும், மாசு மறுவற்றதாக அது இருக்க முடியாது. ஆனால் உங்களால் அக்குறைபாட்டை கண்டுபிடிக்க முடியாமல் போகலாம்.

கவிதையின் கதையை கவனியுங்கள்.

ஜலாலுதீன் சொல்கிறார்:

காதலியின் வீட்டுக்கு வருகிறான் காதலன். கதவை தட்டுகிறான்.

"யாரது?" என்கிறாள் காதலி.

"நான்தான்- உன் காதலன்" என்கிறான் காதலன்.

காதலி கூறுகிறாள், "காதலின் வீடு ரொம்பவும் சின்னது. இதில் இருவருக்கு இடம் கிடைக்க முடியாது. எனவே தயவுசெய்து திரும்பிப்போ. நீ இல்லாமல் போனபின் திரும்பிவா. காதலின் வீடு இருவரை கொள்ளாது, ஒருத்தரைமட்டுமே அது கொள்ளமுடியும்."

இதுவரை சரிதான்!

காதலன் காட்டுக்கு போகிறான். தவசி ஆகிறான். தியானிக்கிறான். கடவுளை பிரார்த்திக்கிறான். அவனுடைய ஒரே வேண்டுதல் இதுதான்: "என்னைக் கரைத்துவிடு!" பல பட்சங்கள் வந்து போகின்றன. மாதங்கள் கடக்கின்றன. ஆண்டுகள்

தாண்டுகின்றன. ஒருநாள் அவன் திரும்புகிறான். மறுபடியும் கதவை தட்டுகிறான். காதலி அதே கேள்வியை கேட்கிறாள்: "யாரது?"

அதற்கு அவன் சொல்கிறான், "இப்போது நானில்லை. நீ மட்டும்தான்."

ரூமி சொல்கிறார்:

கதவுகள் திறக்கின்றன. காதலின் வீட்டில் காதலன் ஏற்கப்படுகிறான். இதை நான் ஏற்பதில்லை- இது ரொம்பவும் முந்துகிறது! பின் "நானில்லை" என்று சொல்கிற ஆள் யார்? "நான் இல்லை" என்று சொல்வதற்கும் நீ தேவைப்படுகிறாய். இது முட்டாள்தனமானது. எப்படி என்றால் நீங்கள் போய் ஒருவரின் வீட்டுக்கதவை தட்டுகிறீர்கள். அவர் சன்னல்வழியாக எட்டிப்பார்த்து "நான் வீட்டில் இல்லை" என்கிறார் என்றால் அது சுயமுரணானது. நீங்கள் அப்படி சொல்ல முடியாது. அதைச் சொல்வதே நீங்கள் இருப்பதை நிரூபிப்பதுதான்.

ஜலாலுதீன் ஞானம் அடைவதற்குமுன் இந்தக் கவிதையை எழுதி இருக்க வேண்டும். பின் அவர் அதை திருத்தி எழுதாமல் விட்டுவிட்டார். இந்த ஞானமடைந்த மனிதர்களே கிறுக்கர்கள்தான். அவர் அந்த கவிதையைப்பற்றியே மறந்துவிட்டிருக்க வேண்டும். ஆனால் அதற்கு திருத்தம் தேவை. நான் அதைச் செய்ய முடியும். நான் பின்வருமாறு திருத்துவேன். காதலி கூறுகிறாள் "மறுபடியும் திரும்பிப்போ. ஏனெனில் நீ இன்னும் இருக்கிறாய். முன்பு நீ நேரடியாக இருந்தாய். இப்போது மறைமுகமாக இருக்கிறாய். ஆனால் இரண்டுக்கும் எந்த வேறு பாடுமில்லை."

காதலன் திரும்பிப்போகிறான். இனி செபிப்பதில் பயனில்லை. ஏனெனில் செபம் பயனளிக்கவில்லை. உண்மையில் பிரார்த்தனை யால் பயன்தர முடியாது. பிரார்த்தனையில் இருமை தங்கியிருக்கிறது. வேறொருவரிடம் நீங்கள் வேண்டுகிறீர்கள். கடவுள் உங்களின் "நீ" ஆகிறார். கடவுளால் உதவமுடியாது. இப்போது அவன் ஒரு ஸென் துறவி ஆகிறான்- பக்தனாகவில்லை. நிசமான தியானி ஆகிறான். தனக்குள் மென்மேலும் ஆழமாக போய்க்கொண்டே இருக்கிறான்; தேடிக்கொண்டே போகிறான். "இந்த 'நான்' எங்கிருக்கிறது?" அது எங்கிருக்கிறது என கண்டுபிடிக்க முயலுகிறான். ஆயின், உள்ளே போகிற எவராலும் அதை கண்டுபிடிக்க முடியாமலே போகும். ஏனெனில் அது இல்லை. அது இல்-பொருள். அது ஒரு நம்பிக்கை மட்டுமே. எனவே அவன் தேடி தேடி பார்த்தும் அதை எங்கும் காண்பதில்லை.

எனவே அவன் திரும்பிவருகிறான். கதவை தட்டுகிறான். காதலி அதே கேள்வியை கேட்கிறாள்: "யார் அது?" பதில் இல்லை- ஏனெனில் பதில் சொல்ல அங்கு யாருமில்லை. வெறும் அமைதி. மறுபடியும் கேட்கிறாள். "யார் அது?" அமைதி ஆழமாகிறது. மறுபடியும் கேட்கிறாள். "யார் அது?" ஆனால் முற்றிலும் அமைதி. கதவை திறக்கிறாள். இப்போது காதலன் வந்திருக்கிறான். ஆனால் அவன் இல்லை. பதில்கூற யாருமில்லை. அவனை வீட்டுக்குள், கையைப்பிடித்து கூட்டிச்செல்ல வேண்டி இருக்கிறது. அவன் முற்றிலும், முழுமையாய், வெறுமையாய் இருக்கிறான்.

இதைத்தான் ஸென் மக்கள் "வெறுமையாக்கப்பட்ட சுயத்தன்மை" என்கிறார்கள்.

**பார்வை தெளிவாக இருக்கிறது.**

**ஆனால் பார்க்க பொருள்கள் இல்லை.**

**ஆள் இல்லை.**

**புத்தர் இல்லை.**

ஒவ்வொன்றும் மறைந்துவிட்டது. ஞானத்தின் அறுதி சிகரத்தை ஸென் அடைந்திருக்கிறது. எனவேதான் ஞானமும் இல்லை என்று அதனால் சொல்ல முடிகிறது. ஏனெனில் "நான் ஞானமடைந்து விட்டேன்" என ஞானமடைந்தவன் எண்ணிக்கொண்டிருந்தால் அவன் ஞானம் பெற்றவன் அல்ல. ஏனெனில் ஒவ்வொரு உரிமை பாராட்டும் அகங்காரத்தினுடையதே. ஞானநிலைபேறு ஒரு உரிமைபாராட்டு அல்ல. அது ஒரு அமைதியான பிரசன்னம்.

பவ்லா, ஸென்னை புரிந்துகொள்ள முயலாதே. உனக்குள் ஆழ்ந்து போ- நீயார், எங்கு இருக்கிறாய் என கண்டுபிடி. அங்கு நீ யாரையும் கண்டுபிடிக்க மாட்டாய். தூய வெறுமையையே காண்பாய். அப்போது பார்வை தெளிவாக இருக்கிறது. ஆளும் இல்லை, ஆண்டவனும் இல்லை. எல்லாமே அமைதி, முற்றிலும் அமைதி, சொல்வதற்கு எதுவுமிருப்பதில்லை. அந்த அமைதியில் ஒருவர் உண்மையே ஆகிறார். ஒருவர் உண்மையை அறிகிறார் என்பதுடன் உண்மையே ஆகிறார். அதை அறியும் ஒரேவழியும் அதுதான்.

**இரண்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**எல்லா கேள்விகளுமே பொய்யானவை, ஏனெனில் அவை மறைமுகமாக விடைகளைக் குறிப்பிடுகின்றன. என்**

**அனுபவத்தில் விடைகள் இல்லை, கண்டுபிடிப்பே உள்ளது. அது அப்படியானால் நீங்கள் ஏன் வினாவிடைகளை வலியுறுத்துகிறீர்கள்? மக்களை, அவர்களின் கேள்விகளுக்கு விடைகள் உள்ளன என தவறாக நம்புமாறு நீங்கள் இட்டுச் செல்லவில்லையா?**

**பிரேம் தர்மா,**

இப்போது உன் கேள்விக்கு நான் என்ன செய்ய வேண்டும்? உனக்கு நான் விடை தந்தால் உன்னை நான் தவறாக இட்டுச்செல்கிறேன். உனக்கு நான் விடை அளிக்காவிட்டால் உனக்கு மரியாதை செலுத்தாதவன் ஆகிவிடுவேன். மேலும் எல்லா கேள்விகளுமே பொய்யானவை என நீ நினைத்தால் ஏன் கஷ்டப்பட்டு கேள்வி கேட்கிறாய்? மறைமுக விடை தரும் எந்த கேள்வியும் பொய்யானதே என நீ நினைத்தால் பின் உன் கேள்வி மட்டும் எந்த விடையையும் மறைமுகமாக கொண்டிருக்கவில்லை என நினைக்கிறாயா? அது மறைமுகமாக விடையை கொண்டிருந்தால் அது பொய்யானது. அல்லது அது உண்மையானது ஆயின் அப்போது அதற்கு விடைகூற முடியாது.

என் அனுபவத்தில் விடைகள் இல்லை, கண்டு பிடிப்பே உள்ளது என்கிறாய்.

ஆயின் விடைகள் என்பன யாவை? அவை வேறு ஒருவரின் கண்டு பிடிப்புகளே: நான் ஒன்றை கண்டுபிடித்திருக்கிறேன். என்னை பொறுத்தவரை அது ஒரு கண்டுபிடிப்பு. நீ ஒரு கேள்வி கேட்கிற போது நான் உனக்கு விடையளிக்கிறேன். உனக்கு அது ஒரு விடைதான். கண்டுபிடிப்பு அல்ல. அது உன் கண்டுபிடிப்பு போல அதை நீ நம்பத் தொடங்கினால் அந்த விடை தவறாக வழிநடத்துவ தாக ஆக முடியும். ஆனால் அந்த விடையை உன் கண்டுபிடிப்பு என நீ நம்பா விட்டால், வேறொருவரின் கண்டுபிடிப்பு அது என்பதை நினைவில் வைத்தபடியே இருந்தால் “நானும் அதை கண்டுபிடிக்க வேண்டும்” என்னும்போது அந்த விடை உன்னை தவறாக வழிநடத்தவில்லை- அந்த விடை பெரிய ஊக்குவிப்பாய் இருக்கிறது. பெரும் பயணத்தை. கண்டுபிடிப்பதற்கான பெரிய யாத்திரையை தொடங்குவதற்கான ஊக்குவிப்பாக இருக்கிறது.

பறவைகள் பிறந்ததும், முட்டைகளில் இருந்து குஞ்சுகள் வந்ததும், அவற்றின் தாய்தந்தைகள் அவற்றை எவ்வாறு பறக்க பழக்குகின்றன என்பதை பார்த்திருக்கிறீர்களா? அதை கவனியுங்கள்- கவனிப்பதற்குரிய மிக அழகான நிகழ்முறைகளில் ஒன்று அது.

ஏனெனில் ஒரு ஆசானுக்கும் சீடருக்கும் இடையிலும் அதேதான் நடக்கிறது. மூத்த பறவைகள் கூட்டை சுற்றி சுற்றி பறக்கின்றன. பறக்கும் கருத்தால், ஆவலால் தூண்டப்படுகின்றன இளம் குஞ்சுகள். தம் இறக்கைகளை அடிக்கத் தொடங்குகின்றன. அவற்றுக்கு சிறிய இறக்கைகளே உள்ளன. ஆனால் அவை சிறகடிக்க தொடங்குகின்றன. தமக்கு இறக்கைகள் இருப்பதை அறியவருகின்றன. தம் தாய், தந்தை மற்றும் மற்ற பறவைகள் கூட்டை சுற்றி பறப்பதை பார்ப்பதாலேயே அவற்றுக்குள் ஒரு மாபெரும் ஆர்வக்கிளர்ச்சி எழுகிறது. அவையும் பறக்க விரும்புகின்றன. அந்தக் கருத்தே அவற்றுக்கு உள்ளுக்குள் கிளர்ச்சி ஊட்டுவதாக இருக்கிறது. தம்மால் முடியுமா என வியக்க தொடங்குகின்றன. பயம் அவற்றைப் பற்றுகிறது. கூட்டின் ஓரம்வரை வருகின்றன- கவனியுங்கள்- சுற்றி முற்றி பார்க்கின்றன. கடினமான தாகவே தோன்றுகிறது. சாத்தியமில்லை என்றே தோன்றுகிறது- அவையே மிகவும் சிறியவை. இதற்கு முன் ஒருபோதும் இத்தகைய காரியத்தை அவை செய்ததில்லை. யாருக்கு தெரியும்?- அவற்றால் செய்ய முடியாமல் போகலாம்; விழுந்துவிடலாம், இறந்துவிடலாம். இது தற்கொலையாக முடியலாம். அப்போது தாய் போய் பக்கத்து மரத்தில் உட்கார்ந்து அவற்றை அழைக்கத் தொடங்குகிறது. அவற்றை தூண்ட தொடங்குகிறது. அவற்றை இணங்கச்செய்யத் தொடங்கு கிறது: "உம், கிளம்பு!"

அதுதான் ஆசான்களின் விடைகளின் வேலை: அது உன்னை நயந்து வேண்டுதற்கே; உன்னை அழைப்பதற்கே: "உம், கிளம்பு! கவலைப்படாதே, பயப்படாதே."

அவையும் முயல்கின்றன, சிறகடிக்கின்றன. ஆனால் பயம் இருக்கிறது- அறியாததைப் பற்றிய பயம். இரண்டையும் அவை ஒரே நேரத்தில் செய்கின்றன. தம் சிறிய வழியில் குதிக்கவும் முயல்கின்றன. தம் கூட்டிலேயே தொற்றி இருக்கவும் பார்க்கின்றன. கூடு பாதுகாப்பானது. இதமானது, வசதியானது; வானமும் காற்றும் பாதுகாப்பு தராதவை... அறியாததற்குள் இன்னும் என்னென்ன இருக்குமோ யாருக்குத் தெரியும்?

இறுதியாக தாய் அவற்றை தள்ளிவிட வேண்டி இருக்கிறது. ஆனால் ஒருதடவை தள்ளிவிட்டதுமே தம்மால் முடிகிற எல்லா முயற்சியையும்அவை செய்தாக வேண்டி இருக்கிறது- திடீரென அவை தம்மால் பறக்க முடிவதை காண்கின்றன. உடனடியாக கூட்டுக்கு திரும்பி வருகின்றன. ஆனால் அவை அடிப்படையிலேயே மாறிவிட்டன- அவற்றின் ஆனந்தத்தை நீங்கள் பார்க்க முடிகிறது.

இப்போது தமக்கு சிறகுகள் இருப்பதையும் அவை வேலை செய்யமுடியும் என்பதையும் அவை அறிகின்றன. இங்கு அளவுக்கு அவை பயப்பட அவசியமில்லை. இப்போது பக்கத்து மரத்துக்கு தாய் போகையில் அவை பின் தொடர்கின்றன. விரைவிலேயே தாயை பின்பற்றிச்செல்ல அவை விரும்புவதில்லை. ஏனெனில் அது மிகவும் சிறுபிள்ளைத்தனமாக தெரிகிறது. தாய் அதன் கூட்டில் இருந்து கொண்டு தாம் தாமாகவே செய்யமுடியும் சாகசத்தை கவனிக்க வேண்டும் என விரும்புகின்றன. மேலும் அவை கூட்டைச் சுற்றி பறக்கின்றன; அடுத்த மரத்துக்கு போகின்றன. அம்மாவை அழைக் கின்றன, "நீயும் வா! பார்த்தாயா, நாங்கள் சமாளித்துவிட்டோம். சாதித்துவிட்டோம்!"

கண்டுபிடிப்பின் வழி இதுதான்.

எல்லாம் உன்னையே பொறுத்திருக்கிறது. பிரேம் தர்மோ. என் விடைகளை உன் விடைகள் என மயங்கினால் உன்னை நீயே ஏமாற்றிக் கொள்கிறாய். நான் உன்னைத் தவறாக வழிநடத்த வில்லை. என் விடைகள் எனதே, உனதல்ல என்பதை ஓயாமல் நீ அறியும்படி செய்து கொண்டுதான் இருக்கிறேன், நான். ஆக என் விடைகளை நம்புமாறு உன்னிடம் சொல்லவில்லை; விடைகள் சாத்தியமே என்பதை சொல்லிக்கொண்டு மட்டுமே இருக்கிறேன். எனக்கு அவை சாத்தியமானால் உனக்கும் வித்தியம்தான். என்னால் செய்ய முடிவதை உன்னாலும் செய்யமுடியும்; ஏனெனில் உன்னைப் போலவே நானும் சாமானியன்தான்.

எனவேதான் (கடவுளின்) அவதாரங்கள் எனப்படும் மரபுக்கருத்து முழுவதற்கும் நான் எதிராக இருக்கிறேன். இயேசு கடவுளின் மகன் என்னும் கருத்துக்கு எதிராக இருக்கிறேன். அவர் கடவுளின் மகன் என்பதை விட ஜோசப் ஆசாரியின் மகன் என்பதையே விரும்புவேன். ஏனெனில் அவர் கடவுளின் ஒரேபேறான குமாரன் என்றால், முற்றிலும் வேறு விதமான ஆளாகிறார் அவர். அப்படியானால் அவர் செய்வதை உங்களால் செய்ய முடியாது. அவர் நீர்மேல் நடப்பார், உங்களால் முடியாது. இறந்தவர்களை கல்லறைகளில் இருந்து எழுப்பிக்கொண்டுவந்து உயிர்கொடுக்க அவரால்முடியும், உங்களால் முடியாது. அவர் சிறப்பானவர், நீங்கள் சாமானியர் என்று வலியுறுத்தவே இந்தக் கதைகள் எல்லாம் உண்டாக்கப்பட்டன. இந்தக் கதைகள் யாவும் பொய்யானவை. சமயத்தன்மை அற்றவை. ஆபத்தானவை. இவை மனித குலத்துக்கு உதவவில்லை. இவை மனித குலத்தை

தரம்தாழ்த்தியே உள்ளன. இவை உங்களை கேவலப்படுத்துகின்றன, உங்களை அவமானப்படுத்தி உள்ளன.

கிருஷ்ணரும் ராமரும் புத்தரும்கடவுளின் அவதாரங்கள் என இந்துக்கள் சொல்கிறார்கள். கடவுளுமே மேலிருந்து, அப்பாலிருந்து தான் வருகிறார். அவர்கள் விசேசமானவர்கள். அவர்கள் செய்வதை உங்களால் செய்யமுடியாது. கண்ணன் பெரிய மலையையும் தன் உள்ளங்கையில் தூக்க முடியும். உங்களால் அது முடியாது. அவனால் அற்புதங்கள் புரியமுடியும், உங்களால் முடியாது.

புரோகிதர்கள் கண்டுபிடித்த சூழ்ச்சிக் கதைகள் இவை. உங்களுக்கும் கிருஷ்ணனுக்கும் இடையில், உங்களுக்கும் புத்தருக்கும் இடையில், உங்களுக்கும் மகாவீரருக்கும் இடையில் ஒரு இடைவெளியை உருவாக்கவும், உங்கள் எல்லைகளை நீங்கள் நன்றாக உணரும்படி ஒரு சிறப்புபிரிவை உண்டாக்கவும் இப்படி செய்தார்கள்.

கிருஷ்ணனும் உங்களைப் போலவே ஒரு மனிதன்தான் என்னும் உண்மையை நான் வலியுறுத்தி கூறுகிறேன். அவனிடம் எந்த சிறப்பும் கிடையாது. உங்களுக்கு உணவு தேவைப்படுவது போலவே அவனுக்கும் தேவைப்பட்டது. உங்களுக்கு தண்ணீர் தேவைப்படும் விதத்திலேயே அவனுக்கும் தண்ணீர் தேவைப்பட்டது. உங்களுக்கு தூக்கம் தேவைப்படும் விதத்திலேயே அவனுக்கும் தூக்கம் தேவைப்பட்டது. நீங்கள் சாகும் விதத்திலேயே அவனும் செத்தான். ஒரே வேறுபாடு. அவன்தன் எல்லையற்ற உள்ளாற்றலை உணர்ந்திருந்தான். நீங்கள் உங்கள் எல்லையற்ற உள்ளாற்றலை உணராதிருக்கிறீர்கள். உள்ளாற்றலில் வேறுபாடு இல்லை. ஆனால் அதை நீங்கள் உணரவில்லை, அவன் உணர்ந்திருக்கிறான்- அது ஒன்றே வேறுபாடு. ஒரு வேறுபாட்டை ஏற்படுத்தும் வேறுபாடுதான் அது; ஆனால் அவனை தனித்த வகையாக ஆக்க முடிகிற வேறுபாடல்ல அது. யாருமே தனிச்சிறப்பான வகைப்பிரிவை சேர்ந்தவர் அல்ல. யாருமே மேலிருந்து வரவில்லை. எல்லோருமே கீழிருந்து வளருபவர்களே. வாழ்க்கை ஒரு வளர்ச்சி. உங்கள் மனிதத்தில் இருந்து உங்கள் புனிதத்துக்கு நீங்கள் வளர்ந்து கொண்டு இருக்கிறீர்கள். நான்யார் என்பதை என்னால் கண்டுபிடிக்க முடிந்தால், நீங்களும் உங்களை கண்டுபிடிக்க முடியும்.

இந்த விடைகள் எல்லாம் கோட்பாடுகள் ஆக்க அல்ல; நம்பிக்கைகளாக ஆக்க அல்ல. நான் எந்த மதக்கோட்பாட்டையும்

உங்களுக்கு போதிக்கவில்லை- எல்லா மதப்பிரிவுகளுக்கும் நான் முற்றிலும் எதிரானவன். அப்படியானால் நான் என்ன செய்துகொண்டு இருக்கிறேன்? மனிதரால் இது ஆகும் என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்ளும்படி செய்ய முயல்வதற்கு மட்டுமே இருக்கிறேன். கிருஷ்ணர், புத்தர், இயேசு மற்றும் எவரையும் போலவே நீங்களும் தெய்வீகமானவர்களே. நீங்கள் தூங்கி விட்டீர்கள், பயங்கர தீக்கனவுகளை கண்டு கொண்டிருக்கிறீர்கள். விழித்துக் கொள்ளுங்கள்! போதும். தேவையானதெல்லாம் ஒரு விழித்தெழுதலே.

ஆனால் பிரேம் தர்மோ, நீ ஒரு தத்துவ மாதிரியான ஆள் என தோன்றுகிறது. தத்துவமாதிரி ஆள் சாதகபாதகங்களைப்பற்றி அசைபோட்டுக் கொண்டே இருக்கிறான். ஒவ்வொன்றைக் குறித்தும் எண்ணிக்கொண்டே போகிறான். ஆனால் இந்த இடம் நீ அதிகம் சிந்திப்பதற்கான இடம் அல்ல; சிந்தனை அற்ற மோன நிலைக்குள் குதித்து விடுவதற்கான இடம். ஏனெனில் சிந்தனை என்பது கிளிப்பிள்ளைத்தனமானது, நீ ஒரு கேள்வி கேட்டாய் என்பதை நீ காண முடியவில்லையா? நீ ஒரு விடையை கேட்கிறாய். ஆனால் எல்லா விடைகளும் தவறாக இட்டுச்செல்பவை, தவறாக வழிநடத்து பவை என நினைக்கிறாய்- இருந்தாலும் கேட்டுக்கொண்டு இருக்கிறாய்! மனதின் தத்துவரீதியான சிக்கல்பாட்டை நீ காண்கிறாயா? அதன் விளையாட்டைப் பார்க்கிறாயா?

ஒரு நாடோடி யூதன் பாரிசை சுற்றிப்பார்க்கிறான். ஒரு வளர்ப்புப்பிராணிகள் கடையை கடக்கிறான். சன்னலில் ஒரு அறிவிப்பை கவனிக்கிறான். கடையில் இருக்கும் ஒரு கிளி பல மொழிகளை பேசுகிறது என்று அது கூறுகிறது. தன்னை ஒரு பன்மொழிப் புலவனாக கருதிக்கொண்ட யூதன் ("Yeedil") கடைக்குள் நுழைகிறான். மெதுமெதுவாக அந்த அதிசயப் பறவையை நெருங்குகிறான். கூண்டின் பக்கம் நின்றபடி பறவையை ஒரு நோட்டம் விடுகிறான்.

தொண்டையை செருமிக்கொண்டு கிளியை சோதனை செய்கிறான்.

"Parlez-vous francais?"

"Parlez-vous francais?" என்கிறது.

"speak English?"

"speak English?" என்கிறது.

"Govarish po rusku?" என்கிறான் அவன்.

"Govarish po rusku?" என்கிறது கிளி.

பின் யூதன் பறவைக்கு கிட்டே போய், தொண்டையை செருமி மறுபடியும் ரகசியகுரலில் கேட்கிறான், 'க்ம்....! சின்னபறவையே. நீ இவ்வளவு புத்திசாலின்னா, யிட்டிஷ் (மொழி) பேசுவாயா? சொல்லு பார்ப்போம்?"

பறவை யூதனை ஒரு நோட்டம் விடுகிறது. தொண்டையை செருமுகிறது. தன் சிறகால் தன் அலகை காட்டி சொல்கிறது: "Nu... இப்படி ஒரு மூக்கை வைத்துக்கொண்டு என்னால் யிட்டிஷ் பேச முடியாதென்றா நினைக்கிறாய்?"

தத்துவர்களை விட கிளிகள் எவ்வளவோ மேல்! அவற்றுக்கு அதிகப் புரிதல், அதிக உள்ளொளி உள்ளது. மனிதன் கருத்துகளால் சுமையேறி தான் செய்து கொண்டிருப்பது இன்னது என்பதையே முற்றிலுமாக மறந்திருக்கிறான்.

கொஞ்சம் கூடுதல் விழிப்பாயிரு, பிரேம்தர்மோ. இங்கு என்ன நடக்கிறது என்று பார். நிச்சயம் உன்னிடமிருந்து நான் கேள்விகளை வலியுறுத்துவேன். ஏனெனில் கேள்விகள் உள்ளன என்பதை அறிவேன். நீ கேள்விகளால் நிறைந்திருக்கிறாய்- இது இயல்பே- அதை வெளிக் கொண்டு வருவது நல்லதே. என் விடைகள் உன் விடைகள் ஆகாது. ஆனால் விடைகள் சாத்தியமே என்பதை நீ பார்ப் பதற்கு என் விடைகள் உனக்கு உதவமுடியும். எல்லா கேள்விகளும் மறைந்து, வாழ்க்கை மேற்கொண்டும் ஒரு பிரச்சனையாக இல்லாமல் போகிற ஒரு இடத்துக்கு நீ வரமுடியும். பிரச்சனைகள் அனைத்தும் மறைந்ததும் வாழ்க்கை அதன் பின் ஒரு பிரச்சனை அல்ல; வாழவும் நேசிக்கவும் பாடவும் ஆடவும் தக்க ஒரு புதிர்.

**மூன்றாவது கேள்வி:**

**ஓஷோ,**

**2 சிறு கேள்விகள் மட்டும்.**

**முதலாவது: ஒரு மின்பல்பை பொருத்த எத்தனை உளவியலாளர்கள் தேவைப்படுவர்?**

**ஆனந்த நாராயண்.**

ஒரே ஒருவர். ஆனால் அந்த பல்பு தான் மாற விரும்பித் தீர வேண்டியதாயிருக்கும்!

இரண்டாவது:

ஒரு மின்பல்பை பொருத்த எத்தனை விழிப்படைந்தவர்கள் தேவைப்படுவர்?

ஒருவரும் தேவையில்லை. ஏனெனில் ஏற்கெனவே அவர்கள் தமக்குத் தாமே ஒளியாய் இருக்கிறார்கள்!

**நான்காவது கேள்வி:**

**ஓஷோ,**

**எந்தக் கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டும்என்பதை எப்படி நீங்கள் தீர்மானிக்கிறீர்கள்?**

**ஆனந்த அபூர்வோ.**

**அ**து ஒரு ரகசியம்! ஒரு குறிப்பு மட்டும் தருவேன். முழு ரகசியத்தையும் விளக்க மாட்டேன். நீயே அதை கண்டுபிடித்துக் கொள்ள வேண்டியது.

ஒரு பாதிரி, ஒரு பாஸ்டர், ஒரு ராபி ஆகியோர் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். தம் அன்றாட உணவை கடவுள் தமக்கு எவ்வாறு அளிக்கிறார் என்பதை ஒருவரிடம் ஒருவர் தெரிவித்துக் கொண்டார்கள்.

பாதிரி விளக்குகிறார்: "ஒவ்வொரு ஞாயிறும் சர்ச்சில் (காணிக்கைத்) தட்டு சுற்றிவந்ததும் அதை அடியில் ஓட்டை உள்ள ஒரு பெட்டியில் கொட்டுவேன். தரையில் விழுவது எனக்கு. மீதம் கடவுளுக்கு."

பாஸ்டர் தன் வாராந்திர கைச்செலவுக்கு பணம் எடுக்கும் விதம் வேறுமாதிரி இருந்தது. அவர் சொல்கிறார்: "தரையில் ஒரு கோடு வரைகிறேன். ஒரு மீட்டர் உயரத்திலிருந்து ஞாயிறு வசூலை கொட்டுகிறேன். இடதுபக்கம் விழும் பணம் எனக்கு, வலது பக்கம் விழுவது கடவுளுக்கு."

ராபி கூறுகிறார்: "என் முறை மிகவும் எளிதானது. பணத்தை காற்றில் வாரி இறைக்கிறேன்; தனக்கு எவ்வளவு தேவையோ அதை கடவுள் எடுத்துக் கொள்ள முடியும்- அவ்வளவுதான்...."

**ஐந்தாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் நியூயார்க் யூதனாக பிறந்தேன்.கலிபோர்னியாவில் 17 ஆண்டுகள், 4 வெவ்வேறு படித்த உத்தியோகங்களிலும்**

**ஏராளமான துணைத் தொழில்களிலும் ஒரு வெற்றிபெறாத திருமணத்திலும் நம்பிக்கையுடன் சுற்றி அலுத்திருக்கிறேன். மகிழ்ச்சியும் திருப்தியும்– சில கணங்களில் தவிர. ஒருபோதும் எனக்கு அனுபவமானதில்லை. உள்ளூர நம்பிக்கையிழந் திருக்கிறேன். தயவுசெய்து உங்கள் கருத்தையோ அல்லது பொருத்தமான சில சிரிப்பையோ சொல்லவும்.**

**அபூர்வோ.**

ஹென்ரிச் ஹைன் கூறுகிறார்: "தூங்குவது நல்லது. சாவது அதைவிட நல்லது. ஆனால் பிறக்காமலே இருந்திருப்பதுதான். எல்லாவற்றையும்விட நல்லது."

வாழ்க்கை நிச்சயமாக ஒரு பிரச்சனைதான். அதிலும் நியூயார்க்கில் அதுவும் ஒரு யூதனுக்கு அது மிகவும் நிச்சயமாக பிரச்சனைதான். வேறு யாரையும்விட யூதர்களுக்கு வாழ்க்கை அதிக பிரச்சனையாகவே எப்போதும் இருந்து வந்துள்ளது. இதற்கான எளிய காரணம், தாம் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்ற கிறுக்குத் தனமான கருத்தை அவர்கள் பெற்றிருப்பதுதான். அது அவர்களின் வாழ்வை அசாத்தியமானதாக ஆக்குகிறது. இத்தகைய கிறுக்குத்தனமான யோசனைகளை கைவிட வேண்டி இருக்கிறது. கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் யாருமில்லை. இந்த அபத்தத்தால் யூதர்கள் துன்பமடைந்திருக்கிறார்கள். ஏனெனில் இதனால் அவர்களை ஒவ்வொருவரும் வெறுக்கிறார். நீங்கள்தான் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்றால் எல்லோரும் உங்களை வெறுப்பார்கள். ஒவ்வொருவரும் உங்களிடம் குறைகாண முயல்கிறார்கள். நீங்கள் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் அல்ல என்பதை உங்களுக்கு நிரூபிக்க முயல்கிறார்கள்.

மூவாயிரம் ஆண்டுகளாக இந்த அகங்கார நிலைபாட்டை யூதர்கள் வலியுறுத்தி வந்திருக்கிறார்கள். மேலும் இதில் இவர்கள் மட்டும் தனியாக இல்லை. இன்னொரு மக்களும் இருக்கிறார்கள். அவர்களே இந்துக்கள். இவர்களும் தம் நாடே மிகவும் புண்ணியபூமி எனநினைக்கிறார்கள். அதற்காக அவர்கள் அனுபவித்திருக்கிறார்கள். அவர்களின் புனித மண்ணையும் அவர்களின் துன்பத்தையும் நீ பார்க்க முடியும்.

நீ ஒரு யூதன் என்னும் கருத்தை விட்டுவிட இதுவே தருணம். நீ சந்நியாசியாக இருந்தால் நீ இந்துவோ முஸ்லீமோ கிறித்தவனோ யூதனோ அல்ல; ஒரு மனிதப்பிறவி மட்டுமே. அந்தக் கருத்தை கைவிட்டாலே நீ சுமையிறங்கியவனாக உணர்வாய். இல்லா

விட்டால் ஒரு மூவாயிரமாண்டு பாரம் இருக்கும். மிக நீண்டகால சுமையை- மரபின் சுமையை- வழிவழி வந்த சுமையை தூக்கி சுமந்துகொண்டிருக்கிறார்கள் யூதர்கள். அந்தச் சுமையுடன் மிகவும் பாசம்கொண்டுவிட்டார்கள். அது இல்லாமல் வாழமுடியாமல் போகிறது.

உன் திருமணம் வெற்றிபெறவில்லை என்கிறாய். வெற்றிபெற்ற திருமணம் எதையாவது எப்போதாவது நீ கேள்விப்பட்டதுண்டா? நான் கேள்விப் பட்டதில்லையப்பா! திருமணங்கள் வெற்றிகரமாக அமைந்தால் உலகில் சந்நியாசம் ஏற்பட்டிருக்காது. உண்மையில் மதமே இருந்திருக்காது. திருமணம் வெற்றி பெற்றுவிடக்கூடாது என்பதை ஆதியில் இருந்தே கடவுள் சர்வநிச்சயமாக ஆக்கிவிட்டார். திருமணம் வெற்றிபெற்றால் கடவுள் தோற்றவராவார்! திருமணத்தின் தோல்வியையே மதம் முழுக்க சார்ந்துள்ளது. நீ மகிழ்ச்சியாயிருந்தால், ஆனந்தமாயிருந்தால், மறு உலகைப்பற்றி யாருக்கு கவலை? உலகம் முழுதும் துன்பமயாயிருக்கிறது- எனவே மறுஉலகை நம்ப நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நீ நம்ப வேண்டியே இருக்கிறது. அது ஒன்றே ஆறுதலாக, ஒரே தேறுதலாக இருக்கிறது.

"மக்கள் உண்மையிலேயே மகிழ்ச்சியாக இருந்தால், உலகில் இருந்து மதம் மறைந்துவிடும்" என்கிறார் பெர்ட்ரண்ட் ரசல். அவர் கூறியது சரியே. 99% அவருடன் நான் உடன்படுகிறேன். ஒரே ஒரு சதவீதம் அவரை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். அவர் ஒரு நாத்திகர். ஆனால் அவர் 99% சரியாகவே கூறுகிறார். மதம்சார்ந்த 99% மக்கள் தவறான காரணங்களுக்காகவே மதத்தை சார்ந்திருக்கிறார்கள்- அவர்களின் திருமணம் வெற்றிபெறவில்லை. அவர்களின் பேராசை நிராசையைக் கொண்டு வருகிறது. வாழ்நாள் முழுவதையும் பணம், அந்தஸ்து, அதிகாரம் ஆகியவற்றை சம்பாதிப்பதில் அவர்கள் வீணாக்கிவிடுகிறார்கள், பின்னும் பழைய வெறுமையே, அதே அர்த்தமின்மையே. அதே உள்ளீடற்ற தன்மையே மிஞ்சுகிறது. எதுவும் அறவே மாறவில்லை. வாழ்வு போய்விட்டது, சாவு கதவை தட்டுகிறது. ஆனால் எதுவுமே நிறைவுதரவில்லை. எனவேதான் மக்கள் மதத்தில் இருக்கிறார்கள்.

மக்கள் தம் அவலத்தினால் தான் மதத்தில் இருக்கிறார்கள். எனவே உங்கள் அவலத்தில்தான் புரோகிதர்களின் நலன்கள் உள்ளன என்பதை நினைவில் வையுங்கள். எனவே உங்கள் வாழ்க்கை மகிழ்ச்சியாக, ஆனந்தமாக இருப்பதை அவர்கள் விரும்பமாட்

டார்கள். நீங்கள் மகிழ்ச்சியாக, பரவசமாக இருந்தால் அவர்களின் மதங்கள் எல்லாம் மறைந்துவிடும். உங்கள் அமைதியற்ற (dis-ease) நிலைமையைதான். உங்கள் நோய்க்கூறான நிலைமையைதான். உங்கள் நிம்மதியற்ற நிலைமையைதான். உங்கள் பதற்றத்தைதான், வேதனையைதான் அவர்களின் மதம் சார்ந்திருக்கிறது.

உலகில் உள்ள மதவாதிகள் யாவரும் திருமணத்தை ஆதரிக்கிறார்களே- ஏன்? இதற்கு ஒரே காரணம் திருமணம் தோற்று விடுகிறது! திருமணம் தோற்றதும் நீங்கள் எங்கு போக வேண்டியிருக்கும்? சாமியாரிடம். வெற்றிபெறும் ஆசையை உங்களில் உருவாக்கும் கல்வி அமைப்புகளை எல்லா பூசாரிகளும் நுட்பமான முறையில் ஆதரிக்கிறார்கள். உலகில் பெருவாரியாக இருக்கும் கல்விமுறைகள் யாவும் அகங்கார உலாக்களை உருவாக்குவதற்கான- பேராசை மனங்களை படைப்பதற்கான- திட்டங்களே தவிர வேறல்ல. மதவாதிகளும் அரசியல்வாதிகளும் இன்றைய கல்விமுறையை ஆதரிக்க காரணம், பேராசையை உங்களில் கொழுந்துவிட்டெரியும்படி தூண்டவில்லை என்றால் அரசியலே இருக்காது. உங்களில் பேராசையை தூண்டவில்லை என்றால் ஒருபோதும் நிராசை அடைய மாட்டீர்கள். பேராசையற்ற மனிதர் ஒருபோதும் நிராசை அடைவதில்லை. அவர் ஏன் நிராசை அடைய வேண்டும்? முதற்கண் எதையுமே அவர் எதிர்பார்க்க வில்லையே, அவரை நீங்கள் மனக்கசப்பு அடையச்செய்ய முடியாது.

லாவோ சு கூறுகிறார்: நீங்கள் என்னை தோல்வியுற செய்ய முடியாது. ஏனெனில் நான் வெற்றிபெறவே விரும்பவில்லை. இயேசு சொல்கிறார்: கடைசி யானோர் பேறுபெற்றவர்கள்.இப்படி சொல்பவர்கள் பயங்கரவாதிகளே. அவர்களை சிலுவையில் அறையத்தான் வேண்டியிருக்கிறது. ஏனெனில் இந்த சமுதாயத்தின் மொத்த கட்டுமானத்தையும் அவர்கள் நாசமாக்கி விடுவார்கள். மதகுரு அமைப்பையும் அரசியல்வாதிகளின் அதிகாரத்தையும் அவர்கள் அழித்து விடுவார்கள். "கடைசியானோர் பேறுபெற்றோர்" என்னும் இந்தக் கருத்து பரவினால், பின் ஒரு நாட்டுக்கு யார் ஜனாதிபதியாக விரும்புவார்?- முட்டாள்கள் மட்டுமே. மடையர்கள் மட்டுமே விரும்புவார்கள்! இப்பவும் மூடர்கள் மட்டுமே ஜனாதிபதிகளாகவும் பிரதமர்களாகவும் ஆகவிரும்புகிறார்கள். ஆனால் அவர்களை (மட்டும்) மடையர் என எண்ணாதீர்கள். நீங்களும் அதேவழிகளில் களங்கப்பட்டு- விஷமேறித்தான் இருக்கிறீர்கள். அவர்களை நீங்கள் மதிக்கிறீர்கள். அவர்கள் வெற்றி

பெற்றுவிட்டார்கள் என்றும், லட்சியங்களை சாதித்துவிட்டார்கள் என்றும் எண்ணுகிறீர்கள். அவர்களின் பெயர்கள் வரலாற்றில் நிற்கும். அதனால் என்ன? அவர்களின் மடப்பெயர்களை மனப்பாடம் செய்யுமாறு சிறு குழந்தைகளை அவர்கள் சித்திரவதை செய்வார்கள். அவ்வளவுதான். அவர்களின் முயற்சிகளின் மொத்த சாதனையும் சிறு குழந்தைகளை வாட்டி வதைப்பது தவிர வேறில்லை!

புரோகிதர்கள் எனக்கு எதிராக இருக்கிறார்கள். அரசியலார் எனக்கு எதிராக இருக்கிறார்கள். இதற்கான ஒரேகாரணம், நான் உங்களுக்கு ஒரு பேராசையற்ற வாழ்வை- அகங்காரமற்ற வாழ்வை கற்பிக்கிறேன் என்பதுதான்; மேலும் திருமணம் தோற்றே தீரும் என்று போதிப்பதுதான். எனவேதான் மகிழ்ச்சியாகவும் பரவசமாகவும் இருக்க நீங்கள் விரும்பினால் அன்பே போதும்; திருமணம் அனாவசியம்.

அன்பே போதும். எனவே அன்பு நீடித்தால் நல்லது; சேர்ந்திருங்கள். அன்பு மறைந்ததும் ஆழமான நன்றி உணர்வுடன் விடைபெறுங்கள். ஆனால் ஒருவர்மீது ஒருவர் தொற்றி இராதீர்கள். திருமணமோ ஒரு தொற்றுதான்.

மேலும் உங்கள் குருமார்களின் தர்க்கமற்ற தன்மையை ஒருபோதும் நீங்கள் பார்க்கிறதில்லை. ஒருபுறம் அவர்கள் "பற்றுவிடுதலை" பற்றி சொல்கிறார்கள். மறுபுறம் திருமணத்தை போதிக்கிறார்கள். கலியாணம் என்பது பற்றுதல்தான்- சட்டபூர்வமாக கைப்பற்றுதல். அது பற்றுதல் மட்டுமல்ல, அதற்க சட்டம் வேறு உறுதுணையாக உள்ளது. கோர்ட்டும் போலீசும் நீதிபதியும் அதன் பின்புல ஆதரவாளர்கள். உன் மனைவியை நீ விட்டுச்செல்ல விரும்பினால் உனக்கு தொல்லை உண்டாகும். உன் மனைவியுடன் வாழ்வதும் உனக்கு தொல்லைதான். அவளை விட்டு செல்ல விரும்பினாலும் தொல்லைதான். எனவே இரண்டு வழியிலும் தொல்லைதான் என்றால் ஏன் பழகிய பழைய தொல்லையை, மரபுரீதி தொல்லையை, வழக்கமான தொல்லையையே ஏற்றமையக்கூடாது என முடிவுசெய்கிறாய். ஏன் தனிப்பட்ட அந்தரங்க தொல்லைகளை உண்டாக்கிக் கொள்வது? அவை அதில் ஆபத்தானவை- ஏனெனில் ஒவ்வொருவரும் உனக்கு எதிராகி விடுவார்கள்.

நீ சொல்கிறாய்: மகிழ்ச்சியும் திருப்தியும்- சில கணங்களில் தவிர- ஒருபோதும் எனக்கு அனுபவமானதில்லை.

ஆம்-இந்த வாழ்வில், இந்த வாழ்வை நாம் ஆக்கிவைத்திருக்கும் விதத்தில், அவை சில அனுபவமாகவே இருக்கமுடியும். அதுவே பெரிய அதிசயம்- எப்படி அந்த சில கணங்களுக்கும் கூட அந்த அனுபவங்கள் நிகழ முடிகிறது என்பதே நம்பமுடியாததுதான். ஏனெனில் நீங்கள் ஆக்கப்பட்டிருக்கும்- தளைப்படுத்தப்பட்டிருக்கும்- விதமானது அந்தக் கணங்களைக் கூட அனுமதிக்காது. துன்பத்திலேயே நீங்கள் இருந்தாக வேண்டும். பேராசை, அகங்காரம், கலியாணம், பணம், அதிகாரம்- இக்கருத்துகள் எல்லாம் உங்களை அவலத்தில் இருத்தியே தீரும். இவற்றில் நீங்கள் ஆனந்தமாயிருக்க முடியாது; உங்களை ஆனந்தமாக ஆக்க முடியும் ஒரே விஷயம், எங்கும் ஒருபோதும் போதிக்கப்படுவதில்லை- அந்த விஷயமே தியானம். அதுவே ஸென். அது எங்கும் சொல்லித் தரப்படுவதில்லை. தியானம் என்றாலே மக்கள் நிஜமாகவே பயப்படுகிறார்கள்- ஏன் என்றால் அது உங்களின் வாழ்க்கை முழுவதையும் நிலைமாற்றி விடும்.

அபூர்வோ, தியானி, உன்னுள் ஆழமாகப்போ. எல்லா தொழில்களையும் பார்த்தவன் நீ, திருமணத்தையும் பார்த்து விட்டவன். மேற்கில் உனக்கு கிடைக்க முடியும் ஒவ்வொன்றையும் முயன்று பார்த்துவிட்டவன் நீ. இப்போது தியானத்தை முயன்று பார். உன்னுள் ஆழமாக போ. உன் சொந்த தனிமைக்குள் உன் சொந்த ஏகாந்தத்துக்குள் ஆழமாகப்போ. உன் ஜீவனின் மையத்தை கண்டுபிடி. அங்குதான் நிரந்தரப் பரவசம் குடியிருக்கிறது. இந்த கணத்திலும் அது அங்கு இருக்கிறது. எப்போதும் அது அங்கு இருக்கிறது. அதனுடனான தொடர்பை நாம் இழந்து விட்டிருக் கிறோம். அவ்வளவே, அதை கண்டுபிடிக்க வேண்டும், அல்லது மறுபடியும் கண்டு கொள்ளவேண்டும்.

உள்ளூற நம்பிக்கை இழந்திருக்கிறேன் என்கிறாய்.

யூதனுக்கு அது அழகல்லவே! எப்பேர்ப்பட்ட பிரச்சனையில் இருந்தும் வெளியேற யூதர்கள் எப்போதும் ஒரு வழியை கண்டு பிடித்துவிடுகிறார்கள். மூவாயிரம் ஆண்டுகளாக அதைத்தான் அவர்கள் செய்து வந்திருக்கிறார்கள்.

திருமதி ரூபின்ஸ்டீனின் இளைய மகனுக்காக திரு கோல்டுபர்க் அவளிடம் ஒரு பேண்ட்- சட்டையை விற்க முயன்று கொண்டிருந்தார். "இதை எடுத்துக்குங்கம்மா" என்றார் அவர். "முதல்தரமானது. உங்களுக்கு கட்டுப்படியான விலை போட்டுத் தருகிறேன்."

அந்த உடைகளை பையன்மேல் வைத்துப்பார்த்தாள். அளவு சரியாக இருந்தது, எனவே வாங்கிக்கொண்டாள்.

முதல் சலவையின்பின் அது கொஞ்சம் சுருங்கிவிட்டதை திருமதி ரூபின்ஸ்டீன் கண்டாள். எனவே மகனுக்கு அணிவித்துப் பார்த்தாள். சட்டைக்கை பையனின் முழங்கை வரையும் பேண்ட்கால் அவனின் முட்டுகள் வரையுமே வந்தன.

அவளுக்கு ஆத்திரம் பீறிட்டது இயல்பே. மகனை இழுத்துக் கொண்டு தையல்காரர் கடைக்கு கோபத்துடன் அடிவைத்து நடந்தாள். கடைக்குள் நுழைந்ததுமே திரு. கோல்டுபர்க் நிமிர்ந்து பார்த்து சொன்னார், "அடேங்கப்பா! பையன் அதற்குள் என்னமாய் வளர்ந்துவிட்டான்!"

நம்பிக்கை இழப்பது ஒரு யூதனின் பண்பு அல்ல.

இரண்டு மனிதர்கள் நம்பிக்கை வாதம்- அவநம்பிக்கைவாதம் என்பதை விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒருவன் மற்றவனிடம் சொன்னான், "சரி, ஒரு நிசமான நம்பிக்கை வாதியை எப்போதாவது நீ நேருக்குநேர் சந்தித்திருக்கிறாயா?"

"ஆம்" என்றான் மற்றவன். "நான் என் நாலாவது மாடியின் உப்பரிகையில் நின்றுகொண்டிருந்தேன். அப்போது யூதனா ஒரு சன்னல் துடைப்பாளி இருபதாவது மாடியில் இருந்து தவறி கீழே விழுந்து கொண்டிருந்ததை பார்த்தேன்."

"இது எப்படி அவனை ஒரு நம்பிக்கைவாதியாக காட்டுகிறது?" என்று வினவினான் நண்பன்.

"எப்படியென்றால், அவன் வீழ்ந்துகொண்டே வந்து என் மாடியை தாண்டி விழும்போது இதுவரை பிரச்சனையில்லை!' என்று சொன்னது என் காதில் விழுந்தது!"

ஒரு அமெரிக்கனும் ஒரு ஆங்கிலனும் ஒரு யூதனும் ஒரு சிறு ஜெர்மன் விமானத்தில் இருந்தார்கள். அப்போது பயங்கர சூறாவளி ஒன்று அவர்களை தாக்கியது. கேபின் அறையில் இருந்த விமானி அலறினான். "உங்களில் ஒருவர் விமானத்தில் இருந்து குதிக்கவேண்டும். ஏனென்றால் மிகவும் கனமாக உள்ளது!"

யார் தம் உயிரை தியாகம் செய்வது என்பதை தீர்மானிக்க அவர்கள் முயன்றார்கள். ஆனால் மூவருக்குமே சம்மதமில்லை. விமானி இடையில் புகுந்து சொன்னான், "உங்கள் ஒவ்வொரு

வரிடமும் ஒரு கேள்வி கேட்பேன். விடைதெரியாத ஆள் விமானத்தில் இருந்து குதித்துவிட வேண்டும்.''

அமெரிக்கனிடம் அவன் கேட்டான், ''இரோசிமாமீது எந்த தேதியில் அணுகுண்டு வீசப்பட்டது?''

''1945, ஆகஸ்ட் 6'' என அமெரிக்கன் விடைசொன்னான்.

அடுத்து ஆங்கிலேயனைக் கேட்டான் விமானி, ''அந்தச் சம்பவத்தில் எத்தனை பேர் கொல்லப்பட்டார்கள்?''

''250 ஆயிரம் பேர்'' என பதில் வந்தது.

இறுதியாக யூதனைக் கேட்டான் ''அவர்களின் பெயர்களையும் முகவரிகளையும் சொல்ல முடியுமா?''

அவசரப்படாதீர்கள்!

அதற்கு யூதன் பலியான 250,000 பேர்களின் பெயர்களையும் முகவரிகளையும் தர ஆரம்பித்தான்! யூதனிடமிருந்து தப்பிப்பதற்காக அமெரிக்கனும் ஆங்கிலேயனும் விமானத்தில் இருந்து குதித்துவிட்டார்கள். இறுதியில் அவன் நிறுத்தாவிட்டால், தானும் விமானத்தில் இருந்து குதித்துவிடப் போவதாக விமானி அச்சுறுத்தி அவன் வாயை மூடவேண்டியதாயிற்று!

யூதனாவது நம்பிக்கை இழப்பதாவது! ஒருபோதும் இல்லை! எப்போதுமே யூதன் ஏதாவது ஒரு வழியை கண்டுபிடித்து விடுகிறான்.

மேலும் நீ சொல்கிறாய்: தயவுசெய்து உங்கள் கருத்தையோ அல்லது பொருத்தமான சில சிரிப்பையோ சொல்லவும்.

பொருத்தமான சிரிப்புகளா? அதை என் வாழ்க்கையில் ஒருபோதும் நான் செய்ததில்லை. இனி செய்யப்போவதுமில்லை- எப்போதும் பொருத்தமற்ற சிரிப்புகளையே நான் சொல்கிறேன். இப்போது சில பொருத்தமற்ற சிரிப்புகளைச் சொல்கிறேன்.

விடுமுறையில் டார்ஜான் நகருக்கு செல்கிறான். திரும்ப வனத்துக்கு வந்ததும் அவனது சிம்பன்சி நண்பனான ச்சீட்டா அவனை சந்தித்து கூறுகிறது. ''டார்ஜான், டார்ஜான்! எல்லா மிருகங்களும் கலகத்தில் ஈடுபட்டுள்ளன. அவை உன்னை மறந்துவிட்டன. எங்கும் ஒரே கலவரமாகவே இருக்கிறது!''

கோபத்துடன் காட்டின் மையத்துக்கு விரைகிற டார்ஜான் அங்கு ஒரு சிங்கத்தை சந்திக்கிறான். அதை பற்றித்தூக்கி அதன் கண்களை நேருக்குநேராக பார்த்தபடி கேட்கிறான், ''நான் யார் தெரியுமா?''

"தெரியுமே" என்கிறது சிங்கம், "நீங்கள்தான் காட்டுக்கு ராஜா!"

இன்னும் டார்ஜானுக்கு திருப்தி ஏற்படவில்லை. எனவே ஒரு சிவிங்கியை சந்தித்ததும் அதன் கழுத்தைப் பிடித்து நெரித்து மறுபடியும் கேட்கிறான், "சொல்- நான் யார்?"

நடுங்கியபடி சிவிங்கி சொல்கிறது. "தாங்கள் டார்ஜான் வன-ராஜா!"

பின் ஒரு யானையை சந்திக்கிறான். யானையின் விதைகளைப் பிடித்து தூக்கி அதை தரையில் வீசிஎறிந்து கூச்சலிடுகிறான், "நான் யார்? பதில் சொல்!"

யானை விடைசொல்லாமலிருக்கவே அவன் இன்னும் அதிகமாய் வெகுண்டு அதன் விதைகள் சேர்த்துப் பிடித்துக் கசக்கி கத்துகிறான். "இப்ப சொல், சொல்லுடா, யார் நான்."

யானை, மிக அமைதியாக, சாந்தமான பாாவையுடன் சொல்கிறது. "இந்த நாய்ப்பய உன் மவனைப் பாருங்கள்... தான் யார் என்பதே அவனுக்கு தெரியவில்லை. ஆனால் என் விதைகள் நசுக்க வந்து விட்டான் இவன்!"

இப்போது, உன்னால் முடிந்தால் இது பொருத்தமானதா இல்லையா என்பதை கண்டுபிடிக்க முயற்சிசெய்!

ஒரு ஆங்கில தரைப்படை அதிகாரி ஓய்வுபெற்று கிராமத்துக்கு திரும்பினார். வந்ததும் வராததுமாக உள்ளூர் கோல்ஃப் (குழிப்பந்து) கிளப்பில் உறுப்பினரானார். முதன் முதலில் இங்கு வந்தபோது, அங்கு கூட விளையாட கூப்பிட ஒரே ஒரு பரட்டை இளைஞன்தான் இருந்ததைக்கண்டு ஏமாற்றமடைந்தார். அவன் குடிப்பிடத்தில் உட்கார்ந்து பல்குத்திக் கொண்டிருந்தான். ஆனால் அவர் விளையாட மிகவும் ஆவலாக வந்திருந்தபடியால் அவனிடம் போய் சில நிமிடங்கள் உபசார வார்த்தைகள் பேசியபின் ஒரு சுற்று ஆட்டத்துக்க அழைத்தார். முதல் குழி வட்டத்தில் (green) சந்தித்தார்கள். அந்த மனிதன் தோளில் ஒரு சாக்குப்பை வைத்திருந்தான். அதிலிருந்து ஒரு (தோட்ட) மண்வாரியை எடுத்துக் கொண்டான். அதைப்பார்த்து அதிகாரி ஆச்சரியப்பட்டார். மட்டைக் குப்பதில் அதை அவன் பயன்படுத்தியபோது, அதைக்கொண்டே ஆட்டகளத்தின் மையத் துக்கு ஏறக்குறைய குழிவட்டத்துக்கே பந்தை செலுத்தியபோது- அருமையான வீச்சு இன்னும் அதிகமாய் ஆச்சரியப்பட்டார். இரண்டாவதாக ஒரு கோடரியைப் பயன்படுத்தி இதே மாதிரி

செய்தான். இறுதியாக பழைய கைத்தடியால் பந்தை மெதுவாக குழிக்கினான்.

இவ்விதமே அவன் தொடர்ந்தான். எல்லாவிதமான கருவிகளையுமே பயன்படுத்தி ஆட்டத்தை முடித்து கடைசியாக வெற்றியும் பெற்றான். இந்த திகைக்கவைக்கிற நடத்தைபற்றி எந்த விமர்சனமும் செய்ய அதிகாரி விரும்பவில்லை- குடிப்பிடத்துக்கு திரும்பும்வரை. திரும்பிய பிறகும் அவர் கண்ணியமாகவே உரையாடலை தொடர்ந்தார். ஆனால் அந்த மனிதன் தம்ளரை தன் தோளின்மேல் விழாமல் நிறுத்தி அதில் இருக்கும் குழாயை தன் மூக்கினுள் செருகி அதன் வழியாக பீர் குடிக்க ஆரம்பித்ததும், அவரது வியப்பார்வம் கட்டுப்படுத்த முடியாததாகியது.

"கேட்பதற்கு மன்னிக்கவும்," என்றார் அவர், "ஆனால் இப்போது நீ செய்த விசித்திர காரியத்தைக் கண்டபின் என்னால் கேட்காதிருக்க முடியவில்லை."

"உண்மைதான்," என்றான் அம்மனிதன். "இது சற்று விசித்திரமானதுதான். ஆனால் வாழ்க்கையை சுவாரசியமாக ஆக்கிக் கொள்ள என்னால் முடிந்த ஒரேவழி இதுதான். இதுல பாருங்க, இந்த வியத்தகு சாமார்த்தியம் எனக்கு பிறவியிலேயே கைவந்தது. அதை அவ்வப்போது நான் செய்து பார்ப்பது தேவையாகிறது."

ஒரு நிமிடம் அதிகாரி யோசனையில் இருந்தார். பின் சொன்னார், "உனக்கு திருமணமாகிவிட்டதா?"

"ஆம்" என்றான்.

"உனக்கு குழந்தைகள் ஏதும் இருக்கிறதா?"

"ஆம், மூன்று" என்றவன், பெருமூச்சுடன் சொன்னான்.

"உங்க அடுத்த கேள்விக்கு என் விடை. 'தூளியில், நின்றுகொண்டு!"

**ஆறாவது கேள்வி:**

**ஓஷோ,**

**ஏன் நிறைய சிரிப்புகளையே உதிர்க்கிறீர்கள்? மேலான காரியங்களில் உங்களுக்கு அறவே ஆர்வம் கிடையாதா?**

**பிரதிமா.**

சிரிப்பைவிட மேலான காரியம் ஏதும் இருக்கிறதா? அப்படி யானால் என் சிரிப்புகளை நீ சுத்தமாக புரிந்துகொள்ளவில்லை! இவையெல்லாம் வெறும் சிரிப்புகள் அல்ல, மிகவும் சீரிய விஷயம்!

பி.சி. பல்கலைக்கழகத்தில் ஒரு சொற்பொழிவற்ற பால் ரெப்ஸ் அழைக்கப்பட்டிருந்தார். பிரபல மறைஞானி, தத்துவர், புகழ்பெற்ற ஸென் சதை ஸென் எலும்புகளின் ஆசிரியர் என விளம்பரப்படுத்தி இருந்தார்கள்.

குறிப்பிடத்தக்க அறிவுஜீவிகள் நிறையப்பேரை அந்த நிகழ்ச்சி ஈர்த்திருந்தது. பால் ரெப்ஸ் ஒரு சாதாரண மர நாற்காலியில் மிக இளைப்பாறுவதாக அமர்ந்து தன் குட்டி ஸென் கதைகளை சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் சில மாபெரும் அறிவு ஜீவிகளுக்கு சலிப்பு தட்டியது. கடைசியாக அதிகம் அறிந்தவர்களில் ஒருவர் எழுந்து சொன்னார், "ஐயா, தயவு செய்து இன்னும் கொஞ்சம் உயர்ந்த மட்டத்தில் பேச முடியுமா?"

பேச்சை நிறுத்தாமல் கணமும் யோசிக்காமல் பால் ரெப்ஸ் தன் நாற்காலியை மேசையின்மேல் ஏற்றி, அங்கிருந்து தன் அழகான ஸென் கதைகளை தொடர்ந்தார்.

நானும் அப்படி செய்ய வேண்டுமென விரும்புகிறாயா? முடிந்தவரை உயர்ந்த மட்டத்தில் என்னால் பேச முடியும். கூரைமேல் என்னால் உட்கார முடியும். உன்னால் தான் என்னை பார்க்க முடியாது. அது மிகவும் மறைபொருளாயிருக்கும்! கடந்த காலத்தில் கடவுள் இதே முறையில் பேசுவது வழக்கமாயிருந்தது. மிகவும் உயரத்தில் இருந்து! குரலைமட்டுமே நீங்கள் கேட்பீர்கள்... ஆனால் அங்கிருந்தபடியும் நான் சிரிப்புகளைத்தான் சொல்லுவேன்!

**ஏழாவது கேள்வி:**

**ஓஷோ,**

**நான் அதிகமதிகமாக பைத்தியமாகிக் கொண்டிருக்கிறேன். ஆனால் உங்களுடன் ஒப்பிட்டால் இது ஒன்றுமே இல்லை. ஒவ்வொரு நாளும் நீங்கள் மேலுமதிக மேலுமதிகமாக பைத்தியமாகிச் செல்வதாக தோன்றகிறது. இது எங்கு போய் முடியும்?**

**சோமேந்திரா.**

எப்போதும் நான் என் சீடர்களுக்கு முன்னோடியாக இருக்கவேண்டி இருக்கிறது- என்னை நீ முந்த முடியாது! நான்

ஆரோக்கியமாக இருக்கவேண்டும் என நீ விரும்பினால் நீ அதிக ஆரோக்கியமாக இருக்கவேண்டி இருக்கிறது. நீ சிறிது பைத்திய மானால் நான் அதிக பைத்தியமாவேன். நீ அதிக பைத்தியமானால் நான் மேலுமதிக பைத்தியமாவேன். இது எக்காலத்துக்குமாக முடிவு செய்யப்பட்டு விட்டது. இதற்கு முடிவே இல்லை- என் உடலிலிருந்து நான் போன பிறகும் உன்னை நான் விடமாட்டேன்!

**எட்டாவது கேள்வி:**

**ஓஷோ,**

**மேற்கில் ஒரு ஆரஞ்சு– ஆகாத [சந்நியாசி ஆகாத] அன்பர் இருக்கிறார். அவர் ஒரு விஞ்ஞானி. நான்கு ஆண்டுகளாக அவர் உங்கள் நூல்களைப்படித்து அடிக்கோடிட்டு வருகிறார். அவருக்கு நான் கொண்டுபோக முடிவதாக உண்மையி லேயே நல்ல சிரிப்பு ஒன்று உங்களிடம் இருக்கிறதா?**

**பதிபாதா.**

என் புத்தகங்களை நாசமாக்க வேண்டாம் என்று அவரிடம் சொல். ஏனெனில் நிசமான விஷயம் வரிகளுக்கு இடையில் உள்ளது. ஆனால் அதைத்தான் தன் அடிக்கோடு மூலம் அவர் அடித்துக் கொண்டிருக்கிறார்! ஆனால் இது வெறுமனே பழைய பழக்கமாக இருக்கலாம். இல்லாவிட்டால் என்னை 4 ஆண்டுகளாக படித்து வருகிறவர் இன்னும் அங்கேயே ஆரஞ்சு ஆகாமல்- தங்கி இருப்பது எப்படி முடியும்? அதற்கு சாத்தியமே இல்லை- இது அவரது பழைய பழக்கம். இதை அவர் 4 பிறவிகளுக்கு அல்லது 40 பிறவிகளுக்கு செய்து கொண்டே இருக்க முடியும். இதுவே தருணம் என அவருக்குச் சொல். பொறுத்தது போதும் என்று அவருக்குச் சொல்.

மரியா சமூகவியல் மாணவியாக இருந்தாள். அவளது ஆய்வுக் கட்டுரைக்காக பிரேசிலின் நடுப்பகுதிக்கு பயணம் செல்ல முடிவு செய்தாள். வெப்பமண்டலப் பெருமழையில் சிக்கி காட்டில் தடம் தவறி விட்டாள். இறுதியாக இரண்டு ஆண்கள் அவளைக் கண்டுபிடித்தபோது தொப்பலாக நனைந்து போயிருந்தாள்.

"இந்தப் புயலில் உன்னால் முன்னேறிச் செல்லவே முடியாது," என்றான் ஒருவன். "ஆற்றில் வெள்ளம் பெருகி விட்டது. எங்கள் இடத்தில் இரவு தங்கிச் செல்லலாம் நீ."

மரியா ஒரு பிரச்சினை தீர்ந்ததாக உணர்ந்தாள்; நடுநாட்டின் மக்கள் சிலரின் நிஜ வாழ்க்கைகளைப் பற்றிய நேரடி அனுபவம் பெற

ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது பற்றி மகிழவும் செய்தாள். வீடு சென்றதும் அவர்கள் அவளுக்கு உணவு தயாரிக்க ஆரம்பித்தனர். பின் கிதார் வாசித்தார்கள். நாட்டுப்புறப் பாடல்களை பாடினார்கள். களைப்படைந்ததும் பிரேசிலியன் அவளிடம், ஒரு படுக்கைதான் உள்ளது என்றான்.

"பரவாயில்லை" என்றாள் அவள், "உங்கள் இருவருடன் சேர்ந்து நான் படுக்கையில் படுத்துக்கொள்ள முடியும்!"

அவ்விருவரும் தயங்கினர். இறுதியில் சரி என்றனர். கொஞ்ச நேரம் மூவரும் இப்படியும் அப்படியும் நெளிந்தனர். பின் இணக்கமாகி உடலுறவு கொண்டனர். ஆளுக்கொரு ஆணுறையை கொடுத்தாள். பின் மூவரும் இரவின் மீத நேரம் முழுதும் அருமையாக கழித்தனர்.

மறுநாள் காலை மரியா அந்த இருவருக்கும் அவர்களின் விருந்து ஓம்பலுக்காக நன்றி சொல்லி தன் அறிக்கையை முடிக்க தன் ஊரைப் பார்த்துப் போனாள்.

பல நாட்கள் கழிந்தன. இருவரும் காமாலை பிடித்ததுபோல் மாறி வந்தார்கள். மிகவும் அசவுகரியமாக உணர்ந்தார்கள். இறுதியில் ஒருவன் மற்றவனிடம் கூறுகிறான், "டேய் தம்பி! அந்த பொண்ணுக்கு குழந்தை பிறந்தாலும் பிறக்காவிட்டாலும் எனக்கு அதைப்பற்றி கொஞ்சம்கூட கவலையில்லை!"

மற்றவன் சொல்கிறான், "என்னால் இனியும் இதை தாங்க முடியாது! நம் மணிகளிலிருந்து இந்த பிளாஸ்டிக் பைகளை எடுத்து விடுவோம்... பொறுத்தது போதும்!"

எனவே, பதிபாதா அவரிடம் சொல், பொறுத்தது போதும்! அவர் இங்கு வந்து ஆரஞ்சாக ஆக- அதாவது பைத்தியமாக ஆக- இதுவே சமயம்! பைத்தியம் ஆவதைப்பற்றி சொல்லும் ஒரு புதியமுறை இது: "ஆரஞ்சு ஆவது!" ஆனால் அவர் ஒரு விஞ்ஞானி. அவர் அளந்துகொண்டும் கணக்குப் போட்டுக்கொண்டும் சாதக பாதகங்களை நினைத்துக்கொண்டும் தயங்கிக் கொண்டும் அவதானித்துக் கொண்டும் கவனித்துக்கொண்டும் இருக்கவேண்டும். அப்படியானால் சந்தர்ப்பத்தை அவர் தவறவிட்டுவிடுவார். இப்படித்தான் மக்கள் தள்ளிவைத்துக் கொண்டே போகிறார்கள். செய்யவே விரும்பினால்- உடனடியாக செய்துவிடவேண்டிய காரியங்கள் சில உள்ளன என்று அவருக்கு சொல்: இப்போது உண்டு அல்லது எப்போதுமில்லை. விஞ்ஞானியாயிருந்த அவரது பழைய

பழக்கதோசம் இருக்கவே செய்யும்: அதை அவர் புறந்தள்ள வேண்டி இருக்கும்.

டேவ், மாபெலை மணம்புரிய இருந்தான். எனவே பறவைகளையும் தேனீக்களையும் பற்றி அவனுக்கு தெரிவிப்பது சிறந்தது என அப்பா நினைத்தார். "டேவ், அங்கிருக்கும் மரத்தின் கவட்டுத் துவாரத்தை பார்த்தாயா? நீ அங்கு போய் அத்துளையில் பயிற்சி பெற வேண்டும் என விரும்புகிறேன். அப்போதுதான் உன் திருமண இரவன்று என்ன செய்ய வேண்டும் என்பதை நீ அறிவாய்!"

சில நாட்கள் கழித்து டேவுக்கு கலியாணம் நடந்தது. அன்று இரவு டேல்- மாபெலின் அறையில் இருந்து தாங்கமுடியாத அலறல்கள் கேட்டன: அப்பா உள்ளே விரைந்தார். டேவ் மாபெலின் தொடைச்சந்தில் ஒரு சீமாறை குத்தி இறக்கிக் கொண்டிருந்தான்.

"என்ன செய்துகொண்டிருக்கிறாய் டேவ்?" அப்பா கத்தினார்.

"இந்த துவாரத்தில் தேனீக்கள் இல்லாதிருக்கிறதா என உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறேன்!"

**ஒன்பதாவது கேள்வி:**

**ஓஷோ,**

**இன்றைக்கு எது போதும்— தயவுசெய்து சொல்லுங்களேன்.**

**ஆனந்த ஓம்கார்,**

அபத்தம் போதும்- அதாவது ஸென்போதும்!

**கடைசிக் கேள்வி:**

**ஓஷோ,**

**"ஸென்னிலேயே நடப்பது, ஸென்னிலேயே உட்காருவது" என்றால் என்ன?**

**சிரத்தன்.**

அதைப்பற்றி எதுவும் சொல்லத் தேவையில்லை. நான் என் காருக்கு நடப்பேன், காருக்குள் உட்காருவேன். அதுவே ஸென்னிலேயே நடப்பது ஸென்னிலேயே உட்காருவது.



# இணைப்பு

## 1. மூல ஒலி வடிவத் தொகுப்புகள் பற்றிய தகவல் :

ஓஷோவின் நூல்கள் அவர் மக்கள் கூட்டத்திற்கு நேரடியாய் நிகழ்த்திய போதனைகளில் இருந்து எடுக்கப்பட்ட நகல்கள் ஆகும். ஓஷோவின் போதனைகள் யாவும் புத்தகங்களாய் வெளியிடப்பட்டிருப் பதோடு, பதிவு செய்யப்பட்ட ஒலி வடிவங்களாயும் கிடைக்கின்றன. பதிவு செய்த ஒலி வடிவங்கள் பற்றியும், புத்தக மூலாதாரப் பதிவேடுகள் பற்றியும் ஓஷோ நூலகத்தில் தகவல்கள் கண்டறிய முடியும். தகவல்களைப் பெற இணைய முகவரி www.osho.com

## 2. ஓஷோவைப் பற்றி :

தனி நபரின் செயல்நோக்கத் தேடலில் இருந்து இன்றைய சமுதாயம் எதிர்கொண்டிருக்கும் உடனடியான சமூக, அரசியல் பிரச்சினைகள் வரை ஒவ்வொன்றையும் பிரதிபலித்து, துணிச்சலாய் எதிர்த்து நின்றிருக்கிறார்.

அக உருமாற்ற விஞ்ஞானத்திலும், சமகால வாழ்வின் துரிதகதியைப் பேசும் தியானத்திலும் ஓஷோவின் புரட்சிகரமான பங்களிப்பு ஒரே மாதிரிதான்.

உடலிலும், மனதிலும் வளர்ந்து பெரிதாகும் உளைச்சலை (Stress) வெளியேற்ற இடமளிக்கும் வகையில் ஓஷோவின் அரிதான செயல்திறன் கொண்ட தியானங்கள் (Active Meditations) வடிவமைக்கப்பட்டிருக்கின்றன. அதனால், ஆழ்ந்த அமைதி காண்பதும், எண்ணங்களற்ற தியான நிலையை அடைவதும் எளிதாகிறது.

புதிதாய் ஒரு மனிதப்பிறவி தோன்றுவதற்கான நிலைமைகளை உருவாக்கித் தருவதையே தம்முடைய குறிக்கோளாய்க் கொண்டிருந்தார் ஓஷோ. அந்த மனிதனை 'புத்த ஸோர்பா' (Zorba the Buddha) என்றும், அவனுடைய பாதங்கள் மண்ணில் அழுந்த ஊன்றியிருக்கும், கைகள் விண்வெளியில் நட்சத்திரங்களைத் தொட்டுக் கொண்டிருக்கும் என்றும் அவர் வர்ணித்தார். ஓஷோவின் அனைத்து நோக்கு முறைகளிலும் அனாதியான (Timeless) கிழக்கத்திய விவேகத்தையும், மேற்கத்திய விஞ்ஞான தொழில்நுட்ப ஆற்றலையும் உள்ளடக்கிய ஒரு பார்வை இருக்கிறது.

அந்தப் பார்வையின் காட்சிப் பரப்பெல்லையை நாம் புரிந்துகொண்டு வாழ்வில் செயற்படுத்தும் பட்சத்தில், அது மனித இனப் பண்பையே முழுமையாய் மாற்றக்கூடியதாகும்.

ஓஷோவின் நூல்கள் எழுதப்பட்டவையல்ல. அவர் முப்பத்தைந்து ஆண்டு காலத்தில் முன்னேற்பாடின்றி மக்களிடையே நிகழ்த்திய உரைகளிலிருந்து எழுத்து வடிவம் பெற்றவையாகும்.

ஓஷோவை, 'இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் பேரில் ஒருவர்' என்று 'சண்டே டைம்ஸ்' (Sunday Times - London) பத்திரிகையும், 'இந்தியாவின் தலையெழுத்தை மாற்றியமைத்த பத்து பேரில்– காந்தி, நேரு, புத்தர் உள்ளிட்டவர்களில் ஒருவர் என்று 'சண்டே மிட்–டே' (Sunday Mid-Day) பத்திரிகையும் விவரிக்கின்றன.

**ஓஷோ தியான மையம்:**

மக்கள் விழிப்புணர்வு, ஒய்வு, வேடிக்கை விளையாட்டு இவற்றுடன் கூடிய புதிய வாழ்க்கை முறையின் அனுபவத்தைப் பெறவேண்டும் என்பதற்காக ஓஷோ தியான மையம் தோற்று விக்கப்பட்டது. அது இந்தியாவில் மும்பைக்குத் தென்கிழக்காய் (100 மைல் தொலைவு) புனேயில், நீண்ட வரிசையாய் நிழல்தரு மரங்கள் அணிசெய்யும் 'கோரேகான் பார்க்' பகுதியில் (40 ஏக்கர் பரப்பளவு) அமைந்துள்ளது. ஆண்டுதோறும் நூறு நாடுகளில் இருந்து வருகைதரும் ஆயிரமாயிரம் மக்களுக்குப் பலவகை நிகழ்ச்சி நிரல்களை மையம் வழங்குகிறது. வருகை புரிவோர் தங்குவதற்கு வளாகத்திற் குள்ளாயமைந்த புதிய ஓஷோ விருந்தினர் இல்லத்தில் வசதிகள் உண்டு.

தியான மையத்தின் பல்வேறு நிகழ்ச்சிகளும் புகழ்பெற்ற 'ஸென் தோட்டப் பூங்கா'வை அடுத்த பிரமிடு காம்ப்ளக்ஸில் நடைபெறும். மக்களுக்குப் புதிய வாழ்க்கை முறையை வடித்துக் கொடுக்கும் சாதனங்களால் அந்த நிகழ்ச்சி வடிவமைக்கப்பட்டிருக்கும். அவற்றில் ஒன்று ஒய்வு சார்ந்த தெரிநிலை (Relaxed Awareness) ஆகும். அதுவே தங்கள் வாழ்க்கை நெடுகிலும் அவர்கள் தொடரக்கூடிய அணுகு முறையும் ஆகும்.

சுயத்தைக் கண்டறியும் வகுப்புகள், அமர்வுகள் பயிற்சித் தொடர்கள், தியானச் செயல்முறைகள் இவை ஆண்டு முழுவதும்

அளிக்கப்படுகின்றன. உடற்பயிற்சிக்கும், உடல்நலம் காக்கவும் ஒரு திறந்தவெளி அரங்கம் உள்ளது. அங்கே ஸென் அணுகுமுறையில் விளையாட்டுகளையும், பொழுதுபோக்கையும் செய்து பார்க்க முடியும்.

பிரதான தியான அரங்கில் செயல்திட்ட நேரம் காலை 6 மணி முதல் இரவு 11 மணி வரையில் ஆகும். இதில் சுறுசுறுப்பானது, அமைதியானது என இரு தியான முறைகள் இடம்பெறும். தினமும் மாலைத் தியானக் கூட்டத்திற்குப் பிறகு, பல்வேறு கலாசாரங்களைக் கொண்ட இம்மையத்தின் திறந்தவெளி உணவருந்தும் பகுதிகளில் நண்பர் குழாமுடன் ஆட்டமும் பாட்டமுமாய் இரவு வாழ்க்கை உயிர்த் துடிப்போடு காணப்படும்.

மையம் பாதுகாப்பான முறையில் சுயமாய் தயாரித்து வடிகட்டிய குடிநீரையும், மையத்தின் சொந்த நிலத்தில் பயிரிடப்பட்ட தாவர வகைகளில் தயாரிக்கப்பட்ட உணவையும் வழங்குகிறது.

தியான மையத்திற்கு நேரடிச் சுற்றுப்பயணம் மேற்கொள்வோர் தேவையான தகவல்களை www.osho.com தளத்தில் பெற முடியும்.

இது 'ஆன்லைன்' பத்திரிகை, ஒலிஒளியுடன் கூடிய தகவல்வகை (Web Casting), ஓர் ஆடியோ புக் கிளப், முழுமையான ஆங்கில இந்தி உரை சேமிப்புகள், ஓஷோ ஒலிஒளி, புத்தக வெளியீடுகளின் முழுமையான விலைப்பட்டியல் இவற்றுடனான விரிந்து பரந்த இணைய தளம் ஆகும். ஓஷோ அபிவிருத்தி செய்த செயல்மிக்க தியான உத்திகளும், ஆற்றொழுக்கு போன்ற ஒளிக்காட்சி (Video) விளக்கங்களும் இதில் அடங்கியுள்ளன.

தியான மையத்தில் பங்கேற்போர் விரிவான தகவல்களைப் பெற அன்பு கூர்ந்து தொடர்பு கொள்ளவும்:

**OSHO COMMUNE INTERNATIONAL**

17, KOREGAON PARK, PUNE–411001. M.S. INDIA.

Phone : 0204019999 Fax : 0204019990

E-Mail : visitor@osho.net Website : www.osho.com

# BOOKS BY OSHO

**(in English Language)**

**Early Discourses and Writings**
A Cup of Tea
Dimensions Beyond The Known
From Sex to Superconsciousness
The Great Challenge
Hidden Mysteries
I Am The Gate
The Inner Journey
Psychology of the Esoteric
Seeds of Wisdom

**Meditation**
The Voice of Silence And Now and Here (Vol. 1 & 2)
In Search of the Miraculous (Vol. 1 &.2)
Meditation: The Art of Ecstasy
Meditation: The First and Last Freedom
The Path of Meditation
The Perfect Way
Yaa-Hoo! The Mystic Rose

**Buddha and Buddhist Masters**
The Book of Wisdom
The Dhammapada: The Way of the Buddha (Vol. 1-12)
The Diamond Sutra
The Discipline of Transcendence (Vol. 1-4)
The Heart Sutra

**Indian Mystics**
Enlightenment: The Only Revolution (Ashtavakra)
Showering Without Clouds (Sahajo)
The Last Morning Star (Daya)
The Song of Ecstasy (Adi Shankara)

**Baul Mystics**
The Beloved (Vol. 1 & 2)

**Kabir**
The Divine Melody
Ecstasy: The Forgotten Language
The Fish in the Sea is Not Thirsty
The Great Secret
The Guest
The Path of Love
The Revolution

**Jesus and Christian Mystics**
Come Follow to You (Vol. 1-4)
I Say Unto You (Vol.1 & 2)
The Mustard Seed
Theologia Mystica

**Jewish Mystics**
The Art of Dying
The True Sage

**Western Mystics**
Guida Spirituale (Desiderata)
The Hidden Harmony (Heraclitus)
The Messiah (Vol 1 & 2) (Commentaries on Khalil Gibran's The Prophet)
The New Alchemy: To Turn You On (Commentaries on Mabel Collins' Light on the Path)
Philosophia Perennis (Vol. 1 & 2) (The Golden Verses of Pythagoras)
Zarathustra: A God That Can Dance
Zarathustra: The Laughing Prophet (Commentaries on Nietzsche's Thus Spake Zarathustra)

**Sufism**
Just Like That
Journey to the Heart
The Perfect Master (Vol. 1 & 2)

The Secret
Sufis: The People of the Path (Vol. 1 & 2)
Unio Mystica (Vol. 1 & 2)
The Wisdom of the Sands (Vol. 1 & 2)

**Tantra**
Tantra: The Supreme Understanding
The Tantra Experience
The Royal Song of Saraha
(same as Tantra Vision, Vol. 1 )
The Tantric Transformation
The Royal Song of Saraha
(same as Tantra Vision, Vol. 2)
The Book of Secrets: Vigyan Bhairav Tantra

**The Upanishads**
Behind a Thousand Names
(Nirvana Upanishad)
Heartbeat of the Absolute
(Ishavasya Upanishad)
I Am That (Isa Upanishad)
The Message Beyond Words
(Kathopanishad)
Philosophia Ultima (Mandukya Upanishad)
The Supreme Doctrine (Kenopanishad)
Finger Pointing to the Moon (Adhyatma Upanishad)
That Art Thou (Sarvasar Upanishad, Kaivalya Upanishad, Adhyatma Upanishad)
The Ultimate Alchemy, Vol. 1&2
(Atma Pooja Upanishad Vol 1 &2)
Vedanta: Seven Steps to Samadhi
(Akshaya Upanishad)
Flight of the Alone to the Alone
(Kaivalya Upanishad)

**Tao**
The Empty Boat
The Secret of Secrets
Tao: The Golden Gate (Vol. 1&2)
Tao:The Pathless Path (Vol. 1&2)
Tao: The Three Treasures (Vol 1-4)
When the Shoe Fits

**Yoga:**
The Path of Yoga (previously)
Yoga: The Alpha and the Omega (Vol. 1)
Yoga: The Alpha and the Omega (Vol. 2-10)

**Zen and Zen Masters**
Ah, This!
Ancient Music in the Pines
And the Flowers Showered
A Bird on the Wing
Bodhidharma: The Greatest Zen Master
Communism and Zen Fire, Zen Wind
Dang Dang Doko Dang
The First Principle
God is Dead:
Now Zen is the Only Living Truth
The Grass Grows By Itself
The Great Zen Master Ta Hui
Hsin Hsin Ming: The Book of Nothing
I Celebrate Myself: God is No Where,
Life is Now Here
Kyozan: A True Man of Zen
Nirvana: The Last Nightmare
No Mind: The Flowers of Eternity
No Water, No Moon,
One Seed Makes the Whole Earth Green
Returning to the Source
The Search: Talks on the 10 Bulls of Zen
A Sudden Clash of Thunder
The Sun Rises in the Evening
Take it Easy (Vol. 1 & 2 )
This Very Body the Buddha
Walking in Zen, Sitting in Zen
The White Lotus
Yakusan: Straight to the Point of Enlightenment
Zen Manifesto: Freedom From Oneself
Zen: The Mystery and the Poetry of the Beyond
Zen: The Path of Paradox (Vol. 1, 2 & 3)
Zen: The Special Transmission
Zen Boxed Sets
The World of Zen (5 Vol.)

Live Zen
This. This. A Thousand Times This
Zen: The Diamond Thunderbolt
Zen: The Quantum Leap from Mind to No-Mind
Zen: The Solitary Bird, Cuckoo of the Forest
Zen: All The Colors of The Rainbow (5 Vol.)
The Buddha: The Emptiness of the Heart
The Language of Existence
The Miracle
The Original Man
Turning In

**Osho : On the Ancient Masters of Zen (7 volumes)**
Dogen: The Zen Master
Hyakujo: The Everest of Zen with Basho's haikus
Isan: No Footprints in the Blue Sky
Joshu: The Lion's Roar
Ma Tzu: The Empty Mirror
Nansen: The Point of Departure
Rinzai: Master of the Irrational
*(Each volume is also available individually)*

**Responses to Questions**
Be Still and Know
Come, Come, Yet Again Come
The Goose is out
The Great Pilgrimage: From Here to Here
The Invitation
My Way: The Way of the White Clouds
Nowhere to Go But In The Razor's Edge
Walk Without Feet, Fly Without Wings and Think Without Mind
The Wild Geese and the Water
Zen: Zest, Zip, Zap and Zing

**Talks in America**
From Bondage To Freedom
From Darkness to Light
From Death To Deathlessness
From the False to the Truth
From Unconsciousness to Consciousness
The Rajneesh Bible (Vol. 2-4)

**The World Tour**
Beyond Enlightenment (Talks in Bombay)
Beyond Psychology (Talks in Uruguay)
Light on the Path (Talks in the Himalayas)
The Path of the Mystic (Talks in Uruguay)
Sermons in Stones (Talks in Bombay)
Socrates Poisoned Again After 25 Centuries (Talks in Greece)
The Sword and the Lotus (Talks in the Himalayas)
The Transmission of the Lamp (Talks in Uruguay)

**Osho's Vision for the World**
The Golden Future
The Hidden Splendor
The New Dawn
The Rebel
The Rebellious Spirit

**The Mantra Series**
Hari Om Tat Sat
Om Mani Padme Hum
Om Shantih Shantih Shantih
Sat-Chit-Anand
Satyam-Shivam-Sundram

**Personal Glimpses**
Books I Have Loved
Glimpses of a Golden Childhood
Notes of a Madman

**Interviews with the World Press**
The Last Testament (Vol. 1)

**Intimate Talks between Master and Disciple - Darshan Diaries**
A Rose is a Rose is a Rose
Be Realistic: Plan for a Miracle
Believing the Impossible Before Breakfast
Beloved of My Heart
Blessed are the Ignorant
Dance Your Way to God
Don't Just Do Something,

Sit There
Far Beyond the Stars
For Madmen Only
The Further Shore
Get Out of Your Own Way
God's Got A Thing about You
God is Not for Sale
The Great Nothing
Hallelujah!
Let Go!
The 99 Names of Nothingness
No Book, No Buddha, No Teaching, No Disciple, Nothing to Lose but Your Head Only Losers Can Win in This Game.
Open Door
Open Secret
The Shadow of the Whip
The Sound of One Hand Clapping
The Sun Behind the Sun Behind the Sun
The Tongue-Tip Taste of Tao This Is It
Turn On, Tune In and Drop the Lot
What Is, Is, What Ain't, Ain't
Won't You Join The Dance?

**Compilations**

After Middle Age:
A Limitless Sky At the Feet of the Master
Bhagwan Shree Rajneesh:
On Basic Human Rights
Jesus Crucified Again, This Time in Ronald Reagan's America
Priests and Politicians: The Mafia of the Soul
Take it Really Seriously

**Gift Books of Osho Quotations**

A Must for Contemplation Before Sleep
A Must for Morning Contemplation
India My Love

**Photo books**

Shree Rajneesh:
A Man of Many Climates, Seasons and Rainbows through the eye of the camera
Impressions...
Osho Commune International Photo-book

**Books about Osho**

Bhagwan : The Buddha for the Future by Juliet Forman

Bhagwan Shree Rajneesh: The Most Dangerous Man Since Jesus Christ by Sue Appleton

Bhagwan : The Most Godless Yet the Most Godly Man by Dr. George Meredith

Bhagwan : One Man Against the Whole Ugly Past of Humanity by Juliet Forman

Bhagwan : Twelve Days That Shook the World by Juliet Forman

Was Bhagwan Shree Rajneesh Poisoned by Ronald Reagan's America? by Sue Appleton.

Diamond Days With Osho by Ma Prem Shunyo

# கவிதா வெளியீடுகள்

## ஓஷோ (ரஜனீஷ்) நூல்கள்

தியானம் (MEDITATION) (60 தியான முறைகளும் விளக்கங்களும்)
வெற்றியின் அபாயம் – தாவோ (பாகம்–1)
புத்தர்களும் மூடர்களும் – தாவோ (பாகம்–2)
அறிவைத் தேடி – தாவோ (பாகம்–3)
இவ்வளவுதான் உலகம் – தாவோ (பாகம்–4)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்–1)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்–2)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞான விளக்கம் (பாகம்–3)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–4)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–5)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–6)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–7)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–8)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–9)
பதஞ்சலி யோகம் – ஒரு விஞ்ஞானம் விளக்கம் (பாகம்–10)
உயர்நிலை காட்டும் தந்த்ரா
மனதின் இயல்பும் அதைக் கடந்த நிலைகளும்
யாகூசான் : ஞானத்திற்கு நேர்வழி
தந்த்ரா – ஓர் உன்னத ஞானம்
வார்த்தைகளற்ற மனிதனின் வார்த்தைகள்
ஓர் அற்புதப் புதையல்
கடவுள் உங்கள் உள்ளேதான் இருக்கிறார்
தேடுதலை நிறுத்துங்கள் தேடுவது கிடைக்கும்
மதவாதிகளும் அரசியல்வாதிகளும்
நான் ஒரு வெண்மேகம்
புதிய குழந்தை
பிரபஞ்ச ரகசியம் (ஸென் ஹைகூ)
ஓம் சாந்தி சாந்தி சாந்தி
ஸென்னுடன் நடந்து... ஸென்னுடன் அமர்ந்து...
தியானம் என்பது என்ன?
வாழும் கலை
கடவுள் இறந்துவிட்டார் ஸென்னே வாழ்கிறது
பெண் விடுதலை ஒரு புதிய தரிசனம்
அன்பின் யாத்திரை
வாழ்வு, அன்பு, மகிழ்ச்சி
ஸென் பரவெளியின் பரவசங்களும் பாடல்களும்
நம்பிக்கை நட்சத்திரமாய்...
இன்னொரு வாசல் இன்னொரு வாழ்க்கை பாகம்–1 to 4 (செட்)
கால்கள் இன்றி நட, சிறகுகள் இன்றி பற, மனம் இன்றி நினை

